வில்லிபுத்தூரார்

இயற்றிய

# மகாபாரதம்

## ஆரணியபருவம்

உரையுடன்

வை. மு. கோபாலக்ருஷ்ணமாசார்யரால்

ஆர். ஜீ. அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1939

விலை. 2—0—0.

# பொருளடக்கம்.

# முகவுரை.

அருந்தமிழபிமானிகட்கு ஓர் விண்ணப்பம்.

கம்பராமாயணம் முழுவதற்கும் அடியேன் உரைகண்டு வெளியிட்டபின், வில்லிபுத்தூரார்பாரதம் முழுவதுக்கும் உரை காண வேணு மென்று பலர் விரும்பியது உண்டு.

எமது ஆசிரியரான ஸ்ரீமாந் வை. மு. சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமிகள், ஸ்ரீமாந் சே. க்ருஷ்ணமாசார்யஸ்வாமிகள்உதவிசெய்ய இந்தவில்லிபாரதத்திற் பெரும்பாலான பகுதிகட்கு முந்துறவே உரை கண்டுள்ளனர். அந்தஸ்வாமிகள் உரையெழுதாதுவிட்ட பகுதி, மிகவுஞ் சொற்பம். அங்ஙன்சொற்பப்பகுதி உரையெழுதாது விடுபட்டதற்குக் காரணம், அப்பகுதி, சென்னை யூனிவர்ஸிடியாரால் பாடம்வைக்கப்படாமையே யாகும்.

அங்ஙனம் உரைகண்டவற்றுள் அவர்கள்முழுதும் உரைகண்ட பருவங்கள், உத்தியோக வீட்டும துரோண கன்ன சல்லிய சௌப்திக பருவங்களாகும். அன்னவர்காலத்திலேயே ஸ்ரீமான் சே. கிருஷ்ணமாசார்யஸ்வாமிகளின் உதவியினால் சபாபருவம் முழுவதுக்கும் யான் உரையெழுத, ஸ்ரீமான் - வை. மு. சடகோபராமாநுஜாசார்ய ஸ்வாமிகளால் பார்வையிடப்பட்டு, அந்தப் பகுதி, முன்னரே வெளியிடப்பட்டது.

உத்தியோகசல்லியசௌப்திகபருவங்கள் முன்பு அச்சிட்டவை அரியனவாய்விட்டதனால், அவற்றை ஸ்ரீமான்-சே-கிருஷ்ணமாசார்ய ஸ்வாமிகளின்குமாரர் ஸ்ரீமான்-சே. பார்த்தசாரதியையங்கார்ஸ்வாமி வெளியிட்டுள்ளார். பின்னர் வீட்டுமாதிபருவங்களும் உரையுடனுள்ளவை கிடைப்பது அரியனவாக, அவற்றை முன்னினுஞ் சிறிது சீர்திருத்தம்பெற யான் அச்சிட்டேன்.

அப்பால் ஆதிபருவம் ஆரணியபருவம் விராடபருவம் என்ற மற்றைமூன்றுபருவங்கள் முற்றிலும் உரையெழுதப்பெறுமற் சில பகுதிகளே உரையுடன்இருந்தவற்றை முற்றிலும்உரையுடன் பதிப்

பிக்கவிரும்பிச் சென்ற யாண்டு பங்குனிமாதத்தில் ஆதிபருவத்தை என்னுலியன்றவரை திருத்தம்பெற உரையுடன் அச்சிட்டு வெளியிட்டுள்ளேன்.

இப்போது ஆரணியபருவத்தை அங்ஙனமே முற்றிலும் உரையுடன் எழுதிஅச்சிடலானேன். இந்தப்பருவத்தில், (1) அருச்சுனன்தவநிலை, (2) நிவாதகவசர் காலகேயர்வதை, (3) புட்பயாத்திரை, (4) சடாசுரன்வதை, (5) மணிமான்வதை என்ற ஐந்துசருக்கங்கட்கு முன்னமே ஸ்ரீ - உ. வே. வை. மு. சடகோபராமாநுஜாசார்யஸ்வாமிகள் உரைகண்டிருந்தனர். அவர்கள் உரைகண்டிருந்தவற்றுள், புட்பயாத்திரைச்சருக்கத்தில் முதல்அறுபதுபாடல்களின் உரைதவிர மற்றைப்பாடல்களின்உரைகளே எனக்குக் கிடைத்தன. அவற்றை வைத்துக்கொண்டு, உரைகிடைக்காதனவும் இல்லாதனவுமான பகுதிகட்கு உரையெழுதியும், உரைகிடைத்தபகுதிகளைப் பார்வையிட்டும் சங்கப்பதிப்புப்பாரதத்தோடொத்திட்டு உசிதமானபாடங்களை வைத்துக்கொண்டும் இப்பதிப்பு வெளியிடலாயிற்று: நிற்க.

இந்தவில்லிபுத்தூரார்பாரதத்துக்கு முதனூல் பாலபாரதமாயிருக்கலாமென்று சிலர் கருதுகின்றனர். அதுகுறித்துச் சிறிது ஆராய்வேன்:

பாலபாரதம், இருபதுசருக்கங்களையுடையது. அவற்றுள் முதல் ஆறுசருக்கங்கள், ஆதிபருவத்தின் சரிதையைக் கூறுவன: ஏழாவது சருக்கம், சபாபருவத்துச் சரிதையைக் கூறுவது. எட்டு ஒன்பதாஞ் சருக்கங்கள், ஆரணியபருவத்தின் சரிதையைக் கூறுவன: பத்துப் பதினொராஞ் சருக்கங்கள், விராடபருவத்துச் சரிதையைக் கூறுவன: பன்னிரண்டு பதின்மூன்றாஞ் சருக்கங்கள், உத்தியோக பருவ சரிதையைக் கூறுவன. பதினான்காஞ் சருக்கம், வீட்டுமபருவ சரிதை கூறுவது: பதினைந்து பதினாறாஞ்சருக்கங்கள், துரோணபருவசரிதை கூறுவன: பதினேழாஞ்சருக்கம், கர்ணபருவ சரிதை கூறுவது. பதினெட்டாஞ்சருக்கம், சல்லியசௌப்திகபருவ சரிதை கூறுவதாகும்: பத்தொன்பதாஞ்சருக்கம், ஸ்த்ரீபருவந் தொடங்கி ஆஸ்வமேதிகபருவம் வரையுள்ள சரிதையையும், இருபதாஞ்சருக்கம் அதற்குமேல் சுவர்க்காரோகணபருவம் வரையிலுமுள்ள சரிதையையும் கூறுவனவாகும்.

ஆதிபருவத்துக்கு உரைகண்டு வெளியிட்டபோது முற்றிலும் பாலபாரதத்தோடு அப்பகுதியை ஒப்பிட்டுப்பார்த்து ஒற்றுமைவேற்

றுமைகளே அங்குக் காட்டியுள்ளேன். பாரதகதையைச் சுருக்கமாகக் கூறக்கருதிய வில்லிபுத்தூரார் ஆதிபருவக்கதையைப் பாலபாரதம் முதலாறு சருக்கங்களில் தம் விருப்பின்படி சுருங்கக் கூறுவது கண்டு பெரும்பாலும் அந்தப்பகுதியை அந்தப்பாலபாரதத்தை யொட்டிப் பாடினர்: மேற்பகுதிகள் தம்கருத்துப்படி பாலபாரதத்தில் அமையாமையால் அவற்றை அடியொற்றிப் பாடாமல், சுதந்திரமாகப் பாரதத்தைச் சுருக்கிப் பாடினராயிருக்கவேண்டும். அங்ஙனம்பாடுமிடத்து இரண்டோரிடத்துப் பாலபாரதக்கருத்து வருகின்றது: அவ்வளவே தவிர, ஆதிபருவத்தைப்போல் அவ்வளவு ஒட்டி வரவில்லை. ஒருகால் வில்லிபுத்தூரார் பாடும்போது பாலபாரதத்தில் முதலாறுசருக்கங்கள் தவிர,மற்றைப்பகுதிகள் இவ்வில்லிபுத்தூரார்க்குக் கிடைக்காமலிருந்தாலும் இருந்திருக்கலாம். எப்படியிருந்தாலும், ஆதிபருவம்தவிர, வில்லிபுத்தூரார்பாடியமற்றைப்பகுதிகட்கும் பாலபாரதத்திற்கும் ஒற்றுமை காண்கின்றிலது: ஆகவே, வில்லிபாரதத்துக்கு வியாசபாரதமே முதனூலென்னத் தட்டில்லை.

இந்நூலாசிரியர் இந்தஆரணியபருவத்தைப்பாடுகையில் பலவிடங்களில் முதனூலினும் வேறுபடப் பாடியுள்ளார். அவ்விஷயம் நூலினுட்புறத்து உரையிலும் ஆங்காங்குக் காட்டப்பட்டுள்ளது: இங்குஞ் சில காட்டப்படுகின்றன.

வியாசபாரதத்திற் பிரதானமான பருவங்கள் பதினெட்டு: ஒவ்வொருபருவத்திலும் உபபருவங்கள் பல உள்ளன: அங்ஙனமே ஆரணியபருவத்திலும் பல உபபருவங்கள் உள்ளன. ஆரணியபருவத்திலுள்ள அஜகரபர்வம் கோஷயாத்ராபர்வம் த்ரௌபதீஹரணபர்வம் ஜயத்ரத விமோசநபர்வம் என்ற உபபர்வங்களிலுள்ளசரிதைகள், அருச்சுனன்றவநிலை நிவாதகவசர்காலகேயர்வதை என்பனபோல முக்கியமானவை: இவற்றிற் கூறப்படுகிற சரிதைகள் முறையே காட்டப்படுகின்றன.

அஜகரபர்வத்திற் கூறப்படுகின்ற சரிதை:—நிவாதகவசர்முதலியோரைக்கொன்று துறக்கத்தினின்று அருச்சுனன் மீண்டுவந்ததும், பாண்டவர் கந்தமாதனமலையினின்று இறங்குமாறு கருதுகையில், லோமசமுனிவர் சுவர்க்கத்திற்குச் சென்றனர். பின்பு அந்தப் பாண்டவர் கந்தமாதனமலையினின்றுஇறங்கி முறைமையாகக் கைலாசம் முதலிய இடங்கட்குச் சென்று த்வைதவனத்தையடைந்தனர்! அப்பால் வீமசேனன் வனத்தில் வேட்டையாடச்செல்ல, அங்கு

அவனை ஒருமாசுணம் பற்றியது: அப்போது தோன்றிய துர்நிமித் தத்தால் தருமன் வருத்தமுற்று வீமனை நாடி வந்து அன்னான் மாசுணத்தாற் பற்றப்பட்டிருத்தலைக் கண்டான். கண்டதும் அந்த மாசுணத்துக்கும் தருமனுக்கும் நிகழ்ந்த சம்பாஷணையில், தருமன் பேச்சைக்கேட்டு மனமுவந்த மாசுணவடிவாயிருந்த நகுஷன் வீம சேனனை விட்டிட்டுச் சுவர்க்கஞ்சென்றா னென்பது.

கோஷயாத்ராபர்வத்திற் கூறப்படுகின்ற சரிதை:—த்வைத வனத்தினின்று காம்யகவனத்திற்குப் பாண்டவர் மீண்டுஞ் சென் றனராக, ஸ்ரீக்ருஷ்ணன் ஸத்யபாமையுடன் காம்யகவனத்தை யடைந்து அந்தப்பாண்டவரோடு அளவளாவிச்சென்றான். பிறகு, திருதராட்டிரன் ஓரந்தணன்வாயினாற் பாண்டவரின்செயலையறிந்து வருந்திப் பாண்டவரால் தன்மக்கட்கு நேரவிருக்கும் வதைக்கு வருந் தினான். இவ்வாறுநிகழ, கர்ணசகுனியர் வனத்தில் வசிக்கும் பாண்ட வர்க்கு நம்முடையவிபவத்தைக்காட்டி வருத்தமுண்டாக்கவேண்டு மென்று துரியோதனனைத் தூண்டினர். பிறகு த்வைதவனத்திற் செல்வதற்குக் * கோஷயாத்ரையை வியாஜமாகக் கொள்ளுமாறு அவர்கள் அறுதியிட்டனர். பின்பு த்வைதவனத்திலுள்ள பொய்கைக் கரையில் விளையாடுமிடம் அமைக்குமாறு துரியோதனன் பணியா ளரை யேவினான். ஏவலின்படி சென்ற பணியாளரை முன்னரே அங்கு வந்த கந்தருவர் ஓட்டிவிட்டனர்: அதனையுணர்ந்த துரியோதனனே கந்தருவரையோட்டுமாறு சேனைகளை யனுப்ப, அச்சேனைகளையும் கந் தருவர் வெருட்டிவிட்டனர். பின்பு கந்தருவர்கட்கும் துரியோதனாதி யர்க்கும் பெரும்போர் நிகழ, அந்தப்போரில் கர்ணனைப் புறங்கண்டு சித்திரசேனனென்ற கந்தருவராசன், துரியோதனனைக் கட்டித் தன் தேரின்மீது எடுத்துச்சென்றான். மற்றுமுள்ளகந்தர்வர் துர்யோத னன்தம்பியரையும் அவர்மனைவியரையும் கட்டியெடுத்துச்சென்றனர். அப்போது துரியோதனனுடைய மந்திரிமார், யுதிஷ்டிரனிடம் தெரி வித்துக்கொள்ள, வீமசேனன் மகிழ்ச்சிபாராட்டித் துரியோதனாதிய ரை விடுவிக்கக்கூடாதென்று முதலிற் கூறினான். பின்பு அந்தயுதிஷ் டிரருடைய ஏவலின்படி அருச்சுனன் வீமசேனன்முதலியோர் சித் திரசேனனுடன் பொர, அப்போரில் அருச்சுனன் சித்திரசேனனை வென்று துரியோதனனை விடுவிக்க, சித்திரசேனன் அருச்சுனனுக்கு நண்பனானான். ஞாதிகளால் விடுவிக்கப்பட்ட துரியோதனன் அவமா னத்தைத் தாங்கமாட்டாது ப்ராயோபவேசத்தால் உயிர்துறப்ப

---

* கோஷயாத்ரை-இடைச்சேரியைக் காணச்செல்லும் செலவு.

தற்கு முயல, பாதாளலோகவாசிகளான தைத்தியர்களாலேவப்பட்ட க்ருத்யையால் துர்யோதனின் பாதாளத்திற்குக் கொண்டுபோகப் பட்டு ஆங்குள்ள தைத்தியர்களால் காரணங்காட்டிப் பிராயோபவே சம் நிவர்த்திப்பிக்கப்பட, க்ருத்யையால் மீண்டும் முன்னிருந்த இடத்திற் கொண்டுவிடப்பட்டுத் துர்யோதனன் தன்னகரத்தை யடைந்தா னென்பது.

துருவாசச்சருக்கத்துச் சரிதைக்குப் பின் வியாசபாரதத்திலே த்ரௌபதீஹரணபர்வ ஜயத்ரதவிமோசனபர்வங்களிற் கூறப்பட்டுள்ள சரிதை:—ஒருகால் பாண்டவர் வேட்டையாட வெளிச்சென்றிருந்த போது தனித்திருந்த திரௌபதியை ஏதோ காரியமாய் அவ்வழி யாய்ச்செல்லும் ஜயத்ரதன் கண்டு காதல்கொண்டு அன்னாளை வலியக் கவர்ந்துசெல்லலானான். அப்போது அபசகுனத்தால் மனங்கலங்கி மீண்டுவந்த பாண்டவர் அதுகண்டு சினங்கொண்டு ஜயத்ரதனைச் சார்ந்தோரைக் கொல்ல, வீமசேனன் ஜயத்ரதன்முடிமேல் தன் காலைவைத்து அவன்தலையை ஐங்குடுமிவைத்துச் சிரைத்துக் கட்டியெடுத்துச் செல்ல, யுதிஷ்டிரர் அவனை விடுவித்தார்: பிறகு அன்னான் பரமசிவனைநோக்கித் தவம்புரிந்து அருச்சுனன்தவிர மற்றை யோரை ஒருநாள் வெல்லுமாறு அந்தப்பரமசிவனிடத்து வரம் பெற்றா னென்பது

இச்சரிதங்கள் முக்கியமானவைகளாயிருந்தும் இவ்வில்லிபுத் தூரரார்பாடப்படவில்லை: இவை எக்காரணத்தால் விடுபட்டனவோ அறிகின்றிலேன்.

இனி, சிவபெருமானிடத்துப்பாசுபதம்பெற்றதும் அருச்சுனன் இந்திரனால் தேவலோகத்துக்கு அழைத்துப் போகப்பட்டுத் தரும புத்திராதியர்க்குத் தேறுதல்கூறுமாறு உரோமசர் அனுப்பப்பட் டனரென்று வியாசபாரதத்திற்கூறியிருக்கவும், நிவாத கவசர்வதை முதலியன நிகழ்ந்தபின்னரே உரோமசர் தருமபுத்திரரிடத்து அனுப்பப்பெற்றா ரென்று இதிற்கூறியுள்ளது. இவ்வாறு மாறி யிருப்பதற்கு யாதுபயன்என்பதும் விளங்கவில்லை.

பழம்பொருந்துசருக்கத்திற் கூறியுள்ள விஷயம், இப்போது அச்சிட்டுள்ள வியாசபாரதம் எதிலும் காணப்படவில்லை; ஆயினும், இந்தச்சரித்திரம், மிகவும்பிரசித்தமான தொன்று. நான் மிகச்சிறுவ னாயிருந்தபோது எனது பிதாமகர் இந்தச்சரிதையை எனக்குச் சொல்லி, தருமபுத்திராதிகள் தம்கருத்தைக் கூறிய ஸ்லோகங் களையும் சொல்லியது உண்டு. பெதுக். நாராயணப்ப கவியென்பவர் இயற்றிய கன்னடபாரதத்திலும் இந்தச்சரிதை உள்ளது. அதிற்

கூறியபடி, இந்நச்சரிதையை, எனது நண்பர் ஸ்ரீ. உ. வே. - சேஷய்யங்கார் ஸ்வாமி (மதராஸ்யூனிவர்ஸிடி, கன்னட அஸிஸ்டெண்ட் லெக்சரர்) அறிவித்தனர். அதனைப் பழம்பொருந்து சருக்கத்து உரையிற் காட்டியுள்ளேன். இது, மிகஇனியதும் முக்கியமுமான சரிதையாகும். வியாசபாரதத்தில் இது ஏன் இல்லையென்பதும், வியாசபாரதத்துக் காணப்படாத இச்சரிதம் எவ்வாறுவந்ததென்பதும் விளங்கவில்லை. இவை நிற்க.

வியாசபாரதத்தோடு ஒப்பிட்டுப்பார்க்குமிடத்து இந்நூலில் எவ்வாறு மாறுதலமைந்திருப்பினும், தட்டுத்தடங்கலின்றி இன்னோசையமைந்ததாய்ப் படிப்போர்க்குத் தெவிட்டாத இன்னமுதாக இந்நூல் அமைந்திருப்பது என்பதற்கு மாறுசொல்லவல்லாரெவருமில்லை.

இந்நூலைப் படிப்போர்க்கு வடமொழிபரிசயமும் இருப்பின் இனிதுபொருள்விளங்கு மாதலால், அதனைப் பெற்றிராதாரும் உணருமாறு இவ்வுரை வெளியிடலாயிற்று.

இவ்வுரையை எழுதிப்பதிப்பிக்கும்போது ஒத்துப்பார்த்தல் முதலிய உதவிகள் புரிந்த திருவாளர்-தூசி. கோ. ஜகந்நாதாசார்யர் M.A. அவர்களுக்குச் செந்தமிழ்ச்செல்வமும் பல்வகைநலனும் பல்குமாறு திருமகள்கொழுநன் அருள்புரிவாராக.

இந்தஆரணியபருவத்தை உரையுடன் பதிப்பித்த இதில், குற்றங்குறைகள் காணப்படின், அறிஞர் தமதுநற்பண்பினாற் பொறுப்பதன்றி எனக்கும் அறிவுறுத்துவராயின், அன்னாரிடத்து நன்றியறிதலோடு உரியகாலத்து அவற்றை வெளிப்படுத்துவேன்.

அடியேன் மேற்கொண்ட ஆரணியபருவத்தை உரையுடன் வெளிப்படுத்துதலாகிய இப்பணியை இனிதுமுற்றுமாறு தோன்றாத் துணையாயிருந்து திருவருள்புரிந்த ஸ்ரீக்ருஷ்ணனது கருணைத்திறத்தை வியந்து அப்பெருமானைத் திரிகாணங்களாலும் வழிபடுவேன். விராடபருவத்தையும் இனிதுமுற்றுப்பெறுமாறு அப்பெருமான் அடியேன் திறத்துத் திருவருள் புரிவானாக.

ப்ரமாதி ஹு
கார்த்திகை மீ

இங்ஙனம்
வை. மு கோபாலக்ருஷ்ணமாசார்யன்.

# மகாபாரதம்

இந்தப்பாரதம், அந்தந்தப்பாகத்தின் விஷயத்தைக்குறிக்குஞ் சொற்க ளால் ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோக பருவம், பீஷ்மபருவம், துரோணபருவம், கர்ணபருவம், சல்லியபருவம், சௌப்திகபருவம், ஸ்திரீபருவம், சாந்திபருவம், அநுசாஸநபருவம், அசுவ மேதபருவம், ஆசிரமவாசபருவம், மௌஸலபருவம், மகாபிரஸ்தாநபருவம், ஸ்வர்க்காரோகணபருவம் எனப் பெயர்பெற்ற பதினெட்டுப் பருவங்களைக் கொண்டது. (ஆயினும், வில்லிபுத்தூரார்பாடியன, முதற்பத்துப் பரு வங்களே.) அவற்றுள்,

மூன்றாவது

## ஆரணியபருவம்

இத்தொடர் - வனத்தில்நடந்த விருத்தாந்தத்தின் விஷயமான பருவம் என்று பொருள்படும்: ஆறாம் வேற்றுமைத்தொகை. ஆரணியம் - அரணிய சம்பந்தமானது: தத்திதாந்தநாமம்: (அரணியம்-காடு.) பருவம்=பர்வம்: கணு: கரும்பு மூங்கில் முதலியவற்றிற்கு ஏகதேசமாகியகணுப்போல நூலுக்கு ஏகதேசமாகிய உறுப்பைப் பருவம் என்பது, உவமவாகுபெயர். ஆகவே, பாண்டவர்கள் வனத்தில் வாசஞ்செய்த சரித்திரத்தைச் சொல்லும் பாக மென்பது, கருத்து. இனி, இத்தொடர்க்கு, வனசம்பந்தமான வரலாற்றை விஷயமாகவுடைய பருவமென இரண்டனுருபும் பொருளும் உடன்தொக்க தாகக் கூறினுமாம். இந்த ஆரணியபருவம், அருச்சுனன் றவநிலைச்சருக்கம் முதல் பழம்பொருந்துசருக்கம் ஈறாக எட்டுச்சருக்கங்களை யுடையது: அவற்றுள்,

முதலாவது

### அருச்சுனன் றவநிலைச்சருக்கம்

அருச்சுனனது தவத்தின் தன்மையைக் கூறுங் கூறுபாடென்பது, பொருள். அர்ஜுநனென்னும்வடசொல்லுக்கு-வெண்ணிறமுடையவனென் பது, பொருள். இது, முதலில் இந்நிறமுடைய கார்த்தவீரியமகாராசனுக் குப் பெயராயிருந்து, பின்பு அவனைப்போன்ற சௌரிய தைரியங்களையுடைய பார்த்தனுக்குஇட்டு வழங்கப்பட்டது: இது, உவமவாகுபெயரின்பாற்படும். பார்த்தன் கருநிறமுடையவனாதலால், அவனுக்கு அருச்சுனனென்பது நிறம் பற்றிவந்தபெயரென்றல், பொருந்தாது. தவம்-தபஸ் என்னும் வடமொழி யின் திரிபு: அதாவது - மனம் பஞ்சஇந்திரியங்களின்வழியிலே போகாமல்

நிற்கும்பொருட்டு, வனத்திற்சென்று, காய் கனி கிழங்குசருகுவருக்கங்களை உண்டும் நீர்பருகியும் காற்றுநுகர்ந்தும் விரதங்களால் உணவைச்சுருக்கு தலும், கோடைக்காலத்தில் வெயிலிலும் பஞ்சாக்கினிமத்தியிலும் நிற்றலும், மாரிக்காலத்திலும் பனிக்காலத்திலும் நீர்நிலையிற் பாசியேற நிற்றலும், சுவாசத்தை அடக்குதலும் முதலிய செயல்களை மேற்கொண்டு, அவற்றால் தன்உயிர்க்குவருந் துன்பங்களைப் பொறுத்து, இஷ்டதெய்வத்தைத் தியானித்தல். நிலை-நிற்றல் : ஐ விகுதிபெற்ற தொழிற்பெயர். சருக்கம் - ஸர்க்கம்: முடிபு அல்லது படைப்பு என்று பொருள்; அது, சங்கேதத்தால், ஒரு பெரிய வகுப்பினுட்பட்ட சிறிய பாகத்தைக் குறிக்கும்.

1.— பாண்டவர் பன்னீராயிரம் முனிவரோடு காமியவனஞ்சேர்தல்.

பெருமித வலியும் பாரும் பேணலார் கவர வின்சொற்
றருமனுந் தம்பி மாருந் தழலெழு தைய லாளு
மருமக முனிவர் மூந்நான் காயிரர் சூழ்ந்து போதக்
கருமுகில் படியுஞ் சாரற் காமிய வனம்புக் காரே.

(இதன் பொருள்.) இன் சொல் தருமன்உம் - இனிமையான சொற்களையுடைய தருமபுத்திரனும், தம்பிமார்உம் - (அவனது) தம்பியர் நால்வரும், தழல் எழு தையலாள்உம் - யாக அக்கினியில் தோன்றின அழகிய திரௌபதியும்,—பெருமிதம் வலிஉம் - (தங்களது) மிகுந்த வலிமைக்குக் காரணமான மந்திரி சேனை முதலியவற்றையும், பார்உம் - இராச்சியத்தையும், பேணலார் - பகைவர்களாகிய துரியோதனனுதியர், கவர-பறித்துக் கொள்ள,—(அதன்பின்பு), மூந்நான்கு ஆயிரர் பன்னீராயிரமென்னுங் கணக்குடையவராகிய, அரு மகம் முனிவர் - (பிறரால் செய்வதற்கு) அருமையான யாகங்களைச் செய்துள்ள முனிவர்கள், சூழ்ந்து போத - (தம்மைச்) சுற்றிலும் வராநிற்க, கரு முகில் படியும் சாரல் காமியவனம் - கருமையான மேகங்கள் தங்குகின்ற மலைப்பக்கங்களையுடைய காமியமென்னுங் காட்டை, புக்கார் - அடைந்தார்கள் ; (என்றவாறு.)—ஏகாரம் ஈற்றசை.

பெருமிதம் - மிகுந்த அளவு. பேணலார் - தம்மை விரும்பாதவர் ; எனவே, பகைவராயிற்று: இன்சொல் என்றது - மற்ற நற்குணங்களுக்கும் உபலக்ஷணம் ; உபலக்ஷணமாவது - ஒருமொழி ஒழிந்த தன்இனங்களையுங் குறிப்பது: [நன்னூல், பொதுவியல், எ.] தருமத்தினின்றுந் தவறினவர்களுக்குச் சிறிதும் பக்ஷபாதமில்லாமல் குற்றத்திற்கேற்ற தண்டனை செய்து தருமத்தைக் காத்தலால், தருமனென்று யமனுக்குப் பெயர். தந்தையே மைந்தனாகப் பிறக்கிறு னென்னும் நூல்வழக்குப்பற்றி, தருமபுத்திரனைத் தருமனென்றார். துருபதமகாராஜன், தன்னை அருச்சுனனைக்கொண்டு வென்று கட்டிக்கொணர்வித்துப் பங்கப்படுத்தின துரோணாசாரியர்மீது கோபித்து அவரைக் கொல்லும்பொருட்டு ஒருபுத்திரனும் அருச்சுனனுக்கு மணஞ்செய்துகொடுக்கும்பொருட்டு ஒருபுத்திரியும் உதித்தல் வேண்டு

மென்று யாஜஉபயாஜரைக்கொண்டு புத்திரகாமயாகஞ் செய்விக்க, அவ் வோமத்தீயினின்றும் திட்டத்துய்மனும் திரௌபதியும் தோன்றினராத லின், 'தழலெழு தையலாள்' எனப்பட்டாள். தையலாள் - அழகுடையவள்; தையல் - அழகு. முநிவர் - கடவுளைத்தியானஞ் செய்பவரென்றும், முக் காலத்து ஞானமுடையவரென்றும் பொருள். காமியவனம், சரசுவதிநதி தீரத்திலுள்ளதென்பர். தௌமியமுனிவரின்யவற்படி தருமபுத்திரன் சூரிய பகவானைத்துதித்து அட்சயபாண்டம்பெற்றுத் தன்னுடனிருக்கும் அந் தணர்களைப் போஷித்தானென்பதை முதனூலாலறிக.

இதுமுதல் மூன்று கவிகள் - ஒன்று நான்காஞ்சீர்கள் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிவந்த கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (க)

2.—அவர்கள் அந்தக்காமியவனத்தின் அழகைக் காணுதல்.

ஆரமுமகிலுநாறுமருவியுஞ்சுனையுமத்த
வாரணம்பிடிகளோடுவாரிதோய்கானியாறு
மீரமுநிழலுங்காயுங்கனிகளும்யாவுமீண்டிக்
காரினம்பொழியுமந்தக்கானகத்தழகுகண்டார்.

(இ - ள்.) ஆரம்உம் - சந்தனக்கட்டைகளும், அகில்உம்-அகிற்கட்டை களும், நாறும் - நல்மணம் வீசப்பெற்ற, அருவிஉம் - மலையருவிகளும், சுனை உம் - மலைச்சுனைகளும், மத்த வாரணம் - மதம்பிடித்த ஆண் யானைகள், பிடிகளோடு - பெண்யானைகளுடனே, வாரி தோய் - நீரில் விளையாடப் பெற்ற, கான் யாறுஉம் - காட்டாறுகளும், ஈரம்உம் - குளிர்ச்சியும், நிழல் உம் - மரநிழல்களும், காய்உம் - காய்களும், கனிகள்உம் - பழங்களும், யாஉம் - மற்ற எல்லாப் பொருள்களும், ஈண்டி - (தன்னிடத்தே) பொருந் தப்பெற்று, கார் இனம் பொழியும் - மேகக்கூட்டம் மழை பொழிவதற்கிட மான, அந்த கானகத்து - அந்தக்காமிய வனத்தினது, அழகு - அழகை, கண்டார் - பார்த்தார்கள், (பாண்டவர்கள்); (எ - று.)

ஆரமும்அகிலும் மலையினின்று அடித்துக்கொணரப்படுபவை. சுனை - நீரூற்றுள்ள மலைக்குளம். பிடி - யானையின் பெண்பெயர்; ''பிடியென் பெண்பெயர் யானைமேற்றே'' என்றார், ஆசிரியர் தொல்காப்பியனார். காய், கனி - காய்ப்பது, கனிவது எனக் காரணப்பெயர். (உ)

3.—பாண்டவர் சென்றபின் அச்சூழல் முகில்கள்தோன்றி விலங்குகளும் பகையற்று இமயமலைச்சாரல்போல் அழகுபெற்றிருத்தல்.

அங்கிவர்புகுந்தபின்னரங்கியின்புகையுமாறிப்
பொங்கியவோமத்தீயின்புகையினுன்முகிலுண்டாகச்
சிங்கமுந்துதிக்கைமாவுஞ்சேர்ந்துடன்றிரியச்சூழ
லெங்கணுமழகுபெற்றஇமகிரிச்சாரல்போன்றே.

(இ - ள்.) அங்கு - அக்காமிய வனத்தில், இவர் - பாண்டவர்கள், புகுந்த பின்னர் - பிரவேசித்தபின்பு, அங்கியின் புகையும் ஆறி-(அங்கங்குத்

தானாகவே பற்றியெரிகிற) காட்டுத்தீயின் புகையும் தணிந்து, பொங்கிய ஓமம் தீயின் புகையினால்-மிகுதியாயெழுந்த ஓமாக்கினியின் புகையினாலே, முகில் உண்டாக - மேகங்கள் உண்டாகவும்,—சிங்கம் உம் - சிங்கங்களும், துதிக்கை மா உம் - துதிக்கையையுடைய யானைகளும், சேர்ந்து உடன் திரிய - (தமக்குள் பகைமை நீங்கி) ஒன்றுசேர்ந்து கூடத் திரியவும், சூழல் எங்கண் உம் - அவ்விடம் முழுவதும், இமகிரி சாரல் போன்று - இமவத்பர்வதத்தின்சாரலையொத்து, அழகு பெற்றது - அழகை அடைந்தது; (எ - று.)

நல்லோர்களுள்ள இடத்தில் அக்கினிபயம் முதலியன ஒழிதலும், யாகம் முதலிய வைதிககாரியங்கள் முறைப்படி நிகழ்தலும், காலங்களில் மழை பெய்தலும், சகல பிராணிகளுக்கும் பகைமை யொழிதலும் இயல்பென்பது, நூற்றுணிபு. "நல்லார் ஒருவருளரே லவர் பொருட்டா, லெல்லார்க்கும் பெய்யு மழை," "மழையுந் தவமிலா ரில்வழியில்லை," "நிலத்தியல்பு, வானமுரைத்து விடும்," "அறன்காளை யுறைநாடுகார், மின்னொற்று மழையுண்டு விளைவுண்டு," என்பவற்றை இங்கே உணர்க. புகையும் மாறி என்றும் பிரிக்கலாம். இமகிரி=ஹிமகிரி. பனிமலை. 'அங்கியும் புகையு மாறிப் பொங்கியவோமத்தீயாற் புகலருமுகிலுண்டாக' என்றும்பாடம்.(௩)

வேறு

4.—துருபதன் முதலிய சுற்றத்தார் அந்தப் பாண்டவரைக் கிட்டுதல்.

துருப னுந்திட்டத் துய்மனுஞ் சோமக
நிருப ரானவர் யாவரு நேர்ந்துடன்
விரவு தானை விராடனுஞ் சுற்றமு
மருவி னாரவ் வனத்திருந் தோரையே.

(இ - ள்.) துருபன்உம் - துருபத மகாராசனும், திட்டத்துய்மன்உம் - (அவன் மகனாகிய) திருஷ்டத்யும்நனும், சோமக நிருபர் ஆனவர் யாவர் உம் - மற்றும் சோமககுலத்திற்பிறந்த அரசர்களெல்லோரும், நேர்ந்து உடன் விரவு தானை விராடன்உம் - மனமொத்துக் கூடவருகின்ற சேனையையுடைய விராடராஜனும், சுற்றம்உம் - (இவ்வரசர்களின்) பந்துக்களும், அ வனத்து இருந்தோரை - அந்தக் காமியவனத்திலிருந்த பாண்டவர்களை, மருவினார் - அடைந்தார்கள்; (எ - று.)

துருபன்=த்ருபதன்: இவன் பாண்டவர்களுக்குப் பெண்கொடுத்த மாமன்: பாஞ்சால தேசத்தரசன். திட்டத்துய்மன் - பாண்டவர் மைத்துனன்; இவ்விருவரும் சோமககுலத்தவரென்று அறிக. நிருபர் - மனிதர்களைக் காப்பவர்; ந்ரு-மனிதர். துருபதன் என்பது துருபன்என விகாரப்பட்டுவந்தது. விராடன் - மச்சநாட்டரசன்.

இது முதற் பன்னிரண்டு கவிகள் - பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும் மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிவந்த கலிவிருத்தங்கள். (௪)

5.—மற்றும் அன்புள்ளவர்களும் கற்ற அறிஞரும் அங்கே வந்து மொய்த்தல்.

*மற்றுமற்றுமகீபரிலன்பினு*
*னுற்றவுற்றவுறவுடையோர்களுங்*
*கற்றகற்றகலைவிதமாக்களுஞ்*
*சுற்றுமொய்த்தனர்தோமறுகேண்மையார்.*

(இ - ள்.) தோம் அறு கேண்மையார் - குற்றமற்ற நட்பையுடையவரான, மற்றுஉம் மற்றுஉம் மகீபரில் - இன்னும் வேறு வேறு தேசத்தரசர்களில், அன்பினால் உற்ற உற்ற - அன்பால் மிகவும் நெருங்கிய, உறவு உடையோர்கள்உம் - பந்துத்துவமுடையவர்களும், கற்ற கற்ற கலை விதம் மாக்கள்உம் - மிகுதியாய்க்கற்ற நூல்களின் வகைகளையுடைய மனிதர்களும், சுற்றுஉம் மொய்த்தனர் - (பாண்டவர்களுக்குச்) சுற்றிலும் நெருங்கினார்கள் ; (எ - று.)

அடுக்குக்கள் - மிகுதிப்பொருளன. மற்று என்னும் இடைச்சொல், பிறிது என்னும் பொருளது கேண்மை - க்ஷேமசமாசாரங்களைக் கேட்பது [விசாரிப்பது] என்னும் பொருள்பற்றி, நட்பை யுணர்த்திற்று. மகீபர் - பூமியைக் காப்பவர் ; மஹீ - பூமி. இயல்பாக நிற்கும் மாக்களென்னுஞ்சொல், அறிவில்லாத மனிதரை உணர்த்தும் ; மாக்களெனப் படுவார், மனவுணர்ச்சியின்றி ஐம்பொறியுணர்ச்சி மாத்திரமே யுடையவர் : மக்களெனப்படுவார், ஐம்பொறியுணர்வோடு மனவறிவும் உடையவர் ; இவ் வேறுபாடு "மாவு மாக்களு மையறிவினவே," "மக்கடாமே யாறறிவுயிரே" என்னும் தொல்காப்பிய மரபியற் சூத்திரங்களைக்கொண்டு அறிக. (ரு)

6.—ஸ்ரீ க்ருஷ்ண பகவான் வருதல்.

*மாதவத்தின்பயனெனமாதவன்*
*யாதவக்குலத்தேறிமையோர்பதி*
*யாதவத்துக்கருநிழல்போலருள்*
*வேதவித்தகவீரனுமேவினான்.*

(இ - ள்.) மா தவன் - இலக்குமிக்குக் கணவனும், யாதவர் குலத்து ஏறு - யதுசம்பந்தமானகுலத்தில் தோன்றிய ஆண்சிங்கம் போன்றவனும், இமையோர் பதி - தேவர்களுக்குத் தலைவனும், ஆதவத்துக்கு அரு நிழல் போல் அருள் - வெயிலிற்பட்டு வருத்தத்தை ஒழிப்பதற்கு உதவுகின்ற அருமையானநிழல்போல (ப் பலவகைத துன்பங்களையொழிப்பதற்கு)க் கருணை செய்கின்ற, வேதம் வித்தகம் வீரன்உம்-வேதங்களின் ஞானத்துக்கு விஷயமான மகா வீரனுமாகிய கண்ணபிரானும், மா தவத்தின் பயன் என - (பாண்டவர்கள்செய்த) பெருந்தவத்தின் பயன்போல, மேவினான்-(அங்கு) வந்தான் ; (எ - று.)

சமயத்தில் வந்து உதவுதல்பற்றி, தவப்பயன் கண்ணபிரானுக்கு உவமை: எவ்வளவோ பெருந்தவஞ்செய்திருந்தாலன்றிக் கண்ணபிரானது

வருகை நேரா தென்றவாறு. யாதவன் - யதுகுலத்துத் தோன்றியவன். யதுஎன்பான், சந்திரகுலத்துத் தோன்றிய யயாதியின் குமாரருள் ஒருவன்: ஏறு - ஆண்பெயர். வெயிலிலடிபட்டவர்க்கே நிழலினருமை தெரியுமென்பது, இங்குக் கருதத்தக்கது. ஆதவம் - ஆதபம்; நன்றாகத் தவிப்பது. 'ஆதபத்துக்கு அருநிழல்' என்பதை, "துன்பத்திற்கு யாரோ துணையாவார்," "மறத்திற்கு மஃதே துணை," 'பித்தத்துக்கு இஞ்சி நல்லது' என்பனபோலக் கொள்க. வேதம் வித்தகன் - வேதத்தினால் அறிதற்கு உரியவன் எனினுமாம். வேதம் என்பதற்கு - நன்மை தீமைகளை விதிவிலக்குக்களால் அறிவிப்பது என்பது அவயவப்பொருள். வீரனும், உம் - இறந்தது தழுவியது. (௬)

7.—தருமனிடத்து வந்தவர் அன்போடு கூறத்தொடங்குதல்.

பாரிழந்தவிப்பாதகச்சூதுகேட்
டீருநெஞ்சினரேமுறுநோக்கினர்
பேரறன்றருபிள்ளையைப்பார்த்தருள்
கூரவன்பொடிவையிவைகூறுவார்.

(இ - ள்.) பார் இழந்த - (பாண்டவர்கள்) பூமியை இழப்பதற்குக் காரணமான, இ பாதகம் சூது - பாவத்தைத் தருவதான இந்தச் சூதாட்டம் நடந்த செய்தியை, கேட்டு - செவியுற்று, ஈரும் நெஞ்சினர் - பிளந்த மனமுடையவர்களும், ஏம் உறு நோக்கினர் - வருத்தம் மிகுந்த பார்வையுடையவர்களுமாகிய துருபதன்முதலியபந்துக்களும் சிநேகிதர்களும், —பேர் அறன் தரு பிள்ளையை பார்த்து - பெருமையையுடைய தருமக் கடவுள் தந்த குமாரனாகிய யுதிட்டிரனை நோக்கி, அருள் கூர - கருணைமிக, அன்பொடு - அன்புடனே, இவை இவை கூறுவார் - இந்த இந்த வார்த்தைகளைச் சொல்வாரானார்கள்; (எ - று.)—அவற்றை, மேல் நான்கு கவிகளாற் கூறுகின்றார்.

அறன் - அறத்திற்குஉரிய கடவுள்: யமன். தருமபுத்திரன் யமதேவனது அருளாற் குந்திதேவியினிடம் பிறந்தவனாதலால், அவனை 'அறன்றரு பிள்ளை' என்றது: இனி, இத்தொடர் - தருமத்தைச் செய்கின்ற பிள்ளையென்றும் பொருள்படும். பிள்ளை - இளமைப் பெயர்: இங்கு, உயர்திணைக்கு வந்தது. வன்பொடு என்று பிரித்து, வீரத்தோடு எனினுமாம். இழந்த என்னும் பெயரெச்சம், காரியப்பொருளது. 'நோய் தீர்ந்த மருந்து' என்பதுபோல. ஏமுறுதல்=ஏமமுறுதல்: ஏமம் என்பதற்கு - களிப்பு என்றும் பொருளுண்டு. அருளாவது - ஒருசம்பந்தமுமில்லாமலே இயல்பாக எல்லாவுயிர்களின்மேலுஞ் செல்லுங் கருணையென்றும், அன்பாவது - மனைவியும் மக்களும் முதலிய பந்துக்களிடத்தாயினும் சிநேகிதர்களிடத்தாயினும் ஒருசம்பந்தம்பற்றிஉண்டாகுங் காதலென்றும் வேறுபாடு அறிக. (எ)

8.—வந்தவர்களில் ஒருசாரார்,திரௌபதியை இராசசபையிற்கொணர்வித்த துரியோதனனைச் சேனையோடு சிதற எற்றுவோமெனல்.

மரபின்வல்லியைமன்னவையேற்றிய
குருகுலேசனைக்கொற்றவெஞ்சேனையோ
டிரியவெற்றுதுமிப்பொழுதேயென
வுரமுஞ்சீற்றமுந்தோற்றவுரைசெய்வார்.

(இ - ள்.) மரபின் வல்லியை - உயர்குலத்திற்பிறந்த பூங்கொடி போன்ற திரௌபதியை, மன் அவை ஏற்றிய - இராசசபையிற் கொணர் வித்த, குரு குல ஈசனை - குருகுலத்துக்குத் தலைவனை துரியோதனனை, கொற்றம் வெம் சேனையோடு - வெற்றியையுடைய கொடிய சேனையுடனே, இரிய-நிலை கெட்டு ஓடிப்போம்படி, இப்பொழுதே—, எற்றுதும் - (மேற் சென்று) தாக்குவோம், என-என்று, உரம்உம் சீற்றம்உம் தோற்ற- (தங்கள்) வலிமையும் கோபமும் வெளித்தோன்றும்படி, உரை செய்வார் - சொல்வாரானார்கள் ; (எ - று.)

வல்லி - உவமவாகுபெயர் : மேன்மைக்கும் அழகுக்கும் உவமை. குலேசன்-குணசந்திபெற்ற வடமொழித்தொடர். எற்றுதுமென்ற இடத்து ஏறுதுமென்ற பாடத்துக்கு - அவன் கீழ்ப்படுமாறுவென்று மேலேறுவோம் என்று பொருள். மரபின், இன் - ஏழனுருபு. குரு என்பவன் சந்திர குலத்திற் பிறந்த ஓரரசன் ; இவனால், அக்குலம் ' குருகுலம் ' என்றும், அந்நாடு ' குருக்ஷேத்திரம் ' என்றும், அக்குலத்தவர் ' கௌரவர் ' என்றும் பேர்பெற்றமை காண்க. (அ)

9.—வேறுசிலர் துரியோதனன்தம்பிமாரைக் கொல்வோ மெனல்.

தம்பிமாரைத்தனித்தனியேயுயிர்
வெம்பிவீழவிரைந்துவில்வாங்கியின்
றும்பர்காணவுயிரழிப்போமெனத்
தும்பைசூடக்கருதினர்சொல்லுவார்.

(இ - ள்.) இன்று - இன்றைத்தினமே, விரைந்து - சீக்கிரமாகச் சென்று, வில் வாங்கி - வில்லை வளைத்து, தம்பிமாரை - (துச்சாசனன் முதலிய துரியோதனனுடைய) தம்பியர்தொண்ணூற்றொன்பதின்மரையும், தனித்தனியே - ஒவ்வொருவனாக, உயிர் வெம்பி வீழ - உயிர் வாடி விழவும், உம்பர் காண-தேவர்கள் பார்க்கவும், உயிர் அழிப்போம் - கொல்லுவோம், என-என்று, தும்பை சூட கருதினர்-தும்பைப்பூமாலையைத் தரிக்க நினைத்தவர்களாய், சொல்லுவார் - சொல்லுவாரானார்கள் ; (எ - று.)

பூலோகத்தில் நடக்கும் போர்களைத் தேவர்கள் ஆகாயத்தில் வந்திருந்து பார்ப்பது இயல்பு ஆதலால் ' உம்பர் காண ' எனப்பட்டது. இனி, உயிர் உம்பர் காண என இயைத்து - (அவர்களுடைய) உயிர் வீரசுவர்க்கத்தைச் சென்று சேரும்படி என்றும் பொருள்கூறலாம். தும்பைமாலை - போர்செய்பவர் தாம் வெல்வதற்கு அடையாளமாகச் சூடுவது. (கூ)

### 10.— சிலர், வஞ்சகச் சூதாடிய சகுனியை மாய்க்க எழுங்கள் என்று கூறுதல்.

*வஞ்சகச்சுபலன்றருமைந்தனை*
*வெஞ்சமத்தினில்வீழக்கணத்திடைச்*
*செஞ்சரத்தின்வழியுயிர்செல்லவே*
*யெஞ்சுவிக்கவெழுமென்றியம்புவார்.*

(இ - ள்.) வஞ்சகன் - (சூதாடி) வஞ்சனை செய்தவனாகிய, சுபலன் தரு மைந்தனை - சுபலனென்பவன்பெற்ற புத்திரனான சகுனியை, கணத்திடை - கணப்பொழுதினுள்ளே, வெம் சமத்தினில் வீழ - கொடிய போரில் (உடம்பு) வீழவும், செம் சரத்தின் வழி - செந்நிறமான அம்பு தைத்தவழியே, உயிர் செல்ல - உயிர்நீங்கவும், எஞ்சுவிக்க - நாசமடைவிக்கும் பொருட்டு, எழும் - புறப்படுங்கள், என்று—, இயம்புவார் - சொல்வாரானார்கள்; (எ - று.)

சுபலன்=ஸுபலன்: நல்லவலிமையையுடையவன்: இவன் காந்தார தேசத் தரசன்: திருதராட்டிரன் மனைவியின் தந்தை. பகைவர்களது உதிரந்தோய்ந்திருத்தல் தோன்ற, 'செஞ்சரம்' என்றார்; வளைவில்லாத சரமென்றுமாம். எழும்=முன்னிலையேவற்பன்மை. (க0)

### 11.—கர்ணனுடன் பொருவோமென்று சிலர் கூறுதல்.

*சீதவெண்குடைவேந்தர்தந்தேர்விடுஞ்*
*சூதன்மைந்தன்சுயோதனன்றோழனை*
*மாதிரங்களில்வானவர்காணவிப்*
*போதுடற்றுவமென்னப்புகலுவார்.*

(இ - ள்.) சீதம் - குளிர்ச்சியைத் தருகின்ற, வெள - வெண்மையான, குடை - குடையையுடைய, வேந்தர்தம் - (குருகுலத்து) அரசர்களுக்கு, தேர் விடும்-தேரை யோட்டுகின்ற, சூதன்-சாரதியாகிய அதிரதனது, மைந்தன் - குமாரனும், சுயோதனன் தோழனை - துரியோதனனது சிநேகிதனுமாகிய கர்ணனை, வானவர் - தேவர்கள், மாதிரங்களில் - (ஆகாயத்தில்) எல்லாத்திக்குக்களிலுமிருந்து, காண - பார்க்கும்படி, இ போது - இப்பொழுதே, உடற்றுவம் - போர்செய்வோம், என்ன - என்று, புகலுவார் - சொல்லுவாரானார்கள்; (எ - று.)

துரியோதனன் பாண்டவர்களை வருத்துவது தம்பிமார்பலமும் சகுனியின் பலமும் கர்ணனதுபலமுங்கொண்டே யாதலால், இவ்வாறு வந்த அரசர்கள் கூறினார்கள். ஆறுகையைக் குடையென்றல், கவிமரபு. கர்ணன் - பாண்டவர்கள் தாயாகியகுந்திதேவி கன்னிகையாயிருக்கும்போது தனக்குத் துருவாச முனிவர் உபதேசித்த மந்திரத்தைப் பரீட்சிக்கும்பொருட்டுச் சூரியனை நினைத்து அம்மந்திரத்தை உச்சரிக்க, உடனே அத்தேவன் வந்து அவளுக்கு அனுக்கிரகித்ததனால், அவளிடம்பிறந்த புத்திரன்; இவனைப் பிறந்த

பொழுதே குந்தி மானத்துக்கு அஞ்சி ஒரு மிதக்கும் மரப்பெட்டியில் வைத்துப் பூட்டிக் கங்கையாற்றில்விட்டுவிட, அதனைத் திருதராட்டிரனது தேர்ப்பாகன் கண்டு எடுத்துத் திறந்துபார்த்துக் கொண்டுபோய்த் தன் மனைவியாகிய ராதையும் தானுமாக வசுசேனனென்று பேரிட்டு வளர்த்தான்: இவன் பின்பு துரியோதனனுக்குப் பிராணசிநேகிதனாகி, அவனருளால் அங்கதேசத்துக்கு அரசனாயினான். சுயோதனன்=ஸுயோதநன்: நல் வெற்றியைத்தருகிற யுத்தத்தையுடையவன் என்று பொருள். வானவர்-வானுலகத்துள்ளவர். போது=பொழுது: மரூஉ. (கக)

12.—இதுவும் அடுத்த கவியும் - குளகம்: அங்ஙனஞ்சொல்லியவர்து சினம்மூண்டவார்த்தையைக் கேட்டு ஸ்ரீக்ருஷ்ணன் சொல்லலுறுதல்.

உந்தவுந்தவொருவர்க்கொருவர்வாய்
முந்தமுந்தமுடுகுசினத்தரா
யந்தவந்தவவனிபர்யாவரு
மிந்தவிந்தவுரைகளியம்பவே.

(இ - ள்) அந்த அந்த அவனிபர் யாவர்உம் - அந்தந்த அரசர்களெல்லாரும், உந்த உந்த - (பாண்டவர்களுக்கு வந்த அவமானமானது தங்களைப் பிடித்து) இடைவிடாமல் முன்னே தள்ளுதலால், முடுகு சினத்தர் ஆய் - பொங்கியெழுகின்ற கோபத்தையுடையவர்களாய், ஒருவர்க்கு ஒருவர் வாய் முந்த முந்த - ஒருத்தரைக்காட்டிலும் ஒருத்தருக்கு வாய்ச்சொல் மிகவும் முற்பட, இந்த இந்த உரைகள் இயம்ப - இந்த இந்த (கீழ்க்கூறிய) வார்த்தைகளைச் சொல்ல,—(எ - று.) — "கேட்டிருந்தருள் கேசவன்...மகீபர்க்குரைசெய்வான்" என்று அடுத்த கவியோடு முடியும்.

ஒருவர்க்கு - நான்கனுருபு, எல்லைப்பொருளது. வாய் - அதிலிருந்து வருகிற சொல்லுக்கு, இடவாகுபெயர்: கருவியாகுபெயரென்றுங்கூறலாம். அவனிபர் - பூமியைக்காப்பவர். மூன்றமடியில், அந்த வந்த என்றும் பிரிக்கலாம். (கஉ)

13. கேட்டிருந்தருள்கேசவன்வாசவன்
காட்டிருந்தனனென்னக்கவின்பெறுந்
தோட்டிருந்தளிதேனுகர்சோலையின்
மாட்டிருந்தமகீபர்க்குரைசெய்வான்.

(இ - ள்.) கேட்டு இருந்தருள் - (அவற்றைக்) கேட்டுக்கொண்டிருந்தருளிய, கேசவன் - கண்ணபிரான், வாசவன் காடு இருந்தனன் என்ன - இந்திரன் வனத்தில் வந்திருந்தாற்போல, கவின் பெறும் தோடு இருந்து அளி தேன் நுகர் சோலையின் மாடு இருந்து - அழகுபெற்ற பூவிதழ்களில் தங்கி வண்டுகள் மதுவைக் குடிக்கப்பெற்ற காமிய வனத்திலே வந்திருந்து, அ மகீபர்க்கு - அந்த அரசர்களுக்கு, உரைசெய்வான் - சொல்வானானான்; (எ - று.)—அது, மேல் நான்குகவிகளாற் கூறுகின்றார்.

கேசவன் என்பதற்கு - பிரமனையும் உருத்திரனையும் தன் அங்கத்திற் கொண்டவனென்றும், அழகிய தலைமயிர்களையுடையவனென்றும், கேசி

யென்னும் அசுரனைக் கொன்றவ னென்றும் பொருள்கள் கூறப்படும். வாசவன்=வாஸவன்: அஷ்டவசுக்களுக்குத் தலைவன்; அன்றிக்கே, எல்லா ஐசுவரியமுமுடையவன். காடு - கற்பகச் சோலையுமாம். இருந்த மகீபர்க்குஎன்று பிரித்து, வாசவன் காட்டில் வந்திருந்தாற்போலக் கவின் பெறத் தோன்றுகின்றனர் மகீபர் என்று உரைப்பாரு முளர். (கரு)

14.—இரண்டுகவிகள் - சினந்துகூறிய அரசர்களை ஸ்ரீக்ருஷ்ணன் சமாதானப்படுத்தியது கூறும்.

விடுகவிந்தவெகுளியைப்பின்புற
வடுகநுந்திறலாண்மைகடோன்றவே
வடுமனங்கொடுவஞ்சகஞ்செய்பவர்
கெடுவரென்பதுகேட்டறியீர்கொலோ.

நான்கு கவிகள்-ஒரு தொடர்: கண்ணன்வார்த்தை.

(இ-ள்.) இந்தவெகுளியை-இக்கோபத்தை, விடுக-(இப்பொழுது) விடுவீர்களாக; பின்பு உற-(வனவாச அஜ்ஞாதவாசங்களின்) பின்பாக, நும் திறல் ஆண்மைகள் தோன்ற-உம்முடைய பலபராக்கிரமங்கள் வெளிப்படும்படி, அடுக - (பகைவர்களைக்) கொல்லுவீராக; 'வடு மனம் கொடு - குற்றத்தையுடைய மனத்தையுடையவர்களாய், வஞ்சகம் செய்பவர் - வஞ்சனை செய்பவர்கள், கெடுவர் - கெட்டே விடுவர்', என்பது - என்னும் வார்த்தையை, கேட்டு அறியீர்கொல்ஓ - (நீவிர்) கேட்டும் அறிந்தீரில்லையோ?

மனக்குற்றங்கொண்டு பிறர்க்குத்தீமைசெய்பவர் கெடுவராதலால், இப்போதுசீற்றங்கொண்டு துரியோதனாதியரைச் செறலாகாதென்பதாம். இனி 'கெடுவான் கேடுநினைப்பான்' என்ற பழமொழிக்கு ஏற்ப, துரியோதனாதியர் கேடுநினைத்தலால் தாமேகெடுவார்: அவரைக் கெடுக்கவேணுமென்று இப்போது வெகுளிகொள்ளவேண்டா என்றுமாம். "பிறர்க்கின்னா முற்பகல்செய்யின் தமக்கின்னா, பிற்பகல்தாமேவரும்" என்றார், திருவள்ளுவரும். 'கேட்டு' என்பதன்பின் செய்யுள்விகாரத்தாற்றொக்குநின்ற இறந்ததுதழுவிய இழிவுசிறப்பும்மை 'கற்றறியீரோ?' என்னும் பொருளையுணர்த்தும். (கச)

15. இயைந்துரைத்தவியைபின்படியினி
வியந்திருக்கும்விபினந்தொறுமிருந்
துயர்ந்தபிற்செய்வினையையின்றுன்னுத
லயர்ந்துரைத்தலலாதிலையாவதே.

(இ - ள்.) இயைந்து உரைத்த இயைபின்படி - (துரியோதனாதியரது சபையில்) சம்மதித்துச் சொன்ன உடன்பாட்டின்படி, இனி - இனிமேல், வியந்து-(கண்டவர்) அதிசயப்படும்படி, (இப்பாண்டவர்),இருக்கும்-செழித்திருக்கின்ற, விபினம்தொறும்-பலகாடுகளில், இருந்து-வாசஞ்செய்திருந்து, உயர்ந்த பின் - (அஜ்ஞாதவாசமுங் கழிந்து) ஏடேறினபின்பு, செய் - செய்வதற்குஉரிய, வினையை - போர்த்தொழிலை, இன்று - இன்றைக்கே, உன்

னுதல் - செய்யநினைத்துப்பேசுதல், அயர்ந்து உரைத்தல் அலாது - மறந்து தப்பிப்பேசுவதேயல்லாமல், ஆவது - (அதனால்) உண்டாகும் பயன், இலை - இல்லை; (எ - று.)

உடன்படிக்கைக்குக் கட்டுப்பட்டு நடக்கவேண்டுவது யாவர்க்கும் ஒத்ததேயாதலால், அதை மீறுவதாகப்பேசுவது தகுதியன்று எனச் சொல்லிச் சினந்த அரசரைக் கண்டித்தவாறு. இருந்தபின் என்று அமையாது 'இருந்து உயர்ந்தபின்' என்றது - அஜ்ஞாதவாசத்தின் அருமையை அறிவித்தற்கு. காரியத்தைக் காரணமாக உபசரித்து, பேசுதலை 'உன்னுதல்' என்றார்; உன்னுதல் - நினைத்தல். வியந்து = வியக்க: எச்சத்திரிபு. (கரு)

வேறு

16.—இதுவும் அடுத்த கவியும் - தருமபுத்திரனை நோக்கி ஸ்ரீ க்ருஷ்ணன் 'உமதுதாய் தனயர் முதலியோரை உரிய இடங்களில் அனுப்பிவிட்டு நீர் தன்னந்தனியேவனத்துஉறைதல் நன்று'என்று கூறுவது தெரிக்கும்.

கேட்டிநீ முரச கேது கிளைஞர்தம் மிருக்கை தோறு
மீட்டிய புதல்வ ருள்ளோர் யாரையு மிருத்தல் செய்து
காட்டிடை நீரும் வைகிக் கடவநாள் கழித்து மீண்டு
நாட்டிடை வந்தாற் காண்டி நலனுளோர் நலன்க ளெல்லாம்.

(இ - ள்.) (இவ்வாறு மன்னர்க்கு உரைத்திட்டுப் பிறகு தருமபுத்திரனை நோக்கி),—முரசகேது - பேரிகையின் உருவத்தையெழுதிய கொடியையுடைய யுதிட்டிரனே! நீ—, கேட்டி - (யான் சொல்வதைக்) கேட்பாயாக; கிளைஞர்தம் இருக்கைதோறும் - (உன்) பந்துக்களினுடைய இருப்பிடங்களில், ஈட்டிய புதல்வர் உள்ளோர் யாரைஉம் - (நீங்கள்) பெற்ற புத்திரர்களையும் மற்றுமுள்ள தாய் முதலிய எல்லோரையும், இருத்தல் செய்து - இருக்கும்படி ஏற்பாடுசெய்து, காட்டிடை நீர்உம் வைகி - காட்டிலே நீங்களும் வசித்து, கடவ நாள் கழித்து - கழிக்கக் கடவனவாகிய நாட்களைக் கழித்துவிட்டு, மீண்டு - திரும்பி, நாட்டிடை வந்தால் - நாட்டினிடத்தில் வந்தால், நலன் உளோர் நலன்கள் எல்லாம் - நல்ல ஊழ்வினை யுள்ளவர்கள் அனுபவிக்கும் நன்மைகளை யெல்லாம், காண்டி - அடைவாய்; (எ - று.)

தேவமானத்தாற் பதின்மூன்றுநாள்கள் கழித்தல்வேண்டுமென்பது முன்னையஏற்பாடு ஆகலால், 'நாள்கழித்து' என்றார்; இதனைக் கீழ்ச்சருக்கத்தில் "அரிவையோடகன்று நீவி ரைவிருமடவியெய்திச், சூரர்தின மீராறங்கட்டுன்னுதிர் மன்னுநாட்டி, லொருவருமறியாவண்ண மொருதினமுறைதி ருங்கள், பெருவிறலரசும்வாழ்வும்பின்னுறப்பெறுதிரென்றான்," "மறைந்துறை நாளினும்மை மற்றுளோ ரீண்டுளாரென், றறிந்திடின் மீண்டு மிவ்வாறரணிய மடைதி ரென்றான்" எனக் கூறியவாற்றாலும் அறிக. நலன் - நல்லூழுக்கு, ஆகுபெயர். 'நலனுளோர் நலன்களெல்லாம் காண்டி' என்பதற்கு - இப்போது நல்ல செல்வத்தையுடைய துரியோதனுதியாது நன்மைகளையெல்லாம்அழியப் பார்ப்பாயென்றும், உனனிடத்

தில் நல்லநண்புடையவர்கள் செய்யும் நல்லுதவிகளையெல்லாம் பெறுவா யென்றும் பொருள் கூறினுமாம்.

இதுமுதல் இருபத்தொருகவிகள், இச்சருக்கத்தின் முதற்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (கசு)

17. அன்னையைச்சுபலன்பாவையருகுறவிருத்தியுங்க
டன்னையர்தம்மையாகசேனனூர்தன்னில்வைத்துப்
பின்னையும்வேண்டுவோரைப்பிரிவுறநெறியிற்போக்கி
நன்னயத்தொடுநீர்கானம்வைகுதனன்மையென்றான்.

(இ - ள்.) அன்னையை - (உங்கள்) தாயாகிய குந்திதேவியை, சுபலன் பாவை அருகு உற - சுபலனது மகளாகிய காந்தாரியின் பக்கலிலே யிருக்கும்படி, இருத்தி - வைத்து, உங்கள் தன்னையர் தம்மை - உங்கள் புத்திரர்களை, யாகசேனன் ஊர்தன்னில் வைத்து - யாகசேனனென்னும் பெயரையுடைய துருபதமகாராசனது ஊரில் வைத்துவிட்டு, பின்னை உம் வேண்டுவோரை - மற்றும் அன்புடையவராகிய உறவினர்முதலானவர்களை, பிரிவு உற - (உங்களை விட்டுப்) பிரியும்படி, நெறியின் போக்கி - (அவரவர்க்கு உரிய) வழியே அனுப்பிவிட்டு, நீர்-நீங்கள், நல் நயத்தொடு - நல்ல நீதியுடனே, கானம் வைகுதல் - காட்டில் வசித்தலே, நன்மை - நல்லதாம், என்றான் - என்று அருளிச்செய்தான், (கண்ணபிரான்); (எ - று.)

கீழ்க்கவியிலே "கிளைஞர்தமிருக்கை தோறும்" என்று பொதுவாய்க் கூறியதனை இச்செய்யுளில் விசேடித்துக் கூறுகின்றான், இன்னாரின்னாரை இன்னின்னஇடத்து அனுப்பலாமென்ற ஒரெண்ணப் பாகுபாடு தோன்று தற்கு. நகுலசகதேவர்க்குக் குந்தி தாயன்றாதல் தோன்ற, 'உங்கள்' என்பது 'அன்னை' என்பதனோடு சேர்க்காமல் 'தன்னையர்' என்பதனோடு மாத்திரஞ் சேர்க்கப்பட்டது. பாவை - ஆகுபெயர். தன்னையர் - தநயரென்ற வடசொல்லின் விகாரம். பண்பியைப் பண்பாகஉபசரித்து, 'வைகுதல் நன்மை' எனப்பட்டது. வைகுதலே நன்மையென்னும் பிரிநிலையேகாரம் விகாரத்தால் தொக்கது. யாகசேனன் - பாஞ்சாலதேசத்தரசன்: திரௌபதியின் தந்தை. (கஎ)

### 18.—ஸ்ரீக்ருஷ்ணன்மொழிப்படியே செய்து கானில்வாழத் தருமன் விரும்பியது.

அச்சுதனுரைத்தமாற்றமறன்சுதன்மகிழ்ந்துகேட்டு
மெய்ச்சுதர்முதலாமற்றும்விளம்பியகிளையையெல்லா
மிச்சையின்படியேயாங்காங்கெய்துவித்திராரூண்டு
மச்சுறுகானில்வைகுமார்வமேயார்வமானான்.

(இ - ள்.) அச்சுதன் - கண்ணபிரான், உரைத்த - சொன்ன, மாற்றம் - வார்த்தையை, அறன் சுதன் - தருமபுத்திரன், கேட்டு—, மகிழ்ந்து-களித்து, சுதர் முதல்ஆ மற்றுஉம் விளம்பிய மெய் கிளையை எல்லாம் - புத்திரர்முதலாக மேலுஞ் சொல்லப்படுகிற தேகபந்துக்களையெல்லாம், இச்சையின் படி ஏ - (கண்ணபிரானது) விருப்பத்தின்படியே, ஆங்கு

ஆங்கு - (அவர் சொன்ன) அவ்வவ்விடங்களில், எய்துவித்து - சேரும்படி யனுப்பிவிட்டு, ஈர்ஆறு ஆண்டுஉம் - பன்னிரண்டு வருஷகாலமும், அச்சு உறு கானில் வைகும் - பயம்பொருந்திய வனத்தில் வாசஞ்செய்கிற, ஆர்வம்ஐ - விருப்பத்தையே, ஆர்வம்ஆனன் - விருப்பமாக உடையனானான்; (எ - று.)

இச்சையின்படியே - தன்விருப்பத்தின்படியே யென்றுமாம். அச்சுதன் = அச்யுதன் : (தன்னைச் சரணமடைந்தவர்களை) நழுவவிடாதவனென்றும், அழிவில்லாதவனென்றும் பொருள்படும். மெய்க்கிளையென இயையும் : உண்மையான அன்பையுடைய பந்துக்களென்றும் பொருள் கொள்ளலாம். மெய்ச்சுதரென இயைத்து - தங்களுடம்பினின்றுந் தோன்றிய புதல்வரென்றலும் ஒன்று. அச்சு = அச்சம் : முதனிலை திரிந்த தொழிற் பெயர். (கஅ)

19.—வந்தவர்யாவரும் தம்தம்நகர்க்குப் போய்விடப் பாண்டவர் தம்வாழிடமாகக் காட்டைக்கொள்ளல்.

சோனைமாமுகிலின்மேனித்தோன்றலுந்துவரைபுக்கா
னேனையோர்தாமுந்தத்தமெயினுடைநகரிபுக்கார்
ஞானயோகிகளுமொவ்வாநரேசனுந்தம்பிமாருங்
கானமேதாங்களாளுங்காசினியாகக்கொண்டார்.

(இ - ள்.) சோனை - விடாமழைபொழிகின்ற, மா - கருமையான, முகிலின் - மேகம்போன்ற, மேனி - திருமேனிநிறத்தையுடைய, தோன்றல்உம் - கண்ணபிரானும், துவரை புக்கான் - (தனது) துவாரகாபுரிக்குச்சென்று சேர்ந்தான்; ஏனையோர் தாம்உம் - மற்ற அரசர் முதலியோரும், தத்தம் - தங்கள் தங்களுடைய, எயில் உடை நகரி - மதில்களையுடைய பட்டணங்களில், புக்கார் - சென்று சேர்ந்தார்கள்; ஞானயோகிகள்உம் ஒவ்வா நரேசன்உம் - தத்துவ ஞானத்தையுடைய யோகாநுஷ்டானஞ் செய்கின்ற முனிவர்களும் (தனக்கு) ஒப்பாகப் பெறாத யுதிட்டிரராசனும், தம்பிமார்உம் - (அவனுடைய) தம்பிகளும், கானம்ஐ - காட்டையே, தாங்கள் ஆளும் காசினி ஆக கொண்டார் - தாங்கள் அரசாளுகின்ற இராச்சியமாகக் கொண்டார்கள் [காட்டையே வாழிடமாகக் கொண்டார்கள் என்றபடி]; (எ - று.)

பாண்டவர் அரசராதலால் 'கானமே காசினியாகக் கொண்டார்' என்றார். தருமபுத்திரன் மெய்த்திருவந்துஉற்றாலும் வெந்துயர்வந்து உற்றாலும் ஒத்திருக்கு முள்ளத்து உரவோனாதலாலும், தம்பிமார்கள் இளையபெருமாள் போலத் தந்தமையனாரெழுந்தருளியுள்ள இடத்தையே தமது இராச்சியமாக நினைக்கும் இயல்புடையர்களாதலாலும், கானமே தாங்களாளுங் காசினியாகக் கொண்டாரென்ற தென்னலாம். தெளிந்த அறிவுடையவனென்பது 'ஞானயோகிகளுமொவ்வாநரேசன்' என்பதன் கருத்து.

ஞானமாவது—பிறப்பு முத்திகளையும் அவற்றின் காரணங்களையும் சந்தேக விபரீதங்களாலல்லாமல் உண்மையாக அறிதல். யோகமாவது -

இயமம் நியமம் முதலிய உறுப்புக்களுடன் தவஞ்செய்தல். நரேசன் குண சந்திபெற்ற வடமொழித்தொடர். கானம் - கானநம்என்ற வடசொல்லின் விகாரம். காசினி - காஶ்யபீ என்ற வடசொல்லின்விகாரமென்பர்: இருபத்தொருகால் அரசு களைகட்ட பரசுராமன் தான் வென்ற பூமியைப் பாவந்தொலையக் காசியபமுனிவருக்குத் தானஞ்செய்தாதலால், பூமி, காசியபீ யென்று பெயர்பெறும். (௧௯)

20.—யாவரும்போனபின் வியாசமுனிவன் பாண்டவரிடம் வருதல்.

அவ்வனந்தன்னில்வந்தவரசெலாமகன்றபின்னர்
வெவ்வனம்விடாதுமேவித்தவம் புரிவியாதனென்னுஞ்
செவ்வனமுனிவன்வந்தேசேயவன்சேய்களான
விவ்வனசரிதர்தம்மையிரவுடனெய்தினானே.

(இ - ள்.) அ வனந்தன்னில் - அந்தக் காமியவனத்தில், வந்த—, அரசு எலாம் - அரசர்களெல்லாம், அகன்ற பின்னர் - நீங்கியபின்பு,—வெவ் வனம் மேவி - கொடிய காட்டிற் பொருந்தி, விடாது தவம் புரி - இடைவிடாமல் தவத்தைச் செய்கின்ற, வியாதன் என்னும் - வியாசனென்று சிறப்பித்துச் சொல்லப்படுகிற, செவ்வனம் முனிவன் - பல நன்மைகளையுமுடைய முனிவன், சேயவன் சேய்கள் ஆன - (தமது) புத்திரனாகிய பாண்டுவினது குமாரர்களான, இ வனசரிதர் தம்மை - காட்டில் வாசஞ் செய்கின்ற இவர்களை, இரவுடன் - இரக்கத்துடன், வந்து எய்தினான் - வந்து அடைந்தான்; (எ - று.)

பாண்டவர்கள் நாட்டையிழந்து காட்டையடைந்தமையைக் கேள்வியுற்று வந்தானாதலால், வியாசன் இரக்கத்தோடெய்தினான். வியாசன் - பராசரமகாமுனிவருக்கு மச்சகந்தியினிடம் பிறந்தவர்; பராசரரருளினால் பின்பு யோஜனகந்தியான தமது தாயின் கட்டளையினால், தனது தம்பியான விசித்திரவீரியனது மனைவிமாரிடம் சந்ததியை உண்டாக்கினார்: இவ்வட சொல் - வேதங்களை வகுத்தவனென்று பொருள்படும். செவ்வனம் - நேர்மையையுடைய எனினுமாம். இனி, செவ்வன முனிவன் என்பதற்கு - சிவந்த நிறத்தையுடைய முனிவனென்று பொருள்கூறுதல் பொருந்தாது; வியாச பகவானது திருமேனிநிறம் கருமையாதலாலும், அதுபற்றி அவருக்குக் கிருஷ்ணனென்ற ஒருபெயர் உண்மையாலு மென்பர். முனிவன் - முன்னையவன்: முன்என்பதை முனையென்பவாகலின். முனிவனென்ற விடத்து முனிவனென்றும் பாடம். வனசரிதர் - வனத்திலே சஞ்சரித்தலையுடையவர். சேயவன் - செந்நிறமுடைய முருகக்கடவுள்: இச்சொல் - குமாரனென்பதுபோல உவமவாகுபெயரால், மகனைக் காட்டும். (௨0)

21.—வியாசனைப் பூசித்தபின்னர் தருமபுத்திரன் துரியோதனன் செய்த வஞ்சனையை யெல்லாஞ் சொல்லுதல்.

கண்டெதிர்சென்றுபோற்றிக்கண்ணிணுஞ்சென்னிமீதுங்
கொண்டனரவன்றன்பாதங்குளிர்ந்தனருயிருமெய்யும்

புண்டர நுதலினானைப் பூசனைசெய்தபின்னர்
வண்டணிதாரான்செய்தவஞ்சனையனைத்துஞ்சொன்னார்.

(இ - ள்.) (பாண்டவர்கள்), கண்டு - (வியாசபகவானைப்) பார்த்து, எதிர் சென்று - எதிரேபோய், (மரியாதைசெய்து அழைத்துக்கொண்டு வந்து), போற்றி-துதித்து, அவன்தன் பாதம் - அவனுடைய திருவடிகளை, கண்ணினும் சென்னிமீதும் கொண்டனர்-கண்களில் ஒற்றிக்கொண்டும் தலையின்மேல் வைத்துக்கொண்டும், உயிரும் மெய்யும் குளிர்ந்தனர் - உயிரும் உடம்பும் குளிரப்பெற்றவர்களாய், புண்டரம் நுதலினானை - புண்டரத்தை யணிந்த நெற்றியையுடைய அந்தவியாசனை, பூசனை செய்த பின்னர்-பூசை செய்த பின்பு, வண்டு அணி தாரான் செய்த வஞ்சனை அனைத்தும் சொன்னார் - வண்டுகள் மொய்த்தற்கிடமான நஞ்சாவட்டைப்பூமாலையையுடைய துரியோதனன் செய்த வஞ்சனை யெல்லாவற்றையுஞ் சொன்னார்கள்; (எ - று.)

சென்னிமீது கொண்டனர் என்பதற்கு - தங்கள் சிரசு அவருடைய திருவடிகளிற்படும்படி சாஷ்டாங்கமாக விழுந்து தெண்டனிட்டன ரென்பது, கருத்து. "தொழுது நெற்றியின்விபூதியா லன்னைதன் றுணையடித் துகணீக்கி" என்று கீழ்ச் சம்பவச்சருக்கத்தில் வந்ததற்குஏற்ப, இங்கு, புண்டரம்என்பது - திரிபுண்டரமாகிய விபூதியைக் காட்டு மென்பர். குளிர்ச்சி - இங்கே, மகிழ்ச்சி. உயிரும் மெய்யுங் குளிர்ந்தனர்-அஃறிணையெழுவாய் உயர்திணையெழுவாயின்முற்றைக் கொண்டு முடிந்ததனால், திணைவழுவமைதி: [நன் - பொது. 26.] பூசனை - அருக்கியமளித்தல் முதலிய சோடசோபசாரங்களைச் செய்தல். (உக)

22.—இதுமுதல் நான்குகவிகள் ஒருதொடர். வியாசன் வார்த்தை: பாண்டவர்களைப் பலவகையாகத் தேற்றி இறுதியாகச் சிவபிரானிடம் அருச்சுனன் தவஞ்செய்து பாசுபதம் பெறுவேனென்று கூறுதல்.

செறிந்தவர்க்கூற்றங்கோலாஞ்செய்தவமுனியுமுன்னே
குறிந்தனநிகழ்ந்தவெல்லாங்கூறுதல்கொடிதுபாவம்
பிரிந்தனதாயந்தன்னிற்பெரும்பகையினிதென்றன்றோ
வறிந்தவருரைத்தாரையவவாவினுக்கவதியுண்டோ.

(இ - ள்.) செறிந்தவர்க்கு - (தம்மை) அடைந்தவர்களுக்கு, ஊற்றம் கோல் ஆம் - ஊன்றுகோல்போல உதவுகின்ற, செய் தவம் முனிஉம் - செய்த தவங்களையுடைய வியாசனும், (பாண்டவர்களை நோக்கி), முன்னே குறிந்தன நிகழ்ந்த எல்லாம் - முன்னே கருதப்பட்டனவாகி நடந்த செய்கையையெல்லாம், கூறுதல் - சொல்லுதல், கொடிது பாவம் - கொடுமையுடையதாகிய தீவினையாம்; 'பிறிந்தன தாயந்தன்னில்-மனம்பிரிந்தபங்காளிகளைக் காட்டிலும், பெரு பகை-பெரிய பகைவர்கள், இனிது - இனியவர்களாவர்,' என்று அன்றோ - என்றல்லவோ, அறிந்தவர் - தெரிந்தவர்கள், உரைத்தார் - சொன்னார்கள்; ஐய - ஐயனே! அவாவினுக்கு அவதி உண்டுஓ - ஆசைக்கு எல்லை உண்டோ ? [இல்லையென்றபடி]; (எ - று.)

"இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே, ஒழுக்கமுடையார் வாய்ச் சொல்" என்னுந் திருக்குறளின் கருத்து, இங்கே அறியத்தக்கது. தாயாதிகள் பகைவர்களைக்காட்டிலும் கொடியவராதலால், இங்ஙனம் வஞ்சனை செய்தாரென்பது, பின்னிரண்டடிக்கருத்து; மனம்பிரிந்த ஞாதிகளோடு வெளிக்குச்சிநேகமாய் நாட்டில்உடனிருத்தலினும் பகைமைபூண்டு பிரிந்து தனியே காட்டிலிருத்தலே நன்றென்னுங் கருத்துக் கொள்ளலாம். ஆசைக்குஅளவில்லையாதலால் இவ்வாறு செய்தாரென்றுமாயினும், ஆசைக்கு அளவில்லையாதலால் உள்ளமட்டில் திருப்தியோ டிருக்கவேண்டுமென்றுமாயினும் 'அவாவினுக்கவதியுண்டோ' என்பதற்குக் கருத்துக் கொள்க. "புறநட்டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை, வெளியிட்டு வேறுதல் வேண்டும்" என்றார் பிறரும். - கொடிது பாவம் என்றது, சிறிதும் பயனில்லாத காரியமென்னும்பொருளை வற்புறுத்தும்பொருட்டு. இனி, இரண்டாமடிக்கு - முன்னே நடந்தவற்றைக் குறித்துச்சொல்லுதல் கொடியது: அங்ஙனம் நடந்தது முற்பிறப்பிற்செய்த தீவினையின்பயனுமென்றுங் கொள்ளலாம். இனி பாவம் பிறிந்தன என இயைத்து - எண்ணம்வேறுபட்டனவான தாயங்கள் எனினும் அமையும். தாயம் = தாயத்தார்: பகை = பகைவர்: ஆகுபெயர்கள். குறிந்தன = குறித்தன: மெலித்தல். (உஉ)

23. துன்றினரின்னலெய்தத்துன்னலராகித்தம்மி
லொன்றினர்செறினுமுள்ளதுண்டெனவுணரத்தேற்றிக்
கன்றினர்கவலைதீர்த்தான்கண்ணுடைக்கருணைமூர்த்தி
குன்றினதுயர்ச்சியந்தக்குன்றினுக்கறியவுண்டோ.

(இ - ள்.) துன்றினர் - நெருங்கின பந்துக்கள், இன்னல் எய்த - துன்பமடையும்படி, (சிலர்), துன்னலர் ஆகி - பகைவர்களாய், தம்மில் ஒன்றினர் - தமக்குள் ஒன்றுசேர்ந்து, செறின்உம் - கெடுதிசெய்தாலும், உள்ளது உண்டு - (அவரவர்களுக்கு முன்னைய ஊழ்வினைப்படி) உள்ளநன்மை அழியாது, என - என்றுசொல்லி, உணர - நன்றாய் அறிந்துகொள்ளும்படி, தேற்றி - சமாதானப்படுத்தி,—கண் உடை கருணை மூர்த்தி - கண்களின்வழியேசெல்கின்ற கருணையின்வடிவம்போன்ற அவ்வியாசன், கன்றினர் கவலை தீர்த்தான் - வருத்தப்பட்ட பாண்டவர்களதுகவற்சியை நீக்கினான்; குன்றினது உயர்ச்சி அந்த குன்றினுக்கு அறிய உண்டுஒ - மலையினஉயர்வு அம்மலைக்கு அறியும்படிஉள்ளதோ? [இல்லை]; (எ - று.)

தன்னொடுபயின்றவர்மேற் கண்சென்றவழி அருள் நிகழ்வதாதலின், 'கண்ணுடைக் கருணை' என்றார்; கண்ணோட்டமென்பதனாலுங் காண்க. "கண்ணுடையரென்பவர் கற்றோர்" என்றார், திருவள்ளுவனார்: இனி, ஞானக்கண்ணையுடைய கிருபாமூர்த்தி யென்றுமாம். பாண்டவர்கள் கல்விகேள்விகளையுடையவர்களாயினும் வியாசர்சொல்லியே கவலைதீர்ந்தனர் என்பது, நான்காமடிக்குத் தாற்பரியம்: இது-பிறிதுமொழிதல். (உ௩)

24. நீவிரேயல்லிர்முன்னாணிலமுழுதாண்டநேமி
நாவிரிகீர்த்தியாளனளனெனுநாமவேந்தன்
காவிரியென்னத்தப்பாக்கருணையான்சூதிற்றோற்றுத்
தீவிரிகானஞ்சென்றகாதைநுஞ்செவிப்படாதோ.

(இ - ள்.) நீவிர் ஏ அல்லீர் - (இக்காலத்தில்) நீங்கள் மாத்திரமே (இவ்வாறு சூதில் நாட்டை) இழந்தீரல்லீர்; முன் நாள் - முன்காலத்தில், நிலம் முழுது ஆண்ட - பூலோக முழுவதையும் ஒருங்கே அரசாண்ட, நேமி-ஆஞ்ஞா சக்கரத்தையும, நா விரி கீர்த்தி ஆளன் - (எல்லோருடைய) நாக்குக்களிலும் பரவிய புகழையுமுடையவனும், காவிரி என்ன தப்பா கருணையான் - காவிரிநதிபோல (எப்பொழுதும்) இடைவிடாமற்பெருகு கின்ற குளிர்ந்த அருளையுடையவனுமாகிய, நளன் எனும் நாமம் வேந்தன் - நளனென்னும் பெயரையுடைய சக்கரவர்த்தி, சூதில் தோற்று - (புஷ்கர ராஜனிடஞ்) சூதாட்டத்தில் தோல்வியடைந்து, தீ விரி கானம் சென்ற - தீப்பரவிய காட்டிற்போன, காதை - சரித்திரம், நும் செவி படாதோ - உங்கள் காதிற் கேட்டதில்லையோ? (எ - று.)—பிரசித்தமென்றபடி.

நளன் புட்கரனோடு சூதாடித் தன்மனைவியோடு காட்டிற்சேர்ந்து கலியின் கொடுமையால் மனைவியையும் பிரிந்து கலி நீங்கியபின் மீண்டும் இழந்த ராச்சியத்தைப் பெற்று இனிதிருந்தா னென்பது, நளோபாக்கியான பருவத்திலுள்ளது: இந்தச் சரித்திரம், பாசுபதம்பெற அருச்சுனன் தவம் புரியுமாறு சென்றபின் பிருகதசுவ முனிவரால் கூறப்பட்டதாக வியாச பாரதத்திலுள்ளது. ஆஞ்ஞையைச் சக்கரமென்பது, கவிசமயம். காவேரி - கவேரம் என்னும் மலையினின்றும் உற்பத்தியாயினதென்றும், கவேர னென்னும் அரசனது மகளென்றும் பொருள். தப்பாமலிருத்தற்குக் காவே ரியை யுவமை கூறியது, ஆடிப்பதினெட்டாம்பெருக்கு என்று வழங்குமாறு குறித்தநாளிற் பெருக்குத் தவறாமல் வருதலா லாகும். (உச)

25. தோத்திரமானதெய்வச்சுருதிகள்யாவுநான்காக்
கோத்தவன்பின்னுஞ்சொல்வான்குன்றவில்லவன்பாலின்று
பார்த்தனேசென்றுபாசுபதக்கணைவாங்கினல்லா
லார்த்தபைங்கழலாயெய்தாதரும்பகைமுடித்தலென்றான்.

(இ - ள்.) தோத்திரம் ஆன - (கடவுளுடைய) ஸ்தோத்ரரூப மான, தெய்வம் சுருதிகள் யாஉம் - தெய்வத்தன்மையையுடைய வேதங்க ளெல்லாவற்றையும், நான்கு ஆ கோத்தவன் - (இருக்கு யசுர் சாமம் அதர் வணம் என்னும்) நான்காக முறைப்படவகுத்தவனாகிய வியாசபகவான், பின்உம் சொல்வான் - மீண்டுஞ் சொல்லுபவனாய, 'ஆர்த்த பைங் கழலாய் - (காலிற்) கட்டிய பசுமையான வீரக்கழலுடையவனே! இன்று-இப்பொழுது, பார்த்தனே - அர்ச்சுனன்தானே, குன்றம் வில்லவன்பால் - மேருமலையை வில்லாகக்கொண்ட சிவபெருமானிடத்தில், சென்று - போய், பாசுபதம் கணை - பாசுபதஅஸ்திரத்தை, வாங்கின் அல்லால் - வாங்கினாலல்லாமல், அரு பகை முடித்தல் - (அழிப்பதற்கு) அருமையான பகைவர்களை அழித் தல், எய்தாது - கூடாது,' என்றான் என்று அருளிச்செய்தான்; (எ - று.)

தோத்திரமான சுருதி - (யாவரும் புகழ்ந்து) துதிக்கும்படியான வேத மெனவுமாம். வேதத்திற்குத் தெய்வத்தன்மை - எல்லா நற்பொருள்களையும் உபதேசித்து எல்லா நற்பலன்களையும் அளித்தல். சுருதி = ஶ்ருதி : எழுதாக்கிளவியாய்க் குருசிஷ்ய பரம்பரையாகக் கேள்வியின்மூலமாகவே வருவது என வேதத்துக்குக் காரணக்குறி. திரிபுர சங்காரகாலத்தில் மேருமலை சிவபிரானுக்கு வில்லாக அமைந்ததென்க. பார்த்தன் = பிருதையின்மகன் : (பிருதை - குந்தி) : வடமொழித் தத்திதாந்தநாமம். இளையமகனிடத்தில் தாய்க்கு அன்பு அதிக மென்ற காரணத்தால், இப்பெயர் அவனுக்கு அமைந்தது. பாசுபதம் - பசுபதியை [சிவபெருமானைத்] தெய்வமாகக்கொண்டஅஸ்திரம் : இதுவும் தத்திதாந்தமே. (உரு)

26.—இதுவும், மேற்கவியும் - ஒரு தொடர் : முனிவன்சொல்லைச் சிரசாவகித்துத் தருமபுத்திரன் அருச்சுனனைத் தவஞ்செய்தாயினும் சிவனருள் பெறுக என்றல்.

பரிவுடன்முனிவன்மாற்றம்பணிந்துதன்றலைமேற்கொண்டு
வரிசிலைக்குலகமெண்ணுமகபதிமகனைநோக்கிக்
கிரிசனையுன்னிவெள்ளிக்கிரிப்புறமெய்தியார்க்கு
மரியநற்றவஞ்செய்தேனுமவனருள்பெறுதியையா.

(இ - ள்.) (தருமபுத்திரன்), பணிந்து - வணங்கி, முனிவன்மாற்றம் - வியாசனது வார்த்தையை, பரிவுடன் - அன்போடு, தன் தலைமேல் கொண்டு - தனது சிரத்தின் மேற்கொண்டு கௌரவித்து, வரி சிலைக்கு உலகம் எண்ணும் - கட்டமைந்த வில்லின் தொழிலுக்கு (ச் சிறந்தவனாக) உலகத்தோரால் நன்கு மதிக்கப்படுகின்ற, மகபதி மகனை நோக்கி - தேவேந்திரனுடைய குமாரனான அருச்சுனனை நோக்கி, 'ஐயா - ஐயனே !' (நீ), வெள்ளி கிரி புறம் எய்தி - வெள்ளிமயமான ஸ்ரீகைலாசமலையின் சாரலை யடைந்து, கிரிசனை உன்னி - பரமசிவனைக் குறித்து, யார்க்கும் அரிய நல் தவம் செய்து ஏனும் - எவர்க்கும் (செய்வதற்கு) அருமையான சிறந்த தவத்தைச் செய்தாயினும், அவன் அருள் பெறுதி - அச்சிவனது கருணையால் (பாசுபதம்) பெறுவாயாக ; (எ - று.)

தலைமேற்கொள்ளல் - சிரசாவகித்தல்: மகபதி - யாகங்களுக்குத் தலைவன் ; நூறு அசுவமேத யாகஞ்செய்து இப்பதவிபெறுதலால், இவனுக்கு இப்பெயர் வாய்த்தது. கிரிசன் = கிரிஶன்: மலையில் தங்குபவன்: "கிரீஶோ கிரிஶோம்ருட :" என்று இருப்பதனால், கிரிஶன் என்றும் வடமொழியில் சொல்லுண்டென்று அறியலாம். பெறுதி - ஏவலொருமை. (உசு)

27. எனவிடைகொடுப்பமண்ணிலிணையிலாவியாதன்பாத
மனனுறவிறைஞ்சியாங்கோர்மந்திரமுறையிற்பெற்று
நனிமிகுதிதியுநாளுநல்லதோர்முகூர்த்தந்தன்னிற்
றனிவரிவியக்கர்காட்டத்தனஞ்சயன்சேறலுற்றான்.

(இ - ள்.) என - என்று சொல்லி, விடை கொடுப்ப - உத்தரவு கொடுக்க,—தனஞ்சயன் - அருச்சுனன், மண்ணில் இணை இலா - உல

கத்தில் (தமக்கு வேறொரு) உவமை யில்லாத, வியாதன் - வியாச முனிவரது, பாதம் - திருவடிகளை, மனன் உற - மனம் பொருந்த, இறைஞ்சி - வணங்கி,— ஆங்கு - அப்பொழுது, ஓர் மந்திரம் - ஒரு மந்திரத்தை, முறையின் - முறைப்படி, பெற்று - (அவ்வியாச பகவானிடம் உபதேசம்) பெற்று, திதிஉம் நாள்உம் நனி மிகு நல்லது ஓர் முகூர்த்தந்தன்னில் - திதியும் நக்ஷத்திரமும் மிகவுஞ் சிறப்புடையதாகப் பெற்ற ஓர வேளையில், இயக்கர் - யக்ஷர்கள், தனி - தனிப்பட்ட, வதி-வழியை, காட்ட—, சேறல் உற்றான் - செல்லுதற்குப் பொருந்தினான் [புறப்பட்டான்]; (எ - று.)

அருச்சுனன்பெற்ற மந்திரத்தின்பெயர் ப்ரதிஸ்ம்ருதியென்று வடநூலால் அறிக. 'சனபதம் இயக்கர்காட்ட' என்றபாடத்திற்கு - சனங்கள்செல்லும் வழியை இயக்கர்காட்டவென்று பொருளாமாயினும், அது சிறவாமைகாண்க. தனஞ்சயன்-செல்வத்தைப் பெறுமாறு ஜயித்தவன்; யுதிஷ்டிரன் இராசசூய யாகஞ்செய்யவேண்டியபொழுது அவன் கட்டளையால் வட திசையிற்சென்று பல அரசர்களை வென்று அவர்கள் செல்வத்தைத் திறையாகக் கொணர்ந்ததனால், இவனுக்கு இப்பெயர்வந்தது; இனி, வெற்றியையே பொருளாகவுடையவனென்று பொருள்கூறினுமாம். திதி - பிரதமைமுதலியன. நாள் - அசுவினிமுதலிய நட்சத்திரங்கள். சேறல் - தொழிற்பெயர். (உஎ)

28.—வியாசன் 'பகைவர் தீங்குபுரினும் நும்போலியர் சஞ்சலமடையார்: அஞ்சலிர்' என்றுசொல்லிப்போதல்.

வெஞ்சலமனத்தரானோர்விரகினாற்கூட்டங்கூட்டி
நஞ்சலதுவமையில்லாநவைபுரிந்தனர்களேனுஞ்
சஞ்சலமும்மைப்போலுந்தரணிபருறுதல்செய்யா
ரஞ்சலிரென்றுமீளவாரணமுனியும்போனான்.

(இ - ள்.) 'வெம் சலம் மனத்தர் ஆனோர் - கொடியமாறுபாட்டைக் கொண்ட மனத்தையுடையரானவர்கள், விரகினால் - தந்திரமாக, கூட்டம் கூட்டி - சபைவைத்து ஆலோசித்து, நஞ்சு அலது உவமை இல்லா - விஷமல்லாமல் வேறு உவமையில்லாத [விஷத்துக்குச் சமானமான], நவை - தீங்குகளை, புரிந்தனர்கள் ஏன்உம் - செய்தார்களாயினும், உம்மை போலும் தரணிபர் - உங்களைப்போன்ற அரசர்கள், சஞ்சலம் உறுதல் செய்யார் - கவலைப்படமாட்டார்கள்; (ஆதலால்), அஞ்சலிர்-பயப்படாதீர்கள்,' என்று - என்று தைரியஞ்சொல்லிவிட்டு,— ஆரணம் முனிஉம் - வேதவியாச முனிவனும், மீள போனான் - திரும்பிப்புறப்பட்டுப்போனான்; (எ - று.)

பிராணத்தைப்போக்கவல்ல தீங்கு என்பார் 'நஞ்சலதுவமையில்லா நவை' என்றார். சலம் - வடசொல். முனியும்போனான்என்ற உம்மை, கீழ் அருச்சுனனும்போனா னென்றதைத் தழுவியதனால், இறந்தது தழுவியது. தரணிபர் - பூமியைக் காப்பவர்: வடசொல். அஞ்சலிர் - ஏவற்பன்மை யெதிர்மறை வினைமுற்று. உவமை - உபமா; வடசொல். (உஅ)

29.—இதுவும், மேற்கவியும் - ஒருதொடர் : தாபசவேஷத்தோடு அருச்சுனன் சென்று வடதிசை யெல்லையைச் சேர்தலைத் தெரிவிக்கும்.

மரவுரியுடையன்சென்னிவகுத்தசெஞ்சடையன்றூணிச்
சரமுடனங்கியீந்ததநுவினன்றவத்தின்மேலே
புரிதருமனத்தனெல்லாப்புண்ணியங்களுக்குந்தானே
யுரைபெறுதசரதன்றன்மகனலாதுவமையில்லான்.

(இ - ள்.) எல்லாம் புண்ணியங்களுக்கும் - நல்வினைகள் எல்லாவற்றுக்கும், தானே—, உரை பெறு - (இடமாகச்) சொல்லப்பெற்ற, தசரதன் தன் - தசரதசக்கரவர்த்தியினது, மகன் அலாது - குமாரனாகிய ஸ்ரீராம பிரானையே யல்லாமல், உவமை இல்லான் - (வேறு) உபமானத்தை (த் தனக்கு) ப் பெறாத அருச்சுனன்,—மரவுரி உடையன் - மரவுரியாகிய ஆடையையுடையவனும், சென்னி வகுத்த செம் சடையன்-தலையில் வகுத்துக்கட்டிய சிவந்த சடையையுடையவனும், தூணி சரமுடன் அங்கி ஈந்த தனுவினன் - அம்பறாத்தூணியிலுள்ள அம்புகளுடனே அக்கினிபகவானால் கொடுக்கப்பட்ட வில்லையுடையவனும், தவத்தின் மேலே புரிதரு மனத்தன் - தவத்தில் விருப்பங்கொண்ட மனமுடையவனுமாகி,—(எ - று.)—'உத்தர முடிவு கண்டான்' என முடியும்.

மரவுரி - ஒருமரத்தின் நார்ச்சீரை. உரி - உரிக்கப்பட்டது : தோல்: பட்டை. அருச்சுனன் அக்கினிபகவானுக்குக் காண்டவவனத்தை இரையாகக்கொடுத்த காலத்தில் அவ்வருச்சுனனுக்கு அக்கினியினால் நான்கு வெள்ளைக் குதிரைகள் பூட்டியதொரு தேரும், குரங்குக் கொடியும், காண்டீவமென்னும் வில்லும், அம்புகள் குறைதலில்லாத அக்ஷயதூணீரமும், தேவதத்தமென்னுஞ் சங்கமும் அளிக்கப்பட்டன வென்று அறிக. ஸர்வேசுவரனாகிய ஸ்ரீமந்நாராயணனைப் புத்திரனாகப்பெற்ற தசரதனது பாக்கியத்தின் மகிமையை நோக்கி, 'எல்லாப்புண்ணியங்களுக்கும் தானே யுரைபெறு தசரதன்' என்றார். தசரதனென்பதற்கு - பத்துத்தேர்களையுடையவனென்று பொருள் ; பத்துத்திக்குக்களிலும் தடையின்றிச் செல்லுந் தேருடையவனென்பது கருத்து : இந்திரனைச் சிறையிட்ட சம்பராசுரனோடு போர்செய்த பொழுது அவன் ஓடிச்சென்ற இடங்களிலெல்லாந் தான் துரத்திக்கொண்டு சென்றதனால், இவனுக்குஇப்பெயர் விளங்கியது. இச்சொல்லுக்கு, தச - பட்சி, ரத - வாகனம் எனப் பொருள்கொண்டால், கருடவாகனனான திருமாலுக்குப் பெயராம், தெய்வப் பெயரை மனிதர்க்கு இடுவது பரிசுத்தி கரமென்கிற காரணத்தினால் இவ்வரசனுக்கு இப்பெயர் இட்டு வழங்கியதென்றுங் கொள்ளலாம். இராமன் போன்றவனென்பது, ஈற்றடியின் கருத்து. (உகூ)

30. நெறியிருபுறத்துமூசிநுழையொணாநெருக்கமிக்க
செறிதருவனமுஞ்சிங்கஞ்சிந்துரஞ்செருச்செய்சாரற்
பொறைகளும்வெம்பிசாசபூதமோடியக்கர்யாரு
முறைதருகுவடுநீங்கியுத்தரமுடிவுகண்டான்.

(இ - ள்.) நெறி இரு புறத்தும் உம் - வழியின் இரண்டுபக்கங்களிலும், ஊசி நுழை ஒணா - ஊசியும் நுழையக்கூடாதபடி, நெருக்கம் மிக்க - நெருக்கம் மிகுந்த, செறிதரு வனம் உம் - நெருங்கிய காடுகளையும், சிங்கம் - சிங்கங்களும், சிந்துரம் - யானைகளும், செரு செய் - போரைச் செய்கின்ற, சாரல் - பக்கங்களையுடைய, பொறைகள் உம் - மலைகளையும், வெம் பிசாசம் பூதமோடு - கொடிய பிசாசங்களும் பூதங்களும், இயக்கர் - யக்ஷர்களும், யார் உம் - மற்றைத்தேவகணங்களும், உறைதரு - வசிக்கப்பெற்ற, குவடு உம்-மலைச்சிகரங்களையும், நீங்கி - கடந்து,— உத்தரம் முடிவு- (பாரதவர்ஷத்தின்) வடதிசை முடிவை, கண்டான்-பார்த்தான் ; (எ-று.)

உத்தரமுடிவு கண்டான் என்பதற்கு எழுவாய், கீழ்ச்செய்யுளில் வந்துள்ள "தசரதன்றன் மகலானதுவமை யிலலான்" என்பது. பிசாசர் முதலியோர் - பதினெட்டுத்தேவகணங்களுட்பட்டவர். புறத்து மூசி எனப் பிரித்து - பக்கங்களில்மொய்த்து என்றும் பொருள் கொள்ளலாம். செறிதரு, தா - துணைவினை. செறி - செறிந்த, தரு - விருட்சங்களைக்கொண்டஎனின், தரு - வடசொல். பொறை - பூமியைப் பொறுப்பது : மலை : பூதரம்என்ற வடசொல்லையுங் காண்க. (௩0)

31.—அருச்சுனன் இமயமலையைவணங்கி அந்தத் தபோவனத்து இருடியரையும் வணங்குதல்.

*அத்திசையிமயமென்னுமரசவெற்படைந்துமிக்க*
*பத்தியோடம்மைதன்னைப்பயந்தகுன்றென்றுபோற்றிச்*
*சத்தியவிரதன்றம்பிதபோவனந்தோறுந்தங்கண்*
*முத்தழல்வளர்ப்போர்பாதமுளரிகண்முடிமேற்கொண்டான்.*

(இ - ள்.) சத்தியவிரதன் தம்பி - உண்மையான விரதானுஷ்டானத்தையுடைய தருமபுத்திரனது தம்பியான அருச்சுனன், அ திசை - அந்தவடக்குத்திக்கில், இமயம் என்னும் அரசவெற்பு அடைந்து - ஹிமவத்பருவதமென்கிற மலைகளுக்கெல்லாம்அரசனாகியமலையைச் சேர்ந்து, (அதனை), அம்மை தன்னை பயந்த குன்று என்று - உமாதேவியை மகளாகப் பெற்ற (பாக்கியமுடைய) மலையென்ற ஏதுவால், மிக்க பத்தியோடு - மிகுந்த பக்தியுடனே, போற்றி-வணங்கி,—தபோவனம்தோறும்-தவஞ் செய்வதற்குஉரிய காட்டினிடங்களிலெல்லாம் (இருந்து), தங்கள் மு தழல் வளர்ப்போர்-தங்களுக்கு உரிய மூன்றுவகையான அக்கினியை (ஓமம் முதலியவற்றால்) வளர்த்துவருகின்ற முனிவர்களுடைய, பாதம் - முளரிகள் - திருவடித்தாமரை மலர்களை, முடிமேல் கொண்டான் - (சாஷ்டாங்கமாக நமஸ்கரித்துத் தனது) சிரசின்மேல் வைத்துக்கொண்டான் ; (எ - று.)

இமயம் - பனிமலை: இது மலையரசனெனப்படும்: சிறந்தவையும் பெரியவையும் அரசனென்றல், மரபு. பத்தி - பக்தி : அது, தன்னினும் மேம்பட்டோரிடத்துச் செய்யும் அன்பு. எளியோரிடத்ததாயின் கருணையென்றும், ஒத்தோரிடத்ததாயின் பிரீதியென்றுங் கூறப்படும். அம்மை=அம்பா:

தாயென்று பொருள் : அடியார்களிடத்து மிகுந்த அன்புடைமையாலும், உலகங்களுக்கு மூலகாரணமாக ஆகமங்களிற்சொல்லப்படுகின்ற பரமசிவனது சத்தி யாதலாலும், அம்மையெனப்பட்டாள். இமயமலைக்கு உரிய தெய்வம் உமாதேவியை நோக்கிப் பலகாலந் தவம்புரிந்து 'தனக்கு ஒருகால் மகளாகத்தோன்றி உனக்குத் தந்தையாகும் பெருமையை எனக்குத் தந்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, அவ்வேண்டுகோளை நிறைவேற்றும்பொருட்டு அம்பிகை தக்ஷன்மகளான உருவத்தை அக்கினிப்பிரவேசஞ்செய்து ஒழித்தபொழுது மலையரசனுக்கு மேனகையிடம் மகளாகத்திருவவதரித்தனளென்பது, புராணகதை. பருவதத்தின்மகளாதலால், கௌரிக்குப் பார்வதியென்று பெயர். விரதங்களாவன - இன்னதருமஞ்செய்வேனெனவும், இன்னபாவஞ்செய்யாதொழிவேனெனவும் தம் ஆற்றலுக்குஏற்ப நியமித்துக்கொள்வன. சத்தியவிரதன் தம்பியென்றது - இவனும் விரதாநுஷ்டானத்தில் இளையானென்பதை விளக்கும்பொருட்டு : கருத்துடையடைகோளி. தபோவனம் - ஆச்சிரமம். மூத்தழல் - ஆகவனீயம், காருகபத்தியம், தட்சிணாக்கினியென்பன. பாதமூளரிகள் - முன்பின்னாகத்தொக்குவந்த உவமைத்தொகை. (௩௧)

32.—அருச்சுனன் பலவகைப்பட்ட தவஞ்செய்வோரை அம்மலையிடத்துக்கண்டு மகிழ்ச்சி மிகுதல்.

சாரணரியக்கர்விச்சாதரர்முதற்பலருஞ்செஞ்சொ
லாரணப்படியேசூழவடவிகடோறும்வைகி
நாரணன்மலரோனும்பர்நாயகன்பதங்கணச்சிக்
காரணத்தவஞ்செய்வோரைக்கண்டுகண்டுவகைகூர்ந்தான்.

(இ - ள்.) (அம்மலையினிடத்தில்), சாரணர் - சாரணர்களும், இயக்கர் - யக்ஷர்களும், விச்சாதரர் - வித்தியாதரர்களும், முதல் - முதலான, பலர் உம் - பலவகையாரும், - செம் சொல் ஆரணம்படியே - சத்தியமானசொற்களையுடைய வேதங்களிற்கூறிய விதிப்படியே, சூழ - சுற்றிலும், அடவிகள் தோறுஉம் - காடுகளிலெல்லாம், வைகி - தங்கியிருந்துகொண்டு,—நாரணன் - திருமாலும், மலரோன் - (அத்திருமாலின் நாபித்) தாமரைமலரில் தோன்றிய பிரமனும், உம்பர்நாயகன் - தேவர்களுக்குத் தலைவனாகிய பரமசிவனுமாகிய இம்மூவருடைய, பதங்கள் - திருவடிகளை, நச்சி - (கொள்கைக்கு ஏற்ப) விரும்பி, காரணம் தவம் செய்வோரை - (தாந்தாம்பெற விரும்பிய பேற்றிற்கு) ஏதுவான தவத்தைச் செய்பவர்களை, கண்டு கண்டு - மிகுதியாக பார்த்து, உவகை கூர்ந்தான் - களிப்பு மிகுந்தான்; (எ - று.)

இனி, இக்கவியில் பின் இரண்டடிக்கு - விஷ்ணு பிரம இந்திரர்களுடைய பதவிகளைத் தாம் பெற விரும்பி (ப் பரமசிவனைக் குறித்து) க் காரணம் முதலிய ஆகமங்களிற் கூறியவாறு தவம்புரிவோர்களைக் கண்டு களித்தானென்று உரை கூறுவாரு முளர் : நாரணன்=நாராயணன் : இச்சொல் - நார அயந எனப் பிரிந்து, சகலசிருஷ்டிப்பொருள்களுக்கும்

இருப்பிடமானவ னென்றும், சமுத்திரத்தைத்தனக்குஇடமாகக்கொண்டவ னென்றும் பொருள்படும். நாரணன் மலரோனும்பர் நாயகன் பதங்கள் - திருமாலினுடைய ஸ்தானமாகிய வைகுண்டமும் பிரமனுடைய ஸ்தானமாகிய சத்தியலோகமும் மகாதேவனுடைய ஸ்தானமாகிய ருத்திரலோகமும் என்று கூறுதலும் ஒன்று. சாரணர் முதலியோர், பதினெண் தேவகணத்தைச் சேர்ந்தவர். சூழ்ந்த வடவிகடோறும் என்றும்பாடம். (௩௨)

### 33.—அருச்சுனன் கைலாசகிரியைச் சேர்தல்.

*அரியும்வெங்கரியுந்தம்மிலமர்புரிமுழக்கங்கேட்டுங்*
*கிரியினின்முழக்கங்கேட்டுங்கிராதர்போர்முழக்கங்கேட்டு*
*மெரிகிளர்முழக்கங்கேட்டுமெம்பிரானிமவான்றந்த*
*புரிகுழலோடும்வைகும்புண்ணியப்பொருப்பைச்சேர்ந்தான்.*

(இ - ள்.) அரிஉம் - சிங்கங்களும், வெம் கரிஉம் - கொடிய மதயானைகளும், தம்மில் - தங்களுக்குள் [ஒன்றோடொன்று], அமர் புரி - போர் செய்கின்ற, முழக்கம் - பேரொலியை, கேட்டுஉம் - கேட்டுக்கொண்டும், கிரியினின் முழக்கம் கேட்டுஉம் - (அவ்வொலிக்கு எதிராக) அவ்விமயமலையிலெழுகின்ற ஓசையைக் கேட்டுக்கொண்டும், கிராதர் போர் முழக்கம் கேட்டுஉம்-வேடர்களது போரிலுண்டாகின்ற தொனியைச் செவியுற்றும், எரி கிளர் முழக்கம் கேட்டுஉம் - காட்டுத்தீப் பற்றியெரிகின்ற ஆரவாரத்தைக் கேட்டுக்கொண்டும்,—(அருச்சுனன் வழிநடந்து), எம்பிரான் - யாவர்க்குத் தலைவராகிய சிவபெருமான், இமவான் தந்த புரி குழலோடு உம் - இமவத்பருவதம் பெற்ற கட்டிய கூந்தலையுடைய உமாதேவியுடனே, வைகும் - எழுந்தருளியிருக்கின்ற, புண்ணியம் பொருப்பை - நல்வினையையுடைய ஸ்ரீகைலாசகிரியை, சேர்ந்தான் - அடைந்தான்; (எ - று.)

கைலாசத்துக்குப் புண்ணியம்-சிவபெருமான் தன்னிடம் எழுந்தருளியிருத்தற்கு ஏற்ற பாக்கியம். இனி, புண்ணியம் பொருப்பு - புண்ணியவடிவமான மலையுமாம்; புண்ணியத்தை வெண்ணிறமுடையதாக வருணித்தல் கவிசமயம். கிரிகளின் முழக்கம் - மலையிற்றோன்றும் எதிரொலி. (௩௩)

### 34.—அருச்சுனன் ஆங்கிருக்குந் தவசியர்சொற்படியே தவவிரதம் பூணுதல்.

*கைம்மலையுரிவையோடுகட்செவிக்கச்சுஞ்சாத்துஞ்*
*செம்மலைவிழியிற்காணான்சிந்தையாற்கண்டுபோற்றி*
*யம்மலைச்சாரறோறுமருந்தவம்புரிநர்கூற*
*விம்மலைநீங்கியாங்கண்மெய்த்தவவிரதனானான்.*

(இ - ள்.) (அருச்சுனன்),— கைம்மலை உரிவையோடு-யானைத் தோலுடனே, கட்செவி கச்சுஉம் - நாகமாகிய கச்சினையும், சாத்தும் - தரித்துள்ள, செம்மலை - சிவபெருமானை, விழியின் காணான் - புறக்கண்களாற் பாராதவனாய், சிந்தையால் கண்டு - நெஞ்சென்னும் அகக்கண்ணினால் தரிசித்து, போற்றி - துதித்து,—அ மலை சாரல் தோறுஉம் அரு தவம் புரிநர் கூற விம்மலை நீங்கி - அந்தமலையின் பக்கங்களிலெல்லாம் (இருந்து பிறாற்

செய்வதற்கு) அருமையான தவத்தைச் செய்கின்றவர்கள் (சமாதானஞ்) சொல்லியதனால் (கடவுளை பிரதியட்சமாகக் காணாமையாலாகிய) துன்பத்தை ஒழிந்து,—ஆங்கண் - அவ்விடத்தில், மெய் தவம் விரதன் ஆனான் - உண்மையான தவத்திற்குஉரிய விரதங்களை அநுஷ்டிப்பவனானான்; (எ-று.)

விழியிற் காணான் தவம்புரிநர்கூற விம்மலைநீங்கிச் சிந்தையாற் கண்டு போற்றித் தவவிரதனானானென்க. கையையுடைய மலையெனவே, யானையாயிற்று: அடையடுத்த உவமவாகுபெயர். கட்செவி - கண்ணையே செவியாகவுடையது: வேற்றுமைத்தொகை யன்மொழி. கச்சு - இடைக்கட்டு என்னும் அணி.

ஒருகாலத்திற் பரமசிவன் தன்னை மதியாத தாருகாவனத்து முனிவர்களது மனநிலைமையைப் பரீட்சிக்க எண்ணித் தாம் ஒருவிடவுருவங்கொண்டு சென்று அவரில்லந்தோறும் பிட்சாடனஞ் செய்து, தம்மை நோக்கிக் காதல்கொண்ட அம்முனிபத்தினியர்களது கற்புநிலையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறாமற் கோபமூண்ட அம்முனிவர்கள் அபிசாரயாகமொன்றுசெய்து அவ்வோமத்தீயினின்றும் எழுந்த நாகங்கள், பூதங்கள், மான், புலி, முயலகன், வெண்டலை முதலியவற்றைச் சிவனைக் கொன்று வரும்படி ஏவ, சிவபெருமான் தம்மேற் சீறிவந்த நாகங்களை ஆபரணங்களாகவும், பூதங்களைத் தமது கணங்களாகவுங் கொண்டு, மானைக் கையில் ஏந்தி, புலியைத் தோலைஉரித்து உடுத்து, முயலகனை முதுகிற் காலால் ஊன்றி, வெண்டலையைக் கையிற்பற்றிச் சடைமேலணிந்து, அவற்றையெல்லாம் பயனிலவாகச் செய்துவிட்டன னென்பது, கட்செவி கச்சு சாத்தின கதை. கைம்மலையுரிவை சாத்தின கதை:—அருந்தவமியற்றிப் பெருவரம்பெற்ற கஜாசுரனென்பவன் தேவர் முனிவர் முதலியோரை இடைவிடாமல் வருத்தித் துரத்த, அஞ்சியோடின அவர்களது பிரார்த்தனையாற் பரமசிவன் தம்மைஎதிர்த்துப் போர்செய்யவந்த அவ்வசுரனைக் காலாலுதைத்துத் தள்ளிக்கொன்று, தோலை உரித்துப் போர்த்தருளினதென்றாயினும்; தாருகவன முனிவரேவிய யானையின் உட்சென்று உருத்திரமூர்த்தி உடல்பிளந்து அதன் உரிவையைப் போர்த்துக்கொண்டதென்றாயினுங் கொள்க. (கூ௪)

35.—அந்தக்கைலையின் சிறப்பு.

எயிலொருமூன்றுஞ்செற்றோனேந்திழையுடனேவைகுங்
கயிலையின்பெருமைதன்னைக்கட்டுரைசெய்வதெங்ஙன்
வெயிலவன்முதலோர்நாளுமேம்படவலஞ்செய்வார்க
ளயிலுநல்லமுதோர்சூழ்வந்தன்புடன்போற்றுவாரே.

(இ - ள்) எயில் ஒரு மூன்றும் செற்றோன் - ஒப்பற்ற திரிபுரத்தை நாசஞ்செய்த பரமசிவன், ஏந்துஇழை உடனே - தரித்த ஆபரணங்களையுடைய உமாதேவியுடனே, வைகும் - எழுந்தருளியிருக்கின்ற, கயிலையின் - ஸ்ரீகைலாசகிரியினது, பெருமைதன்னை - மகிமையை, கட்டுரை செய்வது.

வரையறுத்துச் சொல்வது, எங்ஙன் - எவ்வாறு? [முடியாதென்றபடி]; வெயிலவன் முதலோர் - சூரியன் முதலியோர்கள், நாளும் - தினந்தோறும், மேம்பட - (தாம்) மேன்மைப்படும்பொருட்டு, வலஞ்செய்வார்கள் - (அம்மலையைப்) பிரதட்சிணம்பண்ணிவருவார்கள்; அயிலும் நல் அமுதோர் - உண்கின்ற நல்ல [இனிய] அமிருதத்தையுடைய தேவர்கள், சூழ்வந்து - பிரதக்ஷிணம் பண்ணிவந்து, அன்புடன் - பக்தியுடனே, போற்றுவார் - துதிப்பார்கள்; (எ - று.)

பின்னிரண்டடிகள் - கயிலைமலையின் மகிமையைச் சொல்லமுடியாது என்று முன்னிரண்டடியிற் கூறியபொருளைச் சமர்த்திக்கவந்தன: ஆதலால், இச்செய்யுள் - தொடர்நிலைச் செய்யுட்குறியணியாம். வெயிலவன் - வெயிலையுடையவன்: வெயில் - உஷ்ணகிரணம். அயிலு நல்லமுதோர் - நல்லமுது அயில்வோர். எயில் - எயிலையுடைய புரத்துக்கு ஆகுபெயர்.

எழில்மூன்று செற்ற கதை :—தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து மயனென்பவனாற் சுவர்க்க மத்திய பாதாளமென்னும் மூன்றிடத்திலும் முறையே பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களினால் அரண் வகுக்கப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந்தன்மையையுடைய மூன்றுபட்டணங்களைப் பெற்று மற்றும்பல அசுரர்களோடும் அந்நகரங்களுடனே தாம் நினைத்தவிடங்களிற் பறந்து சென்று பலவிடங்களையும் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால், சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திர சூரியர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத் தேவர்களைப் பிற போர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு, யுத்த சன்னத்தராகிச்சென்று போர்செய்ய யத்தனிக்கையில், தேவர்கள் தத்தமது வல்லமையைநினைந்து அகங்கரித்ததனை உணர்ந்து சினந்து அவர்களுதவியைச் சிறிதும் ஏற்றுக்கொள்ளாமல், தாமே புன்சிரிப்புச்செய்து அசுரரனைவரையும் பட்டணங்களோடு எரித்தருளினரென்பது. (௩௫)

36.—இதுவும், மேற்கவியும் - குளகம்: ஸ்ரீகைலாசகிரியில் தவம்புரியும் அருச்சுனன் தவச்சிறப்பைக் கொண்டாடுதலைத் தெரிக்கும்.

உருகியவெள்ளிபோலவுயர்முழைதோறும்வீழு
மருவிநீர்புனிதன்வேணியமருமாநதியிற்றோன்ற
வுருகியபனிவான்குன்றிலொண்பளிக்கடவுள்வந்து
மருவியதென்னத்தோன்றும்வருணமால்வரையின்றென்பால்.

(இ - ள்.) உருகிய வெள்ளி போல - உருகிய வெள்ளியானதுபோல், உயர் முழை தோறும் வீழும் - உயர்ந்த மலைக்குகைகளிலெல்லாம் விழு

கின்ற, அருவிநீர் - மலைநீர் வெள்ளம், புனிதன் வேணி அமரும் மா நதியின் தோன்ற - பரிசுத்தனாகிய பரமசிவனது திருச்சடையிற் பொருந்திய சிறந்த கங்காநதிபோல (வெண்ணிற முடையதாய்)க் காணப்பட, உருகிய பனி வான் குன்றில் - நீராய்க் கரைகின்ற பனிக்கட்டிகளையுடைய பெரிய [அல்லது சிறந்த] இமயமலையிலுள்ள, ஒள் பனி கடவுள் - பிரகாசமான பனிக்கு உரிய தெய்வம், வந்து மருவியது என்ன - (இங்கே) வந்து பொருந்திற்றென்று சொல்லும்படி, தோன்றும் - காணப்படுகின்ற, வருணம் - வெண்ணிறத்தையுடைய, மால் - பெரிய, வரையின் - ஸ்ரீகைலாசகிரியின், தென்பால் - தெற்குப் பக்கத்திலே; (எ - று.) — மேற்கவியில் 'பூசினன் சேர்ந்தான்' என்னும் வினை முற்றுக்களோடு முடியும்.

ஆகாச கங்காநதி பகீரதசக்கரவர்த்தியின் வேண்டுகோளாற் பூலோகத்துக்கு வரும்பொழுது சிவபெருமான் ஏற்றுக்கொண்டார்; இதற்கு வேறு கதை கூறுவாருமுளர். பனிக்கடவுள் வந்து மருவிய தென்னத்தோன்றும் வருணமால்வரையென்ற இடத்துத் தற்குறிப்பேற்றவணி காண்க: வெள்ளிமலையாதலால், இவ்வாறு வருணித்தார். தோன்ற தோன்றும் வருணத்தையுடைய வரை எனக் கூட்டுக. (௩௬)

வேறு

37. ஆசினான்மறைப்படியு மெண்ணில்கோடி யாகமத்தின் படியுமெழுத் தைந்துங்கூறிப், பூசினான்வடிவமெலாம்விபூதியாலப் பூதியினைப் புரிந்தசடைப் புறத்தே சேர்த்தான், றேசினா லப்பொருப் பின்சிகர மேவுஞ் சிவனிவனே போலுமெனத் தேவ ரெல்லாம், பேசினார்வரிசிலைக்கை விசயன் பூண்ட பெருந்தவத்தி னிலைசிலர்க்குப் பேசலாமோ.

(இ - ள்.) (அருச்சுனன்), ஆசு இல் - குற்றமில்லாத, நால்மறை படி உம் - நான்கு வேதங்களிற் கூறிய விதமாகவும், எண் இல் கோடி - கணக்கில்லாத கோடிக்கணக்காகிய, ஆகமத்தின் படி உம் - ஆகமங்களிற் கூறிய விதமாகவும், எழுத்து ஐந்துஉம் கூறி - ஸ்ரீபஞ்சாக்ஷர மகாமந்திரத்தை உச்சரித்துக்கொண்டு, வடிவம் எலாம் - (தன்) உடம்பு முழுவதும், விபூதியால் - திருநீற்றினால், பூசினான் —, அ பூதியினை - அந்த விபூதியின் மிகுதியை, புரிந்த சடை புறத்தே - கட்டியுள்ள சடையின்மேலே, சேர்த்தான் - அணிந்தான்; 'இவன் - இவ்வருச்சுனன், தேசினால் - ஒளியினால், அ பொருப்பின் சிகரம் மேவும் சிவன் ஏ போலும் - அந்தக் கயிலாசமலையினது உச்சியிலெழுந்தருளியிருக்கின்ற சிவனையே போல்வான்,' என - என்று, தேவர் எலாம் - தேவர்கள் யாவரும், பேசினார் - துதித்துச்சொன்னார்கள்; வரி - கட்டமைந்த, சிலை - காண்டீவமென்னும் வில்லையேந்திய, கை - கையையுடைய, விசயன் - அருச்சுனன், பூண்ட - (அப்போது) மேற்கொண்டு செய்யத்தொடங்கிய, பெரு தவத்தின் - மேலான தவத்தினது, நிலை - தன்மை, சிலர்க்கு பேசல் ஆம்ஓ - சிலராற் சொல்லுதற்கு முடியுமோ? [முடியாதென்றபடி]; (எ - று.)

எண்ணில்கோடி என்பது - இருபத்தெட்டுஆகமங்களின் கிரந்தக் கணக்கையுட்கொண்டு. விசயன் என்பதற்கு - விசேஷமான வெற்றியை யுடையவனென்று பொருள்; ராஜசூயயாகத்திற்காக வடக்கிற்சென்று பல அரசர்களை வென்றதனாலும், காண்டவதகனகாலத்துத் தேவர்களை வென்ற தனாலும், இவனுக்கு இப்பெயர் அமைந்தது. சிலர்க்குப் பேசலாமோ என்றது - பலருங்கூடி ஒருங்கு பேசினாற் பேசமுடியுமே யல்லது தனித்தனிப் பேசமுடியாதென்றபடி: அல்லது உலகத்து அறிவுடையர் சிலராதலால், அச்சிலராலும் பேசமுடியாதென்றனுமாம். வடிவமெலாம்என்றவிடத்து, எல்லாம் - ஒருபொருளின்பலவிடத்தைக்குறித்தது: தேவரெல்லாம் என்ற விடத்து, எல்லாம் - எஞ்சாமைப்பொருளைகுறித்தது.

இதுமுதலாறுகவிகள் - பெரும்பாலும் முதலிரண்டு சீர்களும் ஐந்து ஆறுஞ்சீர்களும் காய்ச்சீர்களும், மற்றவை மாச்சீர்களுமாகிவந்த எழுசீ ராசிரியவிருத்தங்கள். (௩எ)

38.—அருச்சுனனுடைய தவநிட்டை.

ஒருதாளின்மிசைநின்றுநின்றதாளி னூருவின்மேலொருதாளை யூன்றியொன்றுங்,கருதாமன்மனமடக்கிவிசும்பிரோடுங்கதிரவனைக் கவர்வான்போற்கரங்கணீட்டி, யிருதாரைநெடுந்தடங்கணிமையா தோரா யிரங்கதிருந்தாமரைப்போதென்னநோக்கி, நிருதாதிபரின்ம னுவாய்த்தவஞ்செய்வாரினிகரிவனுக்கார்கொலெனநிலைபெற்றானே.

(இ - ள்.) (அருச்சுனன்), ஒரு தாளின் மிசை நின்று-ஒருகாலை நிலத்தி லூன்றி அதன்மேல் நின்றுகொண்டு, நின்ற தாளின் ஊருவின்மேல் ஒரு தாளை ஊன்றி-நின்ற அக்காலினது தொடையின்மேல் மற்றொருகாலை ஊன்ற வைத்துக்கொண்டு, ஒன்றும் கருதாமல் மனம் அடக்கி - (பரமசிவனைத் தவிர) யாதொரு விஷயத்தையுஞ் சிறிதும்நினையாதபடி மனத்தை அடங் கச்செய்து, விசும்பின் ஓடும் கதிரவனை கவர்வான் போல் கரங்கள் நீட்டி - ஆகாயமார்க்கத்தில் விரைந்து செல்லுகின்ற சூரியனைக் கைகளாற் பிடிக்க முயல்பவன்போலக் கைகளை மேலே உயர்த்தி வைத்துக்கொண்டு, இரு தாரை நெடு தட கண் இமையாது - கருவிழிகளையுடைய நீண்ட பெரிய கண்களிரண்டையும் இமைக்காமல், ஓர் ஆயிரம் கதிர்உம் - (சூரியனது) ஆயிரங்கிரணங்களையும், தாமரை போது என்ன நோக்கி - (ஆயிரம் இதழ்களையுடைய) தாமரைமலரைப்பார்ப்பதுபோலக் குளிரப்பார்த்துக் கொண்டு, நிருத அதிபரில் மனு ஆய் தவம் செய்வாரில் - தவத்தைச் செய்ப வர்களாகிய இராக்கதத்தலைவர்களுள்ளும் மனிதர்களுள்ளும், இவனுக்கு நிகர் ஆர்கொல் என - இவ்வருச்சுனனுக்கு ஒப்பாவார் யாவரோ? [எவரு மிலர்] என்னும்படி, நிலைபெற்றான்-(தவத்தில்) உறுதியாய் நின்றான்;(எ-று.)

சூரியகிரணங்களைத் தாமரைப்பூவைப் பார்ப்பதுபோலக் குளிரப்பார்த் தனனென்பதாம். கதிரவன் - கிரணங்களையுடையவன்; மற்றையிருசுடர் களாகிய சந்திர அக்கினிகளுக்கு ஒளியைக்கொடுத்து வாங்குகிற சிறப்புப்

பற்றி, பெருஞ்சுடராகிய சூரியனுக்குக் கதிரவன் என்று பெயர். தாரை- கண்ணின் கருவிழி. காசியப மகாமுனிவரின் மனைவியருள் ஒருத்திக்கு மனு என்று பெயர்: இச்சொல் - ஆகுபெயரால் அவளிடந்தோன்றிய மனிதரை யுணர்த்திற்று. (௩அ)

39.—அக்கினிகள் அருச்சுனனைச் சுடாமை.

தோற்றியதெம்மிடத்தேயித்தோன்றன்மாலை சூட்டியபொற் றொடியென்றோ துரங்கம்பொற்றேர், கூற்றியல்வெஞ்சிலைபாணந் தூணிநாணி குரக்குநெடுங்கொடிமுன்னங்கொடுத்தேமென்றோ, காற்றினுடன்விரைவுறச்சென்றருந்துமாறு காண்டவநம்பசிக்களி த்தகாளையென்றோ, நாற்றிசையும்வளர்த்ததழற்கடவுளந்த நரனுட லங்குளிர்விக்குநாரம்போன்றான்.

(இ - ள்.) இ தோன்றல் - விளங்குகின்ற இவ்வருச்சுனனுக்கு, மாலை சூட்டிய - மணமாலையைச் சூட்டின, பொன் தொடி - பொன்னினாற்செய்த தொடியென்னும் வளையல்களையுடைய திரௌபதி, தோற்றியது-பிறந்தது, எம்இடத்து-எமதிடத்திலேயாம், என்றோ - என்று எண்ணிய காரணத் தாலோ? துரங்கம்-(நான்குவெள்ளைக்) குதிரைகளையும், பொன் தேர்-பொன் மயமான இரதத்தையும், கூற்று இயல் வெம் சிலை-(பகைவர்களைக் கொல்லுத லால்) யமனையொத்த கொடிய(காண்டீவமென்னும்) தனுசையும், பாணம் - அம்புகளையும், தூணி - அம்பறாத்தூணியையும், நாணி - வில்நாணியையும், குரங்கு நெடுகொடி-குரங்கின் உருவத்தையெழுதிய பெரிய துவசத்தையும், முன்னம்-முன்னே [காண்டவதகனகாலத்தில்], கொடுத்தேம் - (இவனுக்கு நாம்) தந்தோம், என்றோ-என்று நினைத்த ஏதுவினாலோ? காற்றினுடன் - (நமக்குத் துணைவனாகிய) வாயுவினுடனே, விரைவு உற - வேகம்பொருந்த, சென்று - (நாம்) போய், அருந்தும் ஆறு - உண்ணும்படி, காண்டவம் - காண்டவமென்னும் வனத்தை, நம் பசிக்கு - நமது பசியை ஒழிப்பதற்கு, அளித்த - இரையாகக்கொடுத்த, காளை - வீரனாவான் (இவன்), என்றோ - என்று கருதியதனாலோ? நால் திசைஉம் வளர்த்த தழல் கடவுள் - (அருச் சுனன் தவம் செய்யும்பொழுது) தனக்கு நான்கு பக்கங்களிலும் மூட்டி வளர்த்த அக்கினி தேவன், அந்த நரன் உடலம் குளிர்விக்கும் நாரம் போன் றான் - அவ்வருச்சுனனது உடம்பைக் குளிரச்செய்கின்ற நீரைஒத்துத் தண்ணியதாய்ச் சுடாமலிருந்தான்; (எ - று.)

பஞ்சாக்கினிமத்தியிலிருந்து உடம்பைவருத்தித் தவஞ்செய்பவர்கள் அந்நெருப்பினது உஷ்ணத்தைக் கருதாமல் அதனைத் தண்ணியதாக நினைப் பர்: அங்ஙனம் நினைக்கப்படுகின்ற நெருப்பினது குளிர்ச்சியை இங்ஙனம் வருணித்தார்: ஏதுத்தற்குறிப்பேற்றவணியும் உவமையணியுஞ் சேர்ந்து வந்த சேர்வையணி. பொற்றொடி - மூன்றும் வேற்றுமைத் தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. நாரம்என்னுஞ் சொல்லுக்கு - நர சம்பந்தமானது என்ற ஒருபொருளும் உள்ளதனால், ஒருவகைச் சாதுரியுங்

தோன்ற, கவி 'நரனுடலங்குளிர்விக்கும் நாரம்போன்றான்' என்றார். கிருஷ்ணனும் அருச்சுனனும் ஒருநாள் பூம்பந்தேறிட்டு விளையாடச் செய்தே, அக்கினி பகவான், மிகப்பசித்துவந்து, 'இந்திரனது காவற்காடாய் யாவர்க்கும் அழிக்க வொண்ணாதபடியாய் நிலவுலகத்திலிருக்கின்ற காண்டவவனமென்னும் பூந்தோப்பை அதிலுள்ள சராசரங்களுடனே எனக்கு விருந்திட வேண்டும்' என்று வேண்ட, கிருஷ்ணார்ச்சுனர்கள் அங்கேபுக்கு ஒதுங்கியிருக்கின்ற அசுரர்முதலிய துஷ்டர்களை அழித்தருள வேண்டுமென்னும் நோக்கத்தால் 'நீ அதனைப் புசி' என்று இசைந்து அளிக்க, உடனே நெருப்புப் பற்றி எரித்த தென்பது, கதை. ஆசாரிய சிஷ்யக்கிரமத்தை அனைவரும் அறிந்து அநுஷ்டித்து உய்யுமாறு சிஷ்யனும் குருவுமாகிப் பதரிகாச்சிரமத்திலெழுந்தருளியிருக்கின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவின் அமிசமாகிய நரன் நாராயணன் என்னும் முனிவர்களே இந்த அருச்சுனனும் கிருஷ்ணனுமாகத் தோன்றின ராதலால், நரனென்று அருச்சுனனுக்கு ஒருபெயர்; இதனை மேலே கீதையிற் கண்ணன் "உன்னை யான் பிரிவதில்லை யொருமுறை பிரிந்து மேல்நாள், நன்னிலா வெறிக்கும் பூணூய் நரனு நாரணனுமானோம்," "இந்நெடும் பிறப்பில் நீயும் யானுமாயீண்டு நின்றோம்" என்றதனாலும் அறிக. (ஙக)

40.—சிவத்தியானத்தால் அருச்சுனன் உடம்புஎங்கும் புளகங்கொண்டு நிற்றல்.

*வலப்பாகஞ்செழும்பவளச்சோதியென்ன வாணீலச்சோதி யென்னமற்றப்பாகங்,கலப்பானதிருமேனியணிந்தநீற்றாற் கதிர்முத்தின்சோதியெனமேனையீன்ற, குலப்பாவையுடன்கயிலைக்குன்றில் வாழ்விற் குன்றுடையோன்றிருக்கோலங்குறிப்பாலுன்னிப்,புலப் பாடுபுறம்பொசியமார்புந்தோளும் பூரித்தானுடல்புளகம்பாரித் தானே.*

(இ - ள்.) வலம் பாகம் - (சிவரூபமான) வலதுபக்கம், செழு பவளம் சோதி என்ன - அழகான பவழத்தினது ஒளிபோலச் சிவந்திருக்கவும், மற்ற பாகம் - (பார்வதீ ரூபமான) மற்றொரு [இடது] பக்கம், வாள் நீலம் சோதி என்ன - பிரகாசமான நீல ரத்தினத்தினது ஒளிபோலக் கறுத்திருக்கவும், கலப்பு ஆன - (ஆண்வடிவமும் பெண்வடிவமுங்) கலந்ததான, திருமேனி - திவ்வியசொரூபம், அணிந்த நீற்றால் - சாத்திக்கொண்டுள்ள விபூதியினால், கதிர் முத்தின் சோதி என - பிரகாசமான முத்தினது ஒளிபோல வெளுத்திருக்கவும், மேனை ஈன்ற குலம் பாவையுடன் - மேனகையென்பவள் [இமவத் பருவதத்தின் மனைவி] பெற்ற சிறந்த சித்திரப்பிரதிமைபோல மிக அழகிய உமாதேவியுடனே, கயிலை குன்றில் - ஸ்ரீகைலாசகிரியிலே, வாழ் - எழுந்தருளியிருக்கின்ற, வில் குன்று உடையோன் - மேருமலையை வில்லாகவுடைய பரமசிவனது, திருக்கோலம் - திருவுருவத்தை, குறிப்பால் உன்னி - மனத்தால் தியானஞ் செய்துகொண்டு, (அருச்சுனன்), புலப்பாடு புறம் பொசிய - (உள்ளே) விளங்குகின்ற சிவத்தியானம் (ஆனந்தக் கண்ணீ

ரொழுகுதல் முதலியவற்றால்) வெளியே தோன்றுநிற்க, மார்புஉம் தோள் உம் பூரித்தான் - (தனது) மார்பும் தோள்களும் (சிவானந்தத்தால்) பெருக்கப்பெற்றான்; உடல் புளகம் பாரித்தான் - உடம்பு புளகமுண்டாகப்பெற்று நின்றான்; (எ - று.)—அர்த்தநாரீசுவரமூர்த்தியாதலால், இவ்வாறு வருணித்தார்.

குலப்பாவை - உயர்குலத்துத் தோன்றிய மகளுமாம். மனத்திற்குத் திருப்தியுண்டாகுமளவும் கலைத்துக் கலைத்து மிகச் சீர்திருத்தமாக எழுதக்கூடு மாதலால், சித்திரப்பாவை மிக அழகியதாம். புலப்பாடு - உலகத்தாரது உள்ள நிகழ்ச்சி ஆங்கு நிகழ்ந்தவாறே புறத்தார்க்குப் புலப்படுவதோர் வகையால் வெளிப்படுதல்; என்றது - கண்ணீரரும்பலும் மெய்ம்மயிர்சிலிர்த்தலும் முதலாக உடம்பில்வரும் வேறுபாடுகளை: இவை சாத்துவிக பாவம் எனப்படும். மார்புந்தோளும் பூரித்தான், உடல் புளகம்பாரித்தான் - மார்பு முதலிய அஃறிணைச் சினைப்பெயர்கள் உயர்திணை முதற்பெயரின் வினையைக்கொண்டு முடிந்தன: திணைவழுவமைதிகள்: [நன் - வினை. 26.] குறிப்பாலுள்ளும் என்றும் பாடம். (௪0)

41.—கவிக்கூற்று: அருச்சுனன் தவம்புரிந்த சிறப்பைக் கொண்டாடுதல்.

கருந்துறுகல்லெனக்கருதிப்பிடியுங்கன்றுங் களிற்றினமுமுடனுரிஞ்சக்கறையானேறிப், பொருந்துமுழைப்புற்றதெனப்புயங்கமூரப் பூங்கொடிகண்மரனென்றுபாங்கேசுற்றப்,பரிந்துவெயினாண்மழைநாள்பனிநாளென்று பாராமனெடுங்காலம்பயின்றான்மண்ணி,லருந்தவமுன்புரிந்தோரிலிவனைப்போன்மற் றார்புரிந்தார்சிவசிவவென்றரியவாறே.

(இ-ள்.) பிடிஉம்-பெண்யானைகளும், கன்றுஉம்-யானைக்கன்றுகளும், களிறு இனம்உம்-ஆண்யானைக் கூட்டங்களும், (தவநிலையிற்சலியாமல் நின்ற அருச்சுனனது உடம்பை), கரு துறு கல் என கருதி-கரிய துறுகல்லென்று நினைத்து, உடன் உரிஞ்ச-பொருந்திஉராயவும்,—புயங்கம்-பாம்புகள், கறையான்ஏறி பொருந்தும் முழை புற்று அது என-செல்லுகள்வந்து ஏறித்தங்குதலால் துளையாகிய புற்றென்று நினைத்து, ஊர-மேலே தவழவும்,—பூ கொடிகள்-பூக்களையுடையகொடிகள், மரன்என்று-மரமென்றுகருதி, பாங்குசுற்ற-(நான்கு)பக்கங்களிலும் சுற்றிக்கொள்ளவும்,—வெயில்நாள் மழைநாள் பனிநாள்என்று பாராமல்-வெயில்காயுங்காலமென்றும் மழைபெய்யுங்காலமென்றும் பனிபெய்யுங்காலமென்றும் அருமைபாராட்டாமல் [எக்காலங்களிலும்], பரிந்து - வருந்தி, நெடு காலம் - பலநாள், சிவசிவ என்று - சிவசிவஎன்று (சிவநாமத்தை விடாமல்) உச்சரித்துக்கொண்டு, பயின்றான் - (அருச்சுனன்) தவஞ்செய்தான்; மண்ணில் - பூலோகத்தில், அரு தவம் முன் புரிந்தோரில் - (செய்வதற்கு) அருமையான தவத்தை முற்காலத்திற் செய்தவர்களுள், இவனை போல் - இவ்வருச்சுனனைப்போல, மற்று ஆர் புரிந்தார் - வேறு யார் தவஞ்செய்தார்கள்? [எவருமில்லை]; அரிய ஆறு எ - (இவன் செய்த தவம்) அருமையான விதமேயாம்; (எ - று.)

அருச்சுனன் அசையாதுநின்று தவம்புரிதலால் அவனுடலைக் கருநிற முள்ள துறுகல்லென்று கருதிப் பிடியுங் களிறும் அவனுடலின்மீது உராய லாயின: அவனுடலைச் சுற்றிக் கறையானேறவே பாம்பு புற்றென்றுகருதி அங்கு ஊரலாயின: அவனுடலை மரமென்றுகருதிப் பூங்கொடிகள் சுற்றி வளரலாயின: இங்ஙனமாக எல்லாக்காலங்களிலும் சலியாது நின்று இடை விடாமல் தவத்தைப்பயின்றானென்க. (சக)

42. பகிரதனேமுதலானவெண்ணில்கோடிப் பார்த்திவருந் தவம்புரிந்தார்பைம்பொன்மேனி, யிகலவுணர்முதலானககனவாண ரெத்தனைபேர்தவம்புரிந்தாரிமையோரேத்து, மகபதிதன்மதலையிவ னெழுதொணாத வனப்பினுக்குவரிசிலைக்கைம்மதவேளொவ்வான், சகலகலைகளுக்குமிவன்றானேயிங்ஙன் றவம்புரியநினைப்பதேசார்ந்த பாவம்.

(இ-ள்.) பகிரதன்ஏ முதல் ஆன - பகீரதன் முதலாகிய, எண் இல் கோடி பார்த்திவர்உம் - அனந்தகோடிக் கணக்காகிய அரசர்களும், தவம் புரிந்தார் - தவஞ்செய்தார்கள்; பை பொன் மேனி இகல் அவுணர் முதல் ஆன - பசும்பொன்னிறமான உடம்பையுடைய வலிய இரணியா சுரன்முதலாகிய, ககனவாணர் எத்தனை பேர் - ஆகாயத்திற் சஞ்சரிக்குந் தன்மையையுடையவர்கள் எத்தனையோபேர், தவம் புரிந்தார் - தவஞ் செய்தார்கள்; இமையோர் ஏத்தும் மகபதிதன் மதலை - தேவர்கள் துதிக் கப்பெற்ற தேவேந்திரனது குமாரன், எழுத ஒணாத வனப்பினுக்கு வரி சிலை கை மதன் வேள் ஒவ்வான் - (சித்திரத்திலும்) எழுதமுடியாத அழகுக்குக் கட்டமைந்த கருப்புவில்லைப்பிடித்த கையையுடைய மன்மத னும் (தன்னோடு) ஒப்பாகப் பெறாதவனாகி, சகல கலைகளுக்குஉம் இவன் தான்ஏ - எல்லாக் கல்விகளுக்கும் (வேறுஉவமை பெறாமல்) தன்னோடு தானே ஒப்பவன்: இவன் - இவ்வருச்சுனன், இங்ஙன் தவம் புரிய நினைப்பதுஏ - இவ்வாறு (கோரமான) தவத்தைச் செய்ய நினைப்பதே? சார்ந்த பாவம் - (இவன் இவ்வாறு வருந்துதல் முற்பிறப்பிற் செய்யப்பட் டுப் பிற்பிறப்பில்) தொடர்ந்துவந்துஅடைந்த தீவினையின் பலன்போலும்.

பகீரதன் - சூரியகுலத்துப் பேர்பெற்ற அரசன்; இவன், கபில மகா முனிவரது கோபத்தீக்கு இரையாய்ச் சாம்பரான தனது மூதாதையராகிய சகரபுத்திரரறுபதினாயிரவரையும் நற்கதி பெறச் செய்யும்பொருட்டுப் பலவா யிரம் வருஷகாலம் பெருந்தவஞ்செய்து தேவலோகத்துஉள்ள கங்காநதி யைப் பூமிக்குக் கொணர்ந்து அங்கிருந்து பாதாளத்துக்கு அழைத்துக் கொண்டுபோய் அதன்நீரினால் அவர்கள் சாம்பலை நனைத்தான். பார்த்திவர் - பூமியை யாளும் அரசர்: பிருதிவி - பூமி: தத்திதாந்தநாமம். உம்மை - உயர்வு சிறப்பு. இரணியன், முதலில் திரிமூர்த்திகளைக்குறித்து அளவிறந்த காலம் அருந்தவம் புரிந்து தேவர் மனிதர் விலங்கு முதலிய சீவன்களாலும் ஐம்பெரும் பூதங்களாலும் ஆயுதங்களாலும் மற்றும் எவற்றாலுந் தனக்கு மரணமில்லாதபடி பல வரங்களைப் பெற்றான். அவுணர்என்று பன்மையாற்

கூறியது, சிறப்புப்பற்றி. உடம்பிற்சிறந்த உறுப்பாகிய கண்ணைப் பொன்னிறமாகவுடைய அவனது தமையனான இரணியாக்கனையும் உளப்படுத்தியதாகவுங்கொள்ளலாம்: இனி, பொன்னிறமான உடம்பையுடைய காலகேயரென்னும் அசுரரென்றும் உரைக்கலாம். மேல் நிவாதகவசர் காலகேயாவதைச்சருக்கத்தில் "பொன்காலுமெய்யர்" என வருவதுங் காண்க. அசுரர் தேவவருக்கத்தைச்சேர்ந்தவ ராதலால், 'ககனவாணர்'என்றது. முதலிரண்டடிகளாலும், இங்ஙன்என்றதனாலும் அருச்சுனன்அவர்களினும் அதிகமாகத் தவஞ்செய்தானென்பது, போதரும். மதன் - மதத்தையுண்டாக்குபவன்: மன்மதன்: கந்தவேளை விலக்குதற்கு 'மதவேள' என்றார்: மதம்வேள்என்று பிரித்து - காமமதத்தையுண்டாக்கும் வேள் எனினுமாம். நினைப்பதே, ஏகாரம் - நினைப்பதுதகுதியன்று என்ற பொருளைத் தந்தது. (சஉ)

வேறு

43.— சூரியன் தவம்புரியும் அருச்சுனனுக்குக் கோடையிலும் குளிர்ந்திருத்தல்.

பண்ணுக்கு வாம்பரித்தே ராதவனும் பணிந்துபசு பதியை
நோக்கி, மண்ணுக்குத் தவம்புரியுந் தனஞ்சயற்குக் கோடையினு
மதியம்போன்றான், எண்ணுக்கு வரும்புவனம் யாவினுக்குங் கண்
ணாவா னிவனே யன்றே, கண்ணுக்குப் புனைமணிப்பூண் கண்
ணோட்ட மென்பதெல்லாங் கருணை யன்றே.

(இ - ள்.) பண் - கல்லணை, உக்கு - அறுந்துவிழும்படி, வாம் - தாவியோடுகின்ற, பரி - குதிரை பூட்டிய, தேர் - இரதத்தையுடைய, ஆதவன் உம் - சூரியனும்,— பசுபதியை நோக்கி-பரமசிவனைக்குறித்து, பணிந்து - வணங்கி, மண்ணுக்கு - (பாசுபதாஸ்திரம்பெற்றுப் பகைவரைவென்று) இராச்சியத்தைப் பெறும்பொருட்டு, தவம் புரியும் - தவஞ் செய்கின்ற, தனஞ்சயற்கு - அருச்சுனனுக்கு, கோடையின்உம் - வெயிற்காலத்திலும், மதியம் போன்றான் - சந்திரனையொத்துக் குளிர்ந்திருந்தான்; (ஏனெனில்), எண்ணுக்கு வரும் புவனம் யாவினுக்குஉம்-(பதினான்குஎன்கிற) கணக்குக்கு வருகின்ற உலகங்களெல்லாவற்றிற்கும், கண் ஆவான் - கண்ணாகுபவன், இவன் ஏ அன்றே - இச் சூரியனேயா மன்றோ? கண்ணுக்கு - நேத்திரத்துக்கு, புனை மணி பூண் - அணிதற்குரிய அழகிய ஆபரணம், என்பது எலாம் - என்று சொல்லுவது எல்லாம், கண்ணோட்டம் - (பிறர்மேற்) கண் சென்றவிடத்து உண்டாகின்ற, கருணை அன்றே-கிருபையையே யன்றோ?

"கண்ணுக்கணிகலங் கண்ணோட்டம்" என்றபடி கண்ணுக்கு அழகு செய்வது கருணையென்பது பிரசித்தமாதலால், உலகமனைத்துக்குங் கண்ணாகவிருக்கின்ற சூரியன் மிகக் கருணையுடையவனாய் தவஞ்செய்யும் அருச்சுனனைக் கோடைக்காலத்திலும் சுடாமலிருந்தா னென்றார்: இவ்வருச்சுனன் கடுங்கோடையிலும் வெயிலை இலட்சியஞ் செய்யாதிருந்தானென்றவாறு. "கண்ணோட்டமென்னுங் கழிபெருங் காரிகை,

யுண்மையானுண்டிவ்வுலகு'' என்றார், நாயனார். சூரியனுக்கு ''ஜகச்சக்ஷு:'' என்று ஒருபெயர் வடமொழியிலிருத்தல், 'கண்ணுவானிவன்' என்ற இடத்துக் கருதத்தக்கது : சூரியனின்றிக் கண்ணொளி விளங்கா வாதலால், 'கண்ணுவானிவன்' என்றது என்பாரு முளர். பண்ணுக்கு வாம் பரி - இசையின் தாளத்துக்கு இயையத் தாவும் பரிவாரினுமாம். புவனம் - உயிர் கட்கு, ஆகுபெயர். கோடை - ஆனியும் ஆடியுமாகிய முதுவேனிற் காலம்.

இது-முதல்நான்கு சீர்கள் காய்ச்சீர்களும், மற்றையிரண்டும் மாச்சீர் களுமாகிய கழிநெடிலடிநான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தம். (௪௩)

வேறு

44.—இதுவும் அடுத்த கவியும்-அருச்சுனன் தவஞ்செய்த தன்மையைக் கூறும்.

அங்கியா லங்கியை வெதுப்பி வெம்மையைப்
பொங்கிய வாயுவாற் போக்கி மெய்ச்சிரந்
தங்கிய வமுதினாற் றண்ணெனு மும்படி
யிங்கிதத் தொடுக்கின னிதயந் தன்னையே.

(இ - ள்.) (அருச்சுனன்), அங்கியால் - (மேலெழுகின்ற) உடம்பி லுள்ள பிராணவாயுவினால், அங்கியை - (இருதய கமலத்திற் சஞ்சரிக்கின்ற) அக்கினியை, வெதுப்பி - மேலே யெழுப்பி, வெம்மையை - (அவ்வக்கினி யின்) வெப்பத்தை, பொங்கிய வாயுவால் - (அங்ஙனம்) மேலெழுந்த வாயுவை அடக்குவதனால், போக்கி - ஒழித்து, மெய் சிரம் தங்கிய அமுதி னால் - உடம்பின் உத்தமஅங்கமாகியசிரசிலே தங்கியுள்ள அமிருதத்தினால், தண்ணெனும்படி - குளிர்ச்சியடையும்படி, இதயந்தன்னை - மனத்தை, இங் கிதத்து - இனிமையாக, ஒடுக்கினன் - (தியானத்தில்) ஒடுங்கச்செய்தான்.

இந்திரியங்களைஒடுக்கி இடைகலையால் வாயுவைஇரேசித்துப் பதினாறு மாத்திரையளவுபூரித்து அறுபத்துநான்குமாத்திரையளவு கும்பித்து அவ் வாயுவைப் பிங்கலையால் அறுபதுமாத்திரையளவு இரேசித்துச் சுஷுமுனை யிற் செலுத்தவேண்டுதலாலும், அக்கினிமண்டலமாகிய உடல்மத்தியிலுள்ள அக்கினியை வன்னிபீசத்தால் தோய்தலாலும், நாசிநுனியாகிய சந்திரமண் டலத்தின்வழியே ஆறாதாரங்களையுந் தரிசித்துச்சிரசினின்று உருகிச் சிந்து கின்ற அமுதத்தைப்பருகவேண்டுதலாலும் இங்ஙனங் கூறினார். சுஷுமுனை இடை பிங்கலை யென்பன-தசநாடியிற் சேர்ந்தவை. இவற்றில் சுஷுமுனை- மூலாதாரம்சுவாதிஷ்டானம் மணிபூரகம் அநாகதம்விசுத்தி ஆஞ்ஞைஎன்கிற ஆறுஆதாரங்கட்கும் இடமான குதம் குய்யம் நாபி இதயம் அடிநா நெற்றி என்னும் ஆறிடங்களிலும் ஊடுருவிநிற்பதொருநாடி : இடை பிங்கலை என் பன - கத்திரிகைக்கால்போல ஒன்றோடொன்று பின்னிநிற்கும் இரண்டு நாடிகள். இடைகலை - இடமூக்கால்வருஞ் சுவாசம். வலமூக்கால்வருஞ் சுவாசம் - பிங்கலை. மூச்சைவெளிவிடுதல் - இரேசகம் : உள்வாங்குதல் -

பூரகம்: கும்பகம் - பிராணவாயுவைச் சமப்படுத்தியடக்குதல். சிரத்திற் பிங்கலைஇடைநாடிகட்குநடுவே புருவமத்தியிலே அமிருதம் சிந்தும். அங்கி- அங்கத்திலுள்ளது. இங்கிதத்து - பாவனையிலென்றுமாம். "கிளர்ந்தகாலி னலங்கியைநிமிர்த்து மேற்கிடைத்து, வளர்ந்தபிங்கலையிடை நடுவழியுகு மதியின், விளைந்த வின்னமுதுண்டிகம் விடையவன்வடிவங், குளந்தனிற் குறித்தவனுருக்கொண்டவரிவர்காண்" என்னுந் திருவிளையாடற்புராணச் செய்யுளும், "சகமார்க்கம் புலனொடுக்கித்தடுத்து வளியிரண்டுஞ் சலிப் பற்று முச்சதுர முதலாதாரங்க, ளகமார்க்கமறிந்தவற்றினரும்பொருள்க ளுணர்ந்தங் கணைந்துபோய் மேலேறி யலர் மதிமண்டலத்தின், முகமார்க்க வமுதுடலமுட்டத்தேக்கி முழுச்சோதிநினைந்திருத்தல் முதலாக வினைக, ளுகமார்க்கவட்டாங்கயோகமுற்று முழுத்தலுழந்தவர்சிவன்றனுருவத்தைப் பெறுவர்" என்னுஞ் சிவஞானசித்தியார்பாடலும் உணர்க. இனி, அங்கியாலங்கியை வெதுப்பி என்பதற்கு - சாடராக்கினியாகிய பசியை மூலாக்கினியாலடக்கியென்றும், இங்கிதத்து என்பதை, இங்குஇதத்துஎனப் பிரித்து-இந்நிலையில் இனிமையாகஎன்றும் உரைப்பாருமுளர்.

இதுமுதற் பத்துக்கவிகள் - பெரும்பாலும் மூன்றுஞ்சீரொன்று மாச் சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (௪௪)

45. ஈண்டுதன் கருத்தினேடியைந்தமாதவம்
பூண்டிளமதிமுடிப்புண்ணியன்றனை
வேண்டியவாறெலாம்விருப்பொடுன்னினான்
பாண்டியனுயர்குலப்பாவைகேள்வனே.

(இ - ள்.) பாண்டியன் - பாண்டியநாட்டரசனது, உயர் - மேலான, குலம் - குலத்திற்பிறந்த, பாவை - சித்திரப்பிரதிமைபோல அழகிய சித்திராங்கதைக்கு, கேள்வன் - கணவனான அருச்சுனன், ஈண்டு - இவ்வாறு, தன் கருத்தினோடு இயைந்த மா தவம் - தனது எண்ணத்துக்கு ஏற்ற பெரிய தவத்தை, பூண்டு-மேற்கொண்டு, இள மதி முடி புண்ணியன் தனை - இளஞ்சந்திரனை முடியிலுடைய பரிசுத்தனாகிய பரமசிவனை, வேண் டிய ஆறு எலாம் - (தான்) விரும்பியபடியெல்லாம், விருப்பொடு - பக்தி யுடனே, உன்னினான் - தியானித்தான்; (எ - று.)

கருத்துஎன்றது - பாசுபதாஸ்திரம் பெறவேண்டுமென்கிற எண் ணத்தை. ஈண்டு - சுட்டுநீண்டபெயர். ஈண்டு தன்கருத்துஎன்பதை வினைத்தொகையாகக்கொண்டு, கூடிய தனது கருத்துடனே என்றுமாம். இளமதிமுடிப்புண்ணியன் என்றது - தன்திருவடிகளை அடைந்தார்க்குக் குறைதீர்த்துஅருளுந் தன்மையனென்பதுதோன்றவாகும்:கருத்துடையடை கொளி. சித்திரவாகனனென்னும் பாண்டியராசனதுமகளாகிய சித்திராங் கதை யென்பாளை அருச்சுனன் தீர்த்தயாத்திரைசென்றபொழுது மணஞ் செய்துகொண்டானாதலால், 'பாண்டிய னுயர்குலப் பாவை கேள்வன்'

எனப்பட்டான். சந்திரன் தக்ஷமுனிவரது புத்திரிகளாகிய அசுவினிமுதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் மணஞ்செய்துகொண்டு அவர்களுள் உரோகிணியென்பவளிடத்து மிகவுங்காதல்கூர்ந்து அவளுடனே எப்பொழுதுங் கூடிவாழ்ந்திருக்க, மற்றமகளிரது வருத்தம்நோக்கி அவனை 'க்ஷயமடைவாயாக' என்று சபித்த அம்முனிவரின்சாபத்தாற் சந்திரன் பதினைந்துகலைகளுங் குறைந்து மற்றைக்கலையொன்றையும் இழப்பதற்கு முன்னஞ் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் அருள்கூர்ந்து அவ்வொற்றைக்கலையைத் தன்தலையிலணிந்து மீண்டும் கலைகள்வளர்ந்துவரும்படி அனுக்கிரகித்தானெனபது,.கதை: குருவாகிய பிரகஸ்பதி தனது மனைவியான தாரையைச் சீடனாகியசந்திரன் புணர்ந்ததனாற் சினந்து சபித்த சாபத்தாற் சந்திரன் கலைகள் குறைந்தானென்றுங் கதைகூறுவர். (சரு)

46.—இரண்டுகவிகள் - குளகம்: அருச்சுனன் தவஞ்செய்வது தெரிந்து இந்திரன் அவனைப்பரிசோதிக்கக் கருதியமை கூறும்.

நிரந்தரமநேகநாணினைவுவேறற
வுரந்தருபுலன்களையொடுக்கியாயுத
மிரந்தனன்வரையிடையியற்றுநற்றவம்
புரந்தரனறிந்துமெய்புளகமேறவே.

(இ - ள்.) (அருச்சுனன்), அநேகம் நாள் - பலநாள், நிரந்தரம்-இடைவிடாமல், நினைவு வேறு அற - (சிவபெருமானையொழிய) வேறு எண்ணம் இல்லாதபடி, உரம் தரு புலன்களை ஒடுக்கி - வலிமையைக்கொண்ட ஐம்புலன்களை யடக்கி, ஆயுதம் இரந்தனன் - பாசுபதாஸ்திரத்தை வேண்டினவனாய்,—வரையிடை - கைலாசமலையிலே (இருந்து), இயற்றும் - செய்கின்ற, நல் தவம் - சிறந்த தவத்தை, புரந்தரன் - (அவன் தந்தையாகிய) தேவேந்திரன், அறிந்து - தெரிந்து, மெய் புளகம் ஏற - (மகிழ்ச்சியால்) உடம்பு மயிர்ச்சிலிர்ப்பை அடைய,—(எ - று.)— 'கூறி...உன்னினான்' என்று மேற்கவியில் முடியும்.

இனி இச்செய்யுளை மேற்செய்யுளோடு ஒரு தொடராகக் கொள்ளாமல் தனிநின்று முடிந்ததாகக்கொண்டு,அருச்சுனன் தான் வரையிடை இயற்றும் நல்தவத்தைப் புரந்தரன் அறிந்து மெய் புளகமேறுமாறு அநேக நாள் நிரந்தரம் வேறு நினைவற உரந்தருபுலன்களையொடுக்கி ஆயுத மிரந்தனன் என அந்வயித்து உரைப்பாருமுளர். அந்தரம் - இடையீடு: நிரந்தரம் - அஃது இல்லாமல் என்க. புலன்களுக்கு உரமாவது - மனத்தைத் தம்வழியிலே யிழுக்குந் தன்மை. புரந்தரன் - பகைவருடைய உடலை அல்லது பட்டணத்தையழிப்பவனென்பது, அவயவப்பொருள். ஒருக்கி என்றும் பாடம். (சசு)

47. குருவுடன்விரகுறக்கூறியீசனை
மருவுறுகொன்றைநாண்மாலைமௌலியைக்
கருமயில்பாகனைக்காண்டல்வேண்டிய
திருமகன்றவநிலைதெரியவுன்னினான்.

(இ - ள்.) ஈசனை - (யாவர்க்குந்) தலைவனும், மரு உறு - வாசனைமிகுந்த, நாள் - புதுமையான [அன்றுமலர்ந்த], கொன்றை - கொன்றைப்பூக்களினால் தொடுக்கப்பட்ட, மாலை - மாலையைச்சூடிய, மௌலியை - திருமுடியையுடையவனும், கரு மயில் பாகனை - கருமையான மயில்போலுஞ்சாயலையுடையஉமாதேவியை இடப்பக்கத்திற் கொண்டவனுமாகிய பரமசிவனை, காண்டல் - (பிரத்தியக்ஷமாகத்) தரிசித்தலை, வேண்டிய - விரும்பின, திருமகன் - (தனது) சிறந்த குமாரனான அருச்சுனனது, தவம் - தவத்தினது, நிலை - நிலைமையை, குருவுடன் - (தனது) ஆசாரியராகிய பிரகஸ்பதி பகவானுடனே, கூறி - சொல்லி, விரகு உற - தந்திரமாக, தெரிய - (அதனைப்) பரிசோதிக்கும்படி, உன்னினான் - எண்ணினான், (இந்திரன்); (எ - று)

குருஎன்ற வடசொல்லுக்கு - அஞ்ஞானமாகிய இருளைப்போக்குபவனென்பது, அவயவப்பொருள். மாலைமௌலி, கருமயில் - அன்மொழித்தொகைகள். தவநிலையென்பது, கூறி தெரிய என்ற இரண்டுக்குஞ் செயப்படுபொருளாம். பிருங்கியென்னும் மகாமுனிவன் பரமசிவனைமாத்திரம் பிரதக்ஷிணஞ் செய்யக்கண்ட பார்வதீதேவி, தன்பதியை நோக்கி 'முனிவன் என்னைப் பிரதக்ஷிணஞ்செய்யாமைக்கு ஏது என்ன?' என்று வினவ, உருத்திரமூர்த்தி 'இஷ்டசித்திபெற விரும்புபவர் உன்னையும், மோக்ஷம் பெற விரும்புபவர் என்னையும் வழிபடுவர்' என்ன, அதுகேட்ட தேவி பெருமானோடு பிரியாதிருக்குமாறு தவம்புரிந்து வாமபாகம்பெற்றாளென்பது, கதை. (சஎ)

48.—இந்திரனது உள்ளத்தில் நிகழும் ஆலோசனை.

அரும்பகைவலிமையாலவுணரூர்சுடும்
பெரும்பிறையணிசடைப்பிஞ்ஞகன்றன
திரும்பகழிகள்பெறவெண்ணியேகொலாம்
விரும்பியதித்தவம்வில்வலானரோ.

நான்கு கவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) வில் வலான் - விற்போர்த்தொழிலில் வல்லவனாகிய அருச்சுனன், இ தவம் - இப்படிப்பட்ட (அரிய) தவத்தை, விரும்பியது - (செய்ய) விரும்பினது, அரு பகை - (போக்குவதற்கு) அருமையான பகைமையினாலும், வலிமையால் - வல்லமையினாலும், அவுணர் ஊர் சுடும் - அசுரர்களது திரிபுரத்தை யெரித்த, பெரு பிறை அணி சடை - பெருமையையுடைய இளஞ்சந்திரனைத் தரித்த ஜடையையுடைய, பிஞ்ஞகன்தனது - பரமசிவனது, இரும் பகழிகள் - பெரிய (பாசுபதாஸ்திரம் முதலிய) பாணங்களை, பெற - (தான்) பெறுதற்கு, எண்ணியே கொல்ஆம் - விரும்பியே போலும்; (எ - று.)—அரோ-ஈற்றசை.

இனி, முதலடிக்கு - தேவர்முதலியோர்க்கு அழித்தற்கு அரிய பகையாகிய அசுரரது ஊரைத் தனது வலிமையாற் சுட்ட எனப் பொருளுரைத்தல், சிறப்பு. சுடும் - காலவழுவமைதி. பெருஞ்சடையென இயைத்தல் நேர்,

பிஞ்ஞகன் என்பதற்கு - அழிக்குங் கடவுள் என்றுஒரு சாராரும், பிஞ்ஞகம் என்பது தலைக்கோலமாதலால் சடைமுடியழகுடையவன் என்று மற்றொரு சாராரும் பொருள்கூறுவர். (சஅ)

49.—அருச்சுனனது மனத்தையும் தவத்துறுதியையும் தெரியவேண்ணிய இந்திரன் கயிலையங்கிரியிலுற்றறிய உபாயமெண்ணுதல்.

நற்றவத்துறுதியுநரன்கருத்துநா
முற்றறிகுவமெனமுன்னுஞ்சிந்தையான்
கற்றையஞ்சடையவன்கயிலையங்கிரி
யுற்றறிவுறுவதற்குபாயமுன்னினான்.

(இ - ள்.) (தேவேந்திரன்), நாம்—, 'நரன் - அருச்சுனனது, நல் தவத்து - நல்ல தவத்தினது, உறுதிஉம்-வலிமையையும், கருத்துஉம் - (அவனது) எண்ணத்தையும், முற்றும்-முழுவதும், அறிகுவம்-(பரிசோதித்து) அறிந்துகொள்வோம்,' என - என்று, முன்னும் - எண்ணுகிற, சிந்தையான் - மனத்தையுடையவனாய்,—கற்றை அம் சடையவன்-தொகுதியாகிய அழகிய ஜடையையுடைய பரமசிவனது, கயிலை அம் கிரி - அழகிய கைலாச மலையை, உற்று - பொருந்தி, அறிவுஉறுவதற்கு - சோதித்துஅறிவதற்கு, உபாயம் - உபாயத்தை, உன்னினான் - ஆலோசித்தான் ; (எ - று.)

கற்றையஞ்சடை, கயிலையங்கிரி, அம் - சாரியையுமாம். அறிவுறுவதற்கு என்ற இடத்து 'உறு' என்றவினை துணிவுப்பொருளைக காட்டும். (சக)

50.—இந்திரன் அருச்சுனனெண்ணத்தை யறியுமாறு உருப்பசி முதலிய தேவமாதரை யேவுதல்.

தூநகையுருப்பசியரம்பைதொண்டைவாய்
மேனகைதிலோத்தமையென்றுவேலையின்
மானெனமயிலெனவந்தமாதரீ
ரானவாறறிதிர்போயவன்றனெண்ணமே.

(இ - ள்.) தூ நகை-வெண்மையான புன்சிரிப்பையுடைய, உருப்பசி - ஊர்வசியும், அரம்பை - ரம்பையும், தொண்டை வாய் - கொவ்வைப்பழம் போற் சிவந்த அதரத்தையுடைய, மேனகை - மேனகையும், திலோத்தமை- திலோத்தமையும், என்று - என்று பெயர்சொல்லப்பட்டு, வேலையின் - திருப்பாற்கடலினின்றும், மான் என-மான் போலவும், மயில் என - மயில் போலவும், வந்த - தோன்றின, மாதரீர் - பெண்களே ! (நீங்கள்), போய் - சென்று, அவன் தன் எண்ணம் - அவ்வருச்சுனனது கருத்து, ஆன ஆறு - உள்ள விதத்தை, அறிதிர் - அறிவீர்களாக ; (எ - று.)—இது, இந்திரன் தேவமாதரை நோக்கிக் கூறியது.

சிரிக்குங் காலத்தில் வெளுப்பாகிய பற்களினொளி சிறிது வெளித் தோன்றுதலால், அதன் தன்மையைச் சிரிப்பின்மேலேற்றி, 'தூநகை' என்றார் : இனி சுத்தமான பற்களெனவும் உரைக்கலாம். உருப்பசி - பதரிகாச்சிரமத்தில் தவஞ்செய்து கொண்டிருந்த நாராயணமகாமுனிவ

ரது ஊருவினின்றும் [தொடையினின்றும்] தோன்றினவள்; இவள் நாராயண முனிவரது தவத்தைக் கெடுக்கும்படி இந்திரனு லேவப்பட்டு வந்த தேவஸ்திரீகளை மோகிப்பிக்கும்பொருட்டு அம்முனிவராற் சிருஷ்டிக்கப் பட்டவள். திலோத்தமை-அழகிய மகளிர்களது உடம்பழகுகளில் எள்ளளவு எள்ளளவாக எடுத்துத் திரட்டிப் பிரமதேவரால் மேலானவளாகப் படைக்கப்பட்டவள்; இவர்களெல்லாம் பின்பு இந்திரனிடம் இருந்து, துருவாசமுனிவரின் சாபத்தாற் கடலிலொளித்த அவன் செல்வங்களுடனே தாமும் ஒளித்து, பாற்கடல்கடைந்த காலத்து அதனினின்றுந் தோன்றின ரென்பான் 'வேலையில் வந்த மாதரீர்' என்றான். வேலை - கடற்கரை : கடலுக்கு இலக்கணை. ஆனவாறு - உங்களாலானமட்டி லெனினுமாம்.(ரு0)

51.—அருச்சுனன் தவஞ்செய்யுமிடத்துக்குத் தேவமாதர் செல்லுதல்.

என்றுகொண்டிந்திரனியம்பமற்றவன்
றுன்றியபேரவைத்தோற்றமிக்கவர்
குன்றிரண்டெடுப்பதோர்கொடிமருங்குலார்
சென்றனரவ்வுழிச்செய்யவாயினர்.

(இ - ள்.) இந்திரன் - தேவேந்திரன், என்று இயம்ப - என்று இவ்வாறு சொல்ல, அவன் - அவ்விந்திரனுடைய, துன்றிய பேர் அவை - (தேவர் முதலியோர்) நெருங்கிய பெரிய சபையில், தோற்றம் மிக்கவர் - சிறப்புமிகுந்தவர்களும், குன்று இரண்டுஎடுப்பது ஓர் கொடி மருங்குலார்- இரண்டுமலைகளைத் தாங்குவதொரு பூங்கொடிபோன்ற இடையையுடையவர்களும், செய்ய வாயினர் - சிவந்த வாயையுடையவர்களுமாகிய தெய்வப் பெண்கள், அ உழி - (அருச்சுனன் தவஞ்செய்கின்ற) அந்த இடத்துக்கு, சென்றனர் - புறப்பட்டுப் போவாராயினர்; (எ - று.)

என்றுகொண்டு என்பதில், கொண்டு - அசை: "என்று கொண்டிணைய கூறி யிணையடி யிறைஞ்சி" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க. கொடியையெடுப்பதோர் குன்றன்றிக்கே, குன்றுகளை யெடுப்பதோர் கொடிஎன ஒருவகைச்சாதுரியந் தோன்றக் கூறினர். குன்றிரண்டெடுப்பதோர் கொடி- இல்பொருளுவமை. செய்ய - குறிப்புப் பெயரெச்சம். (ருக)

52.—தேவமாதர் மன்மதனைநினைக்க அவன் தன்படையுடன் அங்கு வருதல்.

காமனைநினைந்தனர்காமராசனு
மாமலர்வாளியுமதுரசாபமுந்
தேமருமலர்க்கையிற்சேர்த்திச்சேனையோ
டாமுறைபுகுந்தனனரனுமஞ்சவே.

(இ - ள்.) (அத்தேவமாதர்), காமனை - மன்மதனை, நினைந்தனர் - (அங்கு வரும்படி) எண்ணினார்கள்; (எண்ணவே), காமராசன்உம்-மன்மத ராசனும், மா மலர் வாளிஉம் - சிறந்த பூக்களாகிய அம்புகளையும், மதுரம் சாபம்உம் - இனிப்பான (கரும்பாகிய) வில்லையும், தே மரு மலர் கையில் - தேன் பொருந்திய தாமரைப்பூப்போன்ற (தன்) கைகளிலே, சேர்த்தி-எடுத்

துக் கொண்டு, சேனையோடு - (தனது) சேனையாகிய அம்மகளிர்களுடனே, அரன் உம் அஞ்ச - (இவன் வருகிறமிடுக்கை நினைத்துச்) சிவனும் அஞ்சும் படி, ஆம் முறை - (போருக்கு) உரிய முறைப்படியே, புகுந்தனன் - (அருச்சுனன் தவஞ்செய்யுமிடத்துப்) பிரவேசித்தான் ; (எ - று.)

காமன் - யாவராலும் விரும்பப்படுங்கட்டழகுடையவன் : அல்லது வேட்கையை விளைப்பவன். மன்மதன் இடக்கையில் வில்லையும் வலக்கையில் அம்பையுஞ் சேர்த்தினுனென்க. மகளிரை மன்மதன்சேனை யென்பர். மலர்வாளி - அசோகமலர், தாமரைமலர், மாமலர், மல்லிகைமலர், நீலோற்பலமலர் என்னும் ஐந்துமாம். ஒரு காலத்தில் திருக்கைலாயத்திற் பரமசிவன் சனகர்முதலியரால்வருக்கும் யோகநிலையை உணர்த்துதல் நிமித்தம் தாம் யோகஞ்செய்துகொண்டிருக்கையிற் பிரமனேவலால் மலரம்புகளை எய்து தவத்தைக்கெடுக்கலுற்ற மன்மதனைச் சினந்து நெற்றிக்கண்ணை விழித்து அதன்நெருப்புக்கு இரையாய் உடம்பு எரிந்து சாம்பராய்ப்போம்படி செய்தனனென்பதும், உடனே மன்மதனுடைய மனைவியாகிய ரதிதேவி தன்கணவன் தகிக்கப்பட்டதனுல் மிகவருந்திப் பரமசிவனை அடைந்து பிரார்த்திக்க, அப்பிரான் அவளுக்குமாத்திரம் ரூபமுடையவனுகவும், மற்றையோர்க்கு ரூபமில்லாதவனுகவும் இருக்கும்படியும் அருள்செய்தனனென்பதும் புராணகதைகள். அவ்வாறு மன்மதன்சிவபெருமானிடத்து அடிபட்டிருந்தும், அதனைமறந்தான்போல் மிக்க மிடுக்குடன் வந்தானென்பார் 'அரனுமஞ்சவந்தான்' என்றூர். இனி, அரனையஞ்சுவான் என்ற பாடத்திற்கு, தன்னை முன்னொருகால் நெற்றிக்கண்ணின் நெருப்பினுற் பரமசிவன் எரித்து அழித்ததனைக் கருதி மன்மதன் அரனை அஞ்சுவானுனனென்க.(ருஉ)

53.—இதுவும் அது.

செந்தமிழ்வரைதருதேரான்செக்கர்வா
னந்தியானையன்மதியாதபத்திரன்
சிந்துவெம்முரசினன்செவ்விகூரவே
வந்தனன்காலமும்வசந்தமாக்கியே.

(இ - ள்) (மன்மதன்), செம் தமிழ் வரை - செவ்விய தமிழ்வழங்கும் பொதியமலை, தரு - தந்த, தேரான் - (தென்றற் காற்றுகிய) இரதத்தையுடையவனும், செக்கர் வான் - செவ்வானத்தோடுகூடிய, அந்தி - மாலைப்பொழுதாகிய, யானையன் - யானையையுடையவனும், மதி - பூர்ண சந்திரனுகிய, ஆதபத்திரன் - வெண்கொற்றக்குடையையுடையவனும், சிந்து - கடலாகிய, வெம் முரசினன் - (பகைவர்களுக்குக்) கொடிய பேரிகையையுடையவனுமாய், காலம் உம் வசந்தம் ஆக்கி - காலத்தையும் வசந்தருதுவாகச்செய்துகொண்டு, செவ்வி கூர - அழகுமிக, வந்தனன் - (அருச்சுனனுடன் பொருதற்கு) வந்தான் ; (எ - று.)

செந்தமிழ் - சுத்தமான தமிழ். சிற்றகத்தியம் பேரகத்தியம் என்னுந் தமிழ்நூலை யியற்றித் தமிழ்ப்பாஷையை வளர்த்தவராகிய அகஸ்தியமா

முனிவர் எழுந்தருளியிருக்குமிடமாதல்பற்றி, மலயமலை 'செந்தமிழ்வரை' எனப்பட்டது. மன்மதனுக்குத் தேர் தென்றலாதலாலும், அது மலய மலையிலிருந்து வருவதாலும், தென்றல் 'செந்தமிழ்வரைதருதேர்' எனப்பட்டது. சித்திரை வைகாசியாகிய இரண்டுமாதங்கள், வசந்தகாலம்எனப் படும். இளந்தென்றற்காற்றும் அந்திப்பொழுதும் பூரணசந்திரனும் கடலொலியும் முதலியன காமத்தை மூட்டுதற்குக் கருவியாயிருத்தலால், இங் ஙனம் கூறியது. வேனிற்காலத்துக்குரிய தேவதையாகிய வசந்தனை மன்மதனுக்கு நண்பனென்று நூல்கள் கூறும். "தொடையிலஞ்சி மஞ்ச ளிளஞ்சோலைபடைவீடு, படைமங்கையர் கமுகம்பாளை - யிடுகவரி, காளாஞ்சிமல்லிகையாங் காரிகையீர் மாரனுக்கு, வாளா மோலைப்பூவு மால்," "ஆலைக்கரும்புசிலை ஐங்கணைபூநாண் சுரும்பு, மாலைக்கிளிபுரவி மாருதந்தேர்-வேலை, கடிமுரசங்கங்குல் கைவிறுகுயில்காளங், கொடிமகரந் திங்கள்குடை," "குடைகவித்தநன்கஞ்சங் கோதையுங்குருகப்பூ. கடியுமசோகந் தளவுகாவி - படையெடுத்து, வாங்காச் சமர்விளைக்கு மாரனுக்கெப் போது மங்கை, நீங்காக் கணையாகினை" என்பவற்றை இங்கே யறிக. (ருக)

## வேறு

### 54.—மந்தமாருதம் வீசுதல்.

கந்தனை யளித்த கன்னியோர் பாகங் கலந்தமெய்க் கண்ணுதற் கெதிராய்ச், செந்தமி ழுரைத்த குறுமுனி யிருந்த தெய்வமால் வரையிடைத் தோன்றி, யிந்துவு மரவு முறவுசெய் முடிமே லிருந்த மந் தாகினி யருவி, வந்திழி புனலுஞ் சந்தனங் கமழ வந்தது மந்த மாருதமே.

(இ - ள்.) கந்தனை - முருகக்கடவுளை, அளித்த - பெற்ற, கன்னி - பார்வதீதேவி, ஓர் பாகம் கலந்த - தனது வாமபாகத்திலே சேரப்பெற்ற, மெய் - திருமேனியையுடைய, கண்நுதற்கு - நெற்றிக்கண்ணனாகிய சிவ பெருமானுக்கு, எதிர் ஆய் - ஒப்பாக, செந் தமிழ் உரைத்த குறுமுனி இருந்த - செந்தமிழை வெளியிட்ட குறுகிய முனிவனான அகத்தியர் தங்கி யிருந்த, தெய்வம் மால் வரை இடை - தெய்வத்தன்மையுள்ள பொதியமலை யின்நடுவினின்று, தோன்றி-பிறந்து,—இந்துஉம் அரவுஉம் உறவு செய் முடி மேல் இருந்த மந்தாகினி அருவி வந்து இழி புனல்உம் சந்தனம் கமழ - சந் திரனும் (அதற்குப் பகையாகிய) பாம்பும் (பகையற்று) உறவுகொள்ளுதலை [பொருந்தியிருத்தலை]ச் செய்கின்ற (சிவபெருமானுடைய) சிரசின்மீதிருந்த கங்காநதியின் அருவியாகவந்து இழிகின்றநீரும் சந்தனமணம் வீசுமாறு, மந்தமாருதம் வந்தது—; (எ - று.)

அருச்சுனனுடைய தவநிலையைச் சோதிக்குமாறு இந்திரனாலேவப்பட்ட தேவமாதருடனே மன்மதன் இளவேனிலையும் துணையாகக்கொண்டு அக் கயிலையில் வந்திருத்தலால், அதற்குவுற்பக்காமோத்தீபகப்பொருளான மந்த மாருதமும் வீசலாயிற்றென்க. பார்வதிதேவியின் திருமணத்தில் தேவர்

முதலியோர் பலரும் ஒருங்கேதிரண்ட பாரத்தால் வடதிசைதாழ்ந்து தென் திசை யுயர, அதனைச் சரிசெய்தற்கு எம்மோடொத்த அகத்தியனேயேற்றவ னென்று சிவபிரானால் அனுப்பப்பெற்ற அகத்தியமுனிவர் சேர்ந்திருந்த தனால், பொதியமலை 'குறுமுனிபிருந்த தெய்வ மால்வரை' எனப் பட்டது. தென்றல் பொதியமலையிலிருந்து வருவது என்பதும், அம்மலை 'சந்தனசைலம்' என்று பெயர்பெறும்படி சந்தனமரம் மிக்கிருக்கப்பெற்றத னால் அங்குநின்றும் வீசுந் தென்றல் சந்தனமணமுடையதா யிருக்குமென் பதும் இங்குக் கருதத்தக்கன. தென்றலின் சந்தனசுகமணத்தை உயர்வு நவிற்சியணியால், 'மந்தாகினியிழிபுனலும் சந்தனசுகமழ வந்தது' என்றார்.

இதுமுதற் பதினன்குகவிகள் - ஒன்று மூன்று ஐந்து ஆறுஞ்சீர்கள் விளச்சீர்களும், மற்றவை மாச்சீர்களு மாகிவந்த எழுசீராசிரியவிருத்தங்கள்.

55.—வசந்தகாலமும் இயைதல்.

வம்பறுமதுரப்பல்லவங்கோதிமாமகரந்தமாகந்தக், கொம்பெ லாமிருந்துகுயிலினங்கூவக்கொற்றவெஞ்சிலையினன்முன்னாள், சம் பராசுரனைவென்றவீரனைப்பைந்தாமமாமணிமுடிசூட்டி,யெம்பிரான் முனிவுக்கஞ்சலென்பதுபோலியைந்ததுவசந்தகாலமுமே.

(இ - ள்.) வம்பு அறு - வாசனைநீங்காத, மதுரம் - இனிய, பல்லவம் - தளிர்களை, (தமது வாயலகால்), கோதி —, மா மகரந்தம் மாகந்தம் கொம்பு எலாம் இருந்து - மிக்க மகரந்தத்தையுடைய தேமாமரத்தின் கிளைகள் தோறும் தங்கியிருந்து, குயில் இனம் கூவ - குயிலின்திரள் இன்னிசையைச் செய்யாநிற்க, கொற்றம் வெம் சிலையினல் முன்னம் சம்பராசுரனை வென்ற வீரனை - வெற்றிபொருந்திய கொடிய (கன்) வில்லினால் முன்பு சம்பரா சுரனை வென்ற வீரனாகிய மன்மதனை, 'பைந் தாமம் மா மணி முடி சூட்டி - வாடாத மாலையோடு சிறந்த இரத்தின கிரீடத்தைக் கவித்து, எம்பிரான் முனிவுக்கு அஞ்சல் - எமதுபெருமானாகிய சிவபெருமானுடைய கோபத் திற்கு அஞ்சாமலிருக்க', என்பதுபோல் - என்று சொல்வதுபோல, வசந்த காலமும்—, இயைந்தது - வந்து கூடியது; (எ - று.)

'நான் துணையாக இருக்கிறேன்: இது,உன்னுடைய இராச்சியம்; இதனை, குயிலின் இன்னிசையாகிய மங்களவாத்தியம் ஒலிக்க மணிமுடி சூடி அரசு புரிக' என்று மன்மதனுக்குக் கூறுவதுபோல அந்தமன்மதனுக்குத் தோழ னான வசந்தகாலமும் வந்த தென்பதாம். அஞ்சல் - எதிர்மறை வியங் கோள். மகரந்தம் - பூந்தாது. (ருரு)

56.—ஆங்குள்ளமரங்களும் தவஞ்செய்யும் அருச்சுனனைப்போலு மெனல்.

பூதலைநந்நிலையும்புலத்தடைநெறிநிக்கிப்புரிசடை புடன்புருகூதன், காதலம்புதல்வனருந்தவம்புரிதல்கண்டுபோலிப்பலவும்போல, மாதிரந் தொறுஞ்செம்பல்லவச்செந்தீவளர்த்துவான்மணியினைநோக்கிப், பா தமொன்றினினின்றுயர்ந்தனவொளிகூர்பழுமரமுப்பாதவங்களுமே.

(இ - ள்.) ஒளி கூர் பணை உடை பாதவங்கள் உம் - ஒளிமிக்க கிளைகளையுடைய மரங்களும்,—பூதம் ஐந்தினை உம் - பஞ்சபூதங்களையும், புலத்துடன் - (ஐம்பொறிகட்குஉரிய) ஐம்புலன்களோடே, ஒடுக்கி - ஒடுங்கச்செய்து, புரி சடையுடன - கட்டப்பட்ட சடையுடனே, புருகூதன் காதல் அம் புதல்வன் - இந்திரனுடைய அன்பிற்குரிய அழகியபுதல்வன் [அருச்சுனன்], அரு தவம் புரிதல் கண்டு - (செய்வதற்கு)அரிய தவத்தைச் செய்தல்கண்டு, பாவிப்பன போல - (தாமும் அவனை) ஒத்து நடப்பனபோல,—மாதிரம்தொறுஉம் - திக்குகள்தோறும், செம்பல்லவம் செந்தீ வளர்த்து - செந்தளிராகியசெந்நிறத் தீயைமூட்டி, வான்மணியினை நோக்கி - சூரியனைப்பார்த்துக்கொண்டு, பாதம் ஒன்றினில் நின்று - ஒருதாளால்நின்றுகொண்டு, உயர்ந்தன - ஓங்குதலையடைந்தன : (எ - று.)

நல்லாருடையசேர்க்கையினால் மற்றோரும் அந்நல்லவரைஅனுசரிக்கப் பார்க்கும் உலகவியல்பை, மரங்களிலேற்றிக் கூறினார். இது - சிலேடைமூலமாகவந்த தற்குறிப்பேற்றவணி : இதற்குப் பல்லவச்செந்தீஎன்ற உருவகம் அங்கமாய்வந்தது. அருச்சுனன் நாற்புறத்திலும் நான்குஅக்கினிகளும் வானத்திற் சூரியனாகிய அக்கினியும் ஆகப் பஞ்சாக்கினிமத்தியிலே ஒற்றைக்காலினால்நின்று தவஞ்செய்து ஓங்குதலையடைதல்போல, நாற்புறத்திலும் பல்லவமாகிய செந்தீயைவளர்த்து வான்மணியினைநோக்கியவண்ணம் தமக்குஉள்ளஒற்றைத்தாளால் நின்று மரங்களும் ஓங்கின என்க. ஓங்குதல் - மேன்மையடைதலும், உயர்ந்துவளர்தலும். பாதமொன்று - ஒற்றைக்காலும் மரத்தின் அடித்தண்டும். பாதபம்என்ற வடசொல், பாதவம் எனத்திரிந்தது : தாளால்நீரையுண்பதுஎன அவயவப்பொருள். பூதமைந்தினையும் புலத்துடனொடுக்குதலாவது - ஐம்பூதங்களுக்கும் முறையே உரிய குணமான மணம் சுவை ஒளி ஊறு சத்தம்என்கிற ஐந்து விஷயங்களையும் மெய்வாய்கண்மூக்குச்செவியென்னும் ஐம்பொறிகளை நுகரவொட்டாது செய்தல் : கடவுளையே பற்றாசாகக்கொண்டு புரியுந் தியானத்தில் மனம் ஐம்பொறிவழியிற் செல்லாமல் கடவுளிடத்திலேயேசெல்வதனால் இங்ஙனங் கூறியது. (நிசு)

57.—அங்குள்ள வாவியும் சுனையும் தவஞ்செய்யும் அருச்சுனனைப் போலு மெனல்.

உள்ளுறக்கலக்கமறத்தெளிந்தசலத்துயர்தலைமுழையினின்றருவி, வெள்ளமொத்தமுதங்கரையறப்பொழியவெம்மையற்றளியுடன் குளிர்ந்து,புள்ளுடைக்கொடியோரிருவருங்காணப்புண்ணியன்பொருப்பிடைத்தவஞ்செய், வள்ளலொத்தனவச்சாரலைச்சூழ்ந்துவயங்கு நீள்வாவியுஞ்சுனையும்.

(இ - ள்.) அ சாரலை சூழ்ந்து வயங்கு - அந்தக்கைலைமலைச்சாரலைச் சுற்றி விளங்குகின்ற, நீள் வாவி உம் சுனை உம் - நீண்டநீர்நிலைகளும் சுனையும்,— உள் உற - உள்ளேபொருந்த, கலக்கம் அற - கலக்கம்நீங்க, தெளிந்து—, அசலத்து - மலையின், உயர் தலை முழையில்நின்று - ஓங்கியசிகரத்தின் முழைஞ்

சிலிருந்து (பெருகுகின்ற), அருவி வெள்ளம் ஒத்து - அருவிப்பெருக்குப் பெருகுவதைப்போன்று, அமுதம் கரை அற பொழிய - அமுதத்தை (ச்சிரசி னின்று)எல்லையில்லாமற்பொழிய, வெம்மை அற்று—வெப்பம்நீங்கி,அளியுடன் குளிர்ந்து-கருணையோடு குளிர்ச்சிபெற்று, புள் உடை கொடியோர் இருவர் உம்-அன்னத்தையும் கருடனையும் கொடியிலேயுடையரான பிரமவிஷ்ணுக்க ளென்ற இரண்டுதேவர்களும், காணா-காணமாட்டாத, புண்ணியன் - புண் ணியமூர்த்தியாகிய சிவபிரானது, பொருப்பிடை - கைலாசமலையிலே, தவம் செய்-(சிவபெருமானைநோக்கித்) தவஞ்செய்கின்ற, வள்ளல் ஒத்தன- உதாரகுணமுள்ளவனை அருச்சுனனையொத்தன ; (எ - று.)

தவஞ்செய்யும் அருச்சுனன் அங்கியாற்சிரசிலிருந்து மதியமு தம்பெருக அதுவே உணவாகக்கொண்டு உடல்குளிர்ந்து தவஞ்செய்யும் யோகியாயிருப்பதுபோல, அம்மலைச்சாரலிலுள்ள வாவியும் சுனையும் மலைச் சிரசிலிருந்து பெருகும்அமுதம்போன்ற நீரால் நிரம்பி வெம்மையறக்குளிர்ந் திருந்தன: அன்றியும், அவை உள்ளுறக்கலக்கமறத்தெளிந்திருநதன என்க : இதுவும் - சிலேடைமூலமாகவந்த தற்குறிப்பேற்றவணியே. அருச்சுனனைக் குறிக்கும்போது அசலத்துயர்தலைமுழைஎன்பதற்கு - அசைவில்லாதஉட லின்உயர்ந்தசிரத்திலுள்ள பிரமரந்திரம் என்க. தாமே முதற்கடவுளென்று பிணக்குக்கொண்ட அரிபிரமற்குஇடையே சிவபெருமான் அனற்பிழம்பு வடிவாய்த் தோன்றி இதன்அடிமுடிகண்டவரே முதல்வரென்ன, பிரமன் அன்னப்பறவையுருவாய் விண்பறந்தும் அரி வராகவடிவாய் மண்ணிடந்தும் அடிமுடியைக் காணாதவராயினரென்பது, வரலாறு. (௫எ)

58.—அருச்சுனன் வளர்த்த செந்தழலின் சிறப்பு.

*நீறுபட்டிலங்குமெய்ந்நிலவொளியானெஞ்சினிலிருளினையகற் றி,மாறுபட்டிடுமைம்புலன்களுமொடுக்குமாதவன்வளர்த்தசெந்தழ லாற்,கூறுபட்டுமையோடொருவடிவானோன்குன்றுசூழறைபொறை யனைத்து, மாறுபட்டுருகிப்பெருகியோடினவாலம்மலைவெள்ளியாத லினால்.*

(இ - ள்.) நீறு - விபூதி, பட்டு - பூசப்பட்டு, இலங்கும் - விளங்கு கின்ற, மெய் - (அருச்சுனனது) உடம்பின், நிலவு ஒளியால் - வெண்ணிற வொளியினால், நெஞ்சினில் - மனத்திலுள்ள, இருளினை - அஜ்ஞானமாகிய இருட்டை, அகற்றி - போக்கி, மாறுபட்டிடும் - (நல்வழியிற் செல்லவொட் டாது) மாறுபடுந்தன்மையுள்ள, ஐம்புலன்கள்உம் ஒடுக்கும்-ஐம்பொறிகளை யும் ஐம்புலன்களின் மேற்செல்லவொட்டாது ஒடுங்கச்செய்கின்ற, மா தவன்- பெருந்தவசியாகிய அருச்சுனன், வளர்த்த - (நாற்புறத்திலும்) மூட்டிக் கொழுந்துவிட்டெரியச் செய்த, செந் தழலால் - செந்நிறமுள்ள அக்கினி களால், கூறு பட்ட உமையோடு ஒருவடிவு ஆனோன் - (தனது) பாகமாகப் பொருந்திய உமாதேவியுடனே ஒருவடிவு ஆன சிவபெருமானுடைய, குன்று - கைலாசமலையிலே, சூழ் - சூழ்ந்துள்ள, அறை - பாறைகளும்,

பொறை - துறுகல்லுமாகிய, அனைத்தூஉம் - எல்லாம், மாறுபட்டு - முன்னையநிலை [கெட்டியாயிருந்தநிலை] வேறாகி, உருகி—, பெருகி ஓடின—: (ஏனெனில்), அம்மலை வெள்ளி ஆதலினால்—; (எ - று.)

வெள்ளிமலை நெருப்பினாலுருகுதல், இயல்பு என்க. திருநீற்றினால் மனத்தின் மாசுபோமென்பதை, திருநீற்றுப்பதிகத்தாலும் அறிக. நிலவினால், இருள் நீங்குமென்ற இயல்பு, இங்குக் கருதத்தக்கது. (ருஅ)

59.—அருச்சுனன் தவத்தைக்குலைப்போமென்றுவந்த தேவமங்கையர் பஞ்சாக்கினிமத்தியில் தவம்புரியும் அருச்சுனனைக் காணுதல்.

அலைத்தடங்கடலிலமுதொடுற்பவித்தாங்கமரர்வாழ்பதிகுடிபுகுந்தோர், குலைத்துமென்றெண்ணியொருவருக்கொருவர்கொடியிடைநுடங்கவந்தந்த, மலைத்தடநெருங்கப்புகுந்தனர்குயிலுமயூரமுமானுமேயனையார், நிலைத்தவம்புரிவோனைவகைநெருப்பினடுவுறநின்றவா கண்டார்.

(இ - ள்.) அலை - அலைகளையுடைய, தட கடலில் - பெரிய சமுத்திரத்திலே, அமுதொடு - அமிருதத்துடனே, உற்பவித்து-தோன்றி, அமரர் வாழ்பதி - தேவர்கள் வாழும் ஊரான அமராவதியிலே, குடிபுகுந்தோர் - குடிபுகுந்தவரான, குயில்உம் மயூரம்உம் மான்உம் ஏ அனையார் - (குரலாற்) குயிலையும் (சாயலால்) மயிலையும் (நோக்கினால்) மானையுமே யொப்பவரான தேவமாதர்,— 'குலைத்தும் - (இவ்வருச்சுனனுடைய தவத்தை) அழிப்போம்', என்று எண்ணி - என்று நினைத்து,— ஒருவருக்கு ஒருவர் - ஒருத்தரினும் ஒருத்தர், (முற்பட்டு), கொடி இடை நுடங்க - (தமது) கொடி போன்ற இடை துவள, வந்து—,— அந்த மலை தடம் நெருங்க புகுந்தனர் - அந்த மலைச்சாரலை நெருங்கப் புகுந்தவர்களாய், நிலை தவம் புரிவோன் - நிலையான தவத்தைச் செய்பவனான அருச்சுனன், ஐவகை நெருப்பின் நடு உற - பஞ்சாக்கினிமத்தியிலே பொருந்த, நின்ற ஆ - நின்ற வகையை, கண்டார்—; (எ - று.)

புகுந்தனர் - முற்றெச்சம். ஆங்கு - அசை. (ருக)

60.—தேவமாதர் பந்தடித்தல்முதலிய விளையாடல்களை அங்குச் செய்தல்.

அந்தரத்தமரர்துந்துபிமுழங்கவநங்கதுந்துபியெதிர்முழங்க, வந்துபொற்சிலம்புமேகலைவிதமுமலர்க்கைவெள்வளைகளுமுழங்கப், பந்தடித்திடுவாரம்மனையெறிவார்பயில்கழங்காடுவார்நெற்றிச், சிந்துரத்திலகந்திட்டுவாராகித்தனித்தனிதிசைதொறுஞ்சூழ்ந்தார்.

(இ - ள்.) அந்தரத்து - வானத்திலே, அமரர் துந்துபி - தேவர்களின் துந்துபி யென்னும் பறை, முழங்க - ஒலிக்கவும், எதிர்-(அதற்கு) நேராக, அநங்க துந்துபி - மன்மதனது பேரிகை, முழங்க - ஒலிக்கவும், வந்து—, பொன் சிலம்புஉம் - பொன்னாலாகிய சிலம்பென்னுங் காலணியும், மேகலை விதம்உம் - இடையணிவகைகளும், மலர் கை வெள் வளைகள்உம்-தாமரைமலர்போன்ற கைகளிலணிந்த வெள்ளிய சங்குவளையல்களும், முழங்க -

ஒலிக்கவும், பந்து அடித்திடுவார்—; அம்மனை எறிவார் - அம்மானையை உயரவெறிந்து விளையாடுவார் : பயில் கழங்கு ஆடுவார்-(தாம்) பழகிய கழற்சிக்காயை யாடுவார்: நெற்றி - நெற்றியிலே, சிந்தூரம் திலகம்-சிந்தூரமென்கிற செம்பொடியினாலான திலகத்தை, தீட்டுவார் ஆகி - அணிவாருமாய், தனித்தனி—, திசைதொறு உம் - திக்குகளிலெல்லாம், சூழ்ந்தார்-சூழ்ந்து கொண்டார்கள ; (எ - று.)

தேவமாதர் அருச்சுனன் தவம்புரியும் மலைச்சாரலில், அவன் மனத்தைத் தவத்தினின்றும் கலைக்கப் பந்தடித்தல் முதலிய விளையாடல் செய்தலையும் திலகந் தீட்டுதல் முதலிய அலங்காரத்தொழில் செய்தலையும் மேற்கொண்டா ரென்பதாம். (௬0)

61.—இதுமுதல் மூன்றுகவிகள் - பின்னுந் தேவமாதர்புரிந்த பல்வகை இங்கிதர் செயல்களைக் கூறும்.

குயிலொடுகூவிக்கிஞ்சுகமலர்ந்துகொஞ்சுபைங்கிளிகளையழைப்பார், மயிலினநடிக்கத்தாமும்வண்கலாபமணியணியொளியெழநடிப்பார், வெயில்விடுபரிதிமதியுடன்வலஞ்செய்விடரகமுழுவதுமொலிப்பக், கயிலையங்கிரியின்சாரலோவெம்மூர்க்கடவுளாலயமெனக்களிப்பார்.

(இ - ள்.) கிஞ்சுகம் மலர்ந்து - முருக்கமலர்போன்ற (தம்)வாயைத் திறந்து, குயிலொடுகூவி - குயிலுடனே மாறுபட்டுக்கூவி, கொஞ்சு-கொஞ்சுந்தன்மையுள்ள, பைங் கிளிகளை - பசியநிறமுள்ள கிளிகளை, அழைப்பார்—; மயில்இனம் நடிக்க - மயிலின்திரள் நடனஞ் செய்யாநிற்க, தாமும்—, வள் கலாபம் - வளப்பமுள்ள கலாபமென்னும் இடையணியினின்றும், மணி அணி ஒளி எழ - மணியினது அழகியஒளி எங்கும்வீசுமாறு, நடிப்பார் - நடனஞ்செய்வார : வெயில் விடு பரிதி-வெயிலைவீசுகின்ற சூரியன், மதியுடன்-சந்திரனுடனே, வலம்செய்-பிரதட்சிணஞ் செய்கின்ற, விடர் அகம் முழுவது உம்-மலைமுழைஞ்சினிடம் முழுதும், ஒலிப்ப-ஒலிபெறுமாறு, கயிலைஅம் கிரியின் சாரல்ஓ-(இது) அழகிய கயிலைமலையின் சாரலோ, (அன்று): எம் ஊர் கடவுள ஆலயம் - எமது ஊராகிய தேவர்களின் இருப்பிடமே (இது), என - என்றுசொல்லி, களிப்பார் - மகிழ்ச்சிமிகொண்டச் சிரிப்பார் ; (எ - று.)

இனி, கயிலைக்கிரிச்சாரலோ எம்மூர்க் கடவுளாலயம் என்று.சொல்லிக் களிப்பாரெனினுமாம். விடர் - குகை. வண்சிலம்பும் பாடம். (௬௧)

62. கூந்தன்மாமுகிலைக்குலைத்துடன்முடிப்பார்குங்குமங்கொங்கைமேலணிவா,ரேந்துபேரல்குற்கலைநெகிழ்த்துடுப்பாரிட்டவுத்தரியமாற்றிடுவார், பூந்துகினனையநறுஞ்சுனைபடிவார் புழுகுசந்தனநறும்பனிநீர், காந்திகொடெறிவார் காமவேதத்தைக் கருங்கடைக்கண்களான்மொழிவார்.

(இ - ள்.) கூந்தல் மா முகிலை - கூந்தலென்று சொல்லப்படுகின்ற கரியமுகிலை, குலைத்து - அவிழ்த்து, உடன் முடிப்பார் - உடனே

முடிப்பார்கள்: குங்குமம்-குங்குமக்குழம்பை, கொங்கைமேல்-(தமது) தனங்களின்மீது, அணிவார்—; வந்து பேர் அல்குல் கலை நெகிழ்த்து - வந்திய பெரிய அல்குலைச்சூழ்ந்துள்ள ஆடையைச் சிறிது அவிழ்த்து, உடுப்பார்-(மீண்டும்) உடுத்துக்கொள்வார்கள்: இட்ட உத்தரீயம்-மேலே போகட்டுக்கொண்டுள்ள மேலாடையை, மாற்றிடுவார் - எடுத்து வேறொரு மேலாடையையணிவார்: பூந் துகில் நனைய-(தமது) அழகியஅரையாடைநனையும்படி, நறுஞ் சுனை படிவார் - நறிய சுனைநீரிலே முழுகுவார் : புழுகு சந்தனம் - புழுகு கலந்த சந்தனத்தையும், நறு பனிநீர் - நறுமணமுள்ள பனிநீரையும், காந்தி கொடு-(உடம்பிற்) பேரொளிதோன்ற, எறிவர் - ஒருவர்மீது ஒருவர் வீசுவார்கள்: காமவேதத்தை—, கருங்கடைக்கண்களால் மொழிவார்—;(எ-று.)

பூந்துகில் நனையச்சுனையிற்படிந்தது - தமது அவயவம் தோன்றிக் காதலை யூட்டுதற்கு. காமவேதத்தைக் கடைக்கண்களால் மொழிதலாவது, காமக்குறிப்புப்படப் பார்த்தல். (சு௨)

63 பண்ணுடையெழாலினின்னிசைவழியே பாடுவார்பைங்குழல் குறிப்பார், பெண்ணுடைமடநாணகன்றபேரமளிப் பேச்செலாம் பேசிவந்தடுப்பார், விண்ணுடையமிர்தம்பருகுவாருகிரால் மென் மலர்கொய்துமேலெறிவா,ரெண்ணுடைமடவார்புரிந்தனவிவ்வாறிங் கிதமெத்தனைகோடி.

(இ - ள்.) பண் உடை-பண்ணைக்கொண்ட, எழாலின்-யாழின், இன் இசை வழியே - இனிய ஓசையின் வழியாக, பாடுவார்—; [யாழிசைக்கு ஒப்பப்பாடுவார் என்றபடி]; பைங்குழல் - பசியமூங்கிலினாலியன்ற புள்ளாங் குழலை, குறிப்பார் - ஊதுவார்: பெண் உடை மடம் நாண் - பெண்களுக்கு உரிய மடமும் நாணும், அகன்ற - அகலுவதற்கு இடனான, பேர் அமளி - பெருமைபெற்ற படுக்கையிலே நிகழ்கின்ற, பேச்சு எலாம் - பேச்சுக்களை யெல்லாம், பேசிவந்து - பேசிக்கொண்டுவந்து, அடுப்பார் - நெருங்குவார் ; விண் உடை அமிர்தம் - தேவாமிருதத்தை, பருகுவார் - குடிப்பார்: உகிரால்-(தம்முடைய) நகங்களினால், மெல் மலர் கொய்து - மெல்லிய மலரைப் பறித்து, மேல் எறிவார் - ஒருவர்மீது ஒருவர் வீசுவர்: எண் உடை - (அருச்சுனனுடைய தவத்தைக் கெடுக்கவேணுமென்ற) எண்ணங்கொண்ட, மடவார் - அம்மகளிர், இ ஆறு புரிந்தன - இவ்வாறு செய்தனவாகிய, இங்கிதம் - காமக்குறிப்பையுடைய சேஷ்டைகள், எத்தனை கோடி - எத்தனைகோடிகள் [மிகப்பலவாகும்]! (எ - று.)

மடம் என்பதை பெண்ணுக்கு அடைமொழியாக்கலாம். எண்உடை - நல்லெண்ணம் உடைந்த [தவிர்ந்த] எனினுமாம். (சுங)

64.—மன்மதன் அருச்சுனன்மீது பலமுறை அம்பெய்து இளைத்தல்.

காவும்வண்புறவுங்கயங்களுமரும்பக்கவர்ந்தவெங்கணைகளாமைந்து
பூவும்வந்துள்ளமுறவுறப்பட்டுப்புதையவும்புலன்வழியன்றி
மேவுதன்கருத்தின்வழியிலேநின்றவிசயனையங்கிபால்வில்லு
மேவுமுன்பெற்றவிறைவனையெய்தெய்திளைத்தனனிரதிகேள்வனுமே,

(இ - ள்.) காஉம் - சோலைகளும், வண் புறவுஉம் - வளப்பமுள்ள காடுகளும், கயங்களும் - நீர்நிலைகளும், அரும்ப - (அசோகு முல்லை மா தாமரை குவளை என்ற இவைகளைத்) தோற்றுவிக்க,— கவர்ந்த - (அவற்றினின்றும் மன்மதன்) பறித்தெடுத்த, வெம் கணைகள் ஆம் ஐந்துபூவும் - வெவ்விய பாணங்களாகிய ஐந்து மலர்களும், வந்து - (கரும்புவில்லினின்றும் வெளிப்பட்டு)வந்து, உள்ளம்-(அருச்சுனனுடைய)மனத்திலே, உற உறபட்டு புதையஉம்-மிகவும் நன்றாகப் பதிந்து புதையவும்,— புலன் வழி அன்றி-புலன்களின் வழியிலேயல்லாமல், மேவு - பொருந்திய, தன் கருத்தின் வழியில்ஏ-தன் எண்ணத்தின் வழியில்தானே, நின்ற - நிலையாகநின்ற, விசயனை - அருச்சுனனை. அங்கிபால் - அக்கினிதேவனிடத்திலே, வில்உம் - காண்டீவமென்ற வில்லையும், ஏஉம் - அம்புகளையும், முன் - முன்னே [காண்டவதகன காலத்திலே], பெற்ற - அடைந்த, இறைவனை - தலைவனை, எய்துஎய்து - பலமுறை அம்புதொடுத்து எய்து, இரதி கேள்வன்உம் - இரதிதேவிக்குக் கணவனாகிய மன்மதனும், இளைத்தனன் - இளைத்தான் ; (எ - று.)

மன்மதனுக்குக் கணைகளாக அமையும் அரவிந்தம் முதலிய ஐம்மலர்கள் காமுதலிய இடங்களில் தோன்றுவன வாதலால், 'காவும் வண்புறவும் கயங்களும்அரும்ப' என்றார். ஐம்புலவாசையையொறுத்துத் தியானத்தில்தானே மனமூன்றியிருந்தனன் அருச்சுன னென்க. 'ஐங்கணைகளாம்' என்றும் பாடம்.

65.—அருச்சுனன் சிவத்தியானங்கொண்டு சலியாது நிற்றல்.

கூற்றினையுதைத்தபாதமுமுடுத்தகுஞ்சரத்துரிவையுமணிந்த
நீற்றொளிபரந்துநிலவெழுவடிவுநிலாவெயிலனலுமிழ்விழியு
மாற்றறல்பரந்தகொன்றைவார்சடையுமல்லதையாவையுங்கருதான்
மாற்றமொன்றின்றிநின்றனன்வரைபோல்வச்சிராயுதன்றிருமகனும்.

(இ - ள்.) (மார்க்கண்டேய முனிவனைக் காப்பதற்காக), கூற்றினை - யமனை, உதைத்த - உதைத்துத்தள்ளிய, பாதம்உம்- திருவடிகளும், உடுத்த- ஆடையாக அணிந்த, குஞ்சரத்துஉரிவைஉம்-யானைத்தோலும், அணிந்த நீறு ஒளிபரந்து-பூசியுள்ள திருநீற்றின்ஒளி பரவுதலால், நிலவுஎழு-வெள்ளொளி மேலெழுகின்ற, வடிவுஉம்-திருமேனியும், நிலாவெயில்அனல்உமிழ் விழிஉம்- நிலவையும்வெயிலையும் அனலையும்வெளிப்படுத்துகின்ற கண்களும், ஆறுஅறல் பரந்த - கங்கையாற்றின்நீர் பரவிய, கொன்றை - கொன்றைமலரையணிந்த, வார் சடைஉம் - நீண்ட சடைமுடியும், (ஆகிய இவற்றை), அல்லது - அல்லாமல், யாவைஉம் - வேறுஎவற்றையும், கருதான் - (மனத்தில்) நினையாதவனாய், வச்சிராயுதன் திருமகன்உம் - வச்சிரப்படையையுடையவனாகிய தேவேந்திரனது மகனான அருச்சுனனும், மாற்றம் ஒன்று இன்றி - ஒரு பேச்சும் பேசுதலின்றி, வரைபோல் நின்றனன் - மலைபோல் அசையாது நின்றான் ; (எ - று.)

சிவபெருமானது மேனி செந்நிறமாயினும் திருமேனியிலணிந்த வெண்ணீற்றால் அவ்வடிவினின்றும் நிலாவொளி எழுமென்க. இறைவனுக்குச்

சூரியசந்திராக்கினியர்என்ற மூச்சுடர்களும் மூன்றுகண்களாதலால், நிலா வெயிலனலுமிழ்விழியும் என்றார். (சுஉ)

66.—மன்மதனும் அருச்சுனன்தவத்தைக்குலைக்க அஞ்சிச் சென்றிடுதல்.

அன்றாரனிருந்தயோகினையகற்றியறிவிலாதநங்கனாய்வெந்த
குன்றிதுதடங்கணாயிரமுடையோன்கூறியகூற்றினைத்தேறி
யின்றவன்மதலைபுரிதவங்குலைத்தாலென்விளைந்திடுமெனவஞ்சி
நின்றிலன்மதனனிற்குமோநெற்றிநெருப்பினானீறுபட்டுள்ளோன்.

(இ - ள்.) 'அன்று - முற்காலத்தில், அரன் - சிவபெருமான், இருந்த- மேற்கொண்டிருந்த, யோகினை - தவயோகத்தை, அறிவுஇலாது-ஆராய்ச்சி யில்லாமல், அகற்றி - அகற்ற முயன்று, அநங்கன் ஆய்-அங்கமில்லாதவனாகும் படி, வெந்த - எரிந்துபோன, குன்று - மலையாகும், இது—: தட கண் ஆயிரம் உடையோன் கூறிய கூற்றினை தேறி - பெரிய ஆயிரங்கண்களை யுடையவனான இந்திரன் சொன்ன பேச்சினை நம்பி, இன்று - இன்றைக்கு, அவன் மதலை புரி தவம் குலைத்தால்-அந்தத் தேவேந்திரனுடைய புதல்வன் [அருச்சுனன்] செய்கின்ற தவத்தை (நாம்) கெடுத்தால், என் விளைந்திடும் - என்னதீங்கு நேரிடக்கூடுமோ?' என - என்று, அஞ்சி - பயந்து, மதனன்- மன்மதன், நின்றிலன்-(அவ்விடத்து) நில்லாதவனாயினான்: நெற்றி நெருப்பி னால் - நெற்றிக்கண்ணினின்று தோன்றிய நெருப்பினாலே, நீறுபட்டுஉள் ளோன் - உடல் சாம்பராக்கப்பட்டுப் போனவன் [மன்மதன்], நிற்குமோ - (அங்கே) நிற்பானோ? (எ - று.)

ஏற்கனவேதன்னுடல்வெந்த மலையாதலால், இந்திரன் பேச்சைக்கேட்டு இந்த அருச்சுனனது சிவத்தியானத்தைக் கெடுத்தால், 'நமக்குஎன்ன நேரு மோ!' என்று அஞ்சி மன்மதன் அங்கேநிற்க மனவுறுதி யில்லாதவனாகி அப்பாற்போய்விட்டனனென்பதாம். (சுசு)

67.—வானவர்மகளிர் முதலியோர் மீண்டுசெல்லச் சூரியனும் அஸ்தமித்தல்.

வானவர்பெருமானேவலால்வந்தவானவர்மகளிருந்தம்மா
லானவக்கிரீடையாவையும்புரிந்துமொருபயன்பெற்றிலரகன்றார்
கானகமுழுதும்பரிமளம்பரப்பிக்கானவண்டிமிர்தரப்புகுந்த [தான்.
வேனிலுமகன்றதருக்கனுங்குடபால்வெண்டிரைவேலைவாய்வீழ்ந்

(இ - ள்.) வானவர் பெருமான் ஏவலால் - தேவேந்திரனுடைய கட்டளையாலே, வந்த—, வானவர் மகளிர்உம்-தேவமாதர்களும், தம்மால் ஆன அ கிரீடை யாவைஉம் புரிந்துஉம் - தங்களாலான அந்த விளையாடல் எல்லாவற்றையும் செய்தும், ஒருபயன் பெற்றிலர் அகன்றார் - ஒருநற்பயனை யும் பெறாதவராயப் போய்விட்டார்கள்: கானகம் முழுதும் பரிமளம் பரப்பி- அந்தக் காட்டினிடம் முழுதும் நறுமணத்தைப் பரவச்செய்துகொண்டு, கானம் வண்டு இமிர்தர - காட்டுவண்டுகள் ஒலிக்க, புகுந்த—, வேனில் உம் - இளவேனிற் பருவமும், அகன்றது - நீங்கிவிட்டது: அருக்கன்உம் - சூரியனும், குடபால்-மேற்குத்திக்கிலே, வெள் திரை வேலைவாய்-வெள்ளிய அலைகளையுடைய கடலிலே, வீழ்ந்தான் - விழுந்தான்; (எ - று.)

வானவர்மகளிரும் வேனிலும் அகன்றதுகண்டு தானும் இனி இவ்விடத்தைவிட்டு அகலவேண்டுவதே என்று கருதினான்போலச் சூரியன் அவ்விடத்தைவிட்டு அத்தமலையிற் சேர்ந்தனனென்ற தற்குறிப்பேற்றவணியான கருத்துத் தொனிக்கக்கூறினர். அருச்சுனனுடைய மனத்தைத் தேவமாதர்கள் புரிந்த செயல்கள் சிறிதும் மாற்றவல்லன அல்லவாயின என்பது, வானவர்மகளிர் ஒருபயன் பெற்றிலரகன்றே ரென்பதன கருத்து. கானம்வண்டு - இசையைச்செய்யும் வண்டுமாம். (சுஎ)

வேறு

68.—தேவமாதர் மீண்டு அருச்சுனனது மனத்திண்மையை இந்திரனிடந் தெரிவிக்க, அவன் அருச்சுனன் தவஞ்செய்யுமிடத்துக்குவருதல்.

இந்திரன் சுதன்ற னெண்ணம் யாவதென் றினிதி னெண்ணி
யிந்திர சால மாக வேவினு ரெவரு மெய்தி
யிந்திர நீலந் தன்னி லிறைவனுக் குரைத்தா ரந்த
விந்திரன் றானு மைந்தன் றவம்புரி யிருக்கை சேர்ந்தான்.

(இ - ள்.) இந்திரசாலம் ஆக - இந்திரசாலமென்னும் மகாமாயைவித்தையையொப்ப [பிறர்மனத்தை நன்றாகமயக்கும்படி], ஏவினர் எவர்உம் - (இந்திரனால்) ஏவியனுப்பப்பட்ட தெய்வமகளிரெல்லோரும், இந்திரன் சுதன்தன் எண்ணம் - இந்திரகுமாரனான அருச்சுனனது கருத்து, யாவது - எத்தன்மையது, என்று —, இனிதின் எண்ணி - நன்றாகஅறிந்து கொண்டு,—எய்தி - (தேவலோகத்துக்குச்) சென்று, இந்திரநீலம்தன்னில் இறைவனுக்கு - இந்திரநீலரத்தினம்போலக் கருநிறத்தையுடைய இந்திரனுக்கு, உரைத்தார்-(செய்தியைச்)சொன்னார்: அந்த இந்திரன்தான்உம் - அந்த இந்திரனும், மைந்தன் தவம் புரி இருக்கை-(தனது)குமாரன் தவஞ் செய்யுமிடத்தை, சேர்ந்தான்—; (எ - று.)

இந்திரசாலம் - உள்ளதை இல்லாததாகவும் இல்லாததையுள்ளதாகவும், ஒன்றை மற்றொன்றாகவுங் காட்டும் மாயவித்தை. இனி, இந்திரசாலமாகஎய்தி என்பதற்கு - இந்திரசாலவித்தையையொப்ப இருந்தவிடந்தெரியாதபடி மீண்டுவந்து என்றும் உரைக்கலாம். இந்திரநீலம் - ஒருவகைநீலரத்தினம். இந்திரநிலமென்பது இந்திரநீலமெனத் திரிந்ததாக்கொண்டு, இந்திரநீலந்தன்னில்இறைவன் - பொன்னுலகத்திலுள்ள தலைவனான இந்திரன் என்றுரைப்பாருமுளர்.

இதுமுதல்எழுகவிகள் - இச்சருக்கத்தின் முதற்கவிபோன்ற அறுசீராசிரிய விருத்தங்கள். (சுஅ)

69.—இதுவும், மேற்கவியும்-குளகம்: வினவிய இந்திரனுக்கு அருச்சுனன் தவஞ்செய்யுங்காரணங்கூற, அவ்விந்திரன் இகழ்ந்து சிரித்தலைக் கூறும்.

விருத்தமாமுனிவனாகிவிசயனைநோக்கியாது
கருத்துநீதவஞ்செய்கின்றகாரணமென்னையென்னத்
திருத்தகுசிந்தையோடுஞ்செந்தழலிடைநின்றோன்
மருத்துவானுருவமாறிவந்தவாறுணர்கிலாதான்.

(இ - ள்.) (தேவேந்திரன்),—விருத்தன் மா முனிவன் ஆகி - கிழத்தனமுடையவனாகிய ஒருபெரிய இருடியினுடைய உருவமாய் வந்து, விசயனை நோக்கி-அருச்சுனனைப் பார்த்து, 'யாது கருத்து - (உன்னுடைய) எண்ணம் என்ன? நீ தவம் செய்கின்ற காரணம் என்னை - நீ தவத்தைச்செய்கிற காரணம் யாது?' என்ன-என்று வினவ,—திரு தகு சிந்தையோடு உம்-மேன்மைபொருந்திய உள்ளக்கருத்துடனே, செம் தழல் இடை நின்றோன் உம் - சிவந்த அக்கினியின்மத்தியிலே நின்று தவஞ்செய்கின்ற அருச்சுனனும், மருத்துவன் உருவம் மாறி வந்த ஆறு உணர்கிலாதான் - இந்திரன் (தன்னுடைய) ரூபம் மாறுபட்டு வந்த விதத்தை அறியாதவனாய்,—(எ-று.) "என்ன, தேவர்கோமான் சிரித்தனன்" என்று அடுத்த செய்யுளில் முடியும்.

தேவேந்திரன் தனது புதல்வனான அருச்சுனனிடத்துள்ள அன்பின் மிகுதியால் அவனுடைய மனவுறுதியை நன்றாக உணரக்கருதி ஒருகிழமுனி வனது வடிவத்தைக் கொண்டு அருச்சுனனைக்கிட்டி 'நீ இவ்வளவு கடுந்தவம் புரிகின்றாயே; இதற்குக் காரணம் யாது?' என்று வினாவினனென்க. பஞ்சாக்கினிமத்தியில் நின்று தவஞ்செய்பவனென்பார் 'செந்தழலிடை நின்றோனும்' என்றார். பஞ்சாக்கினிகளாவன - கார்ஹபத்தியம் ஆஹவநீயம் தக்ஷிணாக்கினி என்ற யாகாக்கினிகள்மூன்றும் மூன்றுபக்கங்களிலும், ஔபாசனாக்கினி ஒரு பக்கத்திலும், சூரியனாகிய சுடர் வானத்திலும் ஆக இவை. கருதியது, கருத்து; கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்துகெட்டு முதனிலை திரிந்த பெயர். சிந்தைக்குத் திரு - சிவத்தியானத்தாலுண்டாகுஞ் சிறப்பு. மருத்வாந்என்னும் வடமொழிக்கு-தேவர்களையுடையவன் என்றுபொருள். உருவம்-வடமொழித்திரிபு. உணர்கிலாதான் என்னும்வினைமுற்றெச்சத்தில், கு, இல் - சாரியைகள்; இனி, கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலையென்றுமாம். (சுக)

70\. மாசறுமதியமன்னவாண்முகமங்கைபாகத்
தீசன்வந்தெய்துகாறுமித்தவம்புரிவேனென்ன
வாசறுகடவுளோர்க்குமருமறைதனக்குமெட்டாத்
தேசவன்வருமோவென்றுசிரித்தனன்றேவர்கோமான்.

(இ - ள்.) 'மாசு அறு - களங்கமில்லாத, மதியம் - பூர்ணசந்திரனை, அன்ன - ஒத்த, வாள் முகம் - பிரகாசமான திருமுகத்தையுடைய, மங்கை - எப்பொழுதும் மங்கைப் பருவத்தையேயுடைய உமாதேவியை, பாகத்து - (தனது) இடப்பக்கத்திலே கொண்ட, ஈசன் - பரமசிவன், வந்து எய்து காறும் - வந்துசேர்ந்து பிரதியக்ஷமாகிறவரையிலும், இ தவம் புரிவேன் - இந்தத்தவத்தை விடாமற்செய்வேன்,' என்ன - என்று (அருச்சுனன்) சொல்ல,—தேவர் கோமான்-தேவர்களுக்கு அரசனான இந்திரன், 'ஆசு அறு கடவுளோர்க்குஉம்-குற்றமில்லாத தேவர்களுக்கும், அரு மறை தனக்குஉம்-(அளவிடுதற்கு) அருமையான வேதங்களுக்கும், எட்டா - (அறிதற்கு) எட்டாத, தேசவன் - ஒளியுருவமான சிவபெருமான், வருமோ - (உனது தவத்

திற்குப்) பிரதியட்சமாவனோ? [ஆகான்],' என்று - என்றுசொல்லி, சிரித்த னன் - நகைத்தான்; (எ - று.)

அருச்சுனன், ஒருகிழமுனிவனே தன்னை வினவுவதாகக் கருதி, 'சிவ பிரானைப் பிரதியட்சமாகத் தரிசிக்கும் வரையில், நான் இந்தத்தவத்தை விடாது செய்வேன்' என்று தன் உறுதியைக் கூற, விருத்தமுனிவனான அத்தேவேந்திரன் 'தேவர்கட்கும் வேதங்கட்கும் எட்டாத கடவுளாகிய சிவபிரான் சாதாரணமனிதனாகிய உனது ஊனக்கண்ணுக்குப் பிரதியட்ச மாகச் சேவைசாதிப்பனோ?' என்றுசொல்லி அவனதுசெயல் வீணே யென் பது தோன்றுமாறு இகழ்ச்சியாகச் சிரித்தனனென்க. மாசுஅறுமதியம் - களங்கமில்லாத முகத்துக்கு, இல்பொருளுவமை. ஈசன் - எல்லா ஐசுவரி யமுமுடையவன். காறு - அளவு. உறக்கம் பிணி பசி மூப்புத் துன்பம் இல்லாதவர்க ளென்பான், 'ஆசறு கடவுளோர்' என்றான். கடவுள் பெருஞ் சோதிவடிவாக நிற்ப ஞதலால், அவனை 'தேசவன்' என்றார். (எ0)

71.—அருச்சுனன் தன்செயலைப்பரிகசித்த இந்திரனுக்குத் தன் மனவுறுதி கூறல்.

சிரித்ததேனென்னமீண்டுந்திருமகன்றன்னைநோக்கி
வருத்தமேயன்றியிந்தமாதவம்பயனின்றென்று
றுருத்திவனவனைநோக்கியுயிரிறுமளவுமிந்தக்
கருத்துநான்வீடேனென்றான்கடுங்கனலூடுநின்றான்.

(இ - ள்.) சிரித்தது ஏன் என்ன - (முனிவனே! நீ) சிரித்தது எக்காரணத்தால்?' என்று (அருச்சுனன்) வினவ,—(இந்திரன்), மீண்டும் - மறுபடியும், திரு மகன்தன்னை நோக்கி-(தனது) சிறந்த குமாரனான அவ்வருச் சுனனைக் குறித்து, 'இந்த மா தவம்-இப்பெரிய தவம், வருத்தமே அன்றி - வருத்தந்தருவது மாத்திரமேயல்லாமல், பயன் இன்று-நீ(கருதிய) பயனைத் தருவதாகாது,' என்றான் - என்றுசொன்னான்; (சொல்ல), கடு கனல் ஊடு நின்றான் - கொடிய பஞ்சாக்கினிமத்தியிலே நிற்பவனாகிய, இவன்- அருச்சு னன்,—உருத்து - கோபித்து, அவனை நோக்கி-இந்திரனைப்பார்த்து, 'உயிர் இறும் அளவும்-(எனது) உயிர்நீங்கும்மட்டும், இந்த கருத்து நான் வீடேன்- இவ்வெண்ணத்தை யான் விடமாட்டேன்,' என்றான் - என்று சொன்னான்.

வீடேன் - விடேன்; நீட்டல்விகாரம். இங்கே, கோபம் - தன்னை யலைத்தல்காரணமாக உண்டாயிற்று. அன்றி - எதிர்மறைக் குறிப்புவினை யெச்சம். இன்று - எதிர்மறை ஒன்றன்பாற் குறிப்புமுற்று. வருத்தம் - 'வருந்து' என்ற பகுதியின் தொழிற்பெயர். ஏ - பிரிநிலை. (எக)

72.—இந்திரன் தன்து உண்மைவடிவோடு வெளிப்பட்டு அருச்சுனனை அனுக்கிரகித்தல்.

மைந்தனிம்மாற்றங்கூறமனனுறமகிழ்ந்துதெய்வத்
தந்தையும்விருத்தவேடந்தனையொருகணத்தின்மாற்றி
யிந்திரனாகிமுன்னின்றிப்பெருந்தவத்தால்வந்து
பைந்தொடிபாகன்பாசுபதமுனக்குதவுமென்றான்.

(இ - ள்.) மைந்தன் - புத்திரனான அருச்சுனன், இ மாற்றம் கூற - இவ்வார்த்தையைச் சொல்ல, தெய்வம் தந்தைஉம் - தெய்வத்தன்மையை யுடைய பிதாவான இந்திரனும், மனன் உற மகிழ்ந்து - மனம் மிகவுஞ் சந்தோஷித்து, விருத்த வேடம்தனை-கிழவுருவத்தை, ஒரு கணத்தில் மாற்றி - ஒருக்ஷணப்பொழுதிலே நீக்கி, இந்திரன் ஆகி - தேவேந்திரவடிவமாய், முன் நின்று - எதிரில் நின்று, (அருச்சுனனைநோக்கி), 'இ பெரு தவத்தால்-இந்தப் பெரிய தவங் காரணமாக, பைந்தொடி பாகன் - பசுமையான (பொன்னாலாகிய) தொடியென்னுங் கையணியையுடைய உமாதேவியை இடப்பக்கத்திற் கொண்ட பரமசிவன், வந்து-எதிர்ப்பட்டுவந்து, பாசுபதம் உனக்கு உதவும்-பாசுபதாஸ்திரத்தை உனக்குக் கொடுப்பான்', என்றான்-என்றுசொன்னான்.

அருச்சுனனது மனவுறுதியைக் கண்கூடாகக் கண்டதனால் தேவேந்திரன் மனமகிழ்ந்து கிழமுனிவனானவேஷத்தை விட்டுத் தனதுநிஜவடிவத்தோடு அவ்வருச்சுனனுக்குப் பிரதியட்சமாகி 'உனக்குச் சிவபெருமான் பாசுபதாஸ்திரம் அளிப்பன்' என்று அனுக்கிரகித்தனனென்பதாம். வேடம்-வேஷம்; தன்கோலம்விட்டு வேறுகோலங்கொளல். தமக்கு இஷ்டமான ரூபத்தை யெடுத்துக்கொள்ளும் வல்லமை தேவர்களுக்கு உள்ளமை தோன்ற, 'தெய்வத்தந்தை' என்றார். இந்திரன் - பரமைசுவரியமுடையவனென்று பொருள்படும் வடசொல்; (இதன் பெண்பால் - இந்திராணி.) பைந்தொடி - பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. பாசுபதம்-பசுபதியினுடையது என்று பொருள்: தத்திதாந்தநாமம்; பசுபதி-பசுக்கட்குத்தலைவன்: பசுக்கள் - ஆன்மாக்கள்: இனி, பசு-எருதுமாம். (எஉ)

73.—அருச்சுனன் கடுந்தவஞ் செய்வதைச் சேடியர் பார்வதீதேவியினிடம் கூறுதல்.

என்றுரைத்தமரர்கோமானேகியபின்னர்வெள்ளிக்
குன்றுடைப்புனிதன்பாதங்குறிப்புறுமனத்தனாகி
நின்றுநற்றவஞ்செய்கின்றநெடுந்தகைநீர்மையெல்லாஞ்
சென்றுமைக்குரியரானசேடியர்செப்பினாரே.

(இ - ள்.) என்று உரைத்து - என்று இவ்வாறு சொல்லி, அமரர் கோமான்-தேவராசனான இந்திரன், ஏகிய பின்னர்-போனபின்பு,—வெள்ளி குன்று உடை புனிதன் பாதம்-வெள்ளிமயமான கைலாசகிரியை இருப்பிடமாகவுடைய பரிசுத்தனான பரமசிவனது திருவடிகளை, குறிப்புறும் - தியானிக்கின்ற, மனத்தன் ஆகி - மனத்தையுடையவனாய், நின்று - நிலைபெற்று, நல் தவம் செய்கின்ற - நல்ல தவத்தைச் செய்கிற, நெடு தகை - பெருமைக் குணத்தையுடைய அருச்சுனனது, நீர்மை எல்லாம்-தன்மை முழுவதையும், உமைக்கு-உமாதேவிக்கு, உரியர் ஆன சேடியர்-உரியவர்களாயுள்ள தோழிமார், சென்று செப்பினார் - போய்ச்சொன்னார்கள்; (எ - று.)

நெடுந்தகை - பண்புத்தொகை யன்மொழி. தகை - தகுதி, நற்குணம்; இது - தொழிலடியாகப்பிறந்ததாயினும், பொருளாற் பண்புப்பெயர். நீர்மை - பண்புப்பெயர். அமரர்-அமிர்தமுண்டதனால் மரணமில்லாதவர். (எங)

74.—அருச்சுனன் தவஞ்செய்வதைப் பார்வதி சிவபிரானிடம் கூறுதல்.

மேனைமுன்பெற்றகிள்ளைவேலையுஞ்சேலினோடு
மானையும்பொருதசெங்கண்மரகதவல்லிகேட்டுத்
தானையுங்கரியபேருத்தரியமுமாகச்சாத்த
வானையன்றுரித்தநக்கற்கடிபணிந்தருளிச்செய்தாள்.

(இ - ள்.) மேனை - மேனகை யென்பவள், முன் - முன்னொருகாலத்தில், பெற்ற - ஈன்ற, கிள்ளை - கிளிபோலும் மொழியையுடையவளும், வேலைஉம் - வேலாயுதத்தையும், சேலினோடு - சேல்மீனையும், மானைஉம் - மான் விழியையும், பொருத - ஒத்த, செம் கண் - சிவந்தகண்களையுடைய, மரகத வல்லி - மரகதரத்தினமயமான பூங்கொடி போன்றவளுமாகிய பார்வதி தேவி, கேட்டு-(அருச்சுனன்தவத்தைத் தோழியர்சொல்லக்) கேட்டறிந்து, தானைஉம் - (அரையிலுடுக்கும்) அந்தரீயமும், கரிய பேர் உத்தரியம்உம் ஆக- கரிய பெரிய மேல்தரிக்கும் உத்தரீயமுமாக, சாத்த-தரிப்பதற்கு, ஆனை - யானையை, அன்று - முன்னொருகாலத்தில், உரித்த-தோலுரித்த, நக்கற்கு- சிவபெருமானுக்கு, அடி பணிந்து - திருவடியை வணங்கி, அருளிச்செய் தாள் - (அருச்சுனன் தவநிலையைக்) கூறினாள்; (எ - று.)

இவ்வாறு பார்வதி அருச்சுனனது தவநிலையை அருளிச்செய்தது, அவனுக்கு அருள்புரியவேண்டுமென்ற குறிப்பினாலென்க. மேனை - மேநா: வடசொல். இவள் இமயமலையின் அதிதேவதையான இமவானது மனைவி. தக்ஷமுனிவனது புத்திரியான ஜந்மத்தை யொழித்த தாக்ஷாயணி ஒரு சிறு பெண்குழந்தை வடிவமாய் இமயமலையி லிருக்க, அப்போது இமவானாலும் மேனையாலும் புத்திரியாகக் கொள்ளப்பட்டுப் பார்வதியாயினளென்க. அரையாடை அந்தரீயமென்றும், மேலாடை உத்தரீய மென்றுஞ் சொல்லப் படும். கிள்ளை - பெயர்த்திரிசொல். கிள்ளை, மரகதவல்லி - உவமையாகு பெயர்கள். கண்களுக்கு, வேல் - கூர்மையாலும், கணவனைக் காமநோயால் வருத்துதலாலும், சேல் - பிறழ்ச்சியாலும், மான்-பார்வையாலும், உவமை. பொருத-உவமவுருபு. மரகதம்-பச்சையிரத்தினம். மரகதமென்பது எழுத்து நிலைமாறிவந்த இலக்கணப்போலி. (எச)

வேறு

75.—இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்; அருச்சுனன் தவம்புரிதலைத் தான் அறிந்திருத்தலைச் சிவபெருமான் விரிவாகக் கூறுதல்.

ஆலமுண் டமுதம் பொழிதரு நெடுங்க ணம்பிகை யருண்
மொழிகேட்டு, நீலமுண் டிருண்ட கண்டனு மிரங்கி நிரைவளைச்
செங்கையாய் நெடிது, காலமுண் டருள்கூ ரறத்தின்மைந் தனுக்
குங் காற்றின்மைந் தனக்குநே ரிளையான், ஞாலமுண் டவனுக்
குயிரெனச் சிறந்தோ னரனெனு நாமமும் படைத்தோன்.

(இ - ள்.) ஆலம் உண்டு - விஷத்தை யுட்கொண்டு, அமுதம் பொழி தரு - அமிருதத்தை வெளியே சொரிகின்ற, நெடு கண் - நீண்ட திருக் கண்களையுடைய, அம்பிகை - உமாதேவி, அருள் - அருளிச்செய்த, மொழி-

வார்த்தையை, கேட்டு-செவியுற்று,— நீலம் உண்டு இருண்ட கண்டன்உம்- நீலநிறமான விஷத்தைப் புசித்து அதனாற் கறுத்த ஸ்ரீகண்டத்தையுடைய சிவனும், இரங்கி - திருவுள்ளம்இரங்கி, (அம்பிகையைநோக்கி), நிரை வளை செம் கையாய் - வரிசையான வளையல்களையணிந்த சிவந்த கையையுடைய வளே! நெடிது காலம்உண்டு-(அருச்சுனனது தவம்) நெடுங்காலமாகஉள்ளது; (அவன்), அருள்கூர்-கருணைமிகுந்த, அறத்தின் மைந்தனுக்குஉம்-தருமபுத்திர னுக்கும், காற்றின்மைந்தனுக்குஉம்-வாயுகுமாரனான வீமனுக்கும், நேர் இளை யான் - அடுத்த தம்பி; ஞாலம் உண்டவனுக்கு - உலகங்களை விழுங்கிய ஸ்ரீ மகாவிஷ்ணுவின் திருவவதாரமாகியகண்ணபிரானுக்கு, உயிர் என - உயிர் போல, சிறந்தோன்-சிறந்த நண்பன்; நரன் எனும் நாமம்உம்-நரன் என்கிற பெயரையும், படைத்தோன் - பெற்றவன் ; (எ - று.)—இதனால், அருச்சுன னைத் தான் இன்னானென்று அறிந்திருத்தலைச் சிவபிரான் வெளியிட்டனன்.

விஷத்தை யுட்கொண்ட கண் என்றது-மிகவுங் கறுத்த கருவிழியை யுடைமையையும், அமுதம் பொழிதருகண் என்றது - அக்கருவிழியைச் சுற்றி வெண்ணிறமுடைமையையுங் கருதி; இனி, காமநோயை யுண்டாக் கித் துன்பத்தைத் தருதலால் நஞ்சின் தன்மையை யுட்கொண்டு, பார்வை யழகினால் மிக்கஇன்பத்தைத் தருதலால் அமிருதத்தைச் சொரிகின்ற கண் என்றதுமாம்: "சேலனைய சில்லரிய கடைசிவந்து கருமணியும், பாலகத்துப் பதித்தன்ன படியவாய் முனிவரையும், மாலுறுப்ப மகிழ்செய்வ மாண்பின் நஞ்சு மமிர்தமுமே, போல்குணத்த பொருகயற்கண் செவியுறப்போந் தகன் றனவே" எனச் சிந்தாமணியிலும், "அமிழ்தினின் விளர்த்துஉள் நஞ்சினிற் கருகி யையரிசிதறி மைதோய்ந்து, கமலமென் மலரை வனம் புகுத்திய வேற்கண்" என நைடதத்திலும் வருதல் காண்க. இனி, அமுதம் என்றது - கருணையாகவுமாம். நஞ்சும் அமுதுஞ்சேர்த்துச் சொல்லப்படுதலால், அவை பாற்கடலிற்பிறந்த ஹாலாஹலமும் தேவாமிருதமுமாம். கண்டம்-கழுத்து. கரியவிஷத்தை யுட்கொண்டு கண்டத்தில் நிறுத்தினதனால், சிவனுக்கு நீல கண்டனென்று ஒருபெயர். நெடிது - குறிப்புவினையாலணையும்பெயர். அருச்சுனன் பாண்டவர்களில் மூன்றுமவ னென்பது, இங்கு 'அறத்தின் மைந்தனுக்குங் காற்றின்மைந்தனுக்கு நேரிளையான்' என்றதனால் விளங்கும். பாற்கடல்கடையுங்காலத்து யாவரையுங் கொல்லுமாறு அதனினின்றுந் தோன்றிய விஷத்தைக் கண்டு அஞ்சியோடின தேவர்கள் முதலியோரது வேண்டுகோளாற் சிவபிரான் அதனைப் புசித்தருளி அவர்களைக் காத்தன னென்பது, கதை. பிரமன்முதலான சகல தேவர்களுமுட்பட யாவும் அழிந்துபோகின்ற யுகாந்தகாலத்தில் ஸ்ரீ மகாவிஷ்ணு சிறுகுழந்தைவடிவ மாய் அண்டங்களை யெல்லாந் தம்வயிற்றில் அடக்கிவைத்துக்கொண்டு பிரளயப்பெருங்கடலில் ஆலிலையிற் பள்ளிகொள்ளுகின்றன ரென்று அறிக. உயிரெனச்சிறந்தோன் - பிராணசிநேகிதன். "மமப்ராணாஹிபாண்டவா:" எனக் கண்ணன் தானே கூறியுள்ளதற்கு ஏற்ப, 'ஞாலமுண்டவனுக்கு உயி

ரெனச்சிறந்தோன்' என்றது ; "மாலோனுயிர்போல்வான்"எனக் கன்ன பருவத்து வருமாறு உணர்க.

இதுமுதல் ஏழுகவிகள் - 54-ஆங்கவிபோன்ற எழுசீராசிரியவிருத்தங்கள். (எரு)

76. ஆடியானனன்றன்மதலையர்விரகாலாடியசூதினுக்கழிந்து
காடுதாமுறையுங்கடனினரவரிற்கடவுணாயகன்றருகாளை
நீடுபேரமரிற்பகைவரைச்செகுக்குநினைவினுனெருப்பிடைநம்மை
நாடியேயரிதிற்றவம்புரிகின்றானிதுமுன்னமேயறிவோம்.

(இ - ள்) ஆடி ஆனனன் தன் - கண்ணாடிபோன்ற முகத்தையுடைய திருதராஷ்டிரனது, மதலையர் - புத்திரர்களாகிய துரியோதனாதியர், விர கால்-வஞ்சனையினால், ஆடிய - ஆடின, சூதினுக்கு-சூதாட்டத்தில், அழிந்து-தோற்று, காடு தாம் உறையும் கடனினர் அவரில்-காட்டில் தாங்கள் வாசஞ் செய்யவேண்டும் கடமையை யுடையவர்களாகிய அப்பாண்டவர்களில், கடவுள் நாயகன் தரு காளை - தேவராஜனான இந்திரன்பெற்ற புத்திரனாகிய அருச்சுனன், நீடு பேர் அமரில் - நீண்ட பெரிய யுத்தத்தில், பகைவரை செகுக்கும் நினைவினால் - பகைவர்களாகிய துரியோதனாதியரைக் கொல்ல வேண்டுமென்னும் எண்ணத்தால், நெருப்பு இடை-பஞ்சாக்கினி மத்தியில் நின்று, நம்மை நாடிஏ - நம்மைக்குறித்தே, அரிதின் - (பிறருக்கு) அரிய விதமாக, தவம் புரிகின்றான் - தவஞ்செய்கின்றான் ; இது-இதனை, நாம்—, முன்னமஏ - (நீ சொல்வதற்கு) முன்னாகவே, அறிவோம்—;(எ - று.)— இதனால், அருச்சுனன் தவம்புரிகின்ற காரணத்தைச் சிவபெருமான் பார்வதிதேவியினிடம் கூறுகின்றன னென்க.

ஆடியானனன் என்றது-கண்ணாடி தான் பிறராற் காணப்பட்டுப் பிறரைத் தான் காணும் உணர்ச்சியில்லாதது போலத் தான் பிறராற் காணப்பட்டுப் பிறவிக்குருடனாதலாற் பிறரைத் தான் காணாத முகத்தையுடையவனென்றவாறு : இனி, கண்ணாடிபோல விளக்கமுடைய முகமுடையவனென்றுமாம் ; அன்றியும், கண்ணாடி புறங்காட்டாதவாறுபோல வீரத்தால் முதுகுகாட்டாத முகமுடையவ னென்றுங் கொள்ளலாம் : "வயக்குறு மண்டிலம் வடமொழிப் பெயர்பெற்ற, முகத்தவன்" என்றார், கலித்தொகையிலும். ஆடிய - ஆடுவித்த. கடவுணாயகன் - தேவேந்திரன். நீடு அமர் - பல நாள் செய்யும் போர் என்றபடி. நீடுபேர் - ஒரு பொருட் பன்மொழியுமாம். சூதினுக்கு—சூதில் : உருபுமயக்கம். (எசு)

77. பருகுநீர் துறந்துகாற்றும்வெவ்வெயிலும் பாதவங்களின்சினையுதிர்ந்த,சருகுமேயொழியக்காய்கனிகிழங்குந் தானினிதருந்துதறவிர்ந்தா,னுருகுமாமனத்தைநாமுவந்திருத்தற் குறைபதியாக்கிநம்மிடத்தே,செருகினானுணர்வையாவரேயிவன்போற் செய்தவஞ்சிறந்தவரென்றான்.

(இ - ள்.) பருகும் நீர் துறந்து - குடித்தற்கு உரிய நீரைக் குடிப்பதையும் விட்டு, காற்றுஉம்-காற்றையும், வெம் வெயில்உம் - உஷ்ணமான

வெயிலையும், பாதவங்களின் - மரங்களினுடைய, சினை உதிர்ந்த - கிளைகளினின்றும் தாமே சிந்தின, சருகுஉம்ஏ-உலர்ந்த இலைகளையுமே, ஒழிய-ஒழியவிட்டு, காய் கனி கிழங்குஉம் - காய்கள் பழங்கள் கிழங்குகளையும், இனிது அருந்துதல்-இனிமையாக உண்ணுதலை, தான்—, தவிர்ந்தான்-ஒழிந்தான் : உருகும் மா மனத்தை - (பக்திமிகுதியால்) உருகுகின்ற பெரிய மனத்தை, நாம்உவந்து இருத்தற்கு உறை பதி ஆக்கி-நாம் விரும்பிவந்து வீற்றிருப்பதற்குப் பொருந்திய இடமாகச் செய்து, நம்மிடத்தே - நம்பக்கலிலே, உணர்வை-அறிவை, செருகினன்-செலுத்தினன்; இவன் போல் செய் தவம் சிறந்தவர்-இவ்வருச்சுனன்போலத் தவஞ்செய்தலிற் சிறந்தவர்கள், யாவர்ஏ-வேறு எவருளர் ? என்றான் - என்று (பரமசிவன்) சொல்லியருளினன் ; (எ - று.)—இதனால், சிவபிரான் அருச்சுனன் தவஞ்செய்தற்சிறப்பைப் பாராட்டி அவனதுதவத்தை வியக்கின்றானென்க.

கடவுள் பற்றுக்களைவிட்டுத் தன்னைத் தியானிக்கும் யோகியரது உள்ளக்கமலத்தில் மனமகிழ்ந்து வீற்றிருப்பனென்ற கொள்கைக்கு ஏற்ப 'மனத்தை நாமுவந்திருத்தற்கு உறைபதியாக்கி' எனப்பட்டது. உறைபதி - வினைத்தொகை. நீர் காற்று வெயில் சருகு காய் கனி கிழங்கு ஆகிய இவற்றையெல்லாம் உண்ணுதலொழிந்தானென்று முதலிரண்டடிக்குக் கருத்து; இனி, நீரையொழித்தும் காய் கனி கிழங்குகளை உண்ணுதலொழிந்தும் காற்றையும் வெயிலையுஞ் சருகையுமேயுண்டு வாழ்கின்றனனென்று பொருள் கொள்ளுதல் ஏற்கும் ; மேல் 90-ஆஞ் செய்யுளில் "முதிர்ந்த சருகுணவொழிய வுணவிலான்" என்றும், 94-ஆஞ் செய்யுளில் "உதிர்சருகலாலுணவில்லையால்" என்றும் வருதல் காண்க. உருகுதல் - நீராய்க்கரைதல். செய்தவஞ் சிறந்தவர் - செம்மையான தவத்திற் சிறந்தவருமாம். (எஎ)

78.—சிவபிரான் பார்வதிதேவியோடு பின்னுஞ் சில கூறத் தொடங்குதல்.

போகமாய்விரிந்தும்போகியாய்ப்பரந்தும்புலன்களின்வழிமனஞ்செலுத்தா, யோகியாயிருந்தும்யோகிகண்முதலாமுரைப்பரும்பல பொருளாய், மேகமாய்நின்றதத்துவமறைக்குமெட்டுதற்கரியதன்வடிவிற், பாகமாய்விளங்கும்பைந்தொடியுடனேபரிவுடன்சின்மொழி பகர்வான்.

(இ - ள்.) (பரமசிவன்), போகம் ஆய் - (ஐம்பொறிகளாலும்) அனுபவிக்கப்படும் பொருள்களின் வடிவமாய், விரிந்துஉம்-பரவியும், போகி ஆய்- (அப்பொருள்களை) அநுபவிக்கின்ற பிராணிகளின் உருவமாய், பரந்துஉம் - பரவியும், புலன்களின் வழி - ஐம்புலன்களின்வழியே, மனம் செலுத்தா - (தன்) மனத்தைச் செலுத்தாத, யோகி ஆய் - யோகாநுஷ்டான நிலையையுடையவனாய், இருந்தும்—, யோகிகள் முதல் ஆம் - யோகாப்பியாசஞ் செய்கின்ற முனிவர்கள் முதலாகிய, உரைப்பு அரு - சொல்லமுடியாத, பல பொருள் ஆய்உம்-அனேகபதார்த்தங்களாகியும், ஏகம் ஆய் நின்ற - தனிமையாய் நின்ற, தத்துவம் மறைக்குஉம் எட்டுதற்குஅரிய தன் வடிவில்-உண்மையான வேதங்களுக்கும் எட்டிஅறிவதற்கு அருமையான தனது திருமேனி

யில், பாகம் ஆய் விளங்கும் - இடப்பக்கமாகஇருந்து விளங்குகின்ற, பைந் தொடியுடன் - பசும்பொன்வளையையுடைய பார்வதியோடு, பரிவுடன் - அன்புகொண்டு, சில் மொழி - (இன்னுஞ்) சிலவார்த்தைகளை, பகர்வான் - சொல்பவரானார் ; (எ - று.)—அது, மேல் இரண்டுகவிகளாற் கூறுகிறார்.

'கடவுள் ஒருவனே: சேதனம் அசேதனம் என்னும் யாவும் அப்பெருமானது சரீரம்' என்பது நூற்கொள்கை யாதலால், 'பலபொருளாயும் ஏகமாய்நின்ற தத்துவம்' எனப்பட்டது. அனுபவிக்கும் பொருளும் அனுபவிப்பவனும் தானாய் நின்றும் தான் அவைகளில் யாதும் பற்றில்லாத யோகியாய் நிற்பனென்றும், அன்றியும், யோகியராயும் நிற்பனென்றும், இவ்வாறு இருந்தும் தனது வடிவத்திற் செம்பாதி பெண்வடிவம் வாய்ந்திருப்பவனென்றும், கடவுளது விசித்திரசக்தி இந்தச் செய்யுளில் விளக்கப்பட்டது. சின்மொழி - குளிர்ந்த மொழியுமாம். 'முதலாவுரைப்பரு' எனவும் பாடம். (எஅ)

79.—இதுவும், அடுத்த செய்யுளும்-ஒருதொடர் : சிவபெருமான் மூகாசுரன் வந்திருப்பதைத் தேவிக்குத் தெரிவித்து, அவனைக்கொன்று இவனுக்கு வரங்கொடுக்கவேண்டுமென்றது கூறும்.

கேட்டிநீசெவ்வாய்க்கிளிநிகர்மொழியாய்கிரீடியைத்துணைவர் களுடனே, காட்டிலேயொதுக்கியிளைஞருந்தானுங்கடியவஞ்சனையினாற்கவர்ந்த, நாட்டிலேவாழ்வோனேவலான்மூகநாமதானவனிவன் றன்னைக்,கோட்டிலேகொலைசெயேனமாய்வந்திக்குன்றிடையின்று புக்கனனால்.

(இ - ள்.) செம் வாய் - சிவந்த வாயையும், கிளி நிகர் மொழியாய் - கிளியின்பேச்சை யொத்த (இனிய)சொற்களையு முடையவளே! நீ-, கேட்டி- (யான் சொல்வதைக்) கேட்பாயாக ; கிரீடியை - அருச்சுனனை, துணைவர்களுடன் - உடன்பிறந்தவர்களோடுகூட, காட்டிலே-வனத்திலே, ஒதுக்கி- (வாசஞ்செய்யும்படி) அனுப்பிவிட்டு,இளைஞர்உம் தான்உம்-(தன்)தம்பிமார்களுந் தானுமாக, கடிய வஞ்சனையினால் கவர்ந்த - கொடுமையான சூதாட்டமாகிய வஞ்சனையினாலே அபகரித்துக்கொண்ட, நாட்டிலே-குருநாட்டிலே, வாழ்வோன் - வாழ்பவனாகிய துரியோதனனுடைய, ஏவலால் - கட்டளையினால், மூக நாம தானவன்-மூகனென்னும் பெயரையுடைய அசுரன், இவன் தன்னை - இவ்வருச்சுனனை, கோட்டிலே - (தனது) கொம்பினாலே, கொலை செய் - (குத்திக்) கொல்லுவதற்கு உரிய, ஏனம் ஆய்-பன்றியி னுருவமாகி, இன்று - இன்றைத்தினத்தில், இ குன்றிடை - இம்மலையிலே, வந்து புக்கனன் - வந்துசேர்ந்தான் ; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

தனது உடன்பிறந்த முறையாரான பாண்டவர்களைக் காட்டிலே ஓட்டிவிட்டுத் தானும் தன்தம்பியருமாக இனிது வாழ்கின்ற துரியோதனன் காட்டிலும் பாண்டவா உயிரோடிருத்தலைப்பொறாமல் மூகனென்றுபேர் படைத்த தனதுநண்பனான அசுரனை யேவ,அவ்வசுரன் இந்த அருச்சுனனைக்

கோட்டினுற்குத்திக் கொலைசெய்யக் கருதிப் பன்றியுருவொடு இப்போது இம்மலையிற் புகுந்திருக்கின்றுனென்று சிவபெருமான் பார்வதிதேவியினிடம் கூறுகின்றனனெனக. செவ்வாய்க்கிளிநிகர்மொழியாய் என்பதற்கு-கிளியின் மூக்கை ஒத்துச் சிவந்த வாயையும் அதன்மொழியையொத்துக் கேட்டற்கு மிகஇனிய மொழியையும் உடையவளே எனவும் உரைக்கலாம். கிரீடி-கிரீடமுடையவன்: இந்திரன் அருச்சுனனைத் தன்னுலகத்துக்கு அழைத்துப்போன பொழுது அங்குத் தன்னுசனத்தில் அருத்தாசனங்கொடுத்து அதில் உட்காருவித்துப் பிரமதேவன் தனக்குத் தந்தருளிய இரத்தினகிரீடத்தைச் சூட்டுவதனுல், இவனுக்குக் கிரீடியெனப்பெயர் : இப்பெயர் இவ்வரலாற்றுக்குப் பின்பு அருச்சுனனுக்கு வருவதாயினும், கவி, பிற்காலத்தவராதலால் அப்பெயரைப் பெறுவதற்குஉரியவ னென்னுங் கருத்தால், இங்கே 'கிரீடி' என்ருர் : அன்றியும், பரமசிவன் முற்றுமறிந்தவராதலால் எதிர்காலத்தில் நிகழ்வதை முன்னமே தெரிந்துகூறினு ரென்றுங் கொள்க. ஓதுக்கி வாழ்வோ னெனக. கோடு என்றது, வெளியில் வளர்ந்துவந்திருக்குங் கோரதந்தத்தை. (எகூ)

80. மற்றவன்விரைவினுடனமர்மலைந்து வாசவன்மதலையைவதைத்து, நற்றவமகற்றுமுன்னமேவிரைந்துநாமுயிர்கவருதல்வேண்டுங், கொற்றவன்மதலைகேட்டனவரங்கள் கொடுத்தலும்வேண்டுமென்றெழுந்தான், கற்றவர்வளைத்துத்திரிபுரமெரித்தோன் கற்றவர் கருத்தினுற்காண்போன்.

(இ - ள்.) அவன் - அம்மூகாசுரன், விரைவினுடன் - சீக்கிரமாக, அமர் மலைந்து-போர்செய்து, வாசவன் மதலையை-இந்திரகுமாரனுன அருச்சுனனை, வதைத்து-கொன்று, நல் தவம் அகற்றும் முன்னமே - (அவனது) சிறந்த தவத்தை நீக்குவதற்குமுன்னுகவே, விரைந்து-சீக்கிரமாய், நாம்—, உயிர் கவருதல் வேண்டும் - அவ்வசுரனுயிரைப்போக்க வேண்டும்; (அன்றியும்), கொற்றவன் மதலை-அவ்விராசகுமாரனுன அருச்சுனன், கேட்டன வரங்கள்-கேட்பவையாகியவரங்களை, கொடுத்தலும்வேண்டும்-கொடுப்பதும் வேண்டும், என்று - என்று (அம்பிகையோடு) சொல்லி,—கல் தவர் வளைத்து திரிபுரம் எரித்தோன் - (மேரு) மலையாகிய வில்லை வளைத்துச் சென்று மூன்றுபட்டணங்களையும் எரித்து அழித்தவனும், கற்றவர் கருத்தினுல் காண்போன் - படித்தவரெல்லாராலும் (தமது) அகக்கண்ணுல் தரிசிக்கப்படுகிறவனும் ஆகிய சிவபெருமான், எழுந்தான் - இருக்கைவிட்டு எழுந்தான் ; (எ - று.)

மற்று - அசை. வாஸவன் - அஷ்டவசுக்களுக்குத் தலைவன் ; அல்லது, எல்லாஐசுவரியமு முடையவன். கேட்டன - இயல்பு பற்றி எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட காலவழுவமைதி. கருத்து - மனம் ; அதனுற் காணுதல் - தியானித்தல். கற்றவர் என்பது ஓரடியில்தானே வெவ்வேறுபொருளில் வந்தது - மடக்கு என்னுஞ் சொல்லணி. (அ0)

81.—பரமசிவனும் பார்வதியும் வேடவடிவங்கொள்ளுதல்.

நனைமலர்சிதறித்தொழுதுமுன்னின்றநந்திமேனயனம்வைத்தருளி
வினைபடுகேழல்வேட்டைநாமின்றேவேடராயாடுதல்வேண்டும்
நினைவுறவெமதுகணத்தொடிக்கணத்தேநீயுமவ்வுருக்கொளுகென்று
மனைவியுந்தானுங்கிராதர்தங்குலத்துமகிழ்நனும்வனிதையுமானார்.

(இ - ள்.) (பரமசிவன்), நனை மலர் - (தேனினால்) நனைந்த பூக்களை, சிதறி - (தம்முடைய திருவடிகளில்) இட்டு அருச்சித்து, தொழுது - வணங்கி, முன் நின்ற - (தமது) எதிரில் நின்ற, நந்திமேல் - நந்திகேசுவரர் மேலே, நயனம் வைத்து அருளி - கண்களை வைத்து நோக்கியருளி, 'நாம்—, இன்றே-இப்பொழுதே, வேடர் ஆய்-வேடராகி, வினை படு கேழல் வேட்டை-தீத்தொழிலிற் பொருந்திய பன்றியைக்கொல்லும் வேட்டையை, ஆடுதல் வேண்டும் - ஆடவேண்டும்; (ஆதலால்), நினைவு உற - அவ்வெண்ணத்திற்கு ஏற்க, இ கணத்தே - இந்த க்ஷணத்தில்தானே, எமது கணத்தொடு - எம்முடைய கணத்துடனே, நீயும்—, அ உரு கொளுக - அவ்வேட வடிவத்தை எடுத்துக்கொள்வாயாக', என்று - என்று கட்டளையிட்டு, (உடனே), மனைவிஉம் தான்உம் - தன்மனைவியும் தாமுமாக, கிராதர்தம் குலத்து மகிழ்நன்உம் வனிதைஉம் ஆனார் - வேடர்குலத்திற்பிறந்த ஒரு கணவனும் மனைவியுமாக வடிவங் கொண்டார்; (எ - று.)

சிவபெருமான் எழுந்தருள இருப்பதை உணர்ந்த நந்திகேசுவரன் 'யாது கட்டளை?' என்று வினவுதற் குறிப்பாகப் புஷ்பங்களை அப்பெருமான் திருவடிகளில் அருச்சித்துத்தொழுது முன்னே நிற்க, அந்த நந்திதேவனைக் கடாக்ஷித்து அப்பெருமான் 'எமது கருத்துக்கு இசைய நீ பிரமதகணங்களோடு வேட்டுவவுருக்கொண்டு வருக' என்று கட்டளையிட்டு, தமது மனைவியோடு வேட்டுவ்வடிவுகொண்டன ரென்பதாம். நனைமலர்-வினைத்தொகை: வேற்றுமைத் தொகையாய், அரும்புகளோடு கூடிய பூக்களென்றுமாம். நந்தியென்பவர் - பரமசிவனருகிருந்து பலவகை உபசாரங்களைச் செய்கின்ற பக்தர்களாகிய பிரமதகணங்களுக்குத் தலைவரும், சில சமயங்களிற் சிவபெருமானுக்கு வாகனமும் ஆகி நிற்கும் ஒரு மெய்யடியவர். வேடுஎன்னுந் தொழிலின் பெயராகிய நெடிற்றொடர்க் குற்றியலுகரம், டகரவொற்றிரட்டி ஐகாரச்சாரியை பெற்று 'வேட்டை' என நின்றது; அத்தொழிலுடையவர், வேடர். ஈற்றடி - மனைவியும் தானும் வனிதையும் மகிழ்நனுமானார் எனப் பொருள்கொள்ள வேண்டுதலால், பெயர்களும் பெயர்ப்பயனிலைகளுமாகிய எதிர்நிரனிறைப்பொருள்கோள். (அக)

வேறு

82.—நந்தி கணநாதர்க்கு உரைக்க அவர்களும் வேடவடிவங்கொள்ளச் சிவபெருமானும் வேடவடிவங்கொள்ளல்.

என்றபொழு தினினந்தி முந்திமுதற் கூற்றுதைத்த விருதாள் போற்றி, வென்றிபுனை கணநாதர்க் குரைசெய்தா னவர்களுமவ்

வேடங் கொண்டார், கொன்றைகமழ் முடியோனும்பிஞ்ஞகத்தைப் பின்னல்படு குஞ்சி யாக்கித், துன்றுமயிற் பீலிநெடுங் கண்ணிதிரு நெற்றியுறச் சுற்றி னானே.

(இ - ள்.) என்ற பொழுதினில் - என்று (சிவபிரான்) கட்டளையிட்ட போதில்,—நந்தி - நந்திகேசுவரர், முந்தி - விரைந்து, முதல் - முதலில், கூற்று உதைத்த இரு தாள் - யமனையுதைத்த சிவபெருமானது இரண்டு திருவடிகளையும், போற்றி - வணங்கி,—(பின்பு), வென்றி புனை கணம் நாதர்க்கு - ஜயத்தைக்கொண்ட சிவகணத்தலைவர்கட்கு, உரை செய்தான்- (சிவாஜ்ஞையைச்) சொன்னான்; அவர்கள்உம் - அக்கணநாதர்களும், அ வேடம் கொண்டார் - அந்த வேடவேஷத்தைப் பூண்டார்கள்: கொன்றை கமழ் முடியோன்உம் - கொன்றைப்பூ வாசனை வீசுகிற திருமுடியையுடைய சிவனும், பிஞ்ஞகத்தை - (தமது) அழகியசடையை, பின்னல் படு குஞ்சி ஆக்கி - பின்னுதல் பொருந்திய மயிராகமாற்றி, துன்று மயில் பீலி நெடுங் கண்ணி - நெருங்கிய மயிலிறகினாற் செய்த நீண்ட நெற்றி மாலையை, திரு நெற்றி உற சுற்றினான்-(தமது) அழகிய நெற்றியிலே பொருந்தச் சுற்றிலும் அணிந்தார் : (எ - று.)

ஊழ்வினையினாற் பதினாறுபிராயம்பெற்ற மார்க்கண்டேய முனிவன் கூற்றுவன்வந்து காலபாசத்தால் தன்னைக் கட்டியிழுக்குங் காலத்துப் பரம சிவனைச் சரணமடைய, அப்பெருமான் யமனைக் காலாலுதைத்துத் தள்ளி அம்முனிகுமாரனுக்கு என்றும் பதினாறாகத் தீர்க்காயுசு கொடுத்தருளின னென்பது, கதை. இந்தக் கதையால் அனுபவித்தே தீரவேண்டிய ஊழ் வினையையும்தன்னடியாரைக் கடக்கச்செய்கிற கடவுளது திருவருளுடைமை விளங்கும்.

இதுமுதல் மூன்றுகவிகள் - இச்சருக்கத்தின் 43-ஆங் கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (அஉ)

83.—இதுவும் - சிவபெருமான் வேடவடிவங்கொண்டமை கூறும்.

நீலமணித்திருக்கண்டநிலவெழவே பலகறைப்பூணிறையக் கட் டிக்,கோலமணிக்குழைகளினுங்குழையாகப்பிணையன்மலர் கொண் டுசாத்திச், சேலையெனப்புலியதளுந்திருமருங்கினுறச்சேர்த்திச்செ ய்யபைம்பொற், காலிணையிற்செருப்பணிந்துசெய்யதிருவடிவுமிகக் கரியனானான்.

(இ - ள்.) (பரமசிவன்), நீலம் மணி திரு கண்டம் - நீலரத்தினம் போலக்கறுத்த (தமது) கழுத்திலே, நிலவு எழ - சந்திரகாந்தி போன்ற ஒளியுண்டாம்படி, பலகறை பூண் - பலகறைகளாகிய ஆபரணத்தை, நிறைய- நிரம்ப, கட்டி - தரித்து,— கோலம் மணி குழைகளின்உம் - அழகிய இரத் தினங்களைப்பதித்துச்செய்த குண்டலங்களைக் காட்டிலும், குழை ஆக - சிறந்த குண்டலமாம்படி, பிணையல் மலர்-தொடுத்த சிலமலர்களை, கொண்டு சாத்தி - எடுத்து (க் காதிலே) அணிந்து, சேலைஎன - ஆடையாக, புலி

அதள்உம் - புலித்தோலையும், திரு மருங்கில் - அழகிய இடையிலே, உற சேர்த்தி - நன்றாக இறுக்கக்கட்டி,—செய்ய பைம்பொன் - சிவந்த பசும் பொன்னுபரணங்களை யணிந்த, கால்இணையில் - இரண்டு திருவடிகளிலும், செருப்பு அணிந்து - செருப்பைத்தரித்து, செய்ய திரு வடிவு மிக கரியன் ஆனான்-சிவந்த (தமது)அழகிய வடிவம் மிகவுங் கறுத்தவனானார் ; (எ - று.)

பிணையல் - பின்னியமாலை, தொழிலாகுபெயர். "செம்பொன் வரை மேற் பசும்பொன்னெழுத்திட்டதேபோல்" என்பதிற்போல, 'செய்யபைம் பொன்' என்ற இடத்தும் செம்மை பசுமை வருணத்தின் வேறுபாட்டைக் காட்டவில்லை. பொன் - ஆபரணத்துக்கு ஆகுபெயர். (அங)

84.—கவிக்கூற்று : சிவபிரான்கொண்ட வேட்டுவவேடச் சிறப்பு.

இடக்கைமலர்வரிசிலையும் வலக்கைமலர்ப்பாணமும்வெந் நிடையேபாண, மடக்கியவெங்கொடுவரித்தோலாவநாழிகையுமிகவழகுகூரக், கடக்களிறன் றுரித்தபிரான்கண்டவர்கள்வெருவரமுன்கொண்டகோலந், தொடக்கியுரைசெயநினைக்கிலாயிரநாவுடையோற்குஞ் சொல்லலாமோ.

(இ - ள்.) கடம் களிறு அன்று உரித்த பிரான் - மதயானையை முன்னொருகாலத்தில் தோலுரித்த சிவபிரான், இடம் கை மலர் - தாமரைமலர் போலும் (தமது) இடதுகையில், வரி சிலைஉம்-கட்டமைந்த வில்லும், வலம் கை மலர் - தாமரைமலர்போலும் (தமது) வலது கையில், பாணம்உம் - அம்பும், வெந் இடையே - முதுகிலே, பாணம் அடக்கிய வெம் கொடுவரி தோல் ஆவம் நாழிகைஉம்-பாணங்களை(த் தன்னுள்ளே) யடக்கிவைத்துக் கொண்டுள்ள கொடிய புலியின் தோலாலாகிய அம்பறாத்தூணியும், மிக அழகு கூர - மிகவும் அழகைப் பொருந்தவும், கண்டவர்கள் வெருவர - பார்த்தவர்கள் அஞ்சும்படியாகவும், முன் - விரைவாக, கொண்ட - எடுத்துக்கொண்ட, கோலம் - வேடவேஷத்தை, தொடக்கி உரைசெய நினைக்கில் - ஆரம்பித்துச் சொல்ல நினைத்தால்,—ஆயிரம் நா உடையோற்குஉம் - ஆயிரம் நாவையுடைய ஆதிசேஷனுக்கும், சொல்லல் ஆம் ஓ-சொல்லுதற்கு முடியுமோ ? [முடியாது] ; (எ - று.)

சிவனது வில்லுக்குப் பிநாகமென்றுபெயர். கொடுவரி - வளைவான உடற்கோட்டையுடைய தெனப் புலிக்கு அன்மொழித்தொகை. ஆயிரந்தலைகளையுடைய ஆதிசேஷனுக்கு நா இரண்டாயிர மாதலால், இச்செய்யுளில், ஆயிரம் - பல என்னும் பொருளது. (அச)

வேறு

85.—இதுவும் அது.

குறைந்த சந்திர கிரணமும் பீலியுங் கொன்றையந் திருத்தாரும்
புறந்த யங்கிட விழுந்தசெந் தனிச்சடைப் பொலிவையார் புகல்கிற்பார்
சிறந்த பைம்பொலங் கிரிமுடி யடியுறத் தேவர்கோன் றிருச்செங்கை
நிறந்த ருஞ்சிலை வளைவற வழகுற நிமிர்ந்துநின் றதுபோலும்,

(இ - ள்.) குறைந்த சந்திரகிரணம்உம்-கலைகள்குறைந்த பிறைச் சந்திரனது வெண்மையான ஒளியும், பீலிஉம் - பீலிநிறமுள்ள மயிலிறகும், கொன்றை அம் திரு தார்உம் - (பொன்னிறமாகிய) கொன்றைப்பூக்களினாலாகிய அழகிய மேலான மாலையும், புறம் தயங்கிட—தன்மேல் விளங்கும்படி, விழுந்த - (சிவபிரானது உடம்பில்) விழுந்துள்ள, செம் தனி சடை பொலிவை - சிவந்த ஒப்பற்ற சடையினது அழகை, யார் புகல்கிற்பார் - யார் சொல்லவல்லவர்? [எவருஞ் சொல்லவல்லவரல்லர்]: (அத்திருச்சடை),—சிறந்த பைம் பொலம் கிரி முடி அடிஉற - (மலைகளிற்) சிறந்த பசும்பொன்மயமான மேருமலையினது சிகரத்தினின்றும் அடியைப்பொருந்தும்படி, தேவர்கோன் திரு செம் கை நிறம் தரு சிலை - தேவர்களுக்கு அரசனான இந்திரனது அழகிய சிறந்த கையில்தரிக்கின்ற பலநிறங்களைக் காட்டுகின்ற வானவில்லானது, வளைவு அற - வளைவில்லாமல், அழகுஉற - அழகுபொருந்த, நிமிர்ந்துநின்றது - நேராய்நின்றதை, போலும் - ஒக்கும்.

சிவபெருமானதுபுறத்திலே பீலி முதலியவற்றைக் கொண்ட சடை தொங்கிக்கிடப்பது, மேருமலையிலே இந்திரவில் வளைவற்றுக்கிடப்பது போலுமென்றார்: தன்மைத் தற்குறிப்பேற்றவணி.

இது-முதற்சீர் புளிமாச்சீரும், ஈற்றுச்சீர் புளிமாங்காய்ச்சீரும், இடையில்நான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (அ௫)

வேறு

86.—பார்வதிதேவிகொண்ட வேட்டுவிச்சி வடிவவருணனை.

வரையரசன் றிருமடந்தை வனமுலைமேன் மணிக்குன்றி வடமுஞ் செங்கை, நிரைவளையும் புலிப்பல்லா னிறந்திகழ்மங் கலப்பூணு நீல மேனி, விரையகிலி னறுஞ்சாந்தும் விரித்ததழைப் பூந்துகிலும் வேட மாதர், நிரைநிரையே தனைச்சூழ நின்றவடி வழகினுக்கு நிகர் வே றுண்டோ.

(இ - ள்.) வரை அரசன் திருமடந்தை - பார்வதி, வனம் முலைமேல்-(தனது) அழகிய தனங்களின்மேல், மணி குன்றி வடம்உம் - குன்றிமணிகளைக்கோத்தஆரமும், செம் கை - சிவந்த கைகளில், நிரை வளைஉம் - வரிசையான வளையல்களும், புலி பல்லால் நிறம் திகழ் மங்கலம் பூண்உம் - புலியினது பல்லைக்கோத்ததனால் ஒளிவிளங்குகின்ற மங்கலநாணும், நீலம் மேனி - (தனது) நீலநிறமாகிய திருமேனியில், விரை அகிலின் நறு சாந்துஉம் - வாசனையையுடைய அகிற்கட்டையின் தேய்வினாலாகிய வாசனை வீசுகின்ற பூச்சும், தழை விரித்த பூ துகில்உம் - மரத்தின்தழைகளைப்பரப்பினதாலாகிய அழகியசேலையும் (பொருந்த), வேடமாதர் நிரைநிரைஏ தனை சூழ-வேடப்பெண்கள் கூட்டங்கூட்டமாகத் தன்னைச் சுற்றி நிற்கும்படி, நின்ற-(தான்) வேட்டுவிச்சிவடிவமெடுத்துநின்ற, வடிவு அழகினுக்கு-திருமேனியின் அழகுக்கு, வேறுநிகர்உண்டுஓ-வேறு ஒப்புஉளதோ? (எ - று.)—மங்கலப்பூண் - மங்கலத்துக்கு அடையாளமான ஆபரணம்.

இதுமுதல் ஆறுகவிகள் - இச்சருக்கத்து 43 - ஆங்கவிபோன்ற அறு சீராசிரிய விருத்தங்கள். (அசு)

87.—சிவபெருமான் பிரமதகணங்கள் சூழ்ந்துவர மனைவியோடும் புறப்பட்டுச் செல்லுதல்.

ஓரேனந்தனைத்தேடவொளித்தருளுமிருபாதத்தொருவனந்தப், போரேனந்தனைத்தேடிக்கணங்களுடன் புறப்பட்டான்புனங்களெல்லாஞ், சீரேனல்விளைகிரிக்குத்தேவதையாங்குழவியையுஞ்செங்கையேந்திப், பாரேனையுலகனைத்தும்பணிவுடனேபுகழ்ந்திடத்தன்பதிபின்வந்தாள்.

(இ - ள்.) ஓர் ஏனம் - ஒருபன்றி, தனை தேட - தன்னைத் தேடி நிற்க, ஒளித்தருளும் - (அதற்குக் காணவொண்ணாதபடி) மறைத்தருளிய, இரு பாதத்து - இரண்டுதிருவடிகளையுடைய, ஒருவன் - ஒப்பற்ற பரமசிவன்,- அந்த போர் ஏனந்தனை தேடி - (அருச்சுனனோடு) போர்செய்தற்கு வருகிற மூகாசுரனாகிய அந்தப்பன்றியைத் தேடிக்கொண்டு, கணங்களுடன் - (வேடவடிவங்கொண்ட) பிரமதகணங்களுடனே, புறப்பட்டான் -(வேட்டைக்குப்) பிரயாணமானார்; (உமாதேவியும்), புனங்கள் எல்லாம் - கொல்லைகளிலெல்லாம், சீர் ஏனல் - சிறந்த தினைப்பயிர், விளை - விளையப்பெற்ற, கிரிக்கு - மலைக்கு உரிய, தேவதை ஆம் - தெய்வமாகிய, குழவியைஉம் - (சுப்பிரமணியக் கடவுளாகிய) குழந்தையையும், செம் கை ஏந்தி - சிவந்த கையிலே எடுத்துக்கொண்டு, பார் - பூமியிலுள்ளவர்களும், ஏனை உலகு அனைத்துஉம் - மற்ற உலகங்களெல்லாவற்றிலுமுள்ளவர்களும், பணிவுடனே - வணக்கத்தோடு, புகழ்ந்திட - துதிக்குமாறு, தன் பதி பின் - தனது கணவனது பின்னே, வந்தாள்—; (எ - று.)

முன்பு ஒருபன்றியினால் தேடிக் காணமுடியாமற்போன பாதங்களையுடைய ஒருவர், இப்பொழுதுஒருபன்றியைக் காணும்பொருட்டு அதனடிகளைத் தேடிப் புறப்பட்டாரென்று கவி ஒருவகைச்சாதுரியந் தோன்றக் கூறினார். ஏனந்தனைத்தேட நின்ற சரிதம், கீழ்க்கூறப்பட்டது. அப்பிரமவிஷ்ணுக்கள் அங்ஙனந்தேடிக் காண முடியாமையாற் செருக்குஒழிந்து பூசிக்க, அவர்களுக்குச் சிவபிரான் பிரதியட்சமாகித் தரிசனந் தந்துநின்றானென்பது தோன்ற, 'அருளும்' என்றது. ஏனம் என்பதை ஏநஸ் என்னும் வடமொழித்திரிபாகக் கொண்டால், பாவமென்று பொருள்படுமாதலால், ஒப்பற்ற தீவினையுடையவர்கள் தன்னை யெதிரில் தேடிக்காணுமாறுமுயல அவர்களுக்கு அகப்படாதபடி மறைத்தருளிய உபயபாதங்களையுடையவனான உருத்திரமூர்த்தியென்று பொருளுரைப்பர், ஒரு சாரார். ஏனம் - இலக்கணையால், பாவிகளை உணர்த்திற்று. மலையும் மலையைச்சார்ந்த இடமுமாகிய குறிஞ்சிநிலத்துக்கு முருகக்கடவுள் தெய்வ மாதலை "சேயோன் மேய மைவரை யுலகமும்" என்னுந் தொல்காப்பியத்தால் அறிக. பார், உலகு-இடவாகுபெயர்கள். ஏனை-பிறிதென்னும்பொருளது: இடைச்சொல்.

88.—சிவபெருமான் பரிவாரங்களோடு பன்றியின் அடிவைப்பைத் தேடிப் பார்த்தல்.

அனந்தவேதமுமிறைவனேவலினுன் ஞாளிகளாயருகுசூழ
வனந்தகோடியிற்கோடிகணநாதர்வேட்டுவராயருகுபோத
வனந்தனலினித்தரிக்கவரிதரிதிப்பூதலமென்றமரர்கூற
வனந்தமாமுகமாகியடிச்சுவடுநோக்கினனடவியெல்லாம்.

(இ - ள்.) இறைவன் - (யாவர்க்குந்) தலைவனான சிவபெருமான், ஏவலினால் - (தமது) கட்டளையினால், அனந்தம் வேதம்உம் - எல்லையில்லாத வேதங்களெல்லாம், ஞாளிகள் ஆய் - வேட்டை நாய்களாகி, அருகு சூழ - பக்கங்களிற் சுற்றிவரவும்,—அனந்தம் கோடியின் கோடி - அளவில்லாத கோடிகளினும் பலகோடிகளாகிய, கணநாதர் - கணத்தலைவர்கள், வேட்டுவர் ஆய் - வேடர்களாகி, அருகு போத - பக்கங்களில்வரவும்,—இ பூதலம்- இந்தப் பூமியை, இனி - இனிமேல், அனந்தனால் - ஆதிசேஷனால், தரிக்க- சுமக்க, அரிது அரிது - முடியாதுமுடியாது, என்று—, அமரர்-தேவர்கள், கூற - சொல்லவும்,—அனந்தம் மா முகம் ஆகி - எல்லையில்லாத பெரிய பல வகைகளால், அடவி எல்லாம் - காடுமுழுவதிலும், அடி சுவடு - (பன்றியினது) கால்களின் அடையாளத்தை, நோக்கினன்-பார்த்தருளினார்; (எ-று.)

சிவபெருமான் பன்றிவடிவுகொண்ட மூகாசுரனுடைய அடிச்சுவடுகளைக் காட்டில் நாற்புறத்திலும் தேடிப்பார்த்தனரென்பதாம். ஆதிசேஷனாற் பூமியைப் பரித்தல் முடியாதென்றது, அளவற்ற சகல கணங்களும் ஒருங்கேகூடிச் சஞ்சரிப்பதனாலென்க. அடிச்சுவடுகளை நோக்குதல், சென்ற வழியை அறியும்பொருட்டு. ந+அந்தம்=அநந்தம்: முடிவில்லாதது; அந்தம் - முடிவு. வேதம் - ருக், யஜுஸ், ஸாமம், அதர்வணம் என்று நான்காகும். இப்படி நான்கு பகுப்பான வேதம் ஒவ்வொன்றும் "அநந்தாவை வேதா:" என்றபடி மிகவும் விரிந்திருத்தலால், 'அனந்தவேதம்' என்றார். அநந்தனென்பதற்கு - (பிரளயகாலத்திலும்) அழிவில்லாதவனென்று பொருள். அரிது அரிது - அடுக்கு, தேற்றப்பொருளது. பூதலம் - பூமியினுடைய இடம் என ஒற்றுமைப்பொருளில்வந்த ஆறும்வேற்றுமைத் தொகையாகவாயினும், பூமியாகிய இடம் என இருபெயரொட்டுப் பண்புத் தொகையாகவாயினுங் கொள்க. (அஅ)

89.—சிவபெருமான் பன்றியைக் காண்கையில், அது அருச்சுனனை யாறுதல்.

மூகதானவனிவன்மேன்முந்தியுயிர்கவருமெனுஞ்சிந்தையானப்
பாகசாதனிதவஞ்செய்பாக்கியபூமியைநோக்கிப்பரிவினோடு
மேகசாபமும்வணக்கியேகினனேகுதனுமிலங்குவெண்ணீற்
றுகனுனேக்கப்பட்டனுகியதாலருந்தவன்மேலந்தவேனம்.

(இ - ள்.) (சிவபிரான்), 'மூக தானவன் - மூகாசுரன், இவன்மேல் - இவ்வருச்சுனன்மேலே, முந்தி - முற்பட்டுப்பாய்ந்து, உயிர் கவரும் - இவ

னுயிரை ஒழிப்பனே,' எனும் சிந்தையான் - என்கிற கவலையையுடைய னாய்,—அ பாகசாதனி - அவ்விந்திரகுமாரன், தவம் செய் - (நின்று) தவஞ் செய்கின்ற, பாக்கியபூமியை நோக்கி - சித்திபெறுதற்குரிய இடத்தைக் குறித்து, பரிவினோடும் - அன்புடனே, ஏக சாபம்உம் வணக்கி - ஒப்பற்ற வில்லையும் வளைத்துக்கொண்டு, ஏகினான் - சென்றருளினான்: ஏகுதலும் - சென்றவளவில், அந்த ஏனம் - அப்பன்றி, இலங்கு வெள் நீறு ஆகனால் - விளங்குகின்ற வெண்ணிறமான விபூதியைத் தரித்த திருமேனியையுடைய அப்பரமசிவனால், நோக்கப்பட்டு - பார்க்கப்பட்டு, அரு தவன்மேல் - அருமையான தவத்தையுடைய அருச்சுனன்மேலே, அணுகியது - நெருங்கி வந்தது; (எ - று.)

பன்றியைக் கண்டவுடனே அதனைக் கொன்று வீழ்த்தும்படி வில்லை நாணேற்றிச் சித்தமாகவைத்துக்கொண்டு, சிவபெருமான், 'நாம் இந்தப் பன்றியைக் கண்டுபிடித்தற்குமுன்னமே அது அருச்சுனனது உயிரைக்கொள்ளுமோ?' என்னுங் கவலையோடு அருச்சுனன் தவஞ்செய்யுமிடத்தை நோக்கி விரைந்துசெல்லுகையில், அப்பெருமானது கண்காண அப்பன்றி அருச்சுனனை நெருங்கிவந்த தென்பதாம். பாகனென்னும் அசுரனைக் கொன்றதனால், இந்திரனுக்குப் பாகசாஸந னென்று பெயர்; அவன் மகன் - பாகசாஸநி: தத்திதாந்தநாமம். ஏகசாபம் - ஒப்பற்றவில்; வடமொழித்தொடர். பாக்கியபூமி - புண்ணியபூமி என்பாருமுளர். (அகூ)

90.—அருச்சுனன் பன்றியின்முகத்தில் அம்பெய்ய, பரமசிவன் அதன் பின்புறத்தில் அம்பெய்தல்.

*அதிர்ந்துவருகேழலைக்கண்டருந்தவத்தையழிக்குமெனவஞ்சி நாளு, முதிர்ந்தசருகுணவொழியவுணவிலான்விரைவினிற்றனொரு வில்வாங்கி, முதிர்ந்தசினத்துடனெய்தான்முகம்புதையவக்கணைக்கு முன்னேயண்டம், பிதிர்ந்திடவின்னொணிந்துவேடனதனபராங் கம்பிளக்கவெய்தான்.*

(இ - ள்.) நாள்உம் - தினந்தோறும், உதிர்ந்த சருகு உணவு ஒழிய - (மரங்களினின்று) சிந்தின உலர்ந்த இலைகளை உண்ணுவதேயல்லாமல், உணவு இலான் - வேறு உணவில்லாத அருச்சுனன்,—அதிர்ந்து வரு - (தன்மேல்) ஆரவாரித்துவருகின்ற, கேழலை - பன்றியை, கண்டு - பார்த்து, அரு தவத்தை அழிக்கும் என - (தனது) அருமையான தவத்தை (இது) கெடுக்குமென்று நினைத்து, அஞ்சி - பயந்து, விரைவினில் - சீக்கிரமாக, தன் ஒரு வில் வாங்கி - தனது ஒப்பற்ற (காண்டீவமென்னும்) வில்லை வளைத்து, முதிர்ந்த சினத்துடன் - மிகுந்த கோபத்துடனே, முகம் புதைய - (அப்பன்றியின்) முகத்திலே தைக்கும்படி, எய்தான் - அம்பெய்தான்; வேடன் - வேடரூபங்கொண்டசிவபிரான், அண்டம் பிதிர்ந்திட - (ஓசையின்மிகுதியால் உண்டான அதிர்ச்சியால்) உலக வுருண்டை வெடிக்கும் படி, வில் நாண் எறிந்து - வில்லினது நாணியைக் கைவிரலால்தெறித்து

(க் குணத்தொனிசெய்து), அ கணைக்கு முன்ன - அவ்வருச்சுனனம்புக்கு முன்னே, அதன் அபராங்கம் பிளக்க - அப்பன்றியின் பின்பக்கம் பிளக்கும் படி, எய்தான் - (ஒருபாணத்தைப்) பிரயோகித்தான்; (எ - று.)

நாளும், உம்மை - தொறுப்பொருளது. அபர அங்கம் - பின்னாகிய உறுப்பு. அபராங்கமென்பதன் எதிர்மொழி - பூர்வாங்கம் என்பது. சருகுண வொழிய வுணவிலான் என்பதற்கு - சருகாகிய உணவையும் ஒழியவிட்டு வேறே ஓர் உணவு மில்லாதவ னென்று உரைப்பாரு முளர். (கo)

91.—அருச்சுனனுடன் வேடர்கள் சண்டைக்கு வருதல்.

இருவருமேவியவாளியுடனேபட்டுடலுருவியேனம்வீழ
வெருவருமாறடவியெலாந்தடவிவருவெஞ்சிலைக்கைவேடன்சேனை
யொருவன்முதலெய்திருக்கவவ்விலக்கைநீயெய்ததுரனோவென்று
பொருவருமாதவம்புரியும்புருகூதன்மதலையுடன்பூசலிட்டார்.

(இ - ள்.) இருவர்உம் - வேடனும் அருச்சுனனும், ஏவிய - எய்த, வாளி - அம்புகளிரண்டும், உடனே - ஒரு காலத்திலே, பட்டு - தைத்து, உடல் உருவி - உடம்பைத் துளைத்ததனால், ஏனம் - பன்றி, வீழ - இறந்து விழ, வெருவரும் ஆறு - (கண்டபிராணிகள்) அஞ்சும்படி, அடவி எல்லாம்-காடுமுழுவதிலும், தடவிவரு - (பன்றியைத்) தேடிவந்த, வெம் சிலை கை வேடன் - கொடியவில்லைத் தரித்த கையையுடைய வேடனது, சேனை - சேனையிலுள்ள வேடர்களெல்லாம், (அருச்சுனனை நோக்கி), 'ஒருவன் முதல் எய்துஇருக்க - ஒருத்தன் முன்னே (குறியாகக் கொண்டு பாணத்தைப்) பிரயோகித்திருக்க, அ இலக்கை - அந்தக்குறியையே, நீ எய்தது - நீ அம்பெய்து துளைத்தது, உரன்ஓ-வலிமைச்செருக்கோ', என்று - என்று சொல்லிக்கொண்டு, பொருவு அரு மா தவம் புரியும் - ஒப்பில்லாத பெரிய தவத்தைச் செய்கின்ற, புருகூதன் மதலையுடன்-இந்திரகுமாரனான அவனுடனே, பூசல் இட்டார்-சண்டைசெய்யத் தொடங்கினார்கள்; (எ - று.)

உருவி - காரணப்பொருளதாகிய உருவ என்னுஞ் செயவெனெச்சத்தின் திரிபு; இது - வேறுகருத்தாவின்வினையாகிய வீழ என்பதைக் கொண்டது. சேனை - இடவாகுபெயர். இலக்கு - லக்ஷ்யம் என்னும் வடமொழியின் திரிபு. புருகூதன் - மிக்க [நூறுமன] யாகங்களைச் செய்தவன்: யாகங்களில் மிகுதியாக அழைக்கப்படுபவனென்றும் உரைப்பர். பூசல் - பேராரவாரமுமாம். உரன் - மகர னகரம்மாறிவருஞ்சொல். இலக்கை யென்றவிடத்து, விலங்கையென்றும் பாடம். (கக)

வேறு.

92.—அர்ச்சுனன் சிவபிரானோடு சொல்லத் தொடங்குதல்.

புராத னாகம வேத கீதபு ராண ரூபமொ ழித்துவெங்
கிராத னாகிய வடிவு கொண்டகி ரீச னோடுரை செய்குவான்
விராத னாதிநி சாச ரேசரை வென்று முச்சிக ரத்தின்மே
லிராத வாறட லமர்பு ரிந்தவி ராம னேநிக ரேவினான்.

(இ - ள்) விராதன் ஆதி - விராதன் முதலான, நிசாசர ஈசரை — இராக்கதத்தலைவர்களை, வென்று - சயித்து, முச்சிகரத்தின்மேல் இராத ஆறு - மூன்று சிகரங்களையுடைய திரிகூடகிரியில் இல்லாதபடி, அடல் அமர் புரிந்த — கொடிய போரைச் செய்த, இராமன்ஐ — தசரதராமனையே, நிகர்— ஒத்த, வலினன்—அம்பின் தொழிலையுடைய அருச்சுனன்,—புராதனம் - பழமையான, ஆகமம் - ஆகமங்களினாலும், வேதம் - வேதங்களினாலும், கீதம் - சிறப்பித்துச் சொல்லப்படுகிற, புராணம் - பழமையான, ரூபம் - (தனது நிஜ) ரூபத்தை, ஒழித்து - நீக்கி, வெம் கிராதன் ஆகிய வடிவு கொண்ட - கொடிய வேடனாகிய ரூபத்தை எடுத்துக்கொண்ட, கிரி ஈசனோடு - கைலாசமலைக்குத் தலைவனான சிவனுடனே, உரைசெய்குவான் - சொல்வானானான்; (எ - று.) — அதனை, மேலிரண்டு கவிகளாற் கூறு கின்றார்.

தனது நிஜவடிவமொழித்து வேடவடிவு கொண்டு வந்த சிவபிரானை இன்னானென்று உணராத அருச்சுனன் பின்வருமாறு கூறலாயின னென்க. 'புராதனாகமவேதகீத புராணரூபமொழித்து வெங்கிராதனாகிய வடிவு கொண்ட கிரீசன்' என்பதனால், கடவுள் தன்னைச் சரணமடைந்தவரைப் பாதுகாத்தற்பொருட்டுத் தன்னையழியமாறியும் வந்து திருவருள் புரிவ னென்பது பெறப்படும். அருச்சுனன், நிவாதகவசர் காலகேயர் முதலிய அசுரவர்க்கங்களையெல்லாம் ஒழித்துப் பூமிபாரத்தை நிவர்த்திசெய்யப் போவதைத் தோற்றுவாய் செய்யுமாறு இங்கு அரக்கரைப் பூண்டோடு ஒழித்துத் தருமத்தை நிலைநாட்டிய இராமமூர்த்தியை அவனுக்கு உவமை கூறினார். புராதந + ஆகமம் = புராதநாகமம்: தீர்க்கசந்தி. புராதனாகம வேத கீதபுராணரூபம் - வடமொழித்தொடர். ஆகமம் - காமிகம்முதல் வாதுளம் ஈறாகச் சிவபிரானால் வெளியிடப்பட்ட இருபத்தெட்டும்; இவை சைவசமயத்துக்குச் சிறப்பாயிருத்தலால், வேதத்துக்கு முற்கூறினார்.

இராமனால் வனவாசகாலத்திற் கொல்லப்பட்ட இராக்கதர்களுள் விராதன் முந்தியவனானதால், இவனை முதலாகக் கூறினார். நிசாசரர் - இராத்திரியிற் சஞ்சரிப்பவர்; இராக்கதர்களுக்குப் பகலினும் இரவில் வலிமை அதிகம். நிசாசர + ஈசர் = நிசாசரேசர்; குணசந்திபெற்ற வடமொழித்தொடர் திரிந்து வந்தது; முச்சிகரம் - பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை, திரிகூடம் என்பதற்குப் பரியாயமாக இவ்வாறுகூறினார். ராக்ஷச ராஜதானியாகிய லங்காநகரி திரிகூடமென்னும் மலையின்மேல் உள்ளதாதலால், 'முச்சிகரத்தின்மேல் இராதவாறு' என்றார். தன்திறத்தில் யாவரும் மனங்களித்திருக்கப்பெற்றவன் என்பது, ராமஎன்னுஞ்சொல்லுக்குப் பொருள்; சகலசற்குணங்களும் பொருந்தினவனென்பது, கருத்து.

விராதன் என்னும் வடசொல்லுக்கு - மிகுதியாய் அபராதஞ்செய்பவனென்று பொருள்; இவன், முன் தும்புருவென்னும்பெயருள்ள கந்தருவனாயிருந்து குபேரனது சாபத்தாற் பின்பு இராட்சசனாகி வனத்தில் திரிந்து

வந்தவன்: இராமலட்சுமணர்கள் சீதையுடனே தண்டகாரணியத்திற் செல்லுகையில், இவ்வரக்கன் வந்து ஜானகியைத் தூக்கிக்கொள்ளக் கண்டு இராமலட்சுமணர் எதிர்க்க, அவன் அவளைவிட்டு இவர்கள் இருவரையுந் தூக்கிக்கொண்டு செல்ல, ராகவவீரர்கள் அவனைத் தோள்களை வெட்டிக் குற்றுயிராக்கி, அவன் தனது பிறப்பை உணர்த்தி வேண்டிக்கொண்டபடி பள்ளம் வெட்டிப் புதைத்துச் சென்றன ரென்பது, கதை.

இதுமுதல் மூன்றுகவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றையவை விளச்சீர்களுமாகிவந்த எழுசீராசிரிய விருத்தங்கள். (கஉ)

93.—இதுவும், அடுத்தகவியும் - தன்னோடு வீண்வழக்காடாமல் அப்பன்றியைக்கொண்டுபோமாறுசிவபிரானைநோக்கி அருச்சுனன்அதட்டிக்கூறுதல்.

முன்புவிட்டவென்வாளிகேழன்முகம்பிளந்துபினுருவநீ
பின்புவிட்டசரஞ்சிரத்திடையுருவுமாறுபிளந்ததால்
வன்பொடிப்படிபுகலுகின்றதுவன்மையோதிறல்வின்மையோ
வென்பெயர்ப்பொறியேவுபாரிதனுடலினீவிடுமேவுபார்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) முன்பு விட்ட - முன்னே எய்த, என் வாளி - எனது அம்பு, கேழல் முகம் பிளந்து - பன்றியின் முகத்தைப் பிளந்து, பின் உருவ - பின் பக்கமாய்த் துளைத்துச்செல்ல, நீபின்பு விட்ட சரம் - நீ பின்னால்விட்ட அம்பு, சிரத்திடை - (அதன்) தலையிலே, உருவும் ஆறு - துளையுண்டாம்படி, பிளந்தது—; ஆல்-ஆதலால், இ படி வன்பொடு புகலுகின்றது-(நீங்கள்) இவ்வாறு கொடுமையாகச் சொல்லுகிறது, வன்மையோ - தேகபலத்தாலோ? திறல் வின்மையோ - வலிய வில்லின்தொழிலில் வல்லமையாலோ ? இதன் உடலில்- இப்பன்றியினது உடம்பிலே, என் பெயர் பொறி ஏவு பார்-எனதுபெயரை அடையாளமாக மேலே எழுதியுள்ள அம்பு தைத்த இடத்தைப் பார்; நீ விடும் ஏவு பார் - நீ எய்த அம்பு தைத்த இடத்தையும் பார் ; (எ - று.)

செத்த பாம்பை அடிப்பதுபோல, வேறொருவன் இலக்காகஎய்து கொன்றதை யான் எய்பவனல்லேன்; இது, என்னைக் கொல்லவருவது தெரிந்து நான் முதலில் இதனை எய்தேன்; ஒருகால் நான் எய்ததை நீ உணராமலிருக்கலாம்; நீயோ நான் எய்தபின்பே இந்தப்பன்றியைப் பின்புறத்திலிருந்து முகத்தைத் துளைத்துப்போகும்படி அம்புஎய்தாய்; எய்ததும் இதோ தனியே தெரிகின்றது. இப்படி யிருக்க, வீணுகச் சண்டையிடுவானேன் ? நீங்கள் சண்டையிடுவதற்குக் காரணம் வில்லில் நாம்தாம் வல்லவரென்ற கருத்தா ? அல்லது நம்மினும் விஞ்சிய பலசாலிகள் வேறு இல்லையென்ற கருத்தா ? வில்வல்லமையிலும் சரி, உடல்வலிமையிலும் சரி, நான் உங்கட்குப் பின்வாங்குபவனல்லேனென்று அருச்சுனன் வேடனுகிவந்த

சிவபிரானோடு கூறினனென்பதாம். சிவபிரானது அம்பே முன் எய்யப் பெற்றதென்பதை மறுக்க, 'முன்பு விட்ட என் வாளி, நீ பின்பு விட்ட சரம்' என்று கூறினான். முதலடியில் முன்பு பின்பு என்று மாறுபட்டசொற்கள் வந்தது - முரண்டோடை. ஏ என்னும் பெயர்ச்சொல், உகரச்சாரியைபெற்று 'ஏவு' என நின்றது. ஓகாரங்கள் - வினாவோடு ஐயப்பொருளன. (௯௩)

94. எனக்கருந்தவமுயறலாலுதிர்சருகலாலுணவில்லையா
லுனக்குமுன்படைவேடருக்குநல்லுண்டியாமிதுகொண்டுபோ
வனக்குறும்பொறைநாடவுன்படைவலிமைகொண்டுவழக்கறச்
சினக்கில்வெங்கணைவிடுவன்யானுயர்திசைதொறுந்தலைசிந்தவே.

94.—(இ - ள்.) வனம் - காடுகளினாற்சூழ்ந்த, பொறை - மலையிடமாகிய, குறு நாட - சிறிய நாட்டுக்குத் தலைவனாகிய வேடனே!—அரு தவம் முயறலால் - (யான்) அருமையான தவத்தைச் செய்தலினால், எனக்கு—, உதிர் சருகு அலால் - உதிர்ந்த சருகை யல்லாமல், உணவு இல்லை - வேறு போஜனம் இல்லை; ஆல் - ஆதலால், இது - இப்பன்றி, உனக்கும்—, உன் படை வேடருக்குஉம் - உனது சேனையிலுள்ள வேடர்களுக்கும், நல் உண்டி ஆம் - நல்லஉணவாகும்; (ஆதலால்), இது - இதனை, கொண்டுபோ - எடுத்துக்கொண்டுபோ; உன் படை வலிமைகொண்டு - உனது சேனை அல்லது ஆயுதங்களின் பலத்தைக்கொண்டு, வழக்கு அற - நியாயமில்லாமல், சினக்கில் - கோபித்தால், உயர் திசைதொறுஉம் - உயர்ந்த திக்குக்களிலெல்லாம், தலை சிந்த - (உங்களுடைய) தலை சிதறும்படி, யான்—, வெம் கணை விடுவன் - கொடிய அம்புகளை எய்வேன்; (எ - று.)

'இவன், நான்தான் இதனைக்கொன்று வீழ்த்தினேனென்று உரிமை பாராட்டி இப்பன்றியை எடுத்துக்கொண்டு போய்விடுவானோ என்று அஞ்ச வேண்டா; நீ இதனைக்கொண்டுபோனால் உனக்கும் உன் சேனைகட்கும் உணவாகும்; நீ எடுத்துக்கொண்டு போகலாம்; இனிப் படைவலிமை யுள்ளதென்று வீண்சண்டைக்கு இழுத்தால், நான் சும்மாவிடமாட்டேன்; உங்கள் தலையெல்லாம் பலதிக்குக்களிலும் சிதறி விழும்படி கொடுங்கணை விடுவேன்' என்று அருச்சுனன் வீரவாதம் கூறினனென்பதாம். தன்னுடையாற்றலுணராரிடைத் தன்னைப் புகழ்தல் தகுமாதலால், இவ்வாறு அருச்சுனன் தன்னைப் புகழ்ந்து கூறினானென்க. உண்டி - உண்ணப்படுவது; ட் - எழுத்துப்பேறு, இ - செயப்படுபொருள்விகுதி. வலிமைகொண்டு, கொண்டு - மூன்றும் வேற்றுமைச் சொல்லுருபு. அலால் - குறிப்புவினையெச்சம். குறும்பொறை - குறிஞ்சிநிலத்தூரென்பாருமுளர். (௯௪)

வேறு.

95.—'நீ பன்றியைக்கொன்றது தகுதியோ ?' என்று வேடன் வினவல்.

என்றமொழி செவிப்படாமுன் மெயினர்க்கெல்லா மிறைவனா
கியவெயினனிவனை நோக்கிப், பன்றிபெரு மோகரத்தோ டின்

றுன் னுவி பருகியிடு மெனமிகவும் பயப்பட் டாயோ, நின்றுபெருந்
தவமுயல்வோர் தாங்கள் கொண்ட நினைவொழியப் புறத்தொன்று
நினைவ ரோசொல், பொன்றிடினு நீயறியப் பசுத்தோல் போர்த்
துப் புலிப்பாய்ச்சல் பாய்வரோ புரிவி லாதாய்.

(இ - ள்.) என்ற மொழி - என்று (அருச்சுனன்) சொன்ன வார்த்தை, செவி படலும் - காதிற் கேட்டவுடனே, எயினர்க்கு எல்லாம் இறைவன் ஆகிய எயினன் - வேடர்களுக்கெல்லாம் அரசனாகிய சிவவேடன்,—இவனை நோக்கி - அருச்சுனனை நோக்கி,—புரிவு இலாதாய்-மெய்யன்பில்லாதவனே! (நீ), பன்றி—, பெரு மோகரத்தோடு - பெரிய ஆரவாரத்தோடு, இன்று - இன்றைக்கு, உன் ஆவி பருகியிடும் - உனது உயிரை உண்டுவிடும், என - என்று, மிகவும் பயப்பட்டாயோ—? நின்று-நிலைநின்று, பெரு தவம் முயல்வோர் - பெரிய தவத்தைச் செய்பவர்கள், பொன்றிடினும்-(தாம்) இறக்க நேர்ந்தாலும், தாங்கள் கொண்ட நினைவு ஒழிய - தாம் கொண்ட எண்ணத்தைத் தவிர, புறத்து ஒன்று - வேறாகிய ஒன்றை, நினைவர்ஓ - நினைப்பார்களோ ? [நினைக்கமாட்டார்களன்றோ]; நீ—, அறிய - தெரியுமாறு, சொல்- சொல்வாயாக; பசு தோல் போர்த்து - பசுவினுடைய தோலை மேலே போர்த்துக்கொண்டு, புலி பாய்ச்சல் பாய்வர்ஓ - புலிபாய்வதுபோன்ற பாய்ச்சலைப் பாய்வார்களோ ? (எ - று.)

இதனால், வேடவடிவங்கொண்ட சிவபிரான் அருச்சுனனை ஏசின னென்க. பிறரால் தமக்குத் துன்பம் நேராதிருத்தற்பொருட்டுத் தவவேடம் பூண்டு, காரியகாலத்தில் அத்தன்மை கொள்ளாது ஒழுகுகின்றவர்க்கு, தன்னை எவரும் நெருங்கித் துன்பஞ்செய்யா திருத்தற்பொருட்டுச் சாதுவான பசுவின் தோலைப் போர்த்துக்கொண்டு யாவரையும் ஏமாற்றித் தக்க காலத்தில் தனது இரைப்பொருளமேல் தாவிவிழுகின்ற புலி ஏற்றஉவமையாதல் காண்க. 'பசுத்தோல்போர்த்துப் புலிப்பாய்ச்சல் பாய்கிறான்' என்ற பழமொழியைத் தன்னுள்கொண்டிருப்பதனால், இச்செய்யுள்-உலகவழக்கு நவிற்சியணியாம்; சாந்தமான தவவேடத்தை மேற்கொண்டு குரூரமான போர்த்தொழிலை எவருஞ் செய்யாரென்னுங் கருத்தை உபமான முகத்தாற் கூறியது, பிறிதுமொழிதலணியாம். "வலியிலிநிலைமையான் வல்லுருவம் பெற்றம், புலியின்றோல்போர்த்துமேய்ந்தற்று" என்ற குறளை, இங்குக் காண்க.

எயினனென்பதன் பெண்பன்மை-எயிற்றியரென்பது. மோகரம்-முகரமென்ற வடசொல்லின் சிதை வென்னலாம். உயிர் பருகியிடும் - உண்டற்குரிய வல்லாப் பொருளை உண்டதுபோலக் கூறிய உபசாரவழக்கு. நீ அறியச் சொல்-நீ உன் மனச்சாட்சியாகச்சொல் எனவுமாம்.

இது முதல் எட்டுக் கவிகள் - ஒன்று இரண்டு ஐந்து ஆறுஞ்சீர்கள் காய்ச்சீர்களும், மற்றவைமாச்சீர்களுமாகிவந்த எண்சீராசிரியவிருத்தங்கள்.

96.—சிவபெருமான் அருச்சுனனை விசாரிக்க, அவனும் தன்னைத் தெரிவித்தல்.

*மறையவனோவொருகுடைக்கீழ்வையங்காக்கு மன்னவனோ வைசியனோவடிவமாறிப், பொறையுடனேதவம்புரியுமவுணர்மாக் கள்புத்தேளிர்நிருதரிலோர்புறத்துளானோ, நிறைவுடன்மெய்ப்பிறை போலவடிவந்தேய்ந்து நெருப்பிடைநீநிற்கின்றாய்நெடுநாளுண்டு, குறையுனக்கியாதுரையென்றானென்றபோதக்குருகுலநாதனுந்தன் னைக்கூறினானே.*

(இ - ள்.) நீ—, மறையவன்ஓ-பிராமணனோ? ஒரு குடை கீழ் வையம் காக்கும் மன்னவன்ஓ - ஒற்றைவெண்கொற்றக் குடைநிழலிலிருந்துபூமியை ஆளுகின்ற அரசனோ? வைசியன்ஓ - வணிகனோ? வடிவம் மாறி - உருவம் மாறுபட்டு, பொறையுடன்ஏ - பொறுமையோடு, தவம் புரியும் - தவத்தைச் செய்கின்ற, அவுணர் - அசுரர்களும, மாக்கள் - மனிதர்களும், புத்தேளிர்- தேவர்களும், நிருதரில்-அரக்கருமாகிய இவர்களுள், ஓர் புறத்து உளான்ஓ- ஒருபகுப்பி லுள்ளவனோ? நிறைவுடன் - (தவத்திற்கு உரிய லக்ஷணத்தின்) நிறைவோடு, பிறை மெய் போல வடிவம் தேய்ந்து - சந்திரனது உருவம் போல நாளுக்குநாள் உடம்பு இளைத்து, நெருப்பு இடை - அக்கினியின் மத்தியிலே, நெடு நாள் உண்டு - பலநாளாக, நிற்கின்றாய்-தவஞ்செய்து நிற் கிறாய்; (நீ இவ்வாறு தவஞ்செய்ய), உனக்கு—, குறை யாது - (ஒழிக்க வேண்டிய) குறை என்ன? உரை - சொல், என்றான் - என்று (வேடன்) வினவினான்; என்ற போது - என்று வினவியபொழுதில், அ குரு குலம் நாதன்உம்-குருவமிசத்துக்குத் தலைவனான அவ்வருச்சுனனும், தன்னை கூறி னான் - தன் வரலாற்றைச் சொன்னான்; (எ - று.)

நீ தேவர்கள் மனிதர் அரக்கர்என்ற பகுப்பில் எந்தப்பகுப்பைச் சேர்ந் தவன்? பிராமண க்ஷத்திரிய வைசியர் என்ற மூன்று வருணங்களுள் எந்த வருணத்தான்? உன்னுடைய உடலைப் பார்த்தால் நீ வெகுநாளாய்க் கடுந் தவம்புரிகின்றா யென்று தோன்றுகின்றது. எந்தப்பயனைக் கருதி இவ்வாறு கடுந்தவம் புரிகின்றா யென்று வினவினனென்க. துவாபரயுகத்தில் மூன்று வருணத்தார்க்கே தவத்தில் அதிகார மாதலால், நான்காம் வருணத்தவரை விட்டிட்டு, 'மறையவனோ மன்னவனோ வைசியனோ' என்று வினவினன். வேதங்களை ஓதுதல் ஓதுவித்தல் என்னும் இருதொழிலுக்கும் உரியவர் அந் தணரே யாதலால், மறையவன் என்பது - அவரையே உணர்த்தும். ஒரு குடைக்கீழ்வையங்காத்தல், ஏகசத்திராதிபத்தியம். 'அவுணமாக்கள்' எனப் பாடங்கொண்டு-அசுரர்களாகிய ஜனங்களென்று உரைத்தலும் பொருந்தும். மறையவனோ முதலியன - முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. குறை - அடையவேண்டியதாய்க் குறையாகி நிற்பது. நிறையுடன் என் றும் பாடம்.　　(கூசு)

**97.—இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: சிவபெருமானாகிய வேடுவன், பழம்பகைமைகாட்டிப் போர்செய்யவருமாறு அருச்சுனனை யழைத்தல்.**

*கூறியசொற்கொண்டறிந்துவேடன்மீண்டுங் குருகுலத்தோ ரைவருளுங் குனிவிற்கற்றுச், சீறிவரு துருபதனைத் தேரிற்கட்டிச் சென்றுகுருதக்கிணைசெய்சிறுவனீயோ, வீறியவெங்குலத்திலொரு வேடன்றன்னைவின்மைபொறா தவன்றடக்கைவிரலுங்கொண்டாய், பேறறவன்றொருமுனிவன்வார்த்தைகேட்டுப் பிளந்தனைபல்வேடுவ ரைப் பிறைவாயம்பால்.*

(இ - ள்.) கூறிய - (அருச்சுனன்) சொன்ன, சொல் - வார்த்தையை, வேடன் - சிவவேடன், கொண்டு - காதிலேற்று, அறிந்து - (அவன்வரலாற்றை) அறிந்து, மீண்டும் - மறுபடியும், (அவனைநோக்கி),—குருகுலத்தோர் ஐவருள்உம் - குருவம்சத்தில் தோன்றிய பஞ்சபாண்டவருள்ளும், குனிவில் கற்று - வளைவான வில்லின் தொழிலைப் பயின்று, சீறி வரு துருபதனை தேரில் கட்டி - கோபித்துப் போர்க்குவந்த துருபதராஜனைத் தேர்க்காலிலே கட்டி, சென்று - மீண்டுபோய், குரு தக்கிணை செய் - ஆசாரிய தக்ஷிணையைச் செய்த, சிறுவன் - சிறுபிள்ளை, நீஓ - நீதானோ? வீறிய எம் குலத்தில் - பெருஞ்சிறப்புப் பொருந்திய எமது குலத்தில் தோன்றின, ஒரு வேடன் தன்னை - (ஏகலவ்யனென்னும்) ஒருவேடனை, வின்மை பொறாது- (அவனது) வில்லின் திறமையைப் பார்த்துப் பொறாமல், அவன் தட கை விரல்உம் கொண்டாய் - அவனது பெரிய கையிலுள்ள விரலொன்றையும் வாங்கினாய்; (அன்றியும்), அன்று - முன்னொருகாலத்தில், ஒரு முனிவன் வார்த்தை கேட்டு-அந்தணனொருவன் முறையிட்ட வார்த்தையைக் கேட்டு, பல் வேடுவரை - பல வேடர்களை, பிறை வாய் அம்பால் - பிறைச்சந்திரன் போன்ற நுனியையுடைய அம்புகளினால், பேறு அற - (உனக்கு) ஒருபயனுமில்லாமல், பிளந்தனை - பிளந்திட்டாய் ; (எ - று.)

சிவபெருமானாகிய வேடுவன் 'நீ சிறுபிராயம்முதல் வில்வித்தையில் நம்மில் மிக்கவரில்லையென்ற செருக்குக்கொண்டவன்' என்று அருச்சுனனைப் பழித்தற்காக, துருபதனைத் தேர்க்காலிற் கட்டிக்கொணர்ந்த செய்தியைக் கூறிவிட்டு, இனி வேட்டுவசாதியார்க்கு அவன் செய்துள்ள தவறுகளை யெல்லாம் எடுத்துக்காட்டுகின்றன னென்க. ஐவர் - தொகைக்குறிப்பு. வீறிய-குறிப்புப்பெயரெச்சம். வின்மை, மை - தன்மைப்பொருள்விகுதி. பிறைவாயம்பு - அர்த்தசந்திரபாணம். அந்தணன் முறையீட்டிற்கு ஏற்பக் கவர்ந்த ஆநிரைகளை மீட்டுக்கொடுத்தலே தகுதியாயிருக்கக் கவர்ந்தவர்களைக் கொன்றது பயனற்றசெயலென்பான் 'பேறற' என்றான். இக்கவியின் பின்னிரண்டடிகளாலும், மேற்கவியாலும், வேடர்களுக்கும் அருச்சுனனுக்கும் பழைமையாகப்பகையுள்ளதென்று எடுத்துக் கூறுகிறான்.

துருபதனைத் தேரிற்கட்டிக் குருதக்கிணையாக்கொடுத்த கதை:—அங்கிவேசமுனிவரிடத்தில் துரோணாசாரியருடன் வில்வித்தையைக்கற்றுவந்தபொழுது 'எனக்கு இராச்சியங்கிடைத்தபின்னர்ப் பாதி உமக்குப்பங்கிட்டுக்

கொடுப்பேன்' என்று அவர்க்கு வாக்குத்தத்தஞ்செய்திருந்த பாஞ்சால ராஜனாகிய துருபதன், பின் அவர் தங்குழந்தைக்குப் பாலுக்காகப்பசுவேண்டு மென்று சென்று கேட்டபொழுது முகமறியாதவன்போல நீயாரென்று வினவிச் சிலபரிகாசவார்த்தைகளைச் சொல்லிப் பங்கப்படுத்த, அப்பொழுது அவர் 'என்மாணாக்கனாகிய ராஜகுமாரனொருவனைக்கொண்டு உன்னை வென்று கட்டிக்கொணரச்செய்து உன் அரசையுங் கைக்கொள்வேன்' என்று சபதஞ் செய்துவந்து, பின்பு கௌரவர்க்கும் பாண்டவர்க்கும் வில்வித்தைகளைக் கற்றுக்கொடுத்து முடிவில் 'துருபதனைவென்று உயிருடன் கட்டிக்கொணர்வதே எனக்குக் கொடுக்கவேண்டுங் குருதக்ஷிணை' என்று சொல்ல, கௌரவர்களால் ஆகாமற் போகவே, அருச்சுனன் சென்று அங்ஙனமேசெய்து குருவின் பிரதிஜ்ஞையை நிறைவேற்றினனென்பது.

வேடன் தடக்கைவிரல்கொண்ட கதை:—ஏகலவ்விய னென்று ஒரு வேடன் துரோணரைஅடுத்துத் தனக்கு வில்வித்தைகற்றுக்கொடுக்க வேண்டுமென்றுகேட்க, அவர் ராஜகுமாரர்களுக்குத் தாம் பயிற்றிவருவதனால் தமக்குப் பொழுதில்லையென்று சொல்லிவிட, அவன் வனத்திற்சென்று தன்குடிசையில் துரோணரைப்போன்ற உருவம் அமைத்துப் பிராணப்பிரதிஷ்டை பண்ணி அதனிடத்தே மிகுந்தபக்திசெய்து அந்தக்குருபக்தியின் மிகுதியினால் அவருக்குத்தெரியாமலே வில்வித்தைமுழுவதையும் அருச்சுனனை யொப்பக் கற்றறிந்துவர, அதனை ஒருநாள் அறிந்த அருச்சுனன் துரோணரைக்கொண்டு அவனது வலக்கைப்பெருவிரலைக் குருதக்ஷிணையாக வாங்குவித்தானென்பது. இதனை "ஏகலைவனென்றொருகிராதன் முனியைத் தனியிறைஞ்சி யிவனேவவின்வழா, னாகலையனைந்து மிகுபத்தியொடு நாடொறு மருச்சுனனை யொத்துவருவான், மேகமலைநெடுங்கடல் வளைந்த தரணிக்கனொருவில்லியென வின்மையுடையான், மாகலைநிறைந்துகுருதக்கிணைவலக்கையினில்வல்விரல்வழங்கியுளனால்" என்பதனால் அறிக.

பல்வேடுவரைப் பிறைவாயம்பாற் பிளந்த கதை:—பாண்டவர் இந்திரப்பிரஸ்தத்திலிருந்து அரசாளுகையில் ஒருநாள் பிராமணனொருவன் வந்து தனதுபசுக்களை வேடர்கள் கொள்ளைகொண்டார்களென்று முறையிட, அருச்சுனன் வில்லெடுத்துச்சென்று பொருது வேடர்களைக்கொன்று பசுக்களை மீட்டுக்கொடுத்தானென்பது. (கூஎ)

98. கன்றிவருகனற்கடவுள்கையிற்றேருங்காண்டீவக்கார்முக
முங்கணையும்வாங்கி, யொன்றுபடக்காண்டவக்கானெரித்தநாளி
லோருயிர்போற்பலயோனியுயிருமாட்டிக், குன்றுதொறுங்குன்று
தொறுமிருந்தவேடக் குழாமனைத்துநீறுபடக்கொன்றாயென்ப, ரின்
றுமெனைமுகநோக்கிவன்மையின்மை யிரண்டுக்குமன்னவநீயிகழ்ந்
திட்டாயே.

(இ - ள்.) மன்னவ - அரசனே! நீ—, கன்றி வரு - (பசிநோயால்) வருந்திவந்த, கனல்கடவுள் - அக்கினிபகவானுடைய, கையில் - கையினின்றும், தேர்உம் - தேரையும், காண்டீவம்கார்முகம்உம் - காண்டீவமென்னும்வில்லையும்,

கணைஉம்-அம்புகளையும், வாங்கி-பெற்றுக்கொண்டு, காண்டவம் கான்-காண்டவமென்னும் வனத்தை, ஒன்றுபட-ஒருங்கே, எரித்த நாளில்-(அவ்வக்கினியைக்கொண்டு) தகித்தகாலத்தில், ஓர் உயிர்போல்-ஒருஉயிரைப்போலவே, பல பேதம் உயிரும்-பலவகைப்பட்ட பிறப்புகளிற் பிறந்த உயிர்களையெல்லாம், மாட்டி-கொன்று, குன்றுதொறுஉம் குன்றுதொறுஉம் இருந்த-(அவ்வனத்தில்) மலைகள்தோறும் இருந்த, வேடர்குழாம் அனைத்தும்-வேடர்களுடைய கூட்டங்கள் முழுமையும், நீறுபட-சாம்பராம்படி, கொன்றாய்—,என்பர்-என்று (யாவருஞ்) சொல்லுவார்கள்: இன்றுஉம்-இன்றைக்கும், எனை-என்னை, முகம் நோக்கி-முகத்தைப்பார்த்து, வன்மை வின்மை இரண்டுக்குஉம்-தேகபலம் வில்லின்திறமை என்கிற இரண்டுவகையிலும், இகழ்ந்திட்டாய்-நிந்தித்துப்பேசினாய்; (எ - று.)

கீழ்க்கூறியபடி ஏகலைவன் முதலியோரை இம்சித்ததோடு நில்லாமல் காண்டவதகனகாலத்திலும் பலவேடுவர்களைக் கொன்றாய்; இவ்வாறு உன் செயலைப் பலர்சொல்ல முன்பு செவியினாற் கேட்டிருந்தேன்; நீ என்னை இன்று இகழ்ந்துகூறியதைக் கண்கூடாகக்கண்டேனென்று சிவவேடுவன் அருச்சுனனது வேட்டுவப்பகைமையை ஆதியோடந்தமாக மூதலித்துக்காட்டினனென்க. மாட்டுதல்-மாள்வித்தல். குன்றுதொறும் குன்றுதொறும் என வந்த இரண்டனுள், முதலதுக்கு-அழியும்பொழுதெல்லாமென்றும் பொருள் கொள்ளலாம். இன்றும்என்ற உம்மை-முன்பலசமயங்களில் வேடர்களுக்கு அபகாரஞ்செய்ததுமல்லாமல் என்றும் பொருளைத் தருதலால், இறந்தது தழுவியது. பலபேதவுயிர்-அசுரர், வேடர், மிருகங்கள், பக்ஷிகள் முதலியன. காண்டவன் என்று இந்திரனுக்குப் பெயரிருத்தலால், இந்திரனது காவற்காட்டை 'காண்டவககான்' என்றார்.

**காண்டவக்கானெரித்த கதை**:—இந்திரப்பிரத்த நகரத்தைச் சார்ந்ததொரு பூஞ்சோலையிற் கிருஷ்ணனும் அருச்சுனனும் உல்லாசமாக வசித்திருக்கையில் ஒருநாள் அக்கினிபகவான் அந்தணவடிவங் கொண்டுவந்து, 'எனக்கு மிகப்பசிக்கின்றது, உணவிடுக' என்று வேண்ட, அவ்விருவரும் 'நீ வேண்டியபடி உணவிடுவோம்' என்று வாக்குத்தத்தஞ்செய்ய, உடனே தீக்கடவுள் நிஜவடிவங்கொண்டு 'இந்திரனது காவற்காடாய் யாவர்க்கும் அழிக்கவொண்ணாதபடி நிலவுலகத்திலிருக்கிற காண்டவவனத்தை அதிலுள்ள சராசரங்களுடனே எனக்கு விருந்திடவேண்டும்' என்ன, அவர்கள் இசைந்து 'நீ இதனைப்புசி' என்றவுடனே, அக்கினிதேவன் அருச்சுனனுக்கு நான்குவெள்ளைக்குதிரைகள்பூட்டிய தேரையும் குரங்குவடிவமெழுதிய துவசத்தையும் காண்டீவமென்னும் வில்லையும் இரண்டு அக்ஷயதூணீரங்களையும் கொடுத்துக் காண்டவவனத்திற் பற்றியெரிகையில், அவ்வனத்தினின்று தப்பியோடுகிற பிராணிகளையெல்லாம் அருச்சுனன் அம்பெய்து கொன்று அத்தழலில் வீழ்த்திக்கொண்டிருக்க, அதனையுணர்ந்த இந்திரன் அத்தீயை யவிக்கும்படி மேகங்களையேவ, அச்சோனைமாரியில் ஒருதுளியும் அக்கினியில் விழாதபடி

தடுத்துத் தேவசேனையோடும் போருக்குவந்த இந்திரனை அருச்சுனன் வென்றனனாக, அக்கினி அவ்வனமுழுவதையும் எரித்துத் திருப்தியடைந்து கிருஷ்ணார்ச்சுனர்களை வாழ்த்திச் சென்றன னென்பதாம். (கஅ)

99.—சிவவேடன் போருக்கு அழைக்க, அருச்சுனன் போர் தொடங்குதல்.

மல்லுக்கும்புயவலிக்குங்கலக்குறாத மனவலிக்குமறையுடன்
போர்வாளியேவும், வில்லுக்குமுனின்மிகுந்தார் மண்மேலுண்
டோ விசயனெனும்பெயர்க்குரியவிசயத்தாலே, சொல்லுக்குவிடே
னின்றுநீயுநானுந்தோள்வலியுஞ் சிலைவலியுங்காண்டல்வேண்டும்,கல்
லுக்குநிகர்மனத்தாயென்றுரைனந்தக் காளையும் வில்வளைத்தொருவெங்
கணைமேல்விட்டான்.

(இ - ள்.) கல்லுக்கு நிகர் மனத்தாய் - (இரக்கமில்லாமையாற்) கல்லுக்குஒப்பான மனத்தையுடையவனே! விசயன் எனும் பெயர்க்கு உரிய விசயத்தால் - விஜயனென்கிற பெயரை அடைவதற்குஉரிய விசேஷமான ஜயத்தினாலே, மல்லுக்குஉம்-மற்போருக்கும், புயம் வலிக்குஉம்-தோள்களின் பலத்துக்கும், கலக்கு உறாத மனம் வலிக்குஉம்-(எப்பொழுதும்) கலங்குதலையடையாத மனத்தின் பலமான தைரியத்துக்கும், போர் வாளி மறையுடன் ஏவும் வில்லுக்குஉம்-யுத்தத்திற்கு உரிய அம்புகளை மந்திரங்களுடனே பிரயோகிக்கின்ற வில்வித்தைக்கும், உனின் மிகுந்தார் - உன்னிலும் மேம்பட்டவர், மண்மேல் - பூமியின்மேல், உண்டோ - உளரோ? [எவரும் இலர் போலும்]; சொல்லுக்கு விடேன் - (நீ) சொன்ன வார்த்தைக்காக(ப்பயந்து) விட்டுவிடமாட்டேன்; இன்று-இப்பொழுது, நீஉம் நான்உம்-நாமிருவரும், தோள் வலிஉம் - புஜபலத்தையும், சிலை வலிஉம் - வில்லின் வலிமையையும், காண்டல் வேண்டும் - (நேராகப்) பார்க்கவேண்டும், என்றான்-என்று (வேடன்) சொன்னான்; அந்த காளைஉம் - இடபம்போன்ற வீரனான அவ்வருச்சுனனும், வில் வளைத்து - வில்லை வணக்கி, ஒரு வெம் கணை-கொடியதொரு அம்பை, மேல் - வேடன்மேலே, விட்டான் - எய்தான்; (எ - று.)

'மனவலியும் தோள்வலியும் நமக்குத்தான் உள்ளதென்றும், இப்படி யாவற்றினும் மேம்பட்டு வெற்றியையடைவதால்தான் விஜயனென்ற பேர் நமக்குள்ளதென்றும் கருதி நீ செருக்குகின்றாய்; மருளுமாறு நீ கூறிய சொல்லுக்கு அஞ்சிப் பின்னிடேன்; உன்தோள்வலிமையையும் வில் வலிமையையும் பார்ப்போம்' என்று சிவவேடன் கூறவே, அருச்சுனனும் ஓர் அம்புதொடுத்து அந்த வேட்டுவன் மேல் எய்தன னென்பதாம். மல்-ஆயுதமில்லாமற் கைமுதலிய உறுப்புக்களினால் தேக வலிமையைக் கொண்டு செய்யும் போர். முதலிரண்டடியும்-அருச்சுனனது கருத்தைக் கூறியவாறும்; அன்றி, பரிகாசமாகச் சொன்ன தெனினுமாம். 'சொல்லுக்கு' என்றது - "வனக்குறும்பொறை நாட வுன்படை வலிமைகொண்டு வழக்கறச், சினக்கில் வெங்கணை விடுவன் யானுயர் திசைதொறுந் தலைசிந்தவே" என்ற அருச்சுனன் வார்த்தையை, (கக)

**100.—இது முதல் ஆறுகவிகள் . அருச்சுனனுக்கும் சிவவேடனுக்கும் நிகழ்ந்த போரைக் கூறும்.**

*விட்டகொடுங்கணையையொருகணையால்வேடன் விலக்கிவரி சிலைக்குரியவீரன்றன்மேற், றொட்டனனோரிரண்டுகணையவைபோய் மார்புந் தோளுமுடன்றுளைத்தனவாற்றுளைத்தபோது, கட்டழலினி டைநின்றகாளைமீளக் கடுங்கணைகளொருமூன்றுகடிதின்வாங்கி,வட் டநெடும்பீலியணிமுடியுமார்பும் வாகுவுமேயிலக்காகவலியொடெய் தான்.*

(இ - ள்.) விட்ட கொடு கணையை - (அருச்சுனன்) எய்த கொடுமை யான ஒரு அம்பை, வேடன் - சிவவேடன், ஒரு கணையால் விலக்கி - ஓரம் பினால் தடுத்து, வரி சிலைக்கு உரிய வீரன்தன்மேல் - கட்டமைந்த விற் போருக்கு உரிய வீரனாகிய அருச்சுனன்மேல், ஓர் இரண்டு கணை தொட்ட னன் - ஒப்பற்ற இரண்டுபாணங்களைத் தொடுத்தான்; அவை - அவ்விரண் டும், போய்-சென்று, மார்புஉம் தோளஉம்-(அருச்சுனனுடைய) மார்பையுந் தோளையும், உடன் - உடனே, துளைத்தன - ஊடுருவின; துளைத்த போது- அவ்வாறுசெய்தபொழுது, கட்டு அழலின் இடை நின்ற காளை - மிகுந்த நெருப்பின் நடுவிலே நின்று தவஞ்செய்த அருச்சுனன், மீள - மறுபடியும், கடு கணைகள் ஒரு மூன்று - கொடுமையான ஒப்பற்ற மூன்று அம்புகளை, கடி தின் வாங்கி-விரைவாக எடுத்து, நெடு பீலி வட்டம் அணி முடிஉம்-நீண்ட மயிலிறகின் மாலையை வட்டமாகச் சுற்றிலும் அணிந்த (சிவனது) சிரசும், மார்புஉம்—, வாகுஉம்ஏ - தோளும் ஆகிய மூன்றையுமே, இலக்கு ஆக - இலட்சியமாகக் கொண்டு, வலியொடு - பலத்தோடு, எய்தான் - பிரயோ கித்தான் ; (எ - று.)

அருச்சுனன் எய்த ஒருகணையைச் சிவவேடன் தனதுகணையால் தடுத்து விட்டு இரண்டு அம்புகளை அவ்வருச்சுனனது மார்பையும் தோளையும் துளைக்குமாறு ஏவிவிட, அதனால், துளைக்கப்பட்ட அவ்வருச்சுனன் எதிரி யின் சிரசு மார்பு தோள் என்பவற்றை இலக்காகக் குறித்து மூன்று கணைகள் விட்டனனென்பதாம். ஆல்-ஈற்றசை. (௧00)

101. *எய்தகணை திருமேனியெய்துமுன்னரிறகுதுணிந்தொன்றி ரண்டாயிலக்குறாமல்,வெய்தின்வலியுடனெய்தான்மூன்றுவாளிவிண் ணவர்கோன்மகன்மேலும்வேறொன்றெய்தா, னைதினிவன்விநோதை முறத்தொடுத்தானென்ப தறியாமலெயினன் முடியணிந்தபீலி,கொ ய்துநடியபறல்சிதறப்பிறையுமானுங் குலையவொருகணைகுரக்குக்கொ டியோனெய்தான்.*

(இ - ள்.) எய்த கணை - (அருச்சுனன்) எய்த அம்புகள், திரு மேனி எய்தும் முன்னர் - (தனது) அழகிய உடம்பிற் படுதற்குமுன்னமே, இறகு துணிந்து - இறகுகள் அறுபட்டு, ஒன்று இரண்டு ஆய் - ஒவ்வொன் றும் இரண்டு துண்டாய்ப் பிளந்து, இலக்கு உறாமல்-(அவன்குறித்த) லட்சி யத்தைப் பொருந்ாதனவாம்படி, வெய்தின் வலியுடன் - உக்கிரமான பலத்

துடனே, மூன்று வாளி - மூன்று அம்புகளை, எய்தான் - (சிவவேடன்) தொடுத்தான்: (அன்றியும்), விண்ணவர் கோன் மகன் மேலும் விண்ணுலகத் துள்ளதேவர்களுக்கு அரசனாகிய இந்திரனது குமாரனான அருச்சுனன் மேலும், வேறு ஒன்று - வேறொரு அம்பை, எய்தான்—; இவன் - இச்சிவ பிரான், ஐதின் - எளிதாகவும், விளைதம்உற - விளையாட்டாகவும், தொடுத் தான் என்பது - அம்புதொடுத்தானென்பதை, அறியாமல் - தெரிந்துகொள் ளாமல், குரங்கு கொடியோன் - குரங்கினுருவத்தையெழுதியகொடியை யுடைய அருச்சுனன், எயினன் முடி அணிந்த பீலி கொய்து - சிவவேடன் சிரசில் தரித்த மயிலிறகுமாலை அறுபட்டு, நதி அறல் சிதற - (அம்முடியி லுள்ள) கங்காநதியினது நீர் சிந்தவும், பிறைஉம் மான்உம் குலைய - பிறைச் சந்திரனும் (அதன் களங்கமாகிய) மானும் நிலைகெடவும், ஒரு கணை - ஓரம் பை, எய்தான் - (அவன் முடியின்மேல்) தொடுத்தான்; (எ - று.)

அருச்சுனன் தன்னோடு போர் செய்கின்றவன் மனத்திற் சிறிதும் சின மென்பதின்றிப் பொழுதுபோக்காக விளையாட்டுப்போர்செய்கின்ற சிவன் என்பதை உணராமல் உண்மையாகவே தன்னோடு சினந்துபொருகின்ற வேடனே யென்று கருதி மிகவும் உக்கிரமாக ஓரம்புஎய்ய, அதனால் அப்பர மன் முடியிலணிந்திருந்த பீலி முதலியன சிதறலாயின வென்பதாம். அம்பு கள் விரைந்து செல்லுதற்பொருட்டுச் சிறகுகட்டிவிடுவரென்க. வெய்தின் - விரைவாக என்றுமாம். ஐது - அற்பம், மென்மை: ஐம்மை - பகுதி. சிவ பெருமான்முடியி லணிந்துள்ள பிறைச்சந்திரனுக்குக் களங்கமிருக்க வழி யில்லையாயினும், சந்திரனுக்குக் களங்கங்கூறும் முறையில் 'மான்' கூறினர்.

பிறைச்சந்திரனை முடியிலணிந்த கதை:—சந்திரன் தக்ஷமுனிவரது புத்திரிகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களையும் மணஞ் செய்துகொண்டு அவர்களுள் உரோகிணியென்பவளிடத்து மிகவும் காதல் கூர்ந்து அவளுடனே எப்பொழுதும் கூடிவாழ்ந்திருக்க, மற்றைமகளிரின் வருத்தத்தை நோக்கி முனிவன் அவனை 'க்ஷயமடைவாயாக' என்று சபிக்க, அச்சாபத்தாற் சந்திரன் பதினைந்துகலைகளும் குறைந்து மற்றைக் கலையொன் றையும் இழப்பதற்கு முன்னம் சிவபிரானைச் சரணமடைய, அப்பெருமான் அருள்கூர்ந்து அவ்வொற்றைக்கலையைத் தன்தலையிலணிந்து மீண்டும் கலைகள் வளர்ந்து வரும்படி அனுக்கிரகித்தன னென்பதாம். (௧0௧)

102. அற்போலச்சூழ்கின்றகிராதரெல்லா மவன்முடிமேலிவ னெய்ததறிந்துதீயி,னிற்போன்மேலெழுதலுமங்கவரையெல்லா நில் லுமெனக்கையமர்த்திநீயின்றெய்த, விற்போர்கண்டனமடடாவிற் பிடிக்கும் விரகறியோமுன்னிடத்தேவேதவிற்போர், கற்போமென் றொருகணைமற்றவன்மேல்விட்டான் கனகமலைச்சிலைவளைத்தகையி னானே.

(இ - ள்.) அல் போல - இருள்போல, சூழ்கின்ற - (சிவனைச்) சுற்றிலுமுள்ள, கிராதர் எல்லாம் - வேடர்கள் யாவரும், அவன் முடிமேல்

நீவன் எய்தது அறிந்து - சிவவேடனது சிரசின்மேல் அருச்சுனன் அம்பெய்ததை உணர்ந்து, தீயில் நிற்போன்மேல் எழுதலும் - அக்கினிமத்தியில் நின்று தவஞ்செய்த அவ்வருச்சுனன் மேல் (போருக்கு) எழுந்த அளவில், அங்கு - அப்பொழுது, கனகம் மலை சிலை வளைத்த கையினான் - பொன்மயமான மேருமலையை வில்லாகவணக்கின திருக்கையையுடைய சிவன், அவரை எல்லாம் - அவ்வேடர்களையெல்லாம், நில்லும் என கை அமர்த்தி - '(நீங்கள் போருக்கு எழாமல்) நில்லுங்கள்' என்றுசொல்லிக் கைபினால்அமைந்திருக்கக் குறிப்புக்காட்டி, (அருச்சுனனைநோக்கி), 'நீ இன்று எய்த வில் போர் கண்டனம் - நீ இப்பொழுது அம்பெய்த வில்லின் போரைப் பார்த்தோம்; அடடா—! வில் பிடிக்கும் விரகு அறியோம் - (உனக்குமுன்னே) வில்லைப் பிடிக்கின்ற தந்திரத்தையும் (யாம்) அறியோம்; உன்னிடத்து வேதம வில் போர் கற்போம்-வேதமந்திரங்களுடனே செய்கின்ற வில்லின்போரை உன் பக்கலிலே (யாம்) கற்றுக்கொள்வோம்,' என்று - என்று பரிகாசமாகச் சொல்லி, மற்று - பின்பு, ஒரு கணை - ஓரம்பை, அவன்மேல் - அருச்சுனன் மேல், விட்டான் - தொடுத்தான்; (எ - று)

அருச்சுனன் சிவவேடன் முடிமீது அம்பெய்தது கண்ட பிரமதகணங்களாகிய வேடர்யாவரும் அவ்வருச்சுனனோடும் பொருதற்கு எழ, சிவவேடன் தன் கைச்சைகையால் அவர்களை அமர்த்தி அருச்சுனனை எளனஞ் செய்து அவன்மீது ஓரம்பைத் தொடுத்துவிட்டனனென்பதாம். கிராதர்க்கு, அல்-கருநிறமும் அடர்ந்திருத்தலும் பற்றிய உவமை. 'நிற்போன்' என எதிர்காலத்தாற் கூறியது-இயல்பினால் வந்த காலவழுவமைதி. அடடா என்னும் முன்னிலையிடைச் சொல்லடுக்கு, இகழ்ச்சிதோன்ற நின்றது. கண்டனமேடாஎன்றும் பாடம். (௧0௨)

வேறு

103. பீலிமுடி யோன்விடுபி றைக்கணையை வேறொருபி றைக்கணையி னால்வி லகிவிற், கோலிவடி வாளிமழை சிந்தினன்ம ழைக்கரிய கொண்டலென நின்ற குமரன்,மூலிவடி வாபெயினன் மேலவைப டாமன்முனை மண்பிசைகு லிக்க முரணார்,வேலியிடு மாறெனவி முந்தனவி முந்ததனை விசயனவி கண்டு வெருளா.

இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) மழை கரிய கொண்டல் என நின்ற - மழைபெய்கின்ற கறுத்த நீர்கொண்ட மேகம்போலக் (கருநிறமுடையவனாய்) நின்ற, குமரன்- அருச்சுனன், பீலி முடியோன் விடு பிறை கணையை - மயிற்பீலிமாலையையணிந்த திருமுடியையுடைய சிவபிரான் (தன்மேல்) விட்ட அர்த்தசந்திர பாணத்தை, வேறு ஒரு பிறை கணையினால் விலகி - வேறொரு அர்த்தசந்திர பாணத்தால் தடுத்து, வில் கோலி - வில்லை நன்றாகவளைத்து, வடி வாளி மழை சிந்தினன் - கூர்மையான அம்புகளை (வேடன்மீது) மழைபோல மிகுதியாகச் சொரிந்தான்; அவை - அவ்வம்புகளெல்லாம், மூலி வடிவு

ஆம் எயினன் மேல் - (எல்லாப்பொருள்களுக்கும்) காரணமாகவுள்ள சிவனது ரூபமான வேடன்மேல், படாமல் - சென்றுதைக்காமல், மூரண் ஆர் வேலி இடும் ஆறு என-வலிமைபொருந்திய வேலி பொருந்தும் விதம் போல, முனை - நுனிகள், மண்மிசை குளிக்க - பூமிமேலே அழுந்தும் படி, விழுந்தன - (அவனைச் சுற்றிலும்) விழுந்துவிட்டன; விழுந்ததனை - (அங்ஙனம்) விழுந்ததை, விசயன் - அருச்சுனன், கண்டு - பார்த்து, நனி வெகுளா - மிகவுங்கோபித்து,—(எ - று)—'வெகுளா' என்பது, மேற்கவி யில் 'விடுத்தனன்' என்பதோடு முடியும்.

நீர்மழையை விடாது பொழிகின்ற மேகம் - இடைவிடாமல் அம்புமழை பொழிகின்ற அருச்சுனனுக்கு வந்த உவமையாம். அருச்சுனன்எய்த கணை, சிவவேடன்மேல் விழாது அவனைச்சுற்றிலும்வீழ்ந்து அவனுக்கு ஒரு வேலி யிட்டாற்போலாயிறென்க. விலகி என்பதை - பிறவினைப்பொருளில் வந்த தன்வினையென்றாயினும், விலங்கி என்பதன் தொகுத்தல்விகாரமென் றாயினும் உணர்க. வடித்தல் - நெருப்பிற்காய்ச்சி அடித்துக் கூர்செய்தல். கொண்டல் - நீரைக்கொள்வதுஎனக் காரணப்பெயர். மூலி - மூலமாக உள்ளவன். முனை-கூர்வாய். மூலவடிவாமென்றும் பாடம்.

இது முதற் பதின்மூன்றுகவிகள் - பெரும்பாலும்முதலேந்தும் விளங் காய்ச்சீர்களும், ஆறுவது தேமாச்சீரும், ஏழாவது புளிமாச்சீருமாகிய எழுசீராசிரிய விருத்தங்கள். (க0௩)

104. வேணிமுடிவேடன்மிசைவேறொருசாயகம்விடுத்தனன்
விடுத்தகணையின், நாணியொடுமுன்பிறொடுபின்புதொடுகின்றகணை
நடுவணறவெட்டுதலுமே,கோணியவிளம்பிறைமுடித்தவன்வெகுண்
டுபலகோல்களிடவிந்த்ரகுமரன், பாணியுடனேதொடைநடுங்கிய
யனின்றதொருபாதவமருங்கணுகினான்.

(இ - ள்.) வேணி - சடையையுடைய, முடி - திருமுடியையுடைய, வேடன்மிசை-சிவவேடன்மேல், வேறும் ஒரு சாயகம் விடுத்தனன் - வேறொரு அம்பை (அருச்சுனன்) எய்தான்; விடுத்த கணை - விட்ட அம்பு, வில் நாணியொடு - வில்லினது நாணியினின்றும், முன்பிறொடு-வலிமையுடனே, பின்பு தொடுகின்ற கணை - (சிவபிரான்) பின்பு எய்த அம்பை, நடுவண் அற - நடுவிலே முறியும்படி, வெட்டுதலும் - பிளந்தஅளவில், கோணிய இளம்பிறை முடித்தவன் - வளைவாகிய இளஞ்சந்திரனை முடியில்தரித்த சிவ வேடன், வெகுண்டு - கோபித்து, பல கோல்கள் விட - பல அம்புகளை எய்ய, (அதனால் மிகத்தளர்ந்து), இந்திர குமரன் - தேவேந்திரனது திருமக னான அருச்சுனன், பாணியுடனே தொடை நடுங்கி - கைகளும் தொடைக ளும் நடுக்கமுற்று, அயல் நின்றது ஒரு பாதவம் மருங்கு அணுகினான் - பக் கத்திலே பொருந்தியதொரு மரத்தின் சமீபத்தைச் சேர்ந்தான்; (எ - று)

சிவபிரான் தொடுத்த அம்பு நடுவில் முறியும்படி அம்பை அருச்சுனன் தொடுத்துவிட, சிவவேடன் கோபித்துப் பல அம்புகள் எய்ய, அருச்சுனன்

தளர்ந்து எதிர்நிற்கமுடியாமல் நடுக்கமெடுத்து அருகிலிருந்த ஒரு மரத்தைச் சார்ந்து நின்றன னென்க. நாணியொடு என்பதில், ஒடு உருபு - ஐந்தாம் வேற்றுமையின் நீக்கப்பொருளில் வந்ததனால், உருபுமயக்கம். நடுவண்-நடுவாகிய இடம் : அண் - இடப்பொருளுணர்த்தும்விகுதி : அவண், இவண் என்பவற்றிலுங் காண்க. ஸாயகம், இந்த்ரகுமாரன், பாணி - வடசொற்கள். கோணிய-இறந்தகாலப்பெயரெச்சம். நாணியறஎன்றும்பாடம். (௧0௪)

105. கொண்டுதவமேதனமெனப்புரியும் வில்லிமெய்குலைந்தயருகின்றநிலையைக், கண்டருகுநின்றவிமவான்மகளுரைக்கமிகுகருணையொடிரங்கியவனைப், பண்டுதவமேபுரியிளைப்பறமனத்தின்மிகு பரிவுடையனாகிவெகுளா, வெண்டிசையும்வென்றனலளித்தசிலைநாணியறவெயினர்பதியெய்தனனரோ.

(இ - ள்.) தவமே - தவத்தையே, தனம என - செல்வமென்று, கொண்டு - மேற்கொண்டு, புரியும்-செய்கின்ற, வில்லி - விற்போரில்வல்ல அருச்சுனன், மெய் குலைந்து - (இவ்வாறு) உடம்புநடுங்கி, அயருகின்ற-தளர்கின்ற, நிலையை - தன்மையை, கண்டு - பார்த்து, அருகு நின்ற இமவான் மகள் உரைக்க-(தனது) பக்கத்திலேநின்ற இமவத்கிரியினது குமாரியாகிய பார்வதி சொல்ல, எயினர் பதி-வேடர்தலைவன், மிகு கருணையொடு-மிகுந்த அருளுடனே, அவனை - அவ்வருச்சுனன்திறத்தில், இரங்கி - திருவுள்ளங் கனிந்து,—பண்டு தவமே புரி இளைப்பு அற-(இப்போருக்கு)முன்னே தவத்தைச் செய்ததனாலுண்டாகிய (அவனது) இளைப்பு நீங்கும்படி, மனத்தில் மிகு பரிவு உடையன் ஆகி-(தனது) உள்ளத்தில் மிகுந்த அன்புடையவனாய்,— வெகுளா - (வெளிக்குக்) கோபித்து, எண் திசைஉம் வென்று - எட்டுத் திக்குக்களிலுள்ளாரையும் ஜயிக்கும்படி, அனல் அளித்த - அக்கினிதேவனாற் கொடுக்கப்பட்ட, சிலை - (காண்டீவமென்னும்) வில்லினது, நாணி - நாண், அற - அறும்படி, எய்தனன் - அம்பெய்தான் ; (எ - று.)

தவஞ்செய்யும் முனிவர்க்கு 'தபோதனர்' என்று பெயரிருத்தலால் 'தவமேதனமெனப்புரியும்வில்லி' என்றார். அரோ-ஈற்றசை. (௧0௫)

106.—அருச்சுனன் விற்கழுந்தினாற் சிவபிரானது சிரசில் மோத, அப்பிரான் அவசமாதல்.

உழுந்துருளுமெல்லைதனில்வில்லினெடுநாணற வுரத்தொடெதிரோடிவரிவிற், கழுந்துகொடுமாமுடியின்மோதுமுனிழுந்ததுயர் கண்ணிபடுபீலிமதியின், கொழுந்தமுதுசோரவிடநாகர்சுடிகைத்தலைகுலைந்துபணிசிந்தநதியா, னெழுந்துதடுமாறியகல்வானிலுறவேடனுமிளைத்தவசமுற்றனனரோ.

(இ - ள்.) உழுந்து உருளும் எல்லைதனில் - ஒரு உழுந்து என்கிற சிறு தானியம் ஒருமுறை உருளுங்காலத்தினளவில் [மிகவிரைவில் என்றவாறு], வில்லின் நெடு நாண் - (தனது) வில்லினது நீண்ட நாணி, அற - (சிவவேடனது அம்பினால்) அற்றுப்போக,— (அருச்சுனன்), உரத்தொடு - வலிமை

யுடனே, எதிர் - அவ்வேடனெதிரே, ஓடி - விரைந்துசென்று, வரி வில் கழுந்துகொடு-கட்டமைந்த (தனது) வில்லினது தண்டத்தால், மா முடியின்-(அவ்வேடனது) சிறந்த சிரசிலே, மோதும்முன் - தாக்குதற்குமுன்னே, உயர் கண்ணி படு பீலி-சிறந்த தலையின்மாலையாகப் பொருந்திய மயிலிறகு, இழந்தது - (முடியைவிட்டு) நீங்கினதாகவும்,—மதியின் கொழுந்து அமுது-(முடியிலுள்ள) இளஞ்சந்திரனது அமிருதம், சோர - சிந்தவும்,—விடம் நாகர் சுடிகை தலை - (தலையில் அணியும் ஆபரணமாகவுள்ள) விஷத்தை யுடைய சர்ப்பங்களது உச்சிக்கொண்டையையுடைய தலைகள், குலைந்து - பதைத்து, மணி சிந்த-(அவற்றிலுள்ள) மாணிக்கங்கள் சிதறவும், நதியாள்-(திருமுடியிலுள்ள) கங்காநதி, எழுந்து - இருப்பிடம்விட்டெழுந்து, தடு மாறி - நிலைகுலைந்து, அகல் வானில் உற-பரந்த ஆகாயத்திற் பொருந்தவும், (இவ்வாறு), வேடனும்—, இளைத்து - மெலிந்து, அவசம் உற்றனன்-தன் வசமழிந்து பரவசமடைந்தான்; (எ - று.)

அருச்சுனன் விற்கொண்டு பொருதற்கு வழியில்லாமையால் அவ்விற் கழுந்து கொண்டு சிவபிரானது முடியில் தாக்க, அப்போது அச்சிவபிரான் முடியிலணிந்திருந்த மயிற்பீலி பிறைச்சந்திரன் நாகாபரணம் ஆகாசகங்கை என்ற யாவும் நிலைகுலைய, அப்பிரானும் தனது திருவருளினால் அவ்வடிக்குத் தாங்காதவன் போலச் சோர்வுற்றன னென்பதாம். உழுந்து - தினை எள் என்பனபோல மிக்க சிறுமைக்கு எடுத்துக்காட்டுவதொரு அளவை. விற் கழுந்து - தநுர்த்தண்டம். மோதுதலாகிய காரணத்தின்முன் பீலிஇழத்தல் முதலிய காரியங்களை நிகழ்ந்தனவாகச் சொல்லியது, மிகையுயர்வுநவிற்சி யணி; இது-காரியவிரைவைச் சொல்வது. இழந்தது - முற்றெச்சம்; அவச முற்றனன் என்பதனோடு முடிந்தது: இதனை எச்சமாக்காமல் முற்றாகவே கொண்டு பொருளுரைத்தால் ஏகவாக்கியமாகாது பின்னவாக்கியமாகிப் பொருள் சித்தியா தென்க. கொழுந்து - இளமை. கொழுந்துமதியென மாற்றுக. நதி வடமொழியிற் பெண்பாற்சொல் : ஆதலால், அத்தன்மை தோன்ற, 'நதியாள்' என்றார். வேடனும், உம் - இறந்ததுதழுவிய எச்சம்; கீழ் அருச்சுனனிளைத்தானென்பதை நோக்கியதனால்: இனி, உயர்வுசிறப் பெனவுங் கூறலாம். (க0சு)

107.—இதுவும் அடுத்த கவியும் - சிவபிரானடியுண்டதனால் யாவும் அடியுண்டமையைத் தெரிவிக்கும்.

*விண்ணிலுறைவானவரில்யாரடிபடாதவர் விரிஞ்சனரியேமுத லினோர், மண்ணிலுறைமானவரில் யாரடிபடாதவர் மனுக்கண்முத லோர்களதலக், கண்ணிலுறைநாகர்களில்யாரடிபடாதவர்கள் கட் செவிமகிபன்முதலோ, ரெண்ணில்பலயோனியிலும்யாவடிபடாதன விருந்துழியிருந்துழியரோ.*

(இ - ள்.) (சிவபிரான் அருச்சுனனது வில்லின் தண்டத்தால் முடியில் அடிபட்டபொழுது), விரிஞ்சன் அரிஏ முதலினோர் - பிரமன் திருமால்

முதலியவர்களாகிய, விண்ணில்உறை வானவரில்-மேலுலகத்தில் வசிக்கின்ற தேவஜாதியர்களுள், அடிபடாதவர் - அவ்வடியையேற்காதவர், யார்-எவருளர்? [எவருமிலர்; யாவருமேற்றார் என்றபடி]; மனுக்கள் முதலோர்கள்- மனுக்கள் முதலியவர்களாகிய, மண்ணில் உறை மானவரில்-பூலோகத்தில் வசிக்கின்ற மனிதர்களுள், அடி படாதவர் யார்—? கட்செவி மகீபன் முதலோர் - பாம்புகளுக்கு அரசனாகிய ஆதிசேஷன் முதலியவர்களாகிய, அதலம் கண்ணில் உறை நாகர்களில் - பாதாளலோகத்தினிடத்தில் வசிக்கிற நாகர்களுள், அடி படாதவர்கள் யார்—? எண் இல் பல யோனியில்உம்- கணக்கில்லாத மற்றும் பல பிறப்புக்களிலும், இருந்துழி இருந்துழி - (தாந்தாம்) இருந்த இருந்த இடங்களில், யா - எவை, அடிபடாதன—? (எ - று.)

இதனாலும், மேற்கவியாலும், எல்லாவுயிர்களுக்கும் உயிராயுள்ள இறைவனது ஜகச்சரீரகத்துவங் கூறுகிறார். "பரிதியு மதியும் பாம்புமைகோளும் பன்னிறம்படைத்த நாண் மீனு, மிருநிலம்புனல் காலெரிகடுங்கனல்வா னென்னுமைம் பூதமுங் காருஞ், சுருதியுமாறுசமயமானவருஞ் சுரர்களு முனிவருந் தொண்டின், மருவிய முனிவர் கணங்களும் பட்ட மதுரைநாயகனடித் தழும்பு," "வானவர் மனிதர் நாகர்புள் விலங்கு மாசுணஞ்சிதலெறும் பாதி, யானபல் சரமு மலைமரங் கொடிபுல் லாதியா மசரமும்பட்ட, வூனடைகருவும் பட்டன தழும்போ டுதித்தன வுயிரிலோவியமுந், தானடி பட்ட சராசர சடங்கள் தமக்குயி ராயினோன் தழும்பு," "துண்ணென மாயோன் விழித்தனன் கமலச் சோதியும் யாதென வியந்தான், விண்ணவர் பெருமான் வெருவினன் வானோர் வேறுளார் மெய்ப்பனிப் படைந்தார், வண்ணயா ழியக்கர் சித்தர்சாரணர்தம் வடுப்படா வுடம்பினிற்பட்ட, புண்ணையா தென்று தத்தமிற் காட்டி மயங்கினர் புகுந்தவா றறியார்" என்னுந் திருவிளையாடற் செய்யுட்களையும், "அம்மாநம்மேலனறு பட்டதருட் கூடற், பெம்மான்மேற்பட்ட பிரம்படியே" என்னும் மதுரைக்கலம்பகக் கவியையும் இங்கே நோக்குக.

அரி - ஹரி; (தன்னை அடைந்தவர்களின் துன்பங்களைப்) போக்குகிறவன்; அல்லது, (அசுரர்முதலிய பகைவர்களை)அழிப்பவன். அரி என்பதற்கு- இங்கே இந்திரனென்று பொருள்கூறுவர், ஒருசாரார். மானவர் - மனுவின் சந்ததியார். மனுக்கள் - சுவாயம்புவன், சுவாரோசிஷன், உத்தமன், தாமசன், இரைவதன், சாக்ஷுஷன், வைவசுவதன் எனப்படுகிற சிறந்த சக்கரவர்த்திகள். யோனி என்றது - மிருகம், பட்சி, ஊர்வன, நீர்வாழ்வன முதலியவற்றை. (க0எ)

108. வேதமடியுண்டனவிரிந்தபலவாகமவிதங்களடியுண்டன வோரைப், பூதமடியுண்டனவிநாழிகைமுதற்புகல்செய்பொழுதொடு சலிப்பில்பொருளின், பேதமடியுண்டனபிறப்பிலியிறப்பிலிபிறங்க லரசன்றன்மகளார், நாதனமலன்சமரவேடவடிவங்கொடுநரன்கை யடியுண்டபொழுதே.

(இ - ள்.) பிறப்பு இலி-பிறத்தலில்லாதவனும், இறப்புஇலி-இறத்தலில் லாதவனும், பிறங்கல் அரசன்தன் மகளார் நாதன்-பர்வதராஜனாகிய இமவா னது குமாரியான உமாதேவியினது கணவனும்,—அமலன்-குற்றமில்லாதவ னும் ஆகிய சிவபிரான், சமரம் வேடன் வடிவம் கொடு - போருக்கு உரிய வேடனது உருவத்தை அடைந்து, நரன் கை அடியுண்டபொழுது-அருச்சுன னது கையினால்அடிபட்டபொழுது,—வேதம்-வேதங்கள்,அடியுண்டன-அடி. பட்டன; விரிந்த பல ஆகமம் விதங்கள்-விரிவாயுள்ள அநேக ஆகமங்களின் வகைகள், அடியுண்டன—; ஓர் ஐம் பூதம் - ஒப்பற்ற பஞ்சபூதங்கள், அடி யுண்டன—; விநாழிகை முதல் புகல் செய் பொழுதொடு-விநாழிகை முத லாகச் சொல்லப்படுகிற காலதத்துவமும், சலிப்பு இல் பொருளின் பேதம்- நிலைபெயர்தலில்லாத ஸ்தாவரப்பொருள்களின் வகைகளும், அடியுண்டன-.

விநாழிகை - நாழிகையின் அறுபதிலொருபங்கு. மகளார்,ஆர் - சிறப் புணர்த்த வந்த பலர்பால்விகுதி. 'அமலன்' என்பது-தான் இயல்பாக ஆண வம் முதலிய மலங்களின் தொடர்ச்சியில்லாதவன் என்னும் பொருளைமாத் திரமேயன்றி, தனக்குச்சரீரமாகவுள்ள சராசரங்களின் மலசம்பந்தமுமில்லா தவனென்னுங் கருத்தையும் உடையது. பின் இரண்டடி - இறைவனது பெருஞ்சிறப்புக்களுடனே, அடியவர்க்கு எளியவனாயிருக்குந் தன்மையை யும் வெளியிட்டது. (௧0அ

109.—இதுமுதல் நான்குகவிகள் - அருச்சுனனோடு சிவவேடன் மற்போர்புரிதலைக் கூறும்.

என்பொடுகொழுந்தசைநிணங்குருதியென்னுமவையீரிரண்டா னும்வயிரா, வன்பொடுவளர்ந்தமிருகாதிபதிகாரியெனும்வடிவழகு பெற்றமறவோ, னன்பினொடுபேரறம்வளர்த்தருளெயிற்றிமிகவஞ் சவபிராமவெயினன், பொன்புரையுமேனியிலடித்தமைபொறுதுமற் போர்புரியுமாறுகருதா.

இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) என்பொடு - எலும்பும், கொழு தசை-கொழுமையானதசை யும், நிணம் - கொழுப்பும், குருதி-இரத்தமும், என்னும் அவை ஈர் இரண் டான்உம்-என்று சொல்லப்படுகிற அந்த நான்குபொருள்களாலும், வயிரா வயிரங்கொண்டு [உறுதியாய் என்றபடி], வன்பொடு - வலிமையோடு வளர்ந்த—, மிருக அதிபதி-மிருகங்களுக்குத் தலைமையான சிங்கமொன்று காரி-கருநிறமுடையது, எனும்-என்று சொல்லப்படுகிற, வடிவு அழகு-உடம் பின் தன்மையை, பெற்ற-உடைய, மறவோன்-பராக்கிரமமுடையவனாகிய அருச்சுனன், அன்பினொடு பேர் அறம் வளர்த்தருள் எயிற்றி மிக அஞ்ச-அன் புடனே பெரிய தருமங்களையெல்லாம் வளர்த்தருளுகின்ற வேடச்சிவடிவ மான உமாதேவி மிகவும் அஞ்சும்படி, அபிராமன் எயினன் - அழகிய வேட வடிவமான சிவபிரானது, பொன் புரையும் மேனியில்-பொன்னை யொத்த அருமையான திருமேனியிலே, அடித்தமை-அடித்ததனை, பொறுது-பொறுக்

காமல், (அவ்வேடன்), மல் போர் புரியும் ஆறு - மல்லயுத்தஞ் செய்யும்படி, கருதா-எண்ணி,—(எ - று.)—'கருதா' என்பது-மேற்கவியில் 'தொடங்கியுற' என்பதனோடு முடியும்.

எழுவகைத் தாதுக்களில் என்புமுதலிய நான்கும் வலிமைக்குச் சிறத்தலால், அவற்றை எடுத்துக்கூறினர். வயிரா என்னும் இறந்தகால வினையெச்சத்தில், வயிர மென்பதன் விகாரமாகிய வயிர் - பகுதி. காரி, கருமையென்பதன் திரிபாகிய கார் - பகுதி; இ - விகுதி. காரி - வயிரவனென்று பொருள்கூறி, மிருகாதிபதியும் காரியும் எனினுமாம். வயிரவமூர்த்தி பிக்ஷாடனஞ்செய்தபோது வெகு அழகிய வடிவோடு சென்றானென்று கூர்மபுராணங் கூறுவதுங் காண்க. மிருகாதிபதி - யானைக்குத் தலைவனாகிய, காரி - இந்திரன் என்றுரைருமுளர். உமாதேவி எண்ணான்கறம் வளர்த்த வரலாறு, காஞ்சிப்புராணத்திற் காணப்படும். (கoக)

110. உள்ளடிவிரற்றலைகள்புறவடிபரட்டினுட னுயர்கணைக் கான்முழந்தா, டள்ளரியவூருவுயர்தாழ்வரைகளொத்தகடி தடமுதரமார்புதிணிதோ,டுள்ளிவருசெங்கையொடுமுன்கைபிடர்நெற்றியொடு சூடமெனவெண்ணுபடையால், வள்ளலெனையாளுடையமாதவனுமாதவனுமல்லமர்தொடங்கியுறவே.

(இ - ள்.) உள் அடி - உள்ளங்கால்களும், விரல் தலைகள் - விரல்களின் நுனிகளும், புறம் அடி - புறங்கால்களும், பரட்டினுடன் - காற்பரடுகளும், உயர் கணைக்கால்-(வலிமையிற்) சிறந்த கணுக்கால்களும், முழந்தாள்-முழங்கால்களும், தள் அரிய ஊரு-(வலிமைமிகுதியால்) நீக்குதற்கு அருமையான தொடைகளும், உயர் தாழ் வரைகள் ஒத்த-உயர்ந்து தோன்றுகின்ற மலைத்தாழ்வரைகளை ஒத்திருக்கின்ற, கடி தடம்-அரையும், உதரம்-வயிறும், மார்பு-மார்பும், திணிதோள்-வலியதோள்களும், துள்ளி வரு செம் கையொடு-துள்ளிக்கொண்டு(முன்னே விரைந்து) வருகிற சிவந்தகைகளும், முன்கை-முன்னங்கைகளும், பிடர்-பின்கழுத்தும், நெற்றியொடு-நெற்றியும், சூடம்-உச்சியும், என-என்று, எண்ணு-எண்ணிச் சொல்லப்படுகிற, படையால்-ஆயுதங்களினால் [வேறே ஆயுதமெடாமல் இவ்வுறுப்புகளையே போர்க்கருவியாகக் கொண்டு என்றவாறு], வள்ளல்-வரையாதுகொடுக்குந் தன்மையையுடையவரும்,எனை ஆள் உடைய மாது அவன்உம்-என்னை ஆளுதலுடைய உமாதேவியை ஒருபாகத்திற் கொண்டவருமாகிய சிவபிரானும், மாதவன்உம்-மிகுந்த தவத்தையுடைய அருச்சுனனும், மல் அமர் - மற்போரை, தொடங்கியுற - தொடங்க,—(எ - று)—'வீசினன்' என அடுத்த கவியோடு முடியும்.

உள் அடி-காலின் உள்ளிடமென்றும், புறவடி - காலின்மேலிட மென்றும் பொருள் படுதலால், முன்பின்னாகத் தொக்குவந்த ஆறும்வேற்றுமைத் தொகை; இலக்கணப்போலி. "மெய்சென்று தாக்கும் வியன்கோலடிதன்மேற், கைசென்று தாங்குங் கடிது" ஆதலால், 'துள்ளிவருசெங்கை' எனப்பட்டது. ஈற்றடியில், மாதவன் உமாதவன் எனப்பிரித்து-என்னை அடிமையாகவுடைய வள்ளலாகிய பெருந்தவமுடைய அருச்சுனனும், உமாதேவியி

னுடைய கணவனான உருத்திரனும் என்றும் பொருளுரைப்பாருமுளர். 'வனையாளுடை யுமாதவனு மாதவனும்' எனப் பாடமுமாம். (கக0)

111. மல்லமர்தொடங்கியிவரிருவரும்வெகுண்டுபொர மாதிர முமாநிலமுமே, லெல்லையுமதிர்ந்துசுழல்கின்றபொழுதத்திமையவின் பமயில்கேள்வன்வெகுளா, நல்லிசைபுனைந்தமணிநூபுரவிசாலவொளி நண்ணுபதநாண்மலரினால், வில்லியரிலெண்ணுதிறல்வில்லுடையகாளை தனைவிண்ணுலகில்வீசினனரோ.

(இ - ள்.) இவர் இருவர்உம் - (சிவனும் அருச்சுனனும் ஆகிய) இந்த இரண்டுபேரும், மல் அமர் தொடங்கி - மற்போரை ஆரம்பித்து, வெகுண்டு-கோபித்து, பொர-போர்செய்ய, (அதனால்), மா திரம்உம்-திக்குக் களும், மா நிலம்உம்-பெரிய பூமியும், மேல் எல்லைஉம்-மேலுலகமும், அதிர்ந்து-நடுங்கி, சுழல்கின்ற பொழுதத்து - சுழறசியடைகிற காலத்தில், இமயம் இன்பம் மயில் கேள்வன் - இமயமலையிற்பிறந்த இன்பத்தைத்தருகின்ற மயில் போலுஞ் சாயலையுடைய அம்பிகையின் கணவனான சிவவேடன், வெகுளா-கோபித்து, நல் இசை புனைந்த-நல்ல கீர்த்தியைக் கொண்ட, மணி நூபுரம் விசாலம் ஒளி நண்ணு-இரத்தினச்சிலம்பினது விரிவான பிரகாசம் பொருந்திய, பதம் நாள் மலரினால் - அன்றுமலர்ந்த தாமரைப்பூப்போல் மெல்லிய (தனது) திருவடியினால், வில்லியரில் எண்ணு திறல் வில் உடைய காளை தனை - விற்போர்வல்லவர்களிற் சிறந்தவனாக நன்குமதிக்கப்படுகிற வலிமையையுடைய காண்டீவவில்லையுடைய இளவீரனான அருச்சுனனை, விண் உலகில் - ஆகாயமார்க்கத்தில், வீசினன் - தூக்கியெறிந்தான்; (எ - று.)

சிவ வேடனும் அருச்சுனனும் மற்போர் புரிந்தபோது உண்டான அதிர்ச்சியால் திக்குக்கள் முதலியன நிலைகுலைந்து சுழன்றதாக, அப்போது சிவவேடன் வெகுண்டு அருச்சுனனைப்பிடித்து வானத்தில் தூக்கியெறிந்தனனென்பதாம். மயில் - உவமையாகுபெயர். நல்லிசை புனைந்த பதம், நூபுர விசாலவொளிநண்ணுபதம் என இயையும். வில்லுடைய - ஒளியுடைய என்றுமார். விண்ணினுற வீசினனரோ என்றும் பாடம். (கக௧)

112. விண்ணவர்தமூர்புகுதவிண்ணவர்பிரான்மதலை விசையுடனெழுந்துமுகில்போன், மண்ணினிடைவீழ்தருமுன்மார்பகலமல் லதைவயங்கு புறமென்றுதெரியா, னெண்ணரியஞானவொளியாகி வெளியாகிவருமெயினர்பதியானகருவைப், புண்ணியன்மகிழ்ந்துருக நின்றுலியுடன்பழையபூசல்பொரவெண்ணியெதிர்வான்.

(இ - ள்.) விண்ணவர் பிரான் மதலை - தேவராசனான இந்திரனது புத்திரனாகிய அருச்சுனன்,— விண்ணவர்தம் ஊர் புகுத - தேவலோகத்தைச் சமீபிக்கும்படி, விசையுடன் - வேகத்தோடு, முகில்போல் - மேகம் போல, எழுந்து - (ஆகாயத்தில்) எழும்பி, மண்ணினிடை-பூமியிலே, வீழ்தரும்முன் - விழுவதற்கு முன்னே [மிகவிரைவிலென்றபடி], அகலம் மார்பு அல்லதை வயங்கு புறம் என்று தெரியான் - (தனது) பரந்த மார்பையே

யன்றி விளங்குகின்ற முதுகைக் காட்டாதவனாகி,—என் அரிய ஞானம் ஒளி ஆகி - (யாவராலும்) எண்ணுவதற்கும் அருமையான ஞானமயமான தேஜோரூபியாய், வெளி ஆகி வரும் கருணை புண்ணியன் ஆன - வெளியிற் காணப்பட்டுவருகிற திருவருளையுடைய பரிசுத்த மூர்த்தியான, எயினர் பதி - (சிவபிரானது உருவமாகிய) வேடர்தலைவன், மகிழ்ந்து உருக - (தன்னைக்கண்டு) களித்து மனம் உருகும்படி, நின்று - முன்னே நின்று, ஒலியுடன் - ஆரவாரத்துடனே, பழைய பூசல் பொர எண்ணி - முன்செய்த மற்போரை (மீண்டுஞ்) செய்யநினைத்து, எதிர்வான்-எதிர்ப்பவனானான்; (எ-று.)

சிவவேடன் தன்னைத் தூக்கி வானத்தி லெறியவும், அப்போதும் அருச்சுனன் சிறிதும் பின்வாங்காது மீண்டும் முன்போலப் போர் செய்ய எண்ணி ஆரவாரித்து எதிர்ப்பவனாயின னென்க. வெளியாகி-ஆகாச ரூபமாய்; அருவமாகி என்றுமாம். மார்பமுகமல்லை தை என்றும் பாடம். (கக௨)

## 113.—சிவபிரான் அருச்சுனனுக்குப் பிரதியக்ஷமாதல்.

*வெய்யகணநாதர்கணதேவர்விபுதாதியர்விரிஞ்சிசிவயோகியரருஞ், செய்யசுடரோனளகையாதிபதிகின்னரர்கள்சித்தர்பலசாரணர்மணிப்,பையரவினாடிபுருகூதனிவர்சூழ்தரவொர்பச்சைமயில்பாதியுடனே, துய்யவிடைமீதொருசெழுஞ்சுடரெழுந்ததுதொழுந்தகையதாகுமளவோ.*

(இ - ள்.) (அந்தச் சமயத்தில்), வெய்ய கண நாதர் - (பகைவர்களுக்குப்) பயங்கரமான பிரமதகணங்களுக்குத் தலைவர்களும், கணதேவர் - பிரமதகணங்களாகிய தேவர்களும், விபுதஆதியர் - மற்றைத் தேவர் முதலியோரும், விரிஞ்சி - பிரமனும், சிவயோகியர் - சிவவிஷயமான யோகாப்பியாசத்தையுடைய முனிவர்களும், அரு செய்ய சுடரோன் - (காணுதற்கு) அருமையான சிவந்த கிரணங்களுடைய சூரியனும், அளகை ஆதிபதி - அளகாபுரிக்கு அரசனான குபேரனும், கின்னரர்கள் - கின்னரர்களும், சித்தர் - சித்தர்களும், பல சாரணர்-அநேகசாரணர்களும், மணி பை அரவின் ஆடி - மாணிக்கத்தையுடைய படத்தையுடைய பாம்பின்மீது ஆடின திருமாலும், புருகூதன் - இந்திரனும், இவர் - என்கிற இவர்கள், சூழ்தர-(தன்னைச்சுற்றிலும்) நிற்கும்படி, துய்ய விடைமீது - பரிசுத்தமாகிய ரிஷபத்தின்மேல், ஒரு செழு சுடர் - (எல்லா ஒளிகளினும்) மேம்பட்டதொரு ஒளியுருவம், ஒர் பச்சை மயில் பாதியுடனே - பசுநிறமுள்ள மயில்போலுஞ் சாயலையுடைய உமாதேவியின் உருவமான இடப்பக்கத்துடனே, எழுந்தது- தோன்றிற்று ; தொழும் தகையது ஆகும் அளவோ - (அது) வணங்கத்தக்க தன்மையுடையதோ ? [வணங்குதற்கு அரியதென்றபடி]; (எ - று.)

பின்னும் அருச்சுனன் மற்போரில் எதிர்க்கவர, அப்போது பிரமதகணங்களும்தேவகணங்களும் முனிகணங்களும் சூழ்ந்திருக்க விருஷபவாகனத்தின்மேல் பார்வதியோடும் பரமசிவன்பிரதியட்சமாய்த் தோன்றினனென்க. அங்குத்தோன்றிய பரஞ்சோதியின் வடிவத்தின் தன்மையை அள

விட்டு எவராலும் வணங்குவதற்கு அரியதென அச்சோதியின் சிறந்த தன்மையை, 'தொழுந்தகையதாகு மளவோ' என்றதனாற் கவி வெளியிட்டனர்.

'மணிப்பையரவினடி' என்றது-விஷ்ணுவினது அவதாரமாகிய கிருஷ்ணபகவான் யமுனாநதியில் ஓர்மடுவிலிருந்துகொண்டு அந்நதிமுழுவதையுந் தன்விஷாக்கினியினாற் கொதிப்படைந்த நீருள்ளதாய்ப் பானயோக்கியமாகாதபடி செய்துவந்த காளியனென்னுந் துஷ்டநாகத்தைத் தண்டிக்கவேண்டுமென்று திருவுள்ளம்பற்றி அம்மடுவிற்குச் சமீபத்திலுள்ளதொரு கடம்பமரத்தின்மேலேறி அம்மடுவிற்குதித்து, கொடிய அந்நாகத்தின் படங்களின்மேல் ஏறித் துவைத்து நர்த்தனஞ்செய்து நசுக்கி வலியடக்கி, 'மங்கலியபிட்சையிடவேண்டும்' என்று தம்மைவணங்கிப்பிரார்த்தித்த நாககன்னிகைகளின் விண்ணப்பத்தின்படி உயிரோடு கடலிற்சென்றுவாழும்படி அந்தக் காளியனை விட்டருளினனென்னும் வரலாற்றை உட்கொண்டு ; இனி, இத்தொடர்க்கு - ஆதிசேஷனிடத்துப்பொருந்திய திருமாலென்றுமாம்: நாடியெனப்பிரித்து - திருவனந்தாழ்வானிடத்து விருப்பமுடையா னென்றலும் அமையும் ; இ - பெயர்விகுதி. விபுதர் என்னும் வடசொல்லுக்கு - விசேஷமான புத்தியையுடையவரென்று பொருள். ஆதிபதி - நீட்டல். விரிஞ்சி - (அன்னப்) பறவையால் தாங்கப்படுபவனென்று காரணம்பற்றிய பெயர். அளகை - குபேரனது வாழிடமான பட்டணம். பச்சை - பண்புப்பெயர் ; பசு-பண்படி: பகுதி தன்னொற்றிரட்டிற்று. விடை - வ்ருஷம் என்னும் வடமொழித் திரிபு. செழுஞ்சுடர்என்றது - பரஞ்சோதிசுவரூபமான சிவத்தை.

114.—இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்; அருச்சுனன் சிவபிரானைத் தரிசித்துவணங்கிப் பரமானந்தம் அடைந்ததைத் தெரிவிக்கும்.

கைவிலுடனேயெயினர்கோடிபலர்சூழவரக்கன்னிமயில்பின்
னர்வரவே, தெய்வமறைஞானிகடொடர்ந்துவரவந்துபொருசெய்ய
சிவவேடன்முடிமேற், சைவமுறையேயிறைவர்தண்மலரினோடறுகு
சாத்தியொளிர்நாண்மலரெலா, மெய்வடிவுகொண்டனைய கரியதவ
வேடனிணைவிழிமலர்பரப்பிமகிழா.

(இ - ள்.) எயினர் கோடி பலர் - அநேககோடிவேடர்கள், கைவிலுடனே - (தந்தமது) கையிற்பிடித்த வில்லோடும், சூழவர - (தம்மைச்) சுற்றிலும் வரவும், கன்னி மயில் - இளைய மயில்போலுஞ் சாயலையுடைய உமாதேவி, பின்னர் வர - (தமக்குப்) பின்னே வரவும், தெய்வம் மறை ஞானிகள்-தெய்வத்தன்மையுடைய வேதங்களின்வடிவமான நாய்கள், தொடர்ந்து வர - (தம்மைப்) பின்தொடர்ந்து வரவும், வந்து பொரு-எதிர்வந்து போர் செய்த, செய்ய - அழகுடைய, சிவவேடன் - வேட வடிவமாகிய சிவபிரானது, முடிமேல் - திருமுடியின்மீது, சைவமுறையே இறைவர் தண் மலரினோடு அறுகு சாத்தி ஒளிர் நாள் மலர் எலாம் - சைவசமயநூலின்விதிப்படியே சிறந்ததேவர்களும் முனிவர்களும் குளிர்ந்த பூக்களையும் அறுகம்புல்லையும் சமர்ப்பிக்க (அதனால் அத்திருமுடியில்) விளங்குகிற புதிய பூக்களை

யெல்லாம், மெய் வடிவு கொண்டுஅனைய கரிய தவம்போலவுடன்-சத்தியமானது ஒருருவத்தையெடுத்தாற்போன்ற கருநிறமுடைய தவத்திற்குரியகோலத்தை யுடைய அருச்சுனன், இணை விழி மலர் பரப்பி -(தனது) தாமரைமலர் போன்ற இரண்டுகண்களையும்நன்றாகவிழித்துப்பார்த்து, மகிழா-களித்து,—(எ - று.)—'தொழா' என மேலிற்கவியில் தொடரும்.

'தன்னோடுபோர்புரிய வந்த வேடுவன் சிவபிரான்' என்பதை, முடியிற் சாத்தப்பட்டுள்ள கொன்றைமலர் அறுகம்புல் முதலியவற்றால் நிச்சயமா யறிந்து அருச்சுனன் பெருமகிழ்ச்சியடைந்தா னென்க. கந்யாஎன்னும் வட மொழித் திரிபாகிய கன்னியென்னும்பெயர்ச்சொல்-இங்கேஇளமையென்ற பொருளைத் தந்தது. சைவம்-சிவனைத் தெய்வமாகக்கொள்ளும் மதம்; தத்தி தாந்தவடமொழி. சைவமுறை - சிவாகமம்: முறை - நூல். வேடன் என்ற சொல் - தமிழ்மொழியாய் வேட்டுவன் என்ற பொருளிலும், வடமொழி யாய் வேஷத்தையுடையவன் என்ற பொருளிலும் வந்துள்ள நயம் பாராட் டற்பாலது. சாத்தி - செயவெனெச்சத்தின் திரிபு. (கககசு)

115. தும்பைவகைமாலைசெறிவில்லமொடுகொன்றைமலர் சூத மறுகேககமழ்தருஞ், செம்பவளவேணிமிசைதிங்களநதிசூடியருள் செம்பொன்வடமேருவனையா, னும்பர்மணியாழினொடுதும்புருவுநா ரதனுமுருகியிசைபாடவருள்கூ,ரம்பையுடனேவிடையின்மீதொளிர நின்றதனையஞ்சலிசெய்தன்பொடுதொழா.

(இ - ள்.) தும்பை - தும்பைப்பூவினாலாகிய, வகை-பலவகைப்பட்ட, மாலை - மாலைகளும், செறி வில்லமொடு - நெருங்கிய பில்வபத்திரங்களும், கொன்றைமலர் - கொன்றைப்பூக்களும், சூதம் - மாந்தளிர்களும், அறுகு - அறுகம் புற்களும், கமழ்தரும் - வாசனைவீசப்பெற்ற, செம் பவளம் வேணி மிசை - பவழம்போலச் சிவந்த சடையின் மேல், திங்கள் நதி சூடியருள் - சந்திரனையுங் கங்காநதியையுந் தரித்தருளிய, செம் பொன் வட மேரு அனையான் - சிவந்த பொன்மயமான வடக்கிலுள்ள மகாமேருமலையை ஒத்தவனா கிய பரமசிவன், உம்பர் - தேவர்கள்கேட்பதற்குரிய, மணி யாழினொடு - அழகியவீணையின் இசையுடனே, தும்புருவும்—, நாரதனும்—, உருகி - மனமுருகி, இசைபாட-கீதத்தைப் பாடாநிற்க, அருள் கூர் அம்பையுடனே- கருணைமிகுந்த உமாதேவியுடனே, விடையின்மீது - விருஷபத்தின்மேல், ஒளிர நின்றதனை - விளக்கமாக எழுந்தருளித் தரிசனந் தந்துநின்ற திருக் கோலத்தை, அஞ்சலிசெய்து - கைகூப்பிவணங்கி, அன்பொடு - பக்தியுட னே, தொழா - நமஸ்கரித்து,—(எ - று.)— 'ஆடினன்' என மேற்கவி யோடு தொடரும்.

தனக்குச் சிவபிரான் உமாதேவியோடு விருஷபவாகனத்திற் பிரதி யட்சமானது கண்டு பெருமகிழ்ச்சி யடைந்த அருச்சுனன் கைகூப்பி வணங் கிப் பேரன்போடு நமஸ்கரித்தன னென்பதாம். தும்பைமாலை முதலியவற் றைச் சிவபிரான் முடியிலணிந்துள்ளன னென்க. வில்லம் - வடமொழித்

திரிபு. சூதம் - தற்சமவடசொல்; பொருளாகுபெயர். அம்பை - அம்பா: வடசொல். மேரு - ஒளிக்கு உவமை. விசுவாவசுவினது வீணைக்கு ப்ருஹதீ என்றும், தும்புருவினது வீணைக்குக் கலாவதீ யென்றும், நாரதரது வீணைக்கு மகதீ என்றும், சரஸ்வதியினது வீணைக்குக் கசசபீ என்றும் பெய ரென்று உணர்க. கருவியாகிய யாழினது ஒலியுங் கண்டத்தினது ஒலியுஞ் சிறிதும்வேறுபடாமல் ஒத்துநிற்கிற சிறப்புத் தோன்ற 'யாழினொடு இசை பாட' என்றார். தும்புரு - ஒருகந்தருவமுனி. நாரத னென்பதற்கு - மனி தர்களுக்குஉள்ள ஒற்றுமையைக் கெடுப்பவனென்றும், ஆத்துமஞானத் தைப் பலர்க்கும்உபதேசிப்பவனென்றும் பொருள்; இவர், தேவமுனி.

வேறு

116. ஆடினன் களித்தன னயர்ந்து நின்றனன்
ஓடினன் குதித்தன னுருகி மாழ்கினன்
பாடினன் பதைத்தனன் பவள மேனியை
நாடின னடுங்கின னயந்த சிந்தையான்.

(இ - ள்.) நயந்த சிந்தையான் - மிகுந்த அன்புகொண்ட மனத்தை யுடைய அருச்சுனன், ஆடினன் - (ஆனந்தத்தால்) கூத்தாடினான்; களித்த னன் - மிகமகிழ்ந்தான்; அயர்ந்து நின்றனன் - (தன்னை) மறந்து பரவசமாய் நின்றான்; ஓடினன் - (எதிரில்) விரைந்துசென்றான்; குதித்தனன் - துள்ளி னான்; உருகி - மனமுருகி, மாழ்கினன் - மயங்கினான்; பாடினன் - பாடல் பாடினான்; பதைத்தனன் - மிகவிரைந்தான், பவளம் மேனியை - பவழம் போற் சிவப்பான (சிவபிரானது) திருமேனியை, நாடினன் - மிகவிரும்பி னான்; நடுங்கினன் - (உடம்பு) நடுங்கினான்; (எ - று.)

ஆடுதல் முதலியன - அருச்சுனனுக்குச் சிவபிரானிடத்துள்ள பேரன் பின்செயல்கள். ஒருவனிடத்துப் பலதொழில் ஒருகாலத்தில் நிகழ்ந்ததாகக் கூறியது - கூட்டவணியின்பாற் படும்; இதனை, வடநூலார் ஸமுச்சயாலங் காரமென்பர். நடுங்கினன் - கீழ்த் தான் முடியில் வில்லாலடித்ததைக் கரு திப் பயந்தா னென்றுமாம். நயத்தல் - ஆசைப்பெருக்கம்.

இதுமுதல் முப்பத்துமூன் றுகவிகள்-பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றையவை விளச்சீருமாகிவந்த கலிவிருத்தங்கள். (ககசு)

117.—இதுமுதல் ஐந்து கவிகள் - பரமசிவனைநோக்கி அருச்சுனன் சொன்னவை.

விழுந்தருவினையினின் மெலிந்துநாயினு
மழுந்தியபிறவியினயருவேன்முனஞ்
செழுஞ்சுடர்மணிப்பணித்திங்கண்மௌலியா
யெழுந்தருளியவிதென்னமாயமோ.

ஆறு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) செழு - மிகுந்த, சுடர்-ஒளியையுடைய, மணி - மாணிக் கத்தையுடைய, பணி - சர்ப்பங்களையும், திங்கள் - பிறைச்சந்திரனையு

யணிந்த, மௌலியாய் - திருமுடியுடையவனே! அரு வினையினின் - (கடப்பதற்கு) அருமையான கருமங்களால், அழுந்திய பிறவியின் விழுந்து - தாழ்வான பிறப்புக்களிலே வீழ்ந்து, நாயினும் மெலிந்து - நாயைக் காட்டிலுங் கடைப்பட்டு, அயருவேன் முனம் - வருந்துகின்ற அடியேனது எதிரில், எழுந்தருளிய - வந்து தரிசனந் தந்தருளிய, இஃது - இச்செயல், என்ன மாயம்கொல் - என்ன ஆச்சரியமோ! (எ - று.)

தீவினைபோல நல்வினையும் பிறப்புக்குக் காரணமாதலால், உயிரைப் பந்தப்படுத்துவதிற் பொன்விலங்கும் இருப்புவிலங்கும்போல நல்வினையும் தீவினையும் தம்முள் ஒப்பனவா மென்க. (கக௭)

118. ஆதியேயண்டமுமனைத்துமாயொளிர்
சோதியேகொன்றையந்தொங்கன்மௌலியாய்
வாதியேமரகதவல்லியாளொரு
பாதியேபவளமாம்பரமரூபியே.

(இ - ள்.) ஆதியே - (எல்லாப்பொருள்களுக்கும்) முதன்மையானவனே! அண்டமும் - உலக வுருண்டைகளும், அனைத்தும் - (அவற்றிலுள்ள) சராசரப்பொருள்களெல்லாமும், ஆய் - ஆகி, ஒளிர் - விளங்குகின்ற, சோதியே - ஒளியுருவானவனே! கொன்றை - கொன்றை மலர்களாலாகிய, அம் - அழகிய, தொங்கல் - திருமாலையைச்சூடிய, மௌலியாய் - முடியையுடையவனே! வாதியே - பேசவல்லவனே! மரகதவல்லியாள் - மரகத ரத்தினமயமான பூங்கொடி போன்ற உமாதேவியை, ஒருபாதியே - இடப்பாகத்திலுடையவனே! பவளம் ஆம் பரம ரூபியே - (தனது வலப்பாகம்) பவழ மயமான சிறந்த வடிவமுடையவனே! (எ - று.)

தொங்கல் - தொங்குவதாகிய மாலை: அல் - கருத்தாப்பொருள்விகுதி. வாதியென்பது - ஸர்வஜ்ஞனென்பது தோன்ற நின்றது. (கக௮)

119. பையராவணிமணிப்பவளமேனியாய்
செய்யவாய்மரகதச்செல்விபாகனே
யையனேசேவடியடைந்தவர்க்கெலா
மெய்யனேயெங்குமாய்விளங்குஞ்சோதியே.

(இ - ள்.) பை - படத்தையுடைய, அரா - நாகங்களை, அணி - ஆபரணமாகத் தரித்த, மணி - அழகிய, பவளம் மேனியாய் - பவழம்போற் சிவந்த திருமேனியுடையவனே! செய்ய வாய் - சிவந்த வாயையுடைய மரகதம் - மரகதரத்தினம்போற் பசுநிறமான, செல்வி - எல்லாச் செல்வங்களுமுடைய அம்பிகையை, பாகனே - இடப்பாகத்திற் கொண்டவனே! ஐயனே - தலைவனே! சே அடி அடைந்தவர்க்கு எலாம் - சிவந்த திருவடிகளைச் சரணமடைந்த அன்பர்களுக்கெல்லாம், மெய்யனே - உண்மையாய் நிற்பவனே! எங்கும் ஆய் விளங்கும் - எல்லாவிடங்களிலும் பொருந்தி விளங்குகின்ற, சோதியே - தேஜோரூபியே! (எ - று.)

மிகுந்தபக்தியுடன் கூறிய தாதலால், மேற்கவிகளோடு கூறியதுகூற லென்னும் குற்றமில்லை: "பத்தர்சொன்னவும் பன்னப்பெறுபவோ" எனக் கம்பர்கூறியவாறு அறிக. (கககூ)

120. முக்கணுநிலவெழுமுகிழ்த்தமூரலுஞ்
சக்கரவதனமுந்தயங்குவேணியு
மைக்கயன்மரகதவல்லிவாழ்வுறு
செக்கர்மெய்வடிவமுஞ்சிறந்துவாழியே.

(இ - ள்) (உன்னுடைய), முக்கண் உம் - மூன்று திருக்கண்களும், நிலவு எழ முகிழ்த்த மூரல்உம் - சந்திரனொளிபோன்றவொளி வெளித்தோன்றும்படியுண்டான புன்சிரிப்பும், சக்கரம் வதனம்உம் - வட்டவடிவமான முகமும், தயங்கு வேணி உம் - விளங்குகின்ற சடையும், மை கயல் மரகதம் வல்லி வாழ்வுறு செக்கர் மெய் வடிவம்உம் - மையிட்ட கயல்மீன்போற் பிறழ்கிற கண்ணையுடைய மரகதமணியாலாகிய கொடிபோலப் பசுநிறமாக வுள்ள பார்வதிதேவி வசிக்கப்பெற்ற சிவப்பான திருமேனியின் உருவமும், சிறந்து வாழி - மேன்மைப்பட்டு வாழக்கடவன, (எ - று.)

முக்கண் - இயற்கை யிருகண்ணோடு நெற்றிக்கண். கயல், வல்லி - உவமவாகுபெயர்கள். ஒப்புயர்வில்லாத கடவுளுடைய திருமேனி கண்ணெச்சிற்படாமேகாலதத்துவமுள்ளவரையும்ஒருகுறையுமின்றிக்கேநிலைபெற வேண்டுமெனக்கிற கருத்தோடுகூடிய மிக்க ஆர்வத்தால், 'சிறந்துவாழி' என வாழ்த்தினன். செக்கர் - பண்புப்பெயர். (கஉ0)

121. அன்புறுதருமனுக்கனுசனாயினே
னன்பரம்பொருளுக்குநண்புமாயினேன்
பொன்புரைமேனியாய்போற்றினேனுனை
யென்பெருந்தவப்பயன்யார்பெற்றார்களே.

(இ - ள்.) பொன் புரை மேனியாய் - பொன்னையொத்து அருமையான திருமேனியையுடையவனே! அன்பு உறு தருமனுக்கு - (உயிர்களிடத்து) அன்புமிகுந்த தருமபுத்திரனுக்கு, அனுசன் ஆயினேன் - தம்பியானேன்; நல் பரம் பொருளுக்கு - சிறந்த பரதத்துவமாகிய கண்ணபிரானுக்கு, நண்பு உம் ஆயினேன் - சிநேகிதனும் ஆனேன்; உனை போற்றினேன் - உன்னையும் வணங்கினேன்; என் பெரு தவம் பயன் - எனது சிறந்த தவத்தினது பயன்போன்ற பயனை, யார் பெற்றார்கள் - வேறே யாவர் பெற்றார்? [ஒருவருமிலர் என்றபடி]; (எ - று.)

அனுசன்=அநுஜன்: பின்பிறந்தவன்: பரம்பொருள் - எல்லாப் பொருள்களுக்கும் மேலான பொருள். நண்பு - ஆகுபெயர். "எஞ்சு பொருட்கிளவி செஞ்சொலாயிற், பிற்படக்கிளவார் முற்படக்கிளத்தல்" என்னுந் தொல்காப்பியவிதிக்கு ஏற்ப, 'தருமனுக்கநுசனாயினேன் பரம் பொருளுக்குநண்புமாயினேன்' என உம்மையில்லாத சொல் முன்சொல் லப்பட்டது. (கஉக)

122.—இவ்வாறுசொன்ன அருச்சுனனைச் சிவபிரான் தழுவுதல்.

என்றுகொண்டிம்முறையிவனியம்பவே
மன்றலங்கொன்றையம்மாலைமௌலியா
னொன்றியதவம்புரியும்பர்தம்பிரான்
றன்றிருமதலையைத்தழுவினனரோ.

(இ - ள்.) என்று—, இ முறை - இவ்விதமாக, இவன் - அருச்சுனன், இயம்ப - சொல்ல,—மன்றல்-வாசனையையுடைய, அம்-அழகிய, கொன்றை மாலை-கொன்றைப்பூ மாலையைச்சூடிய, மௌலியான் - திருமுடியையுடைய சிவபெருமான், ஒன்றிய தவம் புரி உம்பர் தம் பிரான்தன் திருமதலையை - பொருந்திய தவத்தைச்செய்த தேவராஜகுமாரனான அருச்சுனனை, தழுவினன் - கட்டிக்கொண்டான் ; (எ - று.)

இயம்பத் தழுவினனென்க. கொண்டு - அசை. அம் - சாரியையுமாம்.

123.—சிலமொழிந்து சிவபிரான் அருச்சுனனைத் தேற்றுதலுறுதல்.

தழுவினன்பெருந்துயரகற்றித்தண்ணளி
பொழிதருகண்ணினன்புரக்குஞ்சிந்தைய
னழிவறவொழிவறவமர்ந்தசோதியன்
பழுதறுமொழிசிலபகர்ந்துதேற்றினான்.

(இ - ள்.) அழிவு அற - (எப்பொழுதும்) அழிதலில்லாமலும், ஒழிவு அற - நீங்குதலில்லாமலும், அமர்ந்த - (இயற்கையாகப்) பொருந்திய, சோதியன் - ஒளியையுடைய சிவபெருமான், தண் அளி பொழிதரு கண்ணினன் - குளிர்ந்த கருணையைச் சொரிகின்ற திருக்கண்களையுடையவனும், புரக்கும் சிந்தையன் - (அருச்சுனனைக்) காத்தருளவேண்டுமென்கிற திருவுள்ளத்தை யுடையவனுமாய், தழுவினன் - (அவனை) அணைத்துக்கொண்டு, பெரு துயர் அகற்றி - (அதனால் அவனது) மிகுந்த துன்பங்களைப் போக்கி, பழுது அறு சில மொழி பகர்ந்து - குற்றமில்லாத சில வார்த்தைகளைச் சொல்லி, தேற்றினான்-(அவனைச்) சமாதானப் படுத்துபவரானார்;(எ-று.)— அதனை மேல் நான்குகவிகளிற் காண்க.

பெருந்துயர் என்றது - தவஞ்செய்ததனாலும் போர் செய்ததனாலும் உண்டான இளைப்பை. தேற்றினான் என்றது - துரியோதனாதியராலுண்டான துன்பத்தினின்றும், பரமசிவனைத் தான் அடித்ததனாலான அச்சத்தினின்றுந் தேறப் பண்ணுதல். (கஉ௩)

124.—இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்: சிவபிரான் அருச்சுனனைத் தேற்றி உனக்குவேண்டியது யாதுஎன வினவியதைத் தெரிவிக்கும்.

சூதினில்யாவையுந்தோற்றுக்கானிடை
யேதிலர்போலநீரிளைத்துவாடினீர்
வாதுசெய்புலன்களையடக்கிமண்ணின்மே
னீதவம்புரிந்தமைநினையலாகுமோ,

(இ - ள்.) சூதினில் - சூதாட்டத்தில், யாவையும்-(உங்கள்) பொருள்களை யெல்லாம், தோற்று - தோல்வியடைந்ததனாலிழந்து, நீர் - நீங்கள் ஐவரும், கானிடை - வனத்தில், ஏதிலர் போல - ஒருபொருளு மில்லாத தரித்திரர்போல, இளைத்து வாடினீர் - மெலிந்து வருந்தினீர்கள்; நீ—, வாது செய் புலன்களை - (நல்வழியிற் செல்ல வொட்டாமல்) வருத்தந் தருகிற ஐம்புலன்களையும், அடக்கி - அடங்கச் செய்து, மண்ணின்மேல்-இந்நிலவுலகத்தில், தவம் புரிந்தமை - தவத்தைச் செய்தவிதம், நினையல்ஆகும்ஓ - எண்ணக் கூடியதோ? (எ - று.)—இத்தன்மையதென்று நினைத்துப் பார்ப்பதற்கும் அரியது என்றபடி.

ஏதிலர் - ஐம்பொறிகளால் நுகரப்படும் பொருளில் எதுவும் இல்லாதவர்: வறியவர். வாது - பாதா என்ற வடமொழித் திரிபு: வாதம் என்ற வடமொழித் திரிபு ஆயின், தருக்கமென்று பொருளாம். (கஉச)

125. மூகனென்றுரைக்குமம்மூகதானவன்
வேகமோடேனமாய்விரைவில்வந்தனன்
னாகவெங்கொடியவனவின்றவாய்மையால்
யோகுசெயுனதுயிருண்ணவெண்ணியே.

(இ - ள்.) மூகன் என்று உரைக்கும் - மூகனென்று பெயர் சொல்லப்படுகின்ற, அ மூக தானவன் - மூடனாகிய அவ்வசுரன், நாகம் வெம் கொடியவன் நவின்ற வாய்மையால் - பாம்பையெழுதிய (பகைவர்க்குப்) பயங்கரமான துவசத்தையுடைய துரியோதனன்சொன்ன வார்த்தையினால், யோகு செய் உனது உயிர் உண்ண எண்ணி - தவஞ்செய்கின்ற உன்னுடைய உயிரை ஒழிக்கநினைத்து, ஏனம் ஆய் - பன்றியுருவமாகி, வேகமோடு - உக்கிரத்துடனே, விரைவில் - சீக்கிரமாக, வந்தனன் - வந்தான்; (எ - று)

துரியோதனன் தனதுநாவிரண்டுடைமையையும், நன்மை செய்தார்க்குத் தீமைசெய்யுந் தகைமையையும், எப்பொழுதுங் கோணலாகவே செல்லுந்தன்மையையும், கொடுமையையும் புலப்படுத்தற்கு நாகத்தைக் கொடியிற்கொண்டனன்போலும். யோகு=யோகம்: வடமொழித்திரிபு. உயிருண்ண-உண்ணப்படாதது உண்ணப்படுவதுபோலச் சொல்லப்பட்ட மரபுவழுவமைதி. (கஉரு)

126. வந்தவன்முந்துமுன்மங்கைதன்னுட
னிந்தவெற்புறைதருமெயினவேடமாய்ச்
சுந்தரமரகதச்சோதிவீரனே
யந்தவல்லசுரனையம்பின்வீழ்த்தினேன்.

(இ - ள்.) சுந்தரம் - அழகிய, மரகதம் சோதி - மரகதரத்தினம் போன்ற பச்சையொளியையுடைய, வீரனே - வீரனான அருச்சுனனே! அவன் - அவ்வசுரன், வந்து—, முந்து முன் - (உன்னைக்கொல்ல) முற்படுதற்கு முன்னே, (யான்), மங்கைதன்னுடன் - உமாதேவியுடனே, இந்த வெற்பு உறைதரும் எயினன் வேடம் ஆய் - இந்தமலையில் வாசஞ்செய்கிற

வேடனது வடிவமாகி, அந்த வல் அசுரனை - வலிமையையுடையவனாகிய அந்த மூகாசுரனை, அம்பின் - அம்பினால், வீழ்த்தினேன் - கொன்றுதள்ளினேன்; (எ - று.)

அஸுரன் என்ற வடசொல்லுக்கு - பாற்கடலினின்று தோன்றிய சுரையைப்பருகாதவனென்றும், தேவர்களுக்கு எதிரானவனென்றும், பகைவருடைய உயிரைக் கவர்பவனென்றும் பொருள்கொள்ளப்படும். (கஉசு)

127. நின்னுடனமர்செய்துநின்வின்னாணறுத்
தந்நெடுவில்லினாலடியுமுண்டனன்
னுன்னருமல்லினாலுதையுமுண்டனன்
னென்னினியுன்கருத்தென்றுகூறினான்.

(இ - ள்.) நின்னுடன் - உன்னுடனே, அமர் செய்து - யுத்தம் பண்ணி, நின் வில் நாண் அறுத்து - உனது வில்லினது நாணியை அறுத்து விட்டு, அ நெடு வில்லினால் அடிஉம் உண்டனன் - அந்தப்பெரிய வில்லின் தண்டத்தால் அடியும் பட்டேன்; உன் அரு மல்லினால் உதைஉம் உண்டனன் - உனது அருமையான மற்போரினால் உதையும்பட்டேன்: இனி உன் கருத்து என் - இப்பொழுது நீ கருதிய வரம் யாது? (சொல்வாய்), என்று கூறினான்—; (எ - று.)

அடியும்உதையும், உம்மைகள் எச்சப்பொருளன: இழிவு சிறப்புமாம். உன்னரு - நினைத்தற்கு அரிய, மல் - னினுமாம். (கஉஎ)

128.—அருச்சுனன் பாசுபதம்வேண்டுதல்.

அந்தவில்விசயனுமரன்பதம்பணிந்
தெந்தைபாரதவமர்க்கிசைந்தவீரர்மெய்
சிந்தநின்பேர்பெறுதெய்வவாளியைத்
தந்தருளென்றனன்றவத்தின்மேனின்றான்.

(இ - ள்.) தவத்தில் மேல் நின்றான் - தவத்திற் சிறந்து நின்றவனாகிய, அந்த வில் விசயன்உம் - விற்போரில்வல்ல அவ்வருச்சுனனும், அரன் பதம் பணிந்து - சிவனது திருவடிகளை வணங்கி, 'எந்தை - எமது தலைவனே! பாரதம் அமர்க்கு இசைந்த வீரர் மெய் சிந்த - பாரதயுத்தத்துக்கு இணங்கிவந்த பகைவீரர்களது உடம்பைச் சிதறடிக்கும்பொருட்டு, நின் பேர் பெறு தெய்வம் வாளியை - உனது திருநாமத்தைப்பெற்ற தெய்வத்தன்மையையுடைய பாசுபதாஸ்திரத்தை, தந்தருள்-கொடுத்தருளுவாயாக,' என்றனன் - என்று சொன்னான்: (எ - று.)

பாரதஅமர் என்பதற்கு - பரதவமிசத்தாருள் நிகழும் போர் என்று பொருள்: பார்அதம் அமர் என்றுபிரித்து பூமியிலுள்ள துஷ்டரை நாசப்படுத்தும் போர்என்று உரைப்பாருமுளர். சிந்த=சிந்துவிக்க: பிறவினைப்பொருளில் வந்த தன்வினை: சிதற என்று தன்வினையே யாகவுமாம். (கஉஅ)

129.—சிவபெருமான் அருச்சுனனுக்குப் பாசுபதத்தை யீதல்.

ஐயனுமம்மையோடருள்புரிந்துபின்
வெய்யபொற்றூணியும்வில்லுமமந்த்ரமுந்
துய்யபாசுபதமெய்த்தொடையுமுட்டியு
மொய்யெனநிலையுடனுதவினனரோ.

(இ - ள்.) ஐயன்உம் - தலைவனான சிவபிரானும், அம்மையோடு - பார்வதியுடனே, அருள் புரிந்து - கருணை செய்து, பின் - உடனே, வெய்ய பொன் தூணிஉம் - (பகைவர்களுக்குப்) பயங்கரமான பொன்னாலாகிய அம்புப்புட்டிலையும், வில்உம் - வில்லையும், மந்த்ரம்உம் - உரிய மந்திரத்தையும், துய்ய பாசுபதம் மெய் தொடைஉம் - பரிசுத்தமான பாசுபதம் என்கிற உண்மையான அஸ்திரத்தையும், முட்டிஉம் - அவ்வில்லையும் அம்பையும் பிடிக்கும் விதத்தையும், நிலைபுடன் - நிலையுடனே, ஒய்யென - விரைவாக, உதவினான் - தந்தருளினார்; (எ - று.)

வில் வளைத்து அம்பைஎய்வார் நிற்றற்கு உரியநிலை - ஆலீடம் பிரதியாலீடம், பைசாசம், மண்டலம் என நால்வகைப்படும்: அவற்றுள் வலக்கால் மண்டலித்து இடக்கால் முந்துறல், ஆலீடநிலை: வலக்கால் மண்டலித்து இடக்கால் முந்துறல், பிரதியாலீட நிலை; ஒருகாலில்நின்று ஒரு கால் முடக்கல், பைசாச நிலை; இருகாலும் பக்கல் வளைய மண்டலித்தல், மண்டலநிலை: இனி, ஆலீடம், பிரதியாலீடம், சமபதம், விசாகம், மண்டலம் என நிலை ஐந்து என்பாருமுளர். தூணியையும் வில்லையும் தொடையையும் உதவுதல்-தருதல்: மந்திரத்தையும் முட்டியையும் நிலையையும் உதவுதல்-உபதேசித்தல். இனி, முட்டி என்பதற்கு - கைக்கவசம் என்றும், நிலையென்பதற்கு - உடற்கவசமென்றும் பொருளுரைப்பாருமுளர். மெய்த்தொடை - பழுதுபடாமற் குறித்தஇலக்கிற் சென்று தாக்கும் அம்பு என்றவாறு. தொடை - தொடுக்கப்படுவது. (கஉகூ)

130.—சிவபெருமான் கயிலைக்கு ஏகுதல்.

பெற்றனன்விசயனும்பேயும்பூதமுஞ்
சுற்றியகணங்களுஞ்சுருதியோசையும்
வெற்றிகொள்பெற்றமும்விழைந்துசூழவே
கற்றையஞ்சடையவன்கயிலையேகினன்.

(இ - ள்.) விசயன்உம் - அருச்சுனனும், பெற்றனன் - (அவற்றையெல்லாம்) பெற்றுக்கொண்டான்; (அதன் பின்பு), கற்றை அம் சடையவன் - தொகுதியாகிய அழகிய சடையையுடைய பரமசிவன், சுற்றிய - (தம்மைச்) சுற்றிலுமுள்ள, பேய்உம் - பேய்களும், பூதம்உம் - பூதங்களும், கணங்கள் உம் - மற்றைப் பிரமத கணங்களும், சுருதி ஓசைஉம் - வேதங்களின் கோஷமும், வெற்றி கொள் பெற்றம்உம் - மேன்மையைக் கொண்ட நந்தியும், விழைந்து சூழ - விரும்பிச் சூழ்ந்துவராநிற்க, கயிலை ஏகினன் - கைலாசத்துக்குச் சென்றருளினார்; (எ - று.)

ஆனினத்தின் ஆணையும் பெண்ணையும் உணர்த்தும் பெற்றமென்பது-தென்பாண்டிநாட்டினின்று தமிழில்வந்துவழங்கிய திசைச்சொல்லாம். நந்தி தேவர்சிலகாலத்திற் சிவபிரானுக்கு வாகனமான ருஷபமாதல்பற்றி, அவரை 'பெற்றம்' என்றார். ஈற்றடியில், கற்றவருடையவன் என்றும் பாடம். (கூ0)

131.—இதுமுதல், மூன்றுகவிகள் - ஒருதொடர்: தேவேந்திரன் வானத்தினின்று வந்து அருச்சுனனை வாழ்த்தித் தன்தேரின்மேற்கொண்டு விண்ணுலகத்து அழைத்துப்போதலைக் கூறும்.

ஏகியபின்னராயிரங்கணாதனு
மோகரதுந்துபிமுழங்கத்தேரின்மே
னாகருமுனிவருநண்ணிவாழ்த்தவே
வாகைகொள்விசயனைவந்துபுல்லியே.

(இ - ள்.) ஏகிய பின்னர் - (சிவன்) சென்றபின்பு, ஆயிரம் கண் நாதன்உம் - ஆயிரங் கண்களையுடைய (தேவர்) தலைவனான இந்திரனும், மோகரம் துந்துபி முழங்க - பேரொலியைச் செய்கின்ற துந்துபி யென்னும் வாத்தியங்கள் ஒலிக்கவும், நாகர்உம் முனிவர்உம் நண்ணி வாழ்த்த-தேவர்களும் முனிவர்களும் நெருங்கி வாழ்த்துச் சொல்லாநிற்கவும், தேரின் மேல் வந்து - (தனது) தேரில் ஏறிவந்து, வாகை கொள் விசயனை-வெற்றியைக்கொண்ட அருச்சுனனை, புல்லி - தழுவிக்கொண்டு, (எ - று.) —மேல் 133 - ஆங் கவியில் 'ஏற்றி' என்பதனோடு இயையும். 132-ஆங் கவி இடைப் பிறவரல்.

வாகை யென்னும் மரத்தின்பெயர் - அதன்பூவினாலாகிய மாலையைஇருமடியாகுபெயராற் குறித்துப் பின்பு இலக்கணையால், அம்மாலையையடையாளமாகச்சூடுகிறவெற்றியையுணர்த்திற்று. துந்துபி - ஒரு பறை. (கூக)

132. நீபுரிதவப்பயனீடுவாழியே
சாபமுந்தூணியுஞ்சரமும்வாழியே
தீபமெய்யொளியுடன்சேர்ந்துபோர்செயு
மாபெருநீலமெய்வாழிவாழியே.

(இ - ள்.) 'நீ புரி தவம் பயன் - நீ செய்த தவத்தின் பிரயோசனம், நீடு வாழி - பல்காலம் அழிவில்லாமல் வாழ்வதாக; சாபம்உம் - (உனது) வில்லும், தூணிஉம் - அம்பறாத்தூணிரமும், சரம்உம் - அம்பும், வாழி - வாழ்வனவாக; தீபம் மெய் ஒளியுடன் சேர்ந்து போர் செயும் - விளக்கினது உண்மையான பிரகாசத்துடனே (தன்னொளிக்கு ஒப்பாகாதென்னுங் கருத்தால்) நெருங்கிப் போர்செய்கின்ற, மா பெரு நீலம் மெய் - அழகிய பெரிய நீலநிறமான (உன்) உடம்பு, வாழி வாழி - நன்கு வாழ்வதாக'.

பின்இரண்டடிக்கு - விளக்குப்போல ஒளிவடிவமான பரமசிவத்துடனே நெருங்கிப் போர்செய்த மிகவும் சிறந்த நீலரத்தினம்போன்ற உன் மேனி மிக வாழ்க வென்றும் பொருள் கொள்வர். வாழி வாழி, அடுக்கு - மகிழ்ச்சிபற்றியது. நீடு - நீண்டகாலத்துக்கு முதனிலைத் தொழிலாகு

பெயர் : வினைமுதற்பொருள்விகுதி புணர்ந்துகெட்டதெனினுமாம்; வினைப் பகுதி வினையுரியாய் நீடியதாகஎன்னும்பொருள்பட்டு நின்றதெனினுமாம்; நீண்டு என்பதன் விகாரமாகவுமாம். (கங உ)

133. என்றுகொண்டிணையடியிறைஞ்சுமைந்தனைத்
தன்றிருத்தேரின்மேற்றாழ்ந்தகைகளா
லொன்றியவுவகையோடேற்றியும்பர்கோன்
சென்றனன்றன்பெருந்தெய்வவானமே.

(இ - ள்.) என்றுகொண்டு - என்று சொல்லிக்கொண்டு,—உம்பர் கோன் - தேவேந்திரன்,—இணை அடி இறைஞ்சும் மைந்தனை -(தனது) உபய பாதங்களை வணங்குகிற புத்திரனான அருச்சுனனை, தாழ்ந்த கைகளால - (தனது) தாழ்ந்துதொங்கும் கைகளால், தன் திரு தேரின்மேல் - தனது அழகிய தேரில், ஏற்றி - (எடுத்து) ஏறவிட்டுக்கொண்டு,—ஒன்றிய உவகை யோடு - பொருந்திய மகிழ்ச்சியுடனே, தன் பெரு தெய்வம் வானம் - தனது சிறந்த தெய்வத்தன்மையுள்ள சுவர்க்கத்துக்கு, சென்றனன் - போனான் ; (எ - று.)

தாழ்ந்த கைகள்-முழங்காலளவும் நீண்டு தொங்குங் கைகள் : ஆஜாநு பாகு : இது, உத்தமபுருஷ லக்ஷணம். சுவர்க்கத்துக்குத் தெய்வத்தன்மை. புண்ணியமிகுதியாலடையவேண்டியதாதலும், இன்பத்தையேநுகருமிடமாத லும் முதலியன. வான் - இடவாகுபெயர் : அம் - சாரியை. (கஙங)

134.—தேரின்மீது இந்திரனும் அருச்சுனனும் விளங்கியதன் வருணனை.

ஒருபெருமாதலியூருந்தேரின்மே
லிருமரகதகிரியிருந்தவென்னவே
மருவருகற்பகமாலைமௌலியும்
விரிபுகழ்மைந்தனும்விளங்கினாரரோ.

(இ - ள்.) மரு வரு கற்பகம் மாலை மௌலிஉம் - வாசனைமிகுந்த கற்பகமரங்களின் மலர்களாலாகிய மாலையைச்சூடிய முடியையுடைய இந்தி ரனும், விரி புகழ் மைந்தன்உம் - பரவியகீர்த்தியையுடைய அவன் மகனான அருச்சுனனும், ஒரு பெரு மாதலி ஊரும் தேரின்மேல் - ஒப்பற்ற பெரிய மாதலியென்பவன் செலுத்துகின்ற ஒரு தேரின்மேலே, இரு மரகதம் கிரி இருந்த என்ன - மரகதரத்தினமயமான இரண்டுமலைகள் ஒருங்கு ஏறி யிருந்தனபோல, விளங்கினார் - பிரகாசித்தார்கள் ; (எ - று.)

கருநிறமும் பருமையும்பற்றிவந்த தன்மைத்தற்குறிப்பேற்றவணி. மாதலி - இந்திரன்சாரதி. மருவுஅரு - தேவலோகத்தார்க்கு அன்றிப் பிறர்க்குக் கிடைத்தற்குஅரியஎன்றுமாம். கற்பகம் - கல்பகம் : தன்னிடம் வந்தவர்கட்கு நினைத்தவற்றையெல்லாம் கல்பிப்பதென்றுபொருள். மாலை மௌலி - வேற்றுமைத்தொகையன்மொழி. இருந்ததென்னவே என்றும் பாடம். அரோ - அசை. (கஙச)

135.—இதுமுதல் மூன்று கவிகள் - இந்திரலோக வருணனை.

ஆயிரம்பொலங்கிரியழித்துவானின்மேன்
மாயிருமொருபுரம்வகுத்ததென்னவே
பாயிரமறைபுகழ்பரமன்றேசெனச்
சேயிரும்பொன்னகர்திகழ்ந்துதோன்றுமால்.

(இ - ள்.) சேய் இரு பொன் நகர் - நெடுந்தூரத்திலுள்ள பெரிய பொன்மயமான அமராவதிநகரம்,—ஆயிரம் பொலம் கிரி அழித்து வானின்மேல் மா இரு ஒரு புரம் வகுத்தது என்ன - ஆயிரம்பொன்மலைகளை அழித்து அவற்றால் ஆகாயத்தில் மிகவும் பெரியதொரு பட்டணத்தை நிருமித்ததுபோலவும், பாயிரம் மறை புகழ் பரமன் தேசு என - ஸ்தோத்திர ரூபமான வேதங்கள் புகழ்கின்ற எம்பெருமானது தேஜோரூபமான பரமபதம்போலவும், திகழ்ந்து தோன்றும் - விளங்கிக் காணப்படும்; (எ - று.)

பாயிரமென்பது புகழ்ச்சியென்னும் பொருளதாதலை "பாயிரங் கூறிப் படைதொக்காலென் செய்ப" என்னுமிடத்திலுங் காண்க. இனி, பாயிரம் - முகவுரை எனக்கொண்டால், முதலிலுள்ளதாகிய பிரணவத்தோடு கூடிய மறை யென்க. பாயிரம்=பாஹ்யம். பாயிரம் மறை - வரலாற்றுமுறைமையையுடைய வேதமுமாம் ஸ்ரீவைகுண்டத்தின் திரு நாமங்களுள் ஒன்றாகிய தன்னுடைச்சோதி யென்பதன் பொருளை யுட்கொண்டு, 'பரமன் தேசு' என்றார். பரமபதம் மிக்க ஒளியுடைய தாதலை "மதியாதவன்கதிர் மின்மினிபோலொளிர் வைகுந்தம்" என்றதனாலுங் காண்க. மாயிரு - ஒரு பொருட்பன்மொழி. பரமதேசென எனவும் பாடம். (கநரு)

136. விண்ணவர்முனிவருள்விளங்கிவாழ்தலா
னண்ணியமுடிப்பெயர்நாகம்பூணலா
லெண்ணருமகபதியிருந்தமாநகர்
புண்ணியன்வடிவெனப்பொலிந்திலங்குமால்.

(இ - ள்.) எண்ண அரு - நினைத்தற்கும் அருமையான(சிறப்பையுடைய), மகபதி இருந்த மா நகர் - யாகங்களுக்குத் தலைவனான இந்திரன் அரசு வீற்றிருந்த பெரிய அந்நகரம்,—விண்ணவர் முனிவர் உள் விளங்கி வாழ்தலால் - தேவர்களுடையவும் முனிவர்களுடையவும் மனத்தில் எழுந்தருளி வாழ்தலாலும் [தேவர்களும் முனிவர்களும் தன்னுள்ளே விளங்கி வாழப் பெறுதலாலும்], நண்ணிய முடி பெயர் நாகம் பூணலால்-பொருந்திய (தனது) திருமுடியிலே ஊர்ந்துசெல்லுதலையுடைய சர்ப்பங்களை ஆபரணமாக அணிதலாலும் [பொருந்திய கோபுரசிகரத்தையும் நாகமென்னும் பெயரையும் (தான்) கொண்டிருத்தலாலும்], புண்ணியன் வடிவு என பொலிந்து இலங்கும் - பரிசுத்தனான சிவனது திருமேனிபோல அழகுடையதாய் விளங்கும்; (எ - று.)

சிவபெருமான் திருமேனிபோலும் அமராவதி நகரமெனச் சிலேடைமூலமாகப் பொதுத்தன்மை யமைத்துக் கூறியதால், இச் செய்யுள் - செப்

மொழிச் சிலேடையணியை யங்கமாகக் கொண்டுவந்த உவமையணி. உள் - மனம், உள்ளிடம் : முடி - சிரசும் கோபுரமும், நாகம் - பாம்பும் சுவர்க்கமும். நாகம் என்பது சுவர்க்கலோகத்துக்கு ஒரு பெயர் : அது - துக்கமற்றிருப்பது என்று காரணப்பொருள்படும். (கங்கு)

137. மாவலிசிறைப்படவைத்ததாண்மலர்
தாவியவிண்ணிடைத்தயங்குபொன்னகர்
தேவருந்தொழுகழற்றேவனுந்தியம்
பூவிருந்ததுவெனப்பொலிந்துதோன்றுமால்.

(இ . ள்.) மா வலி - மகாபலிசக்கரவர்த்தி, சிறை பட - சிறைச்சாலையில் தங்கும்படி, வைத்த - (அவனது தலையின்மேல்) வைத்த, தாள் மலர் - (திருமாலினது) தாமரைமலர்போன்ற திருவடி, தாவிய-மேலோங்கியளந்த, விண்ணிடை - மேலுலகத்திலே, தயங்கு - விளங்குகிற, பொன் நகர் - பொன்மயமான அமராவதிநகரமானது —, தேவர்உம் தொழு கழல் தேவன் - தேவர்களும் வணங்குகின்ற திருவடியையுடைய சிறந்ததேவனான திருமாலினது, உந்தி அம் பூ - அழகிய நாபீகமல மலர், இருந்தது என - இருந்த தன்மைபோல, பொலிந்து தோன்றும் - அழகுபெற்று விளங்கும்.

பொன்னகர் திருமாலினுந்தித் தாமரைபோலப் பொலிவுபெற்றுத் தோன்றுமென்க. பலிசக்கரவர்த்தியென்னும் அசுரராசன் தன் வல்லமையால் இந்திரன் முதலிய யாவரையும் ஜயித்து மூவுலகங்களையும் தன் வசப்படுத்தி அரசாண்டு செருக்குக்கொண்டிருந்த பொழுது, அரசிழந்த தேவர்கள் திருமாலைச் சரணமடைந்து வேண்ட, அவர் குள்ளவடிவமான வாமனாவதாரமெடுத்துக் கசியபமுனிவருக்கு அதிதியினிடந்தோன்றின பிராமணப் பிரமசாரியாகி, வேள்வியியற்றி, யாவர்க்கும் வேண்டிய அனைத்தையுங்கொடுத்து வந்த அப்பலியினிடஞ் சென்று, தவஞ்செய்தற்குத் தன்காலடியால் மூவடி மண் வேண்டி, அது கொடுத்தற்கு இசைந்து அவன் தத்தஞ்செய்த நீரைக் கையிலேற்று, உடனே திரிவிக்கிரமனாக ஆகாயத்தை அளாவி வளர்ந்து, ஓரடியால் மண்ணையும் ஓரடியால் விண்ணையும் அளந்து மற்றோரடியால் அவனையும் பாதாளத்தில் அழுத்தி அடக்கினனென்பது கதை. சிறை - காவலிடம் : பாதாளத்தில் பலிசக்கரவர்த்தி உள்ள இடத்துக்கு விஷ்ணு காவலாக வாயிலிலிருக்கிறாரென்று உணர்க. பூவிரிந்தது எனவும் பாடம். (கங்எ)

138.—இதுவும் மேலைக்கவியும்—ஒருதொடர் : அருச்சுனனும் இந்திரனும் அமராவதியிற்சேர்ந்து சுதர்மையில் ஓராசனத்து அமர்தலைக் கூறும்.

பொலிவுறுமந்நகர்புகுந்துதாதையுஞ்
சிலைகணைபெறுதிறற்றெய்வமைந்தனு
மெலிவுறுமின்னிடைநுடங்கமீனிளும்
பலரரமாதரார்பரிவுகூரவே.

(இ - ள்.) தாதைஉம் - தந்தையாகிய இந்திரனும், சிலை கணை பெறு - (சிவபிரானிடத்து) வில்லையும் அம்பையும் பெற்ற, திறல் - பராக்கிரமத்தை

யுடைய, தெய்வம் - தெய்வத்தன்மையையுடைய, மைந்தன் உம்-புத்திரனான அருச்சுனனும், பொலிவு உறும் அ நகர் புகுந்து - அழகு மிகுந்த அவ்வமராவதிபுரியை அடைந்து, மீனின் உம் பலர் - ஆகாயத்தில் விளங்குகின்ற நக்ஷத்திரங்களைக் காட்டிலும் அநேகராகிய, அர மாதரார் - தெய்வப் பெண்கள், மெலிவு உறு மின் இடை நுடங்க-இளைத்தல் மிகுந்த மின்னல்போன்ற (தமது) இடை அசையவும், பரிவு கூர - (தம்மைக்கண்டு) அன்பு மிகவும்; (எ - று.)—"சிலம்பொலி கூரும் மண்டபத்தொரு மணியாசனத் தோங்கி வைகினார்" என்று அடுத்த கவியில் முடியும்.

மைந்தனுக்குத் தெய்வத்தன்மை-இந்திரனது புத்திரனும் சிவனது பக்தனுமாதல்: மின்னுவது மீன் என நட்சத்திரத்திற்குக் காரணக்குறி.(கஙஅ)

139. பருமணிவெயிலெழப்பணிலமாநிரை
தருமணிநிலவெழத்தமனியப்பெருங்
குருமணிச்சிலம்பொலிகூருமண்டபத்
தொருமணியாசனத்தோங்கிவைகினார்.

(இ - ள்.) பரு மணி வெயில் எழ - (தாம் தாம் அணிந்துள்ள ஆபரணங்களிற் பதித்த) பருத்த சிவந்த இரத்தினங்களினது சூரியனொளி போன்ற ஒளி வீசவும், மா பணிலம் நிரை தரு மணி நிலவு எழ - பெரிய [சிறந்த] சங்குகளின் கூட்டம்பெற்ற முத்துக்களினது சந்திரனொளி போன்ற ஒளி வீசவும், தமனியம் பெரு குரு மணி சிலம்பு ஒலி கூரும் - பொன்னாற்செய்து பெரிய நிறமுள்ள இரத்தினங்களைப்பதித்த சிலம்பென்னும் காலணி ஓசைமிகும்படி (தேவமாதர்) நடிக்கப்பெற்ற, மண்டபத்து - மண்டபத்திலே, ஒரு மணி ஆசனத்து - இரத்தினங்களிழைத்ததொரு சிங்காசனத்தில், ஓங்கி வைகினார்-(யாவரினும்) சிறந்து வீற்றிருந்தார்; (எ-று.)

சங்குகளினின்று முத்துப் பிறக்கு மென்பதை, "தந்திவராக மருப்பிப்பிபூகம் தழை கதலி, நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளின மின்னார், கந்தரஞ்சாலி கழை கன்னலரவின் பல்கட் செவி கா, ரிந்து வுடும்பு கரா முத்த மீனுமிருபதுமே" என்னும் கட்டளைக்கலித்துறையினால் அறிக. தமனியம் - தபநீயம் என்ற வடசொல்லின் திரிபு: நெருப்பினாற் காய்ச்சப் பட்டு நன்கு விளங்குவது எனக் காரணப்பொருள்படும். நடித்தலாகிய காரணத்தை 'சிலம்பொலி கூரும்' எனக் காரியத்தாற் கூறினார்: உபசார வழக்கு. மண்டபம் என்றது - சுதர்மையென்னுந் தேவசபையை. ஆஸநம்-வீற்றிருக்குமிடம். (கஙகூ)

140.—இந்திராணி வருதல்.

முருகவிழ்பரிமளமொய்த்ததண்டுழாய்
மரகதகிரிதிருமைத்துனன்றனைப்
பெருமிதவபிமனைப்பெற்றகாளையை
யருள்பெறுமுவகையோடன்னையெய்தினாள்.

(இ - ள்.) முருகு அவிழ் - தேன் சொரிகின்ற, பரிமளம் மொய்த்த - வாசனை நிரம்பிய, தண் துழாய் - குளிர்ந்த திருத்துழாய் மாலையையுடைய, மரகத கிரி - மரகத ரத்தினமயமான மலைபோற் கருநிறமான கண்ணபிரானது, திருமைத்துனன் தனை - அழகிய அத்தைபிள்ளையும், பெருமிதம் அபிமனை பெற்ற காளையை - வீரத்தன்மையையுடைய அபிமந்யுவைப் பெற்ற வீரனுமாகிய அருச்சுனனை, அன்னை - தாயாகிய இந்திராணி, அருள் பெறும் உவகையோடு - கருணையைக்கொண்ட களிப்புடனே, எய்தினாள் - வந்து அடைந்தாள்; (எ - று.)

தந்தையாகிய வசுதேவருக்கு உடன்பிறந்தமுறை யாதலால், குந்தி கண்ணனுக்கு அத்தையாவள்: அவள்மகனாதலால், அருச்சுனன் கண்ணனுக்கு மைத்துனனாயினான்; அத்தைமைந்தனை 'மைத்துனன்' என்பது, முற்காலத்து வழக்கம்போலும். உடன்பிறந்தவளது கணவனை மைத்துனனென்று வழங்கும் வழக்கத்தின் படியும், கிருஷ்ணனது உடன்பிறந்தவளாகிய சுபத்திரை யென்பவளை அருச்சுனன் மணஞ்செய்து கொண்டதனால், அவன் கண்ணனுக்கு மைத்துனனாவான் என்று அறிக. எல்லாரோடும் ஒப்பநில்லாமற் பேரெல்லையாக நிற்றல்பற்றி, வீரத்துக்குப் பெருமிதமென்றுபெயர். அபிமன் - வடமொழித்திரிபு: இவன் சுபத்திரையினிடம் பிறந்தவன்: தந்தையாகிய இந்திரனது மனைவியாதல்பற்றி, இந்திராணி அருச்சுனனுக்கு அன்னையாயினாள். (கசம)

141.—அருச்சுனன் இந்திராணியை வணங்குதல்.

அன்னையைமின்னிடையரியபாவையைக்
கன்னலையமுதொடுகலந்தசொல்லியை
யுன்னருந்தவப்பயனுற்றமைந்தனுஞ்
சென்னியையவள்பதஞ்சேர்த்துநின்றனன்.

(இ - ள்.) உன்ன அரு தவம் பயன் உற்ற மைந்தன்உம் - எண்ணுதற்கும் அருமையான தவத்தினது பலனை அடைந்த குமாரனான அருச்சுனனும், —அன்னையை-(தனக்குத்) தாயும், மின் இடை அரிய பாவையை - மின்னல் போல நுண்ணியதாய் விளங்குகிற இடையையுடைய அருமையான பாவை போன்றவளும், கன்னலை அமுதொடு கலந்த சொல்லியை-கரும்புரசத்தைத் தேவாமிருதத்தோடு கலந்ததுபோல் மிக இனிய சொற்களையுடையவளும் ஆகிய இந்திராணியை, (கண்டு), சென்னியை அவள் பதம் சேர்த்து - (தனது) முடியை அவளது அடிகளிற் சேரவைத்து [சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து], நின்றனன் - எழுந்து நின்றான்; (எ - று.)

பாவை-சித்திரப்பதுமையும் கண்மணிப்பாவையுமாம். கன்னல் - சாற்றுக்கு முதலாகுபெயர். கண்டு என்று ஒரு சொல் வருவிக்க. (கசக)

142.—இந்திராணி அருச்சுனனை வாழ்த்துதல்.

நின்றவக்குமரனைத்தழுவிநேயமோ
டொன்றியவுவகையளுரைவழுத்தினாள்

வென்றிகொளையநீவிபுதர்தம்பிரான்
றன்றிருச்செல்வமுந்தாங்குவாயெனு.

(இ - ள்.) (இந்திராணி),—நின்ற அ குமரனை - நமஸ்கரித்து நின்ற குமாரனான அவ்வருச்சுனனை, நேயமோடு - அன்புடனே, தழுவி - அணைத்துக்கொண்டு, ஒன்றிய உவகையள் - பொருந்திய களிப்புடையவளாய், (அவனை நோக்கி), 'வென்றி கொள் ஐய - ஜயத்தைக்கொண்ட ஐயனே! நீ—, விபுதர்தம் பிரான்தன் திரு செல்வமஉம் - தேவராஜனான இந்திரனது மேலான ஐசுவரியத்தையும், தாங்குவாய் - பரிப்பாயாக', எனு - என்று, உரை வழுத்தினுள் - வார்த்தை சொன்னாள்; (எ - று.)

வணங்கினவனைநோக்கித் தேவேந்திரனது ஐசுவரியத்தையும் பெறுவாயென்றது வாழ்த்துஆதல் காண்க. (கசு௨)

143.—இந்திராணி வாழ்த்திவிட்டுத் தன்னிருப்பிடத்துக்குச் செல்லுதல்.

ஆயிரம்பதின்மடங்காகவன்னையு
மாயிரும்புதல்வனைவாழ்த்திவாழ்த்தியே
தூயசெம்பருமணிசுடருமாளிகை
யேயினளிந்திரனிதயம்போன்றுளாள்.

(இ - ள்.) இந்திரன் இதயம் போன்று உளாள்-இந்திரனது மனத்தையொத்து உள்ளவளாகிய, அன்னைஉம் - அருச்சுனன் தாயாகிய இந்திராணியும்,—மா இரு புதல்வனை - மிக்க பெருமையுடைய (தன்) மகனான அருச்சுனனை, ஆயிரம் பதின்மடங்கு ஆக - (தாய் மகனைவாழ்த்து மளவினும்) பதினாயிரம்பங்கு அதிகமாக, வாழ்த்தி வாழ்த்தி - பலமுறைவாழ்த்தி,—தூய செம் பரு மணி சுடரும் மாளிகை ஏயினள்-சுத்தமான [குற்றமில்லாத] சிவந்த பருத்த இரத்தினங்கள் பதிக்கப்பட்டு விளங்குகிற (தன்) இருப்பிடத்துக்குச் சென்றாள்; (எ - று.)

ஆயிரம் பதின்மடங்காக - தேவேந்திரனைவிடப் பதினாயிரம்பங்கு அதிகமாக என்றுமாம். வாழ்த்தி வாழ்த்தி-அடுக்கு, பன்மைப்பொருளது. மாளிகை - அந்தப்புரம். இந்திரனிதயம்போன்றுளாள் என்பதற்கு - கணவனது கருத்துக்குச் சிறிதும் மாறுபடாமலொழுகுபவளென்று கருத்து. சக்களத்தி மகனென்று சிறிதும் வெறுப்புறாமல் அருச்சுனனிடத்து இந்திராணி மிக அன்பு பாராட்டியதனால், இங்ஙனங் கூறினர். இதற்கு அருச்சுனனை மானிடனெனக்கருதாது தேவேந்திரன்போலக்கருதி உபசரித்தாளென்றலுமுண்டு. (கசுஙு)

144.—அத்தேவலோகத்தில் பலவகையொலி அப்போது ஒலித்தல்.

அந்தரதுந்துபியதிரும்பேரொலி
முந்தியமறையொலிமுழங்குஞ்சங்கொலி
சிந்துரமதகரிசீறுநீடொலி
சுந்தரமுகிலொலிதூங்கத்தூங்குமால்.

(இ - ள்.) (அத்தேவலோகத்தில்), அந்தர துந்துபி அதிரும் பேர் ஒலி- மேலுலகத்திற்குஉரிய பேரிகைவாத்தியங்கள் முழங்குகின்ற பேரோசையும், முந்திய மறை ஒலி - தலைமைபெற்ற வேதங்களின்பாராயண ஓசையும், சங்கு முழங்கும் ஒலி - சங்கங்கள் ஒலிக்கின்ற ஒலியும், சிந்தூரம் மத கரி சீறு நீடு ஒலி - சிந்தூரத்திலகமணிந்த மதம்பிடித்த யானைகள் சினந்து கர்ச்சிக்கின்ற மிகுந்த ஓசையும், (என்னுமிவை), சுந்தரம் முகில் ஒலி தூங்க- அழகான மேகங்களின் ஓசை ஒடுங்கும்படி, தூங்கும் - (அதனினும்) மிக்கு ஒலிக்கும் ; (எ - று.)

சிந்தூரம் மதகரி-சிந்தூரமென்னும் பெயரையுடைய யானை யெனினுமாம். சீறும் என்றும் பிரிக்கலாம். தூங்கும் - செய்யுமென்முற்றுப் பலவின்பாலுக்கு வந்தது. துந்துபி முதலியவற்றின் ஒலிக்குள் மேகத்தின் ஒலி அடங்குமென்று கூறியது - மறைவணியாம் : வடநூலார் மீலிதாலங்காரமென்பர். (கசச)

145.—அருச்சுனன்முடியில் கற்பகம் பூமாலையிடுதல்.

பத்திகொணவமணிபயின்றுசெந்துகிர்க்
கொத்தொளிர்தளிருடன்குலாவுகற்பகஞ்
சித்திரவிசயவில்விசயன்சென்னிமேல்
வைத்ததுமுருகவிழ்வாசமாலையே.

(இ - ள்.) பத்தி கொள் - வரிசையாயிருத்தலைக்கொண்ட, நவ மணி- ஒன்பதுவகை யிரத்தினங்களில், பயின்று - நிறைந்து, செம் துகிர் கொத்து ஒளிர் தளிருடன் குலாவு - சிவந்த பவழக்கொத்துப்போல விளங்குகின்ற துளிர்களுடனே செழித்திருக்கின்ற, கற்பகம்-கற்பக விருக்ஷமானது,—சித்திரம் விசயம் வில் விசயன் சென்னிமேல் - அழகிய வெற்றியைத்தருகின்ற வில்லையுடைய அருச்சுனனது முடியின்மேல், முருகு அவிழ் வாசம் மாலை- தேன்சொரிகிற வாசனையுடைய பூமாலையை, வைத்தது—; (எ - று.)

நவமணிகளாவன - கோமேதகம், நீலம், பவளம், புட்பராகம், மரகதம், மாணிக்கம், முத்து, வைடூரியம், வைரம் என்பன ; முதலிரண்டடி - கற்பகமரத்தின் இயற்கையை வருணித்தது. கற்பகமரத்தின் கீழ்த் தங்கியிருக்கையில் அந்தக் கற்பகமரத்தின் மலர்வரிசை அருச்சுனன் முடிமேல் தொங்குவது, கற்பகமலர் விசயன்சென்னிமேல் வாசமாலைவைத்ததுபோலு மென இச்செய்யுளுக்குக் கருத்துக் காணலாம். (கசரு)

146.—இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர் :
தேவேந்திரனும் அருச்சுனனும் சிறப்புறவீற்றிருந்தமை கூறும்.

கிளரிசைத்தும்புருகிளருங்கற்பகத்
தளையவிழ்நாண்மலர்சாத்துநாரத
னளிபயிலமுதமுண்டகமகிழ்ந்துளக்
களியொடுகின்னரர்கானம்பாடவே.

(இ - ள்.) கிளர் - விளங்குகின்ற, இசை - சங்கீதத்தையுடைய, தும்புரு - தும்புருவும், கிளரும் - உயர்ந்து விளங்குகிற, கற்பகம் - கல்பக விரு

கூத்தினது, தளை அவிழ் நாள் மலர் - முறுக்குவிரிந்த புதிய பூக்களினு லாகிய மாலையை, சாத்தும் - தரித்துள்ள, நாரதன் - நாரதனும், கின்னரா- கிந்நரரென்னுந் தேவசாதியாரும், அளி பயில் அமுதம் உண்டு - இனிமை மிகுந்த அமிருதத்தைக் குடித்து, அகம் மகிழ்ந்து-(அதனால்) மனம் மகிழ்ந்து, உளம் களியொடு - (இயற்கையான) உள்ளக்களிப்புடனே, கானம் பாட - இசையைப்பாடவும்,—(எ - று.)

இச்செய்யுளில் 'பாட' என்பது, மேல் 149-ஆங் கவியில் இருந்தார் என்பதனோடு முடியும். அடுத்த இரண்டு கவிகளிலுள்ள 'வாழ்த்த', 'சூழ' என்ற செயவெனெச்சங்களுக்கும் முடிபு அதுவேயாம். அளி பயில்-இனி மைமிகுதியால் வண்டுகள் மொய்க்கின்ற, அமுதம் எனினுமாம். மலர்-மாலைக் குக் கருவியாகுபெயர். (கசசு)

147. சிகையனனிகரகத்தியன்புலத்தியன்
வகைபெறுவசிட்டனேழ்வசுக்களாதிய
ரகமகிழ்ந்துவகைகொளன்பினுற்றிரு
முகமலர்ந்தருமறைமுனிவர்வாழ்த்தவே.

(இ - ள்.) சிகை அனல் நிகர் அகத்தியன் - சுவாலையையுடைய அக் கினியையொத்த அகஸ்தியரும், புலத்தியன் - புலஸ்தியரும், வகை பெறு வசிட்டன் - (தத்துவஞான) வகையைப்பெற்ற வசிஷ்டரும், (ஆதியர்) - முதலானவர்களாகிய, அரு மறை முனிவர் - அருமையான வேதங்களில் வல்ல முனிவர்களும், ஏழ் வசுக்கள் ஆதியர்-ஏழுவசுக்கள்முதலான தேவர் களும், அகம் மகிழ்ந்து - மனங்களித்து, உவகை கொள் அன்பினால் - அம் மகிழ்ச்சியைக் (காரியமாகக்) கொண்ட அன்பினால், திரு முகம் மலர்ந்து - (தமது) அழகியமுகம்மலர்ச்சியுறப்பெற்று, வாழ்த்த-வாழ்த்தவும்,—(எ-று.)

தவமிகுதியாலாகிய பிரமதேஜஸினாலும், தம்மை யடுத்தவரையும் பரி சுத்தராக்கவல்ல தூய்மையாலும், சிகையனல், அகத்தியனுக்கு உவமையாம்: இந்த அடைமொழியைப் புலத்தியவசிட்டருக்குஞ்சேர்க்க. வசிஷ்டன்-ஐம் பொறிகளை வசப்படுத்தினவன் ; ஜிதேந்திரியன். அகத்தினழகு முகத்தில் தெரியுமாதலால், ' அகமகிழ்ந்துவகைகொளன்பினுற் றிருமுகமலர்ந்து ' எனப்பட்டது. அஷ்டவசுக்களுள் பிரபாசனென்னும்வசு தன்மனைவியின் சொல்லைக்கேட்டு வசிட்டரிடமுள்ள காமதேனுவைக் கொள்ளைகொள்ள முயன்று அதனையுணர்ந்த அம்முனிவரது சாபத்தால் மானுட ஜந்மமெடுத் துப் பீஷ்மவடிவமாய்ப் பூமியி லிருத்தலால், 'ஏழ்வசுக்கள்' என்றார். வசுக் கள் எண்மராவார் - அநலன், அநிலன், ஆபன், சோமன், அத்வரன், துரு வன், பிரத்தியூஷன், பிரபாசன்என இவர். ஆதியர் என்றது - ஆதித்தர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், மருத்துவ ரிருவரும் முதலி யோரை. அகஸ்த்யனென்னுஞ்சொல்லுக்கு - (விந்திய) பருவதத்தை வளர வொண்ணாது தடுத்து அடக்கியவனென்று பொருள் : அகம் - மலை : ஸ்த்யன் - அடக்கியவன். தகையுள வகத்தியன் புலத்தியன்றவ என்றும் பாடம். (கசஎ)

148. செம்மணிவெயில்விரிசிலம்புகொஞ்சவே
கைம்மணிவரிவளைகலந்துபொங்கவே
பெய்ம்மணிமேகலைபிறங்கியார்க்கவே
தீய்ம்மணியொளியரமாதர்சூழவே.

(இ - ள்.) செம் - சிவந்த, மணி - இரத்தினங்களின், வெயில் - சூரிய காந்திபோன்ற ஒளி, விரி - பரவுகின்ற, சிலம்பு-காற்சிலம்புகள், கொஞ்ச- இனிமையா யொலிக்கவும்,—கை-கைகளிலணிந்த, மணி-இரத்தினங்களைப் பதித்த, வரி - கோடுகளமைந்த, வளை - வளையல்கள், கலந்து - (ஒன்றோடொன்று) நெருங்கி, பொங்க - ஆரவாரிக்கவும்,—பெய் - (இடையில்) அணிந்த, மணி மேகலை - இரத்தினங்களைப்பதித்த மேகலாபரணங்கள், பிறங்கி - பிரகாசித்து, ஆர்க்க - ஒலிக்கவும்,—தூய் மணி ஒளி - சுத்தமான இரத்தினங்களின் ஒளிபோன்ற தேககாந்தியையுடைய, அரமாதர் - தெய்வப்பெண்கள், சூழ - (தம்மைச்) சூழ்ந்து நிற்கவும்,—(எ - று.)

மணி என்பதற்கு - முதலடியில் இரத்தினமென்றும், இரண்டாமடியில் அழகு என்றும், மூன்றாமடியில் முத்தென்றும், நான்காமடியில் மாணிக்க மென்றுங் கொள்ளலாம். மேகலை - மாதரிடையணியுள் எண்கோவையணி : "எண் கோவை மேகலை" என்றது காண்க. கொஞ்ச, பொங்க, ஆர்க்க என்னுஞ் செய்வெனெச்சங்கள், 'சூழ' என்பதனைக் கொண்டன. வெயில்வருஎன்று பிரதிபேதம். (கசஅ)

வேறு

149. இவ்வாறிவ ரிருவோர்களு மிணைமாமுகி லெனவே
செவ்வாளரி கிளர்கின்றதொர் செம்பொற்றவி சிடையே
மைவ்வானக முழுதுஞ்செழு மறையோசைவி ளைக்கு
மவ்வானவர் புடைசூழ்தர வழகெய்தியி ருந்தார்.

(இ - ள்.) இ ஆறு - இந்தவிதமாக, இவர் இருவோர்களும் - (இந்திரனும் அருச்சுனனும் என்னும்) இந்த இருவரும், செம் வாள் அரி கிளர்கின்றது ஓர் செம் பொன் தவிசு இடை - சிவந்த ஒளியையுடைய சிங்கத்தினுருவம் (தன்னில் விளங்கும்படி) சித்திரித்துச் செய்யப்பட்டதொரு செம்பொன்னினாலாகிய சிங்காசனத்தின்மேல், மை வானகம் முழுதும் செழு மறை ஓசை விளைக்கும் அ வானவர் புடை சூழ்தர - மேகங்களையுடைய ஆகாயத்தினிடம் முழுவதிலுஞ் சிறந்த வேதங்களின்கோஷத்தை யுண்டாக்குகிற அத்தேவர்கள் பக்கங்களிற் சூழ்ந்துநிற்க, இணை மா முகில் என- பெரிய இரண்டு மேகங்கள்போல, அழகு எய்தி இருந்தார்-அழகு பொருந்தியிருந்தார் ; (எ - று.)

மைவ்வானகம் - எதுகை நோக்கிய விரித்தல். மை வானகம் என்பதற்கு - நீலநிறமாகத்தோன்றும் ஆகாயம்எனவும் உரைக்கலாம்.

*இது முதற் பதினெட்டுக்கவிகள்-ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற்றை மூன்றும் மாங்கனிச்சீர்களுமாகிய கலிவிருத்தங்கள். (கசக)

150.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: அந்த வந்து ஊர்வசி நாட்டியமாட அருச்சுனன் கண்டுகளித்ததைக் கூறும்.

இருந்தாரிவர்குளிர்சாமரையிருபாலுமிரட்டப்
பெருந்தாரகைமதியொத்தொளிபெறுகின்றகுடைக்கீழ்
முருந்தார்நகையரமாதரின்முதன்மைப்பெயர்புனையுஞ்
செருந்தார்குழலுடையாளரிதிருவூருவின்வந்தாள்.

(இ - ள்.) இவர் - இவ்விருவரும், இருபாலும் குளிர் சாமரை இரட்ட - (தமது) இரண்டுபக்கங்களிலும் குளிர்ந்த சாமரங்கள் வீசாநிற்க,— பெரு தாரகை மதி ஒத்து ஒளி பெறுகின்ற குடைக்கீழ் - பெரிய நக்ஷத்திரங்களாற் சூழப்பட்ட பூர்ணசந்திரனை யொத்துப் பிரகாசத்தைப் பெறுகின்றதொரு வெண்கொற்றக்குடையின்கீழ், இருந்தார் - இருந்தார்கள்; (அப்பொழுது), முருந்து ஆர் நகை - மயிலிறகினடியையொத்த பற்களையுடைய, அரமாதரின் - தேவமகளிர்களுள், முதன்மை பெயர் புனையும் - தலைமையான பிரசித்தியைப்பெற்ற, செருந்து ஆர் குழல் உடையாள் - செருந்திமரத்தின் மலர்நிறைந்த கூந்தலையுடையவளும், அரி திரு ஊருவின் வந்தாள் - திருமாலினது திருத்தொடையிற் பிறந்தவளும்,—(எ - று.)

குளிர் சாமரை யென்றது - வீசுகின்ற காற்றின் குளிர்ச்சியையும், கண்ணுக்கு இனிமையையுங் கருதி. நக்ஷத்திரங்கள் - குடையின் சுற்றிலுந் தொங்கவிடப்பட்டுள்ள சரங்களுக்கும், மதி - குடைக்கும், வடிவமும் நிறமும் ஒளியும்பற்றிவந்த உவமை. இனி, மதியொத்து இருந்தாரென இயைத்து - நட்சத்திரங்கள் சூழ்ந்த பூர்ணசந்திரன் தேவர்கள்சூழ்ந்த இந்திரார்ச்சுனர்க்கு உவமை யென்றலுமொன்று. செருந்து - பூவிதழென்றுரைப்பருமுளர். செருந்தார்க்குழல் என்ற பாடத்துக்கு, செரும் - சூடியுள்ள, தார் - மாலையையுடைய, குழல் என்க: செரும்—செருகும். திரு - கண்டாரால் விரும்பப்படுந்தன்மை: என்றது, அழகை. (கரு0)

151. மானேதருவிழியாடிருமாதேநிகரெழிலா
டேனேநிகழ்மொழியாள்பொருசிலையேதருநுதலா
டானேதனைநிகர்வாள்பெயர்தருநாடகமெல்லாங்
கானேசெறிதொடையாளரிருகண்கண்டுகளித்தான்.

(இ - ள்.) மான் ஏ தரு விழியாள் - மான்விழியையேயொத்த கண்களையுடையவளும், திரு மாது ஏ நிகர் எழிலாள் - இலக்குமியையே யொத்த அழகையுடையவளும், தேன் ஏ திகழ் மொழியாள் - தேனையே யொத்துவிளங்குகிற இன்சொல்லையுடையவளும், பொரு சிலை ஏ தரு நுதலாள் - போர்செய்கின்ற வில்லையே யொத்த [வளைவான] புருவங்களையுடையவளும், தான் ஏ தனை நிகர்வாள் - (வேறுஎவரும் தன்னை யொப்பவரில்லாமையால்) தன்னைத்தானே ஒப்பவளுமாகிய ஊர்வசி, பெயர்தரு - (அடிகளைப்) பெயர்த்து வைத்து ஆடுகின்ற, நாடகம் எல்லாம் - நர்த்தனம் முழுவதையும், கான் ஏ செறி தொடையான் - வாசனையே மிகுந்த கற்பகப்பூமாலையையுடைய

அருச்சுனன், இரு கண் கண்டு - (தனது) இரண்டு கண்களாலும் பார்த்து, களித்தான் - மிக மகிழ்ந்தான் ; (எ - று.)

இந்திரன் நாடோறுங் கண்டுகளித்து வருவதனால் அதனைக்கூறாமல், அருச்சுனன் புதுமையாகக் கண்டுகளித்ததை இங்குக் கூறினர். தரு, நிகர் - உவமையுருபுகள். மானேர்தரு என்றும், சிலையேய்தரு, சிலையேபொரு என்றும், தொடையாரிருகண் கண்டுகளித்தார்என்றும் பாடம். (கருக)

152.—அருச்சுனன் ஊர்வசியின் நடனத்தை வியந்து புகழ்தல்.

இந்நாடகவிதம்யாவையும்யாரேதனிபுரிவார்
மின்னாரிடைமின்னேரிழைமென்கொம்பையலாதா
ரென்னாவிழிகளியாமனமுருகாவிசையெழுதும்
பொன்னாடுடையவன்மைந்தன்வியப்போடுபுகழ்ந்தான்.

(இ - ள்.) இசை எழுதும் - கீர்த்தியை (எவ்வுலகத்தும்) எழுதி வைத்த, பொன் நாடு உடையவன் மைந்தன் - பொன்னுலகமான சுவர்க்க லோகத்தையுடைய இந்திரனது குமாரனான அருச்சுனன், விழி களியா - (அந்நாடகத்தைக்) கண்களாற் (கண்டு) களித்து, மனம் உருகா - மனமுருகி, 'மின் ஆர் இடை - மின்னலையொத்த இடையையும், மின் நேர் இழை - மின்னலை யொத்து விளங்குகிற ஆபரணங்களையுமுடைய, மெல் கொம்பை-மென்மையான பூங்கொம்புபோன்ற இவ்வூர்வசியை, அலாதார் - அல்லாதமகளிர்களுள், இ நாடகம் விதம் யாவைஉம் - இந்த நர்த்தனத்தின் வகைகளையெல்லாம், யார் ஏ தனி புரிவார் - எவர்தாம் தனியே செய்யவல்லவர் ? [எவருமிலரென்றபடி], என்னா - என்று, வியப்போடு புகழ்ந்தான் - ஆச்சரியத்தோடு சிறப்பித்துக் கூறினான் ; (எ - று)

'தனிபுரிவார்' என்றதனால், ஒவ்வொரு விதத்தை ஒவ்வொருவர் செய்தாலுஞ் செய்யக்கூடுமேயன்றி, இவ்விதங்களையெல்லாம் வேறே ஒருவராற் செய்யமுடியாதென்றான். இழை - இரத்தினங்களிழைத்துச் செய்யப்படுவது. கொம்பு - உவமவாகுபெயர். இசையெழுதுதல் - கீர்த்தியை யாவருங்கொண்டாடும்படி பரவச்செயதல். (கருஉ)

153.—இந்திரன் யாவர்க்கும் விடைகொடுத்து அனுப்புதல்.

திகழ்கின்றனவுரைதந்தைசெவிப்போதுறுமுன்னே
யிகல்கொண்டுயர்தோளாய்புதிதிந்நாடகமென்னா
மகவான்பெருமிதவாழ்வுறைவானோர்முதல்யாரு
மிகுகுங்குமமுலையாருடன்விடைகொண்டிடவிட்டான்.

(இ - ள்.) திகழ்கின்றன உரை - (இங்ஙனம்) விளங்குவனவாகிய (அருச்சுனனது) சொற்கள், தந்தை செவி போதுறும் முன் - தந்தையாகிய இந்திரனது காதிற் செல்லுமுன்னே,—மகவான் - அவ்விந்திரன், 'இகல் கொண்டு உயர் தோளாய் - வலிமையைக்கொண்டு உயர்ந்த தோள்களை யுடையவனே ! இ நாடகம் - இன்றைக்குச்செய்த நர்த்தனம், புதிது - நூதனமாயும் ஆச்சரியகரமாயுமுள்ளது', என்னா - என்று சொல்லி, பெரு

மிதம் வாழ்வு உறை - பெருந்தன்மையையுடைய வாழ்வைக்கொண்டு வசிக்கின்ற, வானோர் முதல் யாரும் - தேவர்கள் முதலிய எல்லாரும், மிகு குங்குமம் முலையாருடன் - மிகுந்த குங்குமக்குழம்பையணிந்த தனங்களையுடைய தேவமாதர்களுடனே, விடை கொண்டிட - உத்தரவுபெற்றுக் கொண்டு செல்லும்படி, விட்டான் - (யாவரையும்) அனுப்பினான்; (எ - று)

இரட்டுறமொழிதலால், 'புதிது' என்பதற்கு இங்ஙனம்பொருள் உரைக்கப்பட்டது. மகவான் - நூறு அசுவமேதயாகங்களைச் செய்தவன். பெருமிதவாழ்வுரைஎன்ற பாடத்துக்கு - பெருந்தன்மையையுடைய வாழ்த்துக்களைச் சொல்லுகின்றனஎன்று பொருளாம். செவிப்பாதுற மகிழா என்றும் பாடம். (கருங)

154.—தேவேந்திரனும் அருச்சுனனும் அமுதுண்டவராய் இனிதிருத்தல்.

மகனும்புகழ்புனைதந்தையுமந்தாகினியாடிச்
சிகரம்பயில்வரைபோலுயர்திருமண்டபமிசையே
யகிறுன்றியகுழலார்பலரரமாதரளிக்கு
நிகரம்பயிலமுதுண்டவர்நிறைவெய்தியிருந்தார்.

(இ - ள்) மகன்உம் - மகனாகிய அருச்சுனனும், புகழ் புனை தந்தை உம் - புகழ்பூண்ட தந்தையான தேவேந்திரனும்,—மந்தாகினி ஆடி - ஆகாச கங்காநதியிலே நீராடி, (பின்பு), சிகரம் பயில் வரைபோல் உயர் திரு மண்டபம் மிசை - சிகரங்கள் பொருந்திய மலைபோலே உயர்ந்தது ஒரு மண்டபத்திலே, அகில் துன்றிய குழலார் பலர் அரமாதர் அளிக்கும் நிகரம் பயில் அமுது உண்டவர் - அகிலின்புகை பொருந்திய கூந்தலையுடையவர்களாகிய பலதெய்வப்பெண்கள் கொடுத்த திரளாகவுள்ள அமிருதம்போலினிய பலவகை யுணவைப் புசித்தவர்களாய், நிறைவு எய்தி - திருப்தியையடைந்து, இருந்தார்—; (எ - று.)

மேலுலகத்திலுள்ள கங்காநதி மந்தாகினியென்னும் பெயருடையதாதலை "ஓதப்புனற்பொன்னி நன்னீரரங்கருலகளந்த, பாதத்துநீர்விண் படிபிலமூன்றிலும் பால்புரைவெண், சீதத்தரங்க மந்தாகினியாகிச் செழுங்கங்கையாய், மேதக்கபோகவதியாகி நாளும்விழுகின்றதே" என்றதனாலும் அறிக. சிகரம் - உச்சி. நிகரம் - கூட்டம்: விழுங்குதலென்று பொருள் கொள்வாருமுளர். அகில் - புகைக்குஆகுபெயர். முதலடியில், வகைகொண்டுயர்தோளாரவர்என்ற பாடத்துக்கு, வகை கொண்டு உயர் தோளார் - அழகைக்கொண்டு உயர்ந்த தோள்களையுடையவர்களாகிய, அவர் - அவ்விந்திரனும் அருச்சுனனும் என்க. (கருச)

155 —அருச்சுனனுக்குத் தனியேவசிக்கும்படி மாளிகையமைத்து ஈதலும் சூரியன் அத்தமித்தலும்.

தருக்குங்களியமுதுண்டவர்தனிவாழ்வுறுமெல்லைச்
சுருக்குங்கணமணிநீள்வெயில்சுடர்மாளிகைவேறோன்
றிருக்கும்படிவிசயன்பெறவீந்தான்விடையதுகண்
டருக்கன்குடகடன்மாளிகையணிதேரொடடைந்தான்.

(இ - ள்.) அவர் - அவ்விருவரும், தருக்கும் களி அமுது உண்டு - மிகுந்தகளிப்பைத் தருகின்ற அமிருதத்தைப்போலினியவுணவைப் புசித்து, தனி வாழ்வுறும் எல்லை-தனியே வாழ்கின்ற சமயத்தில்,— சுருக்கும் கணம் மணி நீள் வெயில் சுடர் மாளிகை வேறு ஒன்று - அடக்கிப் பதிக்கப்பட்டுள்ள கூட்டமான இரத்தினங்களினது நெடுந்தூரத்திலுஞ் சென்று விளங்குகின்ற சூரியனொளி போன்ற ஒளி பிரகாசிக்கப்பெற்ற வேறொரு கிருகத்தை, இருக்கும் படி - (தான்) வசிக்கும்படி, விசயன் - அருச்சுனன், பெற - பெறுமாறு, விடை ஈந்தான் - (இந்திரன் அவனுக்கு) உத்தரவு கொடுத்தனுப்பினான்; அது கண்டு - அங்ஙனம் இந்திரன் அருச்சுனனுக்குத் தனிமாளிகை கொடுத்ததைப் பார்த்து, (தானுந் தனிமாளிகையடைய விரும்பினான் போல), அருக்கன் - சூரியன், குட கடல் மாளிகை - மேல்கடலாகிய வீட்டை, அணி தேரொடு - (தனது) அழகிய தேருடனே, அடைந்தான் - சேர்ந்தான் [அஸ்தமித்தான் என்றபடி]; (எ - று.)

அதுகண்டு, என்றதனால், ஏதுத்தற்குறிப்பேற்றவணி தோன்றுகின்றது. தேர் என்றது - மண்டலத்தை. குடக்கு+கடல்=குடகடல்: திசைப்பெயரோடு பிறபெயர் சேர்ந்தபோது நிலைமொழியின் ஈற்றுயிர்மெய்யும் ககரவொற்றும் நீங்கின. (கருரு)

156.—சந்திரோதய வருணனை.

மேலைத்திசைகாலைச்சுடர்வீழ்தந்திடுமுன்ன
மாலைச்சுடர்காலைத்திசைவாழ்வுற்றிடவந்தான்
சோலைத்தருவருள்வாரிதிசூழ்வான்முகடேறிப்
பாலைப்பொழிவதுபோனிலவொளிகொண்டுபரப்பா.

(இ - ள்.) காலை சுடர் - காலையிலுதிக்கும் ஒளியாகிய சூரியன், மேலை திசை - மேற்குத்திக்கில், வீழ்தந்திடு முன்னம் - விழுமுன்னே, [அஸ்தமித்தவளவில் என்றவாறு], மாலை சுடர் - சாயங்காலத்தில் விளங்கும் ஒளியாகிய சந்திரன், சோலை தரு அருள் வாரிதி சூழ் வான் முகடு ஏறி பாலை பொழிவது போல் - கற்பகச்சோலையைப் பெற்ற பாற்கடலானது (உலகத்தைச்) சூழ்ந்துள்ள ஆகாயமுகட்டிலே யேறிநின்று பாலைப்பொழிவதுபோல, நிலவு ஒளி கொண்டு பரப்பா - (தனது) நிலாவாகிய ஒளியைக் கொண்டு பரப்பி, காலை திசை - உதயகாலத்திற்கு உரிய கிழக்குத்திக்கில், வாழ்வு உற்றிட - வாழ்ச்சி பொருந்த, வந்தான் - உதித்தான்; (எ - று.)

பாற்கடல் கடைந்தகாலத்தில் கற்பகவிருட்சமும் காமதேனுவும் சிந்தாமணியும் முதலியன அதனினின்று தோன்றின. வாரிதி - நீர்தங்குமிடம்: வாரி - நீர்: வாரிதி - இங்கே, பாற்கடலைக்காட்டிற்று. ஒளிகொண்டு பரப்பா - ஒளியாற் பரப்பியென்றும், ஒளியைப் பரவச்செய்துகொண்டு என்றுமாம். வாழ்வுற்றிட - யாவரும் மகிழ்ச்சியடைய எனினுமாம். பின்னிரண்டடி - தன்மைத்தற்குறிப்பேற்றவணி. (கருசு)

157.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர் : உருப்பசி வேட்கைகொண்டு அருச்சுனனுள்ளஇடத்துக்கு வருதலைக் கூறும்.

அந்தச்சிலைமகவான்மகனம்மாளிகையிடையே
முந்துற்றதொர்தவிசிற்கருமுகில்போலவிருந்தான்
கந்தர்ப்பன்வெகுண்டேவியகணைபட்டுளமுருகா
நொந்துற்றுமுனடனம்புரிநுண்ணேரிழையங்கண்.

(இ - ள்.) சிலை - விற்போரிற் சிறந்த, அந்த மகவான் மகன் - இந்திர குமாரனான அந்த அருச்சுனன், அ மாளிகை இடையே - (இந்திரனால் தனக்குத் தனியே கொடுக்கப்பட்ட) அவ்வீட்டினிடத்திலே, முந்து உற்றது ஓர் தவிசில் - முன்னே பொருந்தியதொரு ஆசனத்தில், கரு முகில் போல - கரிய மேகம்போல, இருந்தான் - வீற்றிருந்தான்; (அப்பொழுது), முன் நடனம் புரி - முன்பே நர்த்தனத்தைச்செய்த, நுண் நேர் இழை - சூட்சுமமாகவிளங்குகிற (தன் அழகுக்கு) ஏற்ற ஆபரணங்களையுடைய ஊர்வசி,—கந்தர்ப்பன் வெகுண்டு ஏவிய கணை பட்டு உளம் உருகா - மன்மதன் கோபித்து(த் தன்மேல் அருச்சுனன் விஷயமாக) எய்த பாணங்கள் பட்டதனால் மனங் கரைந்து, நொந்துற்று - (காம வேதனையால்) வருந்தி, அங்கண் - அவ்விடத்தில்,— (எ - று.)—"விசயன்னுழைவந்தாள்" என மேலிற் கவியில் முடியும்.

நுண்ணேரிடை என்றபாடத்துக்கு, நுண் ஏர் இடை எனப் பிரித்து-சிறுத்த அழகிய இடைஎன்க. முந்துற்ற தொர்தவிசு - சிறப்புப்பெற்றதும் ஒப்பற்றதுமாகிய ஆசனமெனினுமாம். கந்தர்ப்பன் என்பதற்கு - இன்பமயமாகக்கொழுத்திருப்பவனென்று பொருள். உருகுதல் - மிக அன்பு கொள்ளுதல். பட்டு-எச்சத்திரிபு. நுண்ணேரிழை - அன்மொழித்தொகை. மூன்றாமடியில், ஏலக்கணைபடவேஎன்றும்பாடம். (கருள)

158. அக்கங்குலினிடையேமலரரிசந்தனவாச
மைக்கங்குனிகர்க்குஞ்செறிமலர்நீலமணிந்தா
ளுய்க்கும்பருமணிநீலிதவுடையாடையுடுத்தாண்
மெய்க்குந்தவவயவாளிகொள்விசயன்னுழைவந்தாள்.

(இ - ள்.) அ கங்குலின் இடையே - அந்த இராத்திரியிலே, மலர் அரி சந்தனம் வாசம் - விளங்குகின்ற செஞ்சந்தனத்தின் வாசனையான குழம்பையும், மை கங்குல் நிகர்க்கும் செறி நீலம் மலர் - இருளையுடைய இரவையொக்கின்ற நெருங்கிய நீலோற்பலமலர்மாலைகளையும், அணிந்தாள் - அணிந்தவளாய்,—உய்க்கும் பரு மணி-(ஒளியை) வீசுகின்ற பருத்த நீலரத்தினத்தையொத்த, நீலிதம் உடை ஆடை - நீலநிறமூட்டப்பட்டுள்ள தானுடுத்தற்குரிய சேலையை, உடுத்தாள் - உடுத்துக்கொண்டவளுமாய், மெய்க்கும் தவம் வயம் வாளி கொள் விசயன் உழை - உண்மையான தவத்தினால் வெற்றியைத்தரவல்ல பாசுபதாஸ்திரத்தைப்பெற்ற அருச்சுனனிடத்து, வந்தாள்—: (எ - று.)

வந்தாள்என்பதற்கு, முன்செய்யுளிலுள்ள 'நுண்ணேரிழை'-எழுவாய். கங்குலினிடை - இரவின்நடு: பாதிராத்திரி. சந்தன வாசம் மலர்நீலம் அணிந்தாள் - சந்தனம்பூசினாள், மாலைசூடினாள் என வெவ்வேறுவினைகளுக்கு உரிய இரண்டுபொருள்கள் கலந்துவந்து, அணிந்தாள்என்னும் பொதுவினையைக் கொண்டன: [நன். பொது. 38] முன்னிரண்டடிக்கு - அரிசந்தனமென்னும் தேவதருவினது வீசுகின்ற வாசனையையுடைய இரவையொத்தநெருங்கின நீலநிறமுள்ள மலர்களைச்சூடினாளென்றுங்கொள்ளலாம். மணியென்பதற்கு - இரத்தினாபரணமென்றுஉரைத்து அணிந்தாளென்னும் வினையோடு இயைத்தலுமாம். பருமணிநீலமணிந்தாள்என்றும், புகைநிகர் நீலிதவுடை, பரிமளநீலிதவுடைஎன்றும் பாடம். (கருஅ)

159.—ஊர்வசியை அழைத்து அருச்சுனன் உபசரித்தல்.

ஓராயிரமகல்வான்மணியொக்குந்தவிசிடையே
யீராயிரதீபங்களெறிக்குஞ்சுடரெழவே
வாராயிரமுகமாநுகர்மஞ்சேநிகர்செங்கட்
பேராயிரமுடையான்மகனெதிர்கொண்டிவைபேசும்.

(இ - ள்.) ஓர் ஆயிரம் அகல் வான்மணி ஒக்கும் - பெரிய ஓராயிரஞ் சூரியர்களை யொத்திருக்கின்ற [மிகவும் விளங்குகிற], தவிசிடையே - ஆசனத்திலே, ஈர்ஆயிரம் தீபங்கள் எறிக்கும் சுடர் எழ - இரண்டாயிரம் விளக்குகள் வீசுகின்ற ஒளி யுண்டாக, வார் ஆயிரம் முகம் ஆ நுகர் மஞ்சு நிகர்-நீரைப் பலமுகமாக மொண்டுகுடித்ததொரு காளமேகத்தை யொத்து விளங்குகிற, செம் பேர் கண் ஆயிரம் உடையான் மகன் - சிவந்த பெரிய ஆயிரங் கண்களையுடைய இந்திரனது குமாரனை அருச்சுனன், எதிர் கொண்டு - (அவளை) எதிர்சென்றுஉபசரித்துஅழைத்துவந்து, இவை பேசும்-இவ்வார்த்தைகளைச் சொல்வான்; (எ-று.)—அவை மேலே காண்க.

சூரியமண்டலம் பெரிய உருவமாயிருத்தல்பற்றி, 'அகன்வான்மணி' என்றது; நெடுந்தூரத்திலுஞ் சென்று விளங்குதல் பற்றியுமாம். ஆகாயத்திற்கு இரத்தினம்போல விளக்கந்தருதலால், வான்மணியென்று சூரியனுக்குப் பெயர். இரண்டாமடியை - அருச்சுனன் மாளிகையிடத்து எரிகின்ற விளக்குகளின் பிரகாசத்தைக் கூறுகின்றதாகவாயினும், அருச்சுனனது தேககாந்தியை வருணித்ததாகவாயினுங் கொள்க. மஞ்சேநிகர்என்ற அடைமொழியை மகனுக்கும் ஆயிரங்கண்ணுடையானுக்கும் இயைக்கலாம். அகலிகையைத் தழுவிய இந்திரனுக்குக் கௌதமமுனிசாபத்தால் உடம்புமுழுதுமுண்டாகியபெண்குறி பின்புஅவரது அனுக்கிரகத்தால் பிறருக்குஆயிரங்கண்களாகத்தோன்றுவதாயிற்று. மஞ்சூர்தருநயனப் என்றும்பாடம். (கருகூ)

160.—அருச்சுனன் 'நீ வந்த காரணம் என்?'என்று வினவி அவள் தாளில் விழுதல்.

எந்தைப்பெயர்புனையாயுவெனும்பேர்முடியிறைவன்
றந்தைக்குயிர்நிகராகியதளவத்திருநகையாய்

*கொந்துற்றெழுகுழலாய்குழனிகராகியமொழியாய்*
*வந்துற்றதெனெனவன்னைமலர்த்தாள்களில்வீழ்ந்தான்.*

(இ - ள்.) 'எந்தை - எமது வம்சபிதாவாகிய, பெயர் புனை - பிரசித்தி பெற்ற, ஆயு எனும் பேர் - ஆயுஎன்னும் பெயருள்ள, முடி இறைவன் - கிரீடத்தையுடைய அரசனது, தந்தைக்கு - பிதாவான புரூரவசக்கரவர்த்திக்கு, உயிர் நிகர் ஆகிய - பிராணனையொத்து மிகஅன்புடையமனைவியான, தளவம் திரு நகையாய் - முல்லைமலர்போல் மிகவெண்மையாகவிளங்குகிற அழகியபற்களையுடையவளே! கொந்து உற்று எழு குழலாய் - பூங்கொத்துக்கள்பொருந்தி விளங்குகிற கூந்தலையுடையவளே! குழல் நிகர் ஆகிய மொழியாய் - வேய்ங்குழலினிசையையொத்த (ச் செவிக்கு மிக) இனிய சொற்களையுடையவளே! வந்து உற்றது - (நீ) இப்பொழுது (இங்கே) வந்து சேர்ந்தது, என் - யாதுகாரணத்தால்?' என - என்றுசொல்லி, அன்னை மலர் தாள்களில் - (தனது குருகுலத்துக்கு) மாதாவாகிய அந்தஊர்வசியினது தாமரைமலர்போன்ற பாதங்களில், வீழ்ந்தான் - விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ் செய்தான், (அருச்சுனன்); (எ - று.)

ஊர்வசி தன்னிடம்வந்த காலத்தைக்கொண்டும் இங்கிதம்முதலியவற்றைக்கொண்டும அவளுள்ளக்கருத்தைத் தான் அறிந்திருந்தும், அதனை மறுத்தற்பொருட்டு இங்ஙனம் தாய்முறைகூறிவணங்கி வினவினனேயன்றி, அருச்சுனன் அவளெண்ணத்தையுணராதவனல்லனென்க. சந்திரனது மைந்தனாகிய புதன் இளையினிடத்துப்பெற்றபுதல்வனாகிய புரூரவனென்பவன், பூஞ்சோலையில்விளையாடிக்கொண்டிருந்த தேவமாதர்களுள் ஊர்வசியை அசுரர்கள் கவர்ந்துசெல்லுகையில, அவள்முறையிட்டதைக்கேட்டு, தேமேறிசென்றுபொருது அசுரர்களைவென்று அவளைமீட்டுவந்து, பின்புஇந்திரன் தூதனுப்பியதனால் அவளை மணஞ்செய்துகொண்டு ஆயுவென்னுங்குமாரனைப்பெற்றானென்பது, கீழ்க்குருகுலச்சருக்கத்தில்வந்துள்ளகதை. தளவம் - முல்லை: மலருக்கு, முதலாகுபெயர். கொந்து - கொத்துஎன்பதன் மெலித்தல். குழலென்னும் வாத்தியத்தின்பெயர் அதனொலிக்கு ஆயிற்று.

161.— இதுமுதல் நான்குகவிகள் - ஊர்வசி சினந்து அருச்சுனனையேசிப் பேடியாகுமாறு சபித்துச்சென்றதைக் கூறும்.

*இவ்வாறிவனவடாள்களிறைஞ்சிப்புறநின்றான்*
*மெய்வாய்மையினுயருந்தவவிபுதாதிபர்மகளுஞ்*
*செவ்வாயிதழ்மடியாவிழிசிவவாமதிகருகா*
*வெவ்வாளரவுமிழுங்கடுவிடநேர்மொழிபகர்வாள்.*

(இ - ள்.) இ ஆறு - இந்தவிதமாக, இவன் - அருச்சுனன், அவள் தாள்கள் இறைஞ்சி - ஊர்வசியினது பாதங்களை வணங்கி, புறம் நின்றான் - பின்னே விலகிநின்றான்; மெய் வாய்மையின் உயரும் தவம் விபுத அதிபர் மகள்உம் - சவறாத சத்தியத்துடனே மேலான தவத்தைச்செய்துவந்த தேவர்களுக்குத் தலைவரான நாராயணமுனிவரது குமாரியான ஊர்வசியும்,

(கோபமிகுதியால்), செம் வாய் இதழ் மடியா - சிவந்த வாயின் உதட்டை மடித்துக்கொண்டு, விழி சிவவா - கண்கள் சிவந்து, மதி கருகா - அறிவு வெதும்பி,—வெம் வாள் அரவு உமிழும் கடு விடம் நேர் மொழி பகர்வாள் - பயங்கரமான வாளாயுதம்போலக்கொடுமையான நாகம் உமிழ்கிற கடுமையான விஷத்தையொத்த வார்த்தைகளைச் சொல்லுபவளானாள்; (எ-று.)—அவ்வார்த்தைகளை மேலே மூன்றுகவிகளிற் காண்க.

மூன்றாமடியில், சிவவா, கருகா - முரண்தொடை. மெய்வாய்மை - கோபித்துச் சபித்தாலும் அருள்கொண்டு அனுக்கிரகித்தாலும் தவறுதலில்லாத வார்த்தை. இரண்டாமடியில் வகரத்துக்கு யகரம், இனவெதுகை. விழிசிவவாவுளமழலாளென்றுபிரதிபேதம். (கசுக)

162. இந்தத்தனியிரவின்கணின்னிருதோடழுவுறவே
வந்துற்றவெனைத்தாயர்தம்வகையிற்புகல்செய்யா
நிந்தித்தனைநீசெய்தவநெறியின்பயனெல்லாம்
வெந்துற்றருநீறாயெழவிடுவேனெனவெகுளா.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) இந்த தனி இரவின்கண்-ஏகாந்தமான இவ்விராத்திரிகாலத்தில், நின் இரு தோள் தழுவுற - உனது இரண்டு தோள்களையும் ஆலிங்கனஞ்செய்யும் பொருட்டாகவே, வந்து உற்ற-வந்துசேர்ந்த, எனை-என்னை, தாயர்தம் வகையில் புகல் செய்யா-தாய்மார்முறையிலேவைத்துச் சொல்லி, நிந்தித்தனை - இகழ்ந்தாய்; நீ செய் தவம் நெறியின் பயன் எல்லாம் - நீ செய்த தவமார்க்கத்தின் பயன் முழுவதும், வெந்து உற்று அரு நீறு ஆய் எழ - வெந்துபோய் எடுத்தற்கரிய சாம்பலாய் விடும்படி, விடுவேன் - சாபமிட்டு விடுவேன், என - என்று (ஊர்வசி) சொல்லி, வெகுளா - கோபித்து;—(எ - று.)—'என'என்று 164-ஆங் கவியில் தொடரும்.

மனைவியாகத் தன்னையங்கீகரியாமல் தாயாகவைத்துத் துதித்துக்கூறி மரியாதை செய்ததையே, தன் கருத்துக்கு மாறாக இருத்தல்பற்றி, நிந்தித்ததாகக் கூறினாள். இந்த இரவின்கண் தனியே வந்துற்ற எனை என்றும் இயைக்கலாம். இடுவேன் என்றும் பதம் பிரிக்கலாம். (கசுஉ)

163. நின்போலமர்புரிவாரிருநிலமன்னரினுண்டோ
வன்போடழல்வருபாவையையடைவுன்னியளித்தாய்
பொன்போலிரவிடையாடவர்புகலாமொழிபுகல்வாய்
வன்போவருணலமோபெருமிதமோவளர்புகழோ.

(இ - ள்.) நின் போல் - உன்னைப் போல, அமர் புரிவார் - போரைச் செய்யும்வீரர், இரு நிலம் மன்னரின் - பெரிய பூலோகத்திலுள்ள அரசர்களில், உண்டோ - வேறு உளரோ? இல்லை; (அன்றியும் நீ), அழல் வரு பாவையை - அக்கினியிற்பிறந்த பதுமைபோலழகிய திரௌபதியை, அன்போடு-அன்புடனே, அடைவு உன்னி அளித்தாய்-மனையாளாகும்முறைமையையெண்ணிக் கூடியருளினாய்; பொன் போல் இரவிடை-(காமிகளுக்குப்) பொன்போலருமையான இவ்விராத்திரியிலே, ஆடவர் புகலா மொழி புகல்

வாய் - ஆண்தன்மையுடையவர் சொல்லத்தகாத சொல்லைச் சொல்கிறாய்; (நீ இங்ஙனஞ்சொல்வது), வன்புஓ - வலிமையோ? அருள் நலம்ஓ - கருணையினது நன்மையோ? பெருமிதம்ஓ - வீரமோ? வளர் புகழ்ஓ - எங்கும் வளர்கிற கீர்த்தியோ? [இவற்றுள் ஒன்றையுந் தருவதாகா தென்றபடி].

அன்று திரௌபதிக்கு உனது இன்பத்தை யருளியது போலவே இன்று எனக்கும் அருளலாகாதோஎன்னுங் கருத்தால், 'அன்போடழல்வரு பாவையை யடைவுன்னியளித்தாய்' என்றார். இரண்டாமடியில், வன்போடுஎன்றும் பிரிக்கலாம். நான்காமடியில் அன்போமன்றுமாம். நின்போன்மரபுடையார் என்றும் பாடம். (கசுஙு)

164. எனமன்னனைநீபேடியரியல்பாகெனவிதியா
நனைமென்குழன்மலர்மங்கையுநாணுநலமுடையா
டனிகங்குலினிடைசென்றுயர்தன்கோயில்புகுந்தா
ளனலன்றருசிலைவீரனுமஃதெய்தினனந்தோ.

(இ - ள்.) என - என்று சொல்லி, மன்னனை - அருச்சுனனை, நீ பேடியர் இயல்பு ஆகு என - நீ பேடிகளின் தன்மையாவாயென்று, விதியா-சாபமிட்டு, நனை மெல் குழல் மலர் மங்கைஉம் நாணும் நலம் உடையாள்-அரும்புகளைச்சூடிய மென்மையான கூந்தலையுஞ் செந்தாமரைமலரில்வீற்றிருக்கின்ற இலக்குமியும் (தான் ஒப்பாகாமல்) வெட்கமடையும்படியான அழகையுமுடைய ஊர்வசி, தனி - தனியே, கங்குலினிடை - இராத்திரியிலே, உயர் தன் கோயில் - உயர்ந்த தனது மாளிகையை, சென்று புகுந்தாள் - போய்ச் சேர்ந்தாள்; அனலன் தரு சிலை வீரன்உம் - அக்கினியினாற் கொடுக்கப்பட்ட காண்டீவ வில்லையுடைய வீரனான அருச்சுனனும், அஃது எய்தினன் - அப் பேடித்தன்மையை யடைந்தான்; அந்தோ - ஐயோ! (எ - று.)

கோயில்-சிறந்தவீடு: கோஇல்எனப் பிரிக்க: யகரம்பெற்றது, இலக்கணப்போலி. அந்தோ - இரக்கச்சொல்: ஹந்தஎன்ற வடசொல்லின் விகாரம்: சிங்களநாட்டினின்றுவந்து வழங்கிய திசைச்சொலென்பாருமுளர்: இது-கவி இரங்கிக்கூறியது. நாணுந்நலம்-செய்யுளோசைநோக்கி வந்தவிரித்தல். (கசுச)

165.—சாபமேற்ற அருச்சுனன் வருந்தியுறங்கிக்கிடத்தல்.

ஆடித்திருமுகமன்னவனனுசன்றருவிசயன்
பேடிப்பெயர்நாமோபெறுவோமென்றெழில்வடிவம்
வாடிப்பெரிதுளநொந்தணிமாசற்றதொர்தூசான்
மூடித்துயில்கொண்டான்மணிமுடிமன்னவர்திலகன்.

(இ - ள்.) மணி முடி மன்னவர் திலகன் - இரத்தினங்களைப்பதித்த கிரீடத்தையுடைய அரசர்களுக்குத்திலகம்போலச் சிறந்தவனாகிய, ஆடி திரு முகம் மன்னவன் அனுசன் தரு விசயன் - கண்ணாடிபோன்ற அழகிய முகத்தையுடைய திருதராட்டிரனது தம்பியாகிய பாண்டுமகாராஜன் பெற்ற புத்திரனாகிய அருச்சுனன், பேடி பெயர் நாம்ஓ பெறுவோம் என்று-

பேடிஎன்னும்பெயரை (வீரர்களிற்சிறந்த) நாமா பெறக்கடவோம்என்று எண்ணி, எழில் வடிவம் வாடி - அழகிய உடம்பு வாட்டமடைந்து, பெரிது உளம் நொந்து - மிகவும் மனம்வருந்தி, அணி மாசு அற்றது ஓர் தூசால் மூடி - அழகியதுங் குற்றமற்றதுமானதொரு ஆடையினால் (உடம்பை) மறைத்துக்கொண்டு, துயில் கொண்டான் - உறங்கிக் கிடந்தான்; (எ - று.)

நாமோபெறுவோம் - உயர்வுபற்றிவந்த தன்மைப்பன்மை: ஓகாரம் எதிர்மறை முகத்தால், உயர்வை விளக்கிற்று. துயில்கொள்ளுதல் - உற்சாகங்குன்றி வருந்தி வாடிக்கிடத்தல். (கசரு)

166.—சூரியோதய வருணனை.

அக்காலையில்விசயன்றனதிடராரிருளகலச்
செக்காவியுமரவிந்தமும்வரிவண்டொடுதிகழ
மைக்காரிருள்வெள்ளம்பிலவள்ளத்திடைவடியத்
தொக்கானுயர்குணதிக்கினிலகிலந்தொழுசூரன்.

(இ - ள்.) அ காலையில் - அந்தக்காலத்தில், விசயன்தனது இடர் ஆர் இருள் அகல - அருச்சுனனது துன்பமாகிய நிறைந்தஇருள் நீங்கவும்,—செக்காவி உம் அரவிந்தம்உம் வரி வண்டொடு திகழ - செங்கழுநீர்மலர்களும் தாமரைமலர்களும் இசையிடுதலையுடைய வண்டுகளுடனே அலர்ந்துவிளங்கவும், மை கார் இருள் வெள்ளம் பிலம் வள்ளத்திடை வடிய - மையை யொத்துக் கருமையான இருளினதுதிரள் பாதாளலோகமாகிய கிண்ணத்திலே செல்லவும், அகிலம் தொழு சூரன் - உலகத்தவரெல்லாராலும் வணங்கப்படுகின்ற சூரியன், உயர் குண திக்கினில் - உயர்ந்த கிழக்குத்திசையில், தொக்கான் - வந்து சேர்ந்தான் [உதித்தானென்றபடி]; (எ - று.)

மறுநாட்காலையில் இந்திராதிதேவர்களின்வேண்டுகோளினால் ஊர்வசியினதுசாபத்தாலாகிய பேடிவடிவம்அருச்சுனன்வேண்டும்நாளில்ஒருவருஷகாலம் வரும்படி வரமாகமாறுதலைக்கருதி 'விசயன்றனதிடராரிருளகல' என்றார். செக்காவி - செங்காவியென்பதன்வலித்தல். செங்கழுநீரும் தாமரையும் இரவிற்குவிந்து பகலில் மலர்பவை. வரி - உடம்பிலுள்ளகோடுமாம். இனி, வரிவண்டுஎன்பதைச் சிலேடையாக்கொண்டு, செங்குவளைநீண்ட அம்பொத்துக் குவிந்துவிளங்கவும், அரவிந்தம் இசைவண்டுடனே அலர்ந்து விளங்கவும் என்பாருமுளர். வண்டும்அம்பும், அறுகாற்பறவையும். பிலவள்ளம் என்றது-கிண்ணம்போல உள்ளாழமாகிய சுரங்கத்தை: பகலிலும் அவ்விடங்களிலே இருள்நிறைந்திருக்கு மென்க. சூரன்=ஸூரந்: அகிலந்தொழுசூரன்=" பலர்புகழ்ஞாயிறு " என்பது, திருமுருகாற்றுப்படை. இது, தன்மைநவிற்சியணி. (கசசு)

வேறு.

167.—முப்பத்துமூவர்தேவரோடு இந்திரன் சபாமண்டபத்து வருதல்.

கதிரு தித்தவக் காலையின் மாமறை
முதல்வர் முப்பத்து மூவருஞ் சூழ்வரப்

புதல்வ ஞற்ற துணரான் புரந்தரன்
விதம ணிப்பணி மண்டப மேவினுன்.

(இ - ள்.) கதிர் உதித்த அ காலையில் - சூரியன் உதயமான அந்தக் காலத்தில், புதல்வன் உற்றது உணரான் புரந்தரன் - (தன்) புத்திரனுகிய அருச்சுனன் (பேடித்தன்மையை) அடைந்ததை அறியாதவனுகிய இந்திரன், மா மறை முதல்வர் - சிறந்த வேதங்களுக்குத் தலைவர்களாகிய முனிவர்களும், முப்பத்துமூவர்உம் - முப்பத்துமூன்றுதேவர்களும், சூழ்வர - (தன்னைச்) சுற்றிலும் வரும்படி, விதம் மணி பணி மண்டபம - பலவகைப்பட்ட இரத்தினங்களைப்பதித்துச்செய்த சித்திரவேலையையுடைய (சுதர்மையென்னும்) தேவசபாமண்டபத்தை, மேவினுன் - அடைந்தான்; (எ - று.)

முப்பத்துமூவராவார் - ஆதித்தர்பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும, வசுக்கள்எண்மரும் அசுவினீதேவர் இருவருமாம். முதல்வர் முப்பத்துமூவர் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. முப்பத்துமூவர்- உம்மைத்தொகை. முப்பத்துமூவர் - தொகைக்குறிப்பு.

இதுமுதற் பத்துக்கவிகள் - இச்சருக்கத்தின் நான்காங்கவிபோன்ற கலிவிருத்தங்கள். (கசஎ)

168.—அருச்சுனனையழைத்துவருமாறு இந்திரன் ஒரு கந்தருவனை யேவுதல்.

கண்பரப்பியொர்கந்தருவன்றனை
விண்புரக்குமவ்வேந்தனிருந்தபின்
மண்புரக்கும்வரிசிலைவீரனை
யெண்பெறக்கொணர்வாயெனவேவினுன்.

(இ - ள்.) விண் புரக்கும் அ வேந்தன் - சுவர்க்கலோகத்தையாளுகின்ற அந்தஇந்திரன், இருந்த பின் - (தனக்குரிய சிங்காதனத்தில்) வீற்றிருந்தவுடனே, ஒர் கந்தருவன்தனை - கந்தருவனொருவனை, கண் பரப்பி - கண்ணைப்பரக்கவிழித்துக்குறிப்பாய்நோக்கி, மண் புரக்கும் வரி சிலை வீரனை எண் பெற கொணர்வாய் என - நிலவுலகமுழுவதையும் காத்தற்குரிய கட்டமைந்த வில்லின்தொழிலில்வல்ல வீரனுகிய அருச்சுனனைக் கௌரவமாக அழைத்துவருவாயாகவென்று, ஏவினுன்-கட்டளையிட்டான்.

"கண்ணிற்சொலிச் செவியிநுக்குமிறைமாட்சி" என்ப ஆதலால், 'கண்பரப்பியேவினுன்' எனப்பட்டது. வேந்தன் - தேவேந்திரன் என்பதன் முதற்குறைபோலும்: வேந்தனென்பது இந்திரனென்னும் பொருளில்வருதலை "வேந்தன்மேய தீம்புனலுலகம்" எனத் தொல்காப்பியத்திலும், "வேந்தனும் வேந்துகெடும்" என்ற திருக்குறளிலும் காண்க. (கசஅ)

169.—சென்ற கந்தருவன் அருச்சுனனிடஞ் சென்று அவனுக்குஉற்றன உணர்ந்து இந்திரனிடம் தெரிவித்தல்.

மற்றவன்றிருத்தாண்மலர்போற்றியக்
கொற்றவன்றிருமுன்னர்க்குறுகியாங்
குற்றயாவுமுணர்ந்தனன்மீண்டுபோய்ச்
சொற்றனன்சுரர்கோமுன்றெழுதரோ.

(இ - ள்.) அவன்-அக்கந்தருவன், திரு தாள் மலர் போற்றி - (இந்திரனது) திருவடித்தாமரைமலர்களை வணங்கி, (விடைபெற்றுக்கொண்டு), அ கொற்றவன் திரு முன்னர் குறுகி - வெற்றியையுடைய அவ்வருச்சுனனது திருமுன்பே வந்து அடைந்து, ஆங்கு உற்ற யாஉம் உணர்ந்தனன் - அங்கே நடந்த செய்திகள் எல்லாவற்றையும் அறிந்துகொண்டு, மீண்டு போய் - திரும்பிப்போய், சுரர் கோ முன் - தேவராஜனை இந்திரனது எதிரில், தொழுது - வணங்கி, சொற்றனன் - (அவற்றைச்) சொன்னான்.

மற்று - அசை. அவன் என்பதற்கு - இந்திரனுடைய என்று உரைத்து, கந்தருவன் எனத் தோன்றாவெழுவாய் வருவித்தலுமாம். திருத்தாண்மலர் - ஸ்ரீபாதாரவிந்தம்: திருமுன்னர் - சன்னிதானம். (கசுக)

170.—இந்திரன் தேவர்சூழ்ந்துவர அருச்சுனனை யணுகுதல்.

சொன்னவாசகங்கேட்டசுரபதி
கன்னம்வெந்துகண்ணுயிரமும்புன
றுன்னவானவர்சூழ்வரத்தானும்போ
யந்நராதிபன்றன்னையணுகினான்.

(இ - ள்.) சொன்ன வாசகம் கேட்ட - (கந்தருவன்) சொன்ன அவ் வார்த்தையைச் செவியுற்ற, சுரபதி - தேவேந்திரன்,—கன்னம் வெந்து - காதுகள் வெதும்பி, கண் ஆயிரம்உம் புனல் துன்ன - ஆயிரங்கண்களிலும் நீர்நிறையவும், வானவர் சூழ்வர - தேவர்கள் சுற்றிலும்வரவும், தான்உம் போய் - தானும் சென்று, அ நராதிபன்தன்னை அணுகினான் - மனிதர்களுக்கு அரசனான அவ்வருச்சுனனை அடைந்தான்; (எ - று.)

கன்னம் - கர்ணம்என்ற வடமொழித் திரிபு. கண்ணுயிரமும் - இனைத் தென்றறி பொருளில்வந்த முற்றும்மை. வெந்து=வேவ: எச்சத்திரிபு.

171.—தேவேந்திரன் சாபம்விரைவில் நீங்குமென்று சொல்லி, அருச்சுனனைத் தேற்றுதல்.

அணுகிமைந்தனையன்பொடுறத்தழீஇக்
கணிகையிட்டகடுங்கொடுஞ்சாபநீ
தணிதியஞ்சலென்றான்றொருதையலாற்
பிணியுழந்துமுன்பேர்பெறும்பெற்றியான்.

(இ - ள்.) அணுகி - (தனது குமாரனுள்ள இடத்தை) அடைந்து, மைந்தனை - குமாரனான அவ்வருச்சுனனை, அன்பொடு உற தழீஇ - அன்புடனே நன்றாகத் தழுவிக்கொண்டு, 'நீ—, கணிகை இட்ட கடு கொடு சாபம்-வேசியாகிய ஊர்வசி கொடுத்த மிகவும்கொடிய சாபத்தை, தணிதி - (விரைவில்) நீங்குவாய்; அஞ்சல் - பயப்படாதே', என்றான் - என்று சொன்னான்; (யாரென்னில்), முன்-முன்னொருகாலத்தில், ஒரு தையலால் பிணி உழந்து- (அகலியை யென்னும்) ஒருபெண்ணின் காரணமாக(க் கௌதமரிட்ட) சாபநோயினால் வருந்தி, பேர் பெறும்-(பின்பு அவரது அருளால் ஆயிரங்கண்ணனென்று ஒரு) பேரைப் பெற்ற, பெற்றியான் - தன்மையையுடையவனாகிய இந்திரன்; (எ - று.)

இந்திரன் பெண்காரணமாக முதலிற் பெருஞ்சாபத்தைப்பெற்று வருந்திப் பின்பு அச்சாபம் ஒருவாறு தணியப்பெற்றவனாதலால், தன்னைப் போலவே பெண்காரணமாகப் பெருஞ்சாபத்தைப் பெற்ற புத்திரனுக்குத் தான் உறுதிகூறினானென்பார் 'ஒருதையலாற் பிணியுழந்து பேர்பெறும் பெற்றியான்' என்றார்: எற்கவே, அனுபவித்தவன் உணராதானுக்கு அறிவுறுத்தினானென்றவாறு. கௌதமமுனிவரது மனைவியும் சதானந்தமுனிவரது தாயுமாகிய அகலிகையின்மீது பலநாளாய் விருப்பங்கொண்டிருந்த தேவேந்திரன் ஒருநாள் நடுராத்திரியில் கௌதமராச்சிரமத்துக்கு அருகே வந்து பொழுதுவிடியுங் காலத்துக் கோழி கூவுவதுபோலக் கூவ, அது கேட்ட முனிவர் சந்தியாகாலஞ் சமீபித்ததென்று கருதிக் காலைக்கடன் கழிக்கும் பொருட்டு நீர்நிலை நோக்கிப் புறப்பட்டுச் செல்ல, அப்பொழுது இதுவே சமயமென்று இந்திரன் அம்முனிவருருக்கொண்டு அவளோடு கலக்கையில், அவளும் தன்கணவனல்லனென்று அறிந்தபின்பும் விலகாமல் உடன்பட்டு இருக்க, அதனை ஞானதிருஷ்டியால் அறிந்துவந்த அம்முனிவர் அகலிகையைக் கருங்கல் வடிவமாம்படியும் இந்திரனை உடம்புமுழுவதும் ஆயிரம் பெண்குறியை யடையும்படியும் சபித்து, உடனே அவர்கள் அஞ்சி நடுங்கிப் பலவாறு வேண்டிக்கொண்டதற்கு இரங்கி, முறையே ஸ்ரீராமனது திருவடிப்பொடி படுங் காலத்து அக்கல்வடிவம் நீங்கிச் சுவகீயஉருவம்அடைவாயென்றும், அப்பெண்குறிகள் பிறர்க்குக் கண்களாகப் புலப்படுக என்றும் அனுக்கிரகிக்க, பின்பு அவ்வாறே சாபந்தணிந்தன ரென்பது, ஈற்றடியிற் குறித்த கதை.

அன்பொடு, ஒடு-அடைமொழிப்பொருளது உறத்தழுவுதல் - இறுகத் தழுவுதல்: காடாலிங்கனம். தழுவி = தழீஇ: சொல்விகாரப்பட்டு அளபெடுத்தது. கணிகை என்பதற்கு - செல்வமுடையவர்களையே எண்ணுபவளென்பது உறப்புப்பொருள். கடுங்கொடு - ஒருபொருட்பன்மொழி. சாபம் = ஶாபம். வெகுண்டுகூறும் மொழி. அஞ்சல் - எதிர்மறையேவல். தையல் - அழகு: அதனையுடையாளுக்கு ஆகுபெயரென்பர். (களக)

172.—ஊருப்பசியுள்ளவிடத்துக்கும் தேவேந்திரன் செல்ல, அவள் அஞ்சிவந்து வணங்குதல்.

*அன்னமென்னடையாயிழைதன்னுழைத்*
*துன்னினன்சுரரோடுஞ்சுரேசன்போய்*
*மின்னினுண்ணிடையாளும்வெருவுறு*
*மன்னவன்பதம்வந்துவணங்கினாள்.*

(இ - ள்.) சுர ஈசன் - தேவேந்திரன், சுரரோடுஉம்-தேவர்களுடனே, போய் - சென்று, அன்னம் மெல் நடை ஆய் இழை தன் உழை - அன்னப் பறவையின் நடைபோன்ற மென்மையான நடையையும் ஆராய்ந்து செய்யப்பட்ட ஆபரணங்களையுமுடைய ஊர்வசியினிடத்து, துன்னினன் - சேர்ந்தான்; (அப்பொழுது), மின்னின் நுண் இடையாள்உம் - மின்னலைக்காட்டி

லும் நுட்பமான இடையையுடைய ஊர்வசியும், வெருவுறு - அச்சமடைந்து, வந்து - (எதிரில்) வந்து, மன்னவன் பதம் வணங்கினாள்-இந்திரனதுபாதங்களை நமஸ்கரித்தாள் ; (எ - று.)

அன்னம்=ஹம்ஸம்: வடமொழித் திரிபு. மென்னடை - மந்தகதி: கண்ணுக்குஇனிய நடையுமாம். ஆயிழை - வினைத்தொகையன்மொழி. இழை - சினையாகு பெயராய், ஆடையுமாம். (கஎஉ)

173.—மூன்றுகவிகள் - இந்திரனுடன் சென்ற தேவர்கள் ஊருப்பசியைத் துதித்து 'நீ அருச்சுனனுக்குஇட்ட சாபத்தை அவன் வேண்டும்போதுவருமாறுஅருள்புரிக' என்றுவேண்டுதலைக் கூறும்.

வணங்குமுன்னமடநடையோதிமக்
கணங்கொலென்னக்கவின்பெறுகோதையைச்
சுணங்கருமுலைத்தோகையைவார்குழ
லணங்கையண்டரனைவரும்போற்றியே.

நான்குகவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) வணங்கும் முன்னம்-(இந்திரனை) நமஸ்கரித்தற்கு முன்பே [மிகவிரைவில் என்றபடி], மடம் நடை ஓதிமம் கணம் கொல் என்ன கவின் பெறு கோதையை - அழகிய நடையில் அன்னத்தின் இனமோவென்று சொல்லும்படி அழகைப்பெற்ற பூமாலை போன்றவளும், சுணங்கு அரு முலை தோகையை - தேமல்நீங்காத தனங்களையுடைய மயில்போன்றவளும், வார் குழல் அணங்கை - நீண்ட கூந்தலையுடைய தெய்வப் பெண்ணுமாகிய அவ் ஊர்வசியை,— அண்டர் அனைவர்உம் - தேவர்கள் எல்லாரும், போற்றி - துதித்து, — (எ - று.)—'கூறி' என மேலேதொடரும்.

மடநடை - இளமையாகியநடை: மந்தகதியென்னவுமாம். கணம்-வடசொல். கொல் - வினா. கோதை, தோகை - உவமவாகுபெயர்கள். மாலை - மென்மை யழகுகளுக்கும், மயில் சாயற்கும் உவமை. கோதை - மாலையையுடையாளெனச் சினையாகுபெயருமாம். சுணங்கு-பருவமகளிர்க்குக் கொங்கைகளிற் சிறியவும் பெரியவுமாகப் பொற்கொடியைப்பரப்பினாற்போலத் தோன்றுகின்ற சிலவடுக்கள். (கஎங)

174. அன்னைநீயெவர்க்காயினுமாசையி
னின்னறீர்ப்பதெவர்க்குமியல்பரோ
மன்னனாயினும்வான்பிழைசெய்தன
னென்னநாகரவட்கிதங்கூறியே.

(இ - ள்.) 'நீ எவர்க்கு அன்னை ஆயின்உம் - நீ யாருக்குத் தாயாயிருந்தாலும், ஆசையின் இன்னல் தீர்ப்பது - (தெய்வமகளாகிய உனது) காமநோயை (க் கலவியால்) தணியச்செய்யவேண்டுவது, எவர்க்குஉம் இயல்பு - ஆடவர்யாவர்க்கும் இயற்கையாம் ; மன்னன் ஆயின்உம் - (அருச்சுனன்) அரசகுலத்தில் தோன்றினவனானாலும், வான் பிழை செய்தனன் - (இதுஇயல்பென்று அறியாமல் உன்கருத்தைநிறைவேற்றாமையாகிய) பெரிய தவற்றைச் செய்து விட்டான்', என்ன - என்று, நாகர் - தேவர்கள்,

அவட்கு இதம் கூறி - அவ்வூர்வசிக்கு இன்சொற்களைச் சொல்லி, (எ - று.)—"என்று வானவர் யாவருமேத்த" என 176-ஆங் கவியோடு தொடரும்.

முதலடிமூன்றாமடியில், உம் - உயர்வுசிறப்பு: இரண்டாமடியில் முற்றுப்பொருளது. அரோ - தேற்றமுணர்த்திற்று. (கஎச)

175. காமமிக்கவுன்கட்டுரைச்சாபநோய்
பூமிபொய்ப்பினும்பொய்ப்பதன்றாலரோ
வேய்மலர்த்தொடையானெஞ்சில்வேண்டுநா
ளாமவற்கிவ்வுருவருள்செய்தி நீ.

(இ - ள்.) காமம் மிக்க - புணர்ச்சிவிருப்பம் மிகுந்த, உன் - உனது, கட்டுஉரை-உறுதிவார்த்தையாகிய, சாபம்-சாபத்தினாலுண்டாகிய, நோய்-(பேடித்தன்மையாகிய) வியாதி, பூமி பொய்ப்பின்உம் - நிலவுலகத்தார் யாவரும் வார்த்தை தவறினாலும், பொய்ப்பது அன்று - தவறுவதன்று; (ஆயினும்), வேய் மலர் தொடையான் - சூடின பூமாலையையுடைய அருச்சுனன், நெஞ்சில் வேண்டும் நாள் - மனத்தில் விரும்புங்காலத்தில், அவற்கு இ உரு ஆம் - அவனுக்கு இப்பேடிவடிவம் வரத்தகும்; நீ அருள் செய்தி - நீ (இவ்வாறு) அநுக்கிரகஞ் செய்வாயாக; (எ - று.)

முதலிரண்டடிக்கு - சலியாத நிலைமையுடையதாகிய பூமி அந்நிலைதவறிச் சலித்தாலும் உன்சாபநோய் நிலைதவறாது என்றும் உரைக்கலாம். காமமாவது - ஒரு காலத்தில் ஒரு பொருளால் ஐம்புலன்களும் அநுபவிக்குஞ்சிறப்புடையதான இன்பம். பொய்ப்பினும்என்ற உம்மை-பொய்யாமை குறித்தலால், எதிர்மறைப்பொருளது. ஆல், அரோ-ஈற்றசைகள். (கஎரு)

176.—தேவர்களின்வேண்டுகோளின்படி உருப்பசி அருள்புரிதல்.

என்றுவானவர்யாவருமேத்தவே
யன்றவற்கவ்வரங்கொடுத்தாளவள்
வென்றிவார்சிலைமீளியுந்தன்பெருந்
துன்றுகோலஞ்சிறந்திடத்தோன்றினான்.

(இ - ள்.) என்று - என்றுசொல்லி, வானவர் யாவர்உம் - தேவர்கள் எல்லாரும், ஏத்த - துதிக்க,—அவள் - ஊர்வசி, அன்று - அப்பொழுது; அவற்கு-அந்த அருச்சுனனுக்கு, அ வரம் - அந்த வரத்தை, கொடுத்தாள்—; (உடனே சாபந்தணிந்து), வென்றி வார் சிலை மீளிஉம் - வெற்றியைத்தருகிற நீண்ட வில்லின்தொழிலில் வலியவனான அவ்வருச்சுனனும், தன் பெரு துன்று கோலம் சிறந்திட தோன்றினான் - தனது பெருமை பொருந்திய இயற்கைவடிவம் விளங்க வெளிப்பட்டான்; (எ - று.)

இவ்வரத்தின்உதவியினாலே பின்பு அஜ்ஞாதவாசகாலத்தில் அருச்சுனன் பிருகந்நளையென்னும் பேடிவடிவமாவனென்று அறிக. (கஎசு)

அருச்சுனன் றவநிலைச்சருக்கம் முற்றிற்று.

---

இரண்டாவது

# நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்கம்.

நிவாதகவசர் காலகேயர் என்னும் அசுரவீரர்களது (அருச்சுனனால் செய்யப்பட்ட) கொலையைக் கூறுகின்றதொரு நூற்கூறுபாடு என்பது, பொருள். நிவாதகவசர் என்பதற்கு-(மிகநுண்ணிதான இடத்திலும் தடை யின்றிச் செல்லும் வல்லமையுடைய) காற்றும் உள்ளே நுழையமாட்டாத மிகவுறுதியான கவசத்தையுடையவர்கள் என்றும், காலகேயர் என்பதற்கு - காலகையென்னும்அசுரமகளதுமக்கள் என்றும் பொருள். நிவாதகவசர் என் பதில், நி - எதிர்மறையுணர்த்தும் வடமொழி உபசர்க்கம்; வாதம்-காற்று; கவசம் - இரும்புமுதலியவற்றாலாகிய உடம்பின்மேற்சட்டை. இவர்கள், கடலிடையேயுள்ள தோயமாபுரமென்னும் பெருநகரத்தில் தொகுதியாய் வாசஞ்செய்பவர்கள். காலகேயர் - இது, வடமொழித் தத்திதாந்தநாமம்; இவர்கள், அந்தரத்திடையேயுள்ள இரணியபுரமென்னும் நகரத்தில் தொகுதியாய் வாசஞ்செய்பவர்கள். பிரமன்முதலிய தேவர்களைக் குறித் துப் பெருந்தவஞ்செய்து அளவிறந்தவரங்களைப் பெற்று அவ்வரபலத்தா லும் புஜபலம் ஆயுதபலம் சேனாபலம் முதலியவற்றாலுந் தமக்கு ஒப்புஉயர்வு இன்றி மிகச் செருக்குற்று இந்திரன்முதலிய தேவர்களுக்கு இடைவிடாமல் இடையூறுபல இயற்றிவந்த இவ்வசுரர்களை அவ்விந்திராதிதேவர்களின் வேண்டுகோளினால் அருச்சுனன் தான் அருந்தவம்புரிந்து பரமசிவனிடத் துப் பெற்ற பாசுபதாஸ்திரம் முதலியவற்றின் உதவியைக்கொண்டு பொருது ஒழிக்கிறான்.

நிவாதகவசர்காலகேயர் - அல்வழிப்புணர்ச்சி, உம்மைத்தொகை. காலகேயர்வதை - வேற்றுமைச்சந்தி, ஆறாம்வேற்றுமைத்தொகைநிலைத் தொடர்; செயப்படுபொருளில் வந்தது. வதைச் சருக்கம் - வதையைப் பற்றிய சருக்கம் என விரித்தால் இரண்டனுருபும் பயனும் உடன்தொக்க தொகையும், வதையினது சருக்கம் என விரிப்பின் விஷயமாகவுடைமை யாகிய சம்பந்தப்பொருளில் வந்த ஆறாம்வேற்றுமைத்தொகையுமாம். வதம் - வதை என ஈறுதிரிந்தது; சாமரம் - சாமரை, காலம் - காலை என் பனபோல. இப்பிரிவுக்கு 'இரணியபுரவாசியர்வதைச்சருக்கம்' எனப் பெயரிட்டுவழங்கினாருமுளர்; தோயமாபுரவாசியர்வதையையும் முதலிலே முக்கியமாகக் கூறுகின்றதொரு பகுப்பிற்கு ஏகதேசத்தாற் பெயர்வைத்தல் பொருந்தாமை காண்க. இச்சருக்கத்தில் முதல் நூற்றுநான்கு பாடல்கள் தோயமாபுரத்து அசுரரது வதத்தையும், அதற்குமேல் நாற்பத்திரண்டு செய்யுட்கள் இரணியபுரத்து அசுரர்களது வதத்தையும் உணர்த்துமென உணர்க. வடமொழி வியாசபாரதத்திலும் ஆரணியபருவத்தினுள்ளடங்கிய நிவாதகவசயுத்தபருவத்தில் ஐந்துஅத்தியாயங்களில் நிவாதகவசவதமும், ஓரத்தியாயத்தில் இரணியபுரவாசிவதமும் கூறப்பட்டுள்ளன.

1.—* உருப்பசியினிடம்வரம்பெற்ற அருச்சுனனை யுடன்கொண்டு இந்திரன் சுதன்மையில் வீற்றிருத்தல்.

அவ்வரந் தனக்கு நல்கு மன்னைதாள் வணங்கும் வென்றிக்
கைவரு சிலையி னானைக் கடவுளர்க் கிறைவன் கொண்டு
மொய்வரு சுரர்கள் சூழ முதன்மைசேர் சுதன்மை யெய்தி
வெவ்வரி முகத்த பீடம் விளங்கவீற் றிருந்த காலை.

இதுவும், மேற்கவியும் - ஒரு தொடர்.

(இ - ள்.) அ வரம் - (பேடிவடிவம் தான் வேண்டுங்காலத்தில் ஒரு வருஷகாலம் வந்தடையும் என்ற) அந்த வரத்தை, தனக்கு நல்கும் - தனக்குக் கொடுத்த, அன்னை - தாயாகிய ஊர்வசியினது, தாள் - பாதங்களை, வணங்கும் - நமஸ்கரித்த, வென்றி கை வரு சிலையினானை - ஜயத்தைத் தருகின்ற (தன்)கையிற்பொருந்திய (காண்டீவமென்னும்) வில்லையுடைய அருச்சுனனை, கடவுளர்க்கு இறைவன் - தேவர்களுக்கு அரசனான இந்திரன், கொண்டு - அழைத்துக்கொண்டு, மொய் வரு சுரர்கள் சூழ - நெருங்கி வருகின்ற தேவர்கள் (தன்னைச்)சுற்றிலுமிருக்க, முதன்மை சேர் சுதன்மை எய்தி - (சபாமண்டபங்களெல்லாவற்றினும்) தலைமைபெற்ற சுதர்மை என்னுந் தேவசபாமண்டபத்தை அடைந்து, வெவ் அரி முகத்த பீடம் விளங்க - கொடுந்தன்மையையுடைய சிங்கத்தினது முகம் அமைந்துள்ள ஆசனம் விளங்குதலையடையும்படி, வீற்றிருந்த காலை - (அவ்வாசனத்தில்) பெருமையாக இருந்தபொழுதில்,—(எ - று.)—இக்கவியில் 'காலை' என்பது, மேற்கவியில் 'காட்டினான்' என்பதோடு முடியும்.

அருச்சுனனது வமிசபிதாவாகிய புரூரவசக்கரவர்த்திக்கு மனைவியாயிருந்ததனால், ஊர்வசி அருச்சுனனுக்குத் தாய்முறை யாயினாள். அன்றியும், தந்தையாகியஇந்திரனது வைப்பாட்டியாகையாலும், அருச்சுனனுக்கு ஊர்வசி மாதா வாவ ளென்பர். 'தாள்வணங்கும்' என்றதனால், அவளது அடியிணைகளில் தனது முடி படும்படி சாஷ்டாங்கமாக விழுந்து தெண்டனிட்டன னென்க. அருச்சுனன் அக்கினிபகவானுக்குக் காண்டவவனத்தை இரையாகக் கொடுத்த காலத்தில், அவனுக்கு அக்கினியினால், நான்கு வெள்ளைக்குதிரைகள் பூட்டியதொரு தேரும், குரங்குக் கொடியும், காண்டீவமென்னும் வில்லும், அம்புகள் குறைதலில்லாத அக்ஷய தூணீரமும் அளிக்கப்பட்டனவென்று அறிக. கைவருதல் - கைபழகுதலுமாம். கடவுளர் - (இவ்வுலகசம்பந்தத்தைக்) கடத்தலையுடையவர். சுதன்மை-

*இந்தச் சருக்கத்துக்குக காப்புச்செய்யுளாக ஒரு சாரார் வழங்கிய பாடல் வருமாறு :—

செய்யவாய்கரியவாட்கண்சிற்றிடைபெருந்தோலல்கு
றுய்யவாய்மகடன்முன்றிரெருகுமருதிறுத்தத்தாரு
வய்யமீமிசைநட்டோர்புள்வகிர்ந்தபொற்சிறைப்புள்ளூரும்
அய்யனேயன்றேதொல்லையருமறைக்கிறுதியாவான்.

ஸு-தர்மா என்னும் வடமொழியின் திரிபு ; நல்லதரும முடையது என்று பொருள் : இனி, முதன்மைசேர் சுதன்மையெய்தி என்பதற்கு - சிறப்புப் பெற்ற நற்புத்திரனையுடையனுந்தன்மையை (இந்திரன்) அடைந்து என்று உரைப்பாருமுளர்: சுதன் - மகன். அரிமுகத்தபீடம்-சிங்கந்தாங்குவதுபோல அதன் முகமும் கால்களும் அமைத்துச் சித்திரித்துச் செய்யப்பட்ட ஆதனம். சிங்காதனத்தில் வீற்றிருப்பதனால் இந்திரனுக்கு விளக்கம் உண்டாவது என்ப தன்றிக்கே, இந்திரன்வீற்றிருத்தலினால் ஆதனத்திற்கு விளக்கம் உண்டாவது என, தேவேந்திரனது சிறப்பை உணர்த்தினர் ; கம்பராமாயணத்தில் "புனைமணி மண்டபம் பொலிய் வெய்தினன்" என்பதனோடு இதனை ஒப்பிடுக. தனக்கு - அருச்சுனனுக்கு ; இந்திரனுக்காக என்றும் உரைப்பர். நல்கும், வணங்கும் - இயல்பினால் இறந்தகாலம் எதிர்காலமாக வந்த காலவழுவமைதி ; [நன் - பொது-கூரு.] இனி, உம்விகுதி காலமுணர்த்தாமல் தன்மையுணர்த்திற்றெனினும் அமையும். முகத்த-முகமென்னும் பெயர்ச்சொல்லினடியாகப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். வரம், முகம், பீடம் - வடசொற்கள்.

இதுமுதல் இருபத்தொன்பது கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடிநான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். இவற்றில் மூன்று ஆறுஞ்சீர்கள் தேமாச்சீர்களாகவே நிற்கும். (க)

2.—நம்பகைவரை யொழிக்க வல்லவன் இவனேயென்று இந்திரன் தேவர்கட்கு அருச்சுனனைக் காட்டுதல்.

தூண்டகுதோளின்மொய்ம்பானம்வலிதொலைத்துமென்மேன்
மூண்டெழுமவுணர்தம்மையிவனன்றிமுடிப்பாரியாரென்
றாண்டகையமரர்க்கெல்லாமவன்செயலடைவேசொல்லிக்
காண்டவமெரித்தவீரனிவனெனக்காட்டினானே.

(இ - ள்.) ஆண் தகை - ஆண்மைக்குணமுள்ள இந்திரன், 'தூண் தகு தோளின் மொய்ம்பால் - தூண்களோ என்னத்தக்க புஜங்களின் பலத்தினால், நம் வலி தொலைத்து-நமது பலத்தை அழித்து, மெல் மேல் மூண்டு எழும் - மேலேமேலே (போருக்கு) முயன்று எழுந்து வருகின்ற, அவுணர் தம்மை - அசுரர்களை, முடிப்பார் - ஒழிக்கவல்லவர், இவன் அன்றி - இவ்வருச்சுனனையல்லாமல், யார் - யாவர்உளர் ? [எவரு மில்லை யன்றோ?],' என்று—, அமரர்க்கு எல்லாம்-தேவர்கள்யாவர்க்கும், அவன் செயல் அடைவு ஏ சொல்லி-அவ்வருச்சுனனது செய்தியைமுறைப்படச்சொல்லி,—காண்டவம் எரித்த வீரன் இவன் என காட்டினான் - (நமது) காண்டவவனத்தை (முன்பு) எரியச்செய்த வீரத்தன்மையுள்ளவன் இவன்தா னென்றுஞ் சொல்லிச் சுட்டிக் காண்பித்தான் ; (எ - று.)

இக்கவியால், அமரரையும் அசுரரையும் ஒருபடிப்பட வெல்லவல்ல அருச்சுனனது ஆற்றல் வெளியாகின்றது. தோளின்மொய்ம்பு-ஆறும்வேற்

றுமைத்தொகை ; இன் - சாரியை. 'மொய்ம்பால்' என்றவிடத்து, 'முன்பால்' என்றும் பாடமுண்டு ; முன்பு - வலி. ஆண்தகைமை - பௌருஷம். தூண் - ஸ்தாணு என்னும் வடசொல்லின் சிதைவென்பர்: இது, தோளுக்கு, திரண்டு உருண்டு நீண்ட தன்மையாலும், வன்மையாலும் உவமம். தூணென்பதை உவமவுருபாகக்கொண்டும் உரைக்கலாம். மொய்ம்பால் தொலைத்து என்றாவது, மொய்ம்பால் முடிப்பார் என்றாவது இயைக்க. மொய்ம்பான் எனப் பிரித்து, தோள்வலிமையுடையவனாகிய என்று உரைத்து, இவன் என்பதற்கு விசேஷணமாக்கினும் அமையும். 'நம்' எனப் பன்மையாகக் கூறினான், மற்றைத் தேவர் யாவரையும் உளப்படுத்தி. மென்மேல் - மேன்மேல்: அடுக்குத்தொடர், இடைவிடாமைப்பொருளது. வினைவடியாய்ப்பிறந்த யார் என்னும் பலர்பாற்குறிப்புமுற்று, எதிர்மறைப்பொருள்தந்தது. ஆண்டகை - பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. தகை - தகுதி, சற்குணம் ; இது - தொழிலடியாய்ப் பிறந்ததாயினும், பொருளாற் பண்புப்பெயர். இதை அமரர்க்கு அடைமொழியாக்கிவிட்டு, கீழ்க்கவியில் 'கடவுளர்க்கிறைவன்' எனபதையே, 'காட்டினான்' என்பதற்கு எழுவாயாக்கினும் அமையும். எல்லாம என்னும பெயர், இருதிணைக்கும் பொது. செயல் - வெற்றிச்செய்கை, வரலாறுமாம்.

காண்டவமெரித்த வீரனிவனெனக்காட்டியது, தேவர்களாகிய நம்மினுஞ் சிறந்த வீரமுடையான் இவன் என்பதைத் தெரிவித்தற்கு. கிருஷ்ணனும் அருச்சுனனும் ஒருநாள் பூம்பந்தேறிட்டு விளையாடச்செய்தே, அக்கினிபகவான் மிகப் பசித்துவந்து, 'இந்திரனது காவற்காடாய் யாவர்க்கும் அழிக்கவொண்ணாதபடியாய் நிலவுலகத்தில் இருக்கின்ற காண்டவவனமென்னும் பூந்தோப்பை அதிலுள்ள சராசரங்களுடனே எனக்கு விருந்திட வேண்டும்' என்று வேண்ட, கிருஷ்ணார்ச்சுனர்கள் அங்கேபுக்கு ஒதுங்கியிருக்கின்ற அசுரர்முதலிய துஷ்டர்களை அழித்தருளவேண்டுமென்னும் நோக்கத்தால் 'நீ அதனைப்புசி' என்று இசைந்து அளிக்க, உடனே நெருப்புப் பற்றி எரித்தது என்பது, கதை. அங்ஙனம் எரித்திடுவதை அறிந்த இந்திரன் அக்கினியை அவிக்கும்பொருட்டு எழுமேகங்களையும் ஏவ அவையனைத்தும் ஒருங்கே எழுந்துவந்து பெய்த அடைமழைமுழுவதையும் அருச்சுனன் அம்புக்கூட்டங்களைக்கொண்டு அமைத்த பெருமபந்தரினால் தடுத்துவிட்டானென்பதையும், அதுகண்டு சினந்து தேவசைனியத்துடனே வந்து பொருத இந்திரனைப் பார்த்தன் புறமிட்டோடச்செய்தனனென்பதையும் கீழ்க் காண்டவதகனச்சருக்கத்துக் காண்க. (உ)

3.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: தேவர்கள் அருச்சுனனைச் சம்மானிக்க, இந்திரன் கற்பகப்பூமாலைசூட்டி முடிகவித்தல்.

அவ்வுரைகேட்டதேவரகமகிழ்ந்தவனுக்கன்பாற்
றிவ்வியமறையின்மிக்கதெக்கிணைபலவுஞ்செய்தார்
செவ்வியதாதைதானுஞ்சேணதித்துநீராட்டி
வில்விரவாதவாசத்தாமமும்விழைந்துசூட்டி.

(இ - ள்.) அ உரை - அந்த (இந்திரனது) வார்த்தையை, கேட்ட - செவியுற்ற, தேவர் - தேவர்கள், அகம் மகிழ்ந்து - மனஞ் சந்தோஷித்து, அவனுக்கு - அவ்வருச்சுனனுக்கு, அன்பால் - அன்பினால், திவ்வியம் மறையில் மிக்க தெக்கிணை பலஉம் செய்தார் - தெய்வத்தன்மையுள்ள வேதங்களில் (அரசர்களுக்குச் செய்யத்தக்கனவென்று) மிகுதியாகச்சொல்லியுள்ள பலவகைச் சன்மானங்களையுஞ் செய்தார்கள்; செவ்விய தாதை தான்உம் - நற்குணங்களையுடைய (அருச்சுனனது) தந்தையாகிய இந்திரனும், சேண் நதி தூ நீர் ஆட்டி - ஆகாசகங்காநதியினது பரிசுத்தமான தீர்த்தத்திலே (அருச்சுனனை)ஸ்நாநஞ்செய்வித்து, வி விரவாத வாசம் தாமம்உம் விழைந்து சூட்டி - வண்டுகள் மொய்க்காத வாசனையையுடைய (கற்பகப்பூ) மாலையையும் (அவனுக்கு) விரும்பி அணிவித்து,—(எ - று.)—மேற்கவியில் 'கவித்தான்' என்பதோடு முடியும்.

'அகமகிழ்ந்து' என்னும் வினையெச்சம், 'செய்தார்' என்னும் முதலின் வினையைக்கொண்டது: [நன் வினை - உசு.] வேதத்துக்குத் தெய்வத் தன்மையாவது - செய்யத்தக்கனவும் தகாதனவுமாகிய நன்மை தீமைகளை விதி விலக்குக்களால் தவறாமல்தெரிவித்து யாவராலுஞ் சத்தியமான சிறந்தபிரமாணமென்று அங்கீகரிக்கப்படுதல். மறை - (சிலவருணத்தார்க்கும் பெண்பாலார்க்கும் ஓதலாகாது என) மறைக்கப்படுவது; மறு - பகுதி, ஐ - செயப்படுபொருள்விகுதி: அறிக்கே, மறைந்தபொருளையுடையது என்றுமாம். இப்பொருளில், மறை - பகுதி, கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்து கெட்டது. தெக்கிணை - தக்ஷிணையென்னும்வடசொல்லின் திரிபு பலவும், உம்மை - முற்றுப்பொருளது. செவ்விய - குறிப்புப்பெயரெச்சம். செவ்வி - அழகுமாம். செவ்வி - பண்புப்பெயர்; இ - விகுதி: வி - விகுதியெனவுமாம். மூன்று நான்காம் அடிகளிலுள்ள உம்மை இரண்டும்-இறந்ததுதழுவிய எச்சப்பொருளன. சேண் - வானம். தூநீர்-தூய்மையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு இடைநின்றமெய்யுங் கெட்டது. 'தூய்நீர்' எனவும் பாடம். வி-வடசொல், பறவைப்பொதுப்பெயர்: இது-இங்கே, சிறப்பாய் வண்டென்னும் ஒருசாதிப்பறவையைக் குறித்தது; புள்என்னுந் தென்மொழியும்இவ்வாறேபொதுப்பெயருஞ் சிறப்புப்பெயருமாயிருக்கும்.தேவலோகத்துப்பூமாலையில் வாட்டமும் வண்டுமொய்த்தலும் இல்லையென அறிக. விழைந்து சூட்டுதல் - விருப்பத்தோடு தரிப்பித்தல். அகமென்னும் உள்ளிடப்பெயர், அங்கு இருக்கின்ற மனத்திற்கு ஆதலால், இடவாகுபெயர். இனி, இரண்டாம் அடிக்கு - சிறந்த வேதமந்திரங்களைக்கொண்டு மிகுந்த ஆசீர்வாதங்களைச் செய்தார்கள் என்றும் பொருள் கொள்ளலாம். (ரு)

4. ஆயிரங்கதிருந்திங்களனந்தமுமடங்கமேன்மேற்
காய்கதிர்விரிவதியார்க்குங்கருத்துறக்காணவொண்ணுச்
சேயொளிதவழ்வதாகித்திசைமுகன்றனக்குநல்கு
மாயிருங்கிரணரத்நமவுலியுங்கவித்தானன்றே.

(இ - ள்.) ஆயிரம் கதிர்உம்-அநேகசூரியர்களும், திங்கள் அனந்தம்உம்-அநேகசந்திரர்களும், அடங்க - ஒளிகுறையும்படி, மேல் மேல் காய் கதிர் விரிவது-மிகவும் அதிகமாக விளங்குகின்ற கிரணங்கள் வீசுவதும், யார்க்கு உம்-எவருக்கும், கருத்து உற - மனம்பொருந்த, காண ஒண்ணு - பார்த்தற்கு முடியாத, சேய ஒளி - நெடுந்தூரத்துஞ் சென்றுவிளங்குகின்ற பிரகாசம், தவழ்வது - தங்குவதும், ஆகி - ஆய், திசைமுகன் தனக்கு நல்கும்-நான்கு முகங்களையுடைய பிரமதேவனால் தனக்கு (முன் ஒருகாலத்தில்) சூட்டப்பட்ட, மா இரு கிரணம் ரத்நம் மவுலிஉம் - மிகஅதிகமான ஒளியையுடைய நவரத்தினங்களையும் பதித்துச் செய்யப்பட்ட கிரீடத்தையும், கவித்தான்-(அருச்சுனனுக்கு இந்திரன்) சூட்டினான்; (எ-று.) அன்றே-ஈற்றசை.

முச்சுடர்களுள் மற்றையிருசுடர்களாகிய சந்திர அக்கினியர்களைப்போலப் பதினாறு ஏழு கிரணங்களையுடைத்தாகாமே ஆயிரங்கிரணங்களையுடைத்தாய் அக்கிரணங்களுட் சிலவற்றை அவ்விருசுடருக்குங் கொடுத்துவாங்குகிற சிறப்புப்பற்றி, 'கதிர்' என்று சூரியனுக்குப் பெயர். ஆயிரம் என்றது, மிகப்பலவாகிய எண்ணிற்கு ஒன்று எடுத்துக்காட்டியவாறு. ஆயிரங்கதிர், திங்களனந்தம் என்பன - இல்பொருள்கள். இனி, ஆயிரங்கதிர் - ஸஹஸ்ரகிரணனாகிய சூரியனுக்குப் பண்புத்தொகைப்புறத்துபபிறந்த அன்மொழித்தொகையாகவுமாம். ந+அந்தம்=அநந்தம்; அளவிறந்தன என்றுபொருள். உம்மைகள், எண்ணுப்பொருளன. விரிவது+யார்க்கும்=விரிவதியார்க்கும்; குற்றியலிகரம்: [நன். எழு - ௩அ, உயிர் கஉ.] காணவொண்ணுமைக்குக் காரணம், மிகுந்த பிரகாசத்தாற் கண்களுக்குக் கூச்சந்தருதல். ஒண்ணு - ஒன்றுஎன்னும் ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சத்தின் மரூஉ. சேயொளி- சேய்மையென்னும் பண்புப்பெயர், ஈறுபோயிற்று; இனி, செம்மையென்பது ஈறுபோய் ஆதிநீண்டு முன்நின்ற மெய் திரிந்ததாகக் கொண்டு, சிவந்த ஒளி யென்றலும் ஒன்று. திசைமுகன்-நான்கு திக்கையும் நோக்கும் நான்கு முகமுள்ளவன். ரத்நம்-வடமொழி, விகாரப்படாமே நின்றது. மா+இரு= மாயிரு; ஒருபொருட்பன்மொழி: உரிச்சொற் புணர்ச்சியாதலால், பொது விதிப்படி வகரமெய்பெறாது யகரமெய்பெற்று முடிந்தது; [நன் - மெய் யீறு - ௩௬:] "மாமுன் னுயிர்வரின் யகரமெய் தோன்றும்" என வழங்குஞ் சூத்திரத்தையும் உணர்க. இரு - பண்படி. 'மவுலியும்' என்ற உம்மை, கீழிற்கவியைநோக்கிவந்த இறந்ததுதழுவிய எச்சப்பொருளது; உயர்வுசிறப்பாகவுமாம். மவுலி - மௌலி என்பதன் முதற்போலி; இத் தலையின்பெயர், இடவாகுபெயராய், அதில் அணியுங் கிரீடத்தை உணர்த்திற்று. இக்கிரீடத்தை அணிந்ததுபற்றியே அருச்சுனனுக்குக் கிரீடியென்று ஒருபெயர் நிகழ்ந்தது; அனந்தமும் மடங்க என்றும் பதம் பிரிக்கலாம். (௪)

5.—அருச்சுனனுக்குத் தேவேந்திரன் சிறப்புச்செய்தல்.

ஆடையுங்கலனுந்தெவ்வையடுந்திறற்படையுநல்கி
யேடவிழலங்கலானோராசனத்திருத்தியென்றுந்

தேடுதற்கரியதூயவமுதுசெம்பொற்கலத்திற்
கூடவுண்டமரர்க்கெல்லாங்குரிசிலாஞ்சிறப்புஞ்செய்தான்.

(இ - ள்.) ஏடு அவிழ் அலங்கலான் - பூவிதழ்கள் மலர்கின்ற மாலையை யுடைய இந்திரன்,— ஆடைஉம் - வஸ்திரங்களையும், கலன்உம் - ஆபரணங் களையும், தெவ்வை அடும் திறல் படைஉம் - பகைவரைக்கொல்லவல்ல வலி மையையுடைய ஆயுதங்களையும், நல்கி - (அருச்சுனனுக்குக்) கொடுத்து,— ஓர் ஆசனத்து இருத்தி - தான் இருக்கின்றதொரு ஆசனத்தில் தானே (அவனையும் கூட) இருக்க வைத்து, என்றுஉம் தேடுதற்கு அரிய தூய அமுது - எந்நாளுந் தேடியடைதற்கு அருமையான பரிசுத்தமான அமிரு தத்தை, செம் பொன் கலத்தில்-சிவந்த பொன்னினாலாகிய பாத்திரத்திலே, கூட உண்டு - அவனுடனே ஒக்க இருந்து நுகர்ந்து, அமரர்க்கு எல்லாம் குரிசில் ஆம் சிறப்புஉம் செய்தான்-தேவர்களெல்லோருக்கும் அரசனாகின்ற சிறப்பையும் (அருச்சுனனுக்குச்) செய்துவைத்தான்; (எ - று.)

தேவேந்திரன் தன்குமாரனை அருச்சுனனுக்குத் தன்னாசனத்தில் அருத் தாசனங்கொடுத்து அவனைக்கூடவைத்துக்கொண்டு அமிருதபானம்பண்ணி அவனையும் அமுதுசெய்வித்து அவனைத் தேவர்களுக்கு இளவரசாக்கினா னென்பது கருத்து. இனி, அமரர்க்கெல்லாங்குரிசில் - தேவேந்திரன், ஏட விழலங்கலான் - அருச்சுனனை, ஓராசனத்திருத்தி - வேறொருஆசனத்தில் இருக்கவைத்து, அமுது கூட உண்டு-அமிருதம்போல மிக வினிய உணவை அவனோடு புசித்து, ஆம் சிறப்பும் செய்தான்-தக்க சன்மானத்தையுஞ் செய் தான் என உரைப்பாருமுளர். கலன்-கலம்: மகரனகரம் மாறிவருஞ்சொல்: இங்கே, கலன் - அணிகலன். 'மந்த்ரத்துடனடற்படையுநல்கி' என்றபாடத் துக்கு - அஸ்திரம் சஸ்திரம் என்னும் இருவகை ஆயுதங்களையும் அளித்தமை கூறினரென்க: இன்னும் இதிலே எய்வன, எறிவன, வெட்டுவன, குத்து வன என்னும் பலவகைப்படைகளும் அடங்கும். (அஸ்திரம் - மந்திரத்துட னே பிரயோகிக்கப்படுகின்ற ஆயுத மென்றும், சஸ்திரம் - மந்திரமின்றிக்கே விடப்படுகின்ற ஆயுத மென்றும் வேறுபாடு அறிக; அத்திரம் - கைவிடு படை, சத்திரம் - கைவிடாப்படை எனவும் வேறுபாடு கூறுவர்.) அவி ழலங்கல் - காலங்கரந்த பெயரெச்சம் [வினைத்தொகை], இடப்பெயர் கொண்டது; அவிழ்தற்கிடமான அலங்கல்: விரியப்பெற்ற மாலை என்க. தேடுதற்கு - கு விகுதி எதிர்காலங்காட்டும் வினையெச்சம்: து, அல் - சாரி யைகள்; இனி, தேடுதலென்னுந் தொழிற்பெயரின்மேல் வந்த நான்காம் வேற்றுமை யெனினும் இழுக்காகாது. கலம் - உண்கலம். குரிசில் - பெரு மையிற் சிறந்தவன்; ஆண்பாற் சிறப்புப்பெயர்: [நன் - பெயர் 69.] (௫)

6.—அதுகண்டுஇந்திராணி, 'ஒருமானுடனோடு ஒக்கஉண்ணுதல் தகுமோ?' என்று சினந்து கூறுதல்.

அன்னதுநிகழ்ந்தகாலையவன்றிருத்தேவிகண்டு
துன்னியகோபச்செந்தீவிழியுகச்சிலசொற்சொன்னாள்

மன்னியபுவியில்வைகுமானுடமன்னன்வந்துன்
றன்னுடனொக்கவுண்ணத்தக்கதோவுரைத்தியென்றே.

(இ - ள்.) அன்னது நிகழ்ந்த காலை - அத்தன்மையதான செய்கை நடந்த பொழுதில்,— அவன் திரு தேவி - அவ்விந்திரனது அழகிய மனைவியான இந்திராணி, கண்டு - (அதனைப்) பார்த்து, துன்னிய கோபம் செம் தீ விழி உக - பொருந்திய கோபத்தினாலாகிய சிவந்த நெருப்புப்பொறி கண்களின் வழியே சிந்தாநிற்க, 'மன்னிய புவியில் வைகு - பொருந்திய பூலோகத்திலே வசிக்கின்ற, மானுட மன்னன் - மனிதனாகிய ஓரரசன், வந்து - (இங்கே) வந்து, உன்தன்னுடன் ஒக்க உண்ண தக்கதோ - உன்னுடனே ஒக்க இருந்து உண்ணுதல் தகுதியுடையதோ? உரைத்தி - சொல்வாய்,' என்று —, சில சொல் சொன்னாள் - (இந்திரனை நோக்கிச்) சிலசொற்களைக் கூறினாள்; (எ - று.)

அன்னது - சுட்டிடைச்சொல்லடியாப்பிறந்த ஒன்றன்பாற்பெயர் : அது வென்று பொருள். கோபச்செந்தீ விழியுக என்பதற்கு - கோபமிகுதியால் நெருப்புப்போலக் கண்கள் மிகச்சிவக்க என்றும். கருதது. புவிஎன்னுஞ் சொல, வடமொழியில் எழாம்வேற்றுமை. வைகும் எனத் தெரிநிலைப்பெய ரெச்சமாகவும் பிரிக்கலாம். மானுடன் - மாநுஷன் என்னும் வடமொழித் திரிபு ; (காசியபப்பிரமாவினதுமனைவிமார்களுள்) மனு என்பவளிடம் ஆதி காலத்தில் தோன்றியவ னென்றுபொருள். மானுடமன்னன் - உயர் திணைப் பெயரீறுவிகாரமாயிற்று ; [நன் - உயிர் - 9] மன்னன் - பெருமையுடைய வன்: மன் - பெருமை ; உரிச்சொல். உண்ணத்தக்கதோ - உண்ணத்தகு மோ ; தகாதென்னும் பொருளைத் தந்ததனால், ஓகாரம் - எதிர்மறை. செந் தீவிழியுகப்பொருது சொற்றாள் என்றும் பாடம். (சு)

7.—இந்திரன் அருச்சுனனது பெருமையைச் சுட்டிக்காட்டி மானுடனென்று இவனையிகழலாகாது எனல்.

என்றலுங்கடவுள்வேந்தனிருபுயந்துளங்கநக்கு
மன்றலந்துளபமாயோன்மைத்துனனெனக்குமைந்தன்
கொன்றையஞ்சடையானோடமர்புரிகுரிசிறன்னை
நன்றியின்மனிதனென்றிங்கிகழ்வதோநங்கையென்றான்.

(இ - ள்.) என்றலும் - என்று (இந்திராணி) சொன்னவளவில்,— கடவுள் வேந்தன் - தேவராசனான இந்திரன், இரு புயம் துளங்க நக்கு - (தனது) இரண்டுதோள்களுங் குலுங்கும்படி பெருஞ்சிரிப்புச்சிரித்து, (அவளை நோக்கி), 'நங்கை - பெண்களுட் சிறந்தவளே! மன்றல் அம் துளபம் மாயோன் மைத்துனன் - வாசனையையுடைய அழகிய திருத்துழாய் மாலையை யுடைய ஸ்ரீகிருஷ்ணபகவானது அத்தைகுமாரனும், எனக்கு மைந்தன் - என்னுடைய மகனும், கொன்றை அம் சடையானோடும் அமர் புரி குரிசில் தன்னை - கொன்றைப்பூமாலையையுடைய அழகிய (கபர்த்தமென்னுஞ்) சடை யையுடைய பரமசிவனுடன் போர்செய்த வீரனு மாகிய இவ்வருச்சுனனை, நன்றி இல் மனிதன் என்று - (தேவர்களுக்கு உரிய) சிறப்பு இல்லாத சாதா

ரணமனிதனென்று எண்ணி, இங்கு இகழ்வதோ - இவ்வாறு (நீ) நிந்திப்பது முறையோ?' என்றான் - என்று கூறினான் ; (எ - று.)

கடவுள் - சாதியொருமை : இங்கே, கடவுளர் என்று பொருளாதலின்; இனி, தேவனாகிய அரசன் என இருபெயரொட்டுப் பண்புத்தொகையாக்கியுரைத்தலுமாம். இங்கே, சிரிப்பு-இந்திராணி அருச்சுனனை இகழ்ந்தது காரணமாகவும், இந்திராணியினது பேதைமை விளங்கியதுகாரணமாகவும் உண்டாயிற்று ; "எள்ளல் இளமை பேதைமை மடனென், றுள்ளப் பட்ட நகை நான் கென்ப" என்றார், ஆசிரியர் தொல்காப்பியனார். துளபம்-துளஸீ என்னும் வடமொழித் திரிபு: இது - அதனாலாகிய மாலைக்குக் கருவியாகு பெயர். மாயோன் - மாயையையுடையவன் ; மாயையாவது - கூடாததையுங் கூட்டுவிக்குந் திறம்: அகடிதகடநாசாமர்த்தியம் ; பிரபஞ்சகாரணமான பிரகிருதியுமாம்: இனி, மாயன்-ஆச்சரியகரமான குணங்களையுஞ் செயல்களையும் உடையவனென்றுமாம்; கருநிறமுடையவனென்றுங்கொள்ளலாம். மாயன்-மாயோன் எனச் சிறுபான்மை விகுதியீற்றயலகரம் ஓவாயிற்று; கிழவன்-கிழவோன், கிழவள் - கிழவோள், அனைவர் - அனைவோர், இருவர் - இருவோர் என்றஇடங்களிற்போல. மைந்து-இளமை, அழகு, வலிமை; அதனையுடையவன் - மைந்தன். கொன்றை என்னும் மரத்தின்பெயர், அதன் பூவினாலாகிய மாலைக்கு இருமடியாகுபெயர். அமர்-ஸமரம் என்னும் வடமொழிச் சிதைவு. நன்றி - பண்புப்பெயர் ; றி - விகுதி. மனிதன் - மநுஜன் என்னும் வடமொழித் திரிபு ; மனுவின்மரபின் மகனென்று பொருள். இங்கு-இவ்விடத்தில் எனவும், இப்பொழுது எனவுமாம். ஓகாரம் - வினாவகையால், இகழலாகாதென்னும் பொருளைத் தந்தது. நங்கை - பெண்பாற் சிறப்புப்பெயர். இது - அண்மைவிளியாதலின், இயல்பாய்நின்றது ; [நன் - பெயர் - 56.] மன்றலந்துளபம், கொன்றையஞ்சடை என்றவற்றில், அம்-சாரியையெனவுமாம். சடையானேடும் என்றதில், உம்மை-உயர்வுசிறப்பு ; அசைநிலையாகவுமாம். பாசுபதம் பெறத் தவநிலைநின்ற அருச்சுனனை அழிக்கத் துரியோதனனேவலாற் பன்றிவடிவாய்வந்த மூகாசுரன்மேல் வேடவடிவாய் வந்த சிவபெருமான் அம்பெய்ய, அதுபொழுதுமுன்னே அருச்சுனன் அம்பொன்று எய்து வராகத்தை விழுத்த, அதுகாரணமாக அவ்விருவர்க்கும் உண்டான போரிற் பரமசிவன் எதிரியது வில்நாணியை அறுக்க, பார்த்தன் அவ்விற் கழுந்தாற் கடவுளது முடியில் அடித்தானென்பது, கீழ்ச்சருக்கத்துக் கதை.

8.—சிறப்புக்கு அருச்சுனனேற்றவனேயென்று அமரர்கள் சொல்லி, அவனை வரவழைக்கக் காரணம் இருக்கவேணுமே யென இந்திரனை வினவல்.

ஆங்கதுகேட்டதேவரடிபணிந்தரியவேந்தே
பூங்கொடிதருவோடன்றுபுவியினிற்கவர்ந்தவீரற்
கோங்குமைத்துனனேயாகிலிதனின்மற்றுறுதியுண்டோ
வீங்கிவன்புகுந்தசூழ்ச்சிக்கேதுவுண்டாகுமென்றார்.

(இ - ள்.) ஆங்கு அது கேட்ட-அப்பொழுது (இந்திரன்சொன்ன) அவ்வார்த்தையைச் செவியுற்ற, தேவர்-தேவர்கள், அடிபணிந்து-(இந்திரனது)

பாதங்களை வணங்கி, (அவனை நோக்கி), 'அரிய வேந்தே-கிடைத்தற்கு அரிய எம்மரசனே! (இவ்வருச்சுனன்), பூ கொடி - மலரையுடைய கொடிபோன்ற சத்திய பாமைக்காக, தருவோடு - பாரிஜாததருவை வேரோடு, அன்று - முற்காலத்தில், புவியினில் கவர்ந்த வீரற்கு - (இங்கிருந்து) கவர்ந்து பூலோகத்துக் கொண்டுவைத்த வீரனாகிய கண்ணபிரானுக்கு, ஒங்குமைத்துனன் ஆகில் - சிறந்த மைத்துனனாவனானால், இதனில் மற்று உறுதி உண்டு ஒ - இதைக்காட்டிலும் விசேஷம் வேறுஉள்ளதோ? இவன் ஈங்கு புகுந்த சூழ்ச்சிக்கு ஏது உண்டாகும் - இவ்வருச்சுனன் இங்கேவந்த ஆலோசனைக்குக் காரணமொன்று உள்ளதாயிருக்குமே,' என்றார்-என்று வினவினார்கள்.

ஏழாம்வேற்றுமை யிடப்பொருளுணரநின்ற அங்கு இங்கு என்னும் இடைச்சொற்கள், சுட்டுநீண்டு ஆங்கு ஈங்கு எனநின்றன. வேந்து-அரசத்தன்மை; அரசனுக்குப் பண்பாகுபெயர்: ஏ - விளியுருபு. பூங்கொடி-பூக்களையுடைய கொடி என விரித்தால், இரண்டனுருபும் பயனும் உடன்தொக்க தொகையும், அழகாகிய கொடி என விரித்தால், பண்புத்தொகையுமாம்: இச்சொல் - சத்தியபாமைக்கு உவமவாகுபெயர். பூங்கொடி - காமவல்லி யென்ற பூங்கொடியை, தருவோடு-கற்பகத்தருவுடனே எனினுமாம். தரு-வடசொல். உறுதி - நன்மை: அதனைத் தருவதனை உறுதி என்றது, காரியவாகுபெயர். அமரர்வேந்தேஎன்றும் பாடம்.

கண்ணன் நரகாசுரனைச் சங்கரித்தபின்பு, அவனால் முன்னே கவர்ந்து போகப்பட்ட இந்திரன்தாயான அதிதிதேவியினது குண்டலங்களை அவளுக்குக் கொடுப்பதற்காகப் பெரிய திருவடியின்மேற் சத்தியபாமையையுட்காருவித்துத் தாமும் உட்கார்ந்துகொண்டு தேவலோகத்திற்குச் செல்ல, அங்கு இந்திராணி சத்தியபாமைக்குச் சகல உபசாரங்களைச் செய்தும் தேவர்க்கேயுரிய பாரிஜாதபுஷ்பம் மானிடப்பெண்ணாகிய இவளுக்குத் தகாதென்று சமர்ப்பிக்கவில்லை யாதலின், அவள் அதனைக்கண்டு விருப்புற்றவளாய்ச் சுவாமியைப்பார்த்து 'பிராணநாயகனே! இந்தப்பாரிஜாததருவைத் துவாரகைக்குக்கொண்டுபோகவேண்டும்' என்றதைக் கண்ணன் திருச்செவி சார்த்தி, உடனே அந்தவிருட்சத்தை வேரோடுபெயர்த்துப் பெரிய திருவடியின் திருத்தோளின்மேல் வைத்தருளி, இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப் போர்செய்த இந்திரனைச் சகலதேவசைனியங்களுடன் சங்கநாதத்தினாலே பங்கப்படுத்தி, பின்பு வணங்கிய அவனது பிரார்த்தனைப்படியே பாரிஜாதமரத்தைத் திருத்துவாரகைக்குக்கொண்டுவந்து புறங்கடைத்தோட்டத்தில் நாட்டியருளினாரென்பது கதை. (அ)

9.—அருச்சுனன் நிகழ்ந்ததுகூறி
எனக்கு இவ்வகைச்சிறப்புத் தகுமோ எனல்.

தேவர்தம்முரையுந்தேவிசெப்பியவுரையுங்கேட்டுத்
தாவரும்புரவித்திண்டேர்த்தனஞ்சயன்றொழுதுசொன்னான்
யாவரும்பரவுமுன்றனுடனொராசனத்திருந்து
மேவருமுடியுஞ்சூடப்பொறுக்குமோவிமலவென்றே.

(இ - ள்.) தேவி செப்பிய உரைஉம்-இந்திராணி சொன்ன (ஆக்ஷேப) வார்த்தையையும், தேவர்தம் உரைஉம் - (இந்திராதி) தேவர்கள் சொன்ன (சமாதான)வார்த்தையையும், தா வரும் புரவி திண் தேர் தனஞ்சயன்-தாவிப் பாய்ந்துவருகின்ற குதிரைகளைப் பூட்டிய வலிய தேரையுடைய அருச்சுனன், கேட்டு—, தொழுது-(இந்திரனைக்) கைகூப்பிஅஞ்சலிசெய்து,(அவனைநோக்கி), 'விமல - குற்றமற்றவனே ! யாவர்உம் பரவும் உன்தனுடன் - மூவுலகத்தாருந் துதிக்கின்ற உன்னுடனே, ஓர் ஆசனத்து இருந்து-(மனிதனொருவன்)ஏகாசனத்திலே வீற்றிருந்து, மேவரு முடிஉம் சூட-பொருந்திய (உன்) கிரீடத்தையுந் தரிக்க, பொறுக்கும்ஓ - தகுமோ ?' என்று சொன்னான்—; (எ - று.)

பொறுக்குமோ - இந்திராணி பொறுப்பளோ எனினுமாம்: செய்யுமென்முற்று, பெண்பாலிற் சென்றது; [நன் - வினை - 29.] செப்பிய, செப்பு - தெலுங்கினின்றும் வந்து வழங்கிய திசைச்சொல். தா - தாவு என்பதன்விகாரம்; தாவி என்பதன் விகாரமாகக் கொள்ளினுமாம். தாவரு, மேவரு என்றவற்றில், வரு - துணைவினை; இனி, தாவு அரு, மேவு அரு எனப் பிரித்து - தாவிச்செல்கின்ற அருமையான குதிரை, விரும்பிப்பெறுதற்கு அருமையான கிரீடம் என்று உரைப்பினும் பொருந்தும். தனஞ்சயன்-செல்வத்தைச்சயித்தவன்; தருமபுத்திரர் ராஜசூயயாகஞ் செய்யவேண்டிய பொழுது அவர்கட்டளையால் அருச்சுனன் வடதிசையிற்சென்று பல அரசர்களைவென்று அவர்கள்செல்வத்தைத் திறையாகக் கொணர்ந்ததனால், அவனுக்கு இப்பெயர் வந்தது. (பல்குனன், பார்த்தன், கிரீடி, சுவேதவாகனன், பீபத்ஸு, விஜயன், கிருஷ்ணன், சவ்வியசாசி, தனஞ்சயன், பாகசாஸனி, நரன் என்பன - இவனது மறுபெயர்களாம். (௯)

10.—இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: இந்திரன் அருச்சுனனிடத்து அவன்பெற்ற மேன்மையையெல்லாஞ்சொல்லி, தருவான தனக்கு ஒருவரம் தரவேணுமென்று கேட்டல்.

அவனுரைமகிழ்ந்துகேட்டாங்கமரருக்கதிபன்சொல்வான்
புவனமூன்றினுக்குமுன்னைப்போலொருவீரனுண்டோ
சிவனருள்படையும்பெற்றாய்செந்தழலளித்ததெய்வக்
கவனவாம்பரியுந்தேருங்கணையுங்கார்முகமும்பெற்றாய்.

(இ - ள்.) அவன் உரை - அவ்வருச்சுனனுடைய (விநயமான) வார்த்தையை, அமரருக்கு அதிபன்-தேவேந்திரன், கேட்டு—, மகிழ்ந்து-களித்து, ஆங்கு - அப்பொழுது, சொல்வான் - (சிலவார்த்தைகள்) சொல்லுபவனானான்; (என்னவென்றால்), புவனம் மூன்றினுக்குஉம் உன்னைபோல் ஒரு வீரன் உண்டுஓ - (சுவர்க்கம் மத்தியம் பாதாளம் என்னும்) மூன்றுலோகங்களிலும் உன்னைப்போல் ஒரு வீரன் உளனோ ? [இல்லை]; (நீ), சிவன் அருள் படைஉம் பெற்றாய் - பரமசிவன் கொடுத்தருளிய பாசுபதம்முதலிய ஆயுதங்களையும் பெற்றாய்; (அன்றியும்), செம் தழல் அளித்த - செந்நிறமுள்ள

அக்கினிதேவன் கொடுத்த, தெய்வம் - தெய்வத்தன்மையையுடைய, கவனம் வாம் பரிஉம் - விரைந்துசெல்லும்நடையையுடைய தாவுமியல்புள்ள குதிரைகளேயும், தேர்உம்-தேரையும், கணேஉம் - அம்புகளேயும், கார்முகம் உம் - (காண்டீவமென்னும்) வில்லேயும், பெற்றாய்—; (எ - று.)

மூன்றினுக்கு - உருபுமயக்கம்; உம்மை - இனத்தென்றறிபொருளில் வந்த முற்றும்மை. சிவன் என்பதற்கு - (தன் அடியார்களுக்கு) மங்களத்தைச் செய்பவனென்றுபொருள்; சிவம் - சுபம். தழலளித்த என்பதைத் தேர்முதலியவற்றுக்குங் கூட்டுக. கவனம் - கமநமென்னும் வடமொழித்திரிபு. வாவும் பரிஎன்றது, வாம்பரி எனச் செய்யுமெனெச்சம் ஈற்றுமிசை யுகரம்மெய்யுடன் கெட்டது ; கார்முகம் - வடசொல். (௧0)

11. பிரமனேமுதலாவெண்ணும்பேர்பெறுந்தேவரீந்த
வரமிகுமறையுங்கொற்றவான்பெரும்படையும்பெற்று
யருமறைமுறையேபார்க்கினமரர்மற்றுன்னினுண்டோ
திருவரும்வின்மைவீரசெப்புவதொன்றுகேளாய்.

(இ - ள்.) (மேலும்), பிரமனே முதல் ஆ எண்ணும்-பிரமன் முதலாக எண்ணப்படுகிற, பேர் பெறும் தேவர் - புகழைப் பெற்ற தேவர்கள், ஈந்த-கொடுத்தருளிய, வரம் மிகு மறைஉம் - வரங்களாக மிகுந்த மந்திரங்களேயும், கொற்றம் வான் பெரு படைஉம் - வெற்றியைத்தருகின்ற உயர்ந்த பெரிய ஆயுதங்களேயும், பெற்றாய்—; அரு மறை முறையே பார்க்கின் - (அறிவதற்கு) அருமையான வேதங்களிற் கூறிய முறையின்படியே நோக்குமிடத்து, உன்னின் மற்று அமரர் உண்டுஓ - உன்னேக்காட்டிலும் (சிறந்த) தேவர்கள் வேறு உளரோ ? [இல்லே]; திரு வரும் வின்மை வீர-ஜயலக்ஷ்மி வந்தடைதற்குக்காரணமான வில்லின் தொழிலில் வல்லமையுள்ளவனே ! செப்புவது ஒன்று கேளாய் - (யான்) சொல்வதொருவார்த்தையைக் கேட்பாயாக ; (எ - று.)—அது மேற்கவியிற் கூறுகின்றார்.

பிரமன் முதலிய தேவ ரீந்த மறையும் படையும் - பிரமாஸ்திரம் முதலியன. ஜாதியொன்றைக் கொண்டேயன்றிக் கல்வி குணம் முதலியவற்றால் ஒருவனே நன்குமதிக்கவேண்டுமென்பது நூற்றுணிபு என்பான், 'அருமறை முறையே பார்க்கி னமரர்மற்றுன்னினுண்டோ' என்றான். ஈந்த - இழிந்தோனேற்றற்கு வரும் வினே : [நன் - பொது - 56.] வரம் மிகு - சிறப்புமிக்க என்றுமாம். வின்மை - வில்லின்தன்மை. ஒன்று - எண்ணலளவையாகுபெயர். அருமறை - (அளவிடுவதற்கு) அருமையான வேதமென்றுமாம். (௧௧)

12. கற்றவர்கலேகள்யாவுங்கசடறக்கற்பித்தோர்கள்
பெற்றிடக்கொடுக்குஞ்செல்வமுண்டென்றுபெரியோர்சொல்வர்
கொற்றவவுனக்குநானுங்கூறுநற்குருவேயாகு
முற்றவாறெனக்குநீயுமொருவரந்தருகவென்றான்.

(இ - ள்.) 'கற்றவர் - (நல்லாசிரியர்பக்கல்) கல்வி கற்ற மாணுக்கர்கள், கலேகள் யாஉம் கசடு அற கற்பித்தோர்கள் பெற்றிட - கல்விகள் பலவற்

றையும் குற்றம் நீங்க(த் தமக்கு)க்கற்றுக்கொடுத்த அவ்வாசிரியர்கள் பெறும் படி, கொடுக்கும் - (அவர்களுக்குக்) கொடுக்கவேண்டிய, செல்வம் - குரு தட்சிணையாகியதொரு பொருள், உண்டு - உள்ளது', என்று—, பெரியோர் - (அறிவிற்) பெரியவர்கள், சொல்வர்—; (ஆதலால்), 'கொற்றவ - வெற்றியையுடையவனே! உனக்கு—, நானும்—, கூறும் நல் குருவ ஆகும்- (வில்வித்தையை) உபதேசித்த நல்ல ஆசிரியனாகிய தன்மையையுடையேன்: (ஆனதுபற்றி), உற்ற ஆறு - பொருந்திய முறைமைப்படியே, எனக்கும்—, நீயும்—, ஒரு வரம் தருக - (யான்) வேண்டுவதொருவரத்தைக் கொடுக்கக் கடவை,' என்றான் - என்று (இந்திரன்) கூறினான்; (எ - று.)

கீழ் ஐந்தாங்கவியில் 'அடற்படை நல்கி' என்றதனால், இந்திரன் அருச்சனனுக்குக் குருவாயினான். குரு என்னும் வடசொல்லுக்கு-(அஜ்ஞானமாகிய மனத்தின்) இருளைப்போக்குபவனென்றுபொருள்: கு - இருள், ரு - ஒழிப்பவன். கலை - கலா என்னும் வடமொழி, ஆ வீறு ஐயாயிற்று: [நன். பத. 20.] கல்விக்குக் குற்றமாவது - ஐயந்திரிபுகள்; ஐயமாவது - இதற்குப் பொருள் இதுவோ அதுவோ என்று பலபடக்கருதும் சந்தேகம்: திரிபாவது - ஒன்றன்பொருளை வேறொன்றாகத் துணியும் விபரீதம். செல்வம் - செல்வோம் [எவரிடத்தும் நிலைத்திராமல் நீங்கிப்போயவிடுவோம்] என்பதுபற்றி வந்த பெயரென்பர். (கஉ)

13.—தேவர்கட்கு மானுடர் செய்வதொன்றில்லையாயினும் மனத்திலுள்ளதைக் கூறுக என்று அருச்சுனன் வினவல்.

தந்தைசொன்மகிழ்ந்துகேட்டுத்தனுவினுக்கொருவனான
மைந்தனுந்தேவர்க்கையமானுடர்செய்வதுண்டோ
சிந்தையினிகழ்ந்ததொன்றுசெப்புகென்றவனுஞ்செப்ப
விந்திரன்றானுமீண்டுமின்னனபகரலுற்றான்.

(இ - ள்.) தந்தை சொல் - பிதாவாகிய இந்திரனுடைய வார்த்தையை, தனுவினுக்கு ஒருவன் ஆன மைந்தன்உம் - வில்வித்தையில் ஒப்பற்றவனான குமாரனாகிய அருச்சுனனும், கேட்டு—, மகிழ்ந்து—, 'ஐய - தந்தையே! தேவர்க்கு மானுடர் செய்வது உண்டுஒ - (மனிதர்களுக்குத் தேவர்கள் வரங்கொடுப்பது மரபேயன்றித்) தேவர்களுக்கு மனிதர்கள் செய்யக்கடவதொரு உதவி உள்ளதோ? [இல்லையன்றோ?]; (ஆயினும்), சிந்தையில் நிகழ்ந்தது ஒன்று செப்புக - (உன்) மனத்திற்கருதிய ஒரு காரியத்தைச் சொல்லுவாயாக', என்று—, அவன்உம் - அவ்வருச்சுனனும், செப்ப - சொல்ல,—இந்திரன் தான்உம் - இந்திரனும், மீண்டுஉம் - மறுபடியும், இன்னன - இவ்வார்த்தைகளை, பகரல் உற்றான் - சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அவை மேல் மூன்றுகவிகளாற் கூறுகின்றார்.

தனு - தநுஸ் என்னும் வடசொல்லின்விகாரம். தனுவினுக்கு - உருபுமயக்கம். செப்புகவென்னும் வியங்கோள்வினைமுற்றின் ஈற்றுஅகரந்தொக்கது; வியங்கோளுக்கு இவ்விகாரம் பெரும்பாலுஞ் செய்யுட்களில் வரும்.

14.—இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர் : நிவாதகவசரின் சிறப்பைக்கூறி அவர்களையழிக்குமாறு தேவேந்திரன் வரம்வேண்டுதலைத் தெரிவிக்கும்.

*ஆழிநீரழுவத்தென்றுமுறைபவராழியானு*
*மூழியினாதன்றானுமுருப்பினுமுலப்பிலாதோ*
*ரேழிருபுவனத்துள்ளோரியாரையுமுதுகுகாண்போர்*
*கோழியான்றனக்குந்தோலாவவுணர்முக்கோடியுண்டால்.*

(இ - ள்.) ஆழி நீர் அழுவத்து - கடல்நீரி னிடையிலேயுள்ள (தோயமாபுரமென்னும்) நாட்டிலே, என்றும்-எப்பொழுதும், உறைபவர்-வாசஞ்செய்பவர்களும், ஆழியான்உம் - (அசுரர்களை அழித்தலில்வல்ல) சக்கராயுதத்தையுடைய திருமாலும், ஊழியின் நாதன் தான்உம்-(எல்லோருடைய) காலத்துக்குந் தலைவனாகிய யமனும், உருப்பின்உம் - கோபித்து அழிக்கத்தொடங்கினாலும், உலப்பு இலாதோர் - அழிதலில்லாதவர்களும், எழ் இரு புவனத்து உள்ளோர் யாரைஉம் - பதினான்கு உலகங்களிலுள்ளவரெல்லோரையும், முதுகு காண்போர் - (போரிற்) புறங்காண்பவர்களுமாகிய, கோழியான் தனக்குஉம் தோலா அவுணர்-(தேவசேனாபதியாகிய) கோழிக்கொடியையுடைய சுப்பிரமணியக்கடவுளுக்குந் தோல்வியடையாத அசுரர்கள், மு கோடி - மூன்றுகோடி பேர், உண்டு - உளர் ; (எ - று)

எல்லாப் பிராணிகளுக்கும் அவரவர் வினைக்குஏற்ப ஆயுட்காலத்தை வரையறைசெய்துமுடித்தல்பற்றி யமனுக்குக் காலனென்று ஒரு பெயராதலால், இதன் பொருள்பற்றி, 'ஊழியினாதன்' என்றார். இனி, சங்காரக்கடவுளாகிய உருத்திரமூர்த்தி என்றுஉரைத்தால், மேற் பதினொருங்கவியில் "கற்றவர் வணக்கினாற்குங்கடக்கரும் வலியின் மிக்கோர்" என்பதனோடு கூறியது கூறலாமென அறிக. ஆழி என்னுஞ் சொல்லுக்கு - கடலைக்குறிக்கும்போது, ஆழ்ந்துள்ளது அல்லது (உலகங்களைப் பிரளயகாலத்தில்) அழிப்பது என்று பொருள்; சக்கரத்தைக்குறிக்கும்போது, வட்டவடிவாகவுள்ளது அல்லது (பகைவர்களை) அழிப்பது என்று பொருள். ஆழி - ஆழ்ந்திருப்பது என்னும் பொருளில், ஆழ் - பகுதி, இ - கருத்தாப்பொருள் விகுதி ; வட்டவடிவுடையதென்னும்பொருளிற் பண்பாகுபெயர் ; அழிப்பதென்னும் பொருளிற் கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்து கெட்டு முதல் நீண்ட பெயர். அழுவம் - நீர்ப்பரப்பு : இங்கே, கடலிடைநாடு. திருமாலினது சக்கரத்துக்குச் சுதரிசனமென்று பெயர். உம்மைகள் ஆறனுள், முதலாவதும் ஐந்தாவதும் - முற்றுப்பொருளன ; மற்றவை - உயர்வுசிறப்பு. இரண்டாவதும், மூன்றாவதும் - உயர்வு சிறப்புப்பொருளோடு எண்ணுப்பொருளையும் உடன்உணர்த்தின. முதுகுகாணுதல் - புறங்காட்டிப் பின்னிடைந்தோடும்படி வெல்லுதல். (கச)

15. *தவாதபோர்வலியின்மிக்கதவத்தினர்சாபம்வல்லோர்*
*சுவாதமேவீசியெல்லாவுலகையுந்துளக்குகிற்போர்*

விவாதமேவிளைக்குஞ்சொல்லர்வெகுளியேவிளையுநெஞ்சர்
நிவாதகவசத்தரென்னும்பெயருடைக்கொடியநீசர்.

(இ - ள்.) நிவாதகவசத்தர் என்னும் பெயர் உடை - நிவாதகவசர் என்னும் பேரை யுடைய, கொடிய - கொடுந்தன்மையுள்ள, நீசர் - கீழோராகிய அவ்வசுரர்கள்,—தவாத போர் வலியின்-அழியாத யுத்தசாமர்த்தியத்துடனே, மிக்க தவத்தினர் - மிகுந்த தவவலிமையுடையவர்கள் ; சாபம் வல்லோர் - வில்வித்தையில் வல்லவர்கள் ; சுவாதமே வீசி - மூச்சுக்காற்றையே பெரிதாகவிட்டு, எல்லா உலகையும் - உலகங்களெல்லாவற்றையும், துளக்குகிற்போர் - நடுங்கச்செய்யவல்லவர்கள் ; விவாதமே விளைக்கும் சொல்லர் - போரையே யுண்டாக்குகின்ற கொடுஞ்சொற்களை யுடையவர்கள் ; வெகுளியே விளையும் நெஞ்சர் - கோபமே மேன்மேலுண்டாகின்ற மனத்தையுடையவர்கள் ; (எ - று.)

தவாத என்னும் பெயரெச்சத்தில், தபு என்பதன் மரூஉவாகிய தவு - பகுதி. போர்வலி - போரில்வல்லமை. சுவாதம் - ஶ்வாஸம் ; வடசொல். வாதம் - சொற்கலகம், தருக்கம், வழக்காடுதல். (கரு)

16. மற்றவரெனக்குநாளும்வழிப்பகையாகிநிற்போர்
கற்றவர்வணக்கினுற்குங்கடக்கரும்வலியின்மிக்கோர்
செற்றிடநின்னையன்றிச்செகத்தினிற்சிலர்வேறுண்டோ
வெற்றிவெஞ்சிலைகொள்வீரவிவ்வரம்வேண்டிற்றென்ருன்.

(இ - ள்.) மற்று - மேலும், அவர் - அவ்வசுரர்கள, எனக்கு—, நாள் உம்- தினந்தோறும், வழி பகை ஆகி நிற்போர்-பரம்பரையாக (த்தொன்றுதொட்டு)ப் பகைவர்களாய் நிற்பவர்கள்; (அன்றியும்), கல் தவர் வணக்கினாற்கு உம் கடக்க அரும் வலியின் மிக்கோர் - மகாமேருமலையைவில்லாக வளைத்துக் கையிற்கொண்ட (அழித்தற்றொழிற்கடவுளாகிய) சிவபிரானுக்கும் வெல்லுதற்கு அருமையான வலிமையில் மிகுந்தவர்கள்; (அத்தன்மையரானவர்களை), செற்றிட - அழித்துவிடுதற்கு, நின்னை அன்றி - உன்னையேயல்லாமல், செகத்தினில் - உலகத்தில், வேறு சிலர் உண்டுஓ - வேறாகிய சிலபேர் (வல்லவர்) உளரோ ? [எவருமில்லை]; வெற்றி வெம் சிலை கொள் வீர - ஜயத்தைத் தருகின்ற(பகைவர்க்குப்) பயங்கரமான காண்டீவவில்லைக் (கையிலே) கொண்ட வீரனே! இ வரம் வேண்டிற்று -(அவ்வசுரர்களைநாசஞ்செய்தலாகிய) இந்தவரமே (யான் உன்னைத் தரும்படி) வேண்டியது, என்ருன் - என்று (இந்திரன்) கூறினன் ; (எ - று.)

மற்று - வினைமாற்று ; அசையாகவுங் கொள்ளலாம் நாளும், உம்மை- தொறுப்பொருளது. கல் - அதன்மயமான மலைக்குக் கருவியாகுபெயர். கடக்கரு-வினையெச்சவீறு, தொகுத்தல். "ஈறுபோதல்" [நன் - பத - கூ.] என்ற சூலேசினல், அருமையென்னும் பண்புப்பெயர் ஈற்று ஐகாரம்மாத்திரங் கெட்டு 'அரும்' என நின்றது. கற்றவர் வணக்கினற்கு என்பதற்கு.

படித்தவர் யாவரையும் (தமதுமுற்றுணர்வினாற்) கீழ்ப்படுத்திய கடவுளுக்கு என்றும் உரைக்கலாம்.

மேருகிரி பரமசிவனுக்கு வில்லானது, திரிபுரசங்காரகாலத்தில்; தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி, தாரகாக்ஷன், கமலாக்ஷன் என்னும் மூவரும் மிக்க தவஞ்செய்து மயனென்பவனாற் சுவர்க்க மத்திய பாதாள மென்னும் மூன்றிடத்திலும் முறையே பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களால் அரணவகுக்கப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந் தன்மையையுடைய மூன்றுபட்டணங்களைப் பெற்று மற்றும்பல அசுரர்களோடும் அந்நகரங்களுடனே தாம்நினைத்த இடங்களிற் பறந்து சென்று பல இடங்களையும் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால், சிவபெருமான், பூமியைத் தேராகவும், சந்திரசூரியர்களைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், மகாமேருவை வில்லாகவும், ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத்தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும்அமைத்துக்கொண்டு,யுத்தசன்னத்தராகிச்சென்று போர்செய்ய யத்தனித்து, புன்சிரிப்புச்செய்து அசுரரனைவரையும் பட்டணங்களோடு எரித்தருளின ரென்பது, புராணகதை. (கசு)

17.—அருச்சுனன் இந்திரன் வேண்டுகோட்கு உடன்படுதல்.

செருவென்றமாற்றங்கேட்டுச்சிந்தையினுவகைபொங்க
மருவொன்றுமலங்கன்மார்பும்வாகுபூதரமும்பூரித்
துருவொன்றுமதனையொப்பானொருப்பட்டானுரைப்பதென்னோ
திருவொன்றும்வண்மைவீரன்மறுக்குமோதேவர்கேட்டால்.

(இ - ள்.) உரு ஒன்றும் மதனை ஒப்பான் - ரூபம் பொருந்திய மன்மதனை ஒப்பவனாகிய அருச்சுனன், செரு என்ற மாற்றம் கேட்டு-போர் என்ற வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில், சிந்தையின் உவகை பொங்க-மனத்திற் களிப்பு மிக, மரு ஒன்றும் அலங்கல் - வாசனைபொருந்திய பூமாலையையுடைய, மார்புஉம் - தனதுமார்பும், வாகு பூதரம்உம் - மலைகள்போன்ற தோள்களும், பூரித்து-பருக்கப்பெற்று, ஒருப்பட்டான்-(அவ்வசுரநிரஸநத்திற்குச்) சம்மதித்தான்; உரைப்பது என்னோ-சொல்லவேண்டுவதென்ன? திரு ஒன்றும் - ஜயலக்ஷ்மி கூடியிருக்கப்பெற்ற, வண்மை - ஈகைக்குணத்தையுடைய, வீரன் - மகாவீரனாகஉள்ளவன், தேவர் கேட்டால் - (தன்னினுஞ் சிறந்த) தேவர்கள் (வரமொன்று) வேண்டினால், மறுக்குமோ - (மாட்டேனென்று) தடுத்துப்பேசுவானோ? [பேசானென்றபடி]; (எ - று.)

சுத்தவீரனாதலால், யுத்தமென்றவளவில் மனத்தில் மகிழ்ச்சி கிளர்ந்தது. மார்புந் தோளும் பூரித்தல், மகிழ்ச்சிபற்றிய மெய்ப்பாடு. 'மருவொன்றுமலங்கல்' என்பதை வாகுவுக்குங் கூட்டுக. வாகு - பாஹு என்னும் வடமொழித் திரிபு. வாகு பூதரம்-முன்பின்னாகத்தொக்கு வந்த உவமத்தொகை;

தோள்களாகிய மலைகள் என உருவகமாக்கி உரைத்தற்கு இங்கே இயை பின்று. தோளுக்கு மலை உவமை - பருமையும், படைக்கலங்களால் அழித்தற்கருமையும, உயர்வும், வலிமையும்பற்றி. (மேலுங்கீழும்வளர்ந்துநின்று) பூமியைத்தாங்குவது பற்றி, பூதரம்என்று மலைக்குக் காரணப்பெயர். உரு - ரூபமென்னும் வடமொழியின் விகாரம். 'உருவொன்றும் மதன்' என்றது - பரமசிவனது நெற்றிக்கண்ணின் நெருப்பினால் உடம்பு எரிக்கப்பட்டு அழிந்து அனங்கனாதற்குமுன்னே அங்கத்தோடுகூடியுள்ள மன்மதனை: பின்பு அங்கத்தோடுகூடிவந்த மன்மத னென்றால், இல்பொருளுவமை. இனி, உருஒன்றும் மதனைஒப்பான்என்பதற்கு - ரூபமொன்றுமாத்திரத்தில் மன்மதனையொப்பவன்என்றுஉரைத்து, வில்லின்தொழிலில்அவனினும் மிக்கவனெனக் கருத்துக்கொள்ளுதலும் அமையும். மதன்-மதநன் அல்லது முந்மதன் என்பதன் விகாரம். ஒருப்படுதல் - உடன்படுதல். வண்மையாவது - ஏற்றார்க்கு மாற்றாது வரையறையின்றிக் கொடுத்தல். அருச்சுனன் அசுரர்களை அழித்தற்கு அமைந்தான் என்னும் பொருளை 'திருவொன்றும் வண்மை வீரன் மறுக்குமோ தேவர் கேட்டால்' என்பது சமர்த்தித்து நிற்றலால், தொடர்நிலைச்செய்யுட்குறியணி: சிறப்புப்பொருளும் பொதுப்பொருளும் ஆகாததால், இது - வேற்றுப்பொருள்வைப்பணி யன்று. ஒரு காலத்தில் திருக்கைலாயத்திற் பரமசிவனார் சனகர் முதலிய நால்வர்க்கு யோகநிலைமையை உணர்த்துதலின் நிமித்தம் தாம் யோகஞ்செய்துகொண்டிருக்கையிற் பிரமனேவலால் மலரம்புகளை எய்து தமதுதவத்தைக்கெடுக்கலுற்ற மன்மதனைச் சினந்து நெற்றிக்கண்ணைவிழித்து அதன் நெருப்புக்கு இரையாய் உடம்பு எரிந்து சாம்பராய்ப்போம்படி செய்தனரென்பதும்; உடனே மன்மதன்மனைவியாகிய ரதிதேவி தன் கணவன் தகிக்கப்பட்டதனால் மிகவருந்திச் சிவபிரானை அடைந்து பிரார்த்திக்க, அவர் அவளுக்கு மாத்திரம் ரூபமுடையவனாகவும் மற்றையோர்க்கு ரூபமில்லாதவனாகவும் இருக்கும்படி அருள்செய்தனரென்பதும் புராணகதைகள். (கள)

18.—இதுவும், மேற்கவியும் - குளகம்: அருச்சுனனுக்குப் போர்க்கு வேண்டுவன தந்து இந்திரன் விடைகொடுத்துப் போருதற்கு அனுப்புதலைக் கூறும்.

காற்றெனக்கடியவேகக்கனலெனக்கொடியவென்று
மேற்றிசையெல்லையெல்லாம்வீதிபோயொல்லைமீள்வ
கூற்றமுமுகிலுமுட்கக்குமுறும்வெங்குரலுமென்மேற்
சீற்றமுந்திறலுமிக்கதிக்கதிசெலாததூய.

(இ - ள்.) காற்று என கடிய - காற்றுப்போல வேகமுள்ளவையும், வேகம் கனல் என கொடிய - உக்கிரமான அக்கினிபோல(ப் பகைவர்களை யழிக்குங்) கொடுந்தன்மையுள்ளவையும், என்றுஉம் - எப்பொழுதும், மேல் திசை எல்லை எல்லாம் - ஆகாயமாகிய திக்கின் இடம்முழுவதிலும், வீதி போய் - ஒழுங்காகச்சென்று, ஒல்லை - விரைவில், மீள்வ - திரும்புவனவும், கூற்றம்உம் முகில்உம் உட்க குமுறும் வெம் குரல்உம் - (யாவர்க்கும் பயங்

காணுன) யமனும் (இடியிடிக்கின்ற) மேகமும் அஞ்சும்படி கனைக்கின்ற கொடிய கண்டத்தொனியிலும், மெல்மேல் சீற்றம்உம்-மேலேமேலே அதிகப் படுகின்ற கோபத்திலும், திறல்உம் - பலத்திலும், மிக்க-மிகுந்துள்ளவையும், தீ கதி செலாத - கெட்டநடை நடவாதனவும், தூய - தூய்மையுள்ளவையுமாகிய,—(எ - று.)—'பரி' என மேலேக்கவியோடு இயையும்.

கடிய, கொடிய, மீள்வ, மிக்க, செலாத, தூய என்னும் அன்சாரியை பெறுதபலவின்பால்வினையாலணையும்பெயர்கள், 'பரி' என்னும் பால் பகா அஃறிணைப்பெயருக்கு விசேஷணமாம். வென்று எனப் பிரித்து - (போமிடங்களிலெல்லாம்) வெற்றிகொண்டு எனவுமாம். பத்துத் திக்குக் களுள் ஒன்றுதலால், வானத்தை 'மேற்றிசை' என்றார். மேற்றிசை எல்லை எல்லாம் வீதி போய் - (இந்திரன்திக்காகிய கிழக்கிலிருந்து) மேற்குத்திக்கினிடம் முழுவதிலும் ஆகாயவீதியிலே நேராக ஓடி என்றும் உரைக்கலாம். ஒல்லே - விரைவுப்பொருள் குறிப்பதோர் இடைச் சொல்; வல்லே, வல்லே என்பனவும் இவ்வாறே. கூற்றம், அம்-சாரியை. கூற்று - (பிராணிகளின் உடம்பையும் உயிரையும் வேறுபிரித்துக்) கூறுபடுத்துங் கடவுள்; அன்றிக்கே, (பொதுப்படச்செல்லுங் காலத்தைப் பிராணிகளுக்கேற்பக்) கூறுக்குபவ னென்றுமாம். 'தேவர்களை உயர்திணை அஃறிணை என்னும் இருதிணைகளாலுங் கூறலாம்' ஆதலின், 'கூற்றம்' என அஃறிணையாகக்கூறினர். உத்தம அச்சுவலக்ஷணம் முழுவதும் அமைந்தன வென்பார், 'தூய' என்றார். (கஅ)

19\. ஆயிரப்பத்துவெம்போரடற்பரிபூண்டதேரு
மாயிருங்கலையின்மிக்கமாதலிதனையுநல்கிக்
காயிருங்கிரணச்செம்பொற்கவசமுங்கொடுத்துப்பின்னர்
வேயிருந்தெரியலாற்குச்சுரபதிவிடையுமீந்தான்.

(இ - ள்.) வெம் போர் - கொடுமையான யுத்தத்திற்கு உரிய, அடல் - வலிமையையுடைய, ஆயிரம் பத்து பரி - பதினாயிரம் குதிரைகளை, பூண்ட - பூட்டியுள்ள, தேர்உம் - (தனது) இரதத்தையும், மா இரு கலையில் மிக்க - மிகவும் பெரிய குதிரைநூலுணர்ச்சியிற் சிறந்த, மாதலிதனைஉம் - மாதலி என்னும் (தனது) தேர்ப்பாகனையும், நல்கி-கொடுத்து,—காய் இரு கிரணம்- சுவலிக்கின்ற மிக்க ஒளியினையுடைய, செம் பொன் கவசம்உம் - சிவந்த பொன்னினாலாகியதொரு கவசத்தையும், கொடுத்து—, பின்னர் - பின்பு, சுரபதி - தேவேந்திரன், வேய் இரு தெரியலாற்கு - அணிந்த பெரிய (கற்பகப் பூ) மாலையையுடைய அருச்சுனனுக்கு, விடைஉம் ஈந்தான்-(போருக்குச் செல்லுதற்கு) உத்தரவையுங் கொடுத்தான்; (எ - று.)

ஆயிரப்பத்து-பண்புத்தொகை. பின்னர், அர்-சாரியை. "விவ்விர வாத வாசத் தாமமும் விளைழந்து சூட்டி" என்று கீழ்க்கூறியதற்கேற்ப, 'வேயிருந்தெரியலான்' என்றார்; அன்றியும், போருக்கு உரிய தும்பைப்பூமாலையை இப்பொழுது அணிந்துள்ளவ னென்றுமாம். தெரியல் - விளங்குவது;

மாலைக்கு காரணக்குறி. கலை-குதிரை யோட்டுங்கல்வி. பின்னர்ச்சுரபதி நல் கிக் கொடுத்து ஈந்தா னென்க. கிரணரத்நகவசம் என்றும் பாடம். (கக)

20.—விடைபெற்ற அருச்சுனன் போர்க்கோலம் புனைதல்.

விடையெனத்தொழுதுபோந்துவெஞ்சிலைவினோதவீரன்
சுடுசரத்தூணிகொற்றப்புயத்தினிற்றுதையத்தூக்கி
யிடுமணிக்கவசமெய்யிலெழிலுறப்புனைந்துதன்னைத்
திடமுடைச்சிங்கமன்னான்செருத்தொழிற்கோலஞ்செய்தான்.

(இ - ள்.) திடம் உடை சிங்கம் அன்னான் - வலிமையையுடைய ஆண் சிங்கத்தை யொத்தவனாகிய, வெம் சிலை விநோதம் வீரன்-கொடிய வில்லின் தொழிலைச்செய்ய பொழுதுபோக்காகவுடைய வீரனாகிய அருச்சுனன், விடை என - (எனக்கு) விடையருள்வாய் என்று (இந்திரனை நோக்கிச்) சொல்லி, தொழுது - அஞ்சலிசெய்து, போந்து - புறப்பட்டு [சபையை விட்டு வெளி வந்து], சுடு சரம் தூணி - (பகைவர்களை) அழிக்கின்ற அம்பு களையுடைய தூணீரங்களை, கொற்றம் புயத்தினில் - வெற்றியையுடைய தோள்களிலே, துதைய தூக்கி - அழுந்தக் கட்டி,—இடு மணி கவசம் - பதித்துள்ள இரத்தினங்களையுடைய கவசத்தை, மெய்யில் - உடம்பிலே, எழில் உற - அழகுமிக, புனைந்து - தரித்து, (இவ்வாறு), தன்னை—,செரு தொழில் கோலம் செய்தான் - போர்த்தொழிலுக்கு உரிய அலங்காரத் தைச் செய்துகொண்டான்; (எ - று.)

விடை யென என்பதற்கு - (இந்திரன்) விடையளிக்கப்பட்ட தென்று சொல்ல என்று உரைப்பாருமுளர். இனி, இளவெருதுபோலப் போந்து என்று உரைப்பினும் அமையும்; இவ்வுரைக்கு, விடை - வ்ருஷம் என்னும் வடமொழித்திரிபு. சுடு சரம் - நெருப்பில்வைத்துக் காய்ச்சி வடித்துக் கூர்செய்த அம்பு என்று மாம். தூணி - வடசொற்றிரிபு; பாணப்புட்டில். தூக்கி - தொங்கவிட்டு. திடம் - த்ருடம் என்னும் வடமொழித் திரிபு. சிங்கம் நடைவலிமை நோக்குத் தைரிய காம்பீரியங்களால் உவமை. அருச் சுனன் சவ்வியசாசியாதலால், 'தூணீரங்களைத்தோள்களிற்கட்டி' என்றது.

21.—அருச்சுனன் நிவாதகவசரைக்குறித்துவினவ, மாதலி அவர்களியல்பைக் கூறலுறுதல்.

மோதுபோர்தனக்குவேண்டுமுரட்படைபலவுங்கொள்ளாக்
கோதைவிற்றடக்கைவீரன்கொடிமணித்தேர்மேற்கொண்டு
மாதலிப்பெயராயந்தவஞ்சரெத்திசையரென்றான்
சூதனுமவனுக்கன்னோரியல்பெலாந்தோன்றச்சொல்வான்.

(இ - ள்.) கோதை - நாணியையுடைய, வில் - காண்டீவத்தை யேந் திய, தட - பெரிய, கை - கையையுடைய, வீரன் - அருச்சுனன்,—மோது போர்தனக்கு வேண்டும் - (பகைவர்களைத்) தாக்குகின்ற யுத்தத்திற்கு அவ சியமான, முரண் படை பலஉம் - வலிமையையுடைய ஆயுதங்கள் பலவற் றையும், கொள்ளா-எடுத்துக்கொண்டு,—கொடி மணி தேர் மேல் கொண்டு.

துவசத்தையும் மணிகளையுமுடைய (அவ்விந்திரனது) தேரின்மேலேறிக் கொண்டு, (சாரதியை நோக்கி), 'மாதலி பெயராய் - மாதலியென்னும் பேருள்ளவனே! அந்த வஞ்சர் - வஞ்சனையையுடைய அந்த நிவாதகவசர்கள், எ திசையர் - எந்தத்திக்கிலே யுள்ளவர்கள்?' என்றான் - என்று வினவினான்; சூதன்உம் - அத்தேர்ப்பாகனும், அவனுக்கு - அவ்வருச்சுனனுக்கு, அன்னோர் இயல்பு எலாம் - அவ்வசுரர்களுடைய (இருப்பிடம் முதலிய) தன்மைகளையெல்லாம், தோன்ற - விளங்க, சொல்வான் - சொல்வானானான்; (எ - று.)—அது மேற்கவியிற் காண்க.

கொள்ளா - உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சம். கோதை - கைக்கவசமுமாம்; "பூப்புனை மாலையும் மாலை புனை மாதரும், தோற்புனை வின்னாண் டொடர்கைக் கட்டியுங், கோச்சேரன்பெயர் மயிர் காற்றுங்கோதை" என்பது திவாகரமாதலின். மணி - அடிக்கும்மணி; கண்டை: இது - அழகிற்காகவும், வெற்றியைவிளக்குதற்காகவுந் தேரிற் கட்டப்படும்; இனி மணிதேர் - இரத்தினங்களைப்பதித்த தேர் எனவும், உறுதியமைந்த தேர் எனவுமாம். பெயராய் - பெயரான் என்பது ஈறு திரிந்த விளி. சூதன் - ஸூதன்; வடசொல். எத்திசைக்கேயென்றான் என்று பிரதிபேதம். (உக)

22.—நிவாதகவசரின் இயல்பைக்கூறிவிட்டு மாதலி தேர்தூண்டுதல்.

தோயமாபுரமென்றுண்டுதொடுகடலழுவத்தொன்று
மாயமாபுரமேயொக்குமப்புரமதனில்வாழ்வோர்
தீயவரென்றுசெப்பிச்சித்திரசேனன்றன்னைத்
தூயநன்னெறிகாட்டென்றுசூதன்றேர்தூண்டுமெல்லை.

இதுவும், மேற்கவியும் - ஒரு தொடர்.

(இ - ள்.) 'தொடு கடல் அழுவத்து - (சகரசக்கரவர்த்தியினது புத்திரர்களால்) தோண்டப்பட்ட கீழ்கடலினது பரப்பிலே, தோயமாபுரம் என்று - (நீரிடையேயுள்ளபெருநகரமாதலால்) தோயமாபுரமென்று பேர் கூறப்பட்டு, ஒன்று - ஒரு நகரம், உண்டு - உளது; (அது), மாயம் மா புரம் ஏ ஒக்கும் - வஞ்சனையமைந்ததொரு பெரிய பட்டணத்தையே ஒக்கும்; அ புரம்அதனில் வாழ்வோர் - அந்நகரத்தில் வாழ்பவர்கள், தீயவர் - கொடுந்தன்மையுடையவர்கள்,' என்று செப்பி - என்று (அருச்சுனனுக்குச்) சொல்லி, சித்திரசேனன் தன்னை - சித்திரசேனனென்பானொரு கந்தருவனைநோக்கி, தூய நல் நெறி காட்டு என்று - குற்றமில்லாத நல்ல வழியைக் காண்பிப்பா யென்றுஞ்சொல்லி, சூதன் - மாதலி, தேர் தூண்டும் எல்லை-தேரைச் செலுத்துமளவில்,—(எ-று.)—"மகளிரெல்லாம் நக்கார்" என மேற்கவியில் முடியும்.

சூரியகுலத்தில் தோன்றிய சகரனென்னும் அரசன் தனது மூத்தமனைவியின் மகனும் மிகுந்த துர்க்குணமுடையவனு மாகிய அஸமஞ்சனென்பவனைக் காட்டுக்குத்துரத்திவிட்டு அவன்மகனாகிய அம்சுமான் என்பவனோடும் தனது இளையமனைவியின் மைந்தர் அறுபதினாயிரவரோடும் அரசாண்டு

வருகையில் அசுவமேதயாகஞ்செய்யத்தொடங்கிப் பூமிப்பிரதக்ஷிணத்தின் பொருட்டு நல்லிலக்கணமமைந்தவொருகுதிரையைச் செலுத்த, அதனை இந்திரன் மாயையாற்கவர்ந்து பாதாளலோகத்தில் தவஞ்செய்துகொண்டிருந்த கபிலமகாமுனிவரது புறத்திலே ஒளித்துவைக்க, அது தேடும்பொருட்டுச் சென்ற சகரகுமாரர்கள் மண்ணுலகத்தும் விண்ணுலகத்துங்காணுமற் கலங்கிப் பூமியை வடகீழ்த்திசையில் நூறுயோசனை விஸ்தாரம் தமது கைந்நகங்களால் தோண்டிப் பள்ளமாக்கி அதன்வழியாய்ப் பாதாளஞ்சென்றனரென்றும், அவர்கள் தோண்டிய அப்பள்ளமே நீரால்நிறைந்து கடலாகிச் சாகரமெனப் பெயர்பெற்றதென்றுங் கூறப்படுங் கதையை யுட்கொண்டு, 'தொடுகடல்' எனப்பட்டது. சித்திரசேனன் - அருச்சுனனுக்குத் தேவலோகத்திலே சங்கீதவித்தை பயிற்றுவித்த ஆசிரியன். (உஉ)

23.—'தேவர்களால் வெல்லமுடியாத அசுரரை ஒருநரன் வெல்லவல்லனே?' என்று வானவமகளிர் சிரித்தல்.

மொய்திறற்கடவுளோர்முப்பத்துமுக்கோடியாலுஞ்
செய்தமர்தொலைக்கவொண்ணுத்தெயித்தியர்சேனைதன்னை
யெய்தொருமனிதன்வெல்வதேழைமைத்தென்றுநக்கார்
மைதவழ்கருங்கட்செவ்வாய்வானவமகளிரெல்லாம்.

(இ - ள்.) 'மொய் திறல் - மிகுந்த வலிமையையுடைய, கடவுளோர் முப்பத்துமுக்கோடியால்உம் - முப்பத்துமுக்கோடிதேவர்களாலும், அமர் செய்து தொலைக்க ஒண்ணு - போர்செய்து அழிக்கமுடியாத, தெயித்தியர் சேனைதன்னை - அசுரர்களுடையசேனையை, ஒரு மனிதன்-(சேனுபலமில்லாமல் தனியனுன) மனிதனொருவன், எய்து - அம்பெய்து, வெல்வது - சயிக்க முயல்வது, ஏழைமைத்து - அறிவில்லாமையையுடையது,' என்று - என்று சொல்லி, மை தவழ் கரு கண்-மைபொருந்திய (இயற்கையிற்) கருமையான கண்களையும், செவ் வாய் - சிவந்த வாயையுமுடைய, வானவர் மகளிர் எல்லாம் - தேவமாதர்களெல்லாரும், நக்கார் - சிரித்தார்கள்; (எ - று.)

முப்பத்துமுக்கோடி என்னுந் தொடரில், இடையது - உம்மைத்தொகையும், முதலதும் ஈற்றதும் - பண்புத்தொகையுமாம்; மூன்றாகிய பத்தும், அதனோடுகூடிய மூன்று மாகிய கோடி யென்க. முப்பத்து முக்கோடியாவார் - ஆதித்தியர் பன்னிருவரும், உருத்திரர் பதினொருவரும், வசுக்கள் எண்மரும், அசுவினீதேவர் இருவரும் ஆகிய முப்பத்துமூவரையுந் தலைவராகக்கொண்டு அத்தனை கோடியாக வுள்ளவர்கள். தெயித்தியர் - தைத்யர் என்பதன் விகாரம்: (காசியபமுனிவரது மனைவிமார்களுள்) திதி என்பவளது மக்களென்று பொருள். ஏழைமைத்து - ஒன்றன்பாற் குறிப்புமுற்று. மை - அஞ்சனம். கருங்கட் செவ்வாய்-முரண்டொடை. மகளிர், மக.பகுதி; இளமை; ள் - பெண்பால்விகுதி: இர் - அதன்மேற் பலர்பால் விகுதி. இங்கே, நகுதல் - மனிதனை இகழ்தல் காரணமாகப் பிறந்தது. (உங)

## 24.—கோபுரவாயிலில் அருச்சுனன் வருகையில் தேவேந்திரனென்று தேவர்கள் திரளுதல்.

*மங்கையர்வாய்மைகேட்டுமணிக்குறுமுறுவல்செய்து*
*கங்கையம்பழனநாடன்கடிமதில்வாயில்செல்ல*
*வங்கவன்றன்னைக்கண்டவணிகழலமரரெல்லா*
*மங்குல்வாகனனென்றெண்ணிக்கதுமெனவந்துதொக்கார்.*

(இ - ள்.) கங்கை அம் பழனம் நாடன் - கங்காநதியின் நீர்பாய்கின்ற கழனிகளையுடைய குருநாட்டையுடையவனாகிய அருச்சுனன், மங்கையர் வாய்மை கேட்டு - (அவ்வாறுசொல்லிச்சிரித்த) தேவஸ்திரீகளின் வார்த்தையைச் செவியுற்று, மணி குறு முறுவல் செய்து - அழகிய புன்சிரிப்பைச் செய்து, கடி மதில் வாயில் செல்ல - காவலையுடைய மதிலினிடையேயுள்ள கோபுரத்துவாரத்திற் சென்றுசேர, அங்கு அவன் தன்னை கண்ட - அவ்விடத்திலே அவனைப் பார்த்த, அணி கழல் அமரர் எல்லாம் - (காலில்) தரித்த வீரக்கழலையுடைய தேவர்களெல்லாரும், மங்குல் வாகனன் என்று எண்ணி - (அவனை) மேகத்தை வாகனமாகவுடைய இந்திரனென்றெண்ணி, கதுமென வந்து தொக்கார் - விரைவிலே (அருகில்) வந்து கூடினார்கள் ; (எ - று.)

வடிவொப்புமையினாலும், மாதலி தேரூர அவ்விந்திரன் தேர்மீது செல்லுதலாலும் தேவர்கள் மங்குல்வாகனனென்று கருதினர்: இது, மயக்கவணி. கங்கையம்பழனம், அம் - நீர் ; இனி, கங்கைபாயப்பெற்ற அழகிய கழனி யென்றுமாம். மங்கையர் - இளம்பருவமுடைய மகளிர் : மங்கைப் பருவத்துக்கு வயதெல்லை, பன்னிரண்டுமுதற் பதின்மூன்றளவும். வாய் - அதிலிருந்து வருகிற சொல்லுக்கு இடவாகுபெயர்: மை - பகுதிப் பொருளுணர்த்தும் விகுதி : மும்மைஎன்ற விடத்துப்போல. குறுமுறுவல் - மந்தஹாஸம்: இங்கே, சிரிப்பு - தன்னைப் பிறர் இகழ்ந்தமை காரணமாக உண்டாயிற்று. மணிக் குறுமுறுவல் செய்து - முத்துப்போலப் புன்சிரிப்புச் செய்து என்றுமாம் ; சிரிக்குங் காலத்துப் பற்களின் வெள்ளொளி சிறிது வெளித்தோன்றுதலால். குருநாட்டின்எல்லை, கங்காநதிவரையிலும்போலும். கடி - பலபொருளுணர்த்தும் உரிச்சொல். இல்வாய் என்பது வாயில் என மாறியது இலக்கணப்போலி ; முன்பின்னாகத்தொக்குவந்த ஆறும்வேற்றுமைத்தொகையெனினும் ஒக்கும் : வீட்டின் முன்னிடமென்று பொருள் : இங்கே, நகரத்துவாயில். அணி கழல் - அழகுசெய்யுங் கழலெனவுமாம். கழல் - வீரர்காலணி : இந்திரனுக்கு மேகம் வாகனமென்பது, கவிமரபு. இனி, "கங்குல் களிறு" என இரத்தினச் சுருக்கத்திற் கூறியுள்ளதற்கு ஏற்ப, 'மங்குல்வாகனன்' என்பதற்கு - இருளை யானையாகவுடைய மன்மதனென்று உரைப்பாருமுளர். கதுமென - விரைவுக்குறிப்பு. (உச)

25.—தேவர்கள் வினவ, அருச்சுனன் போர்க்கோலங் கொண்ட காரணத்தை மாதலி கூறுதல்.

*கார்க்கோலமேனியானைக்கண்டபினையநீங்கிப்*
*போர்க்கோலமிவனுக்கெவ்வாறிசைந்ததுபுகறியென்று*
*தேர்க்கோலஞ்செய்வான்றன்னைச்செப்பினரவனும்போற்றி*
*வார்க்கோலபுரத்துவைகுமவுணரைவதைத்தற்கென்றான்.*

(இ - ள்.) (அங்ஙனம்வந்து தொக்க தேவர்கள்),—கார் கோலம் மேனியானை - காளமேகம்போன்ற அழகிய திருமேனிநிறத்தையுடைய அருச்சுனனை, கண்ட பின் - (அருகிற்) பார்த்தபின்பு, ஐயம் நீங்கி - (இந்திரனோ என்று கீழ் நிகழ்ந்த) சந்தேகம் ஒழிந்து, 'இவனுக்கு - இவ்வருச்சுனனுக்கு, போர் கோலம் - யுத்தத்திற்கு உரிய அலங்காரம், எ ஆறு இசைந்தது-யாது காரணமாகப் பொருந்திற்று? புகறி-சொல்வாய்', என்று—, தேர் கோலம் செய்வான்தன்னை - தேருக்கு உரிய அலங்காரத்தைச் செய்பவனாகிய மாதலியைநோக்கி, செப்பினர் - வினவினார்கள்; அவன்உம் - அந்த மாதலியும், போற்றி - (அருச்சுனனது சிறப்பையெடுத்துப்) புகழ்ந்து, வார் கோலம் புரத்து வைகும் அவுணரை வதைத்தற்கு என்றான் - நீரிடையேயுள்ள அழகிய தோயமாபுரத்தில் வாழ்கின்ற அசுரர்களைக் கொல்லுதற்பொருட்டு (அமைந்தது) என்று கூறினான்; (எ - று.)

"சேயிரு விசும்பிடைத் திரியுஞ் சாரணர், நாயக னிவன்கொலென் றயிர்த்து நாட்டமோ, ராயிர மில்லையென் றைய நீங்கினர்" என்றார் கம்பராமாயணத்தும். போற்றி-தேவர்களை வணங்கி என்றுமாம். தேர் கோலம் செய்வான்-தான் முன்னிடத்திலே சாரதியாக வீற்றிருத்தலால் தேருக்கு அழகுசெய்துநிற்பவனென்றுமாம். (உரு)

26.—தேவர்கள் பகையைவிரைவில்வென்றுமீளுமாறு அருச்சுனனை வாழ்த்திச் சன்மானித்து அனுப்புதல்.

*என்றவனுரைத்தமாற்றமின்புறக்கேட்டுநெஞ்சிற்*
*றுன்றியவுவகைதூண்டச்சுருதியாலாசிசொல்லி*
*வென்றுமீள்கென்றுவாழ்த்திவிரைவினில்வீரன்றன்னைச்*
*சென்றிடுகென்றுதேவர்தத்தமிற்சிறப்புமீந்தார்.*

(இ - ள்.) தேவர்-தேவர்கள்,—அவன்-மாதலி, என்று உரைத்த மாற்றம் - இவ்வாறு சொன்ன வார்த்தையை, இன்பு உற - (செவிக்கு) இன்பம் மிக, கேட்டு—, நெஞ்சில் துன்றிய உவகை தூண்ட - மனத்திலே மிகுந்த மகிழ்ச்சி தூண்டுதலினால், சுருதியால் ஆசி சொல்லி - வேதமந்திரங்களைக் கொண்டு (அருச்சுனனுக்கு) ஆசீர்வாதங்களைச் சொல்லி, வென்று மீள்க என்று வாழ்த்தி-(அசுரர்களைச்) சயித்துத் திரும்பிவருவாயாக என்று வாழ்த்துச்சொல்லி, வீரன் தன்னை - வீரனாகிய அவனை, விரைவினில் சென்றிடுக என்று-துரிதத்திற் புறப்பட்டுப்போவாயாக என்றுஞ் சொல்லி, தத்தமில் சிறப்புஉம் ஈந்தார்-தங்கள்தங்களுக்கு இயன்றவளவிற் சன்மானங்கள் பலவற்றையும் (அவனுக்குச்) செய்தார்கள்; (எ - று.)

தம்பகைவர்களை வெல்லச்செல்லுகிறானென்றதனால், நெஞ்சில் களிப்பு நிறைந்தது. ஸ்ருதியென்னும் வடசொல்லுக்கு - எழுதாக்கிளவியாய்க் குரு சிஷ்யக்கிரமத்திலே உபதேசிக்கப்பட்டுக் கர்ணபரம்பரையாக வழங்கிவருவதென்று பொருள். ஆசி - ஆஸிஸ் என்னும் வடமொழித் திரிபு. 'தேவதத்தமுஞ் சிறப்பினீந்தார்' என்னும் பாடத்துக்கு-தேவதத்தமென்னுஞ் சங்கத்தையும் வெற்றிச்சிறப்புக்குத் துணைக்கருவியாம்படி தந்தார்கள் என்று பொருள்: இது, காண்டவதகனகாலத்து அக்கினி கொடுத்தது என்றலும் உண்டு. (உசு)

27.—இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்: தேவர்கள் கூறுவது.

சம்புவன்சம்புமாலியெனும்பெயர்த்தனுசர்தம்மை
யும்பர்கோன்வதைத்தவந்நாளூர்ந்ததெவ்வுலகுமேத்துந்
தும்பையஞ்சடையான்வெற்பைத்துளக்கியசூரன்மாள
விம்பவார்சிலையிராமன்வென்றநாளூர்ந்ததித்தேர்.

(இ - ள்.) இ தேர்-(இப்பொழுது நீ ஏறியுள்ள) இந்த இரதம்,—சம்புவன் சம்புமாலி எனும் பெயர் தனுசர் தம்மை-ஜம்புவன் ஜம்புமாலி என்னும் பெயருள்ள அசுரரிருவரை, உம்பர் கோன் - மேலுலகத்துக்குத் தலைவனாகிய இந்திரன், வதைத்த அ நாள் - கொன்ற அந்தக்காலத்தில், ஊர்ந்தது - ஏறியது; (அன்றியும்), எ உலகும் ஏத்தும்-எல்லாவுலகங்களிலுமுள்ளவர்களுஞ் சிறப்பித்துக் கூறுகின்ற, தும்பை அம் சடையான்-தும்பைப்பூவைச் சூடிய அழகிய சடையையுடைய சிவபிரானது, வெற்பை - கைலாசகிரியை, துளக்கிய - அசைத்த, சூரன் - வலியவனாகிய இராவணன், மாள - இறக்க, விம்பம் வார் சிலை இராமன் - வட்டமாகவளைந்த நீண்ட (கோதண்டமென்னும்) வில்லையுடைய ஸ்ரீராமபிரான், வென்ற நாள் - (அரக்கர்களைச்) சயித்த காலத்தில், ஊர்ந்தது - ஏறியது; (எ - று.)

இதனால், அருச்சுனனுக்கு இந்திரன் கொடுத்த தேரினது சிறப்புக் கூறப்பட்டது. தநுஜர் என்னும் வடசொல்லுக்கு-(காசியபமுனிவர் மனைவிமார்களுள்) தநு என்பவளிடம் பிறந்தவரென்று பொருள். உம்பர்என்னும் மேலிடத்தின் பெயர், அங்குள்ள உலகத்துக்கு இடவாகுபெயர். ஊர்ந்தது எனச் செயப்படுபொருள் செய்ததுபோலச்சொல்லப்பட்டது; உலகுஎன்பது-இடத்தை யுணர்த்தும்பொழுதிற்போல உயிர்களை யுணர்த்தும்பொழுதும் இயற்பெயராம், ஆகுபெயரன்றுஎன உணர்க; வடநூலார்கொள்கையும் இதுவே. 'எவ்வுலகுமேத்தும்' என்னும் அடைமொழியைச் சடையானுக்காயினும், வெற்புக்காயினும், சூரனுக்காயினும், இராமனுக்காயினுங் கூட்டுக. சூரன் - ஶூரன் என்னும் வடமொழித் திரிபு. விம்பம் - பிம்பம் என்னும் வடமொழித் திரிபு. தன்திறத்தில் யாவரும் மனங்களித்திருக்கப் பெற்றவனென்பது, 'ராமன்' என்னுஞ் சொல்லுக்குப் பொருள்; சகல சற்குணங்களும் பொருந்தினவனென்பது கருத்து. சிலை என்ற அடைமொழி, கோடாலியை ஆயுதமாகவுடைய பரசுராமனையும், கலப்பையைப் படையாகக் கொண்ட பலராமனையும் பிரித்தது. பிரமனது கட்டளையால் இந்திரன்

மாதலியுடனே தனது தேரை அனுப்ப, தாசரதி அதன்மேலேறிக்கொண்டு பொருது இராவணனை வதைத்தாரென்பது, ஸ்ரீராமாயணத்துயுத்தகாண்ட வரலாறு. இராவணன் குபேரனைவென்று அவனதுபுஷ்பகவிமானத்தின்மீது ஏறிக்கொண்டு ஆகாயமார்க்கத்திற் கைலாசகிரியின்மேலாகச் செல்லும் பொழுது, அதன்மகிமையால் தான் ஏறிவந்த விமானம் தடைப்பட்டு அசையாமல் தம்பித்துநிற்க, அதன்காரணத்தை நந்திதேவர் சொல்லக் கேட்டும் அடங்காமற் கோபித்துத் தசகந்தரன், செருக்கினால் தனதுபோக்குக்குத் தடைசெய்கின்ற கைலாசத்தை வேரோடுபறித்தெடுத்தெறிகிறேனென்று சபதஞ்செய்து மலையடிவாரத்தில் தன இருபதுபுயங்களையுங் கொடுத்து அசைத்தான் என்பது, உத்தரராமாயண கதை. (உஎ)

28. ஆதலாலித்தேர்மேல்கொண்டடல்புனையவுணருக்குப்
பேதியாக்கவசம்பெற்றுப்பிறங்குபொன்முடியும்பெற்றாய்
கோதிலாயெங்கணெஞ்சிற்குறையெலாந்தீர்த்தியென்றார்
போதில்வாழயனுமொவ்வாவாய்மொழிப்புலவரெல்லாம்.

(இ - ள்.) ஆதலால் - ஆகையினால், கோது இலாய் - குற்றமில்லாதவனே! இ தேர் மேல் கொண்டு - இந்தத் தேரின்மேலேறிக்கொண்டு, அடல் புனை அவுணருக்கு பேதியா கவசம் பெற்று - வலிமைபொருந்திய அசுரர்களுக்குப் பிளக்கமுடியாத கவசத்தையும் பெற்று, பிறங்கு பொன் முடிஉம் பெற்றாய் - விளங்குகின்ற சுவர்ணமயமான கிரீடத்தையும் பெற்ற நீ, எங்கள் நெஞ்சில் குறை எலாம் தீர்த்தி - எங்கள் மனத்திலுள்ள குறைமுழுவதையுந் தீர்ப்பாய், என்றார் - என்று சொன்னார்கள்: (யாவரெனின்), போதில் வாழ் அயன்உம் ஒவ்வா - (திருமாலினது நாபித்தாமரை) மலரில் வாழ்கின்ற பிரமனும் ஒப்பாகாத, வாய் மொழி - வாயிலிருந்துவருஞ் சொற்களையுடைய, புலவர் எல்லாம் - தேவர்கள் யாவரும்; (எ - று.)

இது, தங்கள் மனக்குறையைத் தீர்க்குமாறு தேவர்கள் அருச்சுனனை வேண்டியது. ஆதலால் தீர்த்தினை இயையும். பெற்றாய் - முன்னிலை யொருமை யிறந்தகால வினையாலணையும்பெயர். இலாய - இலான் என்பதன் ஈறுதிரிந்த விளி. குறை - அசுரர்களை வெல்ல வேண்டுதல். அயன் - அஜன்; இதற்கு - திருமாலினிடத்துத் தோன்றியவனென்று பொருள். 'மொழி' என்றவிடத்து 'வாய்' என வேண்டாது கூறினார், அருள்கொண்டு கூறினாலும் வெகுண்டு கூறினாலும் அவ்வப்பயன்களைப் பயநதேவிடுகின்ற சாபாநுக்கிரக சக்தியுடைய தெனத் தாம் வேண்டியதன்சிறப்பை முடித்தற்கு; இங்ஙனங் கருத்துக்கொள்வதனை வடநூலார் 'தாத்பர்யம்' என்பர். இப்படிப்பட்ட நிறைமொழிகளின் சிறப்பைக் கருதியே, 'அயனுமொவ்வா' என்னும் அடைமொழி கொடுத்தது. புலவர் - அறிவுடையவர்; இது - விபுதர் என்னும் வடமொழியின் பொருள்கொண்டது. (உஅ)

29.—இதுவும், மேற்கவியும் - குளகம். விசும்புவழியாத் தேர்மீதுசென்ற அருச்சுனன் கடற்கரை சார்தலும் மாதலியை நோக்கிச் சில கூறலுறுதல்.

வீரனுமுவகைதூண்டவிண்ணவர்மலர்த்தாள்போற்றிச்
சாரதிதடந்தேர்தூண்டத்தபனனில்விசும்பிற்சென்றான்

கார்நிறக்குன்றமொன்றைக்கனகவான்குன்றொன்றேந்திச்
சீருறப்பறந்துவானிற்றிசையுறச்செல்வதொத்தே.

(இ - ள்.) வீரன்உம்-அருச்சுனனும்,—உவகை தூண்ட-மகிழ்ச்சிமிக, விண்ணவர் மலர் தாள் போற்றி - அந்தத் தேவர்களது தாமரைமலர்போலும் பாதங்களை வணங்கி,—சாரதி தட தேர் தூண்ட - மாதலி பெரிய தேரைச் செலுத்தாநிற்க, (அத்தேரின்மீது), தபனனில் - சூரியன் போல, விசும்பில் - ஆகாயமார்க்கத்தில், சென்றான் - போனான்; (அந்தத் தேரானது), கனகம் வான் குன்று ஒன்று - பொன்மயமான பெரிய மலையொன்று, கார் நிறம் குன்றம் ஒன்றை-கருமைநிறமுடையதொரு மலையை, ஏந்தி - எடுத்துக்கொண்டு, சீர் உற - அழகுமிக, வானில் - ஆகாயத்திலே, திசை உற - (மேற்குத்) திக்கை நோக்க, பறந்து செல்வது - விரைந்து போவதனை, ஒத்து-போன்று,—(எ - று.)—'பேரய்க்குறுகலும்' என மேற்கவியோடு முடியும்.

அருச்சுனனுக்குச் சூரியனுவமை - ஒளிக்கும் மிகவிரைந்துசெல்லுந் தேரி லேறி வானத்தில் மேற்றிசையை நோக்கிச் செல்லுதற்கு மென்க. பின்னிரண்டடி-இல்பொருளுவமை. கார்நிறக்குன்றத்துக்கு-அருச்சுனனும், கனகவான்குன்றுக்கு - பொன்மயமான தேரும் உபமேயமாம். கனகவான் குன்று - மேருமலை யென்னலாம். விண்ணவர் - விண்ணிலுள்ளவர்; விண் - வானம். எல்லாமலர்களுள்ளுந் தாமரை சிறத்தல்பற்றி, மலர் எனப்பட்டது; "பூவெனப் படுவது பொறிவாழ் பூவே", "பூவிற்குத் தாமரையே" என்பன காண்க. தாமரைமலர் - பாதத்துக்கு, மென்மை செம்மை அழகுகளால் உவமை. தடந்தேர் - உரிச்சொற்புணர்ச்சி, மெல்லெழுத்து மிகப்பெற்றது; [நன் - மெய்-36.] தபனன் - தபிப்பவன்; தபித்தல் - சுடுதல். வான் - பெருமை யுணர்த்தும்பொழுது, உரிச்சொல்; இனி, பெயர்ச்சொல்லாய், வானத்தையளாவுங் குன்றென்றுமாம். (உகூ)

வேறு

30. திரைகொழித்திடுஞ் சிந்துவின் சூழலிற்
குரக தத்தடந் தேர்போய்க் குறுகலு
மரக தக்கொண்டன் மாதலிக் கன்பினால்
விரகு றச்சில மாற்றம்வி ளம்பினான்.

(இ - ள்.) குரகதம் தட தேர் - குதிரைகளைப்பூட்டியுள்ள பெரிய அவ்விரதமானது, திரை கொழித்திடும் சிந்துவின் சூழலில் - அலைகளை (க்கரையில்) மோதுகின்ற கடலை யடுத்த இடத்திலே, போய் குறுகலும் - போய்ச் சேர்ந்தவளவில்,— மரகதம் கொண்டல்-பச்சையிரத்தினமுங் காளமேகமும் போன்ற அருச்சுனன், மாதலிக்கு - தேர்ப்பாகனை நோக்கி, அன்பினால் - அன்புடனே, விரகு உற - அறியும்படி, சில மாற்றம் விளம்பினான் - சில வார்த்தைகளைக் கூறினான்; (எ - று.)—அது மேற்கவியிற் கூறுகிறார்.

சிந்து - விந்து: இது வடசொல்லாதலின், இன்சாரியையோடு புணரும்பொழுது குற்றியலுகரங் கெடவில்லை. சூழல் - சூழ்ந்துள்ள இடம். தூரகதம் என்னும் வடசொல்லுக்கு - குளம்புகளால் நடப்பது என்று பொருள்; ஒற்றைக்குளம்புள்ளது என்று கருத்து. குறுகலும் - உம் விகுதி, பிற்பொருட்டில் வந்து விரைவு குறித்தது. மரகதக்கொண்டல் - உம்மைத்தொகை; மரகதநிறமாகிய மேக மெனப் பண்புத்தொகையாகவுமாம்: இத்தொடர்மொழி - இங்கே, உவமையாகுபெயராய் அருச்சுனனுக்கு வந்தது. கொண்டல் - நீர்கொண்டமேகம். மாதலிக்கு - நான்காமுருபு, கொடைப்பொருளது. அன்பினல் - மூன்றுமுருபு, அடைமொழிப்பொருளிலே வந்தது; அன்புடையவனுய் என்று கருத்து.

இதுமுதல் இருபத்தேழுகவிகள்-பெரும்பாலும் முதற்சீர் மாச்சீரும், ஈற்றுச்சீர் விளச்சீரும், மற்றிரண்டும் மாச்சீரும் விளச்சீரும் விரவியும் வந்த அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௩0)

31.—தோயமாபுரத்து அவுணரியல்பைக் கூறுமாறு அருச்சுனன் வினவ, மாதலி கூறலுறல்.

இப்புரத்திலவுணரியல்பெலாஞ்
செப்பெனக்குத்தெரிதரவென்றலு
மப்புரத்தவராண்மையுந்தோற்றமுஞ்
செப்பலுற்றனன்றிண்டிறற்றேர்வலான்.

(இ - ள்.) 'இ புரத்தில் அவுணர் இயல்பு எலாம் - இந்நகரத்திலுள்ள அசுரர்களது தன்மைமுழுவதையும், எனக்கு—, தெரிதர - விளங்கும்படி, செப்பு - சொல்வாயாக', என்றலும் - என்று (அருச்சுனன்) சொன்னவளவில்,—அ புரத்து அவர் ஆண்மைஉம் - அந்நகரத்திலுள்ள அவ்வசுரர்களது பராக்கிரமத்தையும், தோற்றம்உம் - காட்சியையும், திண் திறல் தேர் வலான் - மிகுந்த வலிமையையுடைய தேர்செலுத்துந்தொழிலில் வல்லவனாகிய மாதலி, செப்பல் உற்றனன் - சொல்லத்தொடங்கினான்; (எ - று.)—அது மேலெட்டுக்கவிகளாற் கூறுகின்றார்.

தெரிதர, தா - துணைவினை; அது, குறுக்கலும் விரித்தலும் ஆகிய விகாரம்பெற்றுத் தரு என நின்றது. தோற்றம் - தோன்றற்பாடு: தொழிற்பெயர்; வலிமையுமாம். திண் திறல் - ஒருபொருட்பன்மொழி. (௩க)

32.—எட்டுக்கவிகள் - தோயமாபுரத்தசுரரியல்பை மாதலி கூறியன.

தெழித்தசொல்லினர்சீற்றவெந்தீயுக
விழித்தகண்ணினர்விண்முகிலைக்கவி
னழித்தமேனியராழ்வெம்பிலத்தையும்
பழித்தகன்றபெரும்பகுவாயினர்.

பத்துக்கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) (அவ்வசுரர்கள்),—தெழித்த சொல்லினர் - அதட்டிக்கூறுகின்ற சொற்களையுடையவர்; சீற்றம் வெம் தீ உக விழித்த கண்ணினர் - கோபத்தாற் கொடிய நெருப்புச்சிந்த விழிக்கின்ற கண்களையுடையவர்;

விண் முகிலை கவின் அழித்த மேனியர் - (தமதுகருநிறத்தால்) ஆகாயத்திற் செல்கின்ற காளமேகத்தை நிறங்கெடச்செய்த உடம்பையுடையவர் ; ஆழ் வெம் பிலத்தைஉம் பழித்து அகன்ற பெரு பகு வாயினோர் - ஆழ்ந்து பயங் கரமாகவுள்ள பிலத்துவாரத்தையும் (தனக்கு ஒப்பாகாதென்று) நிந்தித்து (அதனிலும்) பரந்த பெரிய திறந்த வாயையுடையவர் ; (எ - று.)

சொல்லினர் முதலிய பயனிலைகளுக்கெல்லாம் 'அவ்வசுரர்கள்' எனத் தோன்றாஎழுவாய் வருவிக்க ; அன்றி, இவற்றை, மேல் முப்பத்தெட்டாங் கவியிலுள்ள 'மூன்றுகோடியசுரர்' என்பதற்கு விசேஷணமாகக்கொள்ளி னும் அமையும். தெழித்தல் - பேரொலிசெய்தலுமாம். விண்முகிலைக் கவி னழித்த மேனியர் என்பதற்கு - நீர்கொண்டமேகத்தினுங் கரிய உடம் புள்ளவர் என்று கருத்து. பிலம் - பாதாளவழி. பகுவாய் பேழ்வாய். (௩௨)

33. மண்ணுநீருமனலுமருத்துடன்
விண்ணும்வேண்டின்விரைவின்முருக்குவா
ரெண்ணெயூட்டியிருட்குழம்பாலெழில்
பண்ணியாக்கைவகுத்தன்னபான்மையார்.

(இ - ள்.) மண்உம் - பிருதிவியும், நீர்உம் - அப்புவும், அனல்உம்-அக் கினியும், மருத்துடன் - வாயுவும், விண்உம் - ஆகாசமும், (ஆகிய பஞ்ச மகாபூதங்களையும்), வேண்டின் - (அழிக்க) விரும்பினால், விரைவின் - சீக்கி ரத்தில், முருக்குவார் - அழிக்கவல்லவர் ; இருள் குழம்பால் - இருளாகிய குழைசேற்றினால், எழில் பண்ணி - வளர்ச்சிபெறச் செய்து, எண்ணெய் ஊட்டி - (மேலே) எண்ணெயைத் தடவி, வகுத்து அன்ன - அமைத்தாற் போன்ற, யாக்கை பான்மையார்-உடம்பின் தன்மையையுடையவர் ; (எ-று.)

லயகாலத்தில் நிலம் நீரிலும், நீர் நெருப்பிலும், நெருப்புக் காற்றிலும், காற்று விசும்பிலும் ஒடுங்கு மென்பது நூல்வழக்காதலால், 'மண்ணு நீரு மனலு மருத்துடன் விண்ணும்' என வைத்தார். முருக்கு - முருங்கு என் பதன் பிறவினை. எள்+நெய்=எண்ணெய்; தைலம். மேனியினது கருமை யும் வழுவழுப்பும் மினுமினுப்பும்பற்றி, 'எண்ணெயூட்டியிருட்குழம்பாலெ ழில்பண்ணியாக்கைவகுத்தன்னபான்மையார்' என்றது : தற்குறிப்பேற்றம். எழிலாவது - வளர்ந்தமைந்த பருவத்தும் இது வளர்ந்துமாறியதன்றி இன் னும் வளருமென்பது போன்று காட்டுதல். யாக்கை - (இரசம், இரத்தம், சுக்கிலம், மூளை, தசை, எலும்பு, தோல் என்னும் எழுவகைத்தாதுக்களா லும்) கட்டப்பட்டது எனக் காரணப்பெயர். வகுத்தன்ன - வகுத்தாலன்ன வெனப் பொருள் கொண்டால் வினையெச்சத்திரிபும், வகுத்ததன்ன எனப் பொருள்கொண்டால் தொழிற்பெயர்விகாரமு மாம். (௩௩)

34. மற்புயாசலத்தின்வலியாலிகற்
சற்பராசன்றலைச்சுமைமாற்றுவா
ரற்பவாழ்வுடையப்போருகத்தர்தங்
கற்பகோடிகடையுறக்காண்குவார்.

(இ - ள்.) மல் - மற்போரிற்பயின்ற, புய அசலத்தின் - மலைபோலும் (தமது) தோள்களின், வலியால் - பலத்தினால், இகல் சற்பராசன் தலை சுமை மாற்றுவார் - (கீழிருந்து பூமியைத்தாங்குகின்ற) வலிமையையுடைய பாம்புகளுக்கு அரசனாகிய ஆதிசேஷனது தலையின் பாரத்தைத் (தாம் பூமியைத் தாங்கித்) தவிர்க்கவல்லவர் : அற்பம் வாழ்வு உடை அம்போருகத்தர் தம் - மிகச்சிறிய வாழ்நாளையுடைய பிரமர்கள்பலரது, கற்பம் கோடி-ஆயுள் நாள் பலவற்றை, கடை உற - முடிவு போக, காண்குவார் - பார்க்குந்தன்மையுள்ளவர் ; (எ - று.)

மல்தொழிலாவது - ஆயுதமின்றிக்கே கை கால் முதலிய உறுப்புக்களினாற் போர்செய்தல். புஜ+அசலம்=புஜாசலம் ; தீர்க்கசந்தி : அது, புயாசலம் எனத் திரிந்தது. அசலம் - சலியாதது. சற்பம் - ஸர்ப்பம் : எதுகை நோக்கிய விகாரம். சுமை - சுமக்கப்படுவது ; ஐ - செயப்படுபொருளீறு. மற்றையெல்லாப்பிராணிகளுடைய வாழ்நாளினும் பெரிதாகிய பிரமனதுஆயுளும் இவ்வசுரர்களதுதீர்க்காயுளைநோக்குமிடத்துச் சிறிதாகத் தோன்று மென்பார், 'அற்பவாழ்வுடை யம்போருகத்தர்' என்றார். வாழ்வு - வாழும் நாளுக்குத் தொழிலாகுபெயர். அம்போருகம்=அம்போருஹம் : தாமரை ; நீரில் முளைப்பது என்று பொருள்: இது - காரணங்கருதியபொழுது அல்லி ஆம்பல் குவளை நெய்தல் முதலிய நீர்ப்பூங்கொடிகள் பலவற்றிற்குஞ் செல்லுதலாலும், காரணங்கருதாதபொழுது இடுகுறியளவாய்த் தாமரைக்கே செல்லுதலாலுங் காரணவிடுகுறிப்பெயர். இக்கொடியின் பெயர், அதன்மலருக்குப் பொருளாகுபெயர்; முதலாகுபெயரெனினும் ஒக்கும்: இது போல்வனவற்றை முதலுக்குஞ் சினைக்கும் பொதுவென்பாரு முளர். அம்போருகமலரில் உதித்தவர், அம்போருகத்தர். கற்பம்-பிரமனாயுள் ; பெரியதொரு காலவரையறை. கோடி - இங்கே, மிகப்பல வாகிய எண்ணிற்கு ஒன்று எடுத்துக் காட்டியவாறு. (௩௪)

35. பாழியாடகவெற்பிற்படச்சிரங்
கீழதாகக்கிளர்மூச்சடக்கிநின்
றூழிநாளுந்தவமுயன்றோங்குவா
ராழிநீருமளவிடுந்தாளினார்.

(இ - ள்.) பாழி - வலிமையையுடைய, ஆடகம் வெற்பில் - பொன்மலையாகிய மகாமேருவிலே, பட - பொருந்த, சிரம் கீழது ஆக - தலை கீழாக, நின்று—, கிளர் மூச்சு அடக்கி-மேன்மேல் இடைவிடாது வருகின்ற சுவாசத்தைப் (பிராணாயாமத்தாற்) பந்தனஞ்செய்து, ஊழி நாள்உம் - கற்ப காலம் வரையிலும், தவம் முயன்று - தவத்தைச் செய்து, ஓங்குவார் - (தாந்தாம் வேண்டியவரங்களைப்பெற்று) உயர்ச்சிபெறுபவர்; ஆழி நீர்உம் அளவிடும் தாளினார்-கடலின் நீரையும் அளவிட்டுத் தாண்டவல்ல (நீண்ட) கால்களையுடையவர்; (எ - று.)

ஆடகம்-ஹாடகம்; இது-நால்வகைப் பொன்களுள் ஒன்று: அவை-ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம்என்பன.கீழது-கீழுள்ளது; குறிப்பு வினையாலணையும்பெயர்: அ-சாரியை. படர்சிரம்என்றும் பாடம். (கூ௫)

36. ஏதிசூலமெழுமழுவீட்டியின்
சாதிசக்கரந்தாங்குந்தடக்கையார்
மோதுபோரெனின்மொய்ம்புடன்முந்துவோ
ரோதமேழுமுடனுண்டுமிழுவோர்.

(இ - ள்.) ஏதி - வாளும், சூலம்-சூலமும், எழு-வளைதடியும்,மழு-பரசுவும், ஈட்டியின் சாதி-ஈட்டியின் வகைகளும், சக்கரம் - சக்கரமும், (ஆகிய ஆயுதங்களை), தாங்கும் - தரிக்கின்ற, தட கையார் - பெரிய கைகளையுடையவர்; மோது போர் எனின் - (பகைவர்களைத்) தாக்குகின்ற யுத்தமென்று பேர்சொன்னமாத்திரத்தில், மொய்ம்புடன்-வலிமையுடனே, முந்துவோர் - முற்பட்டு வருபவர்; ஓதம் ஏழ்உம்-ஏழுகடல்களையும், உடன்-ஒருசேர, உண்டு-குடித்து,உமிழுவோர்-மீண்டும்வெளியிற்காலும்ஆற்றலுடையவர்;(எ - று.)

ஏதி - ஹேதி: இவ் வாயுதப்பொதுப்பெயர், சிறப்பாய் வாளை யுணர்த்திற்று. சூலம் - முத்தலைவேல். எழு - இருப்புத்தூணுமாம். மழு - ஒருவகைக்கோடாலி, எரியிரும்புப்படையுமாம். ஈட்டி - ஒருவகைவேல். ஈட்டியின் சாதி என்றது - பேரீட்டி, சிற்றீட்டி, எறியீட்டி என்னும் அதன் வகைகளை. சாதி - ஜாதி. உண் என்னும் பகுதி-உண்பன தின்பன பருகுவன நக்குவன எனத் தனித்தனியெடுத்துப் பகுத்துக்கூறுமிடத்துச் சிறப்புவினையும், அங்ஙனங்கூறாதவிடத்து வாயால்நுகரப்படும் பொருளெல்லாம் உணவு எனப்படுமாகலின் பொதுவினையு மாதலால், இங்கே, 'ஓதமேழும் பருகி' என்னுமல் 'உண்டு' எனப்பட்டது. உமிழுவோர், உ-சாரியை. (கூசு)

37. கூருநல்லுரைகூறினுங்கூற்றுடன்
கார்தொறும்மிடிசேர்ந்தன்னகாட்சியார்
தேர்தொறுஞ்செருச்செய்யுமத்தேவரைப்
போர்தொறும்புறங்கண்டன்றிப்போகலார்.

(இ - ள்.) கூரும் நல் உரை கூறின்உம் - மிக்க நல்ல வார்த்தைகளைச் சொல்வதானாலும், கூற்றுடன் கார்தொறுஉம் இடி சேர்ந்து அன்ன காட்சியார் - யமனும் மேகந்தோறுந் தோன்றுகின்ற இடியுஞ் சேர்ந்தாலொத்த தோற்றமுடையவர் ; தேர்தொறுஉம் செரு செய்யும் அ தேவரை - (தத்தமது) இரதங்களிலே (ஏறிவந்து) போர்செய்கின்ற அந்தத்தேவர்களை,போர்தொறுஉம் - ஒவ்வொரு யுத்தத்திலும், புறம் கண்டு அன்றி - முதுகுகாட்டியோடச்செய்தல்லாமல், போகலார் - (போர்க்களத்தினின்று மீண்டு) போகாதவர்; (எ - று.)

நல்லசொற் சொல்லும்பொழுதுங் கண்டத்தொனியால் யமனும் இடியுஞ்சேர்ந்த தொப்பரெனவே, தீயசொற்சொல்லும்பொழுது உள்ளதன்மை சொல்லவேண்டாதாயிற்று. அத் தேவர் என்றதில் அகரச்சுட்டு - அமிருத

மூண்டதனால் அழியாவலிபெற்ற தேவர்களது சிறப்பை யுணர்த்திற்று ; இனி, அழகிய தேவ ரெனினுமாம். பெரும்பாணாற்றுப்படையில் "அவ்வாய் வளர்பிறை" என்பதற்கு-'அழகிய இடத்தையுடைய வளரும் பிறை' என்று ஆசிரியர் நச்சினார்க்கினியர் உரையெழுதிப்போந்ததனால், அம்என்பதற்குப் போல, அ என்பதற்கும் அழகிய என்னும்பொருள் உண்டென்று உணர்க.

38. மூன்றுகோடியசுரர்முகிலெனத்
தோன்றுமேனியர்தோமறுமாற்றல
ரேன்றுபோர்பொரினெவ்வெவ்வுலகையுங்
கீன்றுசேரக்கிழிக்குமெயிற்றினர்.

(இ - ள்.) மூன்று கோடி அசுரர்-மூன்றுகோடி என்னுந் தொகையுள்ள அவ்வசுரர்கள், முகில் என தோன்றும் மேனியர் - மேகம்போல(ப்பெரிதாக)த் தோன்றுகின்ற உடம்பையுடையவர் ; தோம் அறும் ஆற்றலர்-குற்றமில்லாத வலிமையுடையவர் ; ஏன்று போர் பொரின் - எதிர்த்துப் போர் செய்தால், எ எ உலகைஉம்-எந்த எந்த உலகங்களேயும், கீன்று-கீறி, சேர - ஒருசேர, கிழிக்கும்-கிழிக்கவல்ல, எயிற்றினர்-பற்களையுடையவர்; (எ - று.)

இங்கே, 'முகிலெனத்தோன்று மேனியர்' என்பது, கீழ் 32-ஆம் கவியில் 'விண்முகிலேக்கவினழித்தமேனியர்' என்பதனோடு கூறியதுகூறலென்னுங் குற்றமாகாமைப்பொருட்டு, அங்கே கருமைக்கும், இங்கே பெருந்தோற்றத்துக்கும் உவமைகூறிய தென வேறுபாடுகொள்க. தோம்=தோஷம். ஆற்றல் - ஆற்று என்னும் பகுதியின் தொழிற்பெயர். ஏன்று, கீன்று—ஏல், கீல்-பகுதிகள். ஏன்றுஎன்பது, ஏற்றுஎனவும் வரும். கீலுதல்-கிண்டுதல், பிளத்தல். ஆற்றலுக்குக் குற்றமாவது, தோல்வி. (௩அ)

39. செப்புரத்தினிற்செஞ்சடைவானவன்
முப்புரத்தைமுனிந்தவந்நாளினுந்
தப்புரத்தர்சதமகன்றன்னைவென்
றிப்புரத்தையிவர்கவர்ந்தாரெனா.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) செப்பு - (யாவராலுஞ் சிறப்பித்துச்) சொல்லப்படுகின்ற, உரத்தினின் - வலிமையையுடைய, செம் சடை வானவன்-சிவந்தசடையையுடைய சிவபெருமான், மு புரத்தை-திரிபுரத்தை, முனிந்த அ நாளின்உம்-கோபித்தெரித்த அக்காலத்திலும், தப்பு-(தாம் எரியாமல்)தப்பிப்பிழைக்கும்படியான, உரத்தர் - வலிமையுடையவர்களாகிய, இவர்-இவ்வசுரர்கள், சதமகன் தன்னை வென்று - இந்திரனைச் சயித்து, இ புரத்தை - இந்தத் தோயமாபுரத்தை, கவர்ந்தார் - (அவனுடைய ஆளுகையினின்றும்) அபகரித்துத் தமதாக்கிக்கொண்டார்கள், எனா - என்று (அருச்சுனனுக்குச்) சொல்லி,—(எ - று.)—இக்கவியில் 'எனா' என்பதும், மேற்கவியில் 'போக்கி' என்பதும், அதன் மேற்கவியிலுள்ள 'நடத்தினன்' என்னும் வினைமுற்றைக் கொண்டு முடியும்.

ஶதமகன் - நூறு (அசுவமேத) யாகங்களைச் செய்து இந்திரபதவி பெறுதலால் வந்த பெயர்; சதம் - நூறு, மகம் - யாகம். (௩௯)

40.—அருச்சுனனோடு போரவருமாறு மாதலி அவ்வசுரர்களிடத்துச் சித்திரசேனனைத் தூதனுப்புதல்.

தீதிலாத்திறற்சித்திரசேனனைக்
கோதிலாதகுனிசிலைவீரற்கு
மோதுபோர்தரமொய்ம்புடைவஞ்சர்பாற்
றூதுபோகெனப்போக்கித்தொலைவிலான்.

(இ - ள்.) தொலைவு இலான் - (போருக்குத் தேர்செலுத்துவதாகிய தன்தொழிலிற் சிறிதுங்) குறைவுபடுதலில்லாத மாதலி,—தீது இலா திறல் சித்திரசேனனை - குற்றமில்லாத வலிமையையுடைய சித்திரசேனனென்னுங் கந்தருவனை நோக்கி, 'கோது இலாத - குற்றமில்லாத, குனி சிலை - வளைந்த காண்டீவவில்லையுடைய, வீரற்கு - வீரனாகிய அருச்சுனனுக்கு, மோது போர் தர - தாக்கிச்செய்கின்ற யுத்தத்தைக் கொடுக்கும்படி, [அருச்சுனனுடனே எதிர்த்துவந்து போர்செய்தற்கு], மொய்ம்பு உடை வஞ்சர் பால் - வலிமையையுடைய வஞ்சகராகிய அசுரரிடத்து, தூது போகு - தூது செல்வாயாக,' என - என்று சொல்லி, போக்கி - (அவனை முன்னே) அனுப்பி விட்டு,—(எ - று.)

இனி, மொய்ம்பு உடை வஞ்சர் - (பகைவரது) வலிமையை உடைக்கின்ற[அழிக்கின்ற]மாயையையுடையவர்எனவுமாம்;பால்-வழுவுருபு. சித்திரசேனனென்னுஞ் சொல்லுக்கு - பலவகைச்சேனையுடையவனென்றுபொருளாம்: இவன், விசுவாவசு என்னுங் கந்தருவனது குமாரன்; சங்கீதபாரதங்களில் வல்லவன: அருச்சுனனுக்கு இசைநாடகங்களைக் கற்பித்துக்கொடுத்தவன். (௪0)

41.—விண்ணிற்செல்லுந் தேரைப் பூமியில் மாதலி செலுத்த, அருச்சுனன் நாணோசை யெழுப்புதல்.

விண்ணின்மீதுவிரைவுறுந்தேரினை
மண்ணின்மீநடத்தினன்மாதலி
யண்ணலுந்தனருஞ்சிலைநாணியின்
றுண்ணெனோதைதொடரத்துரத்தினன்.

(இ- ள்.) மாதலி-அந்தஇந்திரன்சாரதி, விண்ணின்மீது விரைவு உறும் தேரினை - ஆகாயத்திலே வேகமாகச்செல்லுதலைப் பொருந்திய இரதத்தை, மண்ணின்மீது - பூமியின்மேலே, நடத்தினன்-(மந்தகதியாகச்) செலுத்தினான்; அண்ணல்உம்-பெருந்தன்மையுடைய அருச்சுனனும்,—தன் அரு சிலை-(பெறுதற்கு)அரிய தனதுவில்லினது, நாணியின் - நாணினது, துண்ணென் ஓதை - (கேட்போர்க்கு) அச்சத்தை விளைக்கின்ற ஓசை, தொடர - (சித்திரசேனனைத்தொடர்ந்து) செல்லும்படி, துரத்தினன் - (அவ்வோசையை) விரைவிற் செலுத்தினன்; (எ - று.)

வில்நாணியைக் கைவிரலால் தெறித்துப் பகைஞர் செவியிற்படும்படி பேரோசையைவிளைத்தா னென்பதாம். தொடரத்தூரத்தினன் என்றதனால், பின்னே புறப்பட்டஓசை முந்திச்சென்றமை பெறப்படும்: ஆனதுபற்றியே, 43 - ஆங் கவியில் தூதர்க்குமுன் நாணோசைசெவிப்புகுந்தமை கூறப்படு கின்றது. விண்ணின்மீது, மீது - ஏழனுருபு. அண்ணல் - ஆண்பாற்சிறப் புப்பெயர். துண்ணெனல் - அச்சக்குறிப்பு. தூரத்து - தூர என்பதன் பிறவினை ; து - பிறவினைவிகுதி. (சக)

42.—தேரொலியோடு நாணொலிசேர்ந்து திசையெங்கும் பேரொலியாதல்.

தேரினார்ப்பொலியுஞ்சிறுநாணெனுங்
காரினார்ப்பொலியுங்கலந்தெங்கணும்
பாருமேற்றிசையும்பகிரண்டமுஞ்
சேருநாற்றிசையுஞ்செவிடாக்கவே.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) தேரின் - (அருச்சுனன் ஏறிவந்த) இரதத்தினது, ஆர்ப்பு ஒலிஉம் - ஆரவாரமாகிய ஓசையும், சிறு நாண் எனும் காரின் - (அவன்கை வில்லினது) சிறிய நாணியென்கிற மேகத்தினது, ஆர்ப்பு ஒலிஉம் - (இடி போன்ற) ஆரவாரமாகிய ஓசையும், பார்உம் - பூமியிலும், மேல் திசைஉம் - ஆகாயத்திலும், சேரும் நால் திசைஉம் - பொருந்திய நான்கு திக்குக்களி லும், பகிர் அண்டம்உம் - (ஆக இவ்வண்டத்தில்மாத்திரமே யன்றி) வெளி யண்டங்களிலும், எங்கண்உம் - எவ்விடத்தும், கலந்து - சென்று சேர்ந்து, செவிடு ஆக்க - (அங்கங்கே யுள்ள எல்லாப்பிராணிகளையும் அதிர்ச்சி மிகுதி யால்)செவிடுகளாகச் செய்ய,—(எ-று.)—'புக'என மேற்கவியில்தொடரும்.

ஆர்ப்பு ஒலி - இருபெயரொட்டுப்பண்புத்தொகை; ஆர்ப்பு - பேரிரைச் சல். பகிரண்டம் - வடசொற்றொடர். நாற்றிசை-கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு என்பன ; தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கு என்னும் கோணத்திசை நான்கும் இவற்றில் அடங்கும். செவிடு - செவிப் புலனற்றது: உறுப்புக்குறை எட்டினுள் ஒன்று. (சஉ)

43.—ஓசையைக்கேட்ட அசுரர்
இந்திரன்போரவருகின்றனனென்று சினங்கொள்ளுதல்.

அந்தவோசையவுணர்செவிப்புக
முந்தவோடிமுடுகிமுறுவலித்
திந்திரன்பொரவந்தனனென்றுதஞ்
சிந்தைகன்றிவிழியுஞ்சிவந்திட்டார்.

(இ - ள்.) அந்த ஓசை - தேரோசையோடு சேர்ந்த அந் நாணோசை, முந்த - (சித்திரசேனனுக்கு) முற்பட, ஓடி - விரைந்து சென்று, அவுணர் செவி புக - அவ்வசுரர்களது காதிலே நுழைய,— (அவர்கள்), முடுகி - (தம் மில்) திரண்டு, முறுவலித்து - சிரித்து, இந்திரன் பொர வந்தனன் என்று- தேவேந்திரன் (தம்மோடு) போர்செய்தற்கு வந்தானாகு மென்று கருதி,

(கோபத்தால்), தம் சிந்தை கன்றி - தங்கள் மனம் வெதும்பி, விழிஉம் சிவந்திட்டார் - (கண்களும்) சிவக்கப்பெற்றார் ; (எ - று.)

தேவேந்திரன்தேரில் மாதலி பாகனாகச்செலுத்தத் தேர் அதிர்ந்துவரும் போது அவுணர் தோற்றதேவேந்திரனே மீளவும் பொரவருகின்றானென்று கருதிச் சினந்தனரென்க. இங்கே, முறுவலித்தல்-வீரத்திலெழுந்த வெகுளி நகை. 'விழி' என்னும் அஃறிணையெழுவாய் 'சிவந்திட்டார்' என்னும் உயர் திணைமுற்றைக் கொண்டதனால், விழியும் சிவந்திட்டார்-திணைவழுவமைதி; இதற்கு "உயர்திணை தொடர்ந்த பொருள்முத லாறு, மதனொடு சார்த்தி னத்திணை முடிபின" என்னுஞ் சூத்திரம், விதி. (சங)

44.—சித்திரசேனனென்ற தூதுவன் சில சொல்லலுறல்.

போயதூதனுஞ்செம்பொற்புரிசைசூழ்
தோயமாபுரந்தன்னிற்றுதைந்தவம்
மாயவஞ்சர்மறுகவெம்புண்ணின்மேற்
றீயையொப்பனசில்லுரைசொல்லுவான்.

(இ-ள்.) போய தூதன்உம்-(முன்னேபுறப்பட்டுச்) சென்ற தூதுவனான சித்திரசேனனும்,-செம் பொன் புரிசை சூழ்-சிவந்தபொன்னினாலாகியமதில்கள் சூழ்ந்துள்ள, தோயமாபுரந்தன்னில்-பெரிய தோயபுரத்திலே, துதைந்த-நிறைந்த, அ மாயம் வஞ்சர் - மாயையினாற் செய்யும் வஞ்சனையையுடைய அவ்வசுரர்கள், மறுக - மனம் வேறுபடும்படி, வெம் புண்ணின்மேல் தீயை ஒப்பன - மிக வருத்துகின்ற விரணத்தின்மேல் வைத்த நெருப்பை ஒப்பனவாகிய, சில் உரை - சில வார்த்தைகளை, சொல்லுவான்-சொல்பவனானான் ; (எ - று.)—அது மேற்கவியிற் கூறுகின்றார்.

முன்னே தேர்நாணிகளின் தொனிகளைக் கேட்டுத் தேவராசன்போருக்குவருகிறானென்றெண்ணிச் சீற்றங்கொண்ட அவ்வசுரர்களுக்கு மனிதனொருவன்போர்க்குவந்துள்ளானென்று தூதன்சொல்லும் வார்த்தை அவ் வருத்தத்தின்மேல் மிகவருத்தத்தை மூட்டு மாதலால், 'புண்ணின்மேல் தீயையொப்பன' என்றார்; " இயம்பியசொல் மருமத்தி னெறிவேல் பாய்ந்த, புண்ணிலாம் பெரும்புழையிற்கன லுழைந்தாலெனச்செவியிற் புகுதலோடும்" என்றார் கம்பரும். போய, யகரவொற்று - இறந்தகாலவிடைநிலை. மாயம் - ஒருமந்திரசக்தி. (சச)

45.—அருச்சுனனோடு போர்வருமாறு அவுணரிடம் தூதன் கூறுதல்.

ஒருகுலத்தினில்வேந்துமொவ்வாதுயர்
குருகுலத்திற்குனிசிலைவீரற்குத்
தருகயுத்தந்திறலுடைத்தானவர்
வருகமற்றும்வருநினிதன்னொடும்.

இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) ஒரு குலத்தினில் வேந்துஉம் ஒவ்வாது - எந்தக் குலத்திற் பிறந்த எவ்வரசனும் ஒப்பாகாமல், உயர் - சிறந்துள்ள, குரு குலத்தில்

குனி சிலை வீரற்கு - குருகுலத்திற்பிறந்த வளைந்த வில்லையுடைய அருச்சுனனுக்கு, திறல் உடை தானவர் - வலிமையுடைய அசுரர்கள், யுத்தம் தருக - போரைக் கொடுப்பாராக; மற்றும் - மேலும், வரூதினிதன்னொடும் வருக - சேனையோடும் வருவார்களாக; (எ - று.)

அசுரர்களே! நீங்கள் உண்மையாகப் போர்செய்யுந் திறமையையுடையீராயின் சேனையோடு வந்து எங்கள் அருச்சுனனோடு போர்செய்து வெல்லுங்கள், பார்ப்போம் என்றான். குரு என்பவன், சந்திரகுலத்திற் பிறந்த பிரசித்திபெற்ற ஓரரசன்; இவனால், அக்குலம் 'குருகுலம்' என்றும், அந்நாடு 'குருக்ஷேத்திரம்' என்றும், அக்குலத்தவர் 'கௌரவர்' என்றும் பேர் கொண்டமை காண்க. தானவர் - தநுவின் மக்கள், தத்திதாந்தநாமம்: இது, முன்னிலைபிற்படர்க்கைவந்த இடவழுவமைதி; அண்மைவிளியுமாம்.

46.—அதுகேட்டஅசுரர் எள்ளனஞ்செய்து சொல்லலுறுதல்.

என்றுதூதனிசைத்தது கேட்டலு
நன்றெனக்கைபுடைத்துநகைத்திடாக்
கன்றுநெஞ்சினர்கண்கள்செந்தீயுகத்
துன்றுகோபத்துடனவர்சொல்லுவார்.

(இ - ள்.) என்று தூதன் இசைத்தது கேட்டலும் - இவ்வாறு தூதுவன் சொன்ன வார்த்தையைக் கேட்டமாத்திரத்தில்,— அவர் - அசுரர்கள், கன்றும் நெஞ்சினர் - வெதும்பின மனத்தையுடையவராய், கண்கள் செம் தீ உக - கண்களிலிருந்து சிவந்த நெருப்புப்பொறி சிந்த, துன்று கோபத்துடன் - மிகுந்த கோபத்தோடே, நன்று என - (நீ சொன்னவார்த்தை) நன்றாயிருந்ததென்று சொல்லி, கை புடைத்து நகைத்திடா - கைகொட்டிச் சிரித்து, சொல்லுவார் - (சில வார்த்தைகளைச்) சொல்லுபவரானார்கள்; (எ - று.) — அவற்றை மேல்நான்குகவிகளிற் காண்க.

நன்று - இகழ்ச்சிக்குறிப்பு. நெஞ்சினர் - குறிப்புவினைமுற்றெச்சம்: [நன் - வினை - 32.] கோபத்துடன், உடன்-மூன்றாம்வேற்றுமைச் சொல்லுருபு; விசேஷணப்பொருளது. (சகூ)

47.—இதுமுதல் மூன்று கவிகள் - ஒருதொடர் ஒருமானுடன் போரவருவது குறித்து அலட்சியமாகச்சொல்லி, அவுணர் சீறுதல்.

பூசையொன்றுபுலியின்குழாத்துட
னாசைகொண்டுபொரவந்தழைப்பதே
வாசவன்பெருவாழ்வுக்கெலாமொரு
நாசம்வந்துபுகுந்ததெனாநகா.

(இ - ள்.) பூசை ஒன்று - (ஒருதுணையுமில்லாமல் தனித்துநின்ற) ஒரு பூனை, புலியின் குழாத்துடன் - புலிக்கூட்டத்துடனே, பொர - போர்செய்தற்கு, ஆசை கொண்டு - விருப்பங்கொண்டு, வந்து அழைப்பதுவே - (துணிந்து) வந்து கூப்பிடுவதா? வாசவன் பெரு வாழ்வுக்கு எலாம் - இந்திரனது பெரிய வாழ்க்கைகளெல்லாவற்றுக்கும், ஒரு நாசம் வந்து புகுந்

தது - ஒருஅழிவு வந்துநேர்ந்தது, எனு - என்று சொல்லி, நகா-சிரித்து, (எ - று.)—"என்று கொதித்திட்டார்" (49) என்று முடியும்.

பலபராக்கிரமங்களில்லாத மனிதனொருவன் அவற்றில் மிகுந்த அசுரர்திரளோடு பொரவிரும்பி அழைப்பதா என்னும் பொருளைத் தந்ததனால், முன்னிரண்டடி, 'பிறிதுமொழிதல்' என்னும் அலங்காரம்: இது, ஒட்டணியென்றும் சொல்லப்படும்: வடநூலார் 'அப்ரஸ்துதப்ரசம்ஸாலங்காரம்' என்பர் : உபமேயத்தைக் கூறாமல் உபமானத்தாற் பெறவைத்தல், இவ்வணியின் இலக்கணமாம். பூனை புலிக்கூட்டத்தைப் போருக்கு அழைத்தல், இல்பொருளுவமை. அழைப்பதே என்பதில் ஏகாரம் - வினாவகையால், வியப்பை உணர்த்திற்று. அருச்சுனனை இந்திரன் மைந்தனென்று அறிந்து, 'இந்திரன் வாழ்வுக்கெலாம் நாசம் வந்தது' என்றார். வாசவன் - அஷ்டவசுக்களுக்குத் தலைவன் : அல்லது, எல்லா ஐசுவரியமுமுடையவன் ; வசு-செல்வம். புகுந்தது-தெளிவுபற்றியகால வழுவமைதி ; [நன்-பொது-33 ]

48. வரையுளானுமலரினுளானும்வெண்
டிரையுளானுஞ்செருப்பருமெம்முடன்
றரையுளான்வந்துபோர்பொரத்தக்கதோ
வுரையுளாரென்றுரையீருணரவே.

(இ - ள்.) வரை உளான்உம் - (கைலாச) கிரியிலுள்ள சிவனும், மலரின் உளான்உம் - தாமரைமலரிலுள்ள பிரமனும், வெள் திரை உளான் உம் - வெண்மையான பாற்கடலிலுள்ள திருமாலும், (என்னும் திரிமூர்த்திகளும்), செருப்பு அரும் - (கூடிவந்து பொருதாலும்) அழித்தற்கு முடியாத, எம்முடன் - எங்களுடனே, தரை உளான் - பூமியிலுள்ளானொரு மனிதன், வந்து போர் பொர தக்கதுஓ - வந்து போர்செய்யத் தகுமோ? [தகாதன்றே] ; உரை உளார் என்று - (இங்ஙனம் அலட்சியமாகப் பேசும்) பேச்சுடையார்கள் என்று, உணர உரையீர் - (உம்வீரனுக்குத்) தெரியச் சொல்வீராக ; (எ - று)

தூதனாகிய சித்திரசேனனொருவனை நோக்கி 'உரையீர்' எனப் பன்மையாற் கூறியது, இகழ்ச்சிபற்றி : பால்வழுவமைதி ; ஒருமைப்பாலிற் பன்மைப்பால் வந்தது : [நன் - பொது - 28.] உரைஉளார் - பேசுந்திறமுடைய தூதுவரே! என்று உணர உரையீர் - இவ்வாறு (அருச்சுனனுக்குத்) தெரியும்படி சொல்லுங்கள் எனவுமாம். வரை என்னும் கணுவின் பெயர்-சினையாகுபெயராய் மூங்கிலைக் குறித்து, அது பின் தானியாகுபெயராய் மூங்கில்விளையும் மலைக்கு வருதலால், இருமடியாகுபெயர். அலரின் எனப் பிரித்தல், மோனைத்தொடைக்குப் பொருந்தாது. திரை என்னும் அலையின் பெயர் - கடலுக்குச் சினையாகுபெயர். இனி, வெண் திரை - வெண்மையாகிய அலைகளையுடையதென அன்மொழித்தொகையாகவுமாம். பொர - தொழிற்பெயர்த்தன்மைப்பட்டு எழுவாயாயிற்று. நம்முடன்என்றும், தக்கனோஎன்றும் இன்றுரையீரென்றும் பாடம். (சு அ)

49. தனுசர்தானைதனைமதியாதொரு
மனுசன்வந்துமலையமதிப்பதோ
வனுசருங்கொலையாடலவுணருங்
குனிசெயுஞ்சிலையென்றுகொதித்திட்டார்.

(இ - ள்.) தனுசர் தானைதனை மதியாது - அசுரசேனைகளை ஒருபொருளாக எண்ணாமல், ஒரு மனுசன் வந்து மலைய மதிப்பதோ - மனிதனொருத்தன் வந்து (அதனோடு) போர்செய்ய எண்ணுவதோ? அனுசர்உம் - இளையோராகிய அசுரர்களும், கொலை ஆடல் அவுணர்உம் - (பகையைக்) கொல்லுதற்றொழிலிற் பயிற்சியையுடைய (மூத்தோராகிய) அசுரர்களும், சிலை - (தங்கள்தங்கள்) வில்லை, குனி செயும் - வளைத்தலைச் செய்யுங்கள், என்று - என்று (தம் இனத்தாரைநோக்கிக்) கூறி, கொதித்திட்டார் - (அசுரர்கள்) கோபித்தார்கள்; (எ - று.)

செயும் - ஏவற்பன்மை. அனுசரும் அவுணரும் சிலைகுனியும் - முன்னிலையிற்படர்க்கைவந்த இடவழுவமைதி. குனி-முதனிலைத்தொழிற்பெயர். தம்பியரென்றுபொருளுள்ள அநுசரென்பது, இங்கு இளையோரைக் காட்டிற்று. (சுக)

50.—தமது செல்வநாடுகளைப் பகை கவரக்கோடுத்த வில்வீரனு எம்மை எதிர்க்க வருபவனென்று அவுணர் ஏளனமாக் கூறுதல்.

செங்கணாகக்கொடியவன்செல்வமுந்
தங்கணாடுங்கவரத்தரிப்பறப்
பொங்குகானிற்புகுஞ்சிலைவீரனோ
வெங்களோடெதிர்க்கவந்தெய்தினான்.

இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) செம் கண் நாகம் கொடியவன்-(கோபத்தாற்) சிவந்த கண்களையுடைய பாம்பின்வடிவத்தை யெழுதிய துவசத்தையுடைய துரியோதனன், தங்கள் நாடுஉம் செல்வம்உம் கவர - தங்களது தேசத்தையும் மற்றைச் செல்வங்களையும் பறித்துக்கொள்ள, தரிப்பு அற - நிற்பதற்கும் இடமில்லாமல், பொங்கு கானில் புகும் - (வெப்பம்) மிகுந்த காட்டிற் சென்ற, சிலை வீரன்ஓ-வில்வீரன்தானோ, எங்களோடுஉம் எதிர்க்க வந்து எய்தினான்-எங்களுடன் எதிர்த்துப் போர்செய்தற்கு வந்து சேர்ந்தான்? (எ - று.)

செங்கண் என்பதை - நாகத்துக்காயினும், கொடியவனுக்காயினும் இயைக்க. 'நாகக் கொடியவன்' என்றது-அவன்கொடியே அவனது கொடுந்தன்மையையும், நன்றியறிவின்மையையும், நாவிரண்டுடைமையையும், வக்கிரகதியிற் செல்லுதலையுங் குறிப்பிக்கு மென்றற்குப் போலும். நாகக்கொடியவன்-நாகம்போலக் கொடுந்தன்மையை யுடையவ னென்றுமாம். 'தங்கள்' என்றது, தருமன் முதலியோரையும் உளப்படுத்தி. தரிப்பு - தரிக்குமிடம்; தொழிலாகுபெயர்: தரித்தல்-தங்குதல். இங்கே 'வீரன்' என்றது, இகழ்ச்சி.

51.—சேனைசூழப் பேராரவாரஞ்செய்துகொண்டு அவுணர் திரளுதல்.

என்றுகூறியிகலசுராதிபர்
துன்றுசேனைக்குழாம்புடைசூழ்வரச்

சென்றுகாந்தத்திரைக்கடலார்ப்பபோ
லொன்றயாருமொருங்குசென்றுற்றனர்.

(இ - ள்.) என்று கூறி—, இகல் அசுர அதிபர் - வலிமையையுடைய அசுரத் தலைவர்கள், யார்உம் - எல்லோரும், துன்று சேனை குழாம் புடை சூழ்வர - நெருங்கிய சேனைகளின் கூட்டம் பக்கங்களிற் சூழ்ந்து வரும்படி, உக அந்தம் திரை கடல் சென்று ஆர்ப்ப போல் - யுகமுடிவுகாலத்தில் அலைகளையுடைய கடல்கள் பொங்கி வெளியெழுந்து ஆரவாரிப்பனபோல (ஆரவாரித்து), ஒன்ற - நெருங்க, ஒருங்கு - ஓரிடத்தில், சென்று உற்றனர் - வந்து கூடினார்கள் ; (எ - று.)

'யுகாந்தம்' என்றது, பிரளயத்தை. ஒன்ற - ஒருசேர வென்றபடி. ஆர்ப்ப - பலவின்பால் வினையாலணையும்பெயர்; ஆர்ப்பதுஎன்னுந் தொழிற்பெயரின் விகாரமாகவுமாம். (ருக)

52.—அசுரர் போருக்குப் புறப்படுதல்.

ஆனைதேர்பரியாளெனுநால்வகைத்
தானையோடுமெழுந்தனர்தானவர்
வானுமண்ணுந்திசையுமற்றெண்பெறு
மேனைலோகமுமெங்குநடுங்கவே.

(இ - ள்.) வான்உம் - தேவலோகமும், மண்உம் - பூலோகமும், திசைஉம் - திக்குக்களும், மற்று எண் பெறும் ஏனை லோகம்உம் - இன்னும் (இவற்றுடன் வைத்து) எண்ணப்பெறுகின்ற மற்றையுலகமாகிய பாதாளமும், எங்குஉம் - எல்லா விடமும், நடுங்க - (அதிர்ச்சியால்) நடுக்கமடையும்படி, ஆனை - கஜம், தேர் - ரதம், பரி - துரகம், ஆள் - பதாதி, எனும் - என்கின்ற, நால் வகை தானையோடுஉம் - சதுரங்க சைனியத்துடனே, தானவர் - அசுரர்கள், எழுந்தனர் - (போருக்குப்) புறப்பட்டார்கள் ; (எ - று.)

ஆனை - யானை யென்பதன் மரூஉ ; மதத்தாற் கதஞ்சிறந்து தானும் போர்செய்யும் யானையை முதலில் வைத்துக் கூறினர் ; கம்பரும் "கசரத துரகமாக் கடல்கொள் காவலன்" என இவ்வாறு கூறியிருத்தல் காண்க : இது, தமிழர்வழக்கு; வடநூலார், 'ரதகசதுரகபதாதி'என முறைப்படுத்திக் கூறுவர். (ருஉ)

53.—அப்போது பலவகை வாச்சியங்க ளொலித்தல்.

சங்கும்பேரியுந்தாரையுஞ்சின்னமுந்
துங்கமாமுழவுந்துடியீட்டமு
மங்கண்மாமுரசும்முகவந்தத்திற்
பொங்கும்வேலையொலியிற்புலம்பவே.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) சங்குஉம் - சங்கங்களும், பேரிஉம் - பேரிகைகளும், தாரைஉம் சின்னம்உம் - தாரை திருச்சின்னம் என்னும் ஊதுகருவிகளும், துங்கம் மா முழவுஉம் - உயர்ந்த பெரிய மிருதங்கங்களும், துடி ஈட்டம்உம் -

உடுக்கை முதலிய பறைகளின் கூட்டமும், அம் கண் மா முரசுஉம் - அழகிய அடிக்குமிடத்தையுடைய பெரிய முரசங்களும், (ஆகப் பலவகை வாத்தியங்கள்), உகம் அந்தத்தில் பொங்கும் வேலை ஒலியின் - யுகமுடிவு காலத்திற் கிளர்ந்தெழுகின்ற கடல்களின் ஓசைபோல, புலம்ப - ஒலிக்கவும்,—(எ - று.)—இச்செய்யுளில் 'புலம்ப' என்பதும், மேற்செய்யுளில் 'மிடைய' என்பதும், அதன்மேற்கவியிலுள்ள 'வளைத்தார்' என்பதோடு முடியும்.

சங்கு, முரசு - வடசொற்றிரிபுகள். முழா என்னுங் குறியதன் கீழ் ஆக்குறுகி உகரமேற்று, 'முழவு' என நின்றது; [நன் - உயிர் - 22.] கண் - வாச்சியத்தில் அடிக்கப்படும் இடம்; வாரினாற் கட்டப்படுகிற கண்களுமாம். புலம்பல் - ஒலித்தல்; இனி, புலம்ப - (மேல் நிகழும் அசுரநாசத்தைக் கருதி) அழ என்றுமாம். பிரளயகாலத்திற் கடல்பொங்கி உலகையழிக்கு மென்பது, நூற்றுணிபு. (ருங)

54.—அசுரர்களின் பலவகைப்போர்க்கருவிகள் நெருங்குதல்.

சூலநேமியெழுமழுத்தோமரங்
கோலும்வார்சிலைகுந்தங்கொடுங்கணை
நாலுதானைநடுவஞ்சுடரயில்
வேலும்வாளின்விதமுமிடையவே.

(இ - ள்.) சூலம் - சூலங்களும், நேமி - சக்கரங்களும், எழு - வளைதடிகளும், மழு - பரசுகளும், தோமரம் - தோமரங்களும், கோலும் வார் சிலை - வளைதற்குஉரிய நீண்ட விற்களும், குந்தம் - ஈட்டிகளும், கொடு கணை - கொடிய அம்புகளும், நாலு தானை நடுஉம் சுடர் அயில் வேல்உம் - நால்வகைச்சேனையின்நடுவிலும்விளங்குகின்ற கூர்மையையுடைய வேல்களும், வாளின் விதம்உம் - வாட்களின வகைகளும், (ஆகிய பலவகை ஆயுதங்கள்), மிடைய - நெருங்கவும்,— (எ - று.)

தோமரம் என்று - இருப்புலக்கைக்கும், கைவேலுக்கும், பேரீட்டிக்கும் பெயர். நாலு - நான்கு என்பதன் திரிபு. காத்தற்றொழிலன்றி அழித்தற்றொழில்பூண்ட முக்கட்கடவுட்குங் கூற்றுவனுக்குஞ் சூலவேல் படையாதலாலும் முருகற்கு வேல் ஆயுதமாதலாலும், சான்றோர் வேலையே சிறப்பப் பெரும்பான்மை கூறுதல்பற்றி, அதற்கு 'நாலுதானைநடுவஞ்சுடர்' என்னும் விசேஷணங் கொடுத்தார்; இனி, இவ்வடைமொழியை வாளுக்குங் கூட்டுதலும் ஒன்று. வாள் - ஈர்வாள், உடைவாள், எறிவாள் எனப் பலவகைப்படுதலால், 'வாளின்விதம்' என்றது. (ருச)

55.—அருச்சுனன் தனித்தேனை அசுரர்சேர்களெல்லாஞ் சுற்றிக்கோள்ளுதல்.

முந்துகோபவசுரர்முடிகுதே
ருந்துவீரனொருதனித்தேரினை
வந்துசூழவளைத்தார்மலர்க்
கொந்துசூழ்வரிவண்டின்குழாத்தினே.

(இ - ள்.) முந்து கோபம் அசுரர் - முன்கோபத்தையுடைய அசுரர்கள், முடுகு தேர் - விரைந்துசெல்கின்ற தங்கள் தேர்களெல்லாம், உந்து வீரன் ஒரு தனி தேரினை - (மாதலியாற்) செலுத்தப்படுகின்ற அருச்சுனனது ஒப்பில்லாத வேறு துணையில்லாத தேரொன்றை, வந்து சூழ - வந்து சுற்றிநிற்க, மது மலர் கொந்து சூழ் வரி வண்டின் குழாத்தின் - தேனினையுடைய பூங்கொத்தைச் சுற்றிலும்மொய்க்கின்ற இசைப்பாட்டையுடைய வண்டுகளின் கூட்டம்போல, வளைத்தார் - (அருச்சுனனைச்) சூழ்ந்துகொண்டார்கள்.

"அத்தி னகர மகரமுனை யில்லை" என்ற சூத்திரத்து 'அகரமுனை' என்றதன் உபலக்ஷணத்தால், 'குழாத்தின்' என்பதில் குழாம் என்பதன் மவ்வீறொற்றழிந்து நின்ற ஆகாரத்தின் முன் அத்துச்சாரியையின் முதலகரங் கெட்டது; [உபலக்ஷணமாவது - ஒருமொழி, ஒழிந்த தன் இனங்களையுங் குறிப்பது: நன்-பொது-7.] முந்துதோயவசுரர் என்று பிரதிபேதம். (௫௫)

56.—அவுணர் அருச்சுனன்மேற் கணைதூவுதல்.

நீலமால்வரையொன் றினெருக்கிவீழ்
காலமாமுகிலென்னக்கடியவர்
கோலும்வார்சிலைக்கொண்டலன்னான்மிசைச்
சூலநேமிசுடுசரந்தூவினார்.

(இ - ள்.) நீலம் மால் வரை ஒன்றில் - நீலநிறமுள்ள பெரியதொருமலையின்மேல், நெருக்கி - (ஒன்றோடொன்று தம்மில்) நெருக்குண்டு, வீழ் - இறங்குகின்ற, காலம் மா முகில் என்ன - கார்காலத்துக் கரிய மேகங்கள் போல, கடியவர் - கொடுந்தன்மையுடைய அசுரர்கள், கோலும் வார் சிலை - வளைந்த நீண்ட வில்லையுடைய, கொண்டல் அன்னான்மிசை - மேகம்போன்ற அருச்சுனன்மேலே, சூலம் - சூலாயுதங்களையும், நேமி - சக்கரங்களையும், சுடு சரம் - (பகைவர்களை) அழிக்கின்ற அம்புகளையும், தூவினார் - பெய்தார்கள்.

நீலமலை - அருச்சுனனுக்கும், காலமுகில்கள் - அசுரர்களுக்கும் உவமை. நீலவரை - இந்திர நீலரத்தினமயமானதொரு மலை யென இல்பொருளுவமையுமாம். மால் - உரிச்சொல். மா - பெரிய என்றுமாம். 'சிலைக்கொண்டலன்னான்' என்றதனால், அருச்சுனனது காண்டீவத்துக்கு இந்திரவில் உவமையாமென அறிக. "விற்கொண்டமழையனான்" என்னார் கம்பரும். அருச்சுனனது பெருமை வலிமை அழித்தற்கருமை பற்றி மலையையும், அசுரர்களது கருமை பெருந்தோற்றம் ஆரவாரம் அம்புமழைபொழிதல் பற்றி முகிலையும் உவமை கூறினார். (௫௬)

வேறு

57.— அருச்சுனனும் அவர்கள்மீது கணை தூவுதல்.

அக்கார் முகவீ ரனுமங் கவர்தம்
மைக்கார் முகிலென் னவழுங் கியதிண்
மெய்க்காய் கணைசா பம்விசித் துவிடா
நக்கா னிவைநின் றநவின் றனனே.

(இ - ள்.) அ கார்முகம் வீரனும் - வில்வீரனாகிய அவ்வருச்சுனனும், அங்கு - அப்பொழுது, அவர்தம் - அவ்வசுரர்களது, மை கார் முகில் என்ன வழங்கிய - கரிய கார்காலத்து மேகமென்று (உவமை)சொல்லப்பட்ட, திண் மெய் - வலிய உடம்புகளை, காய் - அழிக்கும்படியான, கணை - அம்புகளை, சாபம் விசித்து - வில்லிற் பதியவைத்து, விடா - (அவர்கள்மேற்) பிரயோகித்து, (அவர்களை நோக்கி), நக்கான் - சிரித்து, நின்று - (சலியாமல் எதிர்) நின்று, இவை நவின்றனன் - இவ்வார்த்தைகளைக் கூறினான்; (எ - று.)—அவற்றை மேலிரண்டுகவிகளிற் கூறுகின்றார்.

கார் என்னும் மேகத்தின்பெயர், அதுபெய்யும் பருவத்துக்கு ஆகுபெயர். இரண்டாம்வேற்றுமைத்தொகை யாதலால் மிகாமல் 'மெய்காய்' என வரற்பாலது, எதுகைநயம்நோக்கி 'மெய்க்காய்' என வலி மிக்கது. நின்று - ஆலீடம் முதலாகச் சொல்லப்படுகின்ற (வில்தொடுத்து அம்பினை எய்வார்க்கு உரிய) நிலைகளுள் ஒன்றிலே நின்று என்றுமாம். நவின்றனன், நவில் - பகுதி. நக்கான் - பகுதி ஒற்றிரட்டியது, இறந்தகாலக்குறி.

இதுமுதற் பதினெட்டுக்கவிகள் - பெரும்பாலும் எல்லாச்சீர்களும் மாச்சீர்களாகிய அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள். (௫௭)

58.—இரண்டுகவிகள் - அருச்சுனனுடைய வீரவாதம்.

திக்கோடிய நுந்திறலும்புகழுந்
தொக்கோடியுடற்றுபடைத்தொகையுங்
கைக்கோடியவெஞ்சிலையின்கணையான்
முக்கோடியுமின்றுமுருக்குவனால்.

இதுமுதல் நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நும் - உங்களுடைய, திக்கு ஓடிய - எல்லாத்திசைகளிலும் பரவிய, புகழும் - கீர்த்தியையும், திறலும் - யுத்தசாமர்த்தியத்தையும், தொக்கு ஓடி உடற்று படை தொகையும் - திரண்டு விரைந்துவந்து (பகைவர்களைப்) பொருது அழிக்கின்ற சேனைகளின் கூட்டத்தையும், மு கோடியும் - மூன்று கோடியென்னுந் தொகையையும், கை-(எனது)கையிலுள்ள, கோடிய-வளைந்த, வெம்-கொடிய, சிலையின்-வில்லினின்று (எய்யப்படுகிற), கணையால்-அம்புகளினால், இன்று - இப்பொழுதே, முருக்குவன் - அழிப்பேன்; (எ - று.)

புகழாவது - இம்மைப்பயனாய் இவ்வுலகத்தில் நிகழ்ந்து என்றும் இறவாமல் நிற்குங் கீர்த்தி. உடற்று - உடல் என்பதன் பிறவினை; று - விகுதி. படை - ஆயுதமுமாம். ஆல் - ஈற்றசை. (௫௮)

59. முன்போர்தொறும்வந்துமுனைந்துவெரீஇ
வென்போகியவிண்ணுறைவீரரலேன்
பொன்போலுநும்மேனிபொடிச்செய்திடாப்
பின்போகுவனென்றிவைபேசலுமே.

(இ - ள்.) முன் - முன்னே, போர் தொறுஉம் - யுத்தங்கள்தோறும், வந்து-எதிர்த்துவந்து, முனைந்து-(உங்களோடு) பொருது, வெரீஇ-பயந்து, வென் போகிய - முதுகுகொடுத்துத் தோற்றோடிப்போன, விண் உறை வீரர் அலேன் - தேவலோகத்தில் வசிக்கின்ற வீரர்கள் போன்றவனல்லேன், (யான்); (எத்தன்மையனெனின்), பொன்போலும் நும் மேனி - பொன் போலருமையான உங்களுடம்பை, பொடி செய்திடா-தூளியாகச் செய்து விட்டு, பின் - அதன் பின்பு, போகுவன்-(இங்குநின்றும்) மீள்வேன், என்று இவை பேசலும் - என்று இவ்வீரவாதங்களை (அருச்சுனன்) சொன்னவளவில்,-(எ - று.)—இது, மேல் 61-ஆம் கவியிலுள்ள 'இசைத்தலும்' என்பதனோடு முடியும்.

வெருவி என்னும் இறந்தகாலவினையெச்சம், விகாரப்பட்டு, 'வெரீஇ' என அளபெடுத்தது; இது, சொல்லிசையளபெடையின்பாற்படும்: மாத்திரை மூன்று. வென்போகியவரை 'வீரர்' என்றது, இகழ்ச்சி. போகுவன் - அன்விகுதி தன்மையொருமைக்கு வந்தது, புதியன புகுதல்; இதற்கு விதி, தொல்காப்பியத்தில் இல்லை; உரையாசிரியர்கள் எதிரதுபோற்றலால்அமைத்திருக்கிறார்கள்; அவர்கள்கருத்துப்பற்றிப் பின்னூலாராகிய நன்னூலார் விதி கூறினர் : பழைய இலக்கணநூலார் சிறுபான்மை இவ்வாறுவருவதைத் தன்மையிற்படர்க்கைவந்த இடவழுவமைதியாக் கொண்டார்போலும்.(ருக)

60.—அசுரர்கள் அருச்சுனனைநோக்கி இகழ்ந்துகூறுதல்.

தழல்வந்தருள்பாவைதடந்துகிலுங்
குழலுங்கவர்ந்தடல்கூருமுமக்
கழலுன்றியகானமளித்தவரைக்
கழல்வெஞ்சிலைவீரகடிந்திலையே.

(இ - ள்.) தழல் வந்தருள் பாவை - அக்கினியிலே அவதரித்தருளிய சித்திரப்பிரதிமைபோலழகிய (உங்கள்மனைவியாகிய) திரௌபதியினது, தட துகில்உம் - பெரிய சேலையையும், குழல்உம் - கூந்தலையும், கவர்ந்து- (உங்கள்முன்னிலையில்) பிடித்து இழுத்து அவிழ்த்து, அடல் கூரும் உமக்கு- வலிமை மிகுந்த உங்களுக்கு, அழல் துன்றிய கானம் அளித்தவரை-தீ நிரம்பிய காட்டை இடமாகக்கொடுத்த துரியோதனாதியரை, கழல் வெம் சிலை வீர - வீரக்கழலையும் கொடிய காண்டீவத்தையுமுடைய வீரனே! கடிந்திலை - (நீ) அழித்தாயில்லையே; (எ - று.)

'உன்வீரம் என்னவீரம்' என்று இகழ்ந்தார். உனக்கும் உனது உடன் பிறந்தவர்களுக்கும் மனைவிக்கும் பெரும்பரிபவங்களைச் செய்தவர்களை அழிக்க வல்லமையில்லாத உனக்கு வீரவாதம்முழங்க என்னவாயுண்டென்ற வாறு: இனி உனக்குத் தீங்குசெய்தவர்களைவிட்டு உனக்கு நேரில் ஒரு தீங்குஞ்செய்யாத எங்கள்மீது போருக்கெழுவது வீரமன்று என்று கருத்துக் கொள்வாருமுளர். பாவை - உவமையாகுபெயர். உமக்கு - உளப்பாட்டு முன்னிலைப் பன்மை. கானம்=காநநம். 'கடந்திலை' என்றும் பாடம். (சு0)

61.—ஐந்துகவிகள் - அருச்சுனனுக்கும் அசுரர்க்கும் கடும்போர்விளைய அசுரர்போருதந்து அந்திறு ரென்று கூறும்.

என்னுவசுரேசரிசைத்தலுமே
மன்னுகவவீரனும்வார்சிலைநாண்
டன்னுகமுறத்தழுவத்தழல்வாய்
மின்னூர்கணைதூவிவெகுண்டனனே.

(இ - ள்.) என்னு - என்று, அசுர ஈசர் - அசுரத்தலைவர்கள், இசைத்தலும் - சொன்னவளவிலே,—மன் ஆகவம் வீரன்உம் - நிலைபெற்ற போரில் வல்ல அருச்சுனனும், வார் சிலை நாண் - நீண்ட வில்லின் நாணி, தன் ஆகம் உற தழுவ - தனது மார்பை நன்றாகப்பொருந்தும்படி, (அதனை மிக்கு இழுத்து), தழல் வாய் மின் ஆர் கணை தூவி - நெருப்புப்போற் கொடிய நுனியையுடைய (ஒளியால்) மின்னல்போன்ற அம்புகளை (அவர்கள்மீது) சொரிந்து, வெகுண்டனன் - கோபித்தான்; (எ - று.)

அசுரர்கள்போல வார்த்தையாலன்றிச் செய்கையினால் தனது கோபத்தை வெளிக்காட்டினு னென்பார், 'கணைதூவி வெகுண்டனன்' என்றார்; இனி, வெகுண்டு கணை தூவினன் என விகுதிபிரித்துக் கூட்டுவாருமுளர். அசுர+ஈசர்=அசுரேசர்; வடமொழிப்புணர்ச்சி: குணசந்தி. ஆகவம் - வடசொல். ஆர் - உவமவுருபு. (சுக)

62. பொய்த்தானவர்போரரியன்னவன்மேல்
மொய்த்தார்முகில்செங்கதிர்மூடுவபோல்
வைத்தாரைவடிக்கணைவாண்மழுவே
லுய்த்தார்வரைமேலுருமேறெனவே.

(இ - ள்.) முகில் - மேகங்கள், செம் கதிர் - சிவந்த கிரணங்களையுடைய சூரியனை, மூடுவ போல் - மறைப்பனபோல, பொய் தானவர் - வஞ்சனையையுடைய அசுரர்கள், போர் அரி அன்னவன்மேல் - யுத்தத்திற் சிங்கத்தையொத்த அருச்சுனன்மேலே, மொய்த்தார் - நெருங்கி, வை தாரை வடி கணை - கூர்மையான நுனியையுடைய நெருப்பிற்காய்ச்சியடிக்கப்படு தலையுடைய அம்புகளையும், வாள் - வாட்களையும், மழு - மழுக்களையும், வேல் - வேல்களையும், வரைமேல் உரும் ஏறு என - மலையின்மேல் விழுகின்ற பேரிடிகளைப்போல, உய்த்தார் - செலுத்தினார்கள்; (எ - று.)

பொய்த்தானவர் என்பதற்கு - (இனி விரைவில் அழிதலினால்) பொய்யாகும் அசுரரென்றுமாம். முகில் செங்கதிர் மூடுதல், விரைவில் மூட்டம் வாங்குவதற்கு உவமை. வை-உரிச்சொல்; "வையே கூர்மை" என்பது, தொல்காப்பியம். ஏறு-ஆண்பெயர்; பெரியதை ஆணென்றல், ஒருமரபு: 'ஆணலை' என்பதுங் காண்க. செங்கதிர்-பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை யென்றாயினும், கதிர்-அடையடுத்து வந்த சினையாகுபெய ரென்றாயினுங் கொள்க. அரியன்னவன்-யானைமுதலிய பெருவிலங்குகளையும் அழிக்கவல்ல மிருகேந்திரனாகிய சிங்கம்போலப் பெரும்பகைவர்

களையும் அழிக்கவல்ல பெருவீரன்; இனி, அசுரகிரஸனத்தில் திருமால் போன்றவனென்றுமாம். உருமுற்றெனவே என்று பிரதிபேதம். (சுஉ)

63. என்முன்னவனென்முனெனுவெவரும்
முன்முன்வரமுந்தமுருக்கினனுற்
றன்முன்னொருவீரர்தராதலமேல்
வின்முன்னினிலாவிறல்வில்விசயன்.

(இ - ள்.) வில் முன்னின்-வில்வித்தையைப்பற்றி ஆலோசிக்குமிடத்து, தராதலம் மேல் - நிலவுலகத்திலே, தன் முன் - தனக்கு எதிரில், ஒரு வீரர் நிலா - ஒருவீரரும் நிற்கப்பெறாத, விறல் வில் விசயன் - வெற்றியைத் தருகின்ற வில்லையுடைய விசயனென்னும் ஒருபெயரையுடைய அருச்சுனன்,— எவர்உம் - அசுரர்கள் பலரும், என்முன் அவன் என்முன் என - அவ்வருச்சுனன் எனக்குமுன்னே (போர்செய்க) எனக்குமுன்னே (போர்செய்க) என்று சொல்லிக்கொண்டு, முன் முன் வர-ஒருவர்முன்னே ஒருவர் தன்னை எதிர்த்து வந்துகொண்டிருக்க,—(அவர்களையெல்லாம்), முந்த - முற்பட, முருக்கினன் - கொன்றுகொண்டே வந்தான்; (எ - று.)

இலா எனப்பிரித்து - விற்போர்விஷயத்தில் ஒரு வீரரையும் தன்னினுஞ்சிறந்தவராக உடையவனுகாத என்று உரைப்பாருமுளர். தராதலம்-பூமியாகிய இடம் என இருபெயரொட்டுப் பண்புத்தொகையென்றாவது, பூமியினது இடம் என (உடைமையும் உடையதும் வேறாகாத) ஒற்றுமைக்கிழமைப் பொருளில்வந்த ஆறாம்வேற்றுமைத்தொகையென்றாவது கொள்க. முருக்கு - முருங்கு என்பதன் பிறவினை. (சுஙா)

64. ஒருதேர்கொடுவீரனுடன்றவர்தங்
கரிதேர்பரியாளணிகையறமுன்
னிருதேசரைவென்றவனேரெனமேல்
வருதேரணிதோறுமலைந்திடவே.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) வீரன்-அருச்சுனன்,-ஒரு தேர் கொடு-(தனது) ஒரு தேரின் மீதிலிருந்துகொண்டே, மேல் வரு தேர் அணி தோறுஉம் உடன்றவர்தம்-மேன்மேல் வருகின்ற தேர்வரிசைகளிலெல்லாமிருந்து போர்செய்த அசுரர்களுடைய, கரி தேர் பரி ஆள் அணி - கஜ ரத துரக பதாதியாகிய சதுரங்க சைனியம், கையற - அழியும்படி,—முன் நிருத ஈசரை வென்றவன் நேர் என - முன்னே (இராவணுதி) ராக்ஷசத்தலைவர்களைச் சயித்த ஸ்ரீராமபிரான் உவமையென்னும்படி, மலைந்திட-போர்செய்ய,—(எ-று.)-'மலைந்திட' என்பது, வருங்கவியில் 'குளித்திடலால்' என்பதனோடு தொடரும்.

ஒரு தேர் கொடு என்றது - பகைவர்கள்தேர் பலவற்றைத் தான் அழித்தும் தன்தேருக்குச் சிறிதும் அவர்களால் அழிவுநேராமற் காத்து என்றபடி. கொடு - கொண்டு என்பதன் விகாரம். நிருதர் - நைர்ருதர்: வடமொழித்திரிபு; நிருருதியென்னுந்திக்பாலகியினது மரபில் தோன்றிய

வர். கையற, கை-பொருள்குறியாதுநின்றதமிழுபசர்க்கம் ; இனி, செயலற என்றுமாம். மூன் - இடைச்சொல் : இங்கே, காலப்பொருளது. (சுச)

65. வீரன்சரம்வஞ்சகர்மெய்ம்முழுதுங்
கூரும்படிசென்றுகுளித்திடலா
லாரும்பொரவஞ்சினரப்பொழுதிற்
றேருந்தினரெண்ணிறெயித்தியரே.

(இ - ள்.) வீரன் சரம் - அருச்சுனனது பாணங்கள், வஞ்சகர் மெய் முழுதுஉம்-வஞ்சனையையுடைய அசுரர்களது உடம்புமுழுவதிலும், கூரும் படி - மிகும்படி, சென்று குளித்திடலால் - போய்த் தைத்து முழுகிவிட்ட தனால், ஆர்உம் பொர அஞ்சினர்-(தானவர்கள்) எவரும் எதிர்த்துப் போர் செய்தற்குப்பயப்பட்டார்கள் ; அ பொழுதில் - அந்தச்சமயத்தில், எண் இல் தெயித்தியர்-கணக்கில்லாத திதிமக்களாகிய அசுரர்கள், தேர் உந்தினர் - தேரை எதிரிற்செலுத்திவந்தார்கள், (எ - று.)

தைத்தியர்-தத்திதாந்தநாமம்; இது-தயித்தியர் எனப் போலிபெற்று, மோனைப்பொருத்தம்நோக்கி, தெயித்தியர் எனத் திரிந்துநின்றது. (சுரு)

66.—போர்செய்யஅஞ்சிய தானவரைநோக்கி அந்சாதவர் கூறியது.

என்னேயொருமானுடனுக்கெவருங்
கொன்னேயடலாண்மைகொடுக்குமதோ
வின்னேயிவனுவியழித்திமையோர்
முன்னேவயவாகையுமுற்றுவமால்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) என்னே - (இது) என்ன செயகை ? ஒரு மானுடனுக்கு - மனிதனொருவனுக்கு, எவர்உம்-அசுரர்கள் யாவரும், கொன்னே - வீணாக, அடல் ஆண்மை - பலபராக்கிரமங்களை, கொடுக்குமதுஒ-இழப்பது தகுதியோ ? இன்னே - இப்பொழுதே, இவன் ஆவி அழித்து-இவனது உயிரை உடம்பினின்று ஒழித்து, [கொன்று என்றபடி], இமையோர் முன்னே-தேவர்களது முன்னிலையிலே, வயம் வாகையும் - வெற்றிக்கு அடையாளமான வாகைப்பூமாலையையும், முற்றுவம் - குறைவின்றி அணிவோம் ; (எ - று.)—'என்று கூறி' யென வருவிக்க. ஆல் - அசை : தேற்றமுமாம்.

என் - எவனென்னும் அஃறிணைமுற்றின் விகாரம் ; ஏ-சாரியை. அடலாண்மை-உம்மைத்தொகை; அஃறிணையாதலால், பன்மைவிகுதிபெறாது நின்றது: [நன்-பொது-21.] கொன் - பயனின்மைப்பொருள் குறிப்பதோர் இடைச்சொல்; "அச்சம்பயமிலி காலம்பெருமையென், றப்பானான்கே கொன்னைச்சொல்லே" என்பது, தொல்காப்பியம். இமையாக்கண்ணாதலின், 'இமையோர்' என்றார்; இமைத்தல் - கண்களின் இதழ்களிரண்டையும் மூடித்திறத்தல்: இவ்வினையாலணையும்பெயரில் எதிர்மறையாகாரம் புணர்ந்துகெட்டது ; விகுதிமுதலாகாரம் ஓவாயிற்று. இனி, இமையில் (மூடாமையாகிய) விசேஷமுடையவரென்றுமாம். மூன், இங்கே-இடமுன்.

வாகை என்னும் மரத்தின்பெயர், இங்கே, இருமடியாகுபெயர். வென்றோர் வாகைமாலை சூடுவரென்பது, தமிழர்மரபு. முற்றுவம் - நீங்களும் யாமும் என முன்னிலையாரைத் தம்மோடு உளப்படுத்தி அதற்கு உரிய அம்விகுதி பெற்றுவந்த தன்மைப்பன்மைமுற்று: [நன் - வினை - 13.] (சுசு)

67.—இதுமுதல் ஐந்துகவிகள்-தானவருடன் அருச்சுனனுக்குக் கடும்போர் விளைய, அவன் அவர்களொழியப் பிரமாஸ்திரந்தொடுத்தமை கூறும்.

காளப்புயலென்னநிறங்கரியார்
மீளப்படைகொண்டுவிரைந்துவெகுண்
டாளித்திறன்மொய்ம்பனையங்கடலால்
வாளக்கிரியென்னவளைந்தெவரும்.

(இ - ள்.) காளம் புயல் என்ன - கரிய (கார்காலத்து) மேகம்போல, நிறம் கரியார் - கருமைநிறத்தையுடையவர்களாகிய, எவர்உம்-தைத்தியர்களெல்லோரும், மீள படைகொண்டு - (முன் எடுத்துவந்தவை போதாமல்) மறுபடியும் பல ஆயுதங்களை எடுத்துக்கொண்டு, விரைந்து - துரிதமாக வந்து, வெகுண்டு - கோபித்து, ஆளி திறல் மொய்ம்பனை - சிங்கத்தைப்போன்ற சாமர்த்தியத்தையும் வலிமையையுமுடைய அருச்சுனனை, வாளம் கிரி என்ன - சக்கரவாளமலைபோல, வளைந்து - (இடைவிடாமற்) சூழ்ந்துகொண்டு, அங்கு - அப்பொழுது [அவ்விடத்தில்], அடலால் - போர்செய்ததனால்,—(எ - று.)—'ஆர்த்தார்' என வருங் கவியோடு இயையும்.

என்ன - உவமவுருபு. மீள-(பகைவன்) பின்னிட என்றுமாம். வாளக்கிரி - எழுதீவுகளையுஞ் சூழ்ந்த எழுசமுத்திரங்களுக்கும் அப்புறத்தில் பூமிக்குக் கோட்டைமதில்போலச் சுற்றியிருப்பதொரு மலை. (சுஎ)

68. ஆர்த்தாரகல்வானமுமாழ்கடலுந்
தூர்த்தார்சுடர்வெம்படைகொண்டெவருந்
தேர்த்தானவர்வானுறைதேவருமெய்
வேர்த்தாரினிமேல்விளைவேதெனவே.

(இ - ள்.) தேர் தானவர் எவர்உம் - (முன்னே போர்செய்ய அஞ்சிய) தேரின்மீதுள்ள தானவர்களெல்லாரும், ஆர்த்தார் - அஞ்சாது பல (தைத்தியர்கள் பொருதலைநோக்கி ஆனந்தத்தால்) ஆரவாரித்தார்கள்; சுடர் வெம் படை கொண்டு - (அருச்சுனன்மீது எறிந்த) ஒளியையுடைய கொடிய ஆயுதங்களால், அகல் வானம்உம் - பரந்தஆகாயத்தையும், ஆழ் கடல்உம் - ஆழ்ந்தகடலையும், தூர்த்தார் - நிறைத்தார்கள்; (அதுகண்டு), வான் உறை தேவர்உம்-ஆகாயத்திலிருந்து போர்காண்கின்ற தேவர்களும், இனி மேல் விளைவு எது என - இனிமேல் (அருச்சுனனுக்கு) உண்டாகும் அபாயம் யாதோவென்று சங்கித்து, மெய் வேர்த்தார் - உடம்பு வேர்வையடைந்தார்கள்; (எ - று.)

மெய்வேர்த்தல் - அச்சம்பற்றிய மெய்ப்பாடு. இனியென்பது, எதிர்காலப் பொருள்குறிப்பதோர் இடைச்சொல். விளைவு - உண்டாதல்: உண்டாகுஞ் செயலுக்குத் தொழிலாகுபெயர். (சுஅ)

69. கூற்றொப்பனபல்படைகொண்டவன்மேற்
சீற்றத்தொடெறிந்தனர்தீயவரு
மாற்றற்சிலைவீரனுமவ்வவ்வெலா
மாற்றிச்சரமாரிவழங்கினனால்.

(இ - ள்.) தீயவர்உம் - கொடிய அசுரர்களும், கூற்று ஒப்பன-(நாசத்தைச் செய்தலால்) யமனை ஒப்பனவாகிய, பல் படை - பல ஆயுதங்களை, கொண்டு - (கைகளில்) எடுத்து, அவன்மேல் - அவ்வருச்சுனன்மீது, சீற்றத்தொடு - கோபத்துடனே, எறிந்தனர் - வீசினார்கள்; ஆற்றல் சிலை வீரன்உம்-வலிய வில்லையுடைய அருச்சுனனும், அவ்அவ் எலாம்-அந்த அந்த ஆயுதங்களை யெல்லாம், மாற்றி - (தான் விடும் அம்புகளால்) விலக்கி, சரம் மாரி வழங்கினன் - (அவர்கள்மீதும்) பாணவருஷத்தைப் பொழிந்தான்.

அடுக்கிவந்த அவ் என்பது - சுட்டடியாப்பிறந்த பலவின்பாற் பெயர்.

70. அவன்விட்டசரங்களறுத்தணிதேர்
கவனப்பரிபாகுகலக்கமுறப்
பவனத்துடனங்கிபரந்ததுபோற்
றுவனித்தவர்வெம்படைதூவுதலும்.

இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்.

(இ - ள்.) அவா - அசுரர்கள், அவன் விட்ட சரங்கள் - அருச்சுனன் எய்த அம்புகளை, அறுத்து - (தாங்கள் விடும் ஆயுதங்களால்) துணித்துத் தள்ளி, துவனித்து - ஆரவாரஞ்செய்து, அணி தேர் - (அவனது) அழகிய தேரும், கவனம் பரி-விரைந்த நடையையுடைய குதிரைகளும், பாகு-சாரதியும், கலக்கம் உற - கலங்குதலை யடையும்படி, பவனத்துடன் அங்கி பரந்தது போல் - காற்றோடு நெருப்புப் பரவியதுபோல, [மிகவும் அதிகமாக விரைவிற் பரவும்படி], வெம் படை தூவுதலும் - கொடிய ஆயுதங்களை (அவன்மேற்) சொரிந்தவளவில், (எ - று.)—'படையைத்தொட்டான்' என மேற்கவியோடு இயையும்.

பாகு - யானை தேர் குதிரைகளைச் செலுத்துந் தொழில்; அது, இங்குப் பாகனுக்குப் பண்பாகுபெயர். அங்கி=அக்நி. துவனித்து-த்வநி என்னும்வடமொழிப்பெயர்ச்சொல்லடியாகப் பிறந்த வினையெச்சம். (எ0)

71. கட்டார்முதுகார்முகவீரனுமுன்
கிட்டாவுலகோர்புகழ்கேழ்கிளர்சீர்
முட்டாமரைமேன்முனிவன்படையைத்
தொட்டானசுரேசர்தொலைந்துகவே.

(இ - ள்.) கட்டு ஆர்-கட்டு அமைந்த, முது கார்முகம் - பழமையான காண்டீவத்தையுடைய, வீரன்உம் - அருச்சுனனும், முன் கிட்டா - (அவர்களுக்கு) எதிரில் நெருங்கி, அசுர ஈசர் தொலைந்து உக - அவ்வசுரத் தலைவர்கள் அழிந்து விழும்படி, உலகோர் புகழ் - எல்லாவுலகங்களிலுமுள்ளாரியாவரும் துதிக்கின்ற, கேழ் கிளர் - ஒளி விளங்குகின்ற, சீர் - சிறப்பை,

யுடைய, முள் தாமரை மேல் முனிவன் - முள்ளையுடைய தாமரைமலரின் மீது தோன்றிய பிரமதேவனது, படையை - அஸ்திரத்தை, தொட்டான் - பிரயோகித்தான் ; (எ - று.)

தாமரை - தாமரஸ மென்னும் வடமொழித் திரிபு. முதுகார்முகம் - மிகப்பழையதாயிருந்தும் எந்தப்போரிலுந் துணிவுபடாத வலிமை யுடைய தென்றபடி. (எக)

72.—பிரமாஸ்திரத்தினால் போர்க்களம் பட்ட நிலை.

காற்றாய்மிகமண்டுகடுங்கனலாய்க்
கூற்றாயவராவிகுடித்துருசெஞ்
சேற்றாலொருபாதிசிவந்ததுபா
ரேற்றானொருபங்கெனவெங்கணுமே.

(இ - ள்.) (அப்பிரமாஸ்திரம்),— காற்று ஆய் - (விரைந்து செல்லுதலால்) காற்றையொத்தும், மிக மண்டு கடு கனல் ஆய்-(எரிப்பதனால்) மிகுதியாகப் பற்றியெரிகின்ற கொடிய நெருப்பை யொத்தும், கூற்று ஆய் - (கொல்லுதலால்) யமனை யொத்தும், அவர் ஆவி குடித்து - அவ்வசுரர்களது உயிரைப் பருகிவர,—உகு செம் சேற்றால் - (அவர்களுடம்பினின்று) சிந்துகின்ற சிவந்த இரத்தக்குழம்பினால், பார் - (யுத்த) பூமி, ஏற்றான் ஒரு பங்கு என - ருஷபத்தை வாகனமாகவுடைய சிவபிரானது ஒரு பாகம்போல, ஒரு பாதி எங்கணும் - ஒரு பாதியிடம் முழுவதும், சிவந்தது - செம்மைநிறமடைந்தது ; (எ - று.)

ஆய் - உவமவுருபு. குடித்து=குடிக்க: எச்சத்திரிபு. செஞ்சேறு-செந்நீர்ச்சேறு. ஒருபாதி - அசுரர்களுள்ள பாகம் மாத்திரம்; அருச்சுனனுள்ள பாகத்தில் இரத்தம் இல்லை யென்க. ஏறு என்னும்ஆண்மைப்பெயர் பசுவிற்கு உரியதாதலை, "எருமையு மரையும் பெற்றமு மன்ன" என்னுந் தொல்காப்பியத்தால் அறிக. அர்த்தநாரீசுவரனாகிய சிவனது உருவத்தில் தானாகிய வலதுபாகம் சிவந்தும், பார்வதியாகிய இடதுபாகம் கறுத்தும் இருத்தலால், 'ஏற்றானொருபங்கென' என்றார். இனி, ஏற்றானொருபங்கென என்பதற்கு - (மாவலிபக்கல் மூவடி) மண்ணை இரந்த திருமாலினது வலப்பாகம் போல என்றும் உரைக்கலாம்; "பிறைதங்கு சடையானை வலத்தே வைத்து" எனப் பெரியார் பணித்தார். ஏற்றான் - பிக்ஷாடனஞ்செய்தவனெனச் சிவபிரானுமாம். (எஉ)

73.—பிரமாஸ்திரம் படுத்திய பாடு.

நூறாயிரதேரணிநூறியுமே
லாறாதசினத்துடனக்கணைபோய்
மாறாயவர்மார்பமுமவாண்முகமுஞ்
சீறாவெதிர்சென்றுசெறிந்ததுவே.

(இ - ள்.) அ கணை - அந்தப் பிரமாஸ்திரம்,—நூறு ஆயிரம் தேர் அணி - இலட்சம் தேரின்வரிசைகளை, நூறிஉம் - பொடியாக்கியும், மேல்

ஆறாத சினத்துடன் - அதன்பின்புந் தணியாத கோபத்துடனே, போய் - சென்று, மாறு ஆயவர் - பகையானஅசுரர்களது, மார்பம்உம்-மார்பையும், வாள் முகம்உம்-ஒளியையுடைய முகத்தையும்(நோக்கி), சீறு - கோபித்து, எதிர் சென்று - (அம்மார்புமுகங்களின்) எதிரிற் போய், செறிந்தது-(அவிற்றில்) அழுந்திற்று: (எ - று.)

நூறுயிரதேர்=நூறுயிரந்தேர்: பண்புத்தொகைப்பன்மொழித்தொடர்: செய்யுளாதலின் விகாரம்பெற்று வந்தது. மாறு - மாற்றார்க்குப் பண்பாகு பெயர். இனி, மாறு ஆய் - பகையுடையதாய், அவர் - அவ்வசுரர்களுடைய என்றும் உரைக்கலாம். வாள் - ஒளியுணர்த்தும்போது உரிச்சொல். (எங)

74.—இருகோடியசுரர்திரண்டு அருச்சுனனோடு போரநெருங்குதல்.

குருகோடியையுங்குருதிக்கடல்வா
யொருகோடிதயித்தியராருயிருண்
டருகோடியவாளியடர்ப்பதுகண்
டிருகோடியுமுற்றனமற்றிவன்மேல்.

(இ - ள்.) அருகு ஓடிய வாளி - (அவ்வசுரர்களது) சமீபத்திலே விரைந்துசென்ற அந்தஅஸ்திரம், குருகோடு இயையும் குருதி கடல்வாய் - (கழுகுமுதலிய புலாலுண்ணும்) பறவைகளோடு பொருந்திய இரத்தசமுத்திரத்திலே, ஒரு கோடி தயித்தியர் ஆர் உயிர் உண்டு - ஒருகோடி அசுரர்களது அருமையான உயிரை (உடம்பினின்று எடுத்து) உட்கொண்டு, அடர்ப்பது - அழித்துவருவதை, கண்டு - பார்த்து, இருகோடிஉம் - அசுரர்களது மற்றைஇரண்டுகோடித்தொகையும், இவன்மேல்-அருச்சுனன்மேலே, உற்றன - வந்து நெருங்கின; (எ - று)

மற்று - அசைநிலை; வேறு என்னும் பொருளதாக்கி, மற்றிருகோடியென இயைத்தலுமாம். கடல்வாய், வாய் - ஏழனுருபு. ஆர் உயிர்-பண்புத்தொகை; வினைத்தொகையாய்-(உடலில்) நிறைந்த உயிர் என்றுமாம். (எச)

வேறு

75.—இதுமுதற் பதினொன்றுகவிகள் - பலவகைப்படைகள்கொண்டு அருச்சுனனும் அசுரசேனைகளும் பொர, அசுரசேனை தேய்ந்தமை கூறும்.

இருண்டது மண்ணும் விண்ணு மெல்லையெண் டிசையு மெங்கும்
புரண்டது குருதி வெள்ள மூழிவெங் கடலிற் பொங்கி
முரண்டகு தேரோன் றன்னை மொய்த்தவெம் பனிபோன் மூடித்
திரண்டது திருகி மீண்டுந் திறலுடைத் தகுவர் சேனை.

(இ - ள்.) மண் உம் - பூமியும், விண் உம் - ஆகாயமும், எல்லை எண் திசை உம் - எட்டுத்திக்குகளின் எல்லைகளும், இருண்டது - (தனித்தனி இறந்துபோன அசுரர்திரளால்) இருட்சியடைந்தது; குருதி வெள்ளம் - (அவர்களது) இரத்தப்பெருக்கம், ஊழி வெம் கடலின் - பிரளயகாலத்துக் கொடிய கடல்போல, பொங்கி - (மேன்மேல்) அதிகப்பட்டு, எங்கு உம் - எவ்விடத்தும், புரண்டது - அலைகளோடு பரவிற்று; திறல் உடை தகுவர்

சேனை - வலிமையையுடைய மற்றை இருகோடியசுரர்களுடைய சைனியம், மூரண் தகு தேரோன்தன்னை - வலிமைபொருந்திய தேரையுடைய சூரியனை, மொய்த்த - (சுற்றிலும்) நெருங்கி மறைத்த, வெம் பனி போல் - கொடிய பனியானதுபோல, (மூரண் தகு தேரோன்தன்னை) - வலிமை பொருந்திய தேரையுடைய அருச்சுனனை, மூடி - மறைத்து, மீண்டும் - மறுபடியும், திருகி திரண்டது - சுற்றிலும் வளைந்து கூடிற்று; (எ - று.)

சூரியனை மொய்த்த பனி-இடையூறொன்றுஞ் செய்யமாட்டாமைக்கும் விரைவிலழிதற்கும் உவமை.

இது முதல் இருபத்துமூன்று கவிகள் - இச்சருக்கத்தின் முதற்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (எரு)

76. எங்கெங்கேயெங்கேவல்வின்மனிதனென்றெதிர்ந்தோர்யார்க்கு
மங்கங்கேயங்கேயாகியவரொடுமடுபோர்செய்தான்
சங்கங்கேய்செங்கைநல்லார்விடுத்தனசுரும்பின்சாலங்
கொங்கெங்கேயெங்கேயென்றுதனித்தனிகுடையுந்தாரான்.

(இ - ள்.) 'வல் வில் மனிதன் - வலிய வில்லையுடைய மனுஷ்யன், எங்கு எங்கே எங்கே - எவ்விடத்துள்ளான் எவ்விடத்துள்ளான் எவ்விடத்துள்ளான்?' என்று-என்று சொல்லி, (தனித்தனி தேடிக்கொண்டு), எதிர்ந்தோர் யார்க்கும் - எதிர்த்துவந்த அசுரர்களனைவர்க்கும், அங்கு அங்கே அங்கே ஆகி - அவரவர்கருதிய அந்தந்தமுன்னிடத்திலே சென்று, அவரொடும் - அவர்களுடனே, அடு போர் செய்தான்-கொல்லுகின்ற யுத்தத்தைப் பண்ணினான்: (யாரென்னில்), சங்கு - சங்கவளையல்கள், அங்கு-முன்னிடத்தில், ஏய் - பொருந்தப்பெற்றுள்ள, செம் கை-சிவந்தகைகளையுடைய, நல்லார் - அழகிய பெண்கள், விடுத்தன - தூதனுப்பியவையாகிய, சுரும்பின் சாலம் - வண்டுகளின் கூட்டம், கொங்கு எங்கே எங்கே என்று-தேன் எவ்விடத்தே (உள்ளது) எவ்விடத்தே (உள்ளது) என்று, தனி தனி-தனியேதனியே, குடையும் - ஆராய்ந்து உண்கின்ற, தாரான் - பூமாலையையுடைய அருச்சுனன்; (எ - று.)

பின்னிரண்டடிகளால், கண்ட மகளிர் யாவராலுங் காதலிக்கப்படுகின்ற அருச்சுனனது கட்டழகு கூறப்பட்டது. தேனெங்கே யெங்கே யென்று தேடிவருகின்ற வண்டுகளுக்கெல்லாம் திருப்தியாகத் தேனைக் கொடுக்கின்ற மாலையையுடையவன் போரெங்கேயெங்கேயென்று தேடிவருகின்ற அசுரர்க்கெல்லாம் திருப்தியுண்டாம்படி போரைக்கொடுத்தான் என ஒருவகைச்சாதுரியந் தோன்றக் கவி கூறினார். அடுபோர் - வினைத்தொகை. சங்கு - அதனாலாகிய வளைக்குக் கருவியாகுபெயர். நல்லாள் என்று இலக்குமிக்குப் பெயராதலால், நல்லார் என்பது - பெரும்பாலும் மகளிரையே யுணாத்தும். சுரும்பு - எல்லாமணத்திலுஞ்செல்வதொரு வண்டின் சாதி பேதம். சாலம் - ஜாலம். கொங்கு - வாசனையுமாம். குடையுந் தார் - பெயரெச்சம் இடப்பெயர்கொண்டது ; குடைதற்கிடமான மாலையென்க. (எசு)

77. கார்முகக்கொண்டலன்னான்மிசைக்கடுங்கணைகளேவித்
தேர்முகத்தியக்கமாற்றித்திதிமைந்தர்வெம்போர்செய்யப்
போர்முகத்தொருவரொவ்வாப்புரிசிலைவீரன்றானுங்
கூர்முகப்பகுவாய்மாயோன்கொடுங்கடும்பகழிகோத்தான்.

(இ - ள்.) திதி மைந்தர் - திதி என்னும் காசியப முனிவர்மனைவியது புத்திரர்களாகிய அசுரர்கள், கார்முகம் கொண்டல் அன்னான் மிசை - வில்லையுடைய மேகம்போன்ற அருச்சுனன்மேலே, கடு கணைகள் ஏவி-கொடிய அம்புகளைப் பிரயோகித்து, தேர் முகத்து இயக்கம் மாற்றி - (அவனது) தேரினது முன்செல்லுதலைத் தடுத்து, வெம் போர் செய்ய-கொடிய யுத்தத்தைப் பண்ண, போர்முகத்து ஒருவர் ஒவ்வா - போர்க்களத்திலே ஒருவரும் (தனக்கு) ஒப்பாகப் பெறாத, புரி சிலை வீரன்தான்உம் - கட்டமைந்த வில்லையுடைய அருச்சுனனும், கூர் முகம்-கூர்மையாகிய நுனியையும், பகு வாய் - பிளவுபட்ட வாயையுமுடைய, கொடு - கொடிய, கடு-வேகத்தையுடைய, மாயோன் பகழி - திருமாலினது அஸ்திரத்தை, கோத்தான் - தொடுத்தான்; (எ - று.)

இயக்கம், இயங்கு - பகுதி. மாயோன்பகழி - வைஷ்ணவாஸ்திரம். விரைவுணர்த்தும் 'கடி' என்னும் உரிச்சொல், கடும்எனத் திரிந்தது. (எஎ)

78. விண்ணிடத்தசனிநாகர்மேல்வெகுண்டிடுவதென்ன
வெண்ணுடைச்சேனைவெள்ளமெங்கணுந்தானேயாகி
வண்ணவிற்படையிராமன்வாரிதிவெள்ளம்வீத்த
பண்ணெனப்படுத்ததந்தப்பைந்துழாய்ப்பரமன்வாளி.

(இ - ள்.) பை துழாய் பரமன் - பசிய திருத்துழாய்மாலையையுடைய யாவரினுஞ் சிறந்த திருமாலைத் தெய்வமாகவுடைய, அந்த வாளி - அந்த அஸ்திரம் ஒன்று,—விண்ணிடத்து அசனி-மேகத்தினிடத்தே தோன்றுகிற இடி ஒன்றுதானே, நாகர்மேல் - பாதாளலோகத்திலுள்ள சர்ப்பசாதியார் பலர்மேலும், வெகுண்டிடுவது என்ன - கோபித்திடுவதுபோல, எண் உடை சேனை வெள்ளம் எங்கண்உம் - (இரண்டுகோடி யென்னுங்) கணக்கையுடைய சேனைக்கூட்டம் எவ்விடத்தும், தான்ஏ ஆகி - தானே சென்று நின்று, வண்ணம் வில் படை இராமன்-அழகிய கோதண்டமென்னும் வில்லை ஆயுதமாகவுடைய ஸ்ரீராமபிரான், வாரிதி வெள்ளம் வீத்த - கடல் நீர்வெள்ளத்தை ஒழியச்செய்த, பண் என-விதம்போல, படுத்தது-(அசுரசேனையை) அழித்தது; (எ - று.)

விண் என்னும் ஆகாயத்தின் பெயர், அங்குச் செல்லும் மேகத்துக்கு இடவாகுபெயர். நாகராவார் - படமும் வாலுமுடையராய் மனுஷ்யருடைமும் தெய்வப்பிறப்புமான தொரு சர்ப்பசாதியார். பாம்புகள் இடியோசையைக் கேட்டமாத்திரத்தில் அஞ்சி அழியு மென்பது, நூற்றுணிபு; "விரிநிற நாகம் விடருள தேனு, முருமின் கடுஞ்சினஞ் சேணின்று முட்கும்" என்பது காண்க. எண் உடை - "எண்பதுகோடி நினைந் தெண்ணுவன" என

கூறியுள்ளவாறு பல எண்ணங்களையுடைய என்றுமாம். வாரிதி - நீர்தங்குமிடம்: வாரி - நீர். இராவணனாற் கவர்ந்துபோகப்பட்ட சீதாபிராட்டி இலங்கையிலிருக்கிற செய்தியை அநுமான் சென்று அறிந்துவந்து சொன்னபின்பு, இராமபிரான் வானரசேனையுடனே புறப்பட்டுச்சென்று கடற்கரையையடைந்து கடலைக்கடக்க உபாயஞ்சொல்லவேண்டுமென்று வருணனைப்பிரார்த்தித்து அங்குத் தருப்பசயனத்திலே படுத்து ஏழுநாள்வரையிலே பிராயோபவேசமாகக் கிடக்க, கடலரசனாகிய வருணன் அப்பெருமானது மகிமையை அறியாமல் உபேக்ஷையாயிருக்க, சக்கரவர்த்தித்திருமகனார் அதனைக்கண்டு கோபங்கொண்டு வானரர் நடந்துசெல்லும்படி கடலை வற்றச்செய்வேனென்று ஆக்கிநேயாஸ்திரத்தை எடுத்துத்தொடுத்து விடுக்கத் தொடங்கினமாத்திரத்தில், மிக வெப்பங்கொண்டவனாய் வருணன் அஞ்சி நடுங்கி ஓடிவந்து அவரைச் சரணமடைந்து அணைகட்டுதற்கு உடன்பட்டானென்பது, ஸ்ரீராமாயண கதை. வீத்த - வீந்த என்பதன் பிறவினை. அந்த - சுட்டுத்திரிபு. பைந்துழாய் - பசுமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய், இடைநின்ற உயிர்மெய்யுங்கெட்டு, அடியகரம் ஐகாரமாகி, வருமெழுத்துக்கு இனவெழுத்து மிக்கு, துழாய் என்பதனோடு புணர்ந்தது. பரமன் - நாராயணன்; காரணப்பெயர். (எஅ)

79. தசையும்வெம்பிணமுந்துன்றக்குருதிநீத்தமெல்லாத்
திசைதொறுந்தனிதனிப்பெருகித்திரைக்கடற்சென்றுமண்ட
அசைவிலாவவுணர்மீண்டுமந்தரத்தொளித்துநின்று
விசையவில்விசயன்றன்மேல்வெகுண்டுவெம்படைகள்விட்டார்.

(இ - ள்.) (அந்த அஸ்திரத்தினால்), தசைஉம் - சதைகளும், வெம்பிணம்உம் - பயங்கரமான பிணங்களும், துன்ற - (எங்கும்) நிறைய, குருதிநீத்தம்-இரத்தவெள்ளம், எல்லாம் திசைதொறுஉம் - திக்குக்களெல்லாவற்றிலும், தனி தனி பெருகி - தனியே தனியே வழிந்தோடி, திரை கடல் சென்று மண்ட - அலைகளையுடைய கடல்களிலே போய்ச்சேர, (அதன்பின்பு), அசைவு இலா அவுணர் - (அழிந்தவர்போக) அழிதலில்லாத அசுரர்கள், மீண்டுஉம் - மறுபடியும், அந்தரத்து ஒளித்து நின்று - (மாயையினால்) ஆகாயத்திலே மறைந்து நின்று, விசையம் வில் விசயன்தன்மேல் - வெற்றியைத்தருகின்ற வில்லையுடைய அருச்சுனன்மேலே, வெகுண்டு - கோபித்து, வெம் படைகள் விட்டார் - கொடிய ஆயுதங்களை எறிந்தார்கள்; (எ - று.)

நீத்தம் - நீந்தப்படுவது என நீருக்குக் காரணப்பெயர்; நீந்து-பகுதி, அம் - செயப்படுபொருள் விகுதி, வலித்தல் - விகாரம். விசையம் - விஜயம்.

80. விட்டவெம்படைகளெல்லாம்விண்ணிடைச்சுண்ணமாகக்
கட்டழகுடையவீரன்மகேந்திரக்கணையால்வீக்க
வெட்டுணைப்பொழுதில்வஞ்சரெழிலியின்படைமேல்வீச
வட்டவார்சிலையினானுமண்டமுறப்படையான்மாற்ற.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) விட்ட வெம் படைகள் எல்லாம்-வீசிய கொடிய ஆயுதங்கள் யாவும், விண்ணிடை-ஆகாயத்திலேதானே, [தன்மேல் விழுதற்கு முந்தியே], சுண்ணம் ஆக-பொடியாய்ப் போம்படி, கட்டுஅழகு உடைய வீரன்-மிகுந்த அழகையுடைய அருச்சுனன், மகேந்திரன் கணையால் - சிறந்த இந்திரனைத் தெய்வமாகவுடைய மகேந்திராஸ்திரத்தால், வீக்க - அழிக்க, வஞ்சர் - வஞ்சனையுள்ள அசுரர்கள், எள் துணை பொழுதில் - எள்ளளவுகாலத்தில் [கணப்பொழுதினுள்ளே], எழிலியின் படை மேல் வீச - (வருணனைத் தெய்வமாகவுடைய) மேகாஸ்திரத்தைப் பிரயோகிக்க, வட்டம் வார் சிலையினன் உம் - வட்டவடிவமாக வளைந்த நீண்ட வில்லையுடைய அருச்சுனனும், மண்டு அழல் படையால் - பற்றியெரிகின்ற அக்கினியைத் தெய்வமாகவுடைய ஆக்நேயாஸ்திரத்தால், மாற்ற - (அதனை) விலக்க,—(எ - று.)— 'ஏவ'என மேலிற்கவியில் தொடரும்.

சுண்ணம்=சூர்ணம்: வடமொழித் திரிபு. மஹா+இந்திரன்= மஹேந்திரன்; குணசந்தி. எள் - மிக்க சிறுமைக்கு எடுத்துக்காட்டுவதொரு அளவை. வட்டம் - வ்ருத்தம் என்னும் வடமொழித் திரிபு. (அ0)

81. மண்டிமேலெழுந்திங்கெல்லாவுலகையுமடிக்குமாயச்
சண்டவாயுவின்பேர்வாளிதானவரவன்மேலேவ
வண்டமுந்துளங்கவோங்குமருவரைப்பகழிவிட்டா
னெண்டிசைமுழுதுந்தன்பேரெழுதுபோர்விசயனென்பான்.

(இ - ள்.) இங்கு-இப்போர்க்களத்திலிருந்துகொண்டே, மேல் எழுந்து-மேலே வீசி, மண்டி - நெருங்கி, எல்லா உலகைஉம் - உலகங்களெல்லாவற்றையும், மடிக்கும் - அழிக்கவல்ல, மாயம் - தீங்குசெய்தலையுடைய, சண்டம் - உக்கிரமான, வாயுவின் பேர் வாளி-வாயுவின்பெயரையுடைய பெரிய வாயவியாஸ்திரத்தை, தானவர் - அசுரர்கள், அவன்மேல் ஏவ - அருச்சுனன்மீது பிரயோகிக்க,—எண் திசை முழுதுஉம்-எட்டுத்திக்குக்கள் முழுவதிலும், தன் பேர் எழுது - (கீர்த்தியினால்) தனது பேரை எழுதிய, போர் - போரில்வல்ல, விசயன் என்பான் - அருச்சுனனென்று சிறப்பித்துக் கூறப்படுபவன்,—அண்டம்உம் துளங்க ஓங்கும்-உலகவுருண்டையிலுள்ளார் யாவரும் (கண்டு) நடுங்கும்படி உயர்ந்துள்ள, அரு வரை பகழி - (அழித்தற்கு) அரிய மலைமயமான சைலாஸ்திரத்தை, விட்டான் - (அவ்வாயவ்யாஸ்திரத்துக்கு எதிராக) விடுத்தான்; (எ - று.)

மலை காற்றைத் தடுத்தலினால், வாயுவின் அஸ்திரத்திற்குச் சயிலஅஸ்திரம் மாறாகு மென்க. தானவர், தைத்தியர் என்பவற்றிற்குப் பொருள்வேறுபாடு உண்டாயினும், அவ்வேறுபாட்டைக் கருதாமற் பொதுப்படக்கூறுதலும், ஒரு கவிசமயமாம். 'என்பான்'எனச் செயப்படுபொருள் வினைமுதல் போலக் கூறப்பட்டது. 'விசயனென்பான்' என்பது - "இல்வாழ்வானென்பான்" என்பதுபோல நின்றது. அண்டம் - இடவாகுபெயர். அண்டருந் துளங்க என்றும் பாடம். (அக)

82. காற்றும்வெங்கனலுங்காருமிடியுங்கன்மழையுமெங்குந்
தோற்றியவிருளுமின்னுந்திசைதொறுஞ்சூழ்ந்துபொங்கக்
கூற்றும்வாய்குழறியஞ்சக்கொடியமாமாயவாளி
யாற்றல்சாலரியன்னான்மேலெறிந்தடலவுணரார்த்தார்.

(இ - ள்.) அடல் அவுணர்-வலிமையையுடைய அசுரர்கள்,—காற்றுஉம்-வாயுவும், வெம் கனல்உம் - வெவ்விய அக்கினியும், கார்உம் - மேகமும், இடியும்—, கல்மழைஉம்-சிலாவருஷமும், எங்குஉம் தோற்றிய இருள்உம் - எவ்விடத்துங் காணப்பட்ட அந்தகாரமும், மின்உம் - மின்னலும், திசை தொறுஉம் - எல்லாத்திக்குக்களிலும், சூழ்ந்து பொங்க - சுற்றிலும் நிறைய வும்,—கூற்றுஉம் - யமனும், வாய் குழறி அஞ்ச - பயந்து வாய் குளறவும், கொடிய மா மாயம் வாளி-கொடுந்தன்மையையுடைய பெரிய மாயைவடிவ மான மோஹாஸ்திரத்தை, ஆற்றல் சால் அரி அன்னான் மேல்-வலிமைமிகுந்த சிங்கத்தை யொத்த அருச்சுனன்மேலே, எறிந்து - பிரயோகித்து,—ஆர்த் தார் - (இனிவெல்லலா மென்னும் உறுதியால்) ஆரவாரஞ்செய்தார்கள்; (எ - று.)—வாய்குழறியஞ்ச - விகுதி பிரித்துக் கூட்டப்பட்டது. (அஉ)

83. கன்மழைசொரிந்துவேகக்கனன்மழைவீசியெங்கு
மின்மழைசிந்திமிக்கவசனியின்மழைகள்வீழ்த்திச்
சென்மழைசிதறியெல்லாத்திசைதொறும்பரந்துகொற்ற
வின்மழைபொழிவான்றன்னைவளைந்ததுவெய்யமாயை.

(இ - ள்.) வெய்ய மாயை-கொடிய அந்த மாயையானது,—கல் மழை சொரிந்து - சிலாவருஷத்தைப் பொழிந்துகொண்டும், வேகம் கனல் மழை வீசி-உக்கிரமான அக்கினிவருஷத்தைப் பெய்துகொண்டும், எங்குஉம்-எவ் விடத்தும், மின் மழை சிந்தி-மின்னலின் மழையைச் சொரிந்துகொண்டும், மிக்க அசனியின் மழைகள் வீழ்த்தி - மிகுந்த இடியின் மழைகளைத் தள்ளிக் கொண்டும், செல் மழை சிதறி-மேகத்தினின்று பெய்யும் நீர்மழையை வர் ஷித்துக்கொண்டும், எல்லாத் திசைதொறுஉம் பரந்து - திக்குக்களெல்லா வற்றிலும் பரவி, கொற்றம் வில் மழை பொழிவான்தன்னை - வெற்றியைத் தருகின்ற வில்லினின்றும் அம்புமழையைச் சொரிகின்ற அருச்சுனனை, வளைந்தது - சூழ்ந்துகொண்டது ; (எ - று.)

எங்கும் என்பதனைப் பிறவற்றுக்குங் கூட்டுக. (அங)

84. கோதிலாவிரதம்பூண்டகுரகதக்குழாமுமுட்கிச்
சூதனுந்தடந்தேரூருந்தொழின்மறந்துயங்கிவீழத்
தாதவிழலங்கலானுமற்றவன்றன்னைத்தேற்றித்
தீதிலாவமோகபாணஞ்சிந்தையாற்றொழுதுவிட்டான்.

(இ - ள்.) (அம்மோஹாஸ்திரத்தால்), கோது இலா இரதம் பூண்ட - (தனது) குற்றமில்லாத தேரிற் பூட்டப்பட்டுள்ள, குரகதம் குழாம்உம்-குதி ரைக் கூட்டமும், உட்கி - அஞ்சி, சூதன்உம் - சாரதியாகிய மாதலியும், தட தேர் ஊரும் தொழில் மறந்து - பெரிய இரதத்தைச் செலுத்துகின்ற செய்

கையை மறந்து, உயங்கி வீழ - மயங்கி(த் தேரின் முன்னிடத்தே) விழ,— தாது அவிழ் அலங்கலானும் - பூந்தாதுகள் சொரியப்பெற்ற மாலையை யுடைய அருச்சுனனும், அவன் தன்னை தேற்றி-அப் பாகனை மயக்கந் தெளி யச்செய்து, தீது இலா - குற்றமில்லாத, அமோக பாணம் - (மாயையை நீக்கவல்ல)அமோஹாஸ்திரத்தை, சிந்தையால்தொழுது-மனத்தால்வணங்கி [அதற்குரிய தேவதையைத்தியானித்து], விட்டான்-(மோஹாஸ்திரத்திற்கு எதிராக) விடுத்தான் ; (எ - று.)

கீழ்ப்பத்தொன்பதாங்கவியில் "ஆயிரப் பத்து வெம்போ ரடற்பரி பூண்டதேர்" என்றாராதலால், இங்கே 'குரகதக்குழாம்' என்றார். 'குலாம்' என்னும் பாடத்துக்கு, குலம் என்பதன் விகார மென்க: கடம்-கடாம் என் பதுபோல. மற்று - அசை. அமோகபாணத்துக்குத் தீதாவது - மாயையை முழுவதும் போக்கமாட்டாமை; அக்குற்ற மில்லாத தென்க. யோக பாணம் என்றும் பாடம். (அச)

85. மாயவல்லிருளையெல்லாம்வான்கதிர்செல்வனென்னச்
சேயவப்பகுவாய்வாளிதிசைதொறுங்கடிந்தவெல்லை
யாயவம்முறைமைதப்பாவறம்பொருளின்பமுற்றுந்
தூயவரிதயமென்னத்தொலைந்ததுசூழ்ந்தமாயை.

(இ - ள்.) சேய - (பகைவரிரத்தந் தோய்தலாற்) சிவந்துள்ள, பகு வாய் - பிளப்புள்ள வாயையுடைய, அ வாளி - அந்த அமோஹாஸ்திரம், வான் கதிர் செல்வன் என்ன-ஆகாயத்திலே விளங்குகின்ற கிரணங்களையே செல்வமாகவுடையசூரியன்போல, மாயம் வல் இருளை எல்லாம்-(மோஹாஸ் திரத்தின்) மாயையாலாகிய வலிய [அழித்தற்கு அரிய] அந்தகாரம் முழுவ தையும், திசைதொறும் - எல்லாத்திக்குக்களிலும், கடிந்த எல்லை - நாசஞ் செய்த வளவில்,—ஆய அ முறைமை தப்பா - (நூல்களிற் கூறியது) ஆகிய அந்த நல்லொழுக்கநெறி தவறாமல், அறம் பொருள் இன்பம் முற்றும் - தருமம் அர்த்தம் காமம் என்னும் மூன்றுபுருஷார்த்தங்களையுங் குறைவற நுகர்ந்து (வீடுபேற்றின் பொருட்டுத்) துறந்த, தூயவர் - பரிசுத்தகுண முடையவர்களது, இதயம் என்ன - மனத்திலே (மாயை ஒழிதல்) போல, சூழ்ந்த மாயை தொலைந்தது - (அருச்சுனனை) வளைந்துகொண்ட மாயை (அவ்விடத்தே) ஒழிந்தது ; (எ - று.)

சேய - குறிப்புப்பெயரெச்சம் ; செம்மை - பகுதி : பண்புப்பெயர்; சேய்மை யென்னும் பண்பின் அடியாப்பிறந்த தெனக் கொண்டு, தூரத்தி லுள்ளவெனப் பொருளுரைத்து, அமோஹாஸ்திரம் தூரத்திலிருந்து கொண்டே சூரியன் இருளைப்போக்குவதுபோல மாயையை ஒழித்தது எனக் கருத்துக்கொள்ளலும் ஒன்று. வல்லிருள் என்றது - சூரியன் சந் திரன் அக்கினி என்னும் முச்சுடர்களுக்கும் அழியாத இருள் என்றபடி. அம்முறைமை, அகரச்சுட்டு - பிரசித்தியைக் காட்டிற்று ; இனி, அழகிய முறைமையுமாம். தப்பா-ஈறுகெட்ட எதிர்மறைவினையெச்சம்; பெயரெச்ச

மாகக் கொண்டு, அறம்பொருளின்பத்தோடு கூட்டினுமாம். இல்லறநெறியால் அறிவுமுதிர்ந்துழியல்லது துறக்கப்படாமையின், 'ஆயவம்முறைமை தப்பா வறம்பொருளின்பமுற்றுந் தூயவர்' என்றார், துறந்தாரை; இது பற்றியன்றே 'துறவறமாவது - மேற்கூறிய இல்லறத்தின் வழுவாதொழுகி அறிவுடையராய்ப் பிறப்பினை யஞ்சி வீடுபேற்றின்பொருட்டுத் துறந்தார்க்கு உரித்தாய அறம்' என்றார், பரிமேலழகரும். தூயவர் - மனமாசு நீங்கியவர்; மெய்யுணர்வு பெற்றவர். அவர்கள் மனத்தில் ஒழியும் மாயையாவது - விபரீதஞானம். இதயம் - ஹ்ருதயம் என்னும் வடமொழிச் சிதைவு. அறமாவது - மனு முதலிய நூல்களில் விதித்தன செய்தலும், விலக்கியன ஒழிதலும். பொருளாவது-அறவழியாற் சேர்க்கப்பட்ட மணி பொன் முதலியன. இன்பமாவது - ஒருகாலத்து ஒரு பொருளால் ஐம்புலன்களும் அநுபவித்தற் சிறப்புடையதான காமவின்பம். (அரு)

86. வஞ்சவாளவுணர்வெம்போர்மறந்துமெய்ம்மயங்கிமீண்டு
நெஞ்சினிலறிவுதூண்டநிரைநிரைதடந்தேர்தூண்டிச்
செஞ்சரஞ்சூலம்விட்டேறெழுமழுத்திகிரிவாள
மஞ்சனக்குன்றன்னான்மேலெறிந்துடனார்த்தகாலை.

இதுவும், மேலைக்கவியும் - குளகம்.

(இ - ள்.) வஞ்சம் - வஞ்சனையையும், வாள் - ஆயுதங்களையுமுடைய, அவுணர் - அசுரர்கள், வெம் போர் மறந்து - கொடிய போர்த்தொழிலை மறந்து, மெய் மயங்கி - உடம்பு மயங்கியிருந்து, மீண்டுஉம் - மறுபடியும், நெஞ்சினில் அறிவு தூண்ட - மனத்திலே அறிவுஉண்டாகி ஏவியதனால், நிரை நிரை - வரிசைவரிசையாக, தட தேர் - பெரிய தேர்களை, தூண்டி - செலுத்திவந்து, செம் சரம் - (பகைவ ருதிரந் தோய்தலாற்) சிவந்த அம்புகளையும், சூலம் - சூலங்களையும், விட்டேறு - வேல்களையும், எழு - வளைதடிகளையும், மழு - மழுக்களையும், திகிரி - சக்கரங்களையும், வாளம் - வாள்களையும், அஞ்சனம் குன்று அன்னான் மேல்-மைம்மயமான மலையையொத்த அருச்சுனன்மேலே, எறிந்து - வீசி, உடன் - ஒருசேர, ஆர்த்த காலை - ஆரவாரித்தபொழுது, (எ - று.)—இதில் 'காலை' என்பது, மேற்கவியில் 'காணாது,' 'காணலாம்' என்பவற்றோடு முடியும்.

வாள் - இங்கே, ஆயுதப்பொதுவாய் நின்றது; இது - அவுணர்க்குச் சாதியடை: இனி, வாள்போலுங் கொடிய அவுணரென்றுமாம். வெம்போர் மறந்து மெய்ம்மயங்கியதற்குக் காரணம் - தாம் அருச்சுனன்மீது பிரயோகித்த மாயை அவன்பிரயோகித்த அமோஹாஸ்திரத்தால் அவன்பாற்சென்று பயன்படாமல் தம்பால் மீண்டு வருதலாலாகும். விட்டேறு - ஈட்டியென்பாருமுளர். வாளம், அம் - சாரியை. உடன் - பின்பு என்றுமாம். (அசு)

87. கடுஞ்சிலைவிரையும்வீரன்கைத்தொழில்விரைவுமேன்மேல்
விடுங்கணைவிரைவுமெண்ணில்விபுதர்க்குங்காணொணாதாற்
கொடுந்தொழிலசுரர்மெய்யிற்குளித்தசெஞ்சரமுமன்னோர்
படும்படுந்துயருமெய்ங்குங்காணலாம்பாருளோர்க்கும்.

(இ - ள்.) எண்ணில் - ஆலோசிக்குமிடத்து,—வீரன்-அருச்சுனனது, கடு சிலை விரைவுஉம் - கொடிய வில்லினது (அம்பெய்யும்) வேகமும், கை தொழில் விரைவுஉம் - (அம்பை எடுத்தல் தொடுத்தல் விடுத்தல் முதலிய) கையாற்செய்யுந்தொழிலினது வேகமும், மேல்மேல் விடும் கணை விரைவு உம் - ஒன்றன்மேலொன்றாக விடப்படுகிற அம்புகள் செல்லும் வேகமும், விபுதர்க்குஉம்-விசேஷபுத்தியையுடைய(மேலுலகத்தில் வாழ்கிறஇமையாக் கண்ணராகிய) தேவர்களுக்கும், காணஒணாது - பார்க்கமுடியாது; கொடு தொழில் அசுரர் மெய்யில் குளித்த செம் சரம்உம் - கொடிய தொழில்களை யுடைய அசுரர்களது உடம்பிலே மூழ்கிய சிவந்த அம்புகளையும், அன்னோர் படும் படும் துயர்உம்-அவ்வசுரர்கள் (அதனால்) மிகுதியாக அனுபவிக்கின்ற துன்பங்களையும், எங்குஉம் - எவ்விடத்தும், பார் உளோர்க்குஉம் - நிலவுல கத்திலேயுள்ள (சிற்றறிவினரும் இமைக்குங்கண்ணரு மாகிய) மனிதர் களுக்கும், காணல் ஆம் - பார்த்தல் கூடும்; (எ - று.)

இச்கவியை "மாலு மக்கணம் வாளியைத் தொட்டதுங், கோல விற் கால் குனித்ததுங் கண்டிலர், காலனைப்பறித்தக்கடியாள்விட்ட, சூல மற் றன துண்டங்கள் கண்டனர்" என்னுங் கம்பராமாயணக்கவியோடுஒப்பிடுக. எண் இல் எனப்பிரித்து, அளவிறந்த தேவரென்றுமாம். விபுதர்க்கும், பாரு ளோர்க்கும் என்ற உம்மைகள் - முறையே உயர்வுசிறப்பு இழிவுசிறப்புப் பொருளன. காணொணாது - காணவொண்ணாது என்பதன் விகாரம். இனி, காண் என்பதை முதனிலைத்தொழிற்பெயராகக்கொண்டு, காணுதலொன் றாது எனினும் அமையும். படும்படும் - அடுக்கு, மிகுதிபற்றியது. (அஎ)

88. ஆய்ந்த நாலறிஞர்க்கீந்தவரும்பொருளென்னமேன்மேல்
வேந்தர்கோன்பகழியொன்றுகோடியாய்விளைந்ததெங்கு
மாந்தர்கைக்கொடாதபுல்லர்வனப்பிலாச்செல்வம்போலத்
தேய்ந்ததுவஞ்சநெஞ்சத்திறலுடைத்தனுசர்சேனை.

(இ-ள்.) வேந்தர் கோன் பகழி - அரசர்களுக்குட்சிறந்தோனாகிய அருச் சுனனது அம்பு,—நூல் ஆய்ந்த அறிஞர்க்கு ஈந்த-சாஸ்திரங்களை ஆராய்ந்த அறிவையுடைய பெரியோர்களுக்குத் தானஞ்செய்த, அரு பொருள் என்ன- (பெறுதற்கு) அரிய செல்வம்போல, ஒன்று கோடி ஆய்-ஒன்றுதானே மிகப் பலவாய், எங்குஉம்-அப்போர்க்களம்முழுவதிலும், மேல்மேல் விளைந் தது - மேலேமேலே பெருகிற்று; வஞ்சம் நெஞ்சம்-வஞ்சனையையுடைய மனத்தையும், திறல் உடை - வலிமையையுமுடைய, தனுசர் சேனை - அசு ரர்களுடைய சேனையானது, மாந்தர் கை கொடாத - எந்த மனிதருடைய கையிலும் தானஞ்செய்யாத, புல்லர் - கீழ்மக்களுடைய, வனப்பு இலா செல் வம்போல - அழகில்லாத பொருள்போல, தேய்ந்தது-குறைந்தது; (எ - று.)

அறிவு ஒழுக்கங்களினூற் சிறந்த ஸத்பாத்திரங்களில் தானஞ்செய் யப்பட்ட பொருளின் பயன் மிகவும் பெரியதாமென்பதை "இனைத் துணைத்தென்பதொன்றில்லை விருந்தின், றுணைத்துணை வேள்விப் பயன்",

"அறப்பயனுந், தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால், வான்சிறி தாப் போர்த்து விடும்", "பார்த்தெதிர், வியந்தவர் வெருக்கொள விசும்பி னோங்கினு, னுயர்ந்தவர்க் குதவிய வுதவி யொப்பவே" என்பவற்றால் அறிக. அங்ஙனந் தானஞ்செய்யாத லோபியினது செல்வம் அழிந்துவிடுமென்பது "கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய, கோடியுண்டாயினு மில்", "இளைஞர்க் குதவாதான் செல்வமும், *** உள்ளன போலக் கெடும்" என்பனகொண்டு அறியப்படும்; இதுபற்றியே, கீழ் இராயசூயச் சருக்கத்தில் "இடாதவன்றனமெனக் கரந்தனர்க ளெனைமன்னவர்கள் யாருமே" என்றதும். நூல்-சாஸ்திரத்துக்கு உவமவாகுபெயர்; பஞ்சினால் நூற்கப்படும் நூல்போலச் சொல்லாற் கோக்கப்படுதலாலும், நூல் மரம் முதலியவற்றின் கோணலைத் தீர்ப்பதுபோல மனத்தின் கோணலைத் தீர்த்துச் செப்பஞ்செய்தலாலும் வந்த பெயரென்று அறிக. தான் அனுபவித்தலும் பிறர்க்கு ஈதலுமே ஒருவன் அருமையாகப் பெற்ற செல்வத்துக்கு அழகென்பார், உலோபியரது செல்வத்தை 'வனப்பிலாச் செல்வம்' என்றார். மாந்தர் - ஒருமையில்லாமல் எப்பொழுதும் பன்மையிலேயே வரும் பெயர்; இது, தொல்காப்பியனார் கொள்கை: இவ்வாறு வருவனவற்றை வடநூலார் 'நித்தியபகுவசனம்' என்பர்: ஒருமையிலும் வரு மென்கின்றனர், இக்காலத்து ஒரு சாரார். (அஅ)

89.—இதுவும், மேற்கவியும் - குளகம்: இறந்தவர்போக எஞ்சினவர் போர்க்குவர, அவர்களை அருச்சுனன் கண்டதுண்டமாக்குதல்.

படாதொழியவுணர்மீண்டும்பரிபவப்படுத்தாயெம்மை
யடாவினியுன்னையின்னேயாருயிர்குடித்துமென்றுக்
கடாமலைவயவன்மீதுகடும்படைபலவும்விட்டார்
தொடாநெடும்பகழிதன்னாற்சூரனுந்துணித்துவீழ்த்தி.

(இ - ள்.) படாது ஒழி அவுணர் - (கீழ் இறந்தவர்கள் போக) இறவாமல் தப்பிய அசுரர்கள், (அருச்சுனனை நோக்கி), 'எம்மை மீண்டுஉம் பரிபவப்படுத்தாய் - எங்களை மறுபடியும் அவமானப்படுத்தினாய்; அடா—! இனி—, உன்னை—, இன்னே - இப்பொழுதே, ஆர் உயிர் குடித்தும் - அருமையான உயிரைப் பருகுவோம்,' என்று - என்று சொல்லிக்கொண்டு,— கடாம் மலை வயவன்மீது - மதசலத்தையுடைய மலைபோன்ற வலிமையையுடைய அருச்சுனன்மேலே, கடு படை பலஉம் விட்டார் - கொடுமையான ஆயுதங்கள் பலவற்றையும் எறிந்தார்கள்; சூரன்உம் - அருச்சுனனும், நெடு பகழி தொடா-நீண்ட பாணங்களைத் தொடுத்து, தன்னால் - அதனால், துணித்து வீழ்த்தி - (அவர்கள் எறிந்த ஆயுதங்களைப்) பிளந்து தள்ளி,-(எ - று.) —'கண்டங்கண்டான்' (90) என முடியும்.

கீழ் 74 - ஆங் கவியில் ஒருகாற் பரிபவப்படுத்தியது கூறியதனால், இங்கே 'மீண்டும் பரிபவப்படுத்தாய்' என்றார். இனி, மீண்டும் விட்டார் என்றும் இயைக்கலாம். விடச்செய்தாய் என்னும் பொருளில் விடுத்தாய்

என்பதுபோல, படச்செய்தாய் என்னும் பொருளில் படுத்தாய் என வந்தது; இது - படு என்னும் பகுதியடியாகப் பிறந்த பிறவினை முன்னிலையொருமை இறந்தகால முற்று; 'பட்டாய்' என்றது 'படுத்தாய்' என வந்ததே பிறவினைக்குறி : படுத்தினுயென்பது விகாரப்பட்டுவந்ததென்பாருமுளர். அடா - முன்னிலையிடைச்சொல்; இகழ்ச்சிதோன்ற நின்றது. ஆருயிர் குடித்த லென்பது - ஒருசொல்தன்மைப்பட்டு, கொல்லுத லென்னும் பொருளதாய், உன்னை என்னுஞ் செயப்படுபொருளுக்கு முடிக்குஞ்சொல் லாயிற்று. குடித்தும் - தன்மைப்பன்மை யெதிர்கால முற்று. கடம்-வடசொல்; யானைக்கன்னத்தின்பெயர், அதனினின்றுவழியும் மதநீருக்கு ஆகுபெயர்; இது 'கடாம்' என நீட்டல் பெற்றது. கடாமலை - யானைக்குக் குறிப்பு. மலை - அதுபோன்ற யானைக்கு உவமவாகு பெயர். யானையை 'மலை' என்றது - பெருமையும், வலிமையும், நீர்ப்பெருக்கமும் பற்றி. யானை-வீரனுக்கு, நடை வலிமை காம்பீரியங்களால் உவமை. வயவன் - உரிசசொல்லடியாகப் பிறந்த பெயர்; வய என்பது - உரிச்சொல்லாதலை, "வயவலியாகும்" என்னுந் தொல்காப்பியத்தால் அறிக: இனி, வயம் பகுதியெனக் கொண்டு, ஜயத்தையுடையவனென்றுகவுமாம். தொடா - வினையெச்சம்; ஆ - விகுதி, இறந்தகாலங்காட்டிற்று: இனி, எதிர்மறைப் பெயரெச்சமாக்கொண்டு இதுவரையில் ஒருகாலத்தும்எடுத்துத் தொடுக்காத அம்புகளால் எனவுமாம். பகழி - சாதியொருமை: ஆதலால், 'தன்னால்' என்றார். (அகூ)

90. உரங்களுந்தோளுங்கண்ணுமுதரமுமதரத்தோடு
சிரங்களுந்தாளுநாளுஞ்செய்தவமுயன்றுபெற்ற
வரங்களுமறையுமேன்மேல்வான்படைக்கலங்கள்வீசுங்
கரங்களுஞ்சரங்கள்கொண்டுகணத்திடைக்கண்டங்கண்டான்.

(இ - ள்.) (அருச்சுனன் அசுரர்களுடைய), உரங்கள்உம் - மார்புகளையும், தோள்உம் - தோள்களையும், கண்உம் - கண்களையும், உதரம்உம் - வயிறுகளையும், அதரத்தோடு - வாய்களையும், சிரங்கள்உம் - தலைகளையும், தாள்உம் - கால்களையும், நாள்உம் - ஆயுள்நாளையும், செய் தவம் முயன்று பெற்ற வரங்கள்உம் - செய்தற்குஉரிய தவத்தைச் செய்து பெற்ற வரங்களையும், மறைஉம் - மந்திரங்களையும், மேல் மேல் வான் படைக்கலங்கள் வீசும் கரங்கள்உம் - (இடைவிடாமல்) ஒன்றன்மேலொன்றுகச் சிறந்த ஆயுதங்களை எறிகின்ற கைகளையும், சரஙகள் கொண்டு-(தனது) அம்புகளினால், கணத்திடை - நொடிப்பொழுதிலே, கண்டம் கண்டான் - பல துண்டுகளாகச் செய்தான்; (எ - று.)

அதரம் - கீழுதடு; இங்கே, வாயென்னும்மாத்திரையாய் நின்றது. நாளும் - தினந்தோறும், முயன்று என்றுமாம். 'செய்தவமுயன்று பெற்ற' என்னும் அடைமொழியை மறைக்கும் கூட்டுக. படைக்கலம்-சேனைக்கருவியெனக் காரணப்பெயர்: படுத்தற்றெழிற்குக்கருவியெனினுமாம். கொண்டு-

மூன்றும்வேற்றுமைச்சொல்லுருபு. கண்டான் - காண் என்னும் பகுதி, இங்கே, செய் என்னும்பொருளது; இனி, பலதுண்டங்களாகப் பார்த்தான் எனவுமாம். நாள் வரம் மறை இவற்றைக் கண்டங்காணுதலாவது - பயன்படாதபடி அழித்தல். (கூ0)

91.—அற்றதுறை அவயவத்தோடுகூடியதனால் முக்கோடியசுரச்சேனையும் மீண்டும்போர்க்குவர, அருச்சுனன் சிந்தை கொள்ளல்.

அற்றனகுறைகளெல்லாமவயவம்பொருந்திமீண்டு
முற்றனமூன்றுகோடிசேனையுமுருத்தெழுந்த
வெற்றிவேற்குமரனன்னவிசயனுங்கைசலித்து
மற்றிதற்கென்செய்வேனென்றினைவுடன்மதிக்குமேல்லை.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) அற்றன குறைகள் எல்லாம் - அவயவங்களறுபட்ட குறையுடம்புகளெல்லாம், அவயவம் பொருந்தி மீண்டும் உற்றன - (அறுக்கப்பட்ட) அவ்வவ்வுறுப்புக்களோடு கூடி மறுபடியும் போர்செய்யப் பொருந்தினவாய், மூன்று கோடி சேனைஉம்-முக்கோடியசுரசைனியமும், உருத்து எழுந்த - கோபித்து (அருச்சுனன்மீது) எழுந்தன; (அதுகண்டு), வெற்றி வேல் குமரன் அன்ன விசயன்உம் - ஜயத்தைத் தருகின்ற வேலாயுதத்தையுடைய சுப்பிரமணியனை யொத்த அருச்சுனனும், கை சலித்து - கைதளர்ந்து, மற்று இதற்கு என் செய்வேன் என்று - இனி இதற்கு யாது செய்வேன் என்று, இனைவுடன் - வருத்தத்துடனே, மதிக்கும் எல்லை - ஆலோசிக்குஞ் சமயத்தில்,—(எ - று.)—'அசரீரியுரைத்தது' என மேலிற்கவியோடு இயையும்.

உற்றன - முற்றெச்சம்; இங்ஙனங்கொள்ளாது முற்றாகவேகொண்டு பொருளுரைத்தால், ஏகவாக்கியமாகாது பின்னவாக்கியமாகிப் பொருள் சித்தியாதென்க. எழுந்த - பலவின்பால்முற்று. குமரன் - குமாரனென்னும் வடமொழியின் விகாரம்; அதற்கு - மன்மதனையும் குற்சிதரூபமுடையவனுக்கவல்ல கட்டழகுடையவனென்று பொருள். அருச்சுனனுக்கு முருகக்கடவுளுவமை - பலபராக்கிரமங்களுக்கும், அழகுக்கும், அசுரநிரஸநத்திற்குமென்க. மற்று - இங்கே, பின் என்னும் பொருளது. இனைவு - தொழிற்பெயர்: வு விகுதி. (கக)

92.—இரண்டு கவிகள் - அசரீரி அசுரர்களின் வரத்தையும் அவர்களைக் கொல்லவேண்டிய உபாயத்தையும் கூறுவன.

வென்றிகொள்வீரவாகைவீரவில்விசயகேளாய்
தென்றிசைமறலிபாலித்தியவஞ்சகர்முன்பெற்ற
வன்றிறற்படையுமிக்கவரமுமெய்வலியுமுண்டா
லென்றசரீரிபின்னுமின்னவையுரைத்ததம்மா.

(இ - ள்.) அசரீரி - அரூபியாகிய ஆகாசவாணி,—(அருச்சுனனை நோக்கி), 'வென்றி கொள் - ஜயத்தை யடைவதற்குக்காரணமான, வீரம் -

பராக்கிரமத்தைக் குறிக்கின்ற, வாகை - வாகைப்பூமாலையையும், வீரம் வில் - வலிய வில்லையுமுடைய, விசய - அருச்சுனனே! கேளாய் - (யான் சொல்வதைக்) கேட்பாயாக; தென் திசை மறலிபால் - தெற்குத்திக்குப் பாலகனாகிய யமனிடத்தில், இ தீய வஞ்சகர் - கொடிய வஞ்சனையை யுடைய இந்த அசுரர்கள், முன் பெற்ற - முற்காலத்திற் பெற்ற, வன் திறல் படைஉம் - மிக்க வலிமையையுடைய ஆயுதங்களும், மிக்க வரம்உம் - மிகுந்த வரங்களும், மெய் வலிஉம் - தேகபலமும், உண்டு - உள்ளன, என்று - என்றுகூறி, பின்னும் - மீண்டும், இன்னவை - இவ்வார்த்தைகளை, உரைத்தது - சொல்லிற்று; (எ - று.)—அவை மேற்கவியிற் கூறுகின்றார்.

மறல் - கொலைத்தொழில்; அஃதுஉடையவன், மறலி: இ - பெயர் விகுதி. பெற்ற என்பதை, வரம் மெய் வலி இவற்றுக்குங் கூட்டுக. வன் திறல்-ஒருபொருட்பன்மொழி. அசரீரி - சரீரம் அற்றது. அம்மா - இடைச்சொல்: ஈற்றசை: வியப்புப்பொருளதாகவுமாம். ஆல் - தேற்றம். (௯௨)

93. வெய்யவெம்படைகட்கெல்லாம்விளிகிலர்மெய்ந்நூறாகக்
கொய்யினுமுருவமீண்டுங்கூடுவர்குறிப்பினின்று
கையினாவுடன்வாய்சென்றுகலந்திடுங்கணத்தினம்பா
லெய்திடுகென்றுவீரற்குறுதியுமிசைத்ததன்றே.

(இ - ள்.) (இவ்வசுரர்கள்),—வெய்ய வெம் படைகட்கு எல்லாம் - மிகவுங்கொடிய ஆயுதங்களனைத்துக்கும், விளிகிலர் - இறக்கமாட்டார்கள்; மெய் நூறு ஆக கொய்யின்உம் - உடம்பை நூறுதுண்டாக அறுத்தாலும், உருவம் மீண்டுஉம் கூடுவர் - வடிவம் முன்போலவே மறுபடியும் பொருந்தப்பெறுவர்; (இவர்களை), இனவுடன் - பரிகாசவார்த்தையுடனே, கை வாய் சென்று கலந்திடும் கணத்தின் - கையானது வாயைச்சென்று கூடுகின்ற சமயத்தில், குறிப்பில் நின்று - கவனத்தோடு இருந்து, அம்பால் எய்திடுக - அம்புகளினால் எய்வாயாக, [அப்பொழுது அம்பெய்தால் அழிந்துவிடுவர்], என்று—,வீரற்கு - அருச்சுனனுக்கு, உறுதிஉம் - (பகைவரைக் கொல்லுதற்கு) நல்ல உபாயத்தையும், இசைத்தது - (அசரீரி) சொல்லிற்று; (எ - று.)—அன்றே - ஈற்றசை.

வெய்ய வெம் - ஒருபொருட்பன்மொழி. விளிதல் இறத்தலாதலை, "உலகின், விளிநோக்கி யின்புறாஉங் கூற்று" என்றவிடத்துங் காண்க. உருவம் - ரூபம். இன - நகைச்சொல். கையில் நாவுடன் வாய் சென்று என்றுபிரித்து, நாவுடன் வாயிற் கை சென்று கலந்திடுங் காலத்து எனினுமாம். (௯௩)

94.—அருச்சுனன் தேரைத் திரிய வோட்டிப் போர்க்குச் சித்தனாக, அவுணர் வீரன்புறங்கொடுத்தானென்று கருதுதல்.

வானிடத்தருபிசொன்னவாசகமனத்திற்கொள்ளாத்
தேனுடைத்தெரியல்வீரன்றேரினைத்திரியவோட்டிக்

கானிடைக்கடவுள்வேடன்றருங்கணைகரத்திற்கொண்டு
தானுடைத்தனுவிற்பூட் டியனுப்படச்சமைந்ததோரார்.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) வானிடத்து - ஆகாயத்தினிடத்திலே, அரூபி - அசரீரியாகிய ஆகாயவாணி, சொன்ன—, வாசகம்-வார்த்தையை, மனத்தில் கொள்ளா - மனத்திலே (செயற்பாலதென்று) கொண்டு,— தேன் உடை தெரியல் வீரன் - தேனினையுடைய மாலையையுடைய அருச்சுனன்,— தேரினை-ரதத்தை, திரிய ஓட்டி - திரும்பச் செலுத்தி, கானிடை கடவுள் வேடன் தரும் கணை கரத்தில் கொண்டு - (கைலாசகிரியைச் சார்ந்த) தவவனத்திலே சிவபிரானாகிய வேடன் தனக்குத்தந்தருளிய பாசுபதாஸ்திரத்தைக் கையிலே எடுத்து, தான் உடை தனுவில் பூட்டி - தான் உடைத்தாயிருக்கின்ற வில்லிலே தொடுத்து, அனு பட சமைந்தது - பிற்பட்டுப் போர்செய்யச் சித்தனாயிருந்ததை, ஓரார் - (அசுரர்கள்) அறியாதவர்களாய்,—(எ - று.)— 'ஆவலங்கொட்டியார்த்தார்' என அடுத்த கவியோடு இயையும்.

அருச்சுனனுக்குப் பாசுபதந் தருங் காலத்துப் பரமசிவன் வேடவடிவம் பூண்டு வந்ததனால், 'கடவுள்வேடன்' என்றார். அனுப்படச்சமைதலாவது- "ஊக்கமுடையா னொடுக்கம் பொருதகர், தாக்கற்குப் பேருந் தகைத்து" என்றவாறு போர்செய்கின்ற ஆட்டுக்கடா தன்பகைகெடப் பாய்தற்பொருட்டுப் பின்னே கால்வாங்குந்தன்மைபோல வலிமிகுதியுடைய அரசன் தன்பகைவர்மேற் செல்லும்பொருட்டுக் காலம்பார்த்துப் பின்னடைந்திருத்தல். அனுப்படுதல் - பின்படுதல் ; அநு - பின்னென்னும் பொருள் தருவதோர் வடமொழி யிடைச்சொல். அனுப்பட என்பதற்கு - பின்புறமாகக்கணை வெளிப்படஎன்று பொருள்கூறுதலும்உண்டு : இவன் பின்புறமாக வாளிதொடுத்ததை 17-ஆம் போர்ச்சருக்கத்து 225-ஆங் கவியினுமறிக. ஓரார் என்றதனால், தம்முன் நிற்கமாட்டாமல் அருச்சுனன் தோற்றுப் புறங்கொடுப்பதாகக் கருதினர் அவுணர் என்க. மனத்திற்கொள்ளுதல் - அங்கீகரித்தல். (கூச)

95.—அருச்சுனன் புறங்கொடுத்ததாகக் கருதியதனால் அவுணர் ஆவலங்கொட்டி யார்த்தல்.

தானவர்சமூகத்தோடுசமர்புரிந்தாற்றுதஞ்சி
மானவன்முதுகுதந்தானென்றுவாளசுரரெல்லாம்
வேனில்வேளனையான்றன்மேல்வெகுண்டுவெங்கடலிற்பொங்கி
யானதங்கைவாய்சேர்த்தியாவலங்கொட்டியார்த்தார்.

(இ - ள்.) 'மானவன் - மனிதன், தானவர் சமூகத்தோடு - அசுரர் கூட்டத்துடனே, சமர் புரிந்து - போர் செய்து, ஆற்றுது-முன் நிற்கமாட்டாமல், அஞ்சி - பயந்து, முதுகு தந்தான் - புறங்கொடுத்தான்,' என்று - என்று எண்ணிக்கொண்டும் சொல்லிக்கொண்டும், வாள் அசுரர் எல்லாம் - ஆயுதங்களையுடைய அசுரர்கள்யாவரும்,—வேனில் வேள் அனையான்தன்

மேல்-வசந்தகாலத்துக்குரிய மன்மதனையொத்து அழகிய அருச்சுனன்மேலே, வெகுண்டு-கோபித்து, வெம் கடலின் பொங்கி-கொடிய(பிரளயகாலத்துக்) கடல்போலச் சீறியெழுந்து, ஆன தம் கை வாய் சேர்த்தி - பொருந்திய தத் தமது கையைத் தத்தம் வாயினிடத்துச் சேர்த்து, ஆவலம் கொட்டி ஆர்த்தார் - இகழ்ச்சியொலியை யுண்டாக்கி ஆரவாரித்தார்கள ; (எ - று.)

சமூகம் - ஸமூஹம் ; வடசொல். வேனில்-இங்கே, சித்திரைமாதமும் வைகாசிமாதமுமாகிய இளவேனிற்பருவம். மன்மதனுக்கு வேனிற் காலத்திலே போர்த்தொழிற்கண்ணே ஊக்கமுங் களிப்பும் உண்டாதல்பற்றி, அப்பொழுது அவனுடம்பூரித்து அழகுசிறந்துவிளங்கு மாதலால், 'வேனில்வேள்' என்றார். வேள் - யாவராலும் விரும்பப்படுங் கட்டழகுடையவன் ; அல்லது ஆடவர்க்கும் மகளிர்க்கும் ஒருத்தருக்கொருத்தர் விருப்பத்தை விளைப்பவன் ; இது - காமன்என்னும்வடசொல்லின் பொருள் கொண்டது; 'வேனில்வேள்' என்றது, குமரவேளை விலக்கிநின்றது. ஆவலங்கொட்டியார்த்தலாவது - தோற்றவர்க்கு அவமானந் தோன்ற வென்றவர் வாயினால் ஒருவகைச்சத்தத்தையெழுப்பி ஆரவாரித்து ஆடுதல். ஆவலம்—'சீழ்க்கை', 'வீளை' என்பன போல்வதொரு கொக்கரிப்பு என உணர்க. கனலிற்பொங்கி என்று பிரதிபேதம். ஆவலங்கொட்டுதல்-செருக்குத்தோன்ற ஒலிசெய்தலுமாம். (கரு)

96.—அருச்சுனனெய்த பாசுபதாஸ்திரத்தால் அவுணரங்கம் பொடியாதல்.

உரம்பட்டவஞ்சர்சேனையொருப்பட்டவுறுதிநோக்கித்
திரம்பட்டசிலைக்கைவீரன்சிலீமுகந்தெறித்தபோதச்
சரம்பட்டதனுசரங்கஞ்சங்கரன்செங்கையம்பாற்
புரம்பட்டபரிசுபட்டுப்பொடிந்தனபொடியாய்மன்னே.

(இ - ள்.) உரம் பட்ட-வலிமை மிகுந்த, வஞ்சர்-வஞ்சகராகிய அசுரர்களது, சேனை—, ஒருப்பட்ட-(தான் கருதியபடியே அவமதிப்பொலியோடு கையை வாயிலே வைத்து) ஒருமைப்பட்ட, உறுதி - நன்மையை, நோக்கி-பார்த்து,— திரம் பட்ட சிலை கை வீரன் - உறுதிபொருந்திய வில்லையுடைய கையையுடைய அருச்சுனன்,— சிலீமுகம் தெறித்த போது - அம்பை எய்த மாத்திரத்தில்,— அ சரம் பட்ட தனுசர் அங்கம் - அந்த அம்பு படப்பெற்ற அசுரர்களது உடம்புகள், சங்கரன் செம் கை அம்பால் புரம் பட்ட பரிசு பட்டு - சிவபிரானது சிவந்த கையினாலெய்யப்பட்ட (திருமாலாகிய) அம்பினால் திரிபுரம் அடைந்த தன்மையை யடைந்து, பொடி ஆய் பொடிந்தன - நீறாயொழிந்தன ; (எ - று.)—மன், ஓ - ஈற்றசைகள்.

ஒருப்படுதல் - ஒருங்கே தன் மனப்படியாதல். திரம் - ஸ்திரம் என்னும் வடமொழித் திரிபு. ஶிலீமுகம் என்பதற்கு - கூர்மையை முனையிலே யுடையதென்று பொருள். சிலீமுகம் - இங்கே, பாசுபதம். ஶங்கரன் என்னும் வடசொல்லுக்கு - (தன்னையடைந்தவர்க்கு இம்மை மறுமை) இன்பங்களைச் செய்பவன் என்பது பொருள். பொடிதல் - தூளாதல். (கசு)

97.—அருச்சுனனெய்த பாசுபதாஸ்திரத்தின் செய்கை.

உருத்ததுமிகவுமண்டமுடை ந்திடவுட ன்றுபொங்கிச்
சிரித்ததுதனுசர்மெய்யுஞ்சிந்தையுஞ்சேரப்பற்றி
யெரித்ததுதூநீராடியிவனிடந்தன்னில்வந்து
தரித்ததுமீண்டுமந்தச்சங்கரன்செங்கைவாளி.

(இ - ள்.) சங்கரன் செம் கை - சிவபிரானது சிவந்தகையாற் கொடுக்கப்பட்ட, அந்த வாளி - அந்தப்பாசுபதாஸ்திரமானது,—மிகவும் உருத்தது - மிகவுங் கோபித்துச்சென்று, உடன்று - பகைத்து, பொங்கி - கொதித்து, அண்டம் உடைந்திட - (அதிர்ச்சியால்) அண்டகோளம் உடையும்படி, சிரித்தது - நகைத்து, தனுசர் - அசுரர்களது, மெய்உம்-உடலையும், சிந்தைஉம்-மனத்தையும், சேர பற்றி எரித்தது - ஒருசேரப் பற்றி யெரியச் செய்து, தூ நீர் ஆடி - பரிசுத்தமாகிய நீரிலே மூழ்கி, இவனிடந்தன்னில் - அருச்சுனனிடத்திலே, மீண்டும் வந்து தரித்தது - திரும்பவும் வந்து தங்கிற்று.

உருத்தது, சிரித்தது, எரித்தது - முற்றெச்சங்கள். (கள)

வேறு

98.—அசுரரெல்லாம் இறந்து வீரசுவர்க்கஞ் சேர்ந்தமை.

துவசத் தொடுதேர் களம்வீழச்சு டர்நி வாத
கவசத் தொடுமெய் கடல்வீழக் கடுகி யற்றைத்
திவசத் திவறு வரமங்கையர் வீழச் சென்றா
ரவசத் துடனந் தகனூரி லசுர ரெல்லாம்.

(இ - ள்.) அசுரர் எல்லாம்-அசுரர்கள் யாவரும்,— துவசத்தொடு தேர் களம் வீழ - கொடிகளுடனே (தமது) தேர்கள் போர்க்களத்தில்விழவும், சுடர் நிவாத கவசத்தொடு மெய் கடல் வீழ - விளங்குகின்ற காற்றும் உட்புகவொண்ணாத கவசத்துடனே (தமது) உடம்புகள் கடலிலே விழவும், அர மங்கையர் இவறு வீழ - தெய்வப்பெண்கள் பெருவிருப்பங்கொண்டு (தம் மேல்) வந்து விழவும், அவசத்துடன் - (தம்) வசத்திலில்லாமல், அற்றை திவசத்து - அன்றைத்தினத்தில், கடுகி - விரைந்து, அந்தகன் ஊரில் - யமலோகத்தில், சென்றார் - போனார்கள்; (எ - று.)

யுத்தத்திற் புறங்கொடாமற் போர்செய்து இறந்தவர்கள் உடனே தெய்வப்பெண்கள் கையைப்பற்றிக்கொண்டு வீரசுவர்க்கத்திற் செல்கின்றனர் என்பது நூல்மரபாதலின், 'இவறுவரமங்கையர்வீழ' என்றார்; அங்ஙனஞ் செல்லுங்காலத்து யமபுரத்தின் வழியாகவே செல்லவேண்டுதலால், 'அந்தகனூரிற்சென்றார்' எனப்பட்டது. அவசத்துடன் என்றது-விதிவசப்பட்டு: அல்லது அருச்சுனனெய்த அம்பின் வசப்பட்டு: அன்றிக்கே, தேவஸ்திரீகளது பாணிக்கிரகணத்தாலாகிய ஆனந்தத்தினால் மனம் பரவசப்பட்டு என்றவாறும். துவசம்-த்வஜம். அன்று + திவசம் = அற்றைத்திவசம்: [நன் - உயிர் - 34, 35.] திவஸம் - வடசொல். இவறு, இவறு - பகுதி: இவறல் - ஆசைப்பெருக்கம்.

இதுமுதற் பதினாறுகவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று புளிமாங்கனிச்சீரும், மற்றை நான்கும் மாச்சீர்களு மாகிய நெடிலடி நான்கு கொண்டு வந்த கலிநிலைத்துறைகள். (கூஅ)

99.—அருச்சுனனைப் பற்றிய தேவர்களின் கொண்டாட்டம்.

ஆர்த்தாரணிகூரலர்மாமழையால்விசும்பைத்
தூர்த்தார்துதித்தார்மதித்தார்நனிதுள்ளுகின்றார்
போர்த்தானவர்தஞ்செருக்காற்படுபுன்மையெல்லாந்
தீர்த்தானிவனென்றகல்வானுறைதேவரெல்லாம்.

(இ - ள்.) அகல் வான் உறை தேவர் எல்லாம் - பரந்த மேலுலகத்தில் வசிக்கின்ற தேவர்கள்யாவரும்,—'இவன் - இவ்வருச்சுனன், போர் தானவர் தம் செருக்கால் படு புன்மை எல்லாம் - யுத்தத்தில்வல்ல அசுரர்களது கர்வத்தால் (நாம் இது வரையிலும்) அனுபவித்துவந்த துன்பங்களனைத்தையும், தீர்த்தான் - நீக்கினான்,' என்று - என்று எண்ணியுஞ் சொல்லியும், ஆர்த்தார் - ஆரவாரஞ்செய்து, அணி கூர் அலர் மா மழையால் - அழகுமிக்க சிறந்த கற்பகப்பூமாரியால், விசும்பை தூர்த்தார் - ஆகாயத்தை நிறைத்து, துதித்தார் - (அருச்சுனனைப்) புகழ்ந்து, மதித்தார் - கௌரவித்து, நனி துள்ளுகின்றார் - (ஆனந்தத்தால்) மிகவுங் குதிக்கின்றவரானார் ; (எ - று.)

நனி - விசேஷித்த உரிச்சொல்; மிகுதிப் பொருளுணர்த்துவது. வெகு நேரம் ஆனந்தக் கூத்தாடியமை தோன்ற 'துள்ளுகின்றார்' என்றார்.

100.—இரத்தப் பெருக்கின் வருணனை.

கூரும்படையுங்குடையுங்கொடியுங்கொழித்துத்
தேருங்கரியும்பரியுந்திசைதோறுமுந்தி
யூருங்குருதிக்கடல்பொங்கியுவர்க்கடன்மேற்
போரும்பொரப்போயணியோடுபுகுவபோலும்.

(இ - ள்.) ஊரும் - (கடலை நோக்கிச்) செல்லுகின்ற, குருதி கடல் - இரத்தசமுத்திரமானது,—கூரும் - மிகுந்த, படைஉம் - ஆயுதங்களையும், குடைஉம் - குடைகளையும், கொடிஉம் - துவசங்களையும், கொழித்து - முன்னே செலுத்திவருதலினாலும்,—தேர்உம்-தேர்களையும், கரிஉம்-யானைகளையும், பரிஉம் - குதிரைகளையும், திசைதோறுஉம் - எல்லாத்திக்குக்களிலும், உந்தி - அலைத்துத்தள்ளுதலினாலும்,—உவர் கடல் மேல் - உப்புக்கடலின்மீது, பொங்கி-(தனக்கு ஒப்பாகமாட்டாதென்று) சீறியெழுந்து, போர் உம் பொர - யுத்தத்தையுஞ் செய்யும்பொருட்டு, அணியோடு போய் புகுவ - சைனியத்துடனே மேற்சென்று சேர்வதை, போலும் - ஒக்கும் ; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. புகுவ-புகுவது என்பதன் விகாரம். கரி-கரத்தையுடையது ; கரம் - கை : இங்கே, துதிக்கை. 'திரைதோறும்' என்னும் பாடத்துக்கு - அலைகள்தோறும் என்பது பொருள். (கOO)

101 —போர்க்களத்து அருச்சுனன் வெற்றியோடு நிற்றல்.

தத்திக்குருதிக்கடல்பொங்கத்தனித்தனிநின்
றெத்திக்கிலும்வெம்பிணக்குன்றமெழுதலொடோங்கப்

பத்திப்படமேற்பருந்தின்குலம்பந்தர்செய்யக்
கொத்துற்றதண்டார்த்திறற்கோதண்டவீரனின்றான்.

(இ - ள்) குருதி கடல் - இரத்தவெள்ளம், தத்தி பொங்க - பாய்ந்து பெருகவும்,—எ திக்கின்உம்-எல்லாத் திசைகளிலும், வெம் பிணம் குன்றம்-மலைபோன்ற கொடிய பிணக்குவைகள், தனி தனி நின்று - வெவ்வேறாக நின்று, எழிலொடு ஓங்க-எழுச்சியோடு உயர்ந்து தோன்றவும்,—பருந்தின் குலம் - பருந்துகளின் கூட்டம், மேல் - ஆகாயத்திலே, பத்தி பட-வரிசை வரிசையாக, பந்தர் செய்ய - (நிழலின் பொருட்டுப்) பந்தல் போகட்டாற் போல இடைவிடாது பரவவும்,—கொத்து உற்ற தண் தார் திறல் கோதண்டம் வீரன்-பூங்கொத்து நிறைந்த (தேனினாற்) குளிர்ந்த மாலையை யணிந்த வலிமையையுடைய வில்லையுடைய அருச்சுனன், நின்றான் - (போர்க்களத்திலே) நின்றான் ; (எ - று.)

கோதண்டமென்னும் இராமனது வில்லின் பெயரால் அருச்சுனனது காண்டீவத்தைக் கூறினார், 'துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனத்தில் இவன் இராமன்போல்வான்' என்னுஞ் சிறப்புத் தோன்றுதற்கு. பத்தி - பங்க்தி என்னும் வடமொழித்திரிபு ; இது, பந்தியெனவும் வழங்கும். பந்தர் - ஈற்றுப்போலி. எழில், எழு - பகுதி, இல் - தொழிற்பெயர்விகுதி. (க0க)

102.—அசுரமங்கையரின் அரற்றொலி.

மின்போனுடங்கவிடைவேல்விழிநீர்ததும்பப்
பொன்போலுருவங்கருகும்படிபூழிபோர்ப்ப -
வன்போடவுணர்மடமாதரரற்றுமோதை
யென்போலுமென்னினிடிபோல்வந்திசைத்ததெங்கும்.

(இ - ள்.) அவுணர் மடம் மாதர் - (இறந்துபோன) அசுரர்களின் மனைவிமார்களாகிய இளைய மகளிர், இடை - (தங்களது) இடுப்பு, மின் போல் நுடங்க - கொடிமின்னல்போலத் துவளவும், வேல் விழி - வேலாயுதம் போன்ற கண்கள், நீர் ததும்ப - கண்ணீர் நிறையவும், பொன்போல் உருவம் கருகும்படி - பொன்னையொத்த நிறமமைந்த மேனி கறுக்கும்படி, பூழி போர்ப்ப - புழுதி மூடவும், (வந்து விழுந்து புரண்டு), அன்போடு - (கணவர்பாலுள்ள) அன்புடனே, அரற்றும் - கதறியழுகின்ற, ஓதை - ஓசை,—என் போலும் என்னின் - எதனை யொக்கு மென்றால், இடிபோல்-இடியோசையைப்போல, எங்கும் வந்து இசைத்தது - எவ்விடத்துஞ் சென்று ஒலித்தது ; (எ - று.)

இடைக்கு மின் உவமை - ஒளியும் மெல்லிதாயிருத்தலும் பற்றியும், விழிக்கு வேலுவமை - கூர்மையுங் காமநோயையுண்டாக்கி ஆடவரைவருத்தலும் பற்றியும், உருவத்துக்குப் பொன் உவமை - நிறமும் அருமையும் பற்றியும் என்க. மின் - மின்னுவது: வினைமுதற்பொருள்விகுதி புணர்ந்து கெட்டது. இடை - உடம்பின் மத்தியிலுள்ள உறுப்புக்கு ஆதுபெயர். விழி நீர்ததும்ப - இடத்துநிகழ்பொருளின்தொழில் இடத்தின்மேல் நின்றது.

ததும்பல் - தளும்பல். அன்பாவது - உறவினரிடத்து மனமகிழ்ச்சி நிகழ்த்திப் பிணிப்பித்துநிற்கும் கேயம். வன்போடு எனப்பிரித்து - வலிய துன்பத்தோடு என்றும் உரைக்கலாம். மடம் - அழகும், பேதைமை யென்னும் பெண்மைக்குணமும் ஆகவுமாம். என் - வினவடியாப் பிறந்த பெயர்ப் பொருளைத்தந்த இடைச்சொல். (௧0௨)

103.—அரக்கர்மாதரின் புலம்பலால் அருச்சுனன் சினந்தீர்ந்து இரக்கங் கொள்ளுதல்.

இவ்வாறவுணர்மடமாதரிரங்கியேங்க
மைவாள்விழியின்வழியஞ்சனவாரிபாயத்
தெவ்வாறியபின்னருந்தீர்ந்திலதீர்ந்தவன்றே
கைவார்சிலையான்கடுங்கோபமுங்கண்சிவப்பும்.

(இ - ள்.) தெவ் ஆறிய பின்னர் உம்-பகைவர்களாகிய அசுரர்கள் ஒழிந்த பின்பும், தீர்ந்தில - நீங்காதவையாகிய, கை வார் சிலையான் கடு கோபம் உம் - கையில் நீண்ட வில்லையுடைய அருச்சுனனது பெருங்கோபமும், கண் சிவப்பு உம்-(அதனாலாகிய) கண்ணின் செம்மையும், இ ஆறு அவுணர் மடம் மாதர் இரங்கி ஏங்க - இவ்விதமாக இளைய அசுரமகளிர் துக்கித்து அழவும், மை வாள் விழியின் வழி - (அவர்களது) மையிட்ட வாளாயுதம்போன்ற கண்களின்வழியே, அஞ்சனம் வாரி-மையைக்கரைத்துவருகின்ற கண்ணீர், பாய - பெருகவும், (கண்டதனால்), அன்றே தீர்ந்த - அப்பொழுதே தணிந்தன ; (எ - று.)

இதனால், அருச்சுனனுக்குத் தேவர்களின்வேண்டுகோளாற் பகைவர்கள்பக்கல் உண்டாயிருந்த ஆறாக்கோபத்தையும், இயல்பாகவுள்ள பேரருளுடைமையையும் வெளியிட்டார். விழிக்கு வாளுவமை - கூர்மையும் ஆடவரைவருத்துதலும் பற்றி. தெவ் - பகைமையுணர்த்தும் உரிச்சொல் ; பகைவர்க்குப் பண்பாகுபெயர். தீர்ந்த-முற்று. அன்றே-தேற்றமாகவுமாம். விழியின் வழி-கண்களினின்று ஒழுகுகின்ற என்றுமாம். (௧0௩)

104.—தேரை நாகநகர்க்குநடத்துகஎன்று அருச்சுனன் கூறுதல்.

அன்னார்நகரத்தழகுந்தொல்லரணுநோக்கி
மின்னாரும்வேலான்விறன்மாதலிதன்னைமீண்டு
நன்னாகரூரிற்றடந்தேரைநடாத்துகென்னச்
சொன்னானவனுந்துனைதேர்நனிதூண்டுமெல்லை.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) மின் ஆரும் வேலான் - ஒளிநிரம்பிய வேலாயுதத்தையுடைய அருச்சுனன்,— அன்னார் நகரத்து அழகு உம்-அவ்வசுரர்களது தோயமாபுரத்தின் அழகையும், தொல் அரண் உம்-பழமையான (மதிலும் கடலகழியுமாகிய) அரண்களையும், நோக்கி - பார்த்து, (பின்பு), விறல் மாதலி தன்னை-ஜயத்தையுடைய தேர்ப்பாகனைநோக்கி, நல் நாகர் ஊரில் - நல்ல தேவர்களது நகரத்திலே, தட தேரை - பெரிய இரதத்தை, மீண்டு நடாத்துக-

திரும்பச் செலுத்துவாயாக, என்ன - என்று, சொன்னான்—; அவனும் - மாதலியும், துனை தேர் - (இயல்பிலே) விரைந்துசெல்லுந் தேரை, நனி தூண்டும் எல்லை - நன்றாகச் செலுத்திவருமளவில்,— (எ - று.)—'காணா வினவ' என மேற்கவியோடு இயையும்.

மின் ஆரும் - மின்னலையொத்த என்னவுமாம். நடாத்துக=நடத்துக : விகாரம். துனைதேர் - வினைத்தொகை. (க0சு)

105.—அந்தரத்தில் ஒருநகரைக்கண்டு அருச்சுனன் மாதலியை வினவுதல்.

செம்பொற்புரிசைதிகழ்கோபுரச்செம்பொன்மாடத்
தம்பொற்கொடிசேர்நகரந்தரத்தொன்றுகாணா
வம்பிற்பொலிதார்த்தடந்தேர்விடுமாட்சியானை
விம்பத்திறல்வார்சிலைவீரன்வினவவன்னான்.

(இ - ள்.) விம்பம் - வட்டமாகவளைதலையுடைய, திறல் - வலிமையுள்ள, வார் - நீண்ட, சிலை - வில்லைக்கொண்ட, வீரன் - அருச்சுனன்,—செம்பொன் புரிசை - சிவந்த பொன்னினாலாகிய மதில்களிலும், திகழ் கோபுரம் - விளங்குகின்ற கோபுரங்களிலும், செம் பொன் மாடத்து - சிவந்த பொன்னின்மயமான வீடுகளிலும், அம் பொன் கொடி - அழகிய பொன்னினாலாகிய காம்பையுடைய வெற்றித்துவசங்கள், சேர் - பொருந்தியுள்ள, நகர் ஒன்று - பட்டணம் ஒன்றை, அந்தரத்து - ஆகாயத்திலே, காணா - பார்த்து,— வம்பின் பொலி தார் - வாசனையோடு விளங்குகின்ற வெற்றி மாலையை யணிந்த, தட தேர் விடு மாட்சியானை - பெரியதேரைச் செலுத்துகின்ற பெருமைக்குணமுடைய மாதலியை, வினவ - (இதன்வரலாறு யாதென்று) கேட்க,—அன்னான் - அவன்,— (எ - று.)—'கூறுவானானான்' என வினை வருவித்து முடிக்க. அது மேல் ஐந்துகவிகளிற் கூறுகின்றார்.

இரண்டாம் அடியில், பொன் - அதனாலாகிய துவசதண்டத்துக்குக் காரணவாகுபெயர். (க0ரு)

106.—ஐந்துகவிகள் - அந்தரத்துத்தோன்றிய இரணியபுரத்தைப்பற்றி மாதலி கூறுதலைத் தெரிவிக்கும்.

மன்னுந்தனுசகுலமாதரில்வஞ்சநெஞ்சக்
கன்னங்கரியகுழற்காலகைகாமர்சோதிப்
பொன்னங்கொடிபோலெழில்கூர்நுண்ணிடைப்புலோமை
யென்னும்பெயராரிருவோருளரென்றுமுள்ளார்.

(இ - ள்.) மன்னும் - நிலைபெற்ற, தனுச குலம் மாதரில் - அசுரகுலத்து மகளிருள், வஞ்சம் நெஞ்சம் - வஞ்சனையையுடைய மனத்தையும், கன்னங்கரிய குழல் - மிகவுங்கறுத்த கூந்தலையுமுடைய, காலகை - காலகையும், காமர் சோதி - விரும்பப்படுகிற [அழகிய] ஒளியையுடைய, பொன் அம் கொடி போல் - அழகியபொற்கொடிபோல, எழில் கூர் நுண் இடை - அழகு மிக்க மிகச் சிறியதான இடையையுடைய, புலோமை-புலோமையும், என்னும் பெயரார் - என்கிற பேருள்ளவர்களும், என்றும் உள்ளார் - எப்

பொழுதும் இறவாமற் பிழைத்துள்ளவர்களு மாகிய, இருவோர் - இரண்டு பேர், உளர் - உண்டு; (எ - று.)

'கன்னங்கரிய' என்றது - மிகு கறுப்பின் குறிப்பாய் வழங்கிவருவதொரு சொல்விழுக்காடு. 'காமமருவு' என்பது 'காமர்' என விகாரப்பட்டதென்பர். சோதி - ஜ்யோதிஸ்; வடசொல். என்றும் உள்ளார்-(புகழினால்) எப்பொழுதும் நிலை பெற்றுள்ளவ ரென்றுமாம். (௧0௬)

107. அம்மாதர்தந்தைதனைநோக்கியனந்தகாலஞ்
செம்மால்வரையிற்றவஞ்செய்தனர்செய்தநாளின்
மைம்மான்விழியார்தமக்கந்தவனசவாண
னெம்மாலிசைத்தற்கிசையாதவரங்களீந்தான்.

(இ - ள்.) அ மாதர் - அப் பெண்களிருவரும், தந்தைதனை நோக்கி - (படைத்தற்கடவுளாதலால் யாவர்க்கும்) பிதாவாகிய பிரமதேவனைக் குறித்து, அனந்த காலம் - அளவிறந்த காலம், செம் மால் வரையில் - சிவந்த பெரிய மேருமலையிலே யிருந்து, தவம் செய்தனர் - தவத்தைப் பண்ணினார்கள்; செய்த நாளில் - (அங்ஙனம்) பண்ணிய காலத்தில், மை மான் விழியார்தமக்கு - அஞ்சனமிட்ட மான்பார்வையையொத்த கண்களை யுடைய அம்மகளிர்க்கு, அந்த வனசம் வாணன் - தாமரை மலரில் வாழ்கின்ற அப் பிரமன், (பிரசன்னனாகி), எம்மால் இசைத்தற்கு இசையாத வரங்கள் ஈந்தான் - என்போலியராற் சொல்லுதற்கு முடியாத பலவரங்களைத் தந்தான்.

செம்பொன்வரை யென்பார், 'செம்மால்வரை' என்றார். மான் - அதன் பார்வைக்கு, முதலாகுபெயர். வநஜம்-நீரிற்பிறப்பது; வநம்-நீர். வாணன்-வாழ்நன் என்பதன் மரூஉ. மாதலி, மற்றைத்தேவர்களையும் உளப்படுத்தி, 'எம்மால்' என்றான்; இனி, தனித்தன்மைப்பன்மையுமாம். (௧0௭)

108. தம்மக்களாயவசுரேசரதிதிதந்த
வம்மக்கடம்மாலழியாமையுமாடகத்தான்
மும்மைப்புரம்போல்விசும்பூர்தருமொய்ம்பினிந்தச்
செம்மைப்புரமுங்கொடுத்தானத்திசைமுகத்தோன்.

(இ - ள்.) தம் மக்கள் ஆய - தம்மிருவரது புத்திரர்களாகிய, அசுர ஈசர் - அசுரத்தலைவர்கள், அதிதி தந்த அ மக்கள் தம்மால் - அதிதி யென்னும் காசியபர்மனைவி பெற்ற புத்திரர்களாகிய அத்தேவர்களால், அழியாமைஉம் - அழிவடையாதிருத்தலாகிய வரத்தையும், ஆடகத்தால் - பொன்னாலாகிய, மும்மை புரம் போல் விசும்பு ஊர்தரு மொய்ம்பின் - திரிபுரம்போல ஆகாயத்திலேபறந்துசெல்லும் வலிமையையுடைய, இந்த செம்மை புரம்உம் - அழகுள்ள இந்த இரணியநகரத்தையும், அ திசை முகத்தோன் - நான்குமுகங்களையுடைய அப்பிரமன், கொடுத்தான் - (அப்பெண்களுக்குத்) தந்தான்; (எ - று.)

அதிதியின்மக்க ளாதலால், தேவர்களுக்கு 'ஆதித்தியர்' என்றும், 'ஆதிதேயர்' என்றும் பெயர்கள் உண்டு. அம் மக்கள் - அழகிய மக்கள்

என்றுமாம். "தெரிமாண் டமிழ்மும்மைத் தென்னம் பொருப்பன்" என்ற விடத்துப்போல, இங்கே, 'மும்மை' என்பது, மூன்றின்தன்மையையுணர்த்தாமல் மூன்றென்னும் எண்ணையே யுணர்த்திற்று. (௧0அ)

109. பொன்காலுமெய்யர்பொறிகால்பொலங்குண்டலத்தர்
முன்காலனையுஞ்சமர்மோதிமுருக்குமொய்ம்பர்
மின்கால்படையர்விடங்காலும்விழியர்வெம்போர்
வன்காலகேயரெனும்பேர்திசைவைத்தவீரர்.

(இ - ள்.) வெம் போர் வல் - கொடிய போரிலே வல்ல, காலகேயர் எனும் பேர் திசை வைத்த - (காலகையின் மக்களாதலால்வந்த) காலகேயர் என்னும் (தமது) பேரை எல்லாத்திசைகளிலும் பரவவைத்த, வீரர்-வீரர்கள்,— பொன் காலும் மெய்யர் - பொன்னொளியை வீசும் உடம்புள்ளவர்; பொறி கால் பொலம் குண்டலத்தர் - ஒளியை வீசுகின்ற பொன்னினாலாகிய குண்டலங்களையுடையவர்; முன் - விரைந்து சென்று, காலனைஉம் - யமனையும், சமர் மோதி - போரில் தாக்கி, முருக்கும் - அழிக்கவல்ல, மொய்ம்பர்-வலிமையையுடையவர்; மின் கால் படையர் - ஒளியை வீசுகிற ஆயுதங்களையுடையவர்; விடம் காலும் விழியர் - (கோபமிகுதியால்) விஷத்தை வெளிப்படுத்துகிற கண்களையுடையவர்; (எ - று.)

பொன்+குண்டலம்=பொலங்குண்டலம்; இப்புணர்ச்சி - "பொன்னென்கிளவி யீறுகெட முறையின், முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ், செய்யுண் மருங்கிற் றொடரிய லான" என்னுந் தொல்காப்பியவிதியால் அமைந்தது: இதனைப் பிற்காலத்தார் நிகண்டு முதலியவற்றுள் 'பொலம்' என்றே எடுத்துக்கூறி வழங்கியிருத்தலால், இப்புணர்ச்சி, நன்னூலின்படி மகரவீற்று விதியில் அடங்கும். (௧0௯)

110. வருமுப்பொழுதுமறையந்தணரங்கைவாரி
யுருமுப்புயல்போற்கவர்வோர்முன்னுகாந்தநாதன்
பொருமுப்புரத்திலுறைதானவர்போலும்வீர
ரிருமுப்பதினாயிரம்வஞ்சகரிங்குமுண்டால்.

(இ - ள்.) வரு - (மாறிமாறி) வருகின்ற, மு பொழுதுஉம் - (காலை நடுப்பகல் மாலை என்னும்) மூன்று காலங்களிலும், மறை அந்தணர்-வேதம் வல்ல பிராமணர்கள், அம் கை - தமது அகங்கைகளால் (சந்தியாவந்தனத்தில்) எடுத்துவிடுகின்ற, வாரி - (அர்க்கியப்பிரதான) ஜலத்தை, உருமு புயல்போல் - இடியையுடைய மேகங்கள் (கடலினீரை முகந்து பருகுதல்) போல, கவர்வோர் - பறித்துக்கொள்பவர்களும், முன் - முன்னே, உக அந்தம் நாதன் - யுகமுடிவுகாலத்துக்குத் தலைவனாகிய சிவபிரான், பொரு - போர்செய்து அழித்த, மு புரத்தில் உறை தானவர்போலும் - திரிபுரத்தில் வசித்த அசுரர்கள்போன்ற, வீரர் - வீரர்களும்ஆகிய, இரு முப்பதினாயிரம் வஞ்சகர் - வஞ்சனையையுடைய அறுபதினாயிரவர் அசுரர்கள், இங்குஉம் - இவ்விரணியபுரத்திலும், உண்டு - உளர்; (எ - று.)—ஆல் - தேற்றம்.

வருமுப்பொழுது - ஒன்றன்பின் ஒன்றாக வருகின்ற பிராதஸ்ஸந்தியை, மத்தியாஹ்நம், ஸாயம்ஸந்தியை என்னும் திரிகாலம். உம்மை - இனைத்தென்றறிபொருளில்வந்தது. அந்தணர் - அழகிய தண்மையை [குளிர்ந்த அருளை] உடையவர் என, பிராமணர்க்குக் காரணவிடுகுறிப்பெயர்: இனி, அந்தத்தை அணவுவார் - அந்தணர்: என்றது - வேதாந்தத்தையே பொருளாக மேற்கொண்டுபார்ப்பார் எனினுமாம். சருவசங்காரகாலத்து அழித்தற்றொழில்செய்யுங் கடவுளாதலால், உருத்திரனை 'உகாந்தநாதன்' என்றார். இரு முப்பதினாயிரம் - பண்புத்தொகைப் பன்மொழித்தொடர். 'இங்கும்' என்ற உம்மை, கீழ்ப் பதினாலாங்கவியில் 'தோயமாபுரத்தில் முக்கோடியசுரர் உண்டு' என்றதை நோக்கியது.

111.—மாதலியின்சொற்கேட்ட அருச்சுனன் இவரை முடித்தபின்பே அமராவதி செல்வேனென்று வஞ்சினங் கூறல்.

தன்றேர்வலவன்மொழிகேட்டுத்தயங்குநீலக்
குன்றேயனையான்கொடும்போர்வஞ்சினங்கள்கூறி
யின்றேயிவராவியுந்தென்புலத்தேற்றிப்பின்ன
ரன்றேயினிநானமராவதிசெல்வதென்றான்.

(இ - ள்.) தன் தேர் வலவன் மொழி கேட்டு - (இங்ஙனம்) தனது தேர்ப்பாகனாகிய மாதலி சொன்ன வார்த்தையைச் செவியுற்று, தயங்கு நீலம் குன்றுஏ அனையான்-விளங்குகின்ற நீலநிறமுள்ள மலையையே யொத்த அருச்சுனன், கொடு போர் வஞ்சினங்கள் கூறி - கொடிய யுத்தத்துக்கு உரிய பல சபதங்களைச் சொல்லி, 'இன்றுஏ - இப்பொழுதே, இவர் ஆவிஉம் - இவ்வசுரர்களது உயிரையும், தென் புலத்து ஏற்றி - தென்திசையிலுள்ள யமலோகத்திற் சேரச்செய்துவிட்டு, பின்னர் அன்றுஏ-பின்பன்றோ, இனி—, நான்—, அமராவதி-சுவர்க்கலோகத்துள்ள நகரத்துக்கு, செல்வது - போவது', என்றான் - என்று பிரதிஜ்ஞை செய்தான்; (எ - று.)

அமராவதி-அமரர்களையுடையதுஎனத் தேவேந்திரனது இராஜதானிக்குக் காரணக்குறி. (கககக)

112.—அருச்சுனன் இந்நகர்மீது தேரை யேவுக என்ன, மாதலி அங்ஙனே செய்தல்.

இந்தப்புரத்தின்மிசைத்தேரினையேவுகென்னாக்
கந்தற்குவமைதருதிண்டிறற்காளைகூறச்
சிந்தைக்குமுந்துந்நடந்தேரைத்தனுசர்வைகு
மந்தப்புரத்தில்விடுத்தான்மற்றவனுமாதே.

(இ - ள்.) 'இந்த புரத்தின்மிசை - இந்நகரத்தின்மேலே, தேரினை ஏவுக - தேரைச் செலுத்துவாயாக,' என்னா - என்று, கந்தற்கு உவமை தகு திண் திறல் காளை - (எல்லா வீரர்களுக்கும் உபமானமாகச் சொல்லப்படுகிற) முருகக்கடவுளுக்கும் உபமானமாகத்தக்க மிக்க வலிமையையுடைய வீரனான அருச்சுனன், கூற - சொல்ல,—அவன்உம்-மாதலியும், சிந்தைக்கு

உம் முந்தும் தட தேரை - மனத்தினும் விரைந்து செல்லுந் தன்மையுடைய பெரிய இரதத்தை, தனுசர் வைகும் அந்த புரத்தில் - அசுரர்கள் வசிக்கின்ற அவ்விரணியபுரத்திலே, விடுத்தான்-செலுத்தினன்; (எ - று.)

கந்தன் - ஸ்கந்தன் என்னும் வடமொழித் திரிபு. உபமேயத்தினும் உபமானம் சிறந்திருத்தல்வேண்டு மென்பது அலங்காரநூலாரது துணிபாதலால், அருச்சுனனது சிறப்புத் தோன்ற, 'கந்தற்குவமைதகு திண்டிறற்காளை' என்றார். காளை - உவமவாகுபெயர். காளை - கம்பீரமான தோற்றத்துக்கும், நடைக்கும், வலிமைக்கும் உவமை. நினைத்தமாத்திரத்தில் எவ்வளவுதூரத்திலுள்ளபொருளினிடத்துஞ் சென்றுசேருதல்பற்றி, மனம் மிக்கவிரைவுக்கு உவமைகூறப்படும். மற்று - அசை. 'மற்றவன்' என எடுத்து - தேரிலுள்ளவரிருவருள் வீரனொழியப் பாகனாய்நின்றவன் எனினுமாம். சிந்தைக்கு - நான்காமுருபு, எல்லைப்பொருளது. உம்-உயர்வு சிறப்பு. மாது, ஓ-ஈற்றசைகள். (கக௨)

113.—தேர்நாணொலிகளைக்கேட்டுக் காலகேயர் திடுக்கிடுதல்.

தேராரவாரத்துடனேதிண்சிலைவலான்றன்
போராரவாரச்சிலைநாணொலிமீதுபோக
வாராரவாரத்திடிகேட்டவரவமொத்தார்
காராரவாரமெனப்பொங்குமக்காலகேயர்.

(இ - ள்.) திண் சிலை வலான்தன் - வலிய வில்லில்வல்ல அருச்சுனனது, தேர் ஆரவாரத்துடனே - தேரின்பேரொலியோடே, போர் ஆரவாரம் சிலை நாண் ஒலி - போரிற்கொண்டாட்டத்தையுடைய வில்லினது நாணியின் ஓசையும், மீது போக - அந்நகரத்தின்மேற்செல்ல, கார் ஆரவாரம் என பொங்கும் அ காலகேயர் - மேகத்தினது கொர்ச்சிபோல மேலேழுந் தன்மையையுடைய அந்தக்காலகேயர்கள், ஆர் ஆரவாரத்து இடி கேட்ட - நிறைந்த ஒலியையுடைய இடியைச் செவியுற்ற, அரவம் - நாகங்களை, ஒத்தார் - போன்றார்கள்; [திடுக்கிட்டார் என்றபடி]; (எ-று.)

இரண்டாம் அடியில் 'பேராரவாரம்' என்னும் பாடம், மோனைத்தொடைக்குப் பொருந்தாது. ஆராரவாரம் - வினைத்தொகை; பண்புத்தொகையாய், (பொறுத்தற்கு) அருமையான ஓசையுமாம். (ககங)

வேறு.

114.—ஓசையைப்பற்றிக் காலகேயர் பலவாறு சங்கித்தல்.

இந்த வோதை யெழிலி யேழு மூழிநாளி டித்தெழு
மந்த வோதை யோவ தன்றி யாழி பொங்கு மோதையோ
கந்தன் வானின் மீது தேர்க டாவு கின்ற வோதையோ
வெந்த வோதை யென்று யிர்த்த யிர்த்து வஞ்சர் யாவரும்.

இதுமுதல் நான்குகவிகள் - குளகம்.

(இ - ள்.) வஞ்சர் யாவர்உம் - வஞ்சகராகிய அசுரர்களெல்லோரும், இந்த ஓதை - இவ்வோசை,—எழிலி எழ்உம் ஊழிநாள் இடித்துஎழும்

அந்த ஓதை ஓ - ஏழுமேகங்களும் யுகாந்தகாலத்தில் இடி யிடித்தலா லுண்டாகின்ற அவ்வோசையோ? அது அன்றி - அதுவல்லாமல், ஆழி பொங்கும் ஓதை ஓ - (அக்காலத்தில்) கடல் மேற்பொங்குவதனாலுண் டாகும் ஓசையோ? (அல்லது), கந்தன் வானின் மீது தேர் கடாவுகின்ற ஓதை ஓ - (தேவசேனாபதியாகிய) சுப்பிரமணியமூர்த்தி ஆகாசமார்க்கத் திலே தேரைச்செலுத்திவருகிற ஓசைதானோ? எந்த ஓதை - (இவ்வோ சைகளுள்) எவ்வோசையாம்? என்று அயிர்த்து அயிர்த்து - என்று பல வாறு சங்கித்து,—(எ - று.)—'தெழித்து' என மேற்கவியோடு தொடரும்.

ஏழுமேகங்களாவன - சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங் காரிதம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்பன; இவை முறையே மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ இவற்றைப் பொழிவன. சருவசங்கார காலத்தில் மேகங்களேழும் ஒருங்கேயெழுந்து அவ்வவற்றிற்கு உரிய மழையை இடைவிடாது பொழிந்து உலகங்களை அழிக்குமென்பதும், கடல் பொங்கியெழுந்து உலகை மூடுமென்பதும் நூற்கொள்கை. அந்த வோதை- அந்தம் ஓதை எனப்பிரித்து, (பிராணிகளுக்கெல்லாம்) அழிவைச்செய்யும் ஓசையெனினுமாம். ஓகாரமூன்றும், ஐயப்பொருளன. அயிர்த்து அயிர்த்து- அடுக்கு, மிகுதிபற்றியது. அயிர்த்துயிர்த்து என்றும்பாடம்.

இது முதற் பதினேழுகவிகள் - பெரும்பாலும் ஏழாஞ்சீர் கூவிளச் சீரும், மற்றையாறும் மாச்சீர்களுமாகி வந்த எழுசீராசிரிய விருத்தங்கள்.

115.—மூன்று கவிகள் - காலகேயர் சினந்து
போர்க்குப் பரபரப்புக்கொண்டுவருவதைத் தெரிவிக்கும்.

தெழித்துரப்பியெயிறுதின்றுவைதுசெய்யகண்கடீ
விழித்துமீசைநுனிமுறுக்கிவெய்யவீரவாளுறை
கழித்தெழுந்துபொங்குகின்றகாளகூடமென்னவே
கொழித்தழன்றுமண்ணும்விண்ணுமின்றுகோறுநாமெனா.

(இ - ள்.) தெழித்து - கோபங்கொண்டு, உரப்பி - அதட்டி, எயிறு தின்று - பற்களைக் கடித்து, வைது - வசைமொழிகளைச்சொல்லி, செய்ய கண்கள் தீ விழித்து - சிவந்த கண்கள் (கோபத்தால்) நெருப்புச்சிந்த விழித்துப்பார்த்து, மீசை நுனி முறுக்கி - மீசையினுடைய நுனியை (க் கையால்) திருகி, வெய்ய வீரம் வாள் உறை கழித்து - கொடிய வலிமையை யுடைய வாளை உறைநீக்கி யெடுத்து, எழுந்து - (தத்தமிருப்பிடத்தைவிட்டு) எழுந்து, பொங்குகின்ற காளகூடம் என்னவே - (பாற்கடலிற்) கொதித் தெழுந்த காளகூடமென்னும் பெருவிஷம்போல, கொழித்து-(தீயை) வீசி, அழன்று - சீறி, 'மண்ணும் - நிலவுலகத்தாரையும், விண்ணும் - வானுலகத் தாரையும், இன்று - இப்பொழுது, நாம்—, கோறும் - கொல்வோம்,' எனா- என்றுசொல்லி,—(எ - று.)—'ஓடுவாரும்' (116) என மேலே தொடரும்.

'உரப்பி யெயிறுதின்று வைது கண்கடீவிழித்து' என்பதுவரையில் சினத்தின்செயல். மீசைமுறுக்குதல் முதலியன, வீரத்தின்செயல். மீசை-

மிசை [மேலிடத்து]உள்ளது: இது, மேலுதட்டின் மீதுள்ள மயிரைக் காட்டும். உறை - படைக்கூடு; இது, ஆயுதம் உறுதற்கு இடமாதல்பற்றி வந்த பெயர்: உறுதல் - பொருந்துதல். விழித்தல் - உருட்டிப்பார்த்தல். மண், விண்-ஆகுபெயர்கள். கோறும்-தன்மைப்பன்மை யெதிர்காலமுற்று. (கக௫)

116\. ஓடுவாருமந்தவோதையெதிருடன்றுறுக்கியே
நாடுவாருநமர்களாண்மைநன்றுநன்றெனுநகைத்
தாடுவாருமமரர்வாழ்வுபாழ்படுத்துமாயுதந்
தேடுவாருமெண்ணிறந்ததேர்களேறுவாருமே.

(இ - ள்.) அந்த ஓதை எதிர் - அவ்வோசையுண்டான இடத்துக்கு எதிர்நோக்கி, ஓடுவார்உம் - ஓடுபவர்களும், உடன்று - பகைத்து, உறுக்கி- கோபித்து, நாடுவார்உம் - (அவ்வோசையுண்டாதற்குக் காரணத்தை) ஆராய்பவர்களும், நமர்கள் ஆண்மை நன்று நன்று எனு - நம்மவர்களது பராக்கிரமம் நன்றாயிருந்தது நன்றாயிருந்தது என்று, நகைத்து ஆடுவார் உம் - (தம்மில்) சிரித்துப் பேசுபவர்களும், அமரர் வாழ்வு பாழ்படுத்தும் - தேவர்களது வாழ்க்கையைப் பாழாக்கிவருகிற, ஆயுதம் - ஆயுதங்களை, தேடுவார்உம் - தேடி யெடுப்பவர்களும், எண் இறந்த தேர்கள் ஏறுவார்உம் - அளவில்லாத தேர்களில் ஏறுபவர்களுமாய்,—(எ-று.)—'உந்தி முந்தினார்' என, மேலிற்கவியில் முடியும்.

ஆய் என்னும் வினையெச்சம், வருவிக்கப்பட்டது. நம்மவர் பராக்கிரமம் பிறர் அஞ்சாதுவந்தெதிர்க்கும்படியாயிற்றே யென்று, இகழ்ச்சி தோன்ற 'நன்று நன்று' என்றார்; பிறகுறிப்பு. ஆடுதல்-வார்த்தையாடுதல். அந்தவோதை - தேரோசையோடு கூடிய நாணொலி. 'உறுக்கிமேல்' என்று பிரதிபேதம். (ககசு)

117\. கூளிகோடியுய்ப்பகுஞ்சரங்கள்கோடியுய்ப்பபே
ராளிகோடியுய்ப்பவாயுகதிகொடந்தரத்தின்மேல்
வாளிபோதும்வாசிகோடிகோடியுய்ப்பவாவுதே
ரோளியாகவானினெல்லைமறையவுந்திமுந்தினார்.

(இ - ள்.) கூளி கோடி உய்ப்ப - பலபெருங்கழுகுகள் இழுத்துப் பறந்துசெல்வனவும், குஞ்சரங்கள் கோடி உய்ப்ப - பலயானைகள் இழுத்துச் செல்வனவும், பேர் ஆளி கோடி உய்ப்ப - பெரிய சிங்கங்கள் பல இழுப்பனவும், வாயு கதி கொடு - காற்றுச்செல்லும் வேகத்தைப் பெற்று, அந்தரத்தின்மேல் - ஆகாயத்திலே, வாளி போதும் - அம்புபோல நேர் செல்லுகின்ற, வாசி கோடி கோடி - மிகப்பலவாகிய குதிரைகள், உய்ப்ப - இழுப்பனவுமாகிய, வாவு தேர் - தாவிச் செல்லுகின்ற தேர்களை, ஒளி ஆக - ஒழுங்காக, வானின் எல்லை மறைய - ஆகாயத்தின் எல்லை மறையும்படி, உந்தி - செலுத்தி, முந்தினார் - முற்பட்டு வந்தார்கள்; (எ - று.)

கூளி - பூதமுமாம். குஞ்சரம் என்னும் வடசொல்லுக்கு - மத்தகங்களுக்குக் கீழிருக்கின்ற குழிகளுள்ள தென்றும், காட்டுப்புதர்களிற் சஞ்சரிப்

படுதென்றும் பொருள். ஆளி - யானையைக் கொல்வதும் சிங்கம் போல்வதும் துதிக்கையுடையது மாகிய தொரு யாளியென்னும் மிருகவிசேஷ மாகவுமாம். வாளி போதல் - வட்டமா யோடுதலுமாம். வாசி - வாஜி; வடசொல். ஆயதேர் என்று பிரதிபேதம். (கக எ)

118.—அவ்வசுரர்கள்மனத்தில் அருச்சுனனைப்பற்றி நிகழும் எண்ணம்.

அந்தகன்பொரற்குநம்மைவல்லனல்லனபயமுன்
றந்தவிந்திரன்றனக்குமொக்குமன்னதன்மைதான்
கந்தனென்னிலாறிரண்டுகண்கள்கைகளில்லையே
லெந்தவீரனம்மொடின்றெதிர்க்குமிந்தவீரனே.

(இ - ள்.) அந்தகன் - யமன், நம்மை—, பொரற்கு - போர்செய்து எதிர்ப்பதற்கு, வல்லன் அல்லன் - சமர்த்தனல்லன்; அபயம் முன் தந்த - (நம்மால்) முன்னே அபயங்கொடுக்கப்பட்ட, இந்திரன் தனக்கும்-தேவேந்திரனுக்கும், அன்ன தன்மை - (நம்மோடு பொரமாட்டாத) அத்தன்மை, ஒக்கும் - பொருந்தும்; (ஆதலால் இவன் யமனும் இந்திரனுமல்லன்); கந்தன் என்னில் - முருகக்கடவுள் என்போமென்றால், ஆறு இரண்டு கண்கள் கைகள் இல்லை - (ஆறுமுகனாதலால்) பன்னிரண்டுகண்களும் அத்தனை கைகளும் இல்லை; (ஆதலால் அவனுமல்லன்); இன்று நம்மொடு எதிர்க்கும் இந்த வீரன் - இப்பொழுது நம்முடனே எதிர்க்கிற இவ்வீரன், மேல் எந்த வீரன் - இம்மூவருமல்லாத எந்தவீரனோ? (எ - று.)—என்று ஐயப்படுதலும் தெளிதலுமானார்கள் அவுணரென்க.

அபயந்தருதல் - பயப்படாதேயென்று வாக்குத்தத்தஞ் செய்தல். மேல் - வேறென்னும் பொருள்பட நின்ற இடைச்சொல். (கக அ)

119.—அவ்வசுரர்களின் வனப்பைக்கண்டு அருச்சுனன் கருத்துநொந்து கூறலுறுதல்.

எண்டயங்குமெயிறுவெண்ணிலாவெறிப்பவெயின்மணிக்
குண்டலங்களழகெறிப்பமகுடகோடிகுலவிமேன்
மண்டியெங்கும்வெயிலெறிப்பவஞ்சர்தம்வனப்பெலாங்
கண்டுகண்டருச்சுனன்கருத்துநொந்துகூறுவான்.

(இ - ள்.) எண் தயங்கும் எயிறு - வலிமைமிக்க பற்கள், வெள் நிலா எறிப்ப - வெண்மையான சந்திரகாந்திபோன்ற ஒளியை வீசவும், வெயில் மணி குண்டலங்கள் - சூரியகாந்தியையொத்து விளங்குகின்ற இரத்தின குண்டலங்கள், அழகு எறிப்ப - அழகை வீசவும், மகுடம் கோடி - கிரீடத்தின் நுனி, குலவி - விளங்கி, மேல் மண்டி - மேலே பொருந்தி, எங்கும்-, வெயில் எறிப்ப - சூரியனொளிபோன்ற ஒளியை வீசவும், வஞ்சர் தம் வனப்பு எலாம் - வஞ்சகர்களாகிய அவ்வசுரர்களின் இவ்வழகுகளையெல்லாம், கண்டுகண்டு - நன்றாகப்பார்த்து, அருச்சுனன்—,கருத்து நொந்து - மனம் வருந்தி, கூறுவான்-(சில வார்த்தை) சொல்வானானான்; (எ - று.)—அவை மேற்கவியிற் கூறுகிறார்.

கண்டுகண்டு - அடுக்கு, மிகுதிப்பொருளது. (கக கூ)

120.—அருச்சுனன் அவ்வசுரரின்வனப்பைக்கண்டு இவர்களைக் கொல்லவேண்டுமேயென்று நொந்து கூறுதல்.

கன்னல்வேளைவென்றவிக்கவின்படைத்தகாட்சியும்
மின்னுபூண்விளங்குமார்பும்விபுதருக்குமில்லையா
லென்னபாவமிவரையாவியீடழிப்பதென்றுபோர்
மன்னர்மன்னன்முன்னுரைத்தவாய்மையுங்குறிப்புறு.

இதுமுதல் நான்கு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) 'கன்னல் வேளை வென்ற - கருப்புவில்லையுடைய மன்மதனைச் சயித்த, இ கவின் படைத்த காட்சிஉம் - அழகுபெற்ற இத்தோற்றமும், மின்னு பூண் விளங்கும் மார்புஉம் - பிரகாசிக்கிற ஆபரணங்கள் விளங்குகிற மார்பும், விபுதருக்குஉம் இல்லை - (இவ்வசுரர்களுக்கு இருப்பதுபோலத்) தேவர்களுக்கும் இல்லை; ஆல் - ஆதலால், இவரை - இவர்களை, ஆவி ஈடு அழிப்பது - உயிரின் வலியை நாசஞ்செய்வது [கொல்லவேண்டுவது], என்ன பாவம் - (முற்பிறப்பிற்செய்த) என்ன தீவினையின் பயனோ?' என்று - என்று சொல்லி, போர் மன்னர் மன்னன்-போரில் வல்ல அரசர்களுக்குட்சிறந்தவனான அருச்சுனன், முன் உரைத்த வாய்மைஉம் - (இவர்களைக் கொல்வேனென்று) முன்னே சொன்ன சபதவார்த்தையையும், குறிப்புறு - மனத்திற்கருதி,—(எ - று.)—'குறிப்புறு' என்பது, மேல் 123 - ம் கவியில் 'செவிக்கொளா' என்பதனோடு முடியும்.

முன் உரைத்த வாய்மை - கீழ் நூற்றுப்பதினோராங்கவியிற் காண்க. பூண் - பூணப்படுவது: காரணப்பெயர். (கஉ0)

121.—அருச்சுனன்மீது பகழிதூவி அவ்வசுரர்கள் கூறலுறுதல்.

வில்வளைத்துநின்றநீலவெற்பரொன்றைவிண்ணிடைச்
செல்வளைத்ததென்னவந்துதீயவஞ்சர்யாவரும்
மல்வளைத்தசிகரவாகுகிரியின்மீதுமார்பினுங்
கொல்வளைத்தபகழிதூவியின்னநின்றுகூறுவார்.

(இ - ள்.) வில் வளைத்து நின்ற - வில்லை வணக்கிநின்ற, நீலம் வெற்பர் ஒன்றை-ஒரு நீலமணிமலையை, விண்ணிடை-ஆகாயத்திலே, செல் வளைத்தது என்ன - மேகங்கள் சூழ்ந்ததுபோல, தீய வஞ்சர் யாவர்உம்-கொடிய வஞ்சனையுடைய அசுரர்களனைவரும், வந்து - (அருச்சுனனை) வந்து வளைத்துக்கொண்டு, மல் வளைத்த - மற்போரை மிகப்பயின்ற, சிகரம் கிரி வாகுவின்மீதுஉம்-சிகரத்தையுடைய மலைகள் போன்ற(அவனது) தோள்களிலும், மார்பின்உம்-மார்பிலும், கொல் வளைத்த பகழி தூவி-கொல்லனால் நிருமிக்கப்பட்ட அம்புகளைச் சொரிந்து, நின்று - நிலைநின்று, இன்ன கூறுவார் - இவ்வார்த்தைகளைச் சொல்லுவார்கள்;(எ-று.)—அவைமேற்கவியிற்காண்க.

வெற்பர், அர் - சாரியை. சிகரம் - மலையுச்சி. கொல் - இரும்பைக் காய்ச்சி யடித்துச்செய்யும் வேலை; கொல்லனுக்கு இங்கு ஆகுபெயர்: இனி, கொலைத்தொழிலைத் தமதாகக்கொண்ட அம்புகளென்றுமாம். செல்-செல்லுவது: மேகத்துக்குக் காரணக்குறி. சிகரவாகுகிரியின் - உருபுபிரித்துக் கூட்டப்பட்டது. (கஉக)

122.—அருச்சுனனை இரணியபுரத்தசுரர் அலட்சியப்படுத்திப் பேசுதல்.

உழுவைகண்டவுழைகள்போலவோடியோடிமேருவின்
முழைதொறும்புகுந்ததேவரேவல்கொண்டுமொய்ம்புட
னிழிவில்சந்தனங்கடாவியிங்குவந்ததென்னடா
புழுவிலொன்றுமொன்றுபூதலத்துளானொருத்தனீ.

(இ - ள்.) புழுவில் ஒன்றும் - புழுக்களிலே சேர்ந்த [புழுக்களில் ஒன்றையொப்ப எங்களால் மதிக்கப்படுகிற], ஒன்று பூதலத்து உளான் - பொருந்திய நிலவுலகத்திலே யுள்ளவனாகிய, ஒருத்தன் நீ - (வேறு துணையில்லாத) நீ ஒருவன், உழுவை கண்ட உழைகள் போல - புலியைப்பார்த்த மான்கள்போல, ஓடி ஓடி-(எங்களைக்கண்டு பயந்து) மிகுதியாக ஓடி, மேருவின் முழைதொறும் புகுந்த-மேருமலையின்குகைகள்தோறும் பிரவேசித்து ஒளித்த, தேவர் - தேவர்களது, ஏவல்கொண்டு - ஏவுதலினால், மொய்ம்புடன்-வலிமையுடனே, இழிவு இல் சந்தனம் கடாவி-குற்றமில்லாததொரு தேரைச் செலுத்தி, இங்கு வந்தது—, என் அடா - யாதடா ? (எ - று.)

என்னடா என்பது-இகழ்ச்சிதோன்ற நின்றது. சந்தனம்=ஸ்யந்தநம்: வடமொழி. ஒன்று பூதலம் - வினைத்தொகை. பூதலத்துளானொருத்தன் நீ - முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி. 'புழுவிலொன்றுமன்று' என்றபாடத்துக்கு, ஒருபுழுவுக்குமொப்பானவனன்று என்றுபொருள் (கஉஉ)

123.—அருச்சுனன் மறுமொழி.

என்றுகாலகேயர்நின்றிசைத்தசொற்செவிக்கொளா
நன்றுகாலகேயர்சொன்னவாய்மைநன்றெனாநகைத்
தொன்றுகாலம்வந்ததிங்குருத்துநானுடன்றுமைக்
கொன்றுகாலனூரிலுங்களாவியுங்கொடுக்கவே.

(இ - ள்.) என்று - இவ்வாறு, காலகேயர்—, நின்று - எதிரில்நின்று, இசைத்த - சொன்ன, சொல் - வார்த்தையை, செவி கொளா - காதிலே கொண்டு [கேட்டு],—(அருச்சுனன்),—காலகேயர் சொன்ன வாய்மை நன்று நன்று எனா - காலகேயர்கள் சொன்ன வார்த்தை மிகவும் நன்றாயிருந்த தென்று எண்ணி, நகைத்து - சிரித்து, (அவர்களைநோக்கி), 'நான்—, இங்கு - இப்போர்க்களத்தில், உருத்து - கோபித்து, உடன்று - பகைத்து, உமை கொன்று - உங்களைக் கொலைசெய்து, உங்கள் ஆவிஉம் - உங்களுடைய உயிரையும், காலன் ஊரில்-யமபுரத்திலே, கொடுக்க-செலுத்துதற்கு, ஒன்று காலம் - பொருந்திய காலம், வந்தது-வந்துவிட்டது,' (எ - று.)— 'என்று மறுமொழி கூறினான்' என வருவித்து முடிக்க. (கஉ௩)

124.—அருச்சுனன் கூறியது கேட்டுக் காலகேயர் படைவிடுத்தல்.

காலகேயர்விசயனின்றுகட்டுரைத்தவுறுதிகேட்
டாலகாலமெனவுருத்தழன்றுபொங்கியபின்முனைச்
சூலநேமிபாலம்வெய்யசுடுசரந்துரத்தினார்
நீலமேனிசெம்புனீரினனிறஞ்சிவக்கவே.

(இ - ள்.) காலகேயர்—, விசயன் நின்று கட்டு உரைத்த உறுதி கேட்டு - அருச்சுனன் அஞ்சாமல்நின்று திடமாகச்சொல்லிய உறுதிவார்த்தையைச் செவியுற்று, ஆலகாலம் என - (பாற்கடலில் தோன்றிய) விஷம் போல,உருத்து-கோபித்து, அழன்று-கொதித்து, பொங்கி-மேலெழுந்து,— நீலம் மேனி - அருச்சுனனது நீலநிறமுள்ள உடம்பு, செம் புண் நீரினால் - விரணங்களினின்றும் பெருகுகின்ற சிவந்த இரத்தத்தால், நிறம் சிவக்க - செம்மை நிற மடையும்படி, அயில் - வேல்களையும், முனை - கூர் நுனியையுடைய, சூலம் - சூலங்களையும், நேமி-சக்கரங்களையும், பாலம் - மழுக்களையும், வெய்ய சுடு சரம் - கொடிய (பகைவரை) வருத்துகிற அம்புகளையும், தூர்த்தினர் - (அவன்மீது) பிரயோகித்தார்கள் ; (எ - று.)

ஆலகாலம்=ஹாலாஹலம் : வடமொழி. பாலம் - பிண்டிபால மென்னும் எறியாயுதவிசேஷமுமாம். (கஉச)

125.—அவுணருடைய ஆயுதவேகத்தின் வருணனை.

விண்சுழன்றுதிசைசுழன்றுவேலையுஞ்சுழன்றுசூழ்
மண்சுழன்றுவரைசுழன்றுவானினின்றவானுளோர்
கண்சுழன்றுயாதினுங்கலங்குறாதகலைவலோ
ரெண்சுழன்றுமற்றுமுள்ளயாவையுஞ்சுழன்றவே.

(இ - ள்.) (அவர்கள் ஆயுதங்களைப்பிரயோகித்த வேகத்தால்), விண் சுழன்று - ஆகாயங் கலங்கி, திசை சுழன்று - திக்குக்கள் நிலைதடுமாறி, வேலைஉம் சுழன்று - கடலுஞ் சுழற்சிபெற்று, சூழ் மண் சுழன்று - (அக் கடல்) சூழ்ந்த பூமி சுற்றி, வரை சுழன்று - மலை நிலைபெயர்ந்து, வானில் நின்ற வான் உளோர் கண் சுழன்று - ஆகாயத்திற் பொருந்திய சுவர்க்க லோகத்திலுள்ள தேவர்களது இமையாக்கண்கள் திகைப்படைந்து, யாதின் உம் கலங்குறாத கலை வலோர் எண் சுழன்று - எந்தக்காரணத்தினாலும் நிலை மாறுதலில்லாத நூல்வல்ல யோகியர்களது மனமுஞ் சலித்து, மற்று உம் உள்ள யாவைஉம் - இன்னும் உள்ள எல்லாப்பொருள்களும், சுழன்ற - சுழற்சிபெற்றன ; (எ - று.)—சொற்பின்வருநிலையணி. (கஉரு)

126.—அருச்சுனன் அவர்கள் படைக்கலங்களுக்குவிலகி, அம்புபொழிதல்.

அவர்விடுத்தபடைகள்யாவுமழியவானிடைக்கணைக்
கவர்தொடுத்துவிலகிமீளவவர்கள்காயமெங்கணுந்
துவர்நிறத்தகுருதிசோர்தரச்சரந்துரத்தினன்
றவரினுக்கிராகவன்கொலெனவருந்தனஞ்சயன்.

(இ - ள்.) தவரினுக்கு - வில்வித்தையில், இராகவன் கொல் என - ஸ்ரீராமபிரானோ என்று சொல்லும்படி, வரும் - அவதரித்த, தனஞ்சயன் - அருச்சுனன்,—அவர் விடுத்த-அவ்வசுரர்கள் (தன்மேல்) எறிந்த, படைகள் யாஉம் - ஆயுதங்களனைத்தும், அழிய - அழியும்படி, வானிடை - ஆகாயத்திலே, கணை-அம்புகளை, கவர் தொடுத்து-ஒன்று பலவாம்படி பிரயோகித்து, விலகி - (அவர்களாயுதங்களுக்குத் தான் இலக்காகாமல்) நீங்கி, மீள -

பின்பு, அவர்கள் காயம் எங்கணும் - அவர்களுடம்பு முழுவதிலும், துவர் நிறத்த குருதி - சிவந்த நிறத்தையுடைய இரத்தம், சோர்தர - வழியும்படி, சரம் தூர்த்தினன் - அம்புகளை எய்தான்; (எ - று.)

கவர்தொடுத்தலாவது - ஒன்றிலிருந்து பலதோன்ற விடுதல். துவர் நிறத்த-பவழம்போன்ற நிறத்தையுடைய என்றுமாம். கணைக்கவர்-இரட்டையம்பு என்று உரைப்பாருமுளர். தவர் - வில்லுக்குப் பகாப்பதமாகிய இடுகுறிப்பெயர். இராகவன் - ராகவன்: ரகுமகாராசனது குலத்தில் அவதரித்தவனென்று பொருள்; தத்திதாந்தநாமம்: இவ்வரசன் - தசரதசக்கரவர்த்திக்கு மூதாதை; இவன், எல்லாத்தேசங்களையும் வென்று விச்வசித்து என்னும் வேள்வியைச் செய்து பொருளனைத்தையும் வழங்கிவிட்டு வெறுங்கையனாயிருக்கையில், கௌத்ஸன் என்னும் பிராமணன் தன் குருவாகிய வரதந்துமகாமுனிவருக்குக் குருதக்ஷிணை கொடுத்தற்பொருட்டு வந்து யாசிக்க, குபேரனிடத்திலிருந்து வேண்டிய பொருளை அழைப்பித்து அந்தக் கௌத்ஸமுனிவருக்குக் கொடுத்தான்: இவ்வாறு மிகுந்த வீரமுங் கொடையு முடையவனாதலால், இராமபிரானை இவன்வமிசத்துப்பெயராற் கூறினர். கொல் - இடைச்சொல்; இங்கே, ஐயவினாப்பொருளது. (கஉசு)

127.—அருச்சுனனம்புபடவே, அவுணர் ஆகாயத்திலெழுந்து பூமி நீர் இவற்றில் தம் பட்டணத்தோடு மறைந்து மாயைபுரிதல்.

பார்த்தனெய்தவாளிமெய்படப்படப்பதைத்துமீ
தார்த்தெழுந்துநகரினோடுமந்தரத்தினெல்லைபோய்
வார்த்தரங்கவேலையூடுமண்ணினூடுமறையவத்
தூர்த்தர்செய்தவஞ்சமாயைசொல்லலாகுமளவதோ.

(இ - ள்.) பார்த்தன் எய்த வாளி - அருச்சுனன் எய்த அம்புகள், மெய் பட பட-(தம்) உடம்பில் மிகுதியாகப் படுவதனால், அ தூர்த்தர் - வஞ்சகர்களாகிய அவ்வசுரர்கள், பதைத்து - வருந்தி, ஆர்த்து - ஆரவாரித்து, மீது எழுந்து - மேலே கிளம்பி, நகரினோடும் - (தங்கள்) பட்டணத்துடனே, அந்தரத்தின் எல்லை போய் - ஆகாயத்தினிடத்தே சென்று, வார் தரங்கம் வேலையூடும்-நீரலைகளையுடைய கடலினிடத்தும், மண்ணினூடும் - பூமியினும், மறைய - மறைவாக (நின்று), செய்த —, வஞ்சம் மாயை - வஞ்சனையுள்ள மாயையானது, சொல்லல் ஆகும் அளவதோ - சொல்லுதற்குக்கூடிய தன்மையுடையதோ? [அன்றென்றபடி]; (எ - று.)

பார்த்தன் - தத்திதாந்தநாமம்; பிரதையின்மகன் என்று பொருள்: பிரதை - குந்தி; இது - அருச்சுனனுக்குக் காரணவிடுகுறிப்பெயராக வழங்கிற்று. (கஉஎ)

128.—அவுணரின் இந்திரஜாலம்.

அண்ணறேரின்முன்னதாகுமளவிறந்ததேரொடும்
விண்ணின்மீதுதிசையளக்கும்வெற்பின்மீதுபொலியுமெக்
கண்ணுமாகுமக்கணத்தின்மீளவுங்கரந்திடு
மெண்ணலாவதன்றதன்றியற்றுமிந்த்ரசாலமே.

(இ - ள்.) (அவ்வசுரர்களோடு கூடிய இரணியபுரமானது),—அண்ணல் தேரின் முன்னது ஆகும்-(ஒருகால்) அருச்சுனனது தேருக்கு எதிரில் உள்ளதாய்க் காணப்படும்; (உடனே), அளவு இறந்த தேரொடுஉம் - கணக்கில்லாத தேர்களுடனே, விண்ணின் மீது - ஆகாயத்திலே, திசை அளக்கும் - (முழுவதும்பரவி) எல்லாத்திக்குக்களையும் அளவிடும்; வெற்பின்மீது பொலியும் - (மற்றொருகால்) ஒருமலையின்மேலே விளங்கும்; எ கண்உம் ஆகும் - (வேறொருகால்) எவ்விடத்துங் காணப்படும்; அ க்ஷணத்தில் - அந்த க்ஷணத்தில்தானே, மீளஉம் கரந்திடும் - திரும்பவும் மறைந்துவிடும்; அது அன்று இயற்றும்-அன்றைத்தினத்தில் அவ்விரணியபுரம் செய்த, இந்த்ர சாலம் - மகாமாயையானது, எண்ணல் ஆவது அன்று - நினைப்பதற்குங்கூடிய தன்மையுடையதன்று; (எ - று.)

எண்ணலாவதன்று என்றதனால், சொல்லலாவதுஞ்செய்யலாவது மன்றென்பது தானே பெறப்படும். இந்திரசாலமாவது - உள்ளதை இல்லாததாகவும் இல்லாததை உள்ளதாகவும் ஒன்றை மற்றொன்றாகவும் அற்புதங்காட்டுவதொரு மாயவித்தை: அறுபத்துநான்கு கலைகளுள் ஒன்று. ஆன்மாவைமயங்கச் செய்வதென்பது, இக்தொடர்க்குப் பொருள். அது - அப்புரத்திலுள்ளார்க்கு, இடவாகுபெயர். (கஉஅ)

129.—தன்னொற்றை வில்லைக்கொண்டு அருச்சுனன் எங்குஞ் சரமாரி பொழிதல்.

அந்தவஞ்சர்புரியுமாயைவகையறிந்தருச்சுனன்
சிந்தைகன்றிவிழிசிவந்துதெய்வவாகைவில்லையு
மைந்துடன்குனித்துவாளிவாயுவேகமுடன்விடுத்
தெந்தவெந்தவுலகுமப்புமாரியாவியற்றினன்.

(இ - ள்.) அந்த வஞ்சர் புரியும் - வஞ்சனையையுடைய அவ்வசுரர்கள் செய்கின்ற, மாயை வகை - மாயையின் விதத்தை, அறிந்து—, அருச்சுனன்—, சிந்தை கன்றி - மனங் கொதித்து, விழி சிவந்து-கண்கள் செம்மைநிறமடைந்து, தெய்வம் வாகை வில்லைஉம் - தெய்வத்தன்மையையும் வெற்றிமாலையையுமுடைய காண்டீவத்தையும், மைந்துடன் குனித்து-பலத்தோடு வளைத்து, வாளி - அம்புகளை, வாயு வேகமுடன்-காற்றை யொத்த வேகத்துடனே, விடுத்து-தொடுத்து, எந்த எந்த உலகுஉம் - (அங்ககாஞ் செல்லுகின்ற) எல்லா இடங்களையும், அப்பு மாரி ஆ இயற்றினன் - பாணவர்ஷமயமாகச் செய்தான்; (எ - று.)

அப்பு மாரி - அம்புகளின் மழை; வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று. மாரியால் என்றும் பாடம். (கஉகூ)

130.—அருச்சுனன்திறனை அவுணர்மதித்துக் கூறல்.

தனிதமேகமன்னதேருமொன்றுதாவில்குன்றுபோற்
குனிதருங்கடுப்பின்மிக்ககொடியவில்லுமொன்றுமேற்

கனிவுறுஞ்சரக்குழாம்விசும்பினெல்லைகாட்டுமோர்
மனிதன்வின்மைநன்றுநன்றெனுமதித்துவஞ்சரே.

இதுவும், மேற்கவியும்:- குளகம்.

(இ - ள்.) வஞ்சர் - அசுரர்கள்,—'தனிதம் மேகம் அன்ன-இடியையுடைய மேகத்தையொத்த, தேர் உம் ஒன்று-(எதிரியினது)தேர் ஒன்றுதான்: தா இல் குன்று போல் - அழிதலில்லாத மேருமலைபோல, குனிதரும் - வளைந்த, கடுப்பில் மிக்க - (அம்பெய்யும்) வேகத்தில் மிகுந்த, கொடிய வில் உம் ஒன்று - பயங்கரமான வில் ஒன்றுதான் : (இங்ஙனமாகவும்), மேல் கனிவு உறும் - மிக முதிர்தலைப் பெற்ற, சரம் குழாம் - அம்புகளின் கூட்டங்களை, விசும்பின் எல்லை-ஆகாயத்தினிடம் முழுவதும், காட்டும்-பரவுமாறு செய்கிற, ஓர் மனிதன் வின்மை-ஒருமனிதனது விற்றொழிலின் திறம், நன்று, நன்று-நன்றாயிருந்தது நன்றாயிருந்தது,' என-என்று, மதித்து - சிறப்பாக எண்ணி,—(எ-று.)—'சொரியாப்பிளிறினர்' என முடியும்.

தனிதம்=ஸ்தநிதம்: வடமொழி. தனிதமேகமன்னதேர் என்றது-ஆகாயத்தில் விரைந்துசெல்லுதலும் பேராரவாரமும் பற்றி. திரிபுர சங்கார காலத்தில் மகாமேருகிரி சிவபிரானுக்கு வில்லாகியிருந்ததனால், 'தாவில் குன்றுபோற்குனிதரும்வில்' என்றார். தா - உரிச்சொல். 'கண்டுபோர்' 'கட்டுபோர்' என்றும் பாடம். (கங0)

வேறு

131.—அவுணர் அம்புமழைபொழிந்து கர்ச்சித்தல்.

புருவவில் வளைவுற விழிகனல் பொதுளக்
கருமுகி லனையவர் கடுகினர் முடுகிச்
சரமழை யிடிமழை தழன்மழை சொரியாப்
பெருமழை யெனநனி பிளிறின ரெவரும்.

(இ-ள்.) கரு முகில் அனையவர்-கறுத்த மேகத்தை யொத்தவர்களாகிய, எவர்உம்-எல்லா வசுரர்களும்,—புருவம் வில் வளைவு உற - (தங்கள்தங்கள்) புருவமாகிய வில் (கோபத்தால் மேல்நெறித்து)வளைதலை யடையவும், விழி கனல் பொதுள-கண்களில் நெருப்பு நிறையவும், முடுகி கடுகினர் - மிகவும் வேகமாகவந்து, சரம் மழை - அம்புமழையையும், இடி மழை - இடிமழையையும், தழல் மழை - நெருப்புமழையையும், சொரியா-பொழிந்து,—பெரு மழை என - பெரிய மேகம்போல, நனி பிளிறினர் - மிகுதியாகக் கர்ச்சித்தார்கள் : (எ - று.)—புருவம் - ப்ரூ என்னும் வடமொழித் திரிபு.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்றும் புளிமாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடிநான்கு கொண்ட கலிவிருத்தங்கள் ; இவற்றில் ஈற்றெழுத்து ஒன்றுஒழிய மற்றையெழுத்துக்கள் பெரும்பாலும் குற்றெழுத்துக்களாகவே வந்தது, துறுஞ்சீர் வண்ணம். இடையிடையேவந்த ஐகாரக்குறுக்கங்களும் மாத்திரையொப்புமையால் குற்றெழுத்தோடு ஒப்பவே கொள்ளப்படும். (கங௧)

132.—அருச்சுனன் அம்புசெலுத்திப் பொருதல்.

இவருயிர்கவர்தரவிடமிதுவெனவே
நவையறுதிறலுடைநகுசரமுகையா
வவரவரகலமுமணிகிளர்கரமுந்
.தவருடன்விழவிழவொருதனிபொருதான்.

(இ - ள்.) (அப்பொழுது அருச்சுனன்), 'இவர் உயிர் கவர்தர - இவ்வசுரர்களின்உயிரைவாங்குதற்கு, இடம்-தக்கசமயம், இது-இதுவாம்,' என- என்று எண்ணி,—நவை அறு திறல் உடை-குற்றமற்ற வலிமையையுடைய, நகு சரம் - விளங்குகின்ற அம்புகளை, உகையா - செலுத்தி,—அவர் அவர் - அவ்வவ்வசுரர்களின்,அகலம்உம்-மார்பும், தவருடன் -பிடித்தவிற்களுடனே, அணி கிளர் கரம்உம் - அழகுவிளங்குகின்ற கைகளும், விழ விழ - மிகுதியாக விழும்படி, ஒரு தனி பொருதான் - ஒப்பில்லாதபடி தனியனாய் நின்று போர்செய்தான் ; (எ - று.)

கவர்தல் - கொள்ளைகொள்ளுதல். காலமும் இடமாதல்பற்றி, இங்கே 'இடம்' எனப்பட்டது. இனி, முதலிரண்டடிக்கு - இவருயிரையொழித்தற்கு இடம் இது வென்னும்படி(மார்பில்)அம்புசெலுத்தி யென்றுமாம். அம்பின் வலிக்குக் குற்றமாவது-குறித்த இலக்கிற்சென்று படாமையும், பட்டும் அதனை அழியாமையுமாம். நகுசரம் - வினைத்தொகை; இதில், பகைவரது கிளர்ச்சியைநோக்கிப் பரிகசித்துச் சிரிக்கின்ற அம்பு என்னும் பொருளுந் தொனிக்கும். ஒருதனி - தன்னந்தனி என்றாற்போல மிகுதனியுமாம். உதையாஎன்றும்பாடம். (கங௨)

133.—அருச்சுனனதுகணையைவிலக்கிஅவுணர்எதிராகப் படைதொடுத்தல்.

அவன்விடுமடுகணையடையவுநொடியிற்
பவனனதெதிர்சருகெனநனிபறியக்
கவனமொடெழுபரிரதகதிகுலையத்
துவனியொடெறிபடையெதிரெதிர்தொடவே.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) அவன் விடும் - அருச்சுனன் எய்கின்ற, அடு கணை அடைய உம் - கொல்லுகின்ற அம்புகளெல்லாமும், நொடியில் - நொடிப்பொழுதினுள்ளே, பவனனது எதிர் சருகு என - காற்றுக்கு எதிரிலே அகப்பட்ட சருகுகள்போல, நனி பறிய-மிகவும் மீண்டுசெல்லும்படியும்,—கவனமொடு எழு பரி - விரைந்தநடையோடு செல்லுகிற குதிரைகளைப் பூட்டிய, ரதம் - (அருச்சுனனது) தேரினுடைய, கதி-செல்லுகை, குலைய-கெடும்படியும்,— துவனியொடு - ஆரவாரத்துடனே, எறி படை - பிரயோகித்தற்குரிய ஆயுதங்களை, எதிர் எதிர் - எதிரே எதிரே, தொட - (அசுரர்கள்) தொடுக்க, —(எ - று.)—' மகபதிமகனும்அவுணரும்பொருதனர் 'என வருங் கவியோடு இயையும்.

நொடி-இயற்கையில் ஒருவன் ஒருமுறை கையைநொடித்தற்கு வேண்டும்பொழுது. பவனன் - அசுரர் எய்யும் அம்புக்கும், சருகு - அருச்சுனன் எய்யும் அம்புக்கும் உவமை. சருகு - உலர்ந்த இலை. பரிய என்றும் பாடம்.

134.—அருச்சுனனுடன் அவுணர் கடும்போர் விளைத்தல்.

வரிசிலைவிறலுடைமகபதிமகனு
மெரிவிழியவுணருமுறைமுறையிகலிப்
பொருதனர்ரகுபதிபுதல்வனுமடுபோர்
நிருதருமெதிர்பொருமமர்நிகரெனவே.

(இ - ள்.) வரி சிலை விறல் உடை - கட்டமைந்தவில்லின்வலிமையை யுடைய, மகபதி மகன்உம்-இந்திரகுமாரனான அருச்சுனனும், எரி விழி அவுணர்உம் - நெருப்பைச்சிந்துகின்ற கண்களையுடைய அசுரர்களும், முறை முறை - கிரமந்தப்பாமல், இகலி - பராக்கிரமித்து, ரகுபதி புதல்வன்உம் - ரகுகுலத்துக்குத் தலைவனான தசரதசக்கரவர்த்தியினது திருமகனான ஸ்ரீ ராமபிரானும், அடு போர் நிருதர்உம் - கொல்லுகின்ற போர்த்தொழிலில் வல்ல இராக்கதர்களும், எதிர் பொரும் - எதிர்த்துச்செய்த, அமர் - போர், நிகர் என - ஒப்பு என்னும்படி, பொருதனர்-போர்செய்தார்கள் ; (எ - று.)

முறைமுறை என்பதற்கு-இவர்விட்ட ஆயுதங்களை அவன் தான்விடும் அம்புகளால் விலக்கி இவர்கள்மேலும் அம்பெய்தலும், அவன் எய்த அம்புகளை இவர்கள் விலக்கி அவன்மீதும் படையெறிதலும் ஆக இங்ஙனம் மாறி மாறி என்றும் பொருள்கொள்ளலாம். 'ரகுகுலபுதல்வனும்' என்றும் பாடம்.

135.—இதுமுதல் ஆறு கவிகள் - அருச்சுனன் பாசுபதத்தைத் தியானித்து அவுணர்மீதுஎறிய அவர்கள் சிரங்கள் சிதறியமை கூறும்.

இப்படைகளினுயிரழிகிலரிவரென்
றப்படைகளையொழிதரவடலுடையார்
மெய்ப்புகும்விறலதுவிடையவனருளுங்
கைப்பகழியைமனனுறநனிகருதா.

இதுமுதல் நான்குகவிகள் - குளகம்.

(இ - ள்.) 'இவர் - இவ்வசுரர்கள், இ படைகளின் - (சாதாரணமான) இந்த அம்புகளினால், உயிர் அழிகிலர் - இறக்கமாட்டார்கள்,' என்று-என்று (அருச்சுனன்) எண்ணி, அ படைகளை ஒழிதர - அந்த அம்புகளை எய்தல் நீங்க, அடல் உடையார் மெய் புகும் விறலது - வலிமையையுடைய அப் பகைவர்களது உடம்பில் உருவச்சென்று தொழில்செய்யும்வலிமையையுடையதாகிய, விடையவன் அருளும் - (முன்னே தனக்குச்) சிவபிரான் அளித்த, கை பகழியை - கையில் வரச் சித்தமாகவுள்ள அஸ்திரத்தை, மனன் உற - மனம்பொருந்த, நனி கருதா - மிகுதியாகத் தியானித்து,—(எ - று.)— மகிழாஎன மேலே இயையும்.

அடல் உடையார் என்பதற்கு - தங்கள் வலிமை யொழியாதவர் என்று முரைக்கலாம். விடையவன் - ருஷபத்தை வாகனமும் கொடியுமாகவுடை

யவன்: அவனருளும் பகழி - பாசுபதம். கைப்பகழி-முன்னே பகைவர்மீது தொடுத்துக் கைபழகிய அம்பு என்றுமாம். வைப்பகழி யென்னும் பாடத்துக்கு, கூர்மையுடைய அம்பென்க. ஒழிதரக் கருதாளென்க. (கஙுகு)

136. முச்சிரமுடையதுமூவிருதிரடோ
ளச்சிரமுடனெதிரழல்பொழிதறுக
ணச்சரவனையதுநகமிறுமுனைவாய்
வச்சிரமனையதுவருதலுமகிழா.

(இ - ள்.) (தியானித்தமாத்திரத்தில்), மூ சிரம் உடையது - மூன்று தலைகளையுடையதும், மூ இரு திரள் தோள் - திரண்டுள்ள ஆறு தோள்களையுடைய, அச்சிரமுடன் - உடம்புடனே, எதிர் - காணப்படுகிற, அழல் பொழி தறுகண் நஞ்சு அரவு அனையது - நெருப்பைச் சொரிகின்ற அஞ்சாமை தோன்றுகிற கொடுங்கண்களையும் விஷத்தையுமுடைய பாம்பை யொத்ததும், நகம் இறும் - மலைகள் அறுபடுதற்குக் காரணமான, முனை வாய் - கூர்மையையுடைய நுனியையுடைய, வச்சிரம் - வச்சிராயுதத்தை, அனையது-ஒத்ததுமாகிய அப்பாசுபதாஸ்திரம், வருதலும்-முன்னே வந்தவளவில், மகிழா - (அருச்சுனன்) மகிழ்ச்சியடைந்து,—(எ - று.)—பரவி விட என்க.

நெடுங்காலம் நிலைத்துவாழாமல் விரைவில் அழிதல்பற்றி உடம்பிற்கு அசிரம் என்று பெயர்: ந+சிரம்=அசிரம்: வடமொழிச்சந்தி; ந - எதிர்மறையுணர்த்திற்று: சிரம் - வெகுகாலம். இங்கே, அசிரமென்பது - எதுகைப்பொருத்தம் நோக்கி 'அச்சிரம்' என விரித்தல் விகாரம் பெற்றது. நச்சரவு - தவறாமற் கொல்லுதற்கும், வச்சிரம் - கூர்மைவலிமைகளுக்கும் உவமை. வச்சிரம் - இந்திராயுதம். முற்காலத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போலச் சிறகுகளுடையனவாகி அவற்றாற் பறந்துதிரிந்து பலவூர்களின்மீதும் உட்கார்ந்து ஆங்காங்குள்ள உயிர்களை அழித்துவர, அதனை அறிந்த தேவேந்திரன் சினந்து சென்று, தனது வச்சிராயுதத்தால் அவற்றின் இறகுகளை அறுத்துத் தள்ளிவிட்டா னென்பது கதையாதலால், வச்சிரத்துக்கு 'நகமிறுமுனைவாய்' என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. நகம்-நடவாதது என மலைக்குக்காரணக்குறி. 'அச்சுரமுடன்'என்றும்பாடம்.

137. பசுபதியருளியபகழிமுன்வரலும்
விசயனுநறைவிரிமலர்கொடுபரவித்
திசைதொறுமமர்புரிதிறலுடைவடிவே
லசுரர்தமுடலுகவடலுடன்விடவே.

(இ - ள்.) பசுபதி அருளிய பகழி - சிவபிரான் கொடுத்தருளிய அந்த அஸ்திரம், முன் வரலும்-எதிரில் வந்த அளவில்,—(அதனை), விசயன்உம் - அருச்சுனனும், நறை விரி மலர்கொடு - தேனொழுகுகின்ற பூக்களினால், பரவி-அருச்சித்து, திசைதொறுஉம் - (தன்னைச் சுற்றிலும்) எல்லாத் திக்குக்களிலுமிருந்து, அமர் புரி - போர்செய்கின்ற, திறல் உடை - வலிமையையுடைய, வடி வேல் - கூர்மையையுடையவேலாயுதத்தையுடைய, அசுரர்

தம் - அசுரர்களது, உடல் உக - உடம்பு அழியும்படி, அடலுடன் - வலிமையுடனே, விட - பிரயோகிக்க,—(எ - று.)—போய்ப்புக்கதென்க.

பசுபதி - ருஷபத்துக்குத்தலைவன்; அல்லது, உயிர்களுக்குத் தலைவன்: பசு என்னும் வடமொழி இப்பொருள்களை யுணர்த்துதலை "பசு ஏறு சீவன் ஆவாம்" என்னும் நிகண்டினால் அறிக. 'பசுபதியருளியபகழிமுன் வரலும்' என்றது அநுவாதம்; தொடர்ச்சியை விளக்க வந்தது. நறைவிரிதல் - வாசனைவீசுதலுமாம். (கநஎ)

138. அக்கணைவிசையுடனகல்வெளிமிசைபோய்
நக்கதுபிறையெயிறிளநிலவெழவே
முக்கணுமழலுகமுரணொடுமுடுகிப்
புக்கதுதனுசர்தமுடல்பொடிபடவே.

(இ - ள்.) அ கணை - அந்த அஸ்திரம், விசையுடன் - வேகத்துடனே, அகல் வெளிமிசை - பரந்த ஆகாயத்திலே, போய் - சென்று, பிறை எயிறு இள நிலவு எழ - இளஞ்சந்திரன்போன்ற பற்களினின்றும் இளமையான நிலாப்போன்ற வெள்ளொளி தோன்றும்படி, நக்கது-சிரித்து, மு கண்உம் அழல் உக - (தனது) மூன்றுகண்களினின்றும் நெருப்புச் சிந்தும்படி, முரணொடு-வலிமையுடனே, தனுசர்தம் உடல் பொடிபட-அசுரர்களது உடம்பு தூளாம்படி, முடுகி புக்கது - உக்கிரமாய்ப் பிரவேசித்தது; (எ - று.)

எயிற்றுக்குப் பிறையுவமை, வளைவுக்கும் ஒளிக்கும் வெண்மைக்குமென்க. சிரிக்குங்காலத்துப் பற்களின் வெள்ளொளி சிறிது வெளித்தோன்றுதலால், 'நக்கது பிறையெயிறிளநிலவெழவே' என்றார். முக்கணும் என்பதற்கு-மூன்றுமுகம்படைத்த அந்தஅஸ்திரத்துக்கு ஒவ்வொருமுகத்திலும் மூன்றுகண்களிருந்தனவென்க. முக்கணும், உம்-முற்றுப்பொருளது. (கநஅ)

139. மாருதம்விசையுடன்வடவனல்கொளுவிக்
கார்தொறுநிரைநிரைகடிகுவததுபோற்
றேர்தொறுமமர்புரியவுணர்கடேகத்
தோரொருகணையொருநொடியினிலுறவே.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) மாருதம் - காற்றானது, விசையுடன் - வேகத்துடனே, வட அனல் கொளுவி - வடவாமுகாக்கினியைத் துணையாகக்கொண்டு, கார் தொறுஉம் - மேகங்களிலெல்லாம், நிரை நிரை-வரிசை வரிசையாக, கடிகுவது அதுபோல்-அழிவையுண்டாக்குகிற அத்தன்மைபோல, தேர்தொறுஉம் அமர் புரி அவுணர்கள் தேகத்து - தேர்களிலெல்லாமிருந்து போர்செய்கின்ற அசுரர்களது உடம்புதோறும், ஓர் ஒரு கணை - ஒவ்வொரு அம்பு, ஒரு நொடியினில் - ஒரு நொடிப்பொழுதிலே, உற - (அவ்வஸ்திரத்தினது திவ்விய சக்தியால்) பொருந்த,—(எ - று.)—சிதறி, பொதுள, கலுலின என்க.

படபாநலம் என்னும் வடமொழி, தமிழில் 'வடவனல்' எனச் சிதைந்து வழங்கிற்று; அது, கடலினிடையே பெண்குதிரையொன்றின் முகத்திலுள்ளதும், மழை முதலியவற்றால்வருகிற நீரினாற் கடல் பொங்காதபடி அந்

நீரை உறிஞ்சுவதும், யுகாந்தகாலத்தில் அங்கு நின்று எழுந்து உலகங்களை யொழிப்பது மாகிய தீ: படபா - பெண்குதிரை, அநலம் - நெருப்பு. வட வனல்என்பதற்கு - வடக்கிலுள்ள அக்கினி யென்று உரைப்பாருமுளர். மிக விரைவிலழித்தற்கு, காற்று நெருப்போடு சேர்தலை உவமை கூறினர். கொளுவுதல் - கூட்டிக்கொள்ளுதல். கடிகுவது, கு - சாரியை. (கங்கூ)

140. மகபதியரிசிறைவரைநிகரெனவே
திசைதொறுமவுணர்கள்சிரநனிசிதறிப்
புகையொடுதெறுகனலகல்வெளிபொதுளக்
ககபடலமுமுறைகளுலினகளமே.

(இ - ள்.) (அவ்வம்புகளினால்), மகபதி அரி சிறை வரை நிகர் என - இந்திரனால் அறுக்கப்பட்ட இறகுகளையுடைய மலைகள் ஒப்பென்னும்படி, திசைதொறுஉம்-எல்லாத்திக்குக்களிலும், அவுணர்கள் சிரம் - அசுரர்களது தலைகள், நனி சிதறி - மிகவுஞ் சிந்தி, தெறு கனல் - (அகப்பட்டவற்றை) அழிக்கின்ற நெருப்பு, புகையொடு - புகையுடனே, அகல் வெளி - பரந்த ஆகாயவெளியிலே, பொதுள-நிறையாநிற்க,—கக படலம்உம் - (கழுகுமுத லிய புலாலுண்ணும்) பறவைகளின் கூட்டமும், களம் - போர்க்களத்தில், முறை - ஒன்றன்பின் ஒன்றாக, களுலின - நெருங்கின ; (எ - று.)

ககம் என்பதற்கு - ஆகாயத்திற் செல்லுவதென்று பொருள் ; கம் - ஆகாசம். ககபடலம் - பலவின்பாற்றத்தற்கிழமைப்பொருளில் வந்த ஆறாம் வேற்றுமைத்தொகை ; வடமொழித்தொடர். (கசO)

141.—படுகளச் சிறப்பு.

ஆடினவறுகுறையலகைகளுடனின்
றோடினதிசைதொறுமுகுகுருதியினீர்
நீடினபிணமலைநிரைநிரைநெறிபோய்த்
தேடினகதிர்களுமிசைவழிசெலவே.

(இ - ள்.) அறு குறை - தலையற்ற உடற்குறைகள், அலகைகளுடன் - பேய்களுடனே, நின்று - ஒக்கநின்று, ஆடின - ஆனந்தக்கூத்தாடின ; உகு குருதியின் நீர் - (இறந்த உடம்புகளினின்று) பெருகுகின்ற இரத்த வெள் ளங்கள், திசை தொறுஉம் - எல்லாத்திக்குக்களிலும், ஓடின - பெருகின ; பிணம் மலை - மலைபோன்ற பிணக்குவியல்கள், நிரை நிரை - வரிசை வரி சையாக, நீடின-உயர்ந்தன; (அவ்வுயர்ச்சியினால்), கதிர்கள்உம்-(சூரியசந்தி ரர்முதலிய) சோதிகளும், மிசை வழி செல-ஆகாயமார்க்கத்திற்குச் செல்லு தற்கு, நெறி - வழியை, போய் - மேலே சென்று, தேடின—; (எ - று.)

அறுகுறை - கபந்தம். கோபத்தோடு விரைந்து போர்செய்துநின்ற வீரர்களது உடம்புகள் தலையறுபட்டபின்பும் பதைபதைத்துக் கைகால்கள் துடிப்பனவற்றை 'ஆடினவறுகுறை' என்றார். பிணங்களைத் தின்னும் பொருட்டு வந்த பேய்க்கூட்டங்கள் தமக்கு மிகுந்த இரை இங்குக்கிடைத்த-

தென்று களித்து நர்த்தனஞ்செய்தலால், 'அலகைகளுடனின்று' எனப் பட்டது. பின்னிரண்டடி - உயர்வுநவிற்சி. (கசக)

142.—அருச்சுனனது சிலைவலிகண்டு மாதலி அவனை வணங்குதல்.

மாதவமிகுதிறலசுரரைமறலிக்
கோதனமிடுமவனொருசிலைவலிகண்
டாதபனருணனிலணிகிளருயர்தேர்ச்
சூதனும்விசயனதிணையடிதொழுதான்.

(இ - ள்.) மா தவம் - பெரிய தவத்துடனே, மிகு திறல் - மிக்க வலிமையையுமுடைய, அசுரரை - அசுரர்களை, மறலிக்கு - யமனுக்கு, ஓதனம் இடும் அவன் - விருந்துணவாகக் கொடுத்துவருகின்ற அருச்சுனனது, ஒரு சிலை வலி-ஒப்பற்ற வில்லினது வலிமையை, கண்டு-பார்த்து,—ஆதபன் அருணனில் - சூரியனது சாரதியாகிய அருணன்போல, அணி கிளர் - அழகு மிக்க, உயர் தேர் சூதன்உம் - உயர்ந்த தேரின் பாகனான மாதலியும், விசயனது இணை அடி தொழுதான் - அவ்வருச்சுனனது இரண்டுபாதங்களினும் விழுந்து வணங்கினான் ; (எ - று.)

மறலிக்கு ஓதனமிடுதல் - கொன்று யமலோகத்திற்கு அனுப்புதல். ஓதனம் - சோறு. ஆதபன் - நன்றாகத் தபிப்பவன். அருணனில், இல் - ஐந்தனுருபு, ஒப்புப்பொருளது. கண்டு தொழுதான் என இயையும். (கசஉ)

143.—அருச்சுனனால் தமதுபகை நீங்கினமைகண்டு தேவர் அகமகிழ்தல்.

தள்ளினர்தமதுயர்சலமினியிலதென்
றுள்ளினர்விசயனதுறுதியுமுரனு
மள்ளினரமுதெனவகநனிமகிழாத்
துள்ளினரிமையவர்சுரபதிமுதலோர்.

(இ - ள்.) சுர பதி முதலோர் - தேவராசனான இந்திரன்முதலியவராகிய, இமையவர் - தேவர்கள், தமது உயர் சலம் - தங்களது மிக்க பகை, இனி இலது என்று - இனிமேல் இல்லையென்னும்படி, தள்ளினர் - ஒழித்தவர்களாய், விசயனது உறுதிஉம் உரன்உம் - அருச்சுனனது பராக்கிரமத்தையும் பலத்தையும், உள்ளினர் - நினைத்து, அமுது அள்ளினர் என - அமிருதத்தைப் பானஞ் செய்தவர்போல, அகம் நனி மகிழா - மனம் மிகவும் மகிழ்ந்து, துள்ளினர் - ஆனந்தக்கூத்தாடினர் ; (எ - று.)

சுரபதிமுதலோர் இமையவர் 'இனி, சலம் [பகை] இலது' என்று உள்ளினராய், தம்-தம்முடைய, துயர் - துயரத்தை, தள்ளினர் - போக்கி, விசயனது உறுதியும் உரனும் அகத்தால் அமுதளைா அள்ளினராய் நனிமகிழாத் துள்ளின ரென்றலும் ஒன்று. (கசங)

வேறு

144.—அவ்வவுணரின் இரணியபுரம் காத்தல்.

தேனமர் கமலத் தோங்குந் திசைமுகன் வரத்தி னாலோ
மானவன் விசய னுய்த்த வடிநெடுஞ் சரத்தி னாலோ

தானவர் தானை யெல்லா மடிந்தவத் தளர்வி னாலோ
போனது கரந்து வஞ்ச ரிரணிய புரமு மன்றே.

(இ - ள்.) தேன் அமர் - தேன்பொருந்திய, கமலத்து-(திருமாலினது நாபித்) தாமரைமலரிலே, ஓங்கும்-சிறப்பாக வீற்றிருக்கின்ற, திசைமுகன் - பிரமன், (அசுரர்களுக்குக் கொடுத்திருந்த), வரத்தினால்ஓ - வரம் முடிந்து விட்டதனாலோ? (அல்லது), மானவன் விசயன் உய்த்த-மனிதனாகிய அருச்சுனன் உபயோகித்த, வடி நெடு சரத்தினால்ஓ - கூர்மையான நீண்ட அம்பின் தன்மையாலோ? தானவர் தானை எல்லாம் - (தன்னிடத்தில் பல நாளாய் வாசஞ்செய்துகொண்டிருந்த)அசுரர்களது கூட்டம் யாவும், மடிந்த - இறந்ததனாலாகிய, அ தளர்வினால்ஓ - அந்த வருத்தத்தாலோ? வஞ்சர் இரணியபுரம்உம் - வஞ்சகர்களாகிய அவ்வசுரர்களது இரணியபுரமென்னும் அந்நகரமும், கரந்துபோனது - மறைந்துபோய்விட்டது; (எ - று.)

ஆதியிற் பிரமன் கொடுத்திருந்த வரத்தின்படியே அருச்சுனனெய்த அம்பால் அசுரர்கள் அழிந்தமாத்திரத்தில் தானும் மறைந்துபோன அவ்விரணியபுரமானது, தன்னில் நெடுங்காலமாக வசித்திருந்த அசுரர்கள் வேரோடு அழிந்தார்களென்னுந் தளர்ச்சியால் தானும் உடனழிந்தது போன்றது என்றவாறு. ஒருகாரியத்துக்குப் பலகாரணங்களைக் கூறி இன்னதென்று துணியாமல் ஐயத்தோடு நிறுத்தியதனால், ஐயவேதுத்தற்குறிப்பேற்றவணி. மானவன் என்பதற்கு-மானத்தையே முக்கியகுணமாகவுடையவனென்றும் பொருள்கொள்ளலாம். மடிந்த தளர்வு-பெயரெச்சம் காரணப்பொருளது.

இதுமுதற் பதினெட்டுக்கவிகள் - இச்சருக்கத்தின் முதற்கவிபோன்ற அறுசீராசிரியவிருத்தங்கள். (கசச)

145.—அருச்சுனன் வில்லினின்று நாணியைக்கழற்றி இளைப்பாறி யிருத்தல்.

வாணகைதளவம்வாங்குமவுணர்தம்மகளிர்தெய்வப்
பூணொடுகுழைகள்வாங்கப்புனைவயவாகைவாங்கு
நாணுயர்தனுவின்வாங்கிநயந்திளைப்பாறிநின்றான்
றூணொடுபறம்புவாங்குஞ்சுடர்மணிக்கடகத்தோளான்.

(இ - ள்.) தூணொடு - தூண்களையும், பறம்பு-மலைகளையும், வாங்கும் - ஒக்கின்ற, சுடர் மணி கடகம் தோளான் - விளங்குகின்ற இரத்தினங்களைப் பதித்த கடகமென்னும் அணியை யணிந்த தோள்களையுடைய அருச்சுனன்,— வாள் நகை-(தமது) ஒளியையுடைய பற்களுக்கு, தளவம் - முல்லையரும்புகளும், வாங்கும் - தோற்கும்படியான, அவுணர்தம் மகளிர் - அசுரப்பெண்கள், தெய்வம் பூணொடு - தெய்வத்தன்மையையுடைய [சிறந்த] ஆபரணத்துடனே, குழைகள் - காதணிகளையும், வாங்க - கழற்றிவிடும்படி, புனை வயம் வாகை வாங்கும் - அணிதற்குரிய வெற்றியைக் குறிக்கின்ற வாகைப்பூமாலையைச் சூடிய, உயர் தனுவின் - உயர்ந்த வில்லினின்றும்,

நாண் - நாணியை, வாங்கி - இறக்கிவிட்டு, நயந்து - மகிழ்ந்து, இளைப்பு ஆறி நின்றான் - சற்றுச் சிரமந்தீர்ந்து நின்றான்; (எ - று.)

தளவு-அரும்புக்கு முதலாகு பெயர்; அம்-சாரியை. பல்லுக்கு முல்லையரும்புஉவமை - வெண்மைக்கும், அழகுக்கு மென்க. 'வாணகை தளவம் வாங்கும்' என்னும் அடைமொழி, அசுரமாதரது இயற்கையழகை விளக்கி நின்றது. தெய்வப்பூண் - விசுவகருமன் மயன் முதலிய தேவத்தச்சர்களால் நிருமிக்கப்பட்ட ஆபரணம் என்றவாறு. தெய்வப்பூண் வாங்க - மாங்கலியத்தை யிழக்க வென்றபடி. கணவனை யிழந்தவர் காதோலை நீக்க வேண்டுமென்பது, நூற்றுணிபு. ஈற்றடியில், வாங்கும்-உவமவுருபு; "பாம்புருவடங்க வாங்கிய நுசுப்பின்" என்றவிடத்துப்போல. பறம்பு-சிறப்புப்பெயர் பொதுப்பொருளில் வந்ததென்னலாம்: பாரியென்ற வள்ளலின் மலை, பறம்புஎனப் பெயர் பெறும். (கசரு)

146.—அருச்சுனனாற் கொல்லப்பட்ட அவுணரைப் பற்றிய கவிக்கூற்று.

பார்கொண்டதசுரர்மெய்யிற்பரந்தசெங்குருதிவெள்ளங்
கார்கொண்டவிசும்புகொண்டதவர்பிணக்காயம்வானோ
ரூர்கொண்டதுரிமையோடுமவருயிர்மீண்டுமென்றாற்
றார்கொண்டவமரர்க்கெவ்வாறிவன்பகைதடிந்ததம்மா.

(இ - ள்.) அசுரர் - (இறந்துபோன) அசுரர்களது, மெய்யின்-உடம்பில் நின்றும், பரந்த - பரவிய, செம் - சிவந்த, குருதி வெள்ளம் - இரத்த வெள்ளமானது, பார் கொண்டது - பூமிமுழுவதையும் தனதாகக் கொண்டு பரவிற்று; அவர் பிணம் காயம் - அவர்களது பிணமாகிய உடம்பு, கார் கொண்ட விசும்பு கொண்டது - மேகங்கள் பரவிய ஆகாயமுழுவதையும் (தனக்கு) இடமாகக்கொண்டு உயர்ந்துகுவிந்தது; அவர் உயிர்-அவர்களது உயிர், மீண்டும் - மறுபடியும், வானோர் ஊர் - தேவலோகத்தை, உரிமையோடும் - சுவாதந்திரியத்துடனே, கொண்டது - (இடமாகக்) கொண்டது, என்றால் - என்று சொன்னால், தார் கொண்ட அமரர்க்கு - கற்பகப்பூமாலையைச்சூடிய தேவர்களுக்கு, இவன் - அருச்சுனன், பகை தடிந்தது - பகைவர்களை ஒழித்தது, எவ்வாறு - எப்படி? அம்மா-ஆச்சரியம்! (எ-று.)

இறந்தபின்பும் அவ்வசுரர்களது இரத்தம் பூமியிலும் உடம்பு ஆகாயத்திலும், உயிர் சுவர்க்கத்திலும் வியாபித்தனவாதலின் இவன் அவர்களை ஒழித்தானென்பது எவ்வாறு? என வஞ்சப்புகழ்ச்சியணி மூலமாக அருச்சுனனது சிறப்பை எடுத்துக்கூறியவாறு. பிணக்காயம் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை; உயிர்நீங்கினதாகிய உடம்பென்க. (கசசு)

147.—அருச்சுனன் சுவர்க்கஞ்செல்லத் தேரேறுகையில், சித்திரசேனன் முந்திச்சென்று அவ்வருச்சுனன் செய்த செயலெல்லாஞ் சொல்லல்.

இவ்வகையசுரசேனையாவையுமிரிய நூறிக்
கொய்வரும்வரிவில்வீரன்குரகதத்தேர்மேற்கொண்டான்

வைவருமுனைவேற்சித்ரசேனன்வாசவனுக்கோடி
நைவருதுயரநீங்கநவின்றனன்புரிந்தவெல்லாம்.

(இ - ள்.) கொய்வரும்-(பகைவர்தலைகளை) அறுத்துவருதலையுடைய, வரி வில் - கட்டமைந்த வில்லையுடைய, வீரன் - அருச்சுனன், இ வகை - இந்தவிதமாக, அசுரசேனை யாவைஉம் - அசுரர்களது சேனைகளெல்லாவற்றையும், இரிய - கெடும்படி, நூறி - அழித்து, குரகதம் தேர் மேல் கொண்டான் - (ஊருக்கு மீளும்பொருட்டுக்) குதிரைகளைப் பூட்டிய (தனது) தேரினமேலேறினான்; (அப்பொழுது), வை வரு முனை வேல்-கூர்மைபொருந்திய நுனியுள்ள வேலாயுதத்தையுடைய, சித்ரசேனன் - சித்திரசேனனென்னுங் கந்தருவனாகிய தூதன், புரிந்த எல்லாம் - (அருச்சுனன்) செய்த செயல்களையெல்லாம், வாசவனுக்கு - இந்திரனுக்கு, நைவரு துயரம் நீங்க - மனந்தளர்கின்ற துன்பம் நீங்கும்படி, ஓடி நவின்றனன் - முன்னே விரைந்துபோய்ச் சொன்னான்; (எ - று.)

கொய்வு அரும் எனப்பிரித்து, பகைவரால் துணித்தற்கு அருமையான வில் லெனவு மாம். புரிந்த-பெயர். இங்கே 'தேர்மேற்கொண்டான்' என்றதனால், கீழ் 145ஆம் கவியில் 'இளைப்பாறிநின்றான்' என்றவிடத்து 'தேரினின்று இழிந்து' என வருவிக்க. (கசஎ)

148.—செய்தியுணர்ந்த இந்திரன் நகரை யலங்கரிப்பித்து அருச்சுனனை எதிர்கொள்ளல்.

சித்திரசேனன்மாற்றஞ்செவிக்கமுதாகக்கேட்டுப்
பத்திகொள்விமானச்சோதிப்பைம்பொன்மாநகரிகோடித்
தெத்திசையவருமேனையிமையவர்குழாமுஞ்சூழ
வித்தகவிசயன்றன்னைவிபுதர்கோனெதிர்கொண்டானே.

(இ - ள்.) விபுதர் கோன் - தேவராசனான இந்திரன்,—சித்திரசேனன் மாற்றம் - சித்திரசேனனது வார்த்தையை, செவிக்கு அமுது ஆக - காதுக்கு அமிருதத்தை யொப்ப, கேட்டு—, பத்தி கொள் விமானம் சோதி - வரிசையாயிருத்தலைக் கொண்டுள்ள விமானங்களின் ஒளியோடுகூடிய, பைம்பொன் மா நகரி - பசும்பொன்மயமான பெரிய (தனது) அமராவதி நகரத்தை, கோடித்து - (தனது பரிஜனங்களைக் கொண்டு) அலங்கரித்து, எ திசையவர்உம் - எல்லாத்திக்குப்பாலகர்களும், ஏனை இமையவர் குழாம் உம் - மற்றைத் தேவர்கூட்டமும், சூழ - (தன்னைச்) சுற்றியிருக்க, வித்தகம் விசயன் தன்னை - ஞானத்தையுடைய அருச்சுனனை, எதிர்கொண்டான் - எதிரில்வந்து அழைத்துப்போவானானான்; (எ - று.)

தேவாமிருதம் நாவுக்கு இனிமைதருவதுபோலத் தூதன்சொல் செவிக்கு இனிமைதருவ தென்பார், 'சித்திரசேனன்மாற்றஞ்செவிக்கமுதாகக் கேட்டு' என்றார். அலங்கரிக்கும்விதத்தை "பூழிக ளடக்கிச் செம்பொற் பூரண கும்பம் வைத்து, வாழையுங் கமுகு நாட்டி மணியொளித் தீபமேற்றிச், சூழ வன்பதாகை கட்டித் தோரணம் பலவு நாற்றி, யேழுயர் மாட

மூதா ரெங்கணுங் கோடித் தாரே" என மேல் நிரைமீட்சிச் சருக்கத்திற் கூறுவதனால் அறிக. எத்திசையவர் - அஷ்டதிக் பாலகர்களாகிய அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் என்னும் தன்னை யொழிந்த எழுவரும். எதிர்கொள்ளுதல், மரியாதை. (கசஅ)

149.—எதிர்கொண்ட அருச்சுனனை இந்திரன் தழுவுதல்.

கின்னரமிதுனமின்சொற்கீதங்களினிதுபாடத்
துன்னியெங்கெங்குஞ்சேரத்துந்துபிக்குழாநின்றார்ப்பப்
பன்னருமறைகடெய்வமுனிவரர்பகர்ந்துவாழ்த்த
மன்னவர்மன்னன்றன்னைவாசவன்றழுவிக்கொள்ளா.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) கின்னர மிதுனம் - கின்னரமிதுனங்கள், இன் சொல் கீதங்கள்-இனிமையான சொற்களையுடைய இசைப்பாட்டுக்களை, இனிது பாட - (கேட்டற்கு) இனிமையாகப் பாடவும், துந்துபி குழாம் - தேவமுரசங்களின் கூட்டம், சேர - ஒருசேர, எங்கு எங்கும் துன்னி-எவ்வெவ்விடத்தும் நெருங்கி, நின்று - நிலைநின்று, ஆர்ப்ப - ஆரவாரிக்கவும்,— தெய்வம் முனிவரர்-தெய்வத்தன்மையையுடைய சிறந்த இருடிமார், பன் அரு மறைகள் - சொல்லுதற்கு அருமையான வேதமந்திரங்களை, பகர்ந்து - சொல்லி, வாழ்த்த - ஆசீர்வதிக்கவும்,—வாசவன் - இந்திரன், மன்னவர் மன்னன் தன்னை-அரசர்கட்குச்சிறந்தவனான அருச்சுனனை, தழுவிக்கொள்ளா-அணைத்துக்கொண்டு,—(எ - று.)—'கடகரிப்பிடரின்வைத்து'என வருங்கவியோடியையும்.

கின்னரமிதுனம் - ஒரு தேவசாதி ; இதனை, "நன்னரம் புடைய தும்புரு வோடு நாரதனுந் தந்தம் வீணை மறந்து, கின்னரமிதுனங்களுந் தந்தங் கின்னரந் தொடுகிலே மென்றனரே" எனப் பெரியார் பணித்ததனாலும் அறிக. கின்னரங்கொண்டுபாடி ஆணும் பெண்ணும் ஒன்றையொன்று பிரியாது திரிதலாலே கின்னரமிதுனமெனப் பெயர் : மிதுனம் - ஆணும் பெண்ணுமான இரட்டை. (கசக)

150.—யானைப்பிடரில்வைத்து அருச்சுனனை ஊர்வலஞ்செய்ய, ஒரு விஞ்சையன் 'மானுடனுக்கு இது தகுமோ?' எனல்.

கையுடைக்கயிலையன்னகடகரிப்பிடரின்வைத்து
மையுடைக்கொண்டல்வாகனகர்வலஞ்செய்தபோதின்
மெய்யுடைக்கலைகள்வல்லான்விஞ்சையனொருவன்கண்டு
பொய்யுடைத்தலத்தோர்க்கின்னபொறுக்குமோபுனிதவென்றான்.

(இ - ள்.) மை உடை கொண்டல் வாகன் - கருமைநிறத்தையுடைய மேகத்தை வாகனமாகவுடைய இந்திரன், கை உடை கயிலை அன்ன - துதிக்கையையுடைய கைலாசகிரியை யொத்த, கடம் கரி - (ஐராவதமென்னும்) மதயானையினது, பிடரின் - பிடரியின்மேலே, வைத்து - (அருச்சுனனை) வீற்றிருக்கச்செய்து, நகர் வலம் செய்த போதின் - அமராவதிபட்டணத்

தைப் பிரதக்ஷிணஞ்செய்துவந்தபொழுதில்,—மெய் உடை கலைகள் வல்லான் - உண்மைப்பொருள்களையுடைய சாஸ்திரங்களில் வல்லவனாகிய, விஞ்சையன் ஒருவன் - வித்யாதரனொருத்தன், கண்டு - (அதனைப்) பார்த்து, (பொறுக்காமல் இந்திரனைநோக்கி), 'புனித - பரிசுத்தகுணங்களையுடையவனே! பொய் உடை தலத்தோர்க்கு - நிலையில்லாமையையுடைய பூலோகத்திலுள்ளவர்களுக்கு, இன்ன - இப்படிப்பட்ட சிறப்புக்கள், பொறுக்குமோ - தகுமோ? [தகா],' என்றான் - என்று சொன்னான்; (எ - று.)

கையுடைக்கயிலை என்றது - இல்பொருளுவமை. பிறமலைகளைக் கூறாமற் கயிலையை உவமைகூறியது, ஐராவதத்தினது வெண்மைநிறத்தை விளக்குதற்கு. கயிலை - கைலாஸமென்னும் வடமொழித் திரிபு. கயிலையன்ன கரி என்றது, இந்திரன்யானைக்குக் குறிப்பு. வலஞ்செய்தல் - வலப்பக்கத்தாற் சூழ்ந்துவருதல். விஞ்சை - வித்யா என்னும் வடமொழித் திரிபு. மாலிகாஞ்சனம் முதலிய மாயவித்தைகளை யுடைமையால், 'விஞ்சையன்' என்று பெயர். இன்ன - பெயர். (கரு0)

151.—இந்திரன் சினந்து அவ்விஞ்சையனுக்கு மறுமொழி கூறலுறுதல்.

விஞ்சையனுரைத்தமாற்றம்விபுதர்கோன்செவியிற்சென்று
நஞ்செனப்புகுதலோடுநயனங்கள்செந்தீக்கால
நெஞ்சினிலறிவிலாதாய்நீயிதுகேட்டியென்னா
மஞ்செனக்கரியமெய்யான்மனங்கனன்றினையசொல்வான்.

(இ - ள்.) விஞ்சையன் உரைத்த மாற்றம் - (இங்ஙனம்) வித்யாதரன் சொன்ன வார்த்தை, சென்று-போய், விபுதர் கோன் செவியில்-தேவேந்திரனது காதுகளிலே, நஞ்சு என புகுதலோடும் - விஷம்போல (வருத்தத்தையுண்டாக்கிக்கொண்டு) பிரவேசித்தமாத்திரத்தில் [அதனைக் கேட்ட அளவிலென்றபடி], மஞ்சு என கரிய மெய்யான்-மேகம்போலக் கறுத்த உடம்பையுடைய இந்திரன், நயனங்கள் செம் தீ கால - கண்கள் சிவந்த நெருப்பை உமிழும்படி (மிகக்கோபித்து அவ்விஞ்சையனை நோக்கி), 'நெஞ்சினில் அறிவு இலாதாய் - மனத்திற் புத்தியில்லாதவனே! நீ இது கேட்டி - நீ (யான் சொல்லும்) இதனைக் கேட்பாயாக', என்னா - என்றுசொல்லி, மனம் கனன்று - நெஞ்சுகொதித்து, இனைய சொல்வான் - இவ்வார்த்தைகளைக் கூறுவான்; (எ - று.)—அவற்றை, மேல் இரண்டுகவிகளிற் கூறுகின்றார்.

புகுதலோடும், உம்-விரைவுகுறித்தது. கேட்டி-ஏவலொருமை முற்று. இனைய - பெயர். இந்திரனது நிறம் கருமையாதலைக் கம்பராமாயணத்தில் "வில்லாலொளிர் மேகமெனப்பொலிவான்" என்றதனாலும் அறிக. நயனங்கள் - இந்திரனது ஆயிரங்கண்கள். (கருக)

152.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: இந்திரன், அருச்சுனனை மானுடனெனலாகாதென்று காரணத்துடன் கூறித் தன்கோயிலிற் கொண்டுபுகல்.

ஆதிநாயகன்பாராயணமரர்தந்துயருமேனைப்
பூதலமடந்தைக்குற்றபுன்மையுந்தீர்ப்பானெண்ணிச்

சீதைதன்கொழுநனானதிண்டிறலிராமன்போல
வோதநீருலகின்மீண்டுமருச்சுனனுருவங்கொண்டான்.

(இ - ள்.) ஆதி நாயகன் - முதற்கடவுளாகிய, மா மாயன் - சிறந்த திருமால்தானே,—அமரர்தம் துயர்உம்-தேவர்களது துன்பத்தையும், ஏனை - மற்றை, பூதலம் மடந்தைக்கு உற்ற புன்மைஉம் - பூமிதேவிக்கு நேர்ந்த துன்பத்தையும், தீர்ப்பான் - நீக்க, எண்ணி - நினைத்து,—சீதைதன் கொழுநன் ஆன திண் திறல் இராமன் போல - சானகிப்பிராட்டிக்குக் கணவனான மிக்கவலிமையையுடைய ஸ்ரீராமபிரானாக அவதரித்ததுபோல, ஓதம் நீர் உலகில் - கடலினீர் சூழ்ந்த நிலவுலகத்தில், மீண்டுஉம் - மறுபடியும், அருச்சுனன் உருவம் கொண்டான்-அருச்சுனனது ரூபமாக அவதரித்தான்; (எ - று.)

ஆதிநாயகன் என்றது - யாவர்க்கும் முதல்வராகிய திரிமூர்த்திகளுள்ளும் தலைவனென்றவாறு. முன்னொருகாலத்தில் தேவர்களெல்லோரும் இராவணன்முதலிய ராக்ஷசர்களின் உபத்திரவம் பொறுக்கமாட்டாமல் ஸ்ரீமஹாவிஷ்ணுவை வணங்கி வேண்ட, அவர் அவர்களுக்கு அபயப்பிரதானஞ்செய்து பூமியில் இலட்சுமணன் பரதன் சத்துருக்கனன் என்கிற மூன்றுதம்பிகளுடனே அயோத்தியரசனாகிய தசரதசக்கரவர்த்திக்குத் திருமகனாய்த் திருவவதரித்தார். அவர்தாம், ஸ்ரீராமபிரான். சனக மகாராசர் ஒருகால் யாகஞ்செய்யச் சாலையமைப்பதற்காகப் பூமியை உழுதபொழுது பூமியினின்று கலப்பையுழுபடைச்சாலில் தோன்றியதனால், 'சீதை' எனப் பெயர்; சீதை - ஸீதா: உழுபடைச்சால்; இதனால், அயோநிஜத்துவம் கூறப்படுகின்றது. ஒருகாலத்தில் பூமியில் துஷ்ட அசுரர்களும் கெட்ட அரசர்களும் பலர்தோன்றி விண்ணுலகத்தார்க்கும் மண்ணுலகத்தார்க்கும் பல வருத்தங்களை இழைத்துவருகையில் பூமிதேவி தன்மேலிருக்கின்ற அக்கொடியவர்களா லுண்டான மிகுந்தபாரத்தைப் பொறுக்கமாட்டாதவளாய்த் துன்பமுற்றுப் பிரமன்முதலான தேவர்கள் முகமாக ஸ்ரீமந்நாராயணனைத்துதிசெய்து பிரார்த்திக்க, அவ்வெம்பெருமான் பூபாரத்தைத் தீர்க்கும்பொருட்டுக் கிருஷ்ணபலராமர்களாகவும்அருச்சுனனாகவும்திருவவதாரஞ்செய்தாரென்பது, சரிதை. அருச்சுனன் இந்திரனது அமிசமாய்ப்பிறந்தவனாயினும், அவன் திருமாலின் அமிசமுமாதலால், கண்ணபிரான் அருச்சுனனைநோக்கி, "உன்னையான் பிரிவ தில்லை யொருமுறை பிரிந்து மேனாணன்னிலா வெறிக்கும் பூணாய் நரனுநா ரணனு மானோம்," "பின்னொரு பிறப்பின் யாமே யிராமலக் குமப்பேர் பெற்றோம், மிந்நெடும் பிறப்பி னீயும் யானுமா யீண்டு நின்றோம்" என்பதனாலும் அறிக. (கருஉ)

153. ஆதலான்மனிதனென்றிவ்வருச்சுனன்றன்னையின்னே
நீதியாலமரர்யாருநெஞ்சினிலிகழுலென்று
மாதர்கள்வீதிதோறுமலர்மழைசொரிந்துவாழ்த்தக்
கோதிலாவமரர்கோமான்கொண்டுதன்கோயில்சேர்ந்தான்.

(இ - ள்.) ஆதலால் - விஷ்ணுவின் அவதாரமாகையால், இ அருச்சுனன் தன்னை - இவ்வருச்சுனனை, இன்னே-இப்பொழுது, மனிதன் என்று-

சாதாரணமானுடனென்று கருதி, நீதியால் - (அம்மனிதனுக்குரிய) முறைமையால், அமரர் யாரும் - தேவர்களனைவரும், நெஞ்சினில் இகழல்-மனத்தில் அலட்சியஞ்செய்யவேண்டாம், என்று - என்றுசொல்லி,—கோது இலா அமரர் கோமான் - குற்றமில்லாத தேவேந்திரன்,— மாதர்கள் - தெய்வப்பெண்கள், வீதிதோறும்-எல்லாவீதிகளிலும், மலர் மழை சொரிந்து - புஷ்பவர்ஷத்தைப் பொழிந்து, வாழ்த்த - மங்கலவாழ்த்துக் கூறுநிற்க, கொண்டு - (அருச்சுனனை) அழைத்துக்கொண்டு, தன் கோயில் சேர்ந்தான் - தனது அரண்மனையை அடைந்தான் ; (எ - று.)

இகழல்-'அல்'விகுதிபெற்றவியங்கோள்; எதிர்மறையில்வந்தது: "பயனில்சொற் பாராட்டு வானை, மகனெனல்" என்றவிடத்து 'எனல்' என்பது போல; இகழற்க என்று பொருள். கோ+இல்=கோயில்; அரசனது வீடு.

154.—அருச்சுனனுடன் ஆசனத்தமர்ந்தபின் இந்திரன் மாதலியை நோக்கி விசயற்குற்ற போர்த்தொழிலை நீ புகல்க எனல்.

அரிமுகக்கனகபீடத்தண்ணலையிருத்தியண்ட
ரிருபுடைமருங்குநிற்பவிந்திரனிருந்தபின்னர்
மருவுபொற்றடந்தேரூருமாதலிதன்னைநோக்கிப்
புரிசிலைவிசயற்குற்றபோர்த்தொழில்புகனீயென்றான்.

(இ - ள்.) இந்திரன் —, அரி முகம் கனகம் பீடத்து - சிங்கத்தின் வடிவந்தோன்றச் சித்திரித்துச் செய்யப்பட்ட பொன்மயமான ஆசனத்தில், அண்ணலை இருத்தி - அருச்சுனனை வீற்றிருக்கச்செய்து,—அண்டர் - தேவர்கள், இருபுடை மருங்கும் - இரண்டுபக்கங்களினிடங்களிலும், நிற்ப - நின்றுகொண்டிருக்க, இருந்த பின்னர் - (தானும் அவ்வாசனத்தில்) உடன் வீற்றிருந்தபின்பு,—மருவு பொன் தட தேர் ஊரும் - பொருந்திய பொன்மயமான பெரிய தேரைச் செலுத்துகிற, மாதலிதன்னை நோக்கி - மாதலியைப்பார்த்து, 'நீ—, புரி சிலை விசயற்கு உற்ற - கட்டமைந்த வில்லையுடைய அருச்சுனனுக்கு நேர்ந்த, போர் தொழில் - யுத்தத் தொழிலின் விதத்தை, புகல் - சொல்வாய்', என்றான் - என்று சொன்னான் ; (எ - று.)

அரிமுகப்பீடம் - சிங்காதனம். மருவு - யாவராலும் விரும்பப்படுகிற, பொன் எனவுமாம். (கருசு)

155.—மூன்றுகவிகள் - ஒருதொடர் : மாதலி அருச்சுனன்திறனைவியந்து கூற, தேவர்பலரும் அருச்சுனனுக்குப் படைகளும் வரங்களும் உவந்தீதல் கூறும்.

மற்றவன்றொழுதுபோற்றிவானவர்குழுவுக்கெல்லாங்
கொற்றவவென்னுலின்றுகூறலாந்தகைமைத்தன்று
முற்றெதிர்மூன்றுகோடியசுரருமுடனேசேர
விற்றதுகண்டேன்பின்னர்வில்லிணுணிடியுங்கேட்டேன்.

(இ - ள்.) அவன் - அந்த மாதலி, தொழுது - (இந்திரனை) வணங்கி, போற்றி - துதித்து, 'வானவர் குழுவுக்கு எல்லாம் கொற்றவ - தேவர்கள்

கூட்டத்துக்கெல்லாம் அரசனே! (அருச்சுனனுக்கு நிகழ்ந்த போர்த்தொழில்), என்றால் இன்று கூறல்ஆம் தகைமைத்து அன்று - என்றால் இப்பொழுது சொல்லுதற்குக்கூடிய தன்மையையுடையதன்று; (ஆயினுஞ் சிறிது சொல்லுவேன்): மூன்று கோடி அசுரர்உம்-(தோயமாபுரத்திலுள்ள நிவாதகவசராகிய) முக்கோடியசுரர்களும், எதிர் உற்று - (அருச்சுனனுக்கு) எதிரிலே வந்து, உடனே—, சேர - ஒருசேர, இற்றது - அழிந்ததை, கண்டேன் - பார்த்தேன்; பின்னர் - பின்பு, வில்லின் நாண் இடிஉம் கேட்டேன் - (அருச்சுனனது) வில்லின்நாணியின் இடிபோன்ற ஓசையையுஞ் செவியுற்றேன்: (எ - று.)

இதில், அசுரரழிதலாகிய காரியத்தை முன்னும், வில்லின் தொழிலாகிய காரணத்தைப் பின்னும்நிகழ்ந்தனவாகச்சொல்லியதனால், மிகையுயர்வு நவிற்சியணி. இதில், காரணகாரியங்களின் முன்பின்நிகழுதலாகிய முறைபிறழ்வு, காரியவிரைவைத் தெரிவிக்கவந்தது. மற்று - அசை. இடி - உவமையாகுபெயர். (கருரு)

156. ஆயதுநிகழ்ந்தபின்னரயனருள்வரத்தினாலே
யேயவாள்வலியின்மிக்கவிரணியபுரத்துளோரைத்
தீயவெம்பகழியொன்றாற்செற்றனனிமைப்பின்முற்று
மாயமோமனிதன்வில்லின்வன்மையோதெரிந்ததில்லை.

(இ - ள்.) ஆயது நிகழ்ந்த பின்னர் - ஆகிய அச்செய்கை நடந்தபின்பு, அயன் அருள் வரத்தினால் எய - பிரமன் கொடுத்தருளிய வரத்தினாலே பொருந்திய, வாள் வலியின் மிக்க - ஆயுதபலத்தினால் மிகுந்த, இரணியபுரத்து உளோரை - இரணியபுரத்திலுள்ள காலகேயர் அறுபதினாயிரவரை, தீய வெம் பகழி ஒன்றால் - மிகவுங் கொடிய அஸ்திரம் ஒன்றினால், இமைப்பின் - நொடிப்பொழுதினுள்ளே, முற்றுஉம்-முழுதும், செற்றனன்-அழித்தான்; (அங்ஙனமழித்தது), மாயம்ஓ-மாயையினாலாகியதோ? மனிதன் வில்லின் வன்மைஓ - மனிதனாகிய அருச்சுனனது வலிய வில்லின் பலத்தாலாகியதோ? தெரிந்தது இல்லை - எனக்குத் தெரியவில்லை; (எ - று.)

எய-எய்என்னும்பகுதியடியாகப் பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம்: யகரவிடைநிலை, பகுதிக்கும்விகுதிக்குமிடையிலே புணர்ந்து கெட்டது; இனி, இதனைச் செயவெனெச்சமாகக்கொண்டு, பொருந்தவெனவுரைத்து, மிக்க வென்பதனோடு இயைத்தலுமாம். தீய வெம் - ஒருபொருட் பன்மொழி. இமைப்பு - ஒருமனிதன் இயல்பாகக் கண்களின் இமைகளை ஒருகால் மூடித் திறத்தற்கு வேண்டும் பொழுது. (கருசு)

157. என்றுகொண்டுயர்தேர்ப்பாகனிசைத்தனயாவுங்கேட்டு
வன்றிறலமரர்கோமான்மனமகிழ்ந்திருந்தபோதிற்
றுன்றியவமரர்யாருந்தனித்தனிசுருதியோடும்
வென்றிடுபடையுமற்றும்வேண்டுவபலவுமீந்தார்.

(இ - ள்.) உயர் தேர் பாகன் - சிறந்த ரதசாரதியான மாதலி, என்றுகொண்டு இசைத்தன - என்று சொல்லியவையாகிய, யாஉம் - எல்லாவற்

றையும், கேட்டு—, வல் திறல் அமரர் கோமான்-மிக்க வலிமையையுடைய தேவேந்திரன், மனம்மகிழ்ந்து இருந்தபோதில்-இதயஞ் சந்தோஷித்திருந்த சமயத்தில்,—துன்றிய அமரர் யாரும்-(அங்குவந்து)நெருங்கியுள்ள தேவர்களனைவரும், தனித்தனி - தனியேதனியே, சுருதியோடும் - வேதமந்திரங்களுடனே, வென்றிடு படையும் - (பகைவரை) வெல்லுதற்கு ஏற்ற ஆயுதங்களையும், மற்றும் வேண்டுவ பலவும்-இன்னும் வேண்டுவன பலவற்றையும், ஈந்தார் - கொடுத்தார்கள் ; (எ - று.)

கொண்டு - அசை ; "என்றுகொண்டிளையகூறி" என்னுங் கம்பராமாயணக்கவியிற்போல: இவ்வசையைப் புறனடைச்சூத்திரத்தாற் கொள்க; இனி, உட்கொண்டு [சுருதி] என உரைத்தலும், கேட்டுக்கொண்டு என இயைத்தலுமாம். வேண்டுவ - சாரியைபெறாத பலவறிசொல். (கருஎ)

158.—அருச்சுனன் தருமனிடஞ்செல்ல விடை கேட்டல்.

தேவர்பால்வரமுமெல்லாச்சிறப்புமின்னருளும்பெற்ற
காவலன்கடவுள்வேந்தன்கழலிணைபணிந்துபோற்றித்
தாவரும்புரவித்தானைத்தருமன்மாமதலைபொற்றாள்
மேவரவேண்டுமின்னேவிடையெனக்கருளுகென்றான்.

(இ - ள்.) தேவர்பால் - தேவர்களிடத்தில், வரம்உம் - வரங்களையும், எல்லாம் சிறப்புஉம்-மற்றை எல்லா மேன்மைகளையும், இன் அருள்உம்-இனிய கருணையையும், பெற்ற—, காவலன் - அரசனாகிய அருச்சுனன், கடவுள்வேந்தன் - தேவராசனான இந்திரனது, கழல் இணை - திருவடிகளிரண்டையும், பணிந்து - வணங்கி, போற்றி - துதித்து, '(யான்), தா வரும் - தாவிவருகின்ற, புரவி தானை-குதிரைச்சேனையையுடைய, தருமன் மா மதலை - யமனது சிறந்த குமாரராகிய யுதிட்டிரரது, பொன் தாள்-அழகிய திருவடிகளை, மேவர வேண்டும் - அடையவேண்டும் ; (ஆதலால்), இன்னே - இப்பொழுதே, எனக்கு—, விடை அருளுக - உத்தரவு கொடுத்தருள்வாயாக,' என்றான் - என்று சொன்னான் ; (எ - று.)

காவலன் - காத்தற்றொழிலையுடையவன் ; அன்றிக்கே, காத்தலில் வல்லவன். கழல் என்னும் அணியின் பெயர், அது பொருந்தும் இடமாகிய பாதத்திற்குத் தானியாகுபெயர். தா அரும் எனப்பிரித்து, (அசுவநூலிற் கூறிய) குற்றம் இல்லாத புரவி யென்றுமாம். புரவி-மற்றை மூன்று அங்கங்களுக்கும் உபலக்ஷணம். பொன்-அதனாலாகிய அணிக்குக் கருவியாகுபெயரெனக்கொண்டு, பொற்கழலணிந்த தா ளென்றுமாம். வேண்டும்-ஒருவகை வியங்கோள் வினைமுற்று. (கருஅ)

159.—சிலநாள் அங்குத் தங்கியிருக்குமாறு சொல்லி, இந்திரன் அருச்சுனனுக்கு மாளிகைமுதலியன ஈதல்.

பைந்தனங்குரைந்தபாற்றமனமுறமகிழ்ந்துகேட்டுத்
தந்தையுமின்னஞ்சின்னாட்டங்குகவிங்கென்றேத்திச்
செந்திருவனையதோற்றத்தெய்வமென்போகமாத
ரைந்நொடாயிரரும்வேறோரம்பொன்மாளிகையுமீந்தான்.

(இ - ள்.) மைந்தன் - (தன்)மகனாகிய அருச்சுனன், அங்கு-அவ்வாறு, உரைத்த - சொன்ன, மாற்றம் - வார்த்தையை, தந்தைஉம் - பிதாவாகிய இந்திரனும், மனன் உற-மனத்திலே பொருந்தும்படி, மகிழ்ந்து கேட்டு - மகிழ்ச்சியுடனே செவியுற்று,—'இங்கு - இவ்வுலகத்தில், இன்னம் சில் நாள் தங்குக - இன்னுஞ் சிலதினங் தங்குவாயாக,' என்று - என்று சொல்லி, எத்தி - புகழ்ந்து, செம் திரு அனைய தோற்றம் - செம்மைநிறமுடைய இலக்குமியை யொத்த அழகிய காட்சியையும், மெல் - (மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளாலும் அனுபவிக்கப்படுகிற ஸ்பரிசம் ரசம் ரூபம் கந்தம் சப்தம் என்னும் ஐவகை) மென்மைகளையுமுடைய, போகம்-சுகானுபவத்திற்குஉரிய, தெய்வம் மாதர்-தெய்வப்பெண்கள், ஐந் தொடு ஆயிரர்உம் - ஐயாயிரம்பேரையும், வேறு ஓர் அம் பொன் மாளிகை உம் - அழகிய பொன்னினாலாகியதொரு வேறு தனி வீட்டையும், ஈந்தான் - (அருச்சுனனுக்குக்) கொடுத்தான் ; (எ - று.)

தெய்வமாதர் - தேவஸ்திரீகள். தெய்வம் - தைவம் என்னும் வடமொழித் திரிபு. போகமாதர் - பொதுமகளிர் ; போகம் - கலவிச்சிற்றின்பம். "சாயல்மென்மை" என்னுந் தொல்காப்பியச்சூத்திர வுரையைக் கொண்டு, மென்மையென்பது சுவையொளியூறோசைநாற்றமென்னும் ஐவகையையும் உணர்த்து மென அறிக. (கருகூ)

160.—இங்ஙன் அருச்சுனனுக்குத் தந்தபின் தேவேந்திரன் உரோமசரிடத்து அருச்சுனன்பெருமையைக் கூறல்.

வரோதயமானதெய்வவான்படைமறைகள்பின்னும்
புரோசனப்பகைவற்கீந்துபுரந்தரனிருந்தபின்னர்ச்
சரோருகரண்டம்விண்டாலொருமயிர்சலிக்குஞ்செங்கை
யுரோமசமுனியைநோக்கியுரைத்தனனுற்றவெல்லாம்.

(இ - ள்.) புரந்தரன் - இந்திரன்,—வர உதயம் ஆன - சிறந்த உற்பத்திக்கிரமத்தையுடையவையாகிய, தெய்வம் - தெய்வத்தன்மையையுடைய, வான் - சிறந்த, படை-ஆயுதங்களையும், மறைகள்-மந்திரங்களையும், பின்னும் - மீண்டும், புரோசனன் பகைவற்கு - புரோசனன் என்பவனுக்குப் பகைவனாகிய அருச்சுனனுக்கு, ஈந்து-கொடுத்து, இருந்த பின்னர் - வீற்றிருந்தபின்பு,—சரோருகர் அண்டம் விண்டால் - பிரமதேவர்படைத்த அண்டகோளம் ஒருகால் அழிந்தால், ஒரு மயிர் சலிக்கும் - ஒருமயிர் உதிர்கின்ற, செம் கை - சிவந்த கையையுடைய, உரோமசமுனியை நோக்கி - ரோமசர் என்னும் ரிஷியைப் பார்த்து, உற்ற எல்லாம்-நடந்த செய்கைகளையெல்லாம், உரைத்தனன் - சொன்னான் ; (எ - று.)

வர+உதயம்=வரோதயம் ; வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி. உதயம்-உதித்தல்; தோற்றம். கீழ் ஐந்தாங்கவியில் "தெவ்வையடுந்திறற்படையுநல்கி" என்றதனை நோக்கி, இங்கே 'பின்னும் ஈந்து' என்றார். புரோசனன் என்பவன் - திருதராஷ்டிரனது மந்திரி : இவன், வாரணாவதமென்னும்

நகரத்தில் அரக்கினூற் செய்து பாண்டவர்களுக்கு இடமாகக் கொடுக்கப்பட்ட மாளிகையில் அவர்களுக்குத் துணையாகத் துரியோதனனால் அனுப்பி வைக்கப்பட்டவன்: இவன், தனது எசமானனது கட்டளைப்படி, பாண்டவர்களும் குந்திதேவியும் தூங்குகின்ற சமயத்தில் அவ்வீட்டில் நெருப்புப் பற்றவைத்து அவர்களை யெரித்து அழித்துவிடுவதற்கு இருந்தான்: அவ் வஞ்சனையை விதுரராலறிந்து பீமசேனன் ஒருநாளிரவில் அந்தப்புரோசனன்முதலியோர் தூங்குகையில் தீப்பற்றவைத்துவிட்டுத் தாயையும் உடன்பிறந்தவர்களையும் எடுத்துக்கொண்டு சுரங்கத்தின் வழியாய்த் தப்பி வெளிச்சென்றான். இச்சரித்திரத்தை யுட்கொண்டு, அருச்சுனனை 'புரோசனப்பகைவன்' என்றாரென்க; புரோசனனிடத்து அருச்சுனனுக்குப் பகைமை யிருத்தலைநோக்கி, இங்ஙனங் கூறினார். இதற்கு வேறு கதை பொருத்தமாகக் கூறுவராயிற் கொள்க. சரோருகர் - தாமரை மலரில் வாழ்பவர். ஸரோருஹம் - பொய்கையில் முளைப்பது; தலைமை பற்றிவந்த காரணப்பெயர். ரோமசர் என்பதற்கு - (உடம்பில்) மிக்க மயிருடையவர் என்பது பொருள். ஒவ்வொரு பிரளயத்துக்கு இவரது உடம்பினின்று ஒவ்வொருமயிர் உதிருமென்றும், இங்ஙனம் உடம்புமயிரெல்லாம் உதிர்ந்தபின்பு இவருக்கு ஆயுள்முடியுமென்றும் கூறுப; இதுபற்றியே, "எல்லாவுலகுமுடிந்திடு நாளு மீறி லாதான்" என்பர், மேல் புட்பயாத்திரைச்சருக்கத்திலும். ஒருகாலத்திற் பிரமதேவன் எல்லாவுலகங்களையும் படைத்திட்டுத் தன்னைப்போல மிக்க ஆயுளையுடையார் வேறு ஒருவரும் இல்லையென்று பெருஞ்செருக்குக் கொள்ள, அக்கருவத்தை ஒழித்தருளத் திருவுளங்கொண்டு திருமால் பிரமனை உரோமசமகாமுனிவரிடம் அழைத்துப்போக, அங்குப் பேசிக்கொண்டிருக்கையில் அம்முனிவர் 'பிரமர்களென்று சிலர் நீர்க்குமிழிகள்போலே கணந்தோறுந் தோன்றி மறைபவராயிருப்பர்கள்' என்று கூறவே, பிரமன் செருக்கொழிந்தனனென்பது, ஒருவரலாறு; இதனை "நான்முகனுள் மிகத் தருக்கை யிருக்கு வாய்மை நலமிகுசீ ருரோமசனால் நவிற்றி" என்னும் பெரியதிருமொழியாலும் அறிக. இம்முனிவர், ஸ்ரீமகாவிஷ்ணுவின் அமிசமெனப்படுவர். (இவர்பெயர் லோமஶரெனவும் வழங்கும்.) இங்ஙனம் நீண்ட ஆயுளையுடைய முனிவரும் தமது இயற்கையாகவுள்ள நற்குணத்தால் திரிலோகாதிபதியான இந்திரனுக்கு அடங்கியிருந்தனரென அறிக. படைக்கலன்கள்பின்னும்என்றும் பாடம். (கசூ0)

161.—இந்திரன் அருச்சுனன்பால் நிகழ்ந்தவற்றைத் தருமனுக்கு உரைக்குமாறுசொல்ல, உரோமசரும் போதல்.

வரிசிலைவிசயன்வந்துவான்றவம்புரிந்தவாறு
மரிவையோர்பாகனன்பாலவற்கருள்புரிந்தவாறு
மிரியவென்பகையையெல்லாமிவன்றனிதடிந்தவாறுந்
தருமனுக்குரைத்தியென்னத்தபோதனமுனியும்போனான்.

(இ - ள்.) 'வரி - கட்டமைந்த, சிலை - வில்லையுடைய, விசயன்-அருச்சுனன், வந்து-(யுதிட்டிரனை விட்டு) வந்து, வான் - சிறந்த, தவம் - தவத்தை, புரிந்த - செய்த, ஆறுஉம் - விதத்தையும், அரிவை - உமாதேவியாகிய மனைவியை, ஓர் பாகன் - (தனது) ஒருபக்கத்தில் [வாமபாகத்தில்] உடைய சிவபிரான், அன்பால் - பிரீதியினால், அவற்கு - அவ்வருச்சுனனுக்கு, அருள் புரிந்த ஆறுஉம் - கருணை செய்த விதத்தையும், இவன் - இவ்வருச்சுனன், என் பகையை எல்லாம் - எனது பகைவர்கள் யாவரையும், இரிய - கெடும்படி, தனி - தானொருவனாக, தடிந்த ஆறுஉம் - அழித்த விதத்தையும், தருமனுக்கு - யுதிட்டிரனுக்கு, உரைத்தி - சொல்வாய்', என்ன - என்று (இந்திரன்) சொல்ல,— தபோ தனம் முனிஉம் - தவத்தையே செல்வமாகக் கொண்டுள்ள அவ்வுரோமசமுனிவரும், போனான் - (காமியவனத்துக்குச்) சென்றார் ; (எ - று.)

அரிவை-இங்கே, பருவப்பெயராகாமற் பெண்ணென்னுமாத்திரையாய் நின்றது: அப்பருவத்துக்கு வயதெல்லை - இருபதுமுதல் இருபத்தைந்தளவு மென்க. தந்தையே மைந்தனாகப்பிறக்கிறா னென்னும் நூல்வழக்குப்பற்றி, தருமபுத்திரனை 'தருமன்' என்றார்.

'அரிவை யோர்பாகன்' என்பதிலுள்ள கதை:—பிருங்கியென்னும் மகாமுனிவர் பரமசிவனைமாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்யக் கண்ட பார்வதீதேவி 'முனிவர் என்னைப் பிரதக்ஷிணஞ்செய்யாமைக்கு ஏது என்ன?' என்றுவினவ, உருத்திரமூர்த்தி 'இஷ்டசித்திபெற விரும்புபவர் உன்னையும் மோக்ஷம்பெறவிரும்புபவர் என்னையும் வழிபடுவர்' என்ன, அதுகேட்ட தேவி, பெருமானோடுபிரியாதிருக்குமாறு தவம்புரிந்து வாமபாகம்பெற்றாரென்பது.

பாசுபதம் பெற்றபின் சுவர்க்கலோகத்துக்கு அருச்சுனனையழைத்துச் சென்று அஸ்திராதிகளைக்கொடுத்து ஊர்வசியின்சாபத்தையும் வரமாக மாற்றியபின், தேவேந்திரன், நிவாதகவசர்முதலிய அசுரரை நாசஞ்செய்வித்தற்காக அந்தச்சுவர்க்கலோகத்திலேயே அருச்சுனனை யிருத்திக் கொண்டு, அவ்வருச்சுனனது பிரிவினால்வருந்தும் தருமன்முதலானோரைச் சமாதானப்படுத்துமாறு ரோமசமுனியை விடுத்தானென்று வியாசபாரதம் கூறும். (கசுக)

நிவாதகவசர்காலகேயர்வதைச்சருக்கம் முற்றிற்று.

---

மூன்றவது

# புட்பயாத்திரைச்சருக்கம்

மலரின்பொருட்டுப் பிரயாணஞ்செய்ததைக் கூறுகின்றதொரு நூற் கூறுபாடு என்பது, பொருள். புட்பம்=புஷ்பம்: யாத்திரை=யாத்ரா: சருக்கம்=ஸர்க்கம்; மூன்றும் வடசொற்றிரிபுகள். இம்மூன்றுசொற்கள் தொடர்ந்ததொரு தொடர்மொழியிலுள்ள இரண்டுபுணர்ச்சியும், செயப்படுபொருளில் [விஷயமாகவுடைமையாகிய சம்பந்தப்பொருளில்] வந்த ஆறும் வேற்றுமைத்தொகையாம்; புஷ்பத்தினது யாத்திரையினது சருக்கம் என விரிக்க: புட்பத்தைக்குறித்த யாத்திரையைப்பற்றிய சருக்கம் என விரித்தால், இரண்டும் - இரண்டனுருபும்பயனும்உடனதொக்க தொகையாம்.

## 1. கடவுள் வணக்கம்.

*மற்கொண்டு வகுத்தனைய சிகரத் திண்டோள் வாளரக்கன் குலத்தோடு மடிய முன்னம், விற்கொண்டு சரந்தொடுத்துப் புரையில் கேள்வி விண்ணவர்தந் துயர்தீர்த்த வீர ராமன், கற்கொண்ட வகலிகைதன் னுருவ மீளக் கவின்கொள்ளக் கொடுத்ததிருக் கமல பாதஞ், சொற்கொண்டு துதித்தெழுந்து துள்ளி நாளுந் தொழுமவரே யெழுபிறவித் துவக்கற் றாரே.*

(இ - ள்.) மல் கொண்டு - வலிமையென்றகுணத்தைக் கொண்டு, வகுத்(த)து அனைய - இயற்றப்பட்டதுபோன்ற, சிகரம் - மலையையொத்த, திண் தோள் - வலியதோள்களையுடைய, வாள் அரக்கன் - (சந்திரகாசமென்னும்) வாட்படையையுடைய இராட்சதனாகிய இராவணன், குலத்தோடுஉம் - குலத்துடனே, மடிய - இறந்திடுமாறு, முன்னம் - முன்பு, வில்கொண்டு - (கோதண்டமென்ற)வில்லினால், சரம் தொடுத்து-அம்பை எய்து, புரை இல் கேள்வி விண்ணவர்தம் துயர் தீர்த்த - குற்றமற்ற நூற்கேள்வியையுடைய தேவர்களின் துன்பத்தைப் போக்கியருளிய, வீரம் ராமன் - வீரகுணத்தைக் கொண்ட ஸ்ரீராமனுடைய, கல் கொண்ட அகலிகை - கல்வடிவத்தைப் பெற்ற அகலிகை, தன் உருவம் - நிஜவடிவத்தை, மீள-மறுபடியும், கவின் கொள்ள - அழகுபொருந்தப்பெறுமாறு, கொடுத்த—, திரு கமலம் பாதம் - சிறந்த தாமரைமலர்போன்ற திருவடிகளை, சொல்கொண்டு - சொல்லினால், துதித்து - புகழ்ந்து, (அங்ஙனம்புகழ்வதனாலான களிப்பினால்), எழுந்து துள்ளி - துள்ளியெழுந்து, நாள்உம் - பிரதிதினமும், தொழுமவர்ஏ - தொழுபவர்களே, எழு பிறவி - எழுவகைப்பட்ட பிறவிகளிலே, துவக்கு - சம்பந்தம், அற்றார் - நீங்கினவராவர்; (எ - று.)

ஸ்ரீராமனது திருவடிகளைப் புகழ்ந்து துள்ளியெழுமவர், அகலிகை சாபவிமோசனம் பெற்று நிஜவடிவத்தை யடைந்தாற்போல, தமக்கு நேர்ந்துவரும்பிறவித்துயர்நீங்கித் தீவினையின்மை முதலிய அஷ்டகுணவிர்ப்பாவத்தையடைந்து மீளாவுலகமாகியநற்கதிசேர்வரென்பதாம். ஸ்ரீராம

னுடைய கமலபாதத்துக்கு அகலியை தன்னுருவமீளக் கவின்கொள்ளக் கொடுத்தஎன்ற அடைமொழிகொடுத்தது, கருத்துடையடைமொழியாம். ஆன்மாவிற்கு வரக்கூடிய எழுபிறவிகளாவன - தேவர் மக்கள் விலங்கு புள் ஊர்வன நீர்வாழ்வன தாவரம்என இவை.

இதுமுதல்இருபதுகவிகள் - பெரும்பாலும் ஒன்றுஇரண்டு ஐந்து ஆறுஞ்சீர்கள் காய்ச்சீர்களும், மற்றவை மாச்சீர்களுமாகிவந்த கழிநெடிலடிநான்குகொண்ட எண்சீராசிரிய விருத்தங்கள். (க)

2.—கவிக்கூற்று : அருச்சுனன் இந்திரனருகிலினிதிருப்ப, தருமன் ஆரணியத்திற் புரிந்ததைக் கூறுவோ மெனல்.

இப்பால்வெஞ்சிலைவிசயன் றுறக்கமீதி லிந்திரன்றனருகிருப்பவி மையோரூரி,லப்பாலற்றவம்புரியுந்தழல்கூர்வேள்வி யந்தணர்தங்குழாஞ்சூழவழகார்மண்ணி,லொப்பாருமிலாதமடமயிலினோடு முயர்வனத்தினிடைநாளுமொருநாள்போலத்,தப்பாமலறம்வளர்க்குநீதிவேந்துந் தம்பியரும்புரிந்ததினி ச்சாற்றுகிற்பாம்.

(இ-ள்.) வெம் சிலை விசயன்-கொடிய வில்லையுடைய அருச்சுனன், இப்பால் - இங்கு, துறக்கம்மீதில் - விண்ணுலகில்,—இமையோர் ஊரில் - தேவர்களின்வாழிடமான அமராவதிநகரில், இந்திரன் தன் - இந்திரனுடைய, அருகு - சமீபத்திலே, இருப்ப - இராநிற்க,—அப்பால் - அங்கு, அழகு ஆர் மண்ணில் - அழகுநிரம்பிய பூலோகத்தில், நல் தவம் புரியும் - சிறந்த தவத்தைச் செய்பவர்களாய், தழல் கூர் வேள்வி அந்தணர்தம் - அக்கினிமிகுதியாகஎரிகின்ற யாகங்களைப் புரியும் பிராமணர்களுடைய, குழாம் - கூட்டம், சூழ - சூழ்ந்திருக்க,—மடம் மயிலினோடுஉம் - மயில் போன்ற சாயலையுடையளான திரௌபதியுடனே, உயர் வனத்தினிடை - பெருவனத்தினிடையிலே, நாள்உம் - பிரதிதினமும், ஒருநாள்போல—, தப்பாமல்-தவறாமல், அறம் வளர்க்கும்-தருமத்தை நடத்துகின்ற, ஒப்பு ஆர் உம் இலாத - ஒத்தவராக எவரையும்பெறாமையையுடைய, நீதிவேந்துஉம் - நியாயநெறிதவறாத யுதிட்டிரமகாராஜனும், தம்பியர்உம்—,புரிந்தது - செய்ததை, இனி—,சாற்றுகிற்பாம் - சொல்வோம் ; (எ - று.)

அருச்சுனன் சுவர்க்கலோகத்தில் அமராவதிநகரில் இந்திரனருகிலே இனிதிருப்ப, பூலோகத்திலே யதிட்டிரன் தருமபத்தினிதிரௌபதியுடனேயிருந்து இல்லறத்தை ஒருநாள்நடத்துவதுபோலவே எந்நாளும் தவறாது நடத்துபவனுய்த் தம்பியரோடும் செய்த செயல் இனிக் கூறப்படுமென்பதாம். வேள்வியில் அவிசினால் அக்கினி மிகவும்வளர்க்கப்படுமாதலால், 'தழல் கூர்வேள்வி'என்றது. விசயனின்பமெய்தினென்றும், புரிந்துஎன்றும் பிரதிபேதம். (உ)

3.—யுதிட்டிரன் அருச்சுனனைப் பிரிந்த வருத்தத்தோடு சிந்தனைகொண்டு தம்பியருடனிருக்கையில் ரோமசமுனிவன் அங்குவந்தடைதல்.

விறல்விசயன்றனைப்பிரிந்தவருந்தமேன்மேல் விஞ்சவொருதஞ்சமறவெம்பியும்பொற், சிறகிழந்தபறவையெனத்துணைவரோடுந்திறல்

வேந்தன்சிந்தனையுற் றிருந்தகாலைப், பொறையறிவுநிறைதருமமுடைய வாய்மைப் போர்வேந்தேயஞ்சலெனப்புகழ்ந்துவாழ்த்தி, மறையொ ருபொன்வடிவுகொடுவந்ததென்ன மாமுனியுமிமைப்பினிடைவந்துற் றனே.

(இ - ள்.) விறல் விசயன்தனை - வலிமையுள்ள அருச்சுனனை, பிரிந்த வருத்தம்—, மேல்மேல் விஞ்ச—, ஒரு தஞ்சம் அற - (அந்த வருத்தத்தைப் போக்கும்)பற்றுக்கோடு ஒன்றும்இல்லாமல், வெம்பி - மனங்கன்றி, அம் பொன் சிறகு இழந்த பறவை என-அழகிய பொன்போலருமையான சிறகை யிழந்த பறவையைப்போல, துணைவரோடுஉம் - (அருச்சுனனையொழிந்த வீமன் முதலிய) தம்பியருடனே, திறல் வேந்தன் - வலிமையையுடைய யுதிட்டிரராசன், சிந்தனை உற்று - சிந்தனைகொண்டு, இருந்த காலை-இருந்த போது—,—மாமுனிஉம்-(உரோமசனென்ற) சிறந்த முனிவனும்,—மறை ஒரு பொன் வடிவு கொடு வந்தது என்ன-வேதமே ஒரு அழகியவடிவத்தை யெடுத்துக்கொண்டு வந்ததென்றுகருதுமாறு, பொறை அறிவு நிறை தருமம் உடைய வாய்மை-பொறுமையும் அறிவும் நிறைந்ததருமமும் உடைமையாகக் கருதும்சத்தியமும்ஆகியஇவற்றையுடைய, போர்வேந்தே-போர்செய்யவல்ல அரசனே! அஞ்சல்-(அருச்சுனனைப் பிரிந்தவருத்தத்தால்) அஞ்சவேண்டா,' என - என்றுசொல்லியவண்ணம், புகழ்ந்து வாழ்த்தி-(அந்தத் தருமனைத்) துதித்து வாழ்த்துக்கூறி,—இமைப்பினிடை - இமைக்கும் நேரத்திற்குள், வந்துஉற்றான் - (சுவர்க்கலோகத்திலிருந்து தருமனிருக்கும் வனத்துக்கு) வந்து சேர்ந்தான்; (எ - று.)

'விசயன் செய்தியையெல்லாம் தருமனுக்கு உரைத்தி' என்று தேவேந்திரன் கூறியவுடனே, தாமதமின்றி. அந்த உரோமசமுனிவன் தருமனிருக்குமிடம் வந்து அப்போது அத்தருமன் சிந்தனையை முகத்தில் தேக்கியிருந்ததனால் அஞ்சலென்றுதேற்றிப்புகழ்ந்து வாழ்த்தினனென்க. புகழ்ந்து வாழ்த்தி வந்துற்றான் என்ற இடத்து விகுதிபிரித்துக் கூட்டி, வந்துற்றுப் புகழ்ந்து வாழ்த்தினனென்னலாம்: இனி, வரும்போதே தருமனைப்புகழ்ந்து வாழ்த்தியவண்ணம் அம்முனிவன் வந்தா னென்பார் இவ்வாறு கூறினா ரென்பாருமுளர். இமைப்பினுடன்என்றும் பாடம். (௩)

4.—வந்தமுனிவனைத் தருமன் முதலியோர் வணங்க, அம்முனிவன் ஆசிகூறி இருக்கையிலமர்தல்.

வந்தபெருங்கடவுண்முனிவரவுநோக்கி வாள்வேந்துந்தம்பியரு மகிழ்ச்சிகூர்ந்து,சிந்தைவிழிமலரொடுபேருவகைபொங்கச் சென்றெ திர்போய்வணங்குதலுஞ்சிதைவிலாத, வந்தமுனிவரனுமவர்க்கன் பாற்றன்ப மனுகாதவந்தமிலாவாசிகூறிப், புந்தியுடனளித்தசெழும் புனிதகோலப் புலித்தவிசினிருந்தடைவேபுகன்றனெல்லாம்.

(இ - ள்.) வந்த—, பெருங் கடவுள் முனி - பெருமைபெற்ற தெய் வத்தன்மையுள்ள உரோமசமுனிவனது, வரவு - வருகையை, நோக்கி -

பார்த்து, வாள் வேந்தும் - வாட்படையையுடைய யுதிட்டிரராசனும், தம்பியரும் - தம்பிமாரான வீமன்முதலியோரும், மகிழ்ச்சி கூர்ந்து - மகிழ்ச்சி மிகுந்து,—சிந்தை - மனத்திலும், விழிமலரொடு - மலர்போன்ற கண்களிலும், பேர் உவகை-மிக்கமகிழ்ச்சி, பொங்க - அதிகரிக்க, சென்று-நடந்து, எதிர்போய - (அம்முனிவனுக்கு) எதிராகப்போகி, வணங்குதலும்-வணங்கினவுடனே,—சிதைவு இலாத - அழிவில்லாத, அந்த முனிவரனும் - அந்த உரோமசனென்ற இருடிச்சிரேட்டனும், அவர்க்கு - அந்தப் பாண்டவர்க்கு, அன்பால் - மனப்பிரீதியோடு, துன்பம் அணுகாத-துன்பம்சேராத, அந்தம் இலா - அளவில்லாத [மிகப்பல], ஆசி - வாழ்த்துக்களை, கூறி - சொல்லி,—புந்தியுடன்-மனப்பூர்வமாக, அளித்த-(தருமன்) கொடுத்த, செழும் புனிதம் கோலம் புலி தவிசின்-சிறந்த பரிசுத்தமான அழகிய புலித்தோலாசனத்தில், இருந்து—, அடைவே—, எல்லாம்—,புகன்றான்—; (எ - று.)

உரோமசமுனிவன் அடைவேபுகன்றவை இவை யென்பது மேலிற் செய்யுளில் விளங்கும். அருச்சுனனதுபிரிவினால் பாண்டவர்க்குக் காமிய வனவாசம் இன்னாதாக, தருமன் தம்பியருடன் அங்குநின்றும் அப்பாற் செல்லநிச்சயித்துத் தௌமியமுனிவனிடம் தெரிவித்துக்கொள்ள,அம்முனிவன் பலபுண்ணியதீர்த்தங்களையும் ஆச்சிரமங்களையும் கூறுநிற்கையில், லோமசமுனிவன் இந்திரன்மொழியையனுசரித்து அருச்சுனன் பாசுபதம் பெற்றமைமுதலியகூறி, இந்திரன் கூறிய செய்தியையுந்தெரிவித்தானென்று வியாசபாரதம் கூறும். முனிவனது கடவுள்தன்மையும் சிதைவிலாத்தன்மையும் கீழ்ச்சருக்கத்துவிளக்கப்பட்டன. 'துன்பமகல மிக வந்தமிலாவாசி' என்றும் பாடம். (ச)

5.—இரண்டுகவிகள் - ஒருதொடர்: உரோமசன் அருச்சுனனுடைய செய்திகளைச்சொல்லி, இந்திரன் விருப்பின்படி தான்வந்தமை தெரிவித்தல்.

வாள்விசயன்புரவிசயன்றன்னைநோக்கி மன்னுதவம்புரிந்ததுவுமகிழ்ச்சிகூர்ந்தவ்,வேள்விசயந்தவிர்த்தபிரானருளால்வேண்டும் விறற்படைகளளித்ததுவும்விபுதர்கோமா, னும்பரூரின்கொடுபோயுநாள்விசயம்பெறக்கொடுபோயம்பருரி னளிமருடம்புனைந்ததுவுநாளுந்தன்பொற்,றோள்விசயந்தொலைத்தநிறலவுணர்சேனை சுடுசரத்தாற்றொலைத்ததுவுஞ்சூழ்ந்தயாவும்.

(இ - ள்.) வாள் விசயன் - ஒளிபொருந்திய அருச்சுனன், புரம் விசயன் தன்னை நோக்கி - திரிபுரத்தைவென்றவனாகிய சிவபிரானைக்குறித்து, மன்னு - நிலைபெற்ற, தவம் - தவத்தை, புரிந்ததுஉம் - செய்ததையும், மகிழ்ச்சி கூர்ந்து - மகிழ்ச்சிமிகுந்து, அ வேள் விசயம் தவிர்த்த பிரான் - அந்தமன்மதனுடைய வெற்றியைப்போக்கிய சிவபிரான், அருளால் - அருளோடு, வேண்டும்-(அருச்சுனன்) விரும்பிய, விறல் படைகள்-வலிமையுள்ள படைக்கலங்களை, அளித்தது உம் - கொடுத்ததையும், விபுதர்கோமான் - தேவர்கட்குத் தலைவனான இந்திரன், உம்பர் ஊரின் கொடு போய் - தேவலோகத்து அமராவதிக்குக் கொண்டுபோய், நாள் - நல்லநாளிலே, விசயம்

பெற - வெற்றிபெறுமாறு, ஈனி மகுடம் புனைந்ததூஉம் - சிறந்த கிரீடத்தைத் தரிப்பித்ததையும், நாளும் - பலகாலும், தன் - இந்திரனது, பொன் தோள் விசயம் தொலைத்த - அழகிய தோள்வலிமையாற்பெறலாகும் வெற்றியை யொழித்த, திறல் - வல்லமையையுடைய, அவுணர் - (நிவாத கவசர் காலகேயர் என்ற) அசுரரின், சேனை - தொகுதியை, (அருச்சுனன்), சுடு சரத்தால் - எரிக்கவல்ல அம்புகளைக் கொண்டு, தொலைத்ததூஉம் - ஒழித்ததையும், சூழ்ந்த யாஉம் - மற்றுமுள்ளஎல்லாவற்றையும்,—(எ - று.) —'வரைவழியேவருவதுவும்' என மேலே தொடரும்.

சிவபிரான்தவத்திலிருக்கையில் உமையினிடம் காதல்விளைவிக்கும் பொருட்டுத் தேவர்களின் தூண்டுதலால் அப்பிரான்மீது மன்மதன் மலரம்பைத்தொடுக்க, அப்போது அச்சிவபெருமான் தன்நெற்றிக்கண்ணினால் அந்தமதனனையெரித்தானதலால், 'வேள்விசயந்தவிர்த்தபிரான்' என்றார். சூழ்ந்தயாவும் என்றது - ஊர்வசியாற்காதலிக்கப்பட்டுச் சாபம்பெற்றுச் சாபவிமோசனமும் பெற்றமையைக் காட்டுமென்னலாம். ஈளிர்மகுடம் என்றும்பாடம். (ரு)

6. தன்னருகேயமரரெலாமினிதுபோற்றத் தனஞ்சயனங்கிருந்ததற்பின்றயங்குஞ்சோதி,மன்னுமெழிற்காந்தர்ப்பமென்னுநாம வரைவழியேவருவதுவுமருவுகாத, லுன்னுடையபெருந்துயரந்தணியுமாறு முரைத்தருள்கவெனவும்பர்கோமானுன்பா,லென்னைவிடுத்தனன்வந்தேனென்றானெல்லா வுலகுமுடிந்திடுநாளுறுதியிலாதான்.

(இ - ள்.) தனஞ்சயன் - அருச்சுனன், தன் அருகு உ - தனது சமீபத்திலிருந்து, அமரர்எலாம் - தேவர்கள்யாவரும், இனிது போற்ற - இனிமையுறத் துதிக்க, அங்கு - அத்தேவலோகத்தில், இருந்ததன் பின் - சிலகாலந் தங்கியிருந்தபிறகு,—தயங்கும் சோதி-விளங்குகின்ற ஒளியையும், மன்னும் எழில்-பொருந்திய அழகையுமுடைய, காந்தர்ப்பம் என்னும் நாமம் வரை வழிஉ - காந்தர்ப்பமென்று பேர்கொண்ட மலையின்வழியாக, வருவதூஉம் - (திரும்பிப் பூலோகத்துக்கு) வரப்போவதையும்,—மருவு காதல் - (அவ்வருச்சுனனிடம்) பொருந்திய அன்பையுடைய, உன்னுடைய—, பெருந்துயரம் - (அவ்வருச்சுனனுடைய பிரிவினாலாகிய) மிக்க துன்பம், தணியும் ஆறூஉம் - ஆறியிருக்குமாறும், உரைத்தருள்க-சொல்வாயாக, என-என்று சொல்லி, உம்பர்கோமான் - தேவேந்திரன், உன்பால் - உன்னிடத்து, என்னை—, விடுத்தனன் - அனுப்பினான்: (அதனால்), வந்தேன்—,என்றான்-என்று (தான்) வந்த வரலாற்றைக் கூறினான்: (யாவனென்னில்),—எல்லா உலகுஉம் முடிந்திடும் நாள்உம் ஈறுஇலாதான் - உலகம்யாவும் அழிந்திடும் பிரளயகாலத்தும் தனக்குஇறுதிவரப்பெறாதவனான அந்தரோமசமுனிவன்.

அருச்சுனன் தான் எந்தக்கருத்தோடு சென்றானோ அந்தக்கருத்து முற்றி முன்னினும் பலமடங்கு மேன்மைபெற்றுள்ளானதலால் அத்தன்மையை நினைந்து நீ துயரம்தவிர்ந்திருக்கவென்று உன்னிடம்சொல்லுமாறு

உன்னிடம்விடுத்தானென்பது, 'உன்னுடைய பெருந்துயரந்தணியுமாறு முரைத்தருள்க' என்றதன் கருத்து. தணியுமாறும் என்ற உம்மை - விஷயவிளங்குமாறு கூறுவதன்றி என்று எச்சப்பொருளைத் தரும் : இனி, இசைநிறையாகவுமாம். (௬)

7.—நான்துகவிகள் - முனிவன்மொழியால் பாண்டவர் வருத்தமாறிப் புறப்பட்டு, உரோமசன்காட்டப் பலதீர்த்தங்களிலும்நீராடி, காந்தர்ப்பத்தில் தங்குதல் கூறும்.

*மாமுனிதன்மொழிகேட்டுப்புரையில்கேள்வி மன்னவனுந்தம்பி யரும்வருத்தமாறிக், காமியமென்றுரைபெறுசீர்வனத்தைநீங்கிக் கடவுண்முனிதன்னோடுங்கணத்தினேகி, நாமமதுகரதீர்த்தமுதலா வுள்ளநற்றீர்த்தமெவற்றினும்போய்நானமாடித், தாமமதிதவழ்சிகரத் திந்த்ரகீல சயிலத்தின்சுனைசெழுதண்சாரல்சார்ந்தார்.*

(இ - ள்.) மாமுனி தன் - சிறந்த உரோமச முனிவனுடைய, மொழி- வார்த்தையை, கேட்டு—, புரை இல் கேள்வி - குற்றமற்ற நூற்கேள்வியை யுடைய, மன்னவன்உம்-யுதிட்டிராசனும், தம்பியர்உம் - தம்பிமார்களும், வருத்தம் மாறி - (தம்) வருத்தந்தணிந்து,—கணத்தின் - அந்தப்போதில் தானே, காமியம் என்று உரை பெறு சீர் வனத்தை நீங்கி ஏகி - காமிய மென்று சொல்லப்படுகிற சிறந்த வனத்தை விட்டுப்போய், கடவுள் முனி தன்னோடுஉம் - தெய்வத்தன்மையையுடைய அந்த உரோமச முனிவனு டனே, நாமம் - பிரசித்தமான, மதுகரதீர்த்தம் முதல் ஆ உள்ள - மதுகர தீர்த்தம் முதலாகவுள்ள, நல் தீர்த்தம் எவற்றின்உம் - சிறந்த தீர்த்தங்க ளெல்லாவற்றிலும், போய் - சென்றடைந்து, நானம் ஆடி - ஸ்நாநஞ்செய்து, தாமம் மதி தவழ் சிகரத்து - ஒளிபொருந்திய சந்திரன் ஊர்ந்து செல்லு கின்ற சிகரத்தையுடைய, இந்த்ரகீலசயிலத்தின் - இந்திரகீலமலையின், சுனை செழு - சுனைபொருந்திய, தண் சாரல்-குளிர்ந்தசாரலை, சார்ந்தார்—.

கடவுண்முனிதன்னோடும் ஏகி என்றதனால், அம்முனிவன் இன்னது இது என்று காட்டிச் செல்லப் பாண்டவர் சென்றன ரென்பது, பெறப்படு மென்பர். லோமசமுனிவர் இந்திரன்கூறிய செய்தியைச் சொன்னபின் யுதிஷ்டிராதியரை யழைத்துக்கொண்டு தீர்த்தயாத்திரைசெய்துவருமாறு அருச்சுனன் கூறியதைத் தெரிவிக்க, லோமசர் முதலியவரோடு யுதிஷ்டிரர் தீர்த்தயாத்திரை செய்தா ரென்று வியாசபாரதம் கூறும். இந்திரநீலசயி லத்தின் என்று பிரதிபேதம். (எ)

8. *அக்கிரியின்புதுமையெலாமடைவேநோக்கி யங்குள்ளவருவிர றும்புனலுமாடித்,தக்கபுகழ்விசயனருந்தவப்புரிந்த சாரலிதுவென்று தவமுனிவன்சாற்ற,மிக்ககளிப்புவகைநிகழ்மெந்சராகி விசயனைக்கண் டனர்போலவிரும்பிக்கண்டு, தொக்கமுனிகணத்தொடும்போய்த்த சாங்கனென்னுந் தொல்லைமுனிதபோவனத்தின்சூழல்சார்ந்தார்.*

(இ - ள்.) அ கிரியின் - இந்திரகீல பருவதத்தின், புதுமை எலாம் - அதிசயங்களையெல்லாம், அடைவு - முறையாக, நோக்கி - பார்த்து, அங்கு

உள்ள - அம்மலையிலுள்ள, அருவி நறும் புனல்உம் - நீரருவியின் சிறந்த தீர்த்தங்களிலும், ஆடி - ஸ்நாநஞ்செய்து, 'தக்க புகழ் விசயன் - தகுதியான புகழையடைந்த அருச்சுனன், அருந் தவம் புரிந்த—, சாரல் - தாழ்வரை, இது—,' என்று—, தவம் முனிவன் - தவத்தையுடைய அந்த உரோமச முனிவன், சாற்ற - சொல்ல,—மிக்க களி உவகை நிகழ் நெஞ்சர் ஆகி-மிக்க பெருமகிழ்ச்சி பொருந்திய மனத்தையுடையவராய், (பாண்டவர்), விசயனை கண்டனர்போல-அருச்சுனனையே நேரிற்கண்டனர்போல, விரும்பி கண்டு-(அவ்விடத்தை) அன்புகொண்டுபார்த்து, தொக்க-(தம்முடன்) கூடியிருந்த, முனிகணத்தொடுஉம்-முனிவர் கூட்டத்துடனே, போய்—,தசாங்கன் என்னும் தொல்லை முனி-தசாங்கனென்று பேர்படைத்த பழமையான முனிவனுடைய, தபோ வனத்தின் - தவஞ்செய்யும் வனத்தின், சூழல் - பிரதேசத்தை, சார்ந்தார்—; (எ - று)

அருச்சுனன் தவஞ்செய்த இடத்தை அவனைப்போலப் பாண்டவர் கண்டன ரென்றதனால், பாண்டவர்க்கு அருச்சுனனிடமிருந்த அன்புமிகுதி விளங்கும். புதுமை-பண்பாகுபெயர். களியுவகை-ஒருபொருட்பன்மொழி. (அ)

9. அங்குள்ளதபோதனர்தம்பாதம்போற்றி யவருரைக்குமாசியும்
பெற்றப்பாலேகி,யெங்குள்ளகடவுணெடும்புனலும்யாறு மெப்புனலு
ந்தப்பாமலினிதினாடி,வங்கமெறிகடல்கடைந்துவானோர்க்கெல்லா மருந்
துவிருந்தருளியமந்தரமுங்காட்டிக்,கங்கைநதிகுதிபாயுஞ்சிகரச்சாரற்
காந்தர்ப்பமெனும்வரையுங்காட்டினனே.

(இ - ள்.) அங்குஉள்ள - அந்த இந்திரகீலமலையிலிருக்கின்ற, தபோதனர் தம் - முனிவர்களுடைய, பாதம் - பாதங்களை, போற்றி - துதித்து, அவர் உரைக்கும்-அம்முனிவா அருள்கொண்டுகூறும், ஆசிஉம் - வாழ்த்துக் களையும், பெற்று—,அப்பால்ஏகி - அப்புறம்போய், எங்கு உள்ள - சென்ற பலவிடங்களிலுமுள்ள, கடவுள் நெடும் புனல்உம் - தெய்வீகம்பொருந்திய சிறப்புப்பெற்ற அருவித்தீர்த்தங்களிலும், யாறுஉம்-நதிகளிலும், எப்புனல் உம்-(மடுமுதலாகவுள்ள) எல்லாத்தீர்த்தங்களிலும், தப்பாமல்-ஒன்றுவிடாமல்,(பாண்டவர்), இனிதின்ஆடி-இனிது ஸ்நாநஞ்செய்துநிற்க,—(உரோமச முனிவன்),வங்கம்எறி கடல் கடைந்து வானோர்க்குஎல்லாம் மருந்துவிருந்து அருளிய மந்தரம் உம் காட்டி - அலைவீசுகிற கடலைக் கடைந்து தேவர்கள்யாவர்க்கும் அமிருதத்தை விருந்துணவாகத்தந்த மந்தரமலையைக் காட்டி, (பிறகு அருச்சுனன் சுவர்க்கலோகத்திலிருந்து இறங்கப்போகின்ற), கங்கை நதி குதி பாயும் சிகரம் சாரல் காந்தர்ப்பம்எனும் வரைஉம் - கங்காநதிகுதித்துப் பாயப்பெற்ற சிகரத்தையும் தாழ்வரையையுங்கொண்ட காந்தர்ப்பமென்கின்ற மலையையும், காட்டினன்—; (எ - று.)

மேலே மந்தரமுங்காட்டி வரையுங்காட்டினனென்றுவருவதனால், இந்தப்பாண்டவர்கள் நீராடியதும் 'இது இந்தத் தீர்த்தம், இது இந்தத்தீர்த்தம்' என்று அந்தக்கடவுள்முனிவன் காட்டக் கண்ட தீர்த்தங்களிலேயேயென்

பது பெறப்படும். காட்டினவன் உரோமசனேயென்பது மேற்கவியால் விளங்கும். ஆடி = ஆட ; பிறகருத்தாவின் வினையைக்கொண்டு முடிதற்குஉரிய செயவென்னும் வாய்பாட்டு வினையெச்சமாகத் திரிக்க. கந்தமாதனவரையும் என்று பாடமிருப்பின் நலம். (கூ)

10. அந்தவுயர்கிரியினெடுஞ்சாரறோறுமருந்தவஞ்செய்முனிவரரைய டைவேகாட்டி,யிந்தவனந்தனக்கெமையாளுடையான்குன்றமீரைம் பதியோசனையென்றெடுத்துக்காட்டிக், கந்தனெனவெக்கலையும்வல் லஞானக்கடவுண்முனிவிசாலயனாலயமுங்காட்டி, யுந்துநெறிச்செங் கோலாயிதனிலோராண்டிருத்தியெனவுரோமசனுமுரைத்திட்டானே.

(இ - ள்.) அந்த உயர் கிரியின் - அந்த ஓங்கிய காந்தர்ப்பமலையின், நெடுஞ் சாரல் தோறுஉம் - நீண்ட தாழ்வரைதோறும், அருந் தவஞ் செய் - அருமையான தவத்தைச்செய்கின்ற, முனிவரரை - இருடிச் சிரேட்டரை, அடைவு காட்டி - முறையே இன்னாரின்னாரென்று தெரிவித்து, இந்த வனம் தனக்கு-இந்தத் தபோவனத்துக்கு, எமை ஆள்உடையான் குன்றம் - எம்மையடிமையாகவுடைய சிவபெருமானுடைய கைலாசமலை, ஈர் ஐம்பது யோசனை என்று எடுத்து காட்டி - நூறுயோசனை தூரத்திலுள்ளதாகும் என்று எடுத்துச்சொல்லி,—கந்தன் என எ கலைஉம் வல்ல ஞானம் கடவுள் முனி - முருகக்கடவுளென்று சொல்லும்படி எல்லா வித்தைகளிலும் வல்லவனை பேரறிவுபடைத்த தெய்வவிருடியாகிய, விசாலயன் - விசாலயனென்ற முனிவனின், ஆலயம்உம் - இருப்பிடத்தையும், காட்டி—,உரோமசன்உம்—, நெறி உந்து - நன்னெறியிற் செலுத்துகின்ற, செங்கோலாய் - செங்கோலையுடையவனே ! இதனில் - இந்தக் காந்தர்ப்பமலையிலே, ஓர் ஆண்டு இருத்தி என - ஒருவருஷகாலம் தங்கியிருப்பாயென்று, உரைத்திட்டான் - சொன்னான் ; (எ - று.) (க0)

11.—பாண்டவர் காந்தர்ப்பகிரியின்வனத்திலிருக்கையில் பொன்மலரொன்றுவிழ்ந்ததைக் கையிற்கொண்டு திரௌபதி சிந்தித்தல்.

அம்முனிவன்மொழிப்படியேவரம்பில்கேள்வி யறன்மகனுந்த ம்பியருமரிவையோடு,மெம்முகமுந்தம்முகமாவிலையுங்காயுமினியகனி யுடனருந்தியிருக்குநாளின், மைம்முகில்வாகனன்கனகமுடிமேலம் பொன் வனசமலரொன்றுதழன்மயின்முன்வீழச், செம்மலரைச்செ ங்கண்மலர்தன்னானோக்கிச் செய்யமலர்கரத்தேந்திச்சிந்தித்தாளே.

(இ - ள்.) அ முனிவன் மொழி படியே - அந்தஉரோமசமுனிவனது வார்த்தையின்படியே, வரம்பு இல் கேள்வி அறன்மகன்உம் - அளவில்லாத நூற்கேள்விகளையுடைய தருமபுத்திரனும், தம்பியர்உம் - வீமன் முதலியோரும், அரிவையோடுஉம் - திரௌபதியுடனே, எ முகம்உம் தம் முகம் ஆ - அக்காட்டினிடம் முழுவதும் தமதுசொந்தவிடத்தை யொத்துத் தம் வயத்திலிருக்க, இலைஉம் காய்உம் இனிய கனியுடன் அருந்தி - இலைகளையுங் காய்களையும் சுவையினியபழங்களையும் உண்டு, இருக்கும் நாளில் -

(அவ்வனத்தில்) வசித்திருக்கும்நாட்களிலொருநாள்,—மை முகில் வாகனன் கனகம் முடிமேல் - கருநிறமுடைய மேகத்தைவாகனமாகவுடைய இந்திரனது பொன்னாலாகியகிரீடத்தையணிந்த சிரசின்மேலிருத்தற்குஉரிய, அம் பொன் வனசம் மலர் ஒன்று - அழகிய பொன்மயமானதொரு தாமரைப்பூ, தழல் மயில் முன்-நெருப்பினின்றவதரித்த மயில்போலுஞ்சாயலையுடைய திரௌபதியின் எதிரில், வீழ - வீழ்ந்திட,—(அவள்), செம் மலரை-சிவந்த அந்தப்பூவை, செம் கண் மலர் தன்னால்-தனது செந்தாமரைமலர்போன்ற கண்களினால், நோக்கி - பார்த்து, செய்ய மலர் கரத்து வந்தி - சிவந்த தாமரை மலர்போன்ற (தன்) கையிலே யெடுத்துக்கொண்டு, சிந்தித்தாள் - (அதைக் குறித்து வியப்புடன பின்வருமாறு) எண்ணுபவளானாள் ; (எ - று.)

இந்திரனுக்கு மேகத்தை வாகனமாகக் கூறுதல், புராணங்களின் கொள்கை. முடிஎன்பது, மயிர்முடியப்படுவதென்னுங் காரணம்பற்றித் தலைக்கும், அதி லணியப்படுதல்பற்றி ஆகுபெயராய்க் கிரீடத்துக்கும் பெயராம். இங்கே, முடி - கிரீடம். வனசம் - வநஜம் ; நீரிற்பிறப்பதென்று காரணக்குறி. வியாசபாரதத்தில் இம்மலரைக் குறிக்குமிடத்து 'ஸௌகந்திகம்' என்றும், 'பத்மம்' என்றும் கூறப்பட்டுள்ளது : இத்தொடர்கட்கு - தாமரையினத்தைச் சேர்ந்த செங்கழுநீர்மலரென்று ஒருசாரரும், நல்லமணமுடைய தாமரை யென்று மற்றொருசாரரும் பொருள் கூறுகின்றனர் . ஆதலால், இப்பாடலிலுள்ள வனசம் என்பதற்குத் தாமரையென்று பிரசித்தமாயுள்ள பொருளை விட்டு, 124, 125-ஆம் பாடல்களால் முறையே "பொற்றரு நண்பின் வழங்கி" என்றும், "அண்ணற் றருப்பெற்றபின்" என்றும் வருவதற்கு ஏற்ப, 'வனசம் - வனத்திலுண்டாகும் கோட்டுப்பூ' என்று பொருளுரைத்தல் சிறவாதெனத் தோன்றுகின்றது ; இந்நூலில் 84-ஆம் பாடலில் கந்தவான் பொழிலும் நன்னீர்க்கடிமலர்த்தடமும்" என்று வருவதும், 138 - ஆம் பாடலில் " வாவிச் செழுந்தாமமலர்நல்கி " என்றுவருவதும் 'நீர்ப்பூ' என்று கொள்ளவேண்டு மென்பதனையே வற்புறுத்தும்: ஆதலால், 124, 125 - ஆம் பாடல்களிலுள்ள தரு என்பது - மலர்க்கொடியையே காட்டு மென்று கொள்ளுதலே ஏற்கு மென்க. கனகமுடிமேல் வனசமலர் என்பதற்கு - சுவர்க்கலோகத்திலுள்ள பூப்போன்ற பூஎன்று கருத்துக்கொள்ளினுமாம். மயில் - ஆகுபெயர். முன் - இடமுன். செய்ய-குறிப்புப் பெயரெச்சம். (கக)

12.—அம்மலரைக்கண்டுமனத்தினுற்போற்றிய திரௌபதி வீமனுக்குக்காட்டிச் சொல்லலுறுதல்.

இந்தமலருலகனைத்துமின்றகோல வெழின்மலரோவிரவிதிருக்கரத்தில்வைகு,மந்தமலரோவமுதிற்பிறந்தபாவை யமர்ந்துறையுமணிமலரோவவனிதன்னி, லெந்தமலருங்கருகக்கமழாநின்ற தெங்கெங்குமிதன்மணமேயென்றுபோற்றிக், கந்தவகன்மைந்தனுக்குக்கனலோனல்குங் கனங்குழைசென் றுவகையுடன்காட்டிச்சொல்வாள்.

(இ - ள்.) 'இந்த மலர்—, உலகு அனைத்தும் ஈன்ற கோலம் எழில் மலர் ஓ - உலகமுழுவதையும் உண்டாக்கிய மிகஅழகிய (திருமாலின்நாபித்) தாமரைமலரோ? இரவி திரு கரத்தில் வைகும் அந்த மலர் ஓ - சூரியனுடைய கையிலிருக்கின்ற அந்த மலர்தானோ? அமுதின் பிறந்த பாவை அமர்ந்து உறையும் அணி மலர் ஓ - திருப்பாற்கடலில்தோன்றிய திருமகள் மனம்விரும்பிவாழ்கின்ற அழகிய அந்தமலர்தானோ? அவனி தன்னில் - பூமியிலேயுள்ள, எந்த மலர்உம் - எந்தத் தாமரைப்பூவும், கருக - (தனக்கு முன்னே)கருகித் தோன்றும்படி, எங்கு எங்குஉம்-எல்லாவிடத்தும், இதன் மணம் வ கமழாநின்றது - இந்தமலரின் நறுமணமே வீசாநின்றது,' என்று போற்றி - என்று (அதன் நறுமணங்குறித்துச் சிந்தித்துக்கொண்டாடி,— கனலோன் நல்கும் கனம் குழை - அக்கினியினால் தரப்பெற்றவளும் பொற்குழையுடையாளுமான திரௌபதி,—உவகையுடன் சென்று - (அபூர்வமான மலரைக்கண்டதனாலான) வியப்புடனேபோய், கந்தவகன்மைந்தனுக்கு - காற்றின் குமாரனான வீமசேனனுக்கு, காட்டி - (அம்மலரைக்) காட்டி, சொல்வாள் - (பின்வருமாறு) கூறுபவளானாள்; (எ - று.)— அதனை மேற்கவியிற் காண்க.

சிறப்புற்ற திருமாலினுந்தித்தாமரை செங்கதிரோன் கரத்துத்தாமரை திருமகளுறையுந்தாமரை என்ற இவைகள் தெய்வத்தாமரைமலர்களாதலால், திரௌபதி தன்முன்வீழ்ந்த வனசமலரை, அவற்றோடொக்குமென்றுகருதினாள். 'எந்த மலருங்கருக' என்றதனால், இந்தமலரின் நறுமணத்துக்குமுன் மற்றைமலரின்மணம் கருகித்தோன்றுமென்று இலக்கணவழக்காகக்கூறியதென்க: இனி, அம்மலரின் செந்நிறத்தைக் குறித்தபடியுமாம். அமுது - பாற்கடலுக்கு, இலக்கணை. கந்தவகன் - நறுமணத்தைத் தாங்குபவன் எனக் காற்றுக்குக் காரணக்குறி. கனங்குழை - அன்மொழித் தொகை (கஉ)

13 — திரௌபதி இதையொத்தமலரைத்தருகவென வீமன்கையிற்கொடுக்க, அவன் அதுகுறித்து உரோமசனை வினவுதல்.

இம்மலருக்கொருமலருமவனிதன்னி லெதிரில்லையென் றிதழாயிரத்தின்மிக்க, வம்மலரைக்கைம்மலரிற்கொடுத்தி தொக்கு மணிமலர்நீ யெனக்கருளவேண்டுமென்னச், செம்மலையிற்றிகழ்சிகரத்திண்டோள்வீமன் றெய்வமுனிபுங்கவன்றன்றிருத்தாள்போற்றி, மெய்ம்மலரைத்திருமுன்புவைத்துநின்று வினவினனவனுமெதிர்விளம்புவானே.

(இ - ள்) இ மலருக்கு ஒரு மலர்உம் அவனிதன்னில் எதிர் இல்லை என்று - 'இந்தப்பூவுக்கு ஒருபூவும் பூமியிலே ஒப்பானது இல்லை' என்றுகூறி, இதழ் ஆயிரத்தின் மிக்க அ மலரை கை மலரில் கொடுத்து - ஆயிரமிதழ்களோடுகூடிச் சிறந்த அந்தப்பூவை (வீமசேனனது) செந்தாமரைமலர்போலுங் கையிலே கொடுத்து, ஈது ஒக்கும் அணி மலர் நீ எனக்கு அருளவேண்டும் என்ன - 'இம்மலரையொத்த அழகிய மலரை நீ எனக்குக் கருணைசெய்து

(அவ்வனத்தில்) வசித்திருக்கும்நாட்களிலொருநாள்,—மை முகில் வாகனன் கனகம் முடிமேல் - கருநிறமுடைய மேகத்தைவாகனமாகவுடைய இந்திர னது பொன்னாலாகியகிரீடத்தையணிந்த சிரசின்மேலிருத்தற்குரிய, அம் பொன் வனசம் மலர் ஒன்று - அழகிய பொன்மயமானதொரு தாமரைப்பூ, தழல் மயில் முன்-நெருப்பினின்றவதரித்த மயில்போலுஞ்சாயலையுடைய திரௌபதியின் எதிரில், வீழ-வீழ்ந்திட,—(அவள்), செம் மலரை-சிவந்த அந் தப்பூவை, செம் கண் மலர் தன்னால்-தனது செந்தாமரைமலர்போன்ற கண் களினால், நோக்கி - பார்த்து, செய்ய மலர் கரத்து ஏந்தி - சிவந்த தாமரை மலர்போன்ற (தன்) கையிலே யெடுத்துக்கொண்டு, சிந்தித்தாள் - (அதைக் குறித்து வியப்புடனே பின்வருமாறு) எண்ணுபவளானாள் ; (எ - று.)

இந்திரனுக்கு மேகத்தை வாகனமாகக் கூறுதல், புராணங்களின் கொள்கை. முடி என்பது, மயிர்முடியப்படுவதென்னுங் காரணம்பற்றித் தலைக்கும், அதி லணியப்படுதல்பற்றி ஆகுபெயராய்க் கிரீடத்துக்கும் பெய ராம். இங்கே, முடி - கிரீடம். வனசம் - வநஜம் ; நீரிற்பிறப்பதென்று கார ணக்குறி. வியாசபாரதத்தில் இம்மலரைக் குறிக்குமிடத்து 'ஸௌகந் திகம்' என்றும், 'பத்மம்' என்றும் கூறப்பட்டுள்ளது : இத்தொடர் கட்கு - தாமரையினத்தைச் சேர்ந்த செங்கழுநீர்மலரென்று ஒருசாராரும், நல்லமணமுடைய தாமரை யென்று மற்றொருசாராரும் பொருள் கூறுகின் றனர் ஆதலால், இப்பாடலிலுள்ள வனசம் என்பதற்குத் தாமரையென்று பிரசித்தமாயுள்ள பொருளை விட்டு, 124, 125-ஆம் பாடல்களால் முறையே "பொற்றரு நண்பின் வழங்கி" என்றும், "அண்ணற் றருப்பெற்றபின்" என்றும் வருவதற்கு ஏற்ப, 'வனசம் - வனத்திலுண்டாகும் கோட்டுப்பூ' என்று பொருளுரைத்தல் சிறவாதெனத் தோன்றுகின்றது ; இந்நூலில் 84-ஆம் பாடலில் கந்தவான் பொழிலும் நன்னீர்க்கடிமலர்த்தடமும்" என்று வருவதும், 138 - ஆம் பாடலில் " வாவிச் செழுந்தாமமலர்நல்கி " என்றுவருவதும் 'நீர்ப்பூ' என்று கொள்ளவேண்டுமென்பதனையே வற்பு றுத்தும்: ஆதலால், 124, 125 - ஆம் பாடல்களிலுள்ள தரு என்பது - மலர்க்கொடியையே காட்டுமென்று கொள்ளுதலே ஏற்குமென்க. கனகமுடிமேல் வனசமலர் என்பதற்கு - சுவர்க்கலோகத்திலுள்ள பூப் போன்ற பூவென்று கருத்துக்கொள்ளினுமாம். மயில் - ஆகுபெயர். முன்- இடமுன். செய்ய-குறிப்புப் பெயரெச்சம். (கக)

12.—அம்மலரைக்கண்டுமனத்தினுற்போற்றிய திரௌபதி வீமனுக்குக்காட்டிச் சொல்லலுறுதல்.

இந்தமலருலகனைத்துமின்றகோல வெழின்மலரோவிரவிதிருக்கர த்தில்வைகு,மந்தமலரோவமுதிற்பிறந்தபாவை யமர்ந்துறையுமணிமல ரோவவனிதன்னி, லெந்தமலருங்கருகக்கமழாநின்ற தெங்கெங்குமி தன்மணமேயென்றுபோற்றிக், கந்தவகன்மைந்தனுக்குக்கனலோ னல்குங் கனங்குழைசென்றுவகையுடன்காட்டிச்சொல்வாள்.

(இ - ள்.) 'இந்த மலர்—, உலகு அனைத்தும் ஈன்ற கோலம் எழில் மலர் ஓ - உலகமுழுவதையும் உண்டாக்கிய மிகஅழகிய (திருமாலின்நாபித்) தாமரைமலரோ? இரவி திரு கரத்தில் வைகும் அந்த மலர் ஓ - சூரியனுடைய கையிலிருக்கின்ற அந்த மலர்தானோ? அமுதின் பிறந்த பாவை அமர்ந்து உறையும் அணி மலர் ஓ - திருப்பாற்கடலில்தோன்றிய திருமகள் மனம்விரும்பிவாழ்கின்ற அழகிய அந்தமலர்தானோ? அவனி தன்னில் - பூமியிலேயுள்ள, எந்த மலரும் - எந்தத் தாமரைப்பூவும், கருக - (தனக்கு முன்னே) கருகித் தோன்றும்படி, எங்கு எங்கும்-எல்லாவிடத்தும், இதன் மணம் கமழாநின்றது - இந்தமலரின் நறுமணமே வீசாநின்றது,' என்று போற்றி - என்று (அதன் நறுமணங்குறித்துச் சிந்தித்துக்கொண்டாடி,— கனலோன் நல்கும் கனம் குழை - அக்கினியினால் தரப்பெற்றவளும் பொற் குழையுடையாளுமான திரௌபதி,—உவகையுடன் சென்று-(அபூர்வமான மலரைக்கண்ட தனாலான) வியப்புடனே போய், கந்தவகன்மைந்தனுக்கு-காற்றின் குமாரனான வீமசேனனுக்கு, காட்டி - (அம்மலரைக்) காட்டி, சொல்வாள் - (பின்வருமாறு) கூறுபவளானாள்; (எ-று.)— அதனை மேற்கவியிற் காண்க.

சிறப்புற்ற திருமாலினுந்தித்தாமரை செங்கதிரோன் கரத்துத்தாமரை திருமகளுறையுந்தாமரை என்ற இவைகள் தெய்வத்தாமரைமலர்களாதலால், திரௌபதி தன்முன்வீழ்ந்த வனசமலரை, அவற்றுளொன்றாக்குமென்றுகருதினாள். 'எந்த மலருங்கருக' என்றதனால், இந்தமலரின் நறுமணத்துக்குமுன் மற்றைமலரின்மணம் கருகித்தோன்றுமென்று இலக்கணவழக்காகக்கூறியதென்க: இனி, அம்மலரின் செந்நிறத்தைக் குறித்தபடியுமாம். அமுது-பாற்கடலுக்கு, இலக்கணை. கந்தவஹன்-நறுமணத்தைத் தாங்குபவன் எனக் காற்றுக்குக் காரணக்குறி. கனங்குழை - அன்மொழித் தொகை (கஉ)

13.—திரௌபதி இதையொத்தமலரைத்தருகவென வீமன்கையிற்கொடுக்க, அவன் அதுதுதித்து உரோமசனை வினவுதல்.

இம்மலருக்கொருமலருமவனிதன்னி லெதிரில்லையென்றிதழாயி
ரத்தின்மிக்க,வம்மலரைக்கைம்மலரிற்கொடுத்தீதொக்கு மணிமலர்நீ
யெனக்கருளவேண்டுமென்னச்,செம்மலையிற்றிகழ்கரத்திண்டோ
ள்வீமன் றெய்வமுனிபுங்கவன்றன்றிருத்தாள்போற்றி, மெய்ம்மல
ரைத்திருமுன்புவைத்துநின்று வினவினனவனுமெதிர்விளம்புவானே.

(இ - ள்) இ மலருக்கு ஒரு மலரும் அவனிதன்னில் எதிர் இல்லை என்று - 'இந்தப்பூவுக்கு ஒருபூவும் பூமியிலே ஒப்பானது இல்லை' என்றுகூறி, இதழ் ஆயிரத்தின் மிக்க அ மலரை கை மலரில் கொடுத்து - ஆயிரமிதழ்களோடுகூடிச் சிறந்த அந்தப்பூவை (வீமசேனனது) செந்தாமரைமலர்போலுங் கையிலே கொடுத்து, ஈது ஒக்கும் அணி மலர் நீ எனக்கு அருளவேண்டும் என்ன - 'இம்மலரையொத்த அழகிய மலரை நீ எனக்குக் கருணைசெய்து

கொடுக்கவேண்டும்' என்று (திரௌபதி) பிரார்த்திக்க,—செம் மலையின் திகழ் சிகரம் திண் தோள் வீமன் - அழகியதொருமலையிலே விளங்குகிற கொடிமுடிபோன்று வலிய தோள்களையுடைய வீமசேனன், தெய்வம் முனி புங்கவன்தன் திரு தாள் போற்றி - தெய்வத்தன்மையையுடைய அந்த உரோமசனென்கிற இருடிச்சிரேஷ்டனது திருவடிகளை வணங்கி, மெய் மலரை திரு முன்பு வைத்து நின்று-உண்மையான அந்தமலரை (அம்முனி வனது)சந்நிதானத்திலேவைத்துவிட்டு நின்றுகொண்டு, வினவினன்-('இதன் வரலாறு யாது?' என) அவனைக்கேட்டான்; அவன் உம் எதிர் விளம்புவான்- அம்முனிவனும் (அவ்வினாவுக்கு) விடைகூறுபவனானான்; (எ-று.)—அதனை மேலே காண்க.

உலகமெங்கும் அகப்படாத இந்தமலரின்சிறப்பை நோக்குமிடத்து 'இது மாயையினாலாகியமலரோ?' என்று ஐயங்கொள்ள இடமுண்டாத லின், அதனையொழித்தற்கு 'மெய்ம்மலர்' என்றான்; மலரென்றால் இதுவே மலர், மற்றையவை மலரல்லவென்னும் பொருளும் இத்தொடரில் தோன்றும். அம்மலர் எனஎடுத்து, அழகியபூ வென்றுங் கொள்ளலு மாம். செம்மலையென்பதை - செம்பொன்மலையெனக் கொள்வாருமுளர். அவனி - அவநீ: மன்னவராற்பாதுகாக்கப்படுவதென்று காரணப்பொருள் படும் வடசொல். கைம் மலர்-முன்பின்னாகத்தொக்க உவமைத்தொகை. புஙக வன்என்பதற்கு - ஆண்பசு [எருது] போன்றவனென்றுபொருள்; சிங்கம், புலி, யானை, காளை இச்சொற்கள் மனிதனுக்குவரும்போது சிறப்புப்பொ ருளை யுணர்த்துதல், மரபு. (கங)

14.—உரோமசன் அம்மலரைப்பற்றிக் கூறுதல்.

என்பலவுமியாமுரைப்பதிந்தப்பூவி னியல்பினையும்பெருமையை யுமியக்கர்தங்கண், மன்பதியிலுளதன்றிவரம்பிலாத வானுலகிலுள தென்னின்மற்றுமுண்டோ,வுன்பிறருக்கிதுகோடற்கெளிதோமாய னும்பர்பதிபுகுந்தொருபைந்தோகைக்கீந்த,பின்பிதனைக்கண்டறிவா ரில்லையென்று பேசினன்யாவரொடும்பேச்சிலாதான்.

(இ-ள்.) யாம்—, இந்த பூவின்—,இயல்பினையும்—,பெருமையையும்—, பலஉம் - பலபடியாக, என்உரைப்பது—? (இப்பூ),— இயக்கர்தங்கள் மன் பதியில் - யட்சர்கட்குத்தலைவனான குபேரனுடையநகரான அளகையிலே, உளது—; அன்றி - அல்லாமல், வரம்பு இலாத - (சிறந்தபொருள்களில் இன்னதுதான்உள்ளது என்று) வரையறுத்துச் சொல்லமுடியாத, வான் உலகில் - தேவலோகத்தில், உளது-கிடைப்பதாகும்; என்னின் - இவ்வாறு னால், மற்றுஉம் உண்டுஓ - மேலும் சொல்லவேண்டுவது உண்டோ? உன் பிறருக்கு - உன்னைக்காட்டிலும் வேறுபட்டவர்க்கு, இது - இம்மலர், கோடற்கு - கொண்டுவருதற்கு, எளிதுஓ - எளிதாகுமோ? மாயன் - ஸ்ரீக்ருஷ்ணபகவான், உம்பர்பதி புகுந்து - தேவலோகத்திலேபுகுந்து, ஒரு பைந் தோகைக்கு - ஒப்பற்ற இளைய மயில்போன்ற சாயலையுடையளான

சத்தியபாமைக்கு, ஈந்த-(பாரிசாதமரத்தையே)தந்த, பின்பு—,இதனை-இது போன்ற சிறந்த புஷ்பத்தை, கண்டுஅறிவார் இல்லை—, என்று—, பேசினான் - கூறினான்: (யாவனென்னின்),— யாவரொடுஉம் பேச்சு இலாதான் - எவரோடும் பேசுதலில்லாத உரோமசமுனிவன் ; (எ - று.)

இதனால், இந்தப்பூ அளகையிலுள்ளதென்றும், உன்னுற்கொள்ளமுடியுமென்றும், இது வானுலகத்திலுள்ள தெய்வப்பூவோடொப்பதுஎன்றும் கூறியவாறாயிற்று. முதலில் 'இயக்கர்தங்கள்பதியி லுளது' என்றுகூறி, பிறகு 'வானுலகிலுள்ளது' என்று கூறியதனால், கிடைப்பதற்குஅரிய இந்தப் பூப்போன்ற சிறந்தமலர் வானுலகிலுள்ளது என்று கருத்துக்கொள்ள வேண்டுமே யன்றி, இதுவே வானுலகத்திலுள்ளதுஎன்று கொள்ளுதல் இயலாது.

இங்ஙன்சிறந்த வானுலகத்துமலரை ஸ்ரீக்ருஷ்ணபகவான் சத்தியபாமைக்குத் தந்ததை மூன்றுமடி கூறிற்று: மாயவன் மலரைப்பைந்தோகைக்கீந்த சரிதை வருமாறு:—கண்ணன் நரகாசுரனையழித்தபின்பு அவனால் முன்புகவரப்பட்ட (இந்திரன்தாயான அதிதிதேவியின்) குண்டலங்களை அவ்வதிதிதேவிக்குக் கொடுக்கும்பொருட்டுச் சத்தியபாமையுடனே கருடன்தோள்மேலேறித் தேவலோகத்துக்குச்செல்ல, அங்கு இந்திராணி சத்தியபாமைக்குச் சகலவுபசாரங்களையும் செய்தும் தேவர்க்கேயுரியதென்று தான்சூடியிருந்த பாரிசாதப்பூவைப்போன்ற பூவைக் கொடாமலிருக்க, சத்தியபாமை அந்தப்பூவில் விருப்புற்றவளாய், 'இவ்வகைமலரைத் தரும்இந்தப்பாரிசாதத்தருவைத் துவாரகைக்குக் கொண்டுபோகவேண்டும்' என்ன, ஸ்ரீகிருஷ்ணன் அந்தத்தருவை வேரொடுபெயர்த்துக் கருடன் தோள்மேல்வைத்தருள, அப்போது இந்திராணி தூண்டிவிட்டதனால் வந்து மறித்துப்போர்செய்த இந்திரனைச் சகலதேவசைனியங்களுடன் சங்காரதத்தாலேபங்கப்படுத்திப் பின்பு பாரிஜாதமரத்தைத் துவாரகைக்குக்கொண்டு வந்து சத்தியபாமைவீட்டுப்புறங்கடைத் தோட்டத்தில் நாட்டியருளினனென்பது. (கச)

15.—உரோமசமுனிவனால் அளகையிலுள்ளதாக வறிந்து வீமன் அம்மலரைக் கொணருமாறு செல்லுதல்.

இயக்கர்பதிதனிலுளதென் றிசைத்தமாற்ற மின்புறக்கேட்டொருகாலுமீறிலாத,வயக்கொடுவெஞ்சராசனமும்வன்போர்வாகை மறத்தண்டுங்கரத்தேந்திமடந்தைநெஞ்சிற்,றுயக்கமறவிக்கணத்திற்றெய்வபோக சுரபிமலரளித்திடுவனென் றுசொல்லிச், சயக்கரடமுறுதறுகட்சயிலமன்ன சதாகதிமைந்தனுமிமைப்பிற்றனிச்சென்றானே.

(இ - ள்.) சயம்-வெற்றியையும், கரடம்-மதத்தையும், உறு தறுகண் - மிக்க அஞ்சாமையையுமுடைய, சயிலம் - மலைபோன்ற யானையை, அன்ன - ஒத்த, சதாகதி மைந்தன்உம்-வாயுகுமாரனான வீமனும்,—இயக்கர்பதிதனில் உளது என்று இசைத்த மாற்றம் - யக்ஷர்களுடையஊராகிய அளகாபட்டு

ணத்தில் (இம்மலர்) இருக்கிறதென்று (உரோமசமுனிவன்) சொன்னவார்த்தையை, இன்பு உற கேட்டு - மகிழ்ச்சிமிகக் கேட்டு, ஒரு காலும் ஈறு இலாத - ஒருபொழுதும் அழிதலில்லாத, வய கொடு வெம் சராசனமும் - வலிமையையும் மிக்க கொடுமையையுமுடைய வில்லையும், வல் போர் வாகை - வலிய போரில் வெற்றிமாலை சூடுதற்குரிய, மறம் தண்டும் - வலிமையையுடைய கதாயுதத்தையும், கரத்து ஏந்தி - கைகளிலே எடுத்துக்கொண்டு, மடந்தை நெஞ்சில் துயக்கம் அற - மனைவியான திரௌபதியினது மனத்திலேயுள்ள தளர்ச்சி யொழியும்படி, தெய்வம் போகம் சுரபி மலர் இ கணத்தில் அளித்திடுவன் என்று சொல்லி - 'தேவர்கள் அநுபவிப்பதற்குரிய பரிமளத்தையுடைய இதுபோன்ற பூவை இந்தக் கணப்பொழுதிலேயே (சென்று)கொணர்ந்துகொடுப்பேன்'என்றுசொல்லி, இமைப்பின் - ஒருமாத்திரைப்பொழுதிலே, தனி - தனியாக, சென்றான் - புறப்பட்டுப்போனான்.

முனிவனது வார்த்தையைக்கேட்டதும் வீமன் எளிதில் அளகாபுரிக்குப்போய் அவ்வகைமலரைக் கொண்டுவந்து கொடுக்கலாமென்று கருதி மகிழ்ந்ததனால், 'இன்புறக்கேட்டு' என்றார். வீமன் கதைக்குச் சத்துருகாதினி என்றுபெயர்; பகைவரைக் கொல்வது என்று பொருளாம். மடந்தை - பெண் என்றமாத்திரையாய் நின்றது; இப்பருவத்துக்கு வயதெல்லை - பதினான்குமுதற் பத்தொன்பதளவு மென்க. சராசனம் = சர ஆஸநம்: அம்புகளைத் தள்ளுவதென்று அவயவப்பொருள்படும். தைவபோகஸுரபி என்ற வடசொற்றொடர், திரிந்துவந்தது. சயம் - என்பதை ஜயமென்பதன் திரிபாகக் கொள்ளாமல், கயமென்றவடசொல்லின் திரிபுஎனக் கொண்டால், (துதிக்) கை என்று பொருளாம். வலிமையும் பருமையும் கம்பீரமான தோற்றமும் மதநீருருவிபெருகுதலும் அழித்தற்கருமையும்பற்றி, யானைக்கு மலையுவமை. யானையை 'சயக்கரடமுறுதறுகட் சயிலம்' என்றது - வெளிப்படை; பிறநூறிப்பின் பாற்பாடும். ஸதாகதி என்னும் வடசொல்லுக்கு - எப்பொழுதுஞ் சஞ்சரித்தலுடையவனென்பது பொருள்; இங்கே வீமனை 'சதாகதிமைந்தன்' என்றபெயராற் கூறினது - "பிதுஸ் ஸுதகுணம் புத்ர:" என்றவாறு தந்தையாகிய வாயுவினும் பலமடங்கு அதிகமாக விரைந்து நடந்துசெல்லும் வல்லமையுள்ளான் மைந்தனை வீமனென்பதற்கு: கருத்துடையடைகோளி. தனிச்சென்றானென்றதனால், இவன் அசகாயசூரனென்பது விளங்கும். கொடுவெம் - ஒருபொருட்பன்மொழி. (கடு)

16.—வீமன் விரைந்துசென்றதன் வருணனை.

கைக்காற்றுந்தொடைக்காற்றுமூச்சுக்காற்றுங் கனகமணிவரை
போலக்கவின்கொள்சோறு,மெய்க்காற்றும்பரந்தெழுந்துவனத்திலுள்ள வெற்புநெடுந்தருவனைத்துமொடிந்துவீழ, வெக்காற்றுமுடன்றெழுந்தவுகாந்தகால பெனச்சென்றானினவனிகளெண்ணில்கோடி, செய்க்காற்றுஞ்செழுந்தரளநிலவுவீசச் சேதாம்பல்பகன்மலருஞ் செல்வநாடன்.

(இ - ள்.) செய்க்கு - கழனிகளிலே, எண் இல் கோடி - அளவில்லாத [அநேக] கோடிக்கணக்காகிய, இனம் வளைகள் - கூட்டமாகியசங்குகளும், ஆற்றும் செழு தரளம் - (அவைகளாற்பெறப்பட்ட) மிகுந்த பெரிய முத்துக்களும், நிலவு வீச - சந்திரகாந்திபோன்ற குளிர்ந்தவெள்ளொளியை வீசுதலால், சேது ஆம்பல் பகல் மலரும் - (அதனைச் சந்திரனொளியென்றே கருதி மயங்கிச்) செவ்வாம்பற்பூக்கள் (உண்மையானசந்திரனொளியில்லாத) பகற்பொழுதிலேயே மலர்தற்கிடமான, செல்வம் நாடன் - (நிலவளம் நீர்வளம் முதலிய பலவளங்களையுமுடைமையால்) மிக்கசெல்வத்துக்குக்காரணமான குருநாட்டையுடையவீமசேனன்,—கை காற்றும் - கைகள்வீசுதலினாலுண்டாகிற காற்றும், தொடை காற்றும் - தொடைகள்வீசுதலினாலுண்டாகிற காற்றும், மூச்சு காற்றும் - பெருமூச்சுவிடுகிறதினாலுண்டாகிற காற்றும், கனகம் மணி வரை போல கவின் கொள் சோதி மெய் காற்றும் - பொன்மயமான அழகிய மகாமேருமலைபோல அழகுபொருந்திய ஒளியையுடைய உடம்பு அசைவதனாலுண்டாகிய காற்றும், (ஆகிய இவையெல்லாம்), பரந்து எழுந்து-பரவியெழுவதனால், வனத்தில் உள்ள வெற்பு நெடுந் தரு அனைத்தும் ஒடிந்து வீழ - (அவன்செல்லும்வழியிற்) காடுகளிலுள்ள மலைகளும் உயர்ந்த மரங்களும் ஆகியஎல்லாம் முறிந்துவிழும்படியாகவும்,—எ காற்றும் உடன்று எழுந்த உகாந்தகாலம் என - (அதனைக்கண்டு எல்லோரும்) எல்லாக்காற்றுக்களும் மோதியெழப்பெறுகிற பிரளயகாலம் இது என்று சொல்லும்படியாகவும், சென்றான் - (வடதிசையிற்) போனான்; (எ - று.)

முதலிரண்டடிகளால், வீமசேனனது அளவில்லாதவலிமை விளங்குகின்றது. 'கனகமணிவரைபோல' என்ற உபமானத்தால், வீமனதுநிறம் பொன்னிறமென்பது அறிக. காற்றும் என்றதை - பலதிசைக்காற்றுக்களாகக்கொள்க. சருவசங்காரகாலத்தில் ஒருசேரப் பலகாலம் பெருங்காற்றடிக்க, அதனால் அனேகஉயிர்கள் அழியுமென்பது, புராணங்களின்கொள்கை. செய் - கழனி யென்னும்பொருளதாதலை 'நன்செய்', 'புன்செய்' என வழக்கிலும் காண்க. மிகுந்த நீர்வளமுள்ள இடங்களில் தங்கும்படியானசங்குகளும் ஆம்பல்களும் கழனிகளிலேயுள்ளனவாகக்கூறினது, அந்நாட்டின் நீர்வளத்தை உணர்த்துதற்கென்க. சங்கு, முத்துப்பிறக்குமிடங்களில் ஒன்று. சந்திரனைக் கண்டமாத்திரத்தில் மலருந்தன்மையுடைய ஆம்பன் மலர்கள் வெள்ளியசங்குகளையும் முத்துக்களையும் பார்த்துச் சந்திரனொளியெனமயங்கினவாகக் கூறினது, மயக்கவணி. வனவாசஞ்செய்யும்வீமனை 'செல்வநாடன்' என்றது, இனித் துரியோதனாதியர் நூற்றுவரையுங் கொல்லும் இவன் அவர்களதுநாடு முழுவதுக்கும் உரியவனென்னுங் கருத்தால்.

17.—வீமன் விரைந்துசென்று காஞ்சனவனத்தையுங் கடந்திடுதல்.

இலங்கைநகர்தன்னில்விறலிராமதூத னிகலரக்கன்சோலையெலாமிறுத்தவாபோ, லிலங்குதுங்கவரைகுதுங்கவனத்தி லுள்ள நெடுந்தருக்கள்யாவையும்வேருடனேராக்கி, விலங்கினொடுபுள்ளினமுழுமுடை

யத்தாக்கி மெய்ந்நடுங்கித்தடுமாறிவெம்பியுள்ளங்,கலங்கிவிழக்கனம
திர்வபோலவார்த்துக் காஞ்சனப்பேரெழில்வனமுங்கடந்திட்டானே.

(இ - ள்.) இலங்கை நகர் தன்னில் - இலங்காபுரியிலே, விறல் இராம தூதன் - வெற்றிபொருந்திய ராமதூதனாகிய அநுமான், இகல் அரக்கன் சோலை எலாம் - மாறுபாட்டையுடைய அரக்கனான இராவணனுடைய (அசோகவனிகையென்ற)சோலை முழுவதையும், இறுத்த ஆ போல்-முறித்த விதம்போல,—நிலம் குலுங்க - பூமி அசையவும், வரை குலுங்க-மலைசலிக்கவும், வனத்தின் உள்ள நெடுந் தருக்கள் யாவைஉம் - காட்டிலுள்ள பெரிய மரங்கள் எல்லாவற்றையும், வேருடன்—, நேர் ஆக்கி - அழித்து,—விலங்கினொடு - மிருகங்களினுடனே, புள் இனம்உம் - பறவைக்கூட்டங்களும், உடைய - அழியும்படி, தாக்கி - மோதி, மெய் நடுங்கி உள்ளம் வெம்பி தடுமாறி கலங்கி விழ கனம் அதிர்வ போல ஆர்த்து - உடல்நடுங்கி உள்ளம் கரிந்து தடுமாற்றமடைந்து கலங்கிவிழும்படி மேகம் இடிப்பதுபோலப் பேராரவாரஞ்செய்துகொண்டு, காஞ்சனம் பேர் எழில் வனம்உம்-காஞ்சனமென்று பேரையுடைய பெரிய அழகிய வனத்தையும், கடந்திட்டான்—; (எ - று.)

இந்த வீமசேனன் செல்லும் விசையினால், நிலங்குலுங்குதல் முதலியன நிகழலாயின என்க. அடையத்தாக்கிஎன்று பிரதிபேதம். (கஎ)

18.—வீமசேனன் கதலிவனத்தைக் காணுதல்.

அவ்வனத்தையிகந்தநந்தகாதமேகி யங்கிடைவிட்டுத்தரத்தின
ப்பாலேகி, மெய்வனப்புமடல்வலியுமிகுத்தவாகை வீமனெனும்பேர்
திசையின்விளக்கும்வீரன்,மைவனப்பினுடன்படியுஞ்சினைக்கைவாச
மலர்ப்பொழிலினொருமருங்கேமத்தமாவின், கைவனப்புந்தழைசெ
வியுமருப்புஞ்சேரக் கவினளிக்குங்குலைக்கதலிக்காடுகண்டான்.

(இ - ள்.) மெய் வனப்புஉம் - உடலழகும், அடல் வலிஉம் - (பகைவரை) அழிக்கவல்ல உடல்வலிமையும், மிகுத்த - மிக்குள்ள, வாகை - வெற்றியையுடைய, வீமன் எனும் பேர் திசையின் விளக்கும் வீரன் - வீமனென்கிற (தன்)பெயரைத் திக்குக்களில் விளங்கச்செய்பவனாகிய அந்த வீரன்,—அ வனத்தை இகந்து - அந்தக்காஞ்சனவனத்தைவிட்டு, அனந்தம் காதம் ஏகி - பலகாததூரஞ் சென்று, அங்கு இடை விட்டு - அவ்விடத்தைவிட்டு, உத்தரத்தின் - வடதிசையாக, அப் பால் ஏகி - அப்புறஞ்சென்று,—மை - மேகம், வனப்பினுடன் - அழகியநிறத்தோடு, படியும்-தங்கப்பெற்ற, சினை - கிளைகளின், கை - பக்கங்களிலே, வாசம் மலர் - நறுமணமுள்ள மலர்களைக்கொண்ட, பொழிலின் - சோலையின், ஒருமருங்கே - ஒரு பக்கத்திலே, மத்தம் மாவின்-மதம்பிடிக்குந் தன்மையுள்ள யானையின், கை வனப்புஉம் - கையினழகும், தழை செவிஉம் - தழைந்த காதுகளும், மருப்புஉம்-தந்தங்களும், சேர - சேர்தலாலான, கவின் - அழகை, அளிக்கும்-தருகின்ற குலை கதலி காடு குலைபொருந்திய கதலீவனத்தை, கண்டான்—; (எ - று.)

பின்னிரண்டடிகள் - கதலீவனத்தின்தன்மையைக் கூறுவன. கதலீ வனமென்பதனை, கதலிக்காடு என்றார். தூரத்திலிருந்து காணும்போது தழைந்த இலைகள் யானைக் காதுகளையும், அடித்தண்டு நிலம்படியும் யானைக் கைகளையும், குலைகள் யானைமருப்புக்களையும் போலுதலால், கதலிவனம் 'மத்தமாவின்கைவனப்பும் தழைசெவியும் மருப்புஞ்சேரக்கவினளிக்கும் குலைக்கதலிக்காடு' எனப்பட்டது. பலபொழில்கள்சுற்றியிருக்க அவற்றினிடையே இந்தக் கதலிக்காடு இருப்பது என்பதனை, 'பொழிலினொரு மருங்கே கதலிக்காடு' என்பது, விளக்கும். (கஅ)

19.—வீமன் கதலீவனத்துக்காவலரை உயிரொழித்துக் கர்ச்சித்தல்.

அக்கதலிவனந்தனக்குக்காவலாயவடலரக்கரனேகருடனடுபோர் செய்து, மிக்கதலங்குருதியினால்வெள்ளமாக்கி வெகுண்டவர்தமாவியையும்விண்ணிலேற்றித், திக்கதலமுதலாமெவ்வுலகுமேங்கச் சிங்கநாதமுஞ்செய்தான்செய்தகாலை,யுக்கதலைமணியுரகராசற்கென்றா லும்பர்படுந்துயரமெம்மாலுரைக்கலாமோ.

(இ - ள்.) அ கதலி வனம் தனக்கு - அந்தக்கதலிவனத்துக்கு, காவல் ஆய - பாதுகாவலைச்செய்துகொண்டிருந்த, அடல் அரக்கர் அனேகருடன் - வலிமைபொருந்திய ராட்சசர்பலரோடும், அடு போர் செய்து-(அவருயிரை) அழிக்கவல்ல போரைச்செய்து,—மிக்க தலம் - பூமியின் பெரும்பகுதியை, குருதியினால் வெள்ளம் ஆக்கி - இரத்தவெள்ளம்பரவும்படிசெய்து, வெகுண்டவர்தம் ஆவியைஉம் - (தன்னோடு) கோபித்துப்பொருத அரக்கரின்உயிர்களையும், விண்ணில் ஏற்றி - வீரசுவர்க்கத்தை யடையுமாறுசெய்து, திக்கு- கீழைத்திக்கிலிருப்பதாகிய, அதலம் முதல்ஆம் - அதலம்முதலான, எ உலகு உம் - எந்த உலகமும், ஏங்க-ஏக்கமடையும்படி, சிங்கநாதமும் செய்தான்—; செய்த காலை - அப்படிச் சிங்கநாதஞ்செய்த போது, (அந்தஒலியின் அதிர்ச்சியினால்), உரகராசற்கு - ஆதிசேஷனுக்கு, தலை மணி - சிரசிலிருக்கும் மாணிக்கம், உக்க - சிந்தின ; என்றால் - இவ்வாறு நிகழ்ந்ததானால்,— உம்பர் படும் துயரம் - மேலுலகத்திலுள்ளவரான தேவர்கள் படுகின்ற துயரத்தை, எம்மால்—,உரைக்கல்ஆம்ஓ - சொல்லமுடியுமோ ? (எ - று.)

எல்லாப்பாரத்தையுங்கீழிருந்துசுமக்கும் ஆதிசேஷனது முடிமணியே வீமன்செய்த சிங்கநாதத்தால் உக்கதென்றால், எப்போதும் சுகத்தையே யனுபவித்துக்கொண்டிருக்குந் தேவர்கள் மேனோக்கியெழுந்தன்மையுள்ள அந்தச் சிங்கநாதவொலியால் மிகவும் வருந்தினார்களென்பது சொல்லாமலே விளங்குமெனத் தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி படக் கூறினார். (கக)

20.—வீமன்செய்த சிங்கநாதத்தால் யாவும் கலங்குதல்.

வரைகலங்கவனங்கலங்கக்கலங்குறாத மண்கலங்கவிண்கலங்கமகரமுந்நீர்த், திரைகலங்கத்திசைகலங்கவீறிலாத செகங்கலங்கவுகங்கலங்கச்சிந்தைதூயோ,ருரைகலங்கவுளங்கலங்கத்துளங்கிமெய்யி லூன் கலங்கவிலங்கொடுபுள்ளினங்கள்யாவு, நிரைகலங்கவுலகினுயிர்படைத்ததம்மி னிலைகலங்காதனவுண்டோநிகழ்த்தினம்மா.

(இ - ள்.) வரை கலங்க - மலைகள் நிலைகுலையவும், வனம் கலங்க - காடுகள் நிலைகலங்கவும், கலங்குறாத மண் - அசையுந்தன்மையில்லாத இந்தப்பூமியும், கலங்க—, விண் கலங்க—, மகரம் மூந்நீர் திரை கலங்க - சுறாமீனைக் கொண்ட கடலின்அலை கலங்கவும், திசை கலங்க - திக்குக்கள் கலங்கவும், ஈறு இலாத - முடிவில்லாத [மிகப்பலவான], செகம் - உலகங்களெல்லாம், கலங்க—, உகம் கலங்க - காலமும்நிலைகலங்கவும்,—சிந்தை தூயோர் உரை கலங்க - மனந்தூய்மையரான பெரியோரின்பேச்சுங் கலங்கவும்,—உளம் கலங்க - (அவர்களுடைய) மனமுங் கலங்கவும்,—துளங்கி மெய்யில் ஊன் கலங்க - அசைதலுற்று உடம்பிலுள்ள தசை கலங்கவும், விலங்கொடு புள் இனங்கள் யாஉம் - மிருகங்களோடு பறவைக்கூட்டங்களெல்லாமும், நிரை கலங்க - கூட்டங்கூட்டமாய்க் கலங்கவும்,—(இங்ஙன்),—உலகின் - உலகிலே, உயிர் படைத்த தம்மின்-உயிர்படைத்தபொருள்களில், நிகழ்த்தின் - சொல்லுமிடத்து, நிலை கலங்காதது உண்டுஒ - ? [இல்லை]; (எ - று.)

அம்மா - வியப்பிடைச்சொல் : ஒருவனுடைய சிங்கநாதத்தால் இங்ஙனம் எல்லாம் நிலைகலங்கலாயிற்றே என்று வியந்தவாறு. சொற்பொருட் பின்வருநிலையணி. உலகத்திலே உருவத்தையும் பெயரையும்படைத்த எல்லாப்பொருட்கும் உயிருண்டென்பது வேதாந்திகளின்கொள்கை யாதலால், 'வரைகலங்க' என்று தொடங்கிய கவி, 'உலகினுயிர்படைத்ததம்மினிலை கலங்காதனவுண்டோ' என்று முடித்தார். (உ0)

வேறு

21.— மூன்றுகவிகள் - குளகம் : அவ்வொலிகேட்ட அநுமான் வீமசேனன் செல்லும் வழியி லிருத்தல்.

அந்த வோதையைப் பொழிலிடைத் தவம்புரிந் தருளு
மந்த ராசல மனையதோண் மாருதி கேட்டு
விந்த மன்னதிண் புயாசல வீமனுக் கெதிர்போய்
முந்த மற்றவன் வருநெறி யதனிடை முன்னி.

(இ - ள்.) அ பொழிலிடை - அந்தக் கதலிவனத்திலே, தவம் புரிந்தருளும் - தவஞ்செய்துகொண்டிருந்தருளுகிற, மந்தர அசலம் அனைய தோள் மாருதி - மந்தரமலையையொத்த தோள்களையுடைய அனுமான், அந்த ஓதை - (வீமசேனனுண்டான) அந்தப் பேரொலியை, கேட்டு - செவியுற்று, விந்தம் அன்ன திண் புயஅசலம் வீமனுக்கு எதிர் போய் - விந்தியகிரியையொத்த வலிய தோள்களாகிய மலைகளையுடைய அவ்வீமசேனனுக்கு எதிரிற்சென்று,முந்த அவன் வரும் நெறியதனிடை முன்னி-முதலில் அவன் வருகிற வழியில் நெருங்கி,—(எ - று.)—'நீட்டி' என அடுத்த கவியோடு தொடரும்.

தவம்புரிதல், இந்தக்கற்பாந்தத்தில் பிரமபதவியைப் பெறுதற்கென்க. தவமாவது தம்முயிருக்குவருந் துன்பங்களைப்பொறுத்துப் பிறவுயிர்களை ஓம்புத லாதலின், 'புரிந்தருளும்' எனப்பட்டது; இனி, 'அருள்'

துணைவினை யெனினுமாம்; பெரியோர்களின்செயலைக் கூறுமிடத்து 'அருள்' என்பதைத் துணைவினையாகச்சேர்த்துக் கூறுதல், மரபு. மந்தரமலை பாற்கடலைக்கடந்து கலக்கினதுபோல அநுமானது வலியபெரியதோள்கள் போர்க்கடலைக் கலக்கிய தென்பார் 'மந்தராசலமனையதோள்' என்றார். மாருதி-வடமொழித்தத்திதாந்தநாமம்: மாருதனது மகனென்றுபொருள்; மாருதன் - வாயுதேவன். கேசரியென்னும் வானரவீரனதுமனைவியான அஞ்சநாதேவியினிடத்து வாயுதேவனுக்குப் பிறந்தவன் அநுமானென்க; இப்பெயர்.பீமசேனனுக்கும் வழங்கும். வீமனதுதோள்வலிமை அநுமானது வடிவத்தைக்கண்ட மாத்திரத்தில் இனி அடங்குதலால், அதற்கு, அகத்திய ரதுவடிவத்தைக் கண்ட மாத்திரத்தில் அடங்கிய விந்தியமலையை உவமை கூறினாரென்க; இல்லாவிட்டால், புயாசலம் என வலிமைக்கு உவமை கூறுதலோடு 'விந்தமன்ன' என்ற உவமையுங் கூறியதற்குப் பயனின்றாம். இனி, விந்தாசலம் அன்ன திண்புயம் வீமன் என மொழிமாற்றினுமாம்.

இதுமுதல் இருபத்தொன்பது கவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய கலிநிலைத்துறைகள். (உக)

22. வெற்பிரண்டினில்வேலைமுன்கடந்ததாணீட்டிப்
பொற்புயாசலமிரண்டையுமிருவரைபோக்கி
யற்பவாழ்வுடையரக்கன்மாநகரழலூட்டுஞ்
சிற்பவாலதிதிசையெலாஞ்சென்றுநின்றோங்க.

(இ - ள்.) வெற்பு இரண்டினில் - இரண்டுமலைகளிலே, முன்-(இராம தூதனாக இலங்கையிற்சென்ற) முற்காலத்தில், வேலை கடந்த - கடலைக் கடந்த, தாள் - பாதங்களை, நீட்டி—, பொன் புயாசலம் இரண்டைஉம் - பொன்போலழகிய மலைபோன்ற கைகளிரண்டையும், இரு வரை போக்கி - இரண்டுமலைகளிலே செலுத்தி, அற்பம் வாழ்வுஉடை - அற்மான வாழ்க்கையையுடைய, அரக்கன் - இராவணனுடைய, மா நகர் - பெரிய நகரை, அழல் ஊட்டும் - அழலையுண்ணுமாறு [எரிக்குமாறு] செய்த, சிற்பம்-தொழில்செய்வதில்திறமையுள்ள, வாலதி - (தன்) வால், திசைஎலாம் - திக்குக்களிலெல்லாம், சென்று - போய், நின்று - இருந்து, ஓங்க-ஓங்கா நிற்க,—(எ - று.)—'இருந்தனன்' என மேற்கவியில் முடியும்.

இதனால், அப்போது பேருருவுகொண்டிருந்தனன் அநுமான் என்பது, பெறப்படும். இவன் இராமதூதனாய் இலங்கைபுக்கு அந்நகரை யெரியூட்டியமை பிரசித்தம். சிற்பம் - சிறுமை என்றாருமுளர். (உஉ)

23. எம்பிரான்றனக்கொழியவேறியாவர்க்குந்தெரியாச்
செம்பொன்மாமணிக்குண்டலமிருபுறந்திகழ
விம்பமால்வரைமீதொருமேருவேயொக்கு
மம்பொன்மால்வரையிருந்தெனவிருந்தனனநுமான்.

(இ - ள்.) எம்பிரான் தனக்கு ஒழிய-நமக்கெல்லாந்தலைவரான திருமாலொருவருக்கே யல்லாமல், வேறு யாவர்க்கும் தெரியா - வேறு ஒருவர்க்கும் கட்புலப்படாத[தெய்வத்தன்மையுடைய], செம் பொன் மா மணி குண்டலம் - சிவந்த பொன்னாலாகிய சிறந்த இரத்தினங்களைப் பதித்த இரண்டு குண்டலங்கள், இரு புறம் திகழ - இரண்டுபக்கங்களிலும் விளங்க,—விம்பம் மால் வரைமீது - வட்டவடிவமான பெரியதொருமலையின்மேல், ஒரு மேருவை ஒக்கும் அம் பொன் மால் வரை இருந்து என - மகாமேருமலையையேபோல்வதொரு அழகிய பொன்மயமானபெரியமலை தங்கியிருந்தாற் போல, அநுமான் இருந்தனன் - அநுமான் வீற்றிருந்தான்; (எ - று.)

"காஞ்சநாத்ரிகமநீயவிக்ரஹம் [பொன்மலைபோலழகிய திருமேனியையுடையவன்]" என்றபடி அநுமான் பொன்மலைபோல்பவனாதலால், மலையின்மேல் அநுமான் இருந்ததற்கு, மால்வரைமீது இருக்கும் மேருவேயொக்கும்மற்றொருமால்வரையையொத்திருந்ததென இல்பொருளுவமை கூறினார்.

இங்கே 'எம்பிரான்' என்றது-விஷ்ணுவின் எழாவதுதிருவவதாரமான ஸ்ரீராமனை. திரிவிக்கிரமாவதாரஞ்செய்த திருமாலையொழிய வேறெவர்க்குங் கண்ணுக்கெட்டாத குண்டலமென்றும் முன்னிரண்டடிகட்குஉரைக்கலாம்: இங்ஙனங்கொள்ளின், மிக்க ஓங்கியவடிவுடன் அநுமான் இருந்தானென்க. இவ்வநுமான் குழந்தைப்பருவத்தில் இளஞ்சூரியனைக் கனிந்தபழமென்று கருதிப்பிடிக்கப் பாய்ந்தபொழுது, அதனையறிந்து சினந்த இந்திரனது வச்சிராயுதத்தினா லடிக்கப்பட்டுச் சிதைந்து வீங்கிய கன்னமுடையவனாதலால், இவனுக்கு ஹநுமானென்று திருநாமம். அனுமான்=ஹநுமாந் : வடசொற்றிரிபு : இதற்குக் கன்னத்தில்வேறுபாடு உடையவன் என்பதுபொருள்; ஹநு - கன்னம் : மாந் - வடமொழிப்பெயர் விகுதி. விம்பம் - பிம்பமென்னும் வடமொழித்திரிபு : வட்டமென்று பொருள். மேரு-வடசொல். மேருவென்பது பொன்மயமானதாய்ப் பூமியின்மத்தியிலுள்ளதொரு மலை. (உ௩)

24.—ஆரவாரஞ்செய்துகொண்டு செல்லும் வீமன் தன் முன்னே அநுமானைக் கண்டு திகைத்து நிற்றல்.

குகைத்தடங்கிரியனையதோள்கொட்டியார்த்துரப்பி
நகைத்துநாகமுநாகமுநடுங்கிடநடந்து
மிகைத்தவாளரிபோல்வரும்வீமன்முன்கண்டு
திகைத்துநின்றனன்மறமையுந்திறமையுமுடையான்.

(இ - ள்.) குகை - குகைகளையுடைய, தட - பெரிய, கிரி அனைய - மலையையொத்த, தோள் - தோளை, கொட்டி - தட்டி, ஆர்த்து - ஆரவாரஞ்செய்துகொண்டும், உரப்பி - அதட்டிக்கொண்டும், நகைத்து - சிரித்துக்கொண்டே, நாகம்உம் - பாதாளலோகமும், நாகம்உம்-சுவர்க்கலோகமும், நடுங்கிட—, மிகைத்த - (வலிமையினால்) மேம்பட்ட, வாள் அரி போல்-கொடிய சிங்கம்போல, நடந்துவரும்-(கம்பீரமாக) நடந்துசெல்லுகின்ற, வீமன்—, மறமைஉம் - வீரகுணத்தையும், திறமைஉம் - சாமர்த்தியத்தை

யும், உடையான் - உடையவனாகிய அநுமானை, முன் - முன்னிடத்திலே, கண்டு-(தான் போகமுடியாமல் குறுக்கிட்டிருப்பதைப்)பார்த்து, திகைத்து நின்றனன்—; (எ - று.)

கிரிக்குக் குகை, இயற்கையடைமொழி. 'நகைத்து நாகமு நடுங்கிட நடந்தனைடந்து' என்று பிரதிபேதம். (உச)

25.—அநுமான் வீமனைக்கண்டு 'நீ யார் அடா ?' என்று வினவுதல்.

அண்டர்தானவரரக்கருமணுகுருவனத்தி
லெண்டிசாமுகமெங்கணுமிரிந்திடவார்த்து
மண்டிமேல்வருமானுடனாரடாவென்றான்
சண்டவாயுவின்றனயனைமற்றவன்றமையன்.

(இ - ள்.) சண்டம் வாயுவின் தனயனை - உக்கிரமான வாயுவினது குமாரனான வீமனைநோக்கி, அவன் தமையன்.(வரும்வழியிலிருந்த) அவனது முன்னவனான அனுமான், 'அண்டர் தானவர் அரக்கர்உம் அணுகுரு வனத்தில்-தேவர் அசுரர் இராக்கதர் என்னும் இவர்களும் கிட்டவரவொண்ணாத இக்கதலிவனத்திலே, எண் திசாமுகம் எங்கண்உம் இரிந்திட ஆர்த்து-எட்டுத்திக்குக்களினிடமுழுவதும் அஞ்சியோடும்படி ஆரவாரித்து, மண்டி மேல் வரும் - நெருங்கி எதிரில் வருகிற, மானுடன்-மனிதனாகிய நீ, ஆர் அடா - யாரடா ?' என்றான் - என்றுவினவினான் ; (எ - று.)—மற்று - அசை.

இங்ஙனம் அநுமான் தோன்றினது, வீமசேனன் வழியிடையில் யாதோரிடையூறுமின்றி இனிது காரியம்முடித்துச்செல்லவேணுமென்னும் விருப்பத்தினாலேயே யென்பது, முதனூலில் விளங்கும். அண்டர் - அண்டகோளத்தின் மேலிடத்துள்ளவர். எண்டிசாமுகம் - நான்குபெருந்திசையும் நான்குகோணத்திசையும். எங்கணும் - எவ்விடத்தும் ஆர் - யார் என்பதன் மரூஉ. தமையன் - தம்ஐயன் எனப்பிரித்துத் தமது தலைவனெனக்கொண்டு காரணப்பெயராக்குக. மானுடன் - முன்னிலைப்படர்க்கை ; இயல்பாகிய அண்மைவிளியென்னலுமாம். (உரு)

26.—வீமன் 'நீ யார் ?' என்று அவ்வநுமானை மாறு வினவுதல்.

தம்முனாகியவானரஞ்சாற்றியவுரைகேட்
டெம்முனாகிவந்திருந்தநீயார்கொலென்றிசைத்தான்
றெம்முனாயினுஞ்செவ்விமென்தேகமாமகளிர்
தம்முனாயினுநாத்தவறுவடல்வீமன்.

(இ - ள்.) தெம் முன் ஆயின்உம் - பகைவரின் முன்பானாலும், செவ்வி மெல் தேகம் மா மகளிர் தம் முன் ஆயின்உம்-அழகிய மென்மையான சரீரத்தையுடைய சிறந்த பெண்களது முன்பானாலும், நா தவறு - நாக்கினாற் சொல்லும்வாய்மை தவறுதலில்லாத, அடல் வீமன் - வலிமையையுடைய வீமசேனன், தம்முன் ஆகிய வானரம் சாற்றிய உரை கேட்டு - தனக்குத் தமையனான அனுமான் சொன்ன வார்த்தையைச் செவியுற்று, எம் முன் ஆகி

வந்து இருந்த நீ யார் சொல் என்று இசைத்தான்-எமக்கு எதிரிற் பொருந்தி வந்திருந்த நீ யாவனோ ? என்று அவனை எதிர் வினவினன் ; (எ - று.)

"மனமெண்ணுகினும், மெய்ம்மையலதுரையாதா" என்றாற்போன்ற நாவின்தூய்மையியல்பை யுணர்த்துதற்கு, 'சொல்தவறா' என்னாது 'நாத் தவறா' எனப்பட்டது. "விவாககாலத்திலும் மகளிருடல்தீர்த்தலிலும் உயிர் காத்தற்பொருட்டும் எல்லாப்பொருளையும் ஒருங்குஇழக்க நேருகையிலும் பொய்ம்மைகூறலுந் தகும்" என்ற நீதிநூலின் விலக்கும் இவனிடத்துஇன் றென்பார், 'தெம்முனையினுஞ் செவ்விமென்தோகமாமகளிர், தம்முனையினும் நாத்தவறாவடல்வீமன்' என்றார் : இத்தொடரில், இவன் வீரர்களையும் மக ளிர்போலவே எளிமையாகக் கருதுபவ னென்ற கருத்துந் தோன்றும். இங்கு, அடல்வீமன் என்றது சத்தியத்தின் திண்மையை விளக்குதற்கென்க. தம்முன்-தமதுமுன் பிறந்தவன் : முன் - காலவாதபெயர். வாநரம் என்னும் வடசொல்லுக்கு - மனிதன்போல வடிவுள்ளதென்றுபொருள். தெவ்+ முன்=தெம்முன் ; "தெவ்வென்மொழிமே தொழிற்பெயரற்றே, மவ்வரின் வஃகான்மவ்வுமாகும்" என்பது விதி. செவ்வி - செம்மையின்விகுதிகெட்டு முன்னின்ற மகரமெய் வகரமாத்திரிந்து இகரவிகுதிபெற்றுத் தன்னொற் றிரட்டிய பண்புப்பெயர். போகமாமகளிர்என்றுபிரதிபேதம். (உசு)

27.—'என்வாலைக்கடந்துபோ, பார்ப்போம்' என்று அநுமான்கூறுதல்.

துன்னும்வெஞ்சிலைவலிகொலோதோளிணைவலியோ
வென்னைநீபுகலாரடாவென்பதிங்கெவனோ
வுன்னைநீயறியாநெறியுணர்விலாமனிதா
மன்னும்வாலினைக்கடந்துபோவல்லையேலென்றான்.

(இ - ள்.) 'இங்கு - இவ்விடத்திலே, என்னை - என்னைநோக்கி, நீ ஆர் அடா புகல் என்பது-'நீ யாரடா? சொல்' என்று (நீ) கேட்பது, துன்னும் வெம் சிலை வலி கொல்ஓ-(உன்னிடம்)பொருந்தின கொடிய வில்லின் வல்ல மையினாலோ? தோள் இணை வலிஓ-(வேறுஉவமையில்லாத ஒன்றோடொன் றொத்த) இரண்டுதோள்களின் வலிமையினாலோ ? எவன்ஓ - இன்னும்எந் தக்காரணத்தினாலோ ? உன்னை நீ அறியா நெறி உணர்வு இலா மனிதா - உன்னுடையதன்மையை நீ யறியாத வழியறியாத மனிதனே! வல்லை எல் - (நீ) வலிமையுடையையாவையானால், மன்னும் வால்தனை கடந்து போ - (இங்குப்) பொருந்தின (எனது) வாலைத் தாண்டிப்போ', என்றான் - என்று (வீமனைநோக்கி அனுமான்) கூறினான் ; (எ - று.)

நான் வினவியதற்கு உன்னை இன்னானென்று தெரிவிக்காமல் மாறாக 'நீயார் ?' என்று என்னை அலட்சியமாக வினவுகின்றாயே ? இதற்குக் கார ணம் நீ உன்னை வலியவனாக நினைத்திருப்பதன்றோ ? அங்ஙனம் உண்மை யில் வலியவனாயிருப்பின் என்வாலைக் கடந்துசெல், பார்ப்போமென்று அநு மான் கூறினனென்க. உன்னைநீ யறியா என்றதொடரில், உன்னை என் தம்பி யென்று அறிந்துகொள்ளாத என்றபொருளும் அடங்கியுள்ளது. 'அறியா

நெறி' என்றெடுத்து, அறியாத நிலைமையையுடைய [புத்தியில்லாத], மனிதனே! என்று உரைப்பாருமுளர். மூதனூலுக்குஏற்ப 'வால்தனைக்கடந்து' என்பதற்கு - (என்) வாலை அப்பாற்கிடக்கவிட்டு என்றுகருத்துக் கொள்ளுதலும் ஏற்கும். வல்லை - வன்மையென்னும் பண்பினடியாப்பிறந்த முன்னிலைக்குறிப்புமுற்று. சிலைவலி-ஆயுதபலமென்றபடி. கொல் - வினா, ஓ-அசை; ஓ - வினா என்றால், கொல் - அசை; ஓகாரங்கள் ஐயப்பொருளனவாதலுமாம். நீயறியாய் என்று பிரதிபேதம். (உஎ)

28.—அநுமான்வாலையன்றிச் சாதாரணமான குரங்கின் வாலைக் கடத்தல் எனக்குஅரிதேயோ? என்று வீமன் கூறுதல்.

உரங்கொள்வீமனம்மாருதியுரைத்தசொற்கேளா
வரங்கொள்வார்சிலையிராகவன்மாப்பெருந்தூதன்
றரங்கவாரிதிதாவுமென்றம்முன்வாலன்றிக்
குரங்கின்வாலிதுகடப்பதிங்கரியதோகூறாய்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) உரம் கொள் வீமன் - வலிமையைக்கொண்டுள்ள வீமசேனன்,—அ மாருதி உரைத்த சொல் கேளா-அந்தஅநுமான் சொன்ன வார்த்தையைக் கேட்டு, வரம் கொள் வார் சிலை இராகவன் மா பெரு தூதன் - (அகத்தியமுனிவனிடத்தினின்று) வரமாகப்பெற்ற கட்டமைந்தநீண்ட (கோதண்டமென்னும்) வில்லையுடைய ஸ்ரீராமனது சிறந்த பெரிய தூதனாகிய, தரங்கம் வாரிதி தாவும் என் தம்முன் - அலைகளையுடைய கடலைக் கடந்திட்ட எனது தமையனான அநுமானினது, வால் அன்றி - வால்மாத்திரம் கடப்பதற்கு அரியதேயல்லாமல், குரங்கின் வால் இது கடப்பது இங்கு அரியதோ - சாதாரணக்குரங்காகிய உனது இந்தவாலைக் கடப்பது எனக்கு இப்போது அருமையானதோ? கூறாய் - சொல்லு; (எ - று.)— 'என்றுதன்திருத்துணைவனின்றிசைத்ததுகேட்டு' என்று மேலேதொடரும்.

உரம் - தேகபலமும், ஆயுதபலமும். விசுவகருமனால் நிருமிக்கப்பட்டுச் சிவபிரானைச் சயித்துப் பின்பு திருமாலின்கையிலிருந்து பரசுராமன் பக்கல் வந்து பல அரசர்களையும்வென்று பின்னர் இராமபிரானிடம் அவனாற்கொடுக்கப்பட்டதொரு வில் உண்டு: அதனை அவரிடத்திருந்து பெற்றுச் சென்ற வருணன் பின்பு கரன்முதலிய ராட்சசர்களின் வதத்தின்பொருட்டு அகத்தியமகாமுனிவர்மூலமாக அவ்விராகவமூர்த்திக்கே கொணர்ந்து கொடுத்தனனென்ற வரலாறுபற்றி, 'வரங்கொள்வார்சிலையிராமன்'என்றது. தசரதசக்கரவர்த்தியின் திருக்குமாரனான ஸ்ரீராமன் தந்தையின் சொல்லைக் காக்கவேணுமென்று கானகஞ்சேர்ந்து பஞ்சவடியில் வசிக்கும்போது தன்னை மணந்துகொள்ளவேண்டுமென்று நிர்ப்பந்தித்த சூர்ப்பணகையின் செவிமுதலிய உறுப்புக்களையறுப்பித்து அவளுக்காகப் பரிந்துவந்த கரன்முதலிய கொடியஇராக்கதர்பலரையும் கொன்றொழித்தானாக, பின்பு சூர்ப்பணகையினால் தூண்டப்பட்டு இராவணன் பெருங்காதல் கொண்டு கவர்ந்துசென்ற சீதையைத் தேடும்பொருட்டு வாநரராசனான

சுக்கிரீவன் வானரவீரர்களை ஆங்காங்குத்தூதனுப்புகையில் தென்திசையில் இரண்டுவெள்ளம் வானரசேனையுடன் அனுப்பப்பட்ட அங்கதன் ஜாம்பவான் நீலன் அநுமான்முதலியோரில் அநுமான் கடல்கடந்து இலங்கையை யடைந்து சீதையைத் தேடிக்கண்டு செய்திசொல்லி அடையாள மோதிரத்தைக் கொடுத்துத் தேற்றி அவளிடம் செய்தியும் சூளாமணியும் பெற்றுக்கொண்டு மீண்டுவந்து இராமனிடம் அச்செய்தியைச் சொல்லியது பற்றி, 'இராகவன்மாப்பெருந்தூதன் தாங்கவாரிதிதாவும்என்தம்முன்' எனப்பட்டான். வாரிதி - வடசொல்; நீர்தங்குமிடமென்று பொருள். (உஅ)

29.—வீமன்கூறியதுகேட்ட அநுமான் மனிதனைச்சுமந்த அக்குரங்கை என்னோடுஒப்பச் சொல்லலாமோ ? எனல்.

என்றுதன்றிருத்துணைவனின்றிசைத்ததுகேட்டு
நன்றுநன்றுநீநவின்றதுநன்றெனநகையாத்
துன்றுவார்சிலைமனிதனைச்சுமந்துதோள்வருந்தும்
புன்றொழிற்சிறுகுரங்கையோவென்னொடும்புகல்வாய்.

(இ-ள்.) என்று—, தன் திரு துணைவன் - தனதுசிறந்தஉடன்பிறந்தோனான வீமசேனன், நின்று - எதிர்நின்று, இசைத்தது - சொன்னதை, கேட்டு—, 'நன்றுநன்று நீநவின்றது நன்று என நகையா - நன்றாயுள்ளது நீகூறுவது நன்றாயுள்ளதுஎன்று ஏளனமாகச் சிரித்து,—துன்று வார் சிலை மனிதனை - (நாணி) நெருங்கிய நீண்ட வில்லையேந்திய மனிதனான ராமனை, சுமந்து - தாங்கி, (அதனால்), தோள் வருந்தும் - தோள்வருத்தமடைந்த, புல் தொழில் சிறுகுரங்கை ஓ - அற்பத்தொழிலையுடையசிறியகுரங்கையா, என்னொடும் புகல்வாய் - என்னிடத்துப்பாராட்டிச்சொல்வாய்: (எ-று.)—என்று அந்த அநுமான் தான் வேறொருவானரன்போலத்தோன்றும்படி வீமனிடம் கூறினனென்க. நன்று நன்றி துநவின்றதுவென மிகநகையாஎன்று பிரதிபேதம். (உக)

30.—இரண்டுகவிகள் – ஒருதொடர்: வீமன் மிகச்சிரித்துஇராகவ அநுமார்களின் வலிமை பெருமைகளைச்சொல்ல, அநுமான் மீண்டும் வினவுதல்.

குரக்குநாயகனவ்வுரைகூறலுங்கேட்டுத்
தரைக்குநாயகன்றடம்புயங்குலுங்கிடநகையா
வரக்கர்நாயகனூரழலூட்டியிவ்வகிலம்
புரக்குநாயகன்றன்னையோவிழித்துநீபுகல்வாய்.

(இ-ள்.) குரங்கு நாயகன் - வானரசிரேட்டனான அநுமான், அ உரை - (புன்றொழிற்குரங்கையோ என்னொடும்புகல்வாய் என்ற) அந்த வார்த்தையை, கூறலும் - சொன்னவுடனே,—கேட்டு—, தரைக்கு நாயகன் - பூமிக்குத்தலைவனான வீமசேனன், தட புயம் - (தனது) பெரிய தோள்கள், குலுங்கிட - குலுங்கும்படி, நகையா - பெருஞ்சிரிப்புச்சிரித்து,—அரக்கர் நாயகன் ஊர் - ராட்சதர்தலைவனான இராவணனுடையஊரை, அழல் ஊட்டி - நெருப்புக்குஇரையாக்கி, - இ அகிலம் புரக்கும் நாயகன் தன்னை ஓ - இந்த

உலகத்தையெல்லாம் இடர்தீர்த்துப்பாதுகாப்பவனுன அனைவர்க்குந் தலைவனுன ஸ்ரீராமனையா, இழித்து-(ஒருமனிதனென்று) தாழ்மையாக, நீ புகல்வாய் - நீ சொல்லுவாய்? (எ - று.)

ரட்சணகர்த்தாவாகிய திருமாலே ஸ்ரீராமனுகத்திருவவதரித்துவந்திருக்கையில் அப்பிரானைச் சாதாரணமனிதன்போற்பேசுவது இழுக்குஎன்பான் 'அகிலம்புரக்குநாயகன்றன்னையோ விழித்துநீபுகல்வாய்'என்றுன்.(௩0)

31. பின்னும்வார்சிலையிராகவன்பெருமையுமனுமான்
மன்னுதோளிணைவலிமையுமாருதிசாற்ற
வன்னபோழ்தினிலகமகிழ்ந்தருளுடனேக்கி
யென்னகாரியம்வந்ததிங்கியார்கொனீயென்றுன்.

(இ - ள்.)(என்றுகூறி),—பின்உம்-மேலும், வார் சிலை இராகவன் பெருமைஉம்-நீண்ட வில்லையேந்திய ஸ்ரீராமனுடைய பெருமையையும், (அந்த ஸ்ரீராமனைத்தாங்கிய), அனுமான் - அனுமானுடைய, மன்னு - நிலைபெற்ற, தோள் இணை வலிமைஉம் - இரண்டுதோள்களின்வலிமையையும், மாருதி - வாயுகுமாரனுன வீமசேனன், சாற்ற - சொல்ல,—அன்ன போழ்தினில் - அப்போது, (அனுமான்), அகம் மகிழ்ந்து - மனஞ்சந்தோஷித்து, அருளுடன் நோக்கி - (அந்தவீமசேனனைக்) கருணைகொண்டுகடாட்சித்து, 'இங்கு வந்தது என்ன காரியம்-இங்கே(நீ) வந்தது என்னகாரியத்தைக்கருதியோ? நீ யார்கொல்-நீ யாவனே?' என்றுன்-என்று மீண்டும் வினவினுன்; (எ-று.)

32.—வீமசேனன் தன்னை இன்னுனென்று தெரிவித்தல்.

தாமமாருதியுரைத்தசொற்றம்பியுங்கேட்டு
நேமிமாநிலம்புரக்குநன்னீதிவேற்றரும
நாமநாயகற்கிளையவனரனுக்குமூத்தோன்
வீமன்வாயுவின்புதல்வன்யானென்றனன்விறலோன்.

(இ - ள்.) தாமம் மாருதி - ஒளியுடன்கூடிய அநுமான், உரைத்த - சொன்ன, சொல் - சொல்லை, தம்பிஉம் - அவர் தம்பியாகிய வீமசேனனும், கேட்டு—, 'நேமி மா நிலம் புரக்கும் - வட்டவடிவாகவுள்ள பெரிய இந்நிலவுலகத்தைப் பாதுகாக்கின்ற, நல் நீதி - சிறந்தநீதியையுடையவனுன, வேல் - வேற்படையையுடைய, தருமன் நாமம் நாயகற்கு - தருமனென்றுபேருள்ள தலைவனுக்கு, இளையவன் - அடுத்த தம்பியாவேன்: நரனுக்கு மூத்தோன் - அருச்சுனனுக்கு முன்பிறந்தவன்: வீமன் - வீமசேனனென்பது என் பெயர்: யான் வாயுவின்புதல்வன்—', என்றனன் - என்று (தன்னை இன்னுனெனத்) தெரிவித்தான்: (யாவனென்னில்),—விறலோன் - வலிமையையுடையவனுகிய வீமசேனன்: (எ - று.)

இதனுல், முதலில் 'யார்கொல்நீ' என்ற அனுமான்வினவிற்கு விடையிறுத்தவாறு. தாமம் - வெற்றிமாலையுமாம். (௩௨)

33.—அநுமான் வீமனைநோக்கி 'ஸ்ரீராமன்புகழை உனக்கு யார் சொன்னவர்?' என்று வினவல்.

அன்னவாசகமவனுரைத்தலுமிகலநுமான்
கன்னபாகமுஞ்சிந்தையுமுந்துறக்களித்து
மின்னுவார்சிலையிராகவன்மெய்ப்பெருஞ்சீர்த்தி
சொன்னவாறுநன்றுனக்கிதார்சொற்றவரென்றான்.

(இ - ள்.) அன்ன வாசகம் - அவ்வார்த்தையை, அவன் - அந்த வீமன், உரைத்தலும் - சொன்னவுடனே,—இகல் அநுமான் - பராக்கிரமத்தையுடைய அநுமான்,—கன்னபாகம்உம் - காதின்பகுதியும், சிந்தைஉம் - மனமும், முந்துற - முற்பட, களித்து - மகிழ்ச்சியடைந்து,—மின்னு வார் சிலை இராகவன் மெய் பெருஞ் சீர்த்தி-மின்னுகின்ற நீண்ட விற்படையையுடைய இராமபிரானுடைய உண்மையான பெரியமிக்கபுகழை, சொன்ன ஆறு - நீ சொல்லியவகை, நன்று-இனிது: உனக்கு—, இது-இந்த ராகவன் பெருஞ் சீர்த்தியை, ஆர் சொற்றவர் - சொன்னவர் யாவர்? என்றான் - என்று வினவினான்; (எ - று.)

கன்னபாகம்=கர்ணபாகம்: வடசொற்றொடர். "சீர்த்திமிகுபுகழ்" என்பது, தொல்காப்பியம். (௩௩)

34.—பாரத்துவாசன்சொல்லக் கேட்டுளேனென்று வீமசேனன் விடையிறுத்தல்.

வரத்தினாலருமறையினால்வார்சிலைபயிற்றும்
பரத்துவாசன்முன்பகர்தரக்கேட்டனன்பலகாற்
றிரத்தினாலுயரிராகவன்சிலைவலியென்றா
னுரத்தினாலொருவீரருமொப்பிலாவுரவோன்.

(இ - ள்.) உரத்தினால் - வலிமையிலே, ஒருவீரரும்—, ஒப்புஇலா - (தனக்கு)உவமையாகப்பெறாத, உரவோன்-வலிமையையுடையவனாகிய வீமசேனன்,—'திரத்தினால் உயர்-உறுதிப்பாட்டினால் மேம்பட்ட, இராகவன் - இராமபிரானுடைய, சிலை வலி - வில்லின் வல்லமையை, வரத்தினால்-மேன்மையாக, அரு மறையினால்-அருமையான வேதமந்திரங்களோடு, வார் சிலை-நீண்டவில்லை, பயிற்றும் - பழக்கிய, பரத்துவாசன் - துரோணன், முன் - முன்பு, பகர்தர - சொல்ல, பலகால் கேட்டனன் - பலமுறை கேட்டுள்ளேன்' என்றான் - என்றுகூறினான்: (எ - று.)

பாண்டவர்க்கு வில்வித்தைபயிற்றுவித்த ஆசிரியனாகிய துரோணன் பரத்துவாசகுமாரனாதலால் அவன் 'வார்சிலைபயிற்றும் பரத்துவாசன்' எனப்பட்டான்: ஆகவே, பரத்துவாசன்என்பது-பாரத்துவாசன் என்பதன்விகாரம். துரோணன் பரத்துவாசகுமாரனென்பதை "பரதநாத வேதபரத்துவாசனென்பான், விரதவேள்விதன்னின் மேனகையாலான, சுரததாது வீழ்ந்த துரோணகும்பந்தன்னில், வாரதனொருவன் வந்தான் வசிட்டமுனியோடொப்பான்" என்று ஆதிபருவத்தில் வந்தது கொண்டும் அறியலாம்.

35.—இரண்டுகவிகள்-ஒருதொடர்: அநுமான் தன்னைத்தெரிவித்தல்.

குந்திகான்முளைகூறியவாசகங்கேட்டுப்
புந்தியாலுயரஞ்சனைபுதல்வனும்புகல்வான்
சிந்துசீகரச்சிந்துமுன்கடந்துசெந்தீயா
லுந்துவாள்வலிநிருதரூரொருங்குசுட்டவனும்.

(இ - ள்.) குந்தி கான்முளை - குந்தியின் குமாரனான அந்தவீமசேனன், கூறிய - சொன்ன, வாசகம் - வார்த்தையை, கேட்டு—, புந்தியால்உயர் - அறிவினால்மேம்பட்ட, அஞ்சனைபுதல்வன்உம் - அஞ்சனாதேவியின்புதல்வனான அநுமானும், புகல்வான் - (பின்வருமாறு) சொல்பவனானான்:—'சிந்து சீகரம் - (அலைகளின்மூலமாகத்) தெறிக்கின்ற நீர்த்திவலைகளையுடைய, சிந்து- கடலை, முன்கடந்து—, செம் தீயால் - (அரக்கர் தன்வாலிற்கொளுத்திய) செந்நிறத்தீயைக்கொண்டு, உந்து-மேலெறிகின்ற, வாள் வலி - வாட்படை- யின் வலிமையையுடைய, நிருதர் - அரக்கருடைய, ஊர் - இலங்காபுரியை, ஒருங்கு - ஒருசேர, சுட்டவன்உம் - எரியுமாறுசெய்தவனும்,—(எ - று.)— 'சிந்தைசெய்பவனும்' என்று மேலே தொடரும்.

கான்முளைஎன்பது - சந்ததிமுளைப்பதற்குக் காரணமானது என்ற காரணம்பற்றி, மகவைக் காட்டும். அநுமான் வீமன் என்ற இருவரும் வாயு புத்திரராயினும், ஒருத்தர் குந்தியின்புதல்வரும், மற்றொருத்தர் அஞ்சனை யின்புதல்வரும்என்ற வேறுபாடுஉடைமையால், அத்தன்மையை இந்தச் செய்யுளில் விளக்கினார். (௩௫)

36. அந்தவார்சிலையிராமனுக்கடிமையாயென்றுஞ்
சிந்தையாலவன்றிருப்பதஞ்சிந்தைசெய்பவனு
முந்தையாகியவாயுவுக்குற்பவித்தவனு
மிந்தவாழ்வுடையனுமனேயென்றனனிகலோன்.

(இ-ள்.) அந்த வார் சிலை இராமனுக்கு அடிமை ஆய்-அவ்வாறு (உன்னாற் புகழ்ந்து) கூறப்பட்ட நீண்ட வில்லையுடைய இராமனுக்கு அடியவனாகி, என்றுஉம் - எப்பொழுதும், சிந்தையால் - மனத்தினால், அவன் திரு பதம் சிந்தை செய்பவன்உம் - அவனது திருவடிகளைத் தியானஞ்செய்பவனும், உந்தை ஆகிய வாயுவுக்கு உற்பவித்தவன்உம் - உனது தந்தையான வாயு தேவனுக்குப் பிறந்தவனும், இந்த வாழ்வு உடை அநுமன்ஏ - இந்த வாழ்க் கையையுடைய அநுமானாகிய நானே', என்றனன் - என்று கூறினான்: (யாவனென்னில்),—இகலோன் - வலிமையையுடைய ஆஞ்சநேயமூர்த்தி; (எ - று.)

இந்தவாழ்வுடை - உனக்கு எதிரிற்காணப்படும் இவ்வுடலின் தோற்றத் தையுடைய என்றபடி. இது, தன்னைப் பிறன்போல்வைத்துக் கூறியது. அந்த - அகரச்சுட்டு, பிரசித்தியைக்காட்டிற் றென்னலாம்; அந்தம் எனப் பதம் பிரித்து, அழகியவென்றுமாம். அடிமை - அடியவனுக்குப் பண்பாகு பெயர். உந்தை-உன் தந்தை என்பதன் மரூஉ; இனி, 'நீர்' என்னும் பகுதி

'உம்' என விகாரப்பட்டு 'தை' என்னும் முறைப்பெயர்விகுதியோடு புணர்ந்த தென்னலுமாம். (கூசு)

37.—வீமன் அநுமானை வணங்குதல்.

என்றவாசகமிருசெவிக்கமுதெனக்கேட்டுத்
துன்றுநெஞ்சினி லுவகையன் றுதித்தனன் றுள்ளி
யென்றும்யாமுயறவப்பயனிருந்தவாவென்னுச்
சென்றிறைஞ்சினன்றிரைக்கடல்கடந்தசேவடிமேல்.

(இ - ள்.) என்ற வாசகம் - என்று (அனுமான்) சொன்ன வார்த்தை, இரு செவிக்கு அமுது என - (தனது) இரண்டுகாதுகளுக்கும் அமிருதம் போலிருக்க, (வீமன்), கேட்டு—, நெஞ்சினில் துன்று உவகையன் - மனத்தில் மிக்குப்பொருந்தின மகிழ்ச்சியையுடையவனாய், துதித்தனன்-(அவ்வனுமானைத்) தோத்திரஞ்செய்து, துள்ளி-ஆனந்தக்கூத்தாடி, என்றும் யாம் முயல் தவம் பயன் இருந்த ஆ (று) என்னு - 'எப்பொழுதும் [பலகாலமாக] நாம் முயன்றுசெய்த நற்றவத்தின்பயன் இருந்த விதம் (என்னே!)' என்று அதிசயித்துக்கூறி, சென்று - அருகிற்போய், திரை கடல் கடந்த சே அடி மேல் இறைஞ்சினன். அலைகளையுடைய கடலைத் தாண்டியிட்ட (அவ்வனுமானின்) சிவந்ததிருவடிகளின்மேல் விழுந்துவணங்கினான்; (எ - று.)

செவிக்குஅமுதுஎன - அமிருதம்நாவுக்குஇனிமைதருவதுபோல 'அவ்வனுமான் நானே' என்று சொன்ன வார்த்தை காதுக்கு இனிமைசெய்ய. துள்ளுதல்-மகிழ்ச்சிபற்றியமெய்ப்பாடு. பலபிறப்புக்களிற் பலகாலஞ்செய்த பெருந்தவமாகிய காரணம் இருந்தாலன்றி அநுமானுடையதரிசனம் கிடைக்கா தென்ற கருத்தால், வியந்தான். (கூஎ)

38.—'இங்குவந்த காரணம் என்ன?' என்று வீமனை அநுமான்வினவுதல்.

தம்பியைத்துணைத்தாழ்தடக்கைகளாலெடுத்து
வம்புசேர்மணிமால்வரைமார்புறவணைத்துப்
பம்புசெந்தழற்கானிடைப்பதமலர்சிவப்ப
வெம்பிநீதனிநடந்தவாறென்கொலென்றிசைத்தான்.

(இ - ள்.) தம்பியை-(அவ்வாறு வணங்கிய தன்) தம்பியாகிய வீமனை, (அனுமான்), தாழ் தட துணை கைகளால் எடுத்து - (முழங்காலளவும்)நீண்டு தொங்குகின்ற பெரிய (தனது) இரண்டுகைகளாலும் (அன்புடன்) எடுத்து, வம்பு சேர் மணி மால் வரை மார்பு உற அணைத்து-(வெற்றிப்பூமாலையணிந்திருத்தலால்) வாசனைபொருந்தின அழகிய பெரிய மலையையொத்த (தனது) மார்பிலே அழுந்தத்தழுவி,—'எம்பி - என்தம்பியே! நீ—, செம் தழல் பம்பு கானிடை - செந்நிறமுள்ள தீப்பொருந்திய இக்காட்டிலே, பதம் மலர் சிவப்ப - தாமரைமலர்போன்ற (உனது) கால்கள் செந்நிறமடையும்படி, தனி நடந்த ஆறு - (வேறுதுணையில்லாமல்) ஒன்றியாய் நடந்துவந்தது, என்கொல் - என்னகாரணத்தாலோ?' என்று இசைத்தான் - என்று வினவினான்; (எ-று.)

கைகள் நீண்டிருத்தல் - உத்தமபுருஷலக்ஷணம். தாழ்கை - ஆஜாநுபாகு. வம்புசேர்மணிமால்வரைமார்பென்பதற்கு (உலகத்தில் இதுவரையில்லாமற்) புதுமையாய்ப்பொருந்தினதொரு இரத்தினமயமானபெரியமலைபோன்ற மார்பு என்று உரைத்தலுமாம். அணைத்தல் - ஆலிங்கனம். செந்தழல் - காட்டுத்தீ. எம்பி - அண்மைவிளி. (௩அ)

39.—கானகத்தை யடைந்த காரணத்தை வீமசேனன் கூறுதல்.

தாயத்தாரும்வெவ்வஞ்சனைச்சகுனியுங்கூடி
மாயத்தாலொருகவறுகொண்டெங்கண்மண்கொண்டு
நேயத்தானெடுங்கானகநேர்ந்தனரென்றான்
சீயத்தாலரசிழந்திடுஞ்சிம்புளேறனையான்.

(இ - ள்.) சீயத்தால்-சிங்கத்தினால், அரசு இழந்திடும்-தலைமை யொழியப்பெற்ற, சிம்புள் ஏறு அனையான் - ஆண்சரபத்தை யொத்தவனாகிய வீமசேனன்,— நேயத்தால் - (அநுமானிடத்து) அன்புடன்,— 'தாயத்தார் உம்-(துரியோதனன்முதலிய) பங்காளிகளும், வெவ் வஞ்சனை சகுனி உம் - கொடிய வஞ்சகக்குணத்தையுடைய சகுனியும், கூடி-ஒன்றுசேர்ந்து, மாயத்தால் - மோசவழியால், ஒரு கவறுகொண்டு - ஒப்பற்ற சூதாட்டத்தைமேற்கொண்டு, எங்கள் மண் கொண்டு - எங்கள் இராச்சியத்தையும் பறித்துக்கொண்டு, நெடுங் கானகம் - நீண்ட காட்டினிடத்தை, நேர்ந்தனர் - (எங்கட்குவசிக்குமாறு) தந்தார்கள்,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

'கானிடைப் பதமலர்சிவப்பத் தனி நடந்தவாறு என்கொல்' என்ற வினாவை, 'கானகத்தில் நடந்தவாறு என்கொல்,' என்றும், 'தனிநடந்தவாறு என்கொல்?' என்றும் இரண்டாகப்பிரித்துக்கொண்டு, முதல் வினாவிற்கு இச்செய்யுளால் விடையிறுத்து, அடுத்தவினாவுக்கு அடுத்த செய்யுளால் விடையிறுக்கப்படும். சரபம் - இரண்டுதலைகளையும் சிறகுகளையும் கூரியநகமுள்ள எட்டுக்கால்களையும் மேல்நோக்கிய கண்களையுமுடையதொரு மிருகவிசேடம்: இதனைப் பறவையென்றலும் உண்டு. இது, சிங்கத்தை எளிதிற் கொல்லுந்திறமுடையது. இவ்வாறு சிறப்புப் பொருந்திய சரபம் சிங்கத்தினால் தன் தலைமை யொழியப் பெற்றாற்போலத் துரியோதனாதியரால் தலைமையொழியப்பெற்றோம் பாண்டவராகிய நாங்களென்று வீமன் கூறுகின்றானென்க. இவ்வுவமையால், தமக்கு இந்நிலைமை நேர்ந்தது விதிவசத்தாலென்று கூறியவாறு. (௩௯)

40.—இதுவும் அடுத்த கவியும் - ஒருதொடர்; தான் மலரின்பொருட்டு வந்ததைச் சொல்ல, அநுமான் கூறத்தொடங்குதல்.

திகந்தமெட்டினுந்தன்மணமெல்லெனச்செல்லச்
சுகந்தபுட்பமொன்றியாமுறைவனத்தினிற்றோன்றத்
தகைந்தவப்புதுமலர்தனைத்தழுன்மகள்காணு
வகைந்தவித்துணைமலரெனக்கருளுதியென்றாள்.

(இ - ள்.) திக் அந்தம் எட்டின்உம்-திக்குக்களினெல்லைக ளெட்டிலும், தன் மணம் ஒல்லென செல்ல - தன் பரிமளம் விரைவாகச் சென்று பரவும்படி, சுகந்தம் புட்பம் ஒன்று - நல்லவாசனையையுடையதொருமலர், யாம் உறை வனத்தினில் தோன்ற-நாங்கள் வசிக்கின்ற காட்டிலே வந்துகாணப்பட, தகைந்த அ புது மலர்தனை - (காண்பாரது கண்ணையும் மனத்தையுந் தன்னிடத்தொழிய வேறிடத்திற்செல்லவொட்டாது) தடுத்திட்ட அந்தப் புதுமையான பூவை, தழல் மகள் காணு - அக்கினியினிடத்தே அவதரித்த குமாரியான திரௌபதி கண்டு, வகைந்த இ துணை மலர் எனக்கு அருளுதி என்றாள்-சிறப்புப்பொருந்தின இத்தன்மையான மலர்களை எனக்கு(த்தேடிக் கொண்டுவந்து) கொடுத்தருளுவா யென்று(என்னை நோக்கிக்) கூறினாள்.

திகந்தம் - வடமொழிமுடிபு. ஒல்லென-விரைவுக்குறிப்பிடைச்சொல். தகைந்த - பெருமைபெற்ற என உரைத்தலுமாம்: விரிந்தஎன்று பொருளுரைப்பாருமுளர். நான்காமடியில், அகைந்த என்று பிரித்து, எழுந்த என்று உரைத்தாருமுளர். புதுமலர் - இதுவரை காணப்படாத மலர்: அதிசயிக்கத்தக்க மலர். (௪0)

41. ஆதலாலிவண்யானுமின்றணுகினனென்று
நீதியாலுயர்தம்முனைநெடுந்தகைபோற்றக்
கோதிலாதவங்குரிசிலுங்குமரனைநோக்கித்
தீதிலாயிதுகேட்கெனச்செப்புவன்மாதோ.

(இ - ள்.) ஆதலால்-ஆகையினால், இவண்-இவ்விடத்தில், இன்று-இப்பொழுது, யான்உம் அணுகினன் - நானும் வந்துசேர்ந்தேன், என்று - என்று சொல்லி, நீதியால் உயர் தம்முனை-நியாயத்தாற்சிறந்த தமையனான அனுமானை, நெடுந் தகை - பெருமைக்குணமுடையவீமன், போற்ற - துதிக்க,—கோது இலாத அ குரிசில்உம்-குற்றமில்லாத பெருமையிற் சிறந்த அவ்வனுமானும், குமரனை நோக்கி - இளையவனான வீமனைப்பார்த்து, தீது இலாய் இது கேட்க என - குற்றமில்லாதவனே! (யான் சொல்லும்) இவ்வார்த்தையைக் கேட்பாயாகவென்று கூறி, செப்புவன் - (சிலவார்த்தைகள்) கூறுபவனானான்; (எ - று.)—அதனை அடுத்த கவிகளிற் காண்க.

நெடுந் தகை - பண்புத்தொகையன்மொழி. இலாய்-இலான் என்பதன் விளி. கேட்கென, அகரவீறு - தொகுத்தல். மாது ஓ - ஈற்றசை. (௪க)

42.—மூன்றுகவிகள் - அநுமான்வார்த்தை:

அம்மலருள்ள இடம் முதலியவற்றைக் கூறுதலைத் தெரிவிக்கும்.

அருநிதிக்கிழவன்றனதளகைமாநகரின்
மருமிகுத்தநீண்மஞ்சனவாவியின்கரையின்
றருமலர்ப்பெருஞ்சோலையிற்றங்குமம்மலர்சென்
றுரிமையுற்றதுகோடன்மற்றும்பர்க்குமரிதால்.

(இ - ள்.) அரு நிதி கிழவன்தனது அளகை மா நகரில் - அருமையான நிதிகளுக்குத் தலைவனான குபேரனது (இராசதானியான) பெரிய அளகாபுரி

யிலே, மலர் தரு பெரு சோலையின் - மலர்மரங்களையுடைய பெரியதொரு சோலையிலே, மரு மிகுத்த நீள் மஞ்சனம் வாவியின் கரையின் - வாசனையை மிகவீசுகிற பெரிய நீராடுதற்குரிய தடாகத்தினது கரையிலே, அம் மலர் - அந்த அழகிய பூ, தங்கும் - பொருந்தியுள்ளது; சென்று - (அங்குப்) போய், உரிமை உற்று - சுதந்திரம்பெற்று, அது கோடல்-அம்மலரைப் பெறுதல், உம்பர்க்கு உம் அரிது - மேலுலகத்திலுள்ள தெய்வத்தன்மையுடைய தேவர்களுக்கும் அருமையானது; (எ - று.)

'பாடக்கிரமத்தினும் பொருள்கொள்ளும்முறை வலியுடைத்து' என்ற நியாயத்தை யனுசரித்து, மூன்றுமடியை முன்னும், இரண்டாமடியை அதன் பின்னும் எடுத்துக்கொண்டு பொருள் உரைக்கப்பட்டது. வாவியின்கரை என்றது-நீர்நிலையின்நடுவரையிற்செல்லவேண்டாவென்றற்கு. இனி, இக்கவியின் இரண்டுமூன்று மடிகளை உள்ளபடியே பொருள்கூறி, இம்மலர் கோட்டுப்பூவேயாகும், நீர்ப்பூவன்று என்று சாதிப்பாரு முளர். குபேரனுக்கு 'நிதிபதி'என்று வடமொழியிற்பெய ராதலால், அவனை 'அருநிதிக்கிழவன்' என்றார். குபேரனது உத்தியானவனம், சைத்திரரதமெனப்படும். கிழவன், கிழமை - பகுதி : கிழமை - உரிமை. மஞ்சனம், வாவி - மஜ்ஜநம், வாபீஎன்னும் வடசொற்சிதைவுகள். உம்பர்க்கும், உம்-உயர்வுசிறப்பு. அது - சாதியொருமை. மற்று, ஆல் - அசைகள். (சஉ)

43\. ஈறிலாவிகலரக்கரோடியக்கர்தங்காவல்
கூறும்வாசகம்பொய்ப்பவர்கூர்தவமுயலும்
பேறிலாதவர்பேரருளிலாதவர்பிறிது
மாறிலாதவர்தமக்குமங்கணுகுதலரிதால்.

(இ-ள்.) இகல் - வலிமையையுடைய, ஈறு இலா-இறுதியில்லாத [மிகப்பல], அரக்கரோடு-அரக்கருடனே, இயக்கர்தம்-இயக்கருடைய, காவல்-காவலைக்கொண்ட, அங்கு - அவ்விடத்திலே,— கூறும் வாசகம் பொய்ப்பவர் - சொன்னசொல் தவறுபவர்க்கும், கூர் தவம் முயலும் பேறு இலாதவர் - மிக்கதவத்திலே முயலுகின்ற பாக்கியமில்லாதவர்க்கும், பேர் அருள் இலாதவர் - பெருமைபெற்ற கருணையில்லாதவர்க்கும், பிறிதுஉம் ஆறு இலாதவர் தமக்குஉம்-மற்றும் நன்னெறியிலே செல்லமாட்டாதவர்க்கும், அணுகுதல் - நெருங்குவது, அரிது - முடியாது : (எ - று.)—ஆல் - ஈற்றசை : தேற்றமுமாம். (சங)

44\. அறிவும்வாய்மையுந்தூய்மையுமன்புமின்னருளும்
பொறையுஞானமுங்கல்வியும்புரிபெருந்தவமு
நெறியுமானமும்வீரமுநின்னைவாதலின்றூற்
பெறவுனக்கரிதாயதேதென்றனன்பெரியோன்.

(இ - ள்.) அறிவு உம் - புத்தியும், வாய்மை உம் - சத்தியமும், தூய்மை உம்-மனச்சுத்தியும், அன்பும்—, இன் அருள் உம் - இனிய கருணையும், பொறை உம்-பொறுமையும், ஞானம் உம்-கல்வியறிவும், கல்விஉம்—, புரி பெருந்தவம்உம் - செய்கின்ற மிக்கதவமும், நெறிஉம்-நீதியும், மானம்

உம்-ரோஷமும், வீரம்உம் - பராக்கிரமமும், நின்ன-நின்னிடத்திலுள்ளன : ஆதலினால்—, உனக்கு பெற அரிது ஆயது எது - உனக்குப்பெறுதற்கு அருமையாயிருப்பது எது ? என்றனன் - என்று கூறினான்: (யாவனெனில்),— பெரியோன் - பெருந்தோற்றமுள்ளவனாகிய அநுமான் ; (எ - று.)—பெரியோன் - மூத்தோனெனினுமாம்.

இதனால், அறிவுமுதலியவற்றைப்பெற்றுள்ள உன்னால் அந்தமலர் பெறுதற்குஎளிதேயென்று கூறியவாறு. அறிவுஎன்பது - இயற்கையறிவையும், ஞானம்என்பது - கல்வி கேள்விகளினாலாகிய செயற்கையறிவையுங் காட்டுமென்க. நின்ன - பலவின்பால்முற்று. (௪௪)

**45.—இரண்டுகவிகள்-ஒருதொடர் : ஏற்றதுணைஇருத்தலால் யாவர்காத்தாலும் மலரைக்கவர்வேனென்று வீமன் கூறுதல்.**

முன்னவன்புகலுறுதிகூர்மொழியெலாங்கேட்டுப்
பின்னவன்றொழுதிவையிவைபேசினன்பின்னு
மன்னர்மன்னவனறமுண்டுமறமுண்டுவழுக்கே
யுன்னிலுன்னருளுண்டுதிண்டோளுரமுண்டால்.

(இ - ள்.) முன்னவன் - தமையனாகிய அநுமான், புகல் - கூறிய, உறுதி கூர் - நிச்சயம்மிக்க, மொழிஎலாம்-வார்த்தையெல்லாவற்றையும், கேட்டு—,—பின்னவன் - தம்பியாகிய வீமன், தொழுது - (அநுமானை) வணங்கி, இவை இவை - இவ்விவ்வார்த்தைகளை, பின்னும் பேசினன் - மேலும் பேசலானான்: மன்னர் மன்னவன் - அரசர்க்குட்சிறந்தவனான தருமபுத்திரனுடைய, அறம் - தருமம், உண்டு - இருக்கிறது : மறம் உண்டு - ரோஷம் உள்ளது : வழக்கு உன்னில் - முறைமையாக ஆலோசித்தால்,— உன் அருள்உண்டு-உன்னுடைய கருணையுண்டு. திண் தோள் உரம் உண்டு- (என்னுடைய) வலியதோளின் வலியும் உள்ளது ; (எ - று.)

இவையெல்லாம் மலரைக்கொணர்தற்குத் துணையாகுமென்றவாறு. 'திண்டோளுரமுண்டு' என்று தன் தோள்வலிமையைச் சொல்லுவதால், மறம்என்றது - ரோஷத்தையென்க. (௪௫)

46\. தேவர்காக்கினுந்தெயித்தியர்காக்கினுஞ்சிறந்த
மூவர்காக்கினுமுறைமுறைமொழிந்தமூவுலகில்
யாவர்காக்கினுமிக்கணத்தியக்கரூரெய்திக்
காவின்மேற்பயில்கடிமலர்கவருவேனென்றான்.

(இ-ள்.) தேவர் காக்கின்உம்-தேவர்கள் காவல் புரிந்தாலும், தெயித்தியர் காக்கின்உம் - அசுரர்கள் காவல்புரிந்தாலும், சிறந்த மூவர் காக்கின் உம் - தேவர்களுட்சிறந்த (சிவன் விஷ்ணு பிரமன்என்ற) திரிமூர்த்திகள் காவல்புரிந்தாலும், முறை முறை மொழிந்த மூ உலகில் - முறைமுறையே சொல்லப்பட்ட மூவுலகத்திலும், யாவர் காக்கின்உம் - எப்படிப்பட்ட மேன்மையுடையோர் காவல்புரிந்தாலும், இ கணத்து - இந்தநொடியிலேயே, இயக்கர் ஊர் எய்தி - இயக்கரின்ஊரை யடைந்து, காவின்மேல் -

சோலையிலே, பயில் - இருக்கின்ற, கடி மலர் - நறுமணமுள்ள மலரை, கவருவேன் - பறித்துக்கொண்டுவருவேன், என்றான் - என்று கூறினான்; (எ-று)

உம்மைகள் - சிறப்புப்பொருளன. மோனைநோக்கி, 'தெயித்தியர்' என வந்தது. (சசு)

47.—அநுமான் 'நீ விரும்பிய வரத்தைக் கேள்' எனல்.

ஆண்டவன்புகலுறுதியுமாண்மையுங்கேட்டு
நீண்டதோள்வயமாருதிநெடிதுவந்தருளிப்
பாண்டவன்றனைப்பண்புறப்பரிவினானோக்கி
வேண்டுநல்வரம்வேண்டுகவீண்டைநீயென்றான்.

(இ - ள்.) ஆண்டு - அப்போது, அவன் - அந்த வீமசேனன், புகல் - கூறிய, உறுதிஉம் - உறுதியுள்ள வார்த்தையையும், ஆண்மைஉம் - வீரந்தோற்றுஞ்சொல்லையும், கேட்டு—,—நீண்ட தோள் வய மாருதி - நீண்ட தோள்களையும் வலிமையையுமுடைய அனுமான், நெடிது உவந்தருளி - மிக மகிழ்ந்து,—பாண்டவன்தனை - பாண்டுகுமாரனாகிய அந்த வீமசேனனை, பண்புஉற - நல்லதன்மைகள் பொருந்துமாறு, பரிவினால் நோக்கி - அன்போடுபார்த்து, 'ஈண்டை - இப்பொழுது, வேண்டும் - (உன்மனம்) விரும்புகின்ற, நல் வரம் - சிறந்தவரத்தை, நீ—, வேண்டுக - கேட்டுப்பெற்றுக்கொள்வாயாக', என்றான் - என்று கூறினான்; (எ - று.)

ஆண்மை - ஆண்மைதோன்றக் கூறுஞ் சொற்களுக்கு ஆகுபெயர். வயம்என்றுபிரித்தால், வெற்றியென்று பொருள். (சஎ)

48.—போரில் அருச்சுனன் தேர்க்கொடிமீது எழுந்தருளிக் கூத்தாடுமாறு வீமன் வரம்வேண்டுதல்.

நெடியகானகநீங்கியாநெறியிலோரலரைக்
கடியவெஞ்செருப்புரிபெருங்குருதிவெங்களத்தி
லடிகளாங்கெழுந்தருளிவந்தருச்சுனன்றடந்தேர்க்
கொடியின்மீதுநின்றுவந்துகூத்தாடுதிரென்றான்.

(இ - ள்.) யாம் - நாங்கள், நெடிய கானகம் நீங்கி - (காட்டில்வசிக்க வேண்டிய நாட்களையெல்லாம் வசித்துக் கழித்து இந்த) நெடியகாட்டை விட்டுப்போய்,—நெறி இல் நேரலரை - நன்னெறியிற் செல்லுதலில்லாத (எம்)பகைவரை, கடிய வெம் செரு புரி பெருங் குருதி வெம் களத்தில் - மிகக்கொடிய போரைச் செய்தற்கு இடமானதும் மிக்க இரத்தவெள்ளம் பாயப்பெற்றதுமான கொடியபோர்க்களத்திலே, ஆங்கு - அப்போது, அடிகள் - பெரியோரே! எழுந்தருளிவந்து—, அருச்சுனன் தட தேர் கொடியின்மீது - அருச்சுனனுடைய பெரியதேரின்கொடிமீது, நின்று—, உவந்து - மகிழ்ந்து, கூத்தாடுதிர் - கூத்தாடுவீராக, என்றான் - என்று (வீமன் அனுமானிடம்) வரம்வேண்டினான்; (எ - று.)

நெறியின் - முறைமையாக, செருப் புரிஎனினுமாம். (சஅ)

49.—அவ்வரத்தை வீமனுக்கு அநுமான்தர, இலங்கையில் தீயிட்ட போதுகொண்ட உருவத்தைக் காட்டுமாறு வீமன் வேண்டுதல்.

*நீட்டுமவ்வரமவனுக்குநேர்ந்தனனனுமான்*
*மீட்டுநல்வரமொன்றுமுன்வேண்டினன்வீம*
*னீட்டுமாநிதியிலங்கைதீயிட்டநாளிசைந்த*
*மோட்டுருத்தனைக்காட்டுகென்றிறைஞ்சினன்முதல்வன்.*

(இ - ள்.) நீட்டும் - (வீமன்) கேட்ட, அ வரம் - அந்தவரத்தை, அவனுக்கு - அந்தவீமசேனனுக்கு, அனுமான்—, நேர்ந்தனன் - (தந்ததாக) உடன்பட்டுக்கூறினான்: முதல்வன் (வீரரில்) மேம்பட்டவனான, வீமன்—, மீட்டும் - மறுபடியும், 'ஈட்டும் - மிகுதியாகச் சேர்க்கப்பட்டுள்ள, மா நிதி - மிக்க செல்வத்தையுடைய, இலங்கை - இலங்கையிலே, தீ இட்ட நாள் - நெருப்புவைத்த காலத்தில், இசைந்த - கொண்டிருந்த, மோடு உருதனை - பருத்த உருவத்தை, காட்டுக-காட்டுவாயாக,' என்று—, இறைஞ்சினன்-வணங்கினவனாகி,—நல் வரம் ஒன்று - சிறந்த ஒருவரத்தை, முன் - அவ்வனுமானெதிரே, வேண்டினன்—; (எ - று.)

இறைஞ்சினன்-முற்றெச்சம். காட்டுகென்று-வியங்கோளின் அகரவீறு தொகுத்தல். 'இலங்கை தீயிட்ட நாள்' என்றபோதிலும், கடல்கடந்தவுருவத்தைக் காட்டு என்று வினவியதாகக் கருத்துக் காணலாம்: அப்போது பேருருக்கொண்டமையே பிரசித்தம். (சக)

வேறு

50.—உடனே அனுமான் திரிவிக்கிரமனைப்போல் பேருருக்கோள்ளுதல்.

*என்றடல் வீம னிசைத்திடு முன்ன*
*மொன்றியிவ் வேழுல கங்களு மொன்று*
*மன்றுள தார்புனை வாமன னைப்போ*
*னின்றுநி மிர்ந்தன னித்தமு முள்ளான்.*

(இ - ள்.) என்று—, அடல் வீமன் - வலிமையையுடைய வீமசேனன், இசைத்திடும் முன்னம்-சொல்லுதற்குமுன்பு [சொன்னவுடனே என்றபடி],—நித்தம்உம் உள்ளான் - எப்போதும் உள்ளவனான [சிரஞ்சீவியாகிய] அநுமான்,—இ எழ் உலகங்கள்உம் ஒன்றி ஒன்றுஆம் - இந்த ஏழுலகங்களிலும் பொருந்தி ஒன்றாகவுள்ள, மன்று உள தார் புனை வாமனனை போல்-வாசனையுள்ள மாலையையணிந்த வாமனனைப்போல, நின்று நிமிர்ந்தனன் - எழுந்து நின்று உயரலானான்; (எ - று.)

மன்று-மன்றல்: மன்றம் எனவும் வரும். வாமனன்என்பது - திருமாலின் ஐந்தாமவதாரம்: அவன் மகாபலிபக்கல் சென்று தன்காலடியால் மூவடிமண் கொடுக்குமாறு அவ்வரசனிடத்து வேண்டிப் பெற்றுத் திரிவிக்கிரமனாகிப் பேருருவெடுத்து மண்ணெல்லாம் ஓரடியாகவும், விண்ணெல்லாம் மற்றோரடியாகவும் அளந்து மற்றோரடி மண்கொடுப்பதற்காக அந்த மகாபலியைச் சிறைவைத்தா னென்பு.

இதுமுதல் முப்பத்திரண்டுகவிகள் - பெரும்பாலும் ஒன்றுமூன்றுஞ்சீர்கள் விளச்சீர்களும், மற்றவை மாச்சீர்களுமாகிவந்த கலிவிருத்தங்கள். (ரு0)

51.—அநுமானது பெருந்தோற்றம்.

படியினதெல்லைபதத்தினதெல்லை
மடியினதெல்லையவ்வானினதெல்லை
யடியினதெல்லையளப்பரிதென்றான்
முடியினதெல்லைமொழிந்திடலாமோ.

(இ - ள்.) பதத்தினது - அடிவைப்பினுடைய, எல்லை - பரப்பளவு,— படியினதுஎல்லை - பூமியின்பரப்பின் அளவாகும்: மடியினதுஎல்லை—, அவ்வானினது எல்லை - அந்தவானினெல்லையளவாகும்: அடியினது - காலின், எல்லை—, அளப்பு அரிது-அளத்தற்குமுடியாது, என்றால்—, முடியினது-சிரசின், எல்லை—, மொழிந்திடல் ஆம்ஓ-சொல்லுதற்கு முடியுமோ? (எ-று.)

பதமென்றது - நிலத்தில் கால் ஊன்றுகின்ற பகுதி. அடிஎன்றது - உடம்பின்நாலில் ஒருகூறாய், அதனால் கால்என்று வழங்குதற்குஉரியதாய் முழங்காற்குக்கீழ்ப்பட்டுள்ள பாகம். அந்தக்கால் கண்ணாற்காணுதற்கு எளியது: அப்பகுதியே கண்ணாற் காணமுடியாதபோது மேற்பகுதியாகிய சிரசு கண்ணாற் காணமுடியாதென்பது திண்ணமாதலால், முடியினதெல்லையைப்பற்றிச் சொல்லமுடியுமோ? முடியாதென்கிறார்: தொடர்நிலைச் செய்யுட்பொருட்பேறணி. (ருக)

52.—அநுமானுடம்பைச்சுற்றிய வாலின் தோற்றம்.

அந்தரமெங்குமடக்கியமெய்யிற்
சுந்தரவாலதிசுற்றியதோற்ற
முந்தியநீளுடல்வாசுகிமுன்னாண்
மந்தரவெற்பைவளைத்ததுமானும்.

(இ - ள்.) அந்தரம் எங்குஉம் அடக்கிய மெய்யின் - ஆகாயத்தினிடமுழுவதையும் தன்னதாக்கிக்கொண்ட (அநுமானுடைய) உடம்பிலே, சுந்தரம் வாலதி சுற்றிய தோற்றம்-அழகிய வால் சுற்றிக்கொண்டிருந்த காட்சி,— முன்நாள் - (தேவாசுரர்கள் பாற்கடலைக் கடைந்த) முற்காலத்தில், மந்தரம் வெற்பை - மந்தரமென்ற மலையை, முந்திய வாசுகி நீள் உடல் - விரைவு பொருந்திய வாசுகியின் நீண்ட உடலானது, வளைத்தது - சுற்றிக்கொண்டிருந்ததை, மானும் - ஒக்கும்; (எ - று.)

அநுமானுக்கு மந்தரமலையும், அவனுடலைச்சுற்றிய வாலுக்கு அந்தமந்தரமலையைச்சுற்றிய வாசுகியினுடலும் உவமை யெனக் காண்க. (ருஉ)

53.—அநுமானுடலின் வருணனை.

நீளகல்வானநெருங்கமருங்கே
தோள்புறவாலதிசூழ்தரநிற்போ
னொளொடுதாரகைஞாயிறுமுதலாங்
கோளணிசூழ்வருகுன்றமுமொத்தான்.

(இ - ள்.) நீள் அகல் வானம் - நீண்ட பரந்த வானம், மருங்கு நெருங்க - பக்கத்தில்தானே நெருங்கவும், தோள் புறம் - தோளினிடத்தே, வாலதி சூழ்தர - வால் வட்டமாகச்சூழவும், நிற்போன் - நிற்பவனாகிய அனுமான்,— நாளொடு - (அசுவினிமுதலிய) நட்சத்திரங்களுடனே, தாரகை - (மற்றுமுள்ள) நட்சத்திரங்களும், ஞாயிறு முதல்ஆம் கோள்-சூரியன்முதலிய நவகிரகங்களும், அணி - முறையாக, சூழ்வரு - பிரதட்சிணஞ்செய்கின்ற, குன்றம்உம் - மேருமலையையும், ஒத்தான் - ஒத்திருந்தான் ; (எ - று.)

சிரசு வானத்திலே நெருங்க, தோளினிடத்து வாலதி சூழ்தர நிற்கும் அனுமான், தன்சிகரம் வானத்துநெருங்கத் தோட்பகுதியிலே நாள் தாரகை கோள் என்ற இவை சூழ்ந்துவரப்பெறும் மேருமலையைப்போன்றனன் என்க.

54.—வானவர் அனுமானுருவைக்கண்டு வியத்தல்.

இவ்வகைமுன்னமிலங்கையெரித்தான்
பைவருநாகர்பணஞ்சுளியத்திண்
மெய்வகைகொண்டதுகண்டுவியந்தார்
மைவகைசேரகல்வானவரெல்லாம்.

(இ - ள்.) முன்னம் இலங்கை எரித்தான் - முன்பு இலங்காபுரியை யெரித்தவனாகிய அனுமான்,— இவகை - இவ்வாறு, பை வரு நாகர் பணம் சுளிய - படம்பொருந்திய நாகலோகத்துள்ளவரான அஷ்டமகாநாகர்களின் படங்கள் (சுமைமிகுதியால்) சுருங்க, திண் - வலிய, மெய் வகை - உடம்பின் வடிவத்தை, கொண்டது - கொண்டதை, மை வகை சேர் அகல் வானவர் எல்லாம் - மேகங்களின் வகை சேர்தற்குஇடமான அகன்ற வானுலகத்தவரான தேவர்களெல்லாம், கண்டு—, வியந்தார்-ஆச்சரியமடைந்தார்; (எ-று.)

அநுமானது வலிய பேருருவத்தின்சுமை பூமியின்கீழிருந்து தாங்கும் நாகர்களின் படங்களை யழுத்துவதனால், அவை சுருங்குமென்க. சம்வர்த்தம் முதலாக மேகங்கள் எழுவகைப்படுமாதலால், 'மைவகைசேரகல்வான்' என்றது. நாகர்பணங்கள்சலிக்க என்று பிரதிபேதம். (ருச)

55.—வீமன் அநுமானைக் காலினளவுக்குமேற் காணமாட்டாமை.

மேலளவாதுவிளங்கியசொன்மெய்ந்
நூலளவாகியநுண்ணறிவோர்போல்
மாலளவன்றிவணங்குதலில்லான்
காலளவல்லதுகண்டிலன்வீமன்.

(இ - ள்.) மேல் அளவாது - மேலெழுந்தவாறுபோகாமல் [ஆழ்ந்து ஊடுருவிப்போய்], விளங்கிய - (அதனால் புத்திக்குத்) தெளிவாகத்தெரிந்த, சொல் - (பல அருமையான விஷயங்களைச்) சொல்லுகின்ற, மெய் நூல் - தத்துவசாஸ்திரங்களின், அளவு ஆகிய - அளவிலேபொருந்திய, நுண் அறிவோர் போல் - நுட்பமான அறிவையுடையவர்போல,—வீமன்—, —மால் அளவு அன்றி வணங்குதல் இல்லான் - (ஸ்ரீராமபிரானாகிய) திருமாலின் பெருமையை(வியந்து அவனை)அன்றி (வேறொருகடவுளை) வணங்குதலில்

லாத அந்த அநுமானுடைய, கால் அளவு அல்லது - காலினளவையன்றி, கண்டிலன் - மேலே காணமாட்டாதவனாயினான் ; ( எ - று.)

நுண்ணறிவோர்போல மாலளவன்றி வணங்குதலில்லான் என்று கூட்டாது, நுண்ணறிவோர் பரம்பொருளின் திருவடிகளிலேயே பக்தி செலுத்துபவராதல்போல, வீமனும் காலளவே கண்டனன் என்று உரைத்தலும் ஒன்று. மேலளத்தல் - ஆழ்ந்து நோக்காது நுனிப்புல் மேய்ச்சலாக அறிதல். (ருரு)

56.—வீமன் அந்த அநுமானது சோதிமேனியைக் கண்கொண்டு பார்க்க முடியாது சுருக்கிக்கொள்ளுமாறுவேண்டுதல்.

அருக்கனின்மும்மடியாரொளிவீசு
முருக்கிளர்மேனியையூடுறநோக்கா
வெருக்கொடுதாண்மிசைவீழ்ந்தனன்மீண்டுஞ்
சுருக்குகவென்றுதுதித்தனன்வீமன்.

(இ - ள்.) அருக்கனின்-சூரியனைக்காட்டிலும், மும் மடி-மூன்று மடங்கு மிகுதியாக, ஆர் ஒளி வீசும் - மிக்கபேரொளியை வீசுகிற,—உரு கிளர் மேனியை - உருவத்தோடு விளங்குகின்ற உடலை, ஊடு உற நோக்கா-உள்ளுறப்பார்க்கமுடியாமல், வீமன்—,—வெரு கொடு-(புத்தியில்) அச்சமடைந்து, மீண்டுஉம் தாள்மிசை வீழ்ந்தனன் - மறுபடியும் (அந்த அநுமானது) பாதங்களில் வீழ்ந்து, சுருக்குக என்று துதித்தனன்-(இந்தப்பேருருவத்தைச்) சுருக்கிக்கொள்வாயாக என்று தோத்திரஞ்செய்தான் ; (எ - று.)

கீழ் 49-ஆங் கவியில் "மோட்டுருத்தனைக் காட்டுக என்றிறைஞ்சினன் முதல்வன்" என்று பேருருவைக் காட்டுமாறு அனுமானை வீமன் இறைஞ்சினமை கூறப்பட்டதனால், 'மீண்டும் தாண்மிசைவீழ்ந்தனன்' என்றது.(ருசு)

57.—அநுமான் தன்மேனியை யொடுக்கிக்கொள்ளுதல்.

அந்தமுமாதியுமற்றவருக்கஞ்
செந்தமிழ்செய்துதிரட்டினரைப்போ
லந்தரவானுமகண்டமுமொன்றா
வுந்தியமேனியொடுக்கினனம்மா.

(இ - ள்.) அந்தம் உம் ஆதிஉம் அற்றவருக்கு - ஆதியந்தமில்லாத கடவுளின் திறத்திலே, அம் செந் தமிழ் செய்து - அழகிய செந்தமிழ்ப் பிரபந்தத்தை யியற்றி, திரட்டினரை போல் - தொகுத்துள்ள ஞானியரைப்போல, அந்தரம் வான் உம் அகண்டம் உம் - அந்தரமென்று சொல்லப்படும் வானத்தையும் இந்த நிலவுலகத்தையும், ஒன்றுஆ உந்திய - ஒன்றாகச்செலுத்திய, மேனி - (தன்) மேனியை, ஒடுக்கினன் - சுருக்கிக்கொண்டான் ; (எ - று.)

கடவுள் ஞானமுள்ள பெரியோர் அக்கடவுளின் திறத்துப் பக்திப் பாடல்கள் பலபாடித்திரட்டினும் தாம் அடங்கிநிற்பதுபோல இவனும் அடங்கினின்றா னென்பதாம். அந்தமுமாதியுமற்றவருக்கு அம் செந்தமிழ் செய்து திரட்டினர் என்றது - நம்மாழ்வாரைக் குறிக்குமென்னலாம் : ஆழ்

வார்களைக் காட்டுமென்னவுமாம்: வேறுவகை கூறுவாருமுளர். தமிழ்ப்பிரபந்தத்திற்குக் காரணவாகுபெயர். அம்மா - வியப்பிடைச்சொல்: பேருருவை இவன் வேண்டியமாத்திரத்து ஒடுக்கினமை பற்றியது. (கஎ)

5௮.—தன்பிழையைப் பொறுக்குமாறு வீமன் அநுமானிடம் வேண்டுதல்.

இந்திரசாலமியற்றினரைப்போல்
மைந்தொடுதொல்லையில்வடிவுகொள்பொழுதத்
தந்தமிலாயடியேன்பிழையெல்லாம்
புந்தியுறுதுபொறுத்தருளென்றான்.

(இ - ள்.) இந்திரசாலம் இயற்றினரை போல் - மாயவித்தை செய்தவரைப்போல, மைந்தொடு-(தன்) வலிமையுடனே, தொல்லையில் வடிவு கொள் பொழுதத்து - பழமையான (தன்) வடிவை அநுமான் கொண்டபோது,—(அந்த அநுமானை நோக்கி வீமசேனன்), அந்தம் இலாய் - அழிவில்லாதவனே [சிரஞ்சீவியே]! அடியேன் பிழைஎல்லாம் - நான் உன்னைப்பற்றி அலட்சியமாகக் கருதிச்செய்த பிழையையெல்லாம், புந்திஉறுது - மனத்திற்கொள்ளாமல், பொறுத்தருள் - பொறுத்தருள்வாய், என்றான்—; (எ - று.)

அநுமானைச் சாதாரணக்குரங்கெனக் கருதி முந்துறப் பேசியது முதலியவற்றை மனத்திற்கொண்டு, வீமசேனன், இங்ஙனம் அபராதக்ஷாமணம் செய்துகொள்ளுகின்றனன். (கஅ)

59.—அநுமான்பாதங்களில் வீமன் வீழ, அவன் கூறலுறுதல்.

திருவடிதன்னிருசேவடியிற்போய்
மருவடிதார்புனைமாருதிதொழவே
யருள்வடிவாகியகண்டமுமெங்கு
மொருவடிவானவனுற்றுரைசெய்வான்.

(இ - ள்.) திருவடிதன் - அநுமானுடைய, இரு சேஅடியில் - இரண்டான செவ்வியபாதங்களில், போய்-கிட்டி, மரு வடி தார் புனை மாருதி - வாசனையை வெளிப்படுத்துகின்ற மாலையையணிந்த வாயுகுமாரனான வீமசேனன், தொழ - தண்டனிட,—அருள் வடிவு ஆகி அகண்டம்உம் எங்குஉம் ஒருவடிவு ஆனவன் - அருளே ஒருவடிவுஎடுத்தாற்போலப் பேரருளுடையவனாகி பூமிமுழுவதும் எல்லாவிடத்தும் அமையுமாறு ஒப்பற்ற பேருருவெடுத்த அந்தஅநுமான், உற்று-மனம்பொருந்தி, உரைசெய்வான்-(பின்வருமாறு)பேசுவானானான்; (எ-று.)—அநுமான் பேசுவதை மேற்செய்யுளிற் காண்க.

அருவடிவாகிஎன்றும் பாடம். திருவடி என்பது - அநுமானுக்கு வைஷ்ணவசம்பிரதாயத்தில வழங்கும்பெயர்: இவர் இராமபிரானுக்கு வாகனமாகி அப்பிரானது திருவடிகளை யேந்தினவராதலால், இப்பெயர் பெறுவர். மாருதிவிழவேஎன்றும், அருவடிவாகிஎன்றும்பிரதிபேதம்.(கக)

60.—அனுமான் அருளியது.

உன்னருகேபயிலும்பியரோடு
மின்னருகேபயில்வேந்தொடும்வாழ்வுற்
றென்னருகேவருகென்றனனென்றுந்
தன்னருகேதமுறாததவத்தோன்.

(இ - ள்.) என்றும் - எப்போதும், தன்அருகு - தன்சமீபத்திலும், ஏதம்-குற்றமென்பது, உறாத - பொருந்தப்பெறாத, தவத்தோன் - தவத்தையுடையவனாகிய அநுமான்,—(வீமனைநோக்கி), 'உன் அருகு-உனது சமீபத்திலே, பயில்-பழகுகின்ற, உம்பியரோடும் - உனதுதம்பிமாரோடும், மின் அருகு பயில்-மின்னல்போன்ற திரௌபதி தன்னருகே (அக்கினிகாரியத்தின் பொருட்டுப்) பொருந்தப்பெற்ற, வேந்தொடும் - யுதிட்டிரராசனோடும், வாழ்வுஉற்று-(இவ்வுலகில் வாழவேண்டியநாள் முழுவதிலும்) வாழ்ந்திருந்து, (பிறகு), என் அருகு வருக—, என்றனன் - என்று கூறினான்; (எ - று.)

மின் - உவமையாகுபெயர். வேந்து - பண்பாகுபெயர். (சு0)

61.—வீமன் இபக்கநர்க்குச்செல்ல வழிகூறுமாறு அநுமானை வேண்டுதல்

அங்கவனம்மொழிகூறலுமையா
வெங்கணுநின்னுயரின்னருளுண்டே
பங்கயமாநிதிவாழ்பதியெய்தச்
சங்கையினன்னெறிசாற்றுகவென்றான்.

(இ - ள்.) அங்கு - அப்போது, அவன்-அந்த அனுமான்,—அம்மொழி-அவ்வார்த்தையை, கூறலும் - சொன்னவுடனே,—(வீமசேனன் அனுமானை நோக்கி),—'ஐயா—! நின் உயர் இன் அருள் எங்கண்உம் உண்டு ஏ - உன்னுடைய உயரிய இனிய அருள் (எனக்கு) எங்கும் உள்ளதன்றே! (ஆதலால்), பங்கயம் மா நிதி வாழ்-பதுமநிதியுள்ளதான, பதி-ஊரை, எய்த-அடைதற்கு, சங்கை இல் நல் நெறி-சந்தேகிக்கவேண்டுவது இல்லாத நல்ல வழியை, சாற்றுக - சொல்வாயாக', என்றான்—; (எ - று.)

பங்கயமாநிதி - பதுமநிதி: இது, நவநிதிகளுள் ஒன்று: குபேரன் நவநிதிநாயகனாதலால், அங்குப் பதுமநிதியும் உள்ளதென்க. (சுக)

62.—இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: அநுமான் வாசமலருள்ள இடத்திற்குச்செல்லும் நெறிகூறி அந்தமலரைக்கொள்ளுதற்குஉரிய உபாயத்தையுங் கூறுவது.

என்றலுமிந்தவனத்தினதெல்லை
யொன்றியவோசனையோரிருநூறு
சென்றபின்யோசனைசிற்சிலசென்றால்
மன்றன்மலர்பொழில்வாவியின்மன்னும்.

(இ - ள்.) என்றலும்-என்று (வீமன் அநுமானை) வினாவியவுடனே,—இந்த வனத்தினது-இந்தக்கதலீவனத்தின், எல்லை - எல்லையினின்றும், ஒன்றிய ஓர் இருநூறு ஓசனை சென்றபின் - பொருந்திய இருநூறுயோசனை தூரங் கடந்துசென்றபின்பு, யோசனை சில் சில சென்றால் - பின்னுஞ் சில

யோசனைதூரம் கடந்துபோனால், (அங்கு), மன்றல் மலர்-நறுமணமுள்ள இதுபோன்ற மலர், பொழில் வாவியின்-சோலையிலுள்ள நீர்நிலையிலே, மன்னும் - பொருந்தியிருக்கும்; (எ - று.)

மன்றல்மலர்ப்பொழில் என்று பாடமுரைத்து, மன்றல் மலரைக் கொண்ட பொழிலானது, வாவியின் - வாவியோடு, மன்னும் என்பாருமுளர். யோசனை-நாற்காததூரம். ஓசனை-மரூஉமொழி. (சுஉ)

63. அப்பொழில்காவலரக்கரனேக
ரெப்பொழிலுந்திறைகொள்ளுமெயிற்றார்
துப்புடனேயவராவிதொலைத்தாற்
செப்பியமாமலர்சென்றுறலாகும்.

(இ - ள்.) அ பொழில் காவல் - அந்தச்சோலையைப்பாதுகாத்தலையுடைய, அரக்கர் அநேகர் - அநேகராட்சசர்(உளர்): (அவர்கள்),—எ பொழில்உம்-எல்லாவுலகத்தையும், திறை கொள்ளும்-திறையாகக்கொள்ளுகின்ற [தின்றுகொல்லவல்ல], எயிற்றார் - பற்களையுடையவர்: அவர் ஆவி-அந்த அரக்கரினுயிரை, துப்புடன் - வலிமையுடனே, தொலைத்தால்-அழித்தால், செப்பிய (நீ) கூறிய, மா மலர்-சிறந்தமலரை, சென்று உறல் ஆகும்-போய்ப் பெறலாகும்; (எ - று.)

காவலர் அக்கர்என்று பிரிக்கவும் இடனுண்டு: அங்ஙன் பிரிப்பின், அக்கர் - யக்கர் என்னவேண்டும். (சுங)

64. அல்லதுநீடளகாபதிதானு
மெல்லியலும்பொழின்மேவியபோது
நல்லுறவாகிநயத்தொடுசென்றான்
மல்லன்மலர்தருவோடுவழங்கும்.

(இ - ள்.) அல்லது - இவ்வாறு கொள்ளாவிடின், நீடு அளகாபதிதான் உம் - பெருமைபொருந்திய அளகைக்குத் தலைவனாகிய குபேரனும், மெல் இயல்உம்-அவனது (மனைவியாகிய) பெண்ணும், பொழில் மேவிய போது-அந்தச்சோலையிலே வந்து தங்கியபோது, (அவர்களோடு), நல் உறவு ஆகி-நல்லநட்புறவுபூண்டு, நயத்தொடு-வணக்கத்தோடு, சென்றால்-(அவரிருக்குமிடத்துக்குப்) போனால், (அவன்), மல்லல் மலர் - வளப்பம்பொருந்திய அந்தமலரை, தருவோடு-(அதுதோன்றிய) கொடியுடனே, வழங்கும்-கொடுப்பான்; (எ - று.)

இது, சமாதானவழியாற் பூவைக்கொள்ள உபாயங் கூறியது. தருவோடு-கற்பகதருவோடு என்று கூறுவாருமுளர்: இனி இந்தமலர் கற்பகதருவினுடையதென்றும், குபேரனிடமும் உள்ளதென்றும் ஒருசாரார் கொள்கின்றனர். (சுச)

65.—நெறிமுதலிய கூறிய அநுமான் வீமனுக்கு விடைகொடுத்தல்.

உறுதியுமொன்னலருக்கருமேரு
நெறியினதெல்லையினீர்மையுநெறியிற்

குறிகளும்யாவையுமன்பொடுகூறி
யறிவுடையான்விடையன்பொடளித்தான்.

(இ - ள்.) உறுதிஉம் - (மலரைப்பெறுதற்குஉரிய) நல்ல உபாயங்களை யும், ஒன்னலர் ஊக்கம்உம் - பகைவர்களது கலங்காத்திண்மையையும், ஏகும் நெறியினது எல்லையின் நீர்மைஉம் - செல்லவேண்டும்வழியினது அளவின் தன்மையையும், நெறியில் குறிகள்உம் - வழியிலுள்ள அடையாளங்களேயும், யாவைஉம்-மற்றுமுள்ள எல்லாவற்றையும், அன்பொடு கூறி - அன்புடனே சொல்லி,—அறிவு உடையான் - (ஐயந்திரிபில்லாத) ஞானத்தையுடைய அனுமான்,—அன்பொடு விடை அளித்தான் - அன்புடனே (தம்பிக்கு) விடைகொடுத்தனுப்பினன் ; (எ - று.)

அனுமான் இளமையிற் சூரியனிடத்து எல்லாநூல்களையும் ஐயந்திரிபு அறஓதிஉணர்ந்த உயர்வுதோன்ற, அவனை 'அறிவுடையான்' என்றார். இனி, அறிவுஉடையான்-என்றுந் தனது இயற்கையறிவு கெடாதவனென்று மாம். விடை.விடுத்தல் ; ஐ-தொழிற்பெயர்விகுதி. ஒன்னலர் - ஒன்றலர் : மரூஉ: எதிர்மறை வினையாலணையும்பெயர் ; சேராதவர் என்பதுபொருள்.

66.—வீமன் அநுமானுக்கு முகமன்கூறிச் செல்லுதல்.

மொய்ம்புடைமாருதிதாளிணைமுன்னு
வெம்பியகானிடைமேவியபயனிங்
கெம்பெருமானுனையெய்தினனென்னு
நம்பியுநாழிகையொன்றினடந்தான்.

(இ - ள்.) நம்பிஉம்-ஆடவரிற்சிறந்த வீமனும், மொய்ம்பு உடை மாருதி தாள் இணை முன்னு - வலிமையையுடைய அனுமானினது உபயதிருவடி களைத் தியானித்துக்கொண்டு, 'எம்பெருமான் - எமதுதலைவனே! வெம்பிய கானிடை மேவிய பயன்-வெப்பம்பொருந்திய காட்டிலே (நான்) வந்ததன் பிரயோசனமாக, உனை இங்கு எய்தினன்-உன்னை இவ்விடத்திலே அடைந் தேன்', என்னு - என்று (உபசாரவார்த்தை) கூறி, நாழிகை ஒன்றில் நடந் தான் - ஒருநாழிகைப்பொழுதினுள்ளே நடந்துசென்றான் ; (எ - று.)

நாழிகை - இருபத்துநான்குநிமிஷங்கொண்ட நேரம்; நாடிகாஎன்னும் வடமொழிச்சிதைவென்பர். மொய்ம்புஉடைமாருதி - (பகைவருடைய) வலிமையை அழிக்குந்தன்மையுள்ள அனுமான் என்றுமாம். எம்பெருமான் - அண்மைவிளி. (சுசு)

67.—சக்கரமலையின்புறத்தை வீமசேனனடைதல்.

அக்கணமாசுவினுசுகன்மைந்தன்
மிக்குயர்விஞ்சையர்நாட்டிடைவிட்டுத்
திக்குறைநாகர்திரண்டுதுதிக்குஞ்
சக்கரநாகமதன்புடைசார்ந்தான்.

(இ - ள்,) அ கணம் - அந்தக்ஷணத்திலே, ஆசுவின் - விரைவாக, ஆசுகன் மைந்தன் - வாயுகுமாரனாகிய வீமசேனன்,—மிக்குஉயர் - மிகச்

சிறந்த, விஞ்சையர் நாடு - வித்தியாதரர்நாட்டை, இடைவிட்டு - கடந்து, திக்குஉறை நாகர் - திக்குக்களில்வாழ்கின்ற தேவர்கள், திரண்டு—, துதிக்கும் - (தன்னைத்) துதிக்கின்ற, சக்கரநாகம்அதன்புடை - சக்கரமலைக்குப் பக்கத்திலே, சார்ந்தான் - சேர்ந்தான்; (எ - று.) (சுஎ)

68.—திவாகரமலையெல்லையைக் கூறுகல்.

தவாமறைவாணர்தவம்புரியுந்தண்
கவானுடைநீள்குகரத்துயர்கலைசே
ருவாமதிசூழ்வருமோங்கலொடொக்குந்
திவாகரமால்வரைசேர்ந்திடுமெல்லை.

ஆறுகவிகள் - ஒருதொடர்.

(இ-ள்.) தவா-அழிதலில்லாத, மறை-வேதங்களைக்கொண்டு, வாணர்-வாழ்ச்சிபெறுபவரான முனிவர், தவம் புரியும் - தவஞ்செய்கின்ற, தண் - குளிர்ந்த, கவான் உடை - பக்கத்தையுடையதும், நீள் குகரத்து - நீண்ட குகைகளையுடையதும், உயர் கலை சேர் உவா மதி சூழ்வரும் ஓங்கலொடு ஒக்கும் - மிக்க [பதினாறான] கலைகள்சேர்ந்த பூர்ணிமைச்சந்திரன்சூழ்ந்துவரப்பெற்ற (மேரு) மலையோடுஒப்பதுமான, திவாகரம் மால் வரை - திவாகரமென்ற மலையை, சேர்ந்திடும் எல்லை-சேரும்போது,—(எ-று.)—"அரக்கன் அரித்துவசன்றனைநோக்கி இவைகட்டுரைசெய்வான்" என எழுபத்துமூன்றுங்கவியில் முடியும்.

சந்திரனைக் கூறியது, சூரியனுக்கும் உபலட்சணம். மேருமலையைச் சூரியன் முதலிய கிரகங்கள் சுற்றிவருகின்றனவென்பதும், சூரியன் மேருமலையைச்சுற்றி வருவதால்தான் பகலும்இரவும் உண்டாகின்றன என்பதும் நூற்கொள்கை. (சுஅ)

69.—இதுமுதல் நான்குகவிகள்-புண்டரீகனென்னும் அரக்கனது வருணனை.

அஞ்சனமேகமொடாலமளாவி
வஞ்சனைகொண்டுவகுத்தனமெய்யான்
குஞ்சிகள்வானினிடைக்கொடியோடிச்
செஞ்சுடர்காறுகின்றசிரத்தான்.

(இ - ள்.) அஞ்சனம் மேகமொடு - கறுத்த மேகத்தோடு, ஆலம் - விஷத்தை, அளாவி - கலந்து, வஞ்சனை கொண்டு - வஞ்சனைக்குணத்தையும் உடன்சேர்த்து, வகுத்து அன - படைக்கப்பட்டாற்போன்ற, மெய்யான் - உடம்பையுடையவனும்,—குஞ்சிகள் - (செம்பட்ட) மயிர்கள், வானின்இடை - ஆகாயத்திலே, கொடி ஓடி - மின்னற்கொடிபோலப் போய், செஞ் சுடர் - செந்நிறவொளியை, கால் - வெளிப்படுத்துதலை, தருகின்ற - செய்கின்ற, சிரத்தான் - சிரத்தையுடையவனும்,—(எ - று.)

இதனால், புண்டரீகவரக்கனுடைய உடம்பினிறம் சிரசு வஞ்சனைக்குணம் என்று இவை கூறப்பட்டன; விஷத்தைக்கருநிறமுடையதென்ப.

மேகமொடு, அஞ்சனம் - மையையும் எனவுமாம். கொடியோடி - நீளமாகப் போய் எனினுமாம். கால் - முதனிலைத் தொழிற்பெயர். (கூகூ)

70. குளிர்வரையொன்றியநீள்குகரம்போ
லளவில்பெரும்பகுவாயதின்மதியின்
பிளவெனலாவளையும்பிறழுந்தண்
ணிளநிலவென்னவிலங்குமெயிற்றான்.

(இ - ள்.) குளிர் வரை ஒன்றிய - குளிர்ந்த மலையொன்றிலேபொருந்திய, நீள் குகரம் போல் - நீண்ட குகைபோல, அளவுஇல் பெரு - அளவில்லாது மிகப்பெரிய, பகு வாய்அதின் - பிளவுபட்ட வாயிலே, மதியின் பிளவு எனல் ஆ வளையும் - சந்திரனுடையபிளவு [பிறைச்சந்திரன்] என்று சொல்லுமாறு வளைந்துள்ள, பிறழும் - விளங்குகின்ற, தண் நிலவு என்ன இலங்கும் - குளிர்ந்த நிலாப்போல வெள்ளொளி வீசுகிற, எயிற்றான் - கோரப்பற்களையுடையவனும்,—(எ - று.)

வளையும்எயிறு, பிறழும் எயிறு, இளநிலவென்ன விலங்கும் எயிறு என்க. (எ0)

71. ஆறிருகாதமகன்றுயர்தோளா
னாறிருகாதநொடிக்குணடப்பா
னேறுடையான்முதல்யாவர்களெனினு
மாறொடுகாதிமலைந்திடவல்லான்.

(இ - ள்.) ஆறு இரு காதம் அகன்று உயர் தோளான் - பன்னிரண்டு காததூரம் விலகி உயர்ந்துள்ளதோள்களையுடையவனும், நொடிக்குள் நூறு இரு காதம் நடப்பான்-நொடிப்போதிற்குள் இருநூறுகாததூரம் நடக்கும் வல்லமையுடையவனும், ஏறுஉடையான் முதல் யாவர்கள் எனின் உம் மாறொடு காதி மலைந்திட வல்லான் - ருஷபத்தைவாகனமாகவுடையவனான சிவபிரான் முதல் யாவர் எதிர்ந்துவந்தாலும்(அவரோடு)மாறுபாடுகொண்டு மோதிப் போர்புரியும்வல்லமையையுடையவனுமாகிய,—(எ - று.)

ஆறிருகாதம், நூறிருகாதம் - பண்புத்தொகைகள். ஏறுடையானைக் கூறியது - ஸம்ஹாரமூர்த்தியாதலால். அகன்றிடுஎன்றும்பாடம். (எக)

72. எண்டிசையுந்திறைகொண்டிகலோடும்
புண்டரிகப்பெயர்நாடுபொறித்தோன்
றிண்டிறன்மாருதிசேய்வருவானைக்
கண்டனனங்கழல்கான்றிடுகண்ணான்.

(இ - ள்.) இகலோடுஉம் - (தன்) பராக்கிரமத்தினால், எண் திசைஉம் - எட்டுத்திக்கிலும், திறை கொண்டு - வரிப்பொருளைப் பெற்றுக்கொண்டு, புண்டரிகன் பெயர் நாடு பொறித்தோன் - புண்டரீகனென்ற (தன்)பெயரை நாட்டில் எழுதிவைத்திருப்பவன்,—திண்திறல் மாருதி சேய் வருவானை - மிக்க வலிமையையுடைய வாயுபுத்திரனான வீமசேனன் வருபவனை, கண்டனன் - கண்டு, அங்கு - அப்போது, அழல் கான்றிடு கண்ணான் - நெருப்பை வெளிப்படுத்துகின்ற கண்களையுடையவனாய்,—(எ - று.)

மாருதிசேய்-மாருதியென்னப்படுகிற சேய்என்று இருபெயரொட்டு: சேய்என்பது-குமாரன்என்ற வடசொல்போலத் தமிழில்வழங்குவது என்க. இது - செம்மை நிறமுடைய முருகக்கடவுளை முதலிற்காட்டி, பிறகு இலக்கணையால் அவன்போல் அழகு வலிமை முதலியவுள்ள மைந்தனைக் காட்டும். இனி, மாருதி - வாயுகுமாரனான வீமன், சேய்வருவானை-சேய்மையில் வருபவனை, கண்டனன்என்றுமாம். கண்டனன் - முற்றெச்சம். கண்ணுன் என்பதைக் குறிப்புமுற்றாக முடித்தலும் ஒன்று. (எஉ)

73.—புண்டரீகனென்ற அவ்வரக்கன் வீமசேனனைநோக்கிக் கூறலுறுதல்.

உருத்துமுகிற்குலமுருமுடன்மட்கச்
சிரித்திதழ்கவ்வியெயிற்றிணைதின்றாங்
கரித்துவசன்றனைநோக்கியரக்கன்
கருத்துடனின்றிவைகட்டுரைசெய்வான்.

(இ - ள்.) முகில் குலம் - மேகங்களின் கூட்டம், உருமுடன் - இடியுடனே, மட்க - மங்கும்படி, உருத்து சிரித்து - சினங்கொண்டு சிரித்து, இதழ் கவ்வி - (பற்களால்) உதட்டைக் கடித்தும், எயிறு இணை தின்று - இரண்டு கோரப்பற்களை மென்றும், ஆங்கு-அப்போது, அரி துவசன் தனை நோக்கி - சிங்கக்கொடியையுடையவனான வீமசேனனைப்பார்த்து, அரக்கன்-அந்தப்புண்டரீகனென்ற இராட்சதன், நின்று - இருந்தவண்ணம், கருத்துடன் - மனப்பூர்வமாக, இவை - இவ்வார்த்தைகளை, கட்டுரை செய்வான் - உறுதிச் சொற்களாகக் கூறுபவனானான்; (எ - று.)—புண்டரீகனென்னும் அரக்கன் கூறுவனவற்றை மேற்கவியிற் காண்க.

சிரித்தல் இதழ்கவ்வுதல் எயிற்றிணைதின்னுதல் - சினக்குறி. வீமன் தனது பலபராக்கிரமங்கட்கு அறிகுறியாகச் சிங்கத்தைத் துவசத்திற்கொண்டனன்போலும். உட்குடன்மட்க என்று பிரதிபேதம். (எங)

74.—புண்டரீகவரக்கன் கூறிய உரை.

யானுறைகானகமென்றிமையோருந்
தானவர்தாமுமிதற்கிடைசாரார்
மானுடனீயிவண்வந்தசுவையா
மூனிடவோவிஃதுரைத்திடுகென்றான்.

(இ - ள்.) 'இமையோர்உம் - இமையாக்கண்ணராகிய தேவரும், தானவர் தாம் உம் - அசுரர்களும், யான் உறை கானகம் என்று - நான் வசிக்கின்ற காடு என்ற காரணத்தினால், இதற்குஇடை-இந்தக்காட்டினிடத்தில், சாரார் - சேரமாட்டார்கள்: (அப்படியிருக்க), மானுடன் நீ - மனிதனாகிய நீ, இவண் - இந்தக் காட்டினிடத்தே, வந்தது—,—சுவை ஆம் - உருசி பொருந்திய, ஊன் - மாமிசத்தை, இட ஓ-(எனக்குக்) கொடுப்பதற்குத் தானோ? இஃது - இந்தக்காரணத்தை, உரைத்திடுக-சொல்வாயாக,' என்றான் - என்றுகூறினான்; (எ-று.)—உரைத்திடுகென்றான்-தொகுத்தல். (எச)

75.—உன்னை யுண்ணவே வந்தேனென்று வீமன் மாறுகூறுதல்.

வென்றியரக்கன்விளம்புதல்கேளாக்
குன்றனதோள்கள்குலுங்கநகைத்தாங்
குன்றனதாவியுமுண்டிடவந்தே
னென்றனன்முன்னமிடிம்பனைவென்றோன்.

(இ - ள்.) வென்றி அரக்கன் - வெற்றிபொருந்திய ராட்சதனாகிய புண்டரீகன், விளம்புதல் - கூறியதை, கேளா - கேட்டு,— குன்று அன தோள்கள் குலுங்க நகைத்து-மலையையொத்த தோள்கள் அசையும்படி சிரித்து,— ஆங்கு - அப்போது, 'உன்தனது ஆவிஉம் உண்டிடவந்தேன்-உன்னுடைய உயிரையும் உண்ணும்பொருட்டு வந்துள்ளேன்,' என்றனன் - என்று கூறினான்: (யாவனென்னில்),— முன்னம் இடிம்பனை வென்றோன்-முன்பு இடிம்பாசுரனை வென்று ஒழித்தவனாகிய வீமசேனன் ; (எ - று.)

ஆவியும் என்பது - எச்சவும்மை: உன்வலியையொழிப்பதன்றி ஆவியையும் உண்ணஎன்க: இனி, எச்சப்பொருளோடு உயர்வுசிறப்புப்பொருளது என்றுகொண்டு, முன்னம் இடிம்பனாவியையுண்டதன்றி உன்னாவியையும் என்றுபொருள்காணினுமாம். (எரு)

76.—இரண்டுகவிகள்-வீமன் புண்டரீகன் என்ற இருவரும் பொருதமை கூறும்.

மற்றதுகூறபறத்தொடரக்க
னுற்றெதிரோடியுறுக்கியபோதக்
கொற்றவனுங்கதைகொண்டுடன்மண்டிப்
பற்றினன்வந்தவனாவிபறிப்பான்.

(இ - ள்.) அது கூற - அவ்வார்த்தையை (வீமசேனன்) சொல்ல,— மற்று - பின்பு, அரக்கன் - புண்டரீகனென்ற ராட்சதன், மறத்தொடு - வலிமையோடு, உற்று - பொருந்தி, எதிர் ஓடி - (வீமனுக்கு)எதிரே போய்,—உறுக்கிய போது - கோபித்தசமயத்தில்,—அ கொற்றவன்உம் - வெற்றிபொருந்திய அந்த வீமனும்,—கதை கொண்டு - கதாயுதத்தைக் (கையிற்) கொண்டு, வந்தவன் ஆவி பறிப்பான் - எதிர்வந்தவனான புண்டரீகனென்பானுடைய உயிரைக் கவரும்பொருட்டு, உடன் மண்டி - சேர நெருங்கி, பற்றினன்-(போரில்) மூண்டான் ; (எ-று.)—மற்று-வினைமாற்றுமாம். (எசு)

77. குன்றொடுகுன்றமர்கூடுவதேபோ
னின்றுநெடும்பொழுதாகமலைந்தும்
வன்றிறலுந்தபவாருநின்வலியு
மொன்றுபடிலைத்திலரொத்தவுரத்தார்.

(இ - ள்.) குன்றொடு-ஒருமலையுடனே, குன்று - மற்றொருமலை, அமர் கூடுவது ஏ போல் - போருக்குப் பொருந்துவதுபோல,—நின்று நெடும் பொழுது ஆக மலைந்துஉம்-நிலையாகப்பொருந்தி நெடுநேரமாகப் போர்செய்தும்,—ஒத்த உரத்தார் - சமமான வலிமையையுடையரான அவ்விருவரும்,

வல் திறல்உம்-கொடியவலிமையும், தம வாகுவின் வலிஉம் - தம்முடைய தோள்வலியும், ஒன்றுஉம் இளைத்திலர் - சிறிதும் இளைத்தாரில்லை ; (எ-று.)

தம - ஆறனுருபு ஏற்றபெயர். (எஎ)

78.—அப்போது அசரீரி சொல்லலுறல்.

எல்லையிலாவமரிங்கிவரிவ்வா
றொல்லையின்மோதியுடன்றிடுபோழ்திற்
றொல்லையிலோர்முனிசொல்லியசாப
மல்லலரூபிவழங்கியதன்றே.

(இ - ள்.) இங்கு - இவ்விடத்து, இவர் - வீமனும் புண்டரீகனென்ற அரக்கனும், இவ்வாறு - இவ்வகையாக, எல்லை இலா அமர் - முடிவில்லாத போரை, ஒல்லையின் - விரைவாக, மோதி - தாக்கி, உடன்றிடு போழ்தில் - பொருகின்ற சமயத்தில்,—தொல்லையில் - முற்காலத்தில், ஓர் முனி - ஒரு முனிவன், சொல்லிய—,சாபம்-சாபத்தை, மல்லல்-வலிமைபொருந்திய, அரூபி - அசரீரியானது, வழங்கியது - சொல்லிற்று ; (எ - று.)

அசரீரிசொல்வது தவறு தாதலால், 'மல்லலரூபி' எனப்பட்டது. அரூபி - ரூபமற்றது : அசரீரியென்றபடி. அன்றே-ஈற்றசை. (எஅ)

79.—அசரீரி சொல்லிய வார்த்தை.

ஒன்றினுமாவியுனக்கிவனொல்கான்
றுன்றிடுதோண்மிசைதோமரமேவிக்
கொன்றிடுவாயினிவாயுகுமாரா
வென்றதுவானினிடத்தசரீரி.

(இ - ள்) வானினிடத்து - ஆகாயத்தினிடத்தே, அசரீரி - அசரீரியானது, 'இவன் - இந்த அரக்கன், ஒன்றின்உம் - வேறு எந்த வகையினாலும், உனக்கு - உன்னால், ஆவி ஒல்கான் - உயிரொழியான் : இனி—, துன்றிடு - நெருங்கிய, தோள்மிசை - தோள்மீது, தோமரம் - தோமரத்தை, ஏவி - செலுத்தி, வாயுகுமாரா—! கொன்றிடுவாய் - கொல்வாய்,' என்றது - என்று கூறிற்று ; (எ - று.)

இது வானத்திலே சரீரமில்லாததாய்க் கேட்கப்படுதலால், ஆகாய வாணியென்றும், அசரீரியென்றும் கூறப்படும். தோமரம் - படையென்ற பொருளில் வந்தது : சிறப்புப்பெயர் பொதுப்பொருளது : "தொட்ட கொடுங்கதை தோளுறுமுன்னர்...விழுந்தான்" (81) என மேல் வருவதால் இங்ஙன்கொள்ளவேண்டும். இவ்வரக்கன் தோளிற் படை செலுத்தப் பட்டால் உயிரிழக்குமாறு இவனுக்கு முனிவன் சாபமென்க. (எகூ)

80.—வீமசேனன் புண்டரீகவரக்கனுடையதோள்மேற் கதையை ஏவுதல்.

அங்கசரீரியரற்றியமாற்றம்
சங்கையுறுதுசமீரணிகேட்டுப்

பங்கயநாமநிசாசரபதிதன்
றுங்கவயப்புயமேற்கதைதொட்டான்.

(இ - ள்.) அந்த - அவ்விடத்து, அசரீரி - ஆகாயவாணி, அரற்றிய - உரக்கச்சொன்ன, மாற்றம் - வார்த்தையை, சமீரணி - வாயுகுமாரனான வீமசேனன், சங்கை உறாது கேட்டு - சங்கைகொள்ளாமல் செவியேற்று, பங்கயநாம நிசாசரபதி தன் - புண்டரீகனென்றுபேருள்ள அரக்கனுடைய, துங்கம் - உயர்வாகிய, வயம் - வெற்றிபொருந்திய, புயமேல் - தோளின் மீது, கதை தொட்டான் - கதைகொண்டு மோதினான்; (எ - று.)

அசரீரிவார்த்தையில்நம்புதல்கொண்டு புயமேற்கதையைத் தொட்டா னென்பாரா 'சங்கையுறாதுகதை தொட்டான்' என்றார். சமீரணி=ஸமீரணி: ஸமீரணனுடையகுமாரன் என்று அவயவப்பொருள்: ஸமீரணன் - வாயுதேவன். அரற்றியசாபம் என்று பிரதிபேதம். (அ0)

81.—புண்டரீகன் வீமன்கதை மேலேதீண்டுதலும் வீழ்ந்திடுதல்.

தொட்டகொடுங்கதைதோளுறுமுன்னர்ப்
பட்டுளநொந்துபதைத்தடல்வஞ்சன்
வட்டநெடுங்கடலூடுமருத்தன்
றிட்டபெருங்கிரியென்னவிழுந்தான்.

(இ - ள்.) தொட்ட-(வீமசேனன்) தாக்கிய, கொடுங் கதை - கொடிய தண்டாயுதமானது, தோள் உறும் முன்னர் - தோளிற்படுதற்குமுன்னம் [தோளிற்பட்டவுடனே],— பட்டு (கதை) தீண்டுதலால், உளம் நொந்து - மனம்வருந்தி, பதைத்து-துடித்து, அடல் வஞ்சன்-வலிமையையுடைய வஞ்சனைக்குணமுடையவனாகிய அந்தப்புண்டரீகராட்சதன்,—வட்டம் நெடுங் கடலூடு - வட்டவடிவாகவுள்ள பெரிய கடலிலே, மருத்து-வாயுதேவன், அன்று - முற்காலத்தில், இட்ட - கொண்டு செலுத்திய, பெருங் கிரி என்ன - பெரியமலைபோல, விழுந்தான்—; (எ - று.)

முற்காலத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போல இறகுடையனவா யிருந்து அவற்றால் உலகமெங்கும் பலவிடத்தும் பறந்து திரிந்து தமக்கு விருப்பமான இடங்களின்மே லுட்கார்ந்து அவ்விடங்களையும் அவற்றி லுள்ள பிராணிகளையும் பாழாக்கிவருகையில் அத்துன்பத்தைப் பொறுக்க மாட்டாத முனிவர் தேவர் முதலியோரது வேண்டுகோளால் தேவேந்தி ரன் தனதுவச்சிராயுதத்தினால் அவற்றைச்சிறகறுத்துத் தள்ளிவருகையில் மைநாகமென்னும்மலை வாயுதேவனதுஉதவியால் ஓடிச்சென்று கடலினுள் ளே ஒளித்த தென்பது கதை; இம்மலை அவ்வாயுகுமாரனான அனுமான் இராமபிரானது நியமனத்தின்படி சீதாபிராட்டியைத் தேடும்பொருட்டு இலங் கைக்குச் செல்லுதற்குக் கடலைத்தாண்டும்பொழுது இடைவழியிலே அக் கடலினின்று வெளியில்வந்து அவருக்கு உதவிக் கைம்மாறுசெய்யக் கருதி முயன்றதென்பதை, இராமாயணத்திற் காணலாம். முன்னொருகால் வாயு தேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார்பலசாலியென்று விவாத

மூண்டாக, அதனைப்பரீக்ஷித்தறியும்பொருட்டு வாயுதேவன் மேருமலையின் சிகரத்தைப் பெயர்த்துத்தள்ளுவதென்றும் ஆதிசேஷன் அதுபெயரவொட்டாமற் காத்துக்கொள்வதென்றும் ஏற்பாடு உண்டாகி, அங்ஙனமே இருவரும் தத்தம்வலிமையைக்காட்டத் தொடங்கியபொழுது, ஆதிசேஷன் தனது ஆயிரம்படங்களாலும் மேருமலையின் ஆயிரஞ்சிகரங்களையுங் கவிந்து பெயரவொட்டாமற் பலநேரங் காக்க, பின்பு வாயுதேவன் தன்வலிமையால் அம்மலைச்சிகரங்கள்மூன்றைப் பெயர்த்துக் கொண்டுபோய்த் தென்திசையில் தள்ளிவிட்டானென்றும், அவற்றுள் கடலினிடையே தள்ளப்பட்டதொரு சிகரத்தின்மீதே இலங்கைத்தீவு ஏற்பட்டதென்றும், அச்சிகரமே திரிகூடமென்றும் திரிகோணமென்றும் பெயர்பெறுமென்றுங் கூறுவதொரு கதையையுங் கொள்ளலாம். வட்டம் - வ்ருத்தம்என்னும்வடசொற்றிரிபு. மருத், கிரி - வடசொற்கள். நொந்து, நொ - பகுதி. (அக)

வேறு

82.—அரக்கனைக்கொன்றபின் வீமன் அப்பாற்செல்லல்.

ஏற்றத்தோ டிகலி யிவ்வா றிடைவழி யதனில் வந்து
சீற்றத்தோ டெதிர்ந்த வெம்போர்த் திண்டிற லரக்கன் றன்னைப்
பாற்றுக்கும் பகுவாய்ப் பேய்க்கும் பருந்துக்கும் வருந்து கின்ற
கூற்றுக்கும் விருந்து செய்தக் கொற்றவேற் குரிசில் போனான்.

(இ - ள்.) அ கொற்றம் வேல் குரிசில் - வெற்றியையுடைய வேலாயுதத்தையுடைய பெருமைபிற்சிறந்த அவ்வீமன், இ ஆறு - இந்தப்படி, ஏற்றத்தோடு - பெருமையுடனே, இகலி - போர்செய்து, இடைவழியதனில் வந்து சீற்றத்தோடு எதிர்ந்த வெம் போர் திண் திறல் அரக்கன்தன்னை - நடுவழியிலேவந்து கோபத்துடனே எதிர்ப்பட்ட கொடியபோரையும் மிக்க வலிமையையுமுடைய புண்டரீகனென்னுமிராக்கதனை, வருந்துகின்ற பாற்றுக்குஉம் பகு வாய் பேய்க்குஉம் பருந்துக்குஉம் கூற்றுக்குஉம் விருந்து செய்து - (பசியால்) வருந்துகிற கழுகுகளுக்கும் திறந்தவாயையுடையபேய்களுக்கும் பருந்துகளுக்கும் யமனுக்கும் விருந்துணவாக அளித்து [கொன்றுவிட்டு], போனான் - அப்பாற்சென்றான்; (எ - று.)

பெரியவடிவமாதலால், இத்தனைக்கும் உணவாம். வருந்துகின்ற என்பதைப் பிறவற்றிற்குங் கூட்டுக; பகு வாய் என்பதையும் அப்படியேகூட்டலாம். வருந்துகின்ற என்பதற்கு - (இவ்வரக்கனுயிரையுணவாகக்கொள்ளவேண்டுமென்னும் அவாவால்)வருந்துகிற என்றும் கூறுவர். கூற்றுவருந்துவது, இதுவரையில் இவ்வரக்கனை யுண்ணமுடியாமையால் என்க. வழியிடை - இடைவழி யென முன்பின்னாகமாறினது, இலக்கணப்போலி.

இதுமுதல் இருபத்தைந்துகவிகள்-பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும்,மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள்; இவற்றில் மூன்று ஆறாஞ்சீர்கள் தேமாச்சீர்களாகவே நிற்கும். (அஉ)

83.—வீமன் அளகாபுரியைக் காணுதல்.

எண்டிசையமரர்போற்றுமிந்துமால்வரைசென்றெய்திப்
புண்டரீகன்றனாடுபொருக்கெனநெருக்கியப்பாற்
றெண்டிரையளித்ததெய்வச்செல்வமாநிதிகளோங்கு
மண்டர்மாநகருமொவ்வாவளகைமாநகரங்கண்டான்.

(இ - ள்.) (வீமன்),—எண் திசை அமரர் போற்றும் - எட்டுத்திக்குக் களிலுமுள்ள(இந்திரன்முதலிய) தேவர்களாற் புகழப்படுகின்ற, மால் இந்து வரை - பெரிய சந்திரசைலமென்னும்மலையை, சென்று எய்தி - போய்ச் சேர்ந்து, புண்டரீகன் தன் நாடு பொருக்கென நெருக்கி - புண்டரீகனென்னும் அரக்கனுடைய நாட்டின் எல்லையை விரைவாகக் கடந்து, அப்பால் - அதன்பின்பு, தெள் திரை அளித்த தெய்வம் செல்வம் மா நிதிகள் ஓங்கும் - தெளிவான அலைகளையுடைய பாற்கடலாற் பெறப்பட்ட தெய்வத்தன்மையுள்ள செல்வம்நிறைந்த பெரியநிதிகள் சிறந்திருக்கப்பெற்ற, அண்டர் மா நகர்உம் ஒவ்வா அளகை மா நகரம் - தேவர்களுடைய பெரிய அமராவதி நகரமும் (தனக்கு) ஒப்பாகப்பெறாத சிறந்த அளகாபுரியை, கண்டான் - பார்த்தான்; (எ - று.)

எண்திசையமரர் - அஷ்டதிக்குப் பாலகர்; அவராவார் - கிழக்கி லிருந்து முறையே இந்திரன், அக்கினி, யமன், நிருருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன்என்பவர். இந்து - சந்திரன்; வடசொல் வரை - மலை. சந்திரசைலம் - புண்டரீகனது நாட்டுக்கு வடதிசையெல்லையாகவுள்ளது. பொருக்கென-விரைவுக்குறிப்பு இடைச்சொல். புண்டரீகன்றனாடும்பொருக் கெனநோக்கியென்ற பாடத்துக்கு - பிரமலோகத்தையும் விரைந்துபார்த்து என்று உரைத்து, மிகவோங்கிய மலையிலேறியதனால் பிரமலோகமும் பார்க் கலாயிற்றென்க. நிதிகள் - சங்கநிதி, பதுமநிதி முதலியன. அண்டர்+மா நகர்=அண்டமாநகர்; உயர்திணையீறு விகாரப்பட்டது. உம்மை - உயர்வு. அளகை - குபேரன்நகரம். (அங)

84.—வீமன் தான் நாடிவந்த மலர்ப்பொழிலை யடைதல்.

அந்தமாநகரின்றென்பாலகல்விசும்புறநின்றோங்கும்
விந்தமாமென்னநின்றுவிளங்குதோள்வீமசேனன்
முந்தைமாருதிநண்போடுமொழிவழியெய்தியந்தக்
கந்தவான்பொழிலுநன்னீர்க்கடிமலர்த்தடமுங்கண்டான்.

(இ - ள்.) அகல் விசும்பு உற நின்று ஓங்கும் - (முன்னொருகாலத்தில் மலையரசனாகிய இமவானோடு பகைத்துச் சூரியசந்திராதியரது கமனமுந் தடைப்படும்படி) பரந்த ஆகாயத்தை யளாவ உயர்ந்துநின்ற, விந்தம் ஆம் என்ன-விந்தியபருவதத்தையொக்கும் (இது) என்னும்படி, நின்றுவிளங்கு- நிலைபெற்று விளங்குகின்ற, தோள் - புயங்களையுடைய, வீமசேனன்—, முந்தை மாருதி நண்போடு மொழி வழி எய்தி - முன்பு அனுமான் (தன்னிடத்து) அன்புடனே சொன்ன வழியிற் சேர்ந்து, அந்த மா நகரின் தென்

பால் - அந்தப்பெரியஅளகாபுரியின்தென்புறத்திலே, கந்தம் வான் அந்த பொழில்உம்-பரிமளத்தையுடைய உயர்ந்த (தான்குறித்துவந்த) அச்சோலையையும், நல் நீர் கடி மலர் தடம்உம் - (அதிலுள்ள) சிறந்தநீரையும் வாசனையுடையபூக்களையு முடைய தடாகத்தையும், கண்டான்-பார்த்தான்; (எ-று.)

விந்தம்=விந்த்யம்: வடமொழித்திரிபு. இங்கே 'அகல்விசும்புற நின்றோங்கும்விந்தம்' என்றது - அகத்தியமகாமுனிவரால் அடக்கப்படுவதற்கு முன்பு அம்மலை எழுந்த நிலையை. முந்தை - ஐயீற்றுடைக்குற்றியலுகரம். முந்தை மாருதி என்பதற்கு-பழமையான அனுமானென்றும், தனக்குமுன் பிறந்த அனுமானென்றும் பொருள் கொள்ளலாம். கடி - உரிச்சொல். தெற்கு+பால்=தென்பால்; [நன் - உயிர் - 35.] (அச)

85.—நான்கு கவிகள் - அப்பொழிலைக்காப்பவரின் வருணனை.

ஆயிடைக்குறுகுமெல்லையப்பொழிறுப்பிற்காப்போர்
சேயிடைப்பரந்தமார்பர்சேணிடைக்கடந்ததோளர்
வாயிடைப்பிறைகளென்னவளர்ந்தவாளெயிற்றர்வஞ்சத்
தீயிடைச்சோரிதோய்ந்துதிரண்டெனச்சுழல்செங்கண்ணர்.

இதுமுதல் ஐந்து கவிகள் - குளகம்-

(இ - ள்.) அ இடை குறுகும் எல்லை - (வீமன்) அவ்விடத்தைச் சேருமளவில், அ பொழில் துப்பின் காப்போர் - அந்தச்சோலையை வலிமையாற் காப்பவர்களும், சேய் இடை பரந்த மார்பர் - நெடுந்தூரம்பரவின மார்பையுடையவர்களும், சேண் இடை கடந்த தோளர் - ஆகாயத்தினிடத்தையுங் கடந்து உயர்ந்த தோள்களையுடையவர்களும், வாயிடை பிறைகள் என்ன வளர்ந்த வாள் எயிற்றர் - வாயிலே பிறைச்சந்திரர்போல வளர்ந்துள்ள ஒளியையுடைய கோரதந்தங்களை யுடையவர்களும், வஞ்சம் தீயிடை சோரி தோய்ந்து திரண்டு என சுழல் செம் கண்ணர் - வஞ்சனையையுடைய நெருப்பிலே இரத்தமானது தோய்ந்து திரண்டஉருப்பெற்றாற்போலச் சுழல்கின்ற சிவந்த கண்களையுடையவர்களும்,—(எ - று.)—ஆயிடைக் குறுகுமெல்லை என்றுதொடா, 'சோலையெல்லாம் மொய்த்தார்' என, மேல் 89-ஆங் கவியில் முடியும். அப்பொழில் துப்பிற்காப்போர் என்பது முதலியன - அரக்கர்க்கு விசேடணம்.

அ+இடை=ஆயிடை; நீண்ட சுட்டின்முன் யகரந்தோன்றிற்று: [நன் - உயிர் - 13] சேய் - சேய்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோயிற்று. இடை - இடம். பிறைகள் எனப் பன்மையாகக் கூறினது, இல்பொருளுவமை. தீக்கு வஞ்சனை - அருகிலுள்ள பொருள்களையெல்லாந் தன்வயத்ததாக்கல். இனி, வஞ்சம் என்னும் அடைமொழியைக் கண்ணுக்கும் இயைக்கலாம். சொரிவது சோரி; ஏதுப்பெயர். 'தீயிடைச் சோரி தோய்ந்து திரண்டு' என்ற உவமை - மிக்கசெந்நிறத்தையும், பயங்கரத்தன்மையையும் விளக்குதற்கு. வாயிடைஎயிற்றர் என இயையும். சுழல்கண்-விழிசுழலுங்கண். பிறைவாளென்னஎன்றும்பாடம். (அரு)

86. சூழிருட்பிழம்புநஞ்சுதோய்ந்தன்னதுவக்கருன்னி
னாழிகையொன்றினெல்லாவுலகைநலியுமீட்டார்
வாழிமந்தரமத்தாகவாசுகிகயிறாமாயோ
னாழிநீர்கடைந்தநாளுமமுதெழக்கடைந்தவீரர்.

(இ - ள்.) சூழ் இருள் பிழம்பு - (உலகத்தைச்) சூழ்ந்துநிறைந்திருக்கிற இருளின் திரளும், நஞ்சு - விஷமும், தோய்ந்து அன்ன - (ஒன்றோடொன்று) கலந்தாற்போன்ற, [மிகக்கரிய], துவக்கர் - உடம்பையுடையவர்களும், உன்னின் - ஆராய்ந்துநோக்குமிடத்து, நாழிகை ஒன்றின் - ஒரு நாழிகைப்பொழுதினுள்ளே, எல்லா உலகையும் நலியும் - உலகங்களையெல்லாம் வருத்தவல்ல, ஈட்டார் - வலிமையுடையவர்களும், மந்தரம் மத்து ஆக - மந்தரகிரி மத்தாயிருக்க, வாசுகி கயிறு ஆ - வாசுகியென்னும் பாம்பைக் கடைகயிறாக (க்கொண்டு), மாயோன் - மாயையையுடைய திருமால், அமுது எழ - அமிர்தமுண்டாகும்படி, ஆழி நீர் கடைந்த நாளும் - கடல் நீரைக் கடைந்தகாலத்திலும், கடைந்த - (உடனிருந்து) கடைந்த, வீரர் - வீரத்தன்மையுடையவர்களும்,—(எ - று.) வாழி - அசை.

துவக்கு=த்வக் : வடமொழித்திரிபு; தோலின்பெயரான இது, சினையாகுபெயராய், உடம்பைக் குறிக்கும்: "தோல்வற்றிச், சாயினுஞ் சான்றாண்மை குன்றாமை" என்றவிடத்து 'தோல்' என்பதுபோல. ஈடு - தேகவலிமை. மத்து - மந்தம் என்னும் வடமொழித் திரிபு. கடைகயிறாகிய வாசுகியென்னும் பாம்பின் தலையைப் பிடித்துநின்ற அசுரர்க்கும் வாலைப் பிடித்துநின்ற தேவர்க்குங் கடைதற்கேற்றஆற்றலில்லாமையைக் கருதித் திருமால் இரண்டுவடிவங்கொண்டு இருபக்கத்திலும் நின்று திருப்பாற்கடலைக் கடைந்தருளினரென்க. இவ்வரக்கர் அங்கு அசுரர்க்கு உதவியாய்க் கடைந்தனரென்க. பின் இரண்டடியால், இக்காவலாளரின் நீண்டஆயுளுடைமையும், மிக்கவலியுடைமையும் உணர்த்தப்பட்டன. நீர் - நீர்வடிவமான [திரவரூபமான] பால். (அசு)

87. மறத்தொடுவஞ்சமானநண்பெனவளர்த்துநாளு
மறத்தொடுபகைக்குநெஞ்சர்பிலத்தினுமகன்றவாயர்
புறத்தினின்முகத்தர்மார்பிற்புழைமுழைமூக்கரின்ன
திறத்தினர்குஞ்சிச்செந்தீச்சிரத்தினர்வரத்தின்மிக்கோர்.

(இ - ள்.) மறத்தொடு - பாவத்துடனே, வஞ்சம் - வஞ்சனையையும், மானம் - அகங்காரத்தையும், நண்பு என-(தமக்குச்) சினேகமாக, வளர்த்து - விருத்திசெய்து, நாளும் - தினந்தோறும், அறத்தொடு பகைக்கும் - தருமத்துடனே மாறுகொள்கின்ற, நெஞ்சர் - மனத்தையுடையவர்களும், பிலத்தினும் அகன்ற வாயர் - பெருங்குகையைக்காட்டிலும் விசாலமான வாயையுடையவர்களும், புறத்தினில் முகத்தர் - முதுகிலே முகத்தையுடையவர்களும், மார்பில் புழை முழை மூக்கர் - மார்பிலே பெருந்துளையையுடைய மலைக்குகைபோன்ற மூக்கையுடையவர்களும், இன்ன திறத்தினர் - இவை

போன்ற பலவகை விகாரங்களை யுடையவர்களும், குஞ்சி செம் தீ சிரத்தினர் - தலைமயிர்முடியாகிய சிவந்த நெருப்பைத் தலையிலுடையவர்களும், வரத்தின் மிக்கோர் - சிறந்தவரங்களால் மிகுந்தவர்களும்,—(எ - று.)

மறத்தொடு வஞ்சம் மானம் நண்பொடு வளர்த்து என்பதற்கு - அந்த மறத்தைத் தமக்குப்பெருமையாகவும் வஞ்சனையைத்தமக்குச்சிநேகமாகவும் வளர்த்து என முறைநிரனிறைப்பொருள் கோளாக்கியு முரைக்கலாம். ஆன நண்பு எனை எடுத்து - தக்கதுணை யெனினுமாம். பிலம் - பாதாளவழியுமாம். மார்பில் மூக்கர் என்க. குஞ்சி - ஆண்மயிர். (அஎ)

88\. கரங்களாயிரத்தர்நண்ணுங்கால்களாயிரத்தர்குஞ்சிச்
சிரங்களாயிரத்தர்பூழைச்செவிகளாயிரத்தர்வென்றி
யுரங்களாயிரத்தரூழிதவமுயன்றுரிமைபெற்ற
வரங்களாயிரத்தர்மிக்கமறைகளாயிரத்தர்மன்னோ.

(இ - ள்.) கரங்கள் ஆயிரத்தர் - ஆயிரங்கைகளையுடையவரும், நண்ணும் கால்கள் ஆயிரத்தர் - பொருந்தின ஆயிரங்கால்களையுடையவரும், குஞ்சி சிரங்கள் ஆயிரத்தர் - மயிர்முடியையுடைய ஆயிரந்தலைகளையுடையவரும், பூழை செவிகள் ஆயிரத்தர் - பெருந்துளையையுடைய ஆயிரங்காதுகளையுடையவரும், வென்றி உரங்கள் ஆயிரத்தர் - சயத்தைவிளக்குகின்ற ஆயிரம்மார்புகளை யுடையவரும், ஊழி தவம் முயன்று - நெடுங்காலந் தவத்தை முனைந்துசெய்து, உரிமை பெற்ற-(தமக்கு) உரியனவாக அடைந்த, வரங்கள் ஆயிரத்தர் - ஆயிரம்வரங்களை யுடையவரும், மிக்க மறைகள் ஆயிரத்தர் - பயன்மிகுந்த ஆயிரம்மந்திரங்களை யுடையவரும்,—(எ - று)— மன், ஓ - ஈற்றசை.

இங்கே ஆயிரம் என்றது-மிகப்பலவென்னும் பொருளை யுணர்த்தும். பூழை - புழையென்பதன் நீட்டல். வென்றி உரங்கள் ஆயிரத்தர் - வெற்றியைத்தரும் பலவகை வலிமைகளை யுடையார் எனவுமாம். ஊழி - யுகம் கற்பம் முதலிய காலத்தின்பேரெல்லையைக் குறிக்கும். (அஅ)

89\.—அப்போது அக்காவலாளர் மானுடநாற்றத்தையறிந்து திரளுதல்.

வைத்தாரைவாளம்வில்வேன்மழுவெழுதிகிரிசூலங்
கைத்தாரைபடக்கொண்டென்றுங் கண்ணிமையாதுகாப்போர்
மைத்தாரைமாரியொப்பார்மானுடநாற்றங்கேட்டு
மொய்த்தாரக்கடவுள்வாசமொய்ம்மலர்ச்சோலையெல்லாம்.

(இ - ள்.) வை - கூர்மையாகிய, தாரை - நுனியையுடைய, வாளம்- வாளாயுதத்தையும், வில் - வில்லையும், வேல் - வேலையும், மழு - மழுவையும், எழு - வளைதடியையும், திகிரி - சக்கரத்தையும், சூலம் - சூலத்தையும், கை - (தமது) கைகளிலே, தாரை பட - ஒழுங்கு பொருந்த, கொண்டு - ஏந்திக்கொண்டு, என்றும் - எப்பொழுதும், கண் இமையாது காப்போர்- விழித்தகண் மூடாமற் காவல்செய்பவர்களும், தாரை மை மாரி ஒப்பார் - நீர்ப்பெருக்கையுடைய கரியமேகத்தை (நிறத்தில்) ஒப்பவர்களும் ஆகிய

அரக்கர்கள், மானுடன் நாற்றம் கேட்டு - மனிதனதுகந்தத்தையறிந்து, அ கடவுள் வாசம் மொய் மலர் சோலை எல்லாம் - தெய்வத்தன்மையுள்ள பரிமளமுடைய அடர்ந்த பூக்களையுடைய அந்தச்சோலையினிடம் முழுவதிலும், மொய்த்தார் - சூழ்ந்து நெருங்கினார்கள் ; (எ - று.)

மனிதகந்தத்தை மோந்து உணருந்தன்மையர் அரக்கரென்க. நாற்றங் கேட்டு என மூக்கின்வினையைச் செவியின்வினையாகக் கூறியது, ஓர்மரபு வழுவமைதி ; புலன்மாறிவந்த வழக்குஎனப்படும்; "நாற்றங்கேட்டலுந் தின்ன நயப்பது" என்றார் கம்பரும். கடவுள்வாசம் - மற்றை மலர்களெல்லாவற்றினுஞ் சிறந்திருக்கும் பரிமளம். கடவுட்சோலை யென்றும் இயைக்கலாம். மழு - பரசுவென்னும்படை. (அகூ)

90.—பொழிற்காவலாளர் வீமனைக் காணுதல்.

மண்டியெங்கெங்குமேன்மேன்மறிகடன்முகக்குநீலக்
கொண்டலிற்குமுறியார்த்துக்குறுகியகொடியநீசர்
சண்டவேகத்தினெய்துஞ்சதாகதிதனயன்றன்னைக்
கண்டனர்சூலபாசகாலனைக்கண்டதன்னார்.

(இ - ள்.) எங்கு எங்கும் - (அச்சோலையின்) எல்லாவிடங்களிலும், மண்டி - நெருங்கி, மேல் மேல் - வரவர, மறி கடல் முகக்கும் நீலம் கொண்டலின் குமுறி ஆர்த்து குறுகிய - அலைகள் மடங்குகின்ற கடல்நீரை மொண்டுபருகிய நீலநிறமுள்ள காளமேகம்போலக் கர்ச்சித்து ஆரவாரித்துக்கொண்டு சமீபித்த, கொடிய நீசர் - கொடுந்தன்மையுள்ள அதமர்களான அவ்வரக்காகள், சண்டம் வேகத்தின் எய்தும் - உக்கிரமானவேகத்துடனே வருகின்ற, சதாகதி தனயன் தன்னை - வாயுகுமாரனான வீமனை, சூல பாச காலனை கண்டது அன்னார் - சூலாயுதத்தையுங் காலபாசத்தையும் வந்திய யமனைக் கண்ட தன்மையை யொத்தவர்களாய், கண்டனர் - பார்த்தார்கள் ; (எ - று.)

விரைவில் வீமன் இவ்வரக்கர்க்கு இறுதியை விளைத்தலால், சூலபாசகாலனைக்கண்டதன்னாரென உவமைகூறினார். கொண்டல் - நீர்கொண்டது எனக் காரணபெயர். நீசர் - குணங்தொழில்களில் இழிவுடையோர். பாசம் - கயிற்றுவடிவான ஓர் நமனாயுதம் ; இது, உயிர்களைக் கட்டியிழுத்துக்கொண்டுபோவது. (கூ0)

91.—வீமனைநோக்கி அவர்கள் அதட்டிக் கடுமையாகச்சொல்லிப் பின்னுங் கூறலுறுதல்.

எற்றவென்பாருஞ்சூலத்தெறியவென்பாருமெய்நிப்
பற்றவென்பாருமாவிபறிக்கவென்பாரும்யாக்கை
சுற்றவென்பாருஞ்சென்னிதுணிக்கவென்பாருமாகி
யுற்றனரரக்கர்நாலுயிராருந்துரைக்கலுற்றார்.

(இ - ள்.) உற்றனர் அரக்கர் நூறு ஆயிரர் - வந்துநெருங்கினவர்களான அந்த லட்சம் ராக்ஷசர்கள், எற்ற என்பார்உம் - (இம்மனிதனை) அடிக்க என்பவர்களும், சூலத்து எறிய என்பார்உம் - சூலாயுதத்தால் வீசி மோதுக என்பவர்களும், எய்தி பற்ற என்பார்உம் - (அருகிற்) சென்று பிடிக்க என்பவர்களும், ஆவி பறிக்க என்பார்உம் - உயிரைவாங்குக என்பவர்களும், யாக்கை சுற்ற என்பார்உம் - இவனுடம்பைக் கட்டுக என்பவர்களும், சென்னி துணிக்க என்பார்உம் - தலையை வெட்டுக என்பவர்களும், ஆகி - ஆய், உருதது உரைக்கல் உற்றார் - கோபித்துச் சொல்லத் தொடங்கினார்கள்; (எ - று)—அதனை, மேலிற்கவியிற் காண்க.

எற்ற, எறிய, பற்ற, சுற்ற - அகரவீற்றுவியங்கோள்கள். பறிக்க, துணிக்க - ககரவீற்றுவியங்கோள்கள். (கக)

92.—வீமனை அரக்கர்கள் அதட்டி வினவுதல்.

இந்திரன்முதலாவுள்ளவிமையவர்தாமுமிந்தக்
கந்தவான்சோலைகண்ணானோக்கவுங்கருதிநைவார்
வந்ததென்மதியிலாதமானுடாவுன்றனாவி
சிந்துமுன்செப்புகென்றுதெழித்தனர்தீயோரெல்லாம்.

(இ - ள்.) 'இந்திரன் முதல் ஆ உள்ள இமையவர்தாம்உம் - இந்திரன் முதலாகவுள்ள தேவர்களும் இந்த கந்தம் வான் சோலை கண்ணால் நோக்க உம் கருதி நைவார் - வாசனையையுடைய உயர்ந்த இச்சோலையைக் கண்களாற்பார்த்தற்கு நினைத்தாலும் (நம்மால்) வருந்துவார்கள்; (அங்ஙனமிருக்க), மதி இலாத மானுடா - அறிவில்லாத மனிதனே! வந்தது என் - (நீ இங்கே) வந்தகாரணம் என்ன? உன்தன் ஆவி சிந்தும் முன் செப்புக - உனது உயிர் (எம்மால்) அழிதற்குமுன்பு சொல்லுக,' என்று - என்றுகூறி, தீயோர் எல்லாம் - கொடிய அவ்வரக்கர்யாவரும், தெழித்தனர் - (வீமனை) அதட்டினார்கள்; (எ - று.)

இமையவர் தாமும், உம்மை - உயர்வுசிறப்பு. நோக்கவும் என்ற உம்மை - இழிவுசிறப்பு. 'கண்ணால்' என்ற அவசியமில்லாதபதம், அவர்கள் கண்கள் இச்சோலையைப் பார்த்தற்கேற்ற சிறப்புடையன அல்ல வென்னும் இழிவை யுணர்த்தும்; அன்றி, மனத்தால்நோக்குதலினும் வேறுபாடு தோன்ற, 'கண்ணால் நோக்க' என்றதாகவுங் கொள்ளலாம். (கஉ)

93.—அவ்வரக்கரின் பொருளில்லாச் சொல்லைக் கேட்டு வீமன் சிரித்தல்.

அருளிலாவரக்கரிவ்வாறகங்கரித்தாற்றுமிந்தப்
பொருளிலாவுரைகட்கெல்லாமுந்தரப்புகலானாகி
யிருளிலாமுத்தமன்னவெயிற்றரும்பிலங்கநக்கான்
றெருளிலாமதனைமுன்னமெரித்திடுஞ்சிவனைப்போல்வான்.

(இ - ள்.) தெருள் இலா - தெளிந்த அறிவில்லாமல் (தன்னையெதிர்த்துப்) பொருத, மதனை - மன்மதனை, முன்னம் - முன்னொருகாலத்திலே, எரித்திடும் - (உடம்பை) எரித்த, சிவனை - பரமசிவனை, போல்வான் -

ஒப்பவனாகிய [பேராற்றலுடைய] வீமன்,—அருள் இலா அரக்கர் - கருணையில்லாத இராக்கதர்கள், அகங்கரித்து - செருக்குக்கொண்டு, இ ஆறு அறற்றும் - இந்தவிதமாகப் பிதற்றுகின்ற, இந்த பொருள் இலா உரைகட்கு எல்லாம் - பயனிலலாத இப்பேச்சுகளுக்கெல்லாம், உத்தரம் புகலான் ஆகி - விடைகூறாதவனாய், இருள் இலா முத்தம் அன்ன அரும்பு எயிறு இலங்க - கருநிறமில்லாத [மிக்கவெள்ளொளியையுடைய] முத்துக்களை யொத்த முல்லையரும்புபோன்ற (தனது)பற்கள் சிறிது வெளிவிளங்கும்படி, நக்கான் - சிரித்தான்; (எ - று.)

அகங்கரித்து - யானென்னுஞ் செருக்குக் கொண்டு. நக்கான், நகு - பகுதி. அழித்தற்றொழிலுடைமையாலும், சிரித்துப்பகைவரையழித்தலாலும், சிவனை ஈண்டு உவமைகூறியது. இங்கே, சிரிப்பு - வீரத்துஎழுந்த வெகுளிநகை. சிவபிரானது திவ்வியசக்தியை இத்தன்மையதென உணராது மற்றவர்களைப்போலவே அப்பிரானையும் வசப்படுத்தலாமெனக் கருதின அவிவேகத்தைப் பற்றி, 'தெருளிலாமதன்' என்றது. மானுடனான வீமனை அலட்சியப்படுத்தி அவ்வரக்கர் கூறியபடி நிகழாமல் வீமனே அவர்களை வெல்லுதலால் அவருரை பொருளிலாவுரை யாகும். (கூரு)

94.—வீமன் கூறிய மறுமொழி.

தனிதமேகம்போலார்க்குநுமதுயிர்சரத்திற்சாய்த்திப்
புனிதவான்பொழிலில்வாசப்புதுமலர்கொய்யவந்தேன்
குனிதவர்கொண்டுமுன்னுங்குலங்கரிசறுத்தவீரன்
மனிதனோவானுளானோமறத்திரோவஞ்சரென்றான்.

(இ - ள்.) 'தனிதம் மேகம் போல் - இடியையுடைய மேகங்கள்போல, ஆர்க்கும் - ஆரவாரிக்கிற, நுமது - உங்களுடைய, உயிர் - பிராணனை, சரத்தின் - (எனது) அம்புகளால், சாய்த்தி - ஒழியச் செய்து, புனிதம் வான் பொழிலில் - பரிசுத்தமாகவுள்ள சிறந்த இச்சோலையிலே, வாசம் புது மலர் கொய்ய - பரிமளத்தையுடைய புதிதாய்மலர்ந்த பூக்களைப் பறித்தற்கு, வந்தேன்—; முன் - முன்காலத்திலே [திரேதாயுகத்திலே], குனி தவர் கொண்டு - வளைந்த (கோதண்டமென்னும்) வில்லைக் கொண்டு, நும் குலம் - உங்கள் கூட்டத்தை [ராக்ஷசசமூகத்தை], கரிசு அறுத்த - குற்றம்நீங்க அழித்த, வீரன் - வீரத்தன்மையுள்ள இராமபிரான், மனிதனோ வான் உளானோ - மனிதனோ தேவனோ? [தேவனல்லன், மனிதனேயன்றோ]; வஞ்சர் - வஞ்சனையுடையவர்களே! மறத்திரோ - (அதனை) மறந்து விட்டீர்களோ?' என்றான் - என்று (அரக்கரை நோக்கி வீமன்) கூறினான்; (எ - று.)

இராமன் மனிதனாயினும் இராவணாதிராக்ஷசர் பலரை வேரறுத்தது போல, நானும் மனிதனாயினும் அரக்கராகிய உங்களையெல்லாம் அழித்திட வல்லேனென்றவாறாம். கொடியவரக்கராகிய உங்களை ஒழித்தபின்பே சோலை பரிசுத்தமாகு மென்பான், 'நுமதுயிர்சரத்திற்சாய்த்தி' என்றதன்பின் 'புனிதவான்பொழில்' என்றான். ஸ்தநிதம் - வடசொல். சாயத்தி-பிற

வினைவினையெச்சம். 'சாய்த்து' என்றும், 'கருவறுத்த' என்றும் பாடங்கள் உண்டு. குனிதவர்-வினைத்தொகை. மூன் உம் என்னும் பிரிக்கலாம். (கூச)

95.— இதுமுதல் ஆறுகவிகள் - அரக்கர் வீமனைச்சூழ்ந்துகொண்டுபோர, அவ்வீமன் அவர்களையழித்தமை கூறும்.

மாவிந்தமனையபொற்றோண்மாருதிவாய்மைகேட்டுப்
பூவிந்தவனத்தினீயோபறித்தியென்றழன்றுபொங்கி
நாவிந்தவுரைதந்தின்னுமிருப்பதோநரனுக்கென்னாக்
கோவிந்தனெடுத்தகுன்றிற்கொண்டலின்குழாத்திற்சூழ்ந்தார்.

(இ - ள்.) மா விந்தம் அனைய - உயர்ந்த விந்தியமலையை யொத்த, பொன் தோள் - அழகிய புயங்களையுடைய, மாருதி - வாயுகுமாரனை வீமனது, வாய்மை - வாயிலிருந்துவந்த வார்த்தையை, கேட்டு - (அரக்கர்கள்) செவியுற்று, 'நீஓ இந்த வனத்தில் பூ பறித்தி - நீயா இச்சோலையில் மலர் கொய்திடுவாய்!' என்று - என்றுகூறி, அழன்று பொங்கி - சீற்றங்கொண்டு எழுந்து, இந்த உரை தந்து இன்னும் நரனுக்கு நா இருப்பதுஒ என்னா-'இப் பேச்சுப்பேசி இதன்பின்பும் இந்தமனிதனுக்கு நாக்குத் துணிக்கப்படாம லிருப்பது தகுதியோ!' என்றுங் கூறி, கோவிந்தன் எடுத்த குன்றில் கொண்டலின் குழாத்தின்-கண்ணபிரான் (குடையாக) எடுத்துப்பிடித்த (கோவர்த்தனமென்னும்) மலையின்மீது (சூழ்ந்த) மேகக்கூட்டம்போல, சூழ்ந்தார் - (வீமனைச்) சூழ்ந்துகொண்டார்கள் ; (எ - று.)

திருவாய்ப்பாடியில் ஆயர்களெல்லாருங் கூடி மழையின்பொருட்டாக இந்திரனையாராதித்தற்கென்று சமைத்த சோற்றைக் கண்ணன் அவனுக்கு இடாதபடி விலக்கிக் கோவர்த்தனமலைக்கு இடச்சொல்லித் தானே ஒரு தேவதாரூபமாய் அமுதுசெய்தருள, அவ்விந்திரன் பசிக்கோபத்தாலே புஷ்கலாவர்த்தம் முதலிய மேகங்களை யேவி, கண்ணன் விரும்பிமேய்க்கிற கன்றுகளுக்கும் பசுக்களுக்கும் கண்ணனுக்கு இஷ்டரான இடையருக்கும் இடைச்சியர்க்கும் தீங்குதரும்படி கல்மழையை ஏழுநாள் இடைவிடாது பெய்வித்தபொழுது, கண்ணன் கோவர்த்தனமென்னும் மலையை எடுத்துக் குடையாகப்பிடித்து மழையைத்தடுத்து எல்லாவுயிர்களையும் இடையூறு சிறிதுமின்றிக் காத்தருளினனென்பது கதை. கோவிந்தன் என்னும் வடசொல்லுக்கு - உயிர்களைக்காப்பவனென்றும், பசுக்களைக்காப்பவனென்றும், பூமியைக்காப்பவனென்றும் பொருள்கொள்ளப்படும். பருமையும் வலிமையும் பற்றிக் கோவர்த்தனத்தை வீமன்வடிவுக்கும், கருமையும் பருமையும் பற்றி மேகத்தை அரக்கர்க்கும் உவமைகூறினார். நீயோ, ஓகாரம் - இழிபு. கோவிந்தன்றடுத்த என்று பிரதிபேதம். (கூரு)

96. வானகமறையவீசிவான்படைக்கலங்கள்வால
சேனனேமுதலாவுள்ளசேனையின்றலைவரார்த்தார்
கானுடைத்தொடையலானுங்காலனுக்காவியன்ன
தானுடைத்தண்டமேந்திப்புகுந்தனன்சலிப்பிலாதான்.

(இ - ள்.) (அப்பொழுது), வாலசேனன்வ முதல் ஆ உள்ள - வாலசேனனென்பவனை ஆதியாகவுடைய, சேனையின் தலைவர் - இராக்கத சேனைத் தலைவர்கள், வான் அகம் மறைய - ஆகாயத்தினிடம் முழுவதும் மறைபடும்படி, வான் படைக்கலங்கள் வீசி - சிறந்த ஆயுதங்களை வீசியெறிந்துகொண்டு, ஆர்த்தார் - ஆரவாரித்தார்கள் ; சலிப்பு இலாதான் - (போர் செய்வதில்) வெறுத்தலில்லாதவனான, கான் உடை தொடையலான் உம் - வாசனையையுடைய மாலையையுடைய வீமனும், காலனுக்கு ஆவி அன்ன தான் உடை தண்டம் ஏந்தி - யமனுக்கு உயிரையொத்துஉதவுவதான தான்உரிமையாகக் கொண்டுள்ள (சத்துருகாதிநியென்னும்) கதாயுதத்தை எடுத்துக்கொண்டு, புகுந்தனன் - (அவ்வரக்கர்கூட்டத்தில்) பிரவேசித்தான் ; (எ - று.)

வாலசேனன் - பாலஸேநன் என்னும் வடசொல்லின் திரிபு ; இளையோர்குழாத்தையுடையவனென்று பொருள். யமனாற் கொல்லத்தகாதவர்களையும் தான் கொன்றுதருதலால், யமனுக்கு இது இன்றியமையாத துணை என்பார், 'காலனுக்குஆவியன்ன தண்டம்' என்றார். சலிப்பு-தொழிற்பெயர்.

97. தண்டினலவர்கள்விட்டபடையெலாந்தகர்த்துமீள
மண்டினனுழுவைகண்டவாளுகிர்மடங்கலொப்பான்
மிண்டினருடலம்யாவுமெய்தலைதம்மிலொன்றக்
கிண்டினன்மூளைச்சேற்றிற்கிடத்தினன்படுந்துமன்னோ.

(இ - ள்.) உழுவை கண்ட - புலிகளை(த் தன்னைச்சூழ்ந்துநெருங்கிப் போர்செய்ய)ப் பார்த்த, வாள் உகிர் மடங்கல் - வாளாயுதம்போலக் கூர்மையான நகங்களையுடைய சிங்கத்தை, ஒப்பான் - போல்பவனாகிய வீமன், — தண்டினல் - (தனது) கதாயுதத்தாலே, அவர்கள் விட்ட படை எலாம் தகர்த்து - அவ்வரக்கர்கள்வீசின ஆயுதங்களையெல்லாம் உடைத்திட்டு, மீள மண்டினன் - மறுபடி மிகநெருங்கினவனாய், மிண்டினர் உடலம் யாஉம் - (தன்னை) நெருங்கிச்சூழ்ந்த அரக்கர்களின் உடம்புகளையெல்லாம், மெய் தலை தம்மின் ஒன்ற - உடம்பும் தலையும் (கீழேவிழுந்து) தமக்குட்சேரும்படி, கிண்டினன் - கீண்டெடுத்து, மூளை சேற்றில் படுத்து கிடத்தினன் - (அவர்களின்) மூளைகளாகிற சேற்றிலே தள்ளி விழுந்துகிடக்கச்செய்தான் ; (எ - று.)

தண்டு - தண்டம் ; வடசொல்விகாரம். பலத்திற்குறைந்த அரக்கர்க்குப் புலிகளும், ஆற்றலில்மிக்க வீமனுக்குச் சிங்கமும் உவமையாம். உடலம், அம்-சாரியை. மூளை யென்றது, தலையினின்று வழியும் ஒருவகைநிணத்தை. மெய் - மங்கலவழக்கு. மன், ஓ - ஈற்றசைகள். (கூஎ)

98. தாக்கினன்சிலரைத்தண்டாற்றடக்கையாற்சிலரைவானிற்
றாக்கினன்கறங்கினின்றுசுழற்றினன்சிலரையெற்றி
நூக்கினன்சிலரைத்தாளானெறுக்கினன்சிலரைவாளால்
வீக்கினன்சிலரையாவிவேறிட்டான்சிலரைவீமன்.

(இ - ள்.) வீமன் —, சிலரை - சில அரக்கர்களை, தண்டால் - (தனது) கதையினால், தாக்கினன் - மோதியடித்தான் ; சிலரை —, தட கையால் -

பெரிய (தனது) கைகளால், வானில் தூக்கினான் - ஆகாயத்தையளாவத் தூக்கிப்பிடித்தான்; சிலரை—, நின்று - (தான்) நிலைநின்று, கறங்கின் சுழற்றினான் - காற்றாடிபோலச் சுழலச்செய்தான்; சிலரை—, எற்றி நூக்கினான் - (கையால்) அடித்துத் தள்ளினான்; சிலரை —, தாளால் நொறுக்கினான் - காலால் மிதித்துத் துவைத்தான்; சிலரை—, வாளால் வீக்கினான் - வாளாயுதத்தினால் வெட்டினான்; சிலரை—, ஆவி வேறு இட்டான் - (உடம்பினின்றும்) உயிர் வேறாம்படிசெய்தான்; (எ - று.)—நொறுக்கு - நொறுங்கு என்பதன் பிறவினை. (கூஅ)

99. பிடித்தனன்சிலரையள்ளிப்பிசைந்தனன்சிலரைமண்ணி
லடித்தனன்சிலரையங்கமனைத்தனன்சிலரையெண்ண
முடித்தனன்சிலரைப்போகமுகிழ்த்தனன்சிலரைக்கண்ட
மொடித்தனன்சிலரையஞ்சவுறுக்கினன்சிலரைமன்றோ.

(இ - ள்.) (வீமன்), சிலரை—, பிடித்தனன் - (தன்கையால் ஒருபிடியாகப்) பிடித்தான்; சிலரை—, அள்ளி பிசைந்தனன் - ஒருங்குஎடுத்துப் பிசைந்தான்; சிலரை —, மண்ணில் அடித்தனன் - நிலத்தில் மோதினான்; சிலரை—, அங்கம் அனைத்தனன் - அவயவங்களை ஒடித்தான்; சிலரை—, எண்ணம் முடித்தனன் - (அவர்கள்கொண்ட) எண்ணத்தைப் பாழாக்கினான்; சிலரை—, போக முகிழ்த்தனன் - அழிந்துபோம்படி ஒடுக்கினான்; சிலரை—, கண்டம் ஒடித்தனன் - கழுத்தைமுறித்தான், சிலரை—, அஞ்ச உறுக்கினன் - பயப்படும்படி அதட்டினான்; (எ - று.)—மன், ஓ-ஈற்றசை.

இச்செய்யுளிலும் இதற்குமுந்தின செய்யுளிலுஞ் சிலரையென வந்த சொல்லும்பொருளும் மீண்டும் பலவிடத்தில் வந்தது, சொற்பொருட்பின்வருநிலையணி. போகம் முகிழ்த்தனன் என்றுபிரித்து - வீர சுவர்க்க இன்பம் அரும்பச்செய்தன னெனினும் அமையும். (கூகூ)

100. கரக்கழுந்ததனினானுங்கனவரைத்தோளினானும்
வரக்கொடுங்கதையினானுமராமரப்பணையினானு
முரக்கடுங்காலினானுமொருக்கினானுரைப்பதென்னோ
வரக்கரையென்றாற்பின்னைவிடுங்கொலோவனுமன்பின்னோன்.

(இ - ள்.) கரம் கழுந்துஅதனினான்உம் - (தனது) கைகளாகிய தண்டங்களாலும், கனம் வரை தோளினான்உம்-பெரியமலைகள்போன்ற (தனது) தோள்களாலும், வரம் கொடு கதையினான்உம்-சிறப்பான கொடிய (தனது) கதாயுதத்தாலும், மராமரம் பணையினான்உம் - மராமரமென்னும் மரத்தினது கிளைகளாலும், உரம் கடு காலினான்உம் - வலிமையையுடைய கடுமையான (தனது) கால்களாலும், ஒருக்கினான் - (அரக்கர்களை வீமன்) அழியச்செய்தான்; உரைப்பது என்ஒ - (இனி நாம்) சொல்லவேண்டுவது யாது உளது? அரக்கர் என்றால் - (வந்துஎதிர்ப்பவர்) இராக்கதராயிருந்தால், பின்னை-பின்பு, அனுமன் பின்னோன்-அனுமானது தம்பியானவன் [வீமன்], விடும்கொல் ஓ-(அவர்களை உயிரோடு) விட்டிடுவானோ? [விடானென்றபடி].

தன்னை யெதிர்த்துப் பொருதுவந்த இராவணன்மகனான அக்ஷகுமாரன் முதலிய சிறந்த இராக்கதவீரர்பலரையும் விடாமல், விரைவிற்கொலைசெய்த அநுமான்போலவே, அவன்தம்பியாகிய வீமனும் தன்னையெதிர்த்த அரக்கர் பலரையும் விடாது பலவகையால் அழியச்செய்தா னென்றவாறும். இங்கு வீமனை 'அனுமஃபின்னோன்' என்றது-கருத்துடையடைகொளியணியாம். காக்கமுழ்ந்த தனிஞனும்-கையிலுள்ள தனுர்த்தண்டத்தாலும் என்றுமாம். ஒருக்கினன், ஒருங்கு என்பதன் பிறவினையான ஒருக்கு-பகுதி: ஒருக்குதல்-ஒடுங்கச்செய்தல். அரக்கரை, ஐ - சாரியை. (௧00)

101.—வீமனை வேறுஇலட்சம் அரக்கவீரர் மீண்டும்சூழ்தல்.

இப்படிக்கெதிர்த்தசேனையாவையுமிமைக்குமுன்னந்
துப்புடன்றொலைத்துவாயுசுதனின்றவுறுதிநோக்கி
மைப்படிவரைகள்போல்வார்வாளெயிற்றரக்கர்பின்னுங்
கைப்படைகொண்டுநூறாயிரரொருகணத்திற்சூழ்ந்தார்.

(இ - ள்.) இப் படிக்கு - இந்தவிதமாய், எதிர்த்த சேனை யாவைஉம் - (தன்னை) எதிர்த்த சேனைகள் எல்லாவற்றையும், இமைக்கும் முன்னம் - கண்ணைமூடித்திறக்கும்பொழுதினுள்ளே, துப்புடன் தொலைத்து - வலிமையுடனே கொன்று, வாயு சுதன் நின்ற - வாயுகுமாரனான வீமன் சலியாது நிலைநின்ற, உறுதி - உறுதியை, நோக்கி - பார்த்து,— மை படி வரைகள் போல்வார் - மேகங்கள்படிந்த மலைகள்போலப் பெரியகரிய வடிவமுடையவராகிய, வாள் எயிறு அரக்கர் - ஒளியையுடைய கோரதந்தங்களையுடைய இராக்கதர்கள், பின்னும் நூறாயிரர் - வேறுமொரு லக்ஷம்பேர், கை படை கொண்டு - கைகளில் ஆயுதங்களை யேந்திக்கொண்டு, ஒரு கணத்தின் - ஒரு கணப்பொழுதினுள்ளே, சூழ்ந்தார் - (வீமனைவந்து) சூழ்ந்தார்கள்; (எ-று.)

இப்படிக்கு என்பதில், கு - சாரியை. இமைக்குமுன்னம் - விரைவு விளக்கும். இப்படியெதிர்ந்தசேனை என்றும் பாடம். (௧0௧)

102.—அரக்கர்சூழ்ந்ததைக்கண்டு வீமன் வில்லையெடுத்து நாணியைத்தெறித்தல்.

அவர்வெகுண்டழன்றுமேன்மேலலைகடல்போலவார்த்துப்
பவர்கொண்டபனகமென்னச்சூழ்வரும்பரிசுபாராக்
கவர்கொண்டதொடையலானுங்கதையொழிந்திலங்குசெங்கைத்
தவர்கொண்டுநெடுநாணண்டந்தகர்தரத்தழங்கவார்த்தான்.

(இ - ள்.) அவர் - அவ்விராக்கதர்கள், வெகுண்டு அழன்று - மிகவுங் கோபித்து, மேல்மேல்-மேலேமேலே [இடைவிடாமல்], அலை கடல் போல ஆர்த்து-அலையலைக்கின்ற கடல்கள்போல ஆரவாரஞ்செய்து, பவர் கொண்ட பனகம் என்ன - நெருங்குதலைக் கொண்ட பாம்புகள்போல, சூழ்வரும் - (தன்னைச்) சூழ்ந்துவருகிற, பரிசு - விதத்தை, பாரா - பார்த்து,— கவர் கொண்ட தொடையலான்உம் - (காண்போர்மனத்தைக்)கவருந்தன்மையைக்கொண்ட [மிகஅழகிய] பூமாலையையுடைய வீமனும், கதை ஒழிந்து - கதாயுதத்தைநீங்கி,இலங்கு செம் கை-விளங்குகின்ற சிவந்த(தனது)கையிலே,

தவர் கொண்டு - வில்லையேந்திக்கொண்டு, நெடு நாண் - நீண்டவில்நாணி யை, அண்டம் தகர்தர தழங்க - அண்டகோளங்கள் (அதிர்ச்சியாற்)பிளவுபடு மாறு முழங்கும்படி, ஆர்த்தான் - (கைவிரலால்) தெறித்து ஆரவாரித் தான்; (எ - று.)

வெகுண்டு அழன்று - ஒருபொருட்பன்மொழி. பவர்என்பதைப் பவன் என்பதன் உயர்வுப்பன்மையாகக் கொண்டு, பவர்கொண்டபனகம் என்ப தற்கு - சிவபிரானால்ஆபரணமாகக்கொள்ளப்பட்ட நாகங்கள்போல என்று உரைப்பாருமுளர். பனகம் - பந்நகம்; வடசொல்விகாரம்: கால்களால் நடவாததென்றும், வளைவாகச்செல்வதென்றும் பொருளுரைப்பர்; முந்தின பொருளுக்கு பத் ந க என்றும், பிந்தினபொருளுக்கு பந்ந க என்றும் பிரிக்க. இனி, பல் + நகம் என்பவை புணர்ந்த பன்னகம்என்ற தொடர் விகாரப்பட்டுவந்ததாகக்கொண்டு, பலமலைகள் என்பாருமுளர். கவர்-முத னிலைத்தொழிற்பெயர். (கoஉ)

103.—தெறித்த நாணொலியால் விளைந்தமை.

அன்னநாணோதையெங்குமண்டமும்பொதுளத்தாக்க
மன்னுநாகங்களெட்டுமதம்புலர்ந்துயங்கிவீழத்
துன்னும்வாய்நஞ்சுகக்கிச்சுழன்றுமண்சுமக்குங்கொற்றப்
பன்னகாதிபனுமுள்ளம்பதைத்துவெம்படங்கள்சோர்ந்தான்.

(இ - ள்.) அன்ன நாண் ஓதை - அந்த வில்நாணியின் ஓசையானது, எங்குஉம் - எல்லாவிடத்திலும், அண்டம்உம் - எல்லாவண்டங்களிலும், பொதுள - நெருங்கும்படி, தாக்க - (போய்ப்பரவி) மோத, (அவ்வதிர்ச்சி யாற்பயந்து), மன்னும் நாகங்கள் எட்டுஉம் - (எட்டுத்திக்குக்களிலும்) நிலை பெற்ற எட்டுயானைகளும், மதம் புலர்ந்து - மதநீர்வறண்டு, உயங்கி வீழ - மயங்கிச்சோர்ந்துவிழ, மண் சுமக்கும் கொற்றம் பன்னக அதிபன்உம் - பூமி யைச்சுமக்கின்ற வெற்றியையுடைய நாகங்களுக்கரசனான ஆதிசேஷனும், உள்ளம் பதைத்து - மனம்நடுங்கி, துன்னும் வாய் நஞ்சு கக்கி - நெருங்கின வாய்களினின்று விஷத்தை வெளியிட்டு, சுழன்று - தலைசுழன்று, வெம் படங்கள் சோர்ந்தான் - பயங்கரமான படங்கள் சாய்ந்து விழுந்தான்; (எ-று.)

நாணோதை அண்டமெங்குந் தாக்க, நாகங்கள்வீழ, பன்னகாதிபனுஞ் சோர்ந்தானென்க. நாகங்கள் எட்டு - கிழக்கு ஆதி முறையே ஐராவதம், புண்டரீகம், வாமநம், குமுதம், அஞ்சநம், புஷ்பதந்தம், சார்வபௌமம், சுப்பிரதீகம் என்பன. நகம் - அசையாதது: மலை; அதில் வாழ்வது, நாகம்: யானை; தத்திதாந்தவடசொல். பன்னகாதிபன் படங்கள் சோர்ந்தான் - உயர்திணைதொடர்ந்த அஃறிணைச்சினைப்பெயர் அவ்வுயர்திணைமுடிபையே பெற்ற திணைவழுவமைதி; [நன் - பொது - 27.] அகண்டமும் பொதுள என்றும் பாடம். (கoங)

104.—வீமனெய்த சரத்தால் அரக்கச்சேனை தளர்ந்தமை.

உரம்படச்சரங்கண்மேன்மேலுறுக்கிவெல்வீமனுந்தச்
சிரங்களிற்றோளின்மார்பிற்கண்களிற்செருகச்சென்று

கரன்படைக்குழாத்துமுன்னங்காகுத்தன்கதிர்கொள்கூர்வாய்ச்
சரம்படத்தளர்ந்ததென்னத்தளர்ந்ததத்தளர்வில்சேனை.

(இ - ள்.) வெல் வீமன் - வெற்றியையுடைய வீமசேனன், உறுக்கி - கோபித்து, சரங்கள் - பாணங்களை, உரம் பட - வலிமை பொருந்த, மேல்மேல் - மேலேமேலே, உந்த - பிரயோகிக்க, (அவ்வம்புகள்), சிரங்களில் - (அரக்கர்களுடைய) தலைகளிலும், தோளில் - தோள்களிலும், மார்பில் - மார்புகளிலும், கண்களில் - கண்களிலும், சென்று செருக - போய்த் தைத்தலால், அ தளர்வு இல் சேனை - (இதுவரையிலுந்) தளர்ச்சியில்லாதிருந்த அந்த இராக்கதசேனையானது, கரன் படை குழாத்து - கரனுடைய சேனைக்கூட்டத்திலே, முன்னம் - முற்காலத்தில், காகுத்தன் - ஸ்ரீராமபிரானது, கதிர் கொள் கூர் வாய் சரம் - ஒளியைக்கொண்ட கூர்மையான நுனியையுடைய அம்புகள், பட - படுதலால், தளர்ந்தது என்ன - (அச்சேனை) தளர்ச்சிபெற்றது போல, தளர்ந்தது - (தான்) தளர்ச்சிபெற்றது; (எ - று.)

கரன் என்னுஞ் சொல்லுக்கு - கொடியவனென்று பொருள்; இவன், இராவணனுக்கு உடன்பிறந்த முறையாகும் ஓரரக்கன்: இவனை இராவணன் சூர்ப்பணகைக்குப் பாதுகாவலாகத் தண்டகாரணியத்தில் ஜநஸ்தாநத்தில் பலசேனைகளோடு வைத்திருந்தான்; கோதாவரிதீரத்திற் பஞ்சவடியில் வசித்திருந்த இளையபெருமாள் சூர்ப்பணகையை மூக்கு முதலிய சிலஉறுப்புக்களை யறுத்திட்டதை யறிந்து, அதுகாரணமாக இவன் தூஷணன் திரிசிரன் என்பவர்களோடும் பதினாலாயிரங்கோடி சேனைத்தலைவர்களோடும் இராமபிரானை வந்தெதிர்த்து மிகவிரைவில் மிகஎளிதில் அவ்வெம்பெருமானாற் கொல்லப்பட்டுக் கூட்டத்தோடு ஒழிந்துபோனானென்பது வரலாறு. காகுத்தன்-காகுத்ஸ்தன் என்னும் வடமொழித் திரிபு; ககுத்ஸ்தனென்பவனது வமிசகுமாரனென்று பொருள்: சூரியகுலத்தரசனாகிய புரஞ்சயனென்பவன் எருதுவடிவங்கொண்டுவந்த இந்திரனை வாகனமாகக் கொண்டு அவனது முசுப்பின்மேலேறிச்சென்று போர்செய்ததனால், ககுத்ஸ்தனென்று பெயர்பெற்றான்: ககுத்ஸ்தன் - எருதுமுசுப்பின்மேலிருப்பவன்: ககுத் - திமில், ஸ்தன் - இருப்பவன். (௧0௪)

105.—இதுவும், மேற்கவியும் - குளகம் : மீண்டும் அரக்கர் பொர, அவரை வீமன் அழித்தமை.

சக்கரஞ்சூலம்பாசந்தண்டம்வேல்கப்பணம்வாண்
முற்கரங்களையம்விட்டெறெழுக்கொழுமுசுண்டிகுந்த
மெக்கரங்களினுமேந்தியாவருமிவன்மேலேவி
யக்கணந்தன்னின்மீண்டுமகங்கரித்தார்ந்தகாலை.

(இ - ள்.) அ கணம் தன்னில் - அந்த க்ஷணத்திலேயே, மீண்டும்-மறுபடியும், யாவர்உம் - எல்லோரும், அகங்கரித்து - செருக்குக்கொண்டு [தளர்ச்சியொழிந்து], சக்கரம் - சக்கரத்தையும், சூலம் - சூலத்தையும்,

பாசம் - பாசாயுதத்தையும், தண்டம் - கதையையும், வேல் - வேலையும், கப்பணம்-கப்பணமென்னும் முள்ளாயுதத்தையும், வாள்-வாளையும், முற்காம்-இருப்புலக்கையையும், கணையும்-வளை தடியையும், விட்டேறு-எறியீட்டியையும், எழு-இருப்புத்தடியையும், கொழு-இருப்புக்கொழுவையும், முசுண்டி - முசுண்டியென்னும் ஆயுதத்தையும், குந்தம்-பேரீட்டியையும், எக் கரங்களின் உம்-எல்லாக்கைகளிலும், ஏந்தி-எடுத்து, இவன்மேல் ஏவி-இவ்வீமன் மேற் பிரயோகித்து, ஆர்த்த காலை - ஆரவாரித்தபொழுது,—(எ - று.)— ஆர்த்தகாலை துணித்துச் சிரித்தன னென மேற்கவியோடு இயையும்.

'கப்பணம் - இரும்பால் ஆனைநெருஞ்சிமுள்ளாகப் பண்ணியது' என்பர் நச்சினார்க்கினியர். முற்கரம் - முத்கரம் என்னும் வடசொற் சிதைவு. கணையம் என்பதில், அம் - சாரியையாயின், அம்பென்க. கொழு என்பதைக் கொழுமையென்னும் பண்புப்பெயரின் விகாரமாக்கி, முசுண்டிக்கு அடைமொழியென்னலுமாம். (௧0௫)

106. அப்படைத்தொகைகளெல்லாமறுத்தறுத்தவர்கடத்த
மெய்ப்படச்சரங்கள்சிந்திச்சிரங்கள்வெவ்வேறதாக்கி
யிப்படிக்கரக்கர்சேனையாவையுந்துணித்துமீண்டுஞ்
செப்படிப்பவரினின்றுசிரித்தனன்சிங்கம்போல்வான்.

(இ - ள்.) சிங்கம் போல்வான் - சிங்கத்தையொப்பவனாகிய வீமசேனன், அ படை தொகைகள் எல்லாம் - அந்த ஆயுதங்களின் கூட்டங்களை யெல்லாம், அறுத்து அறுத்து - துண்டுதுண்டாக்கி, அவர்கள் தத்தம் மெய் பட - அவ்வவ்வரக்கர்களது உடம்புகளிற் படும்படி, சரங்கள சிந்தி - பாணங்களைப் பிரயோகித்து, சிரங்கள் வெவ்வேறது ஆக்கி - (அவர்கள்) தலைகளை (அவர்களின் உடம்புகளினின்று) வேறுவேறாகச்செய்து, இப் படிக்கு அரக்கர் சேனை யாவைஉம் மீண்டுஉம் துணித்து - இவ்விதமாக இராக்கதர்சேனைகளையெல்லாம் மறுபடியும் அழித்து, செப்படிப்பவரின் நின்று - செப்படிவித்தை செய்பவர்போல (ச் சிறிதும் சிரமமில்லாமல் இவ்வளவு தொழிலையுஞ் செய்து) நின்று, சிரித்தனன் - சிரித்தான் ; (எ - று.)

இங்குக் கூறிய உவமையால் வீமனுக்கு அரக்கரைவென்றமை ஒரு விநோதமாக இருந்ததன்றிச் சிறிதும் சிரமமின்மை வெளியாம். இந்த நகை, வீராட்டகாசமெனப்படும். வேறு+வேறு=வெவ்வேறு ; இது, மரூஉவில் அடங்கும். செப்படிவித்தை - மாயவித்தை : ஜாலம் : கண்கட்டிவித்தை; செப்பிடுவித்தை யென்றும் வழங்கும். வெவ்வேறவாக்கியென்றிருப்பின்நலம்.

வேறு

107.—அரக்கர் சேனை யொழியவே, பொழிற்காவலர் துபோனுக்கு நிகழ்ந்தமை மொழிதல்.

அந்தவ யப்படை யவ்வா றுதல் கண்டு
கந்தம லர்ப்பொழில் காக்குங் காவ லாளர்
புந்திம யக்குற நொந்து புகுந்த வெல்லா
முந்திரி யக்கர்பி ரானுக் கோடி மொழிந்தார்.

(இ - ள்.) வய - வலிமையுடைய, அந்த படை - அந்த இராக்கத சேனையும், அ ஆறு ஆதல் - அப்படியாயினதை [எளிதில் அழிக்கப் பட்டதை], கண்டு-பார்த்து, கந்தம் மலர் பொழில் காக்கும் காவலாளர்-வாசனையையுடைய பூக்களையுடைய அச்சோலையைப் பாதுகாக்கின்ற காவற்காரர்கள்,—புந்தி மயக்கு உற - (தங்கள்) அறிவுமயக்கத்தை யடைய, நொந்து - வருந்தி, முந்தி ஓடி - விரைந்துசென்று, இயக்கர் பிரானுக்கு-யக்ஷர்களுக்கரசனான குபேரனுக்கு, புகுந்த எல்லாம் மொழிந்தார் - நடந்த செய்திகளையெல்லாங் கூறினார்கள்; (எ - று.)

முந்தி ஓடி-ஒருவரினும் ஒருவர் முற்பட்டுச்சென்று. மயக்கு-முதனிலை திரிந்த தொழிற்பெயர்.

இதுமுதற் பதினெட்டுக்கவிகள் - பெரும்பாலும் முதலிரண்டுசீர்கள் விளச்சீர்களும், மற்றவை மாச்சீர்களு மாகிய நெடிலடி நான்குகொண்ட கலிநிலைத்துறைகள். (கoஎ)

108.—இதுவும், மேற்கவியும் - குளகம்: வீமன் செய்கையைக் காவலாளர் கூற, குபேரன் வெகுளல்.

எம்பெருமானிதுகேட்டியென்றிறைஞ்சி
வம்பவிழ்சோலையிடத்தோர்மனிதன்வந்து
பம்பியசேனையிடத்தேழ்மதமும்பாயு
மும்பலின்வாவிபுகுந்துழக்குகின்றான்.

(இ - ள்.) 'எம் பெருமான் - எங்கள் தலைவனே! இது கேட்டி - (யாம் சொல்லும்) இதனைக் கேட்பாய்,' என்று - என்றுகூறி, (சோலைக்காவற்காரர்), இறைஞ்சி - (குபேரனை) வணங்கி, 'வம்பு அவிழ் சோலை இடத்து-வாசனைவீசுகிற (நமது) பூஞ்சோலையினிடத்திலே, ஓர் மனிதன் வந்து-ஒரு மநுஷ்யன் வந்து, வாவி புகுந்து - (அச்சோலையிலுள்ள) பொய்கையிலுமிறங்கி, பம்பிய சேனை இடத்து-நெருங்கிப்பொருத (நமது) சேனையினிடத்திலே, ஏழ் மதம் உம் பாயும் உம்பலின் - எழுவகைமதங்களும் பாயப்பெற்றதோ ராண்யானைபோல, உழக்குகின்றான் - கலக்குகின்றான்;' (எ - று.)— 'என்று அவர் இசைத்தல் கேட்டு' என வருங் கவியோடு தொடரும்.

ஏழ்மதம் - இரண்டுகண்கள், இரண்டுகன்னங்கள், இரண்டுதுதிக்கைத் துளைகள், ஆண்குறி என்னும் ஏழிடங்களினின்று பாய்வன. இனி, வாவி புகுந்து ஏழ்மதமும்பாயுமும்பலின் பம்பியசேனையிடத்து உழக்குகின்றான் என அந்வயித்து, ஒருபெரிய நீர்நிலையிலிறங்கி மிக்கமதத்தையுடைய யானை அதனைக் கலக்குமாறுபோல, நிறைந்த நமது சேனையிற்பிரவேசித்து அதனைக் கலக்குகிறான் என்றும் பொருள்கொள்ளலாம். உழக்குகின்றான் என்பதில், உழ என்பதன் பிறவினையான உழக்கு என்பது - பகுதி. (கoஅ)

109. என்றவர்வாய்மைபுதைத்திசைத்தல்கேட்டுக்
குன்றுடனொன்றுபுயங்குலுங்கநக்குக்
கன்றியசிந்தையனங்கிகாலசெங்கண்ணோ
னென்றியமங்குலினீடுருத்துரைத்தான்.

(இ - ள்.) என்று—, அவர் - அக்காவற்காரர், வாய் கை புதைத்து - (தமது) வாயைக் கையால் மறைத்துக்கொண்டு, இசைத்தல்-சொன்னதை, கேட்டு - (குபேரன்) செவியுற்று, குன்றுடன் ஒன்று புயம் குலுங்க நக்கு - மலைகளோடொத்த (தனது)தோள்கள் குலுங்கும்படி (வெகுளியாற்பெருஞ் சிரிப்புச்) சிரித்து, கன்றிய சிந்தையன் - தவித்த மனமுடையவனும், அங்கி கால் செம் கண்ணன் - நெருப்பையுமிழுஞ் சிவந்தகண்களையுடையவனுமாய், ஒன்றிய மங்குலின் நீடு உருத்து - (நீரோடு)பொருந்தின மேகம் (இடியைக்கொள்ளுமாறு) போல மிகக் கோபங்கொண்டு, உரைத்தான் - (சிலவார்த்தைகளைச்) சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை மேற்கவியிற் காண்க.

வாய்கைபுதைத்தல் - பெரியோர்களிடத்துத் தமதுவணக்கத்தை விளக்குவது. கோபத்தால் மிகச் சிவந்த கண்களின் மிக்கபயங்கரத்தன்மையை, 'அங்கிகால்செங்கண்ண'னென்று வருணித்தார். சிந்தையன், கண்ணன் - குறிப்புவினைமுற்று வினையெச்சங்கள். ஒன்றுபுயம், கால்கண் - வினைத்தொகைகள். (க0க)

110.—வந்த மனிதனைப் பிடித்துக்கொணருமாறு குபேரன் சங்கோடணனென்பானுக்குக் கூறல்.

தன்றுணைநின்றசங்கோடணனைநோக்கி
வன்றிறல்கூரடல்வேகமனிதன்றன்னைச்
சென்றவனாவிசெகுத்தல்செய்யாதின்னே
துன்றுபுயங்கடுவக்கியெய்தச்சொன்னான்.

(இ - ள்.) (குபேரன்),—தன் துணை நின்ற சங்கோடணனைநோக்கி - தனக்கு அருகில் நின்ற சங்கோடணனென்னுஞ் சேனைத்தலைவனைப் பார்த்து, சென்று-போய், வன் திறல் கூர் அடல் வேகம் மனிதன் தன்னை - மிகுந்தபலமபொருந்தின கொடியவேகத்தையுடைய மனிதனை, அவன் ஆவி செகுத்தல் செய்யாது-அவனுடைய உயிரை அழித்தல்செய்யாமல், இன்னே- இப்பொழுதே, துன்று புயங்கள் துவக்கி - வலிமைமிக்க தோள்களைக் கட்டி, எய்த - கொண்டுவரும்படி, சொன்னான்-கட்டளையிட்டான்; (எ-று.)

தன் துணை நின்ற - தனக்குத் துணையாய்நின்ற என்றுமாம். (கக0)

111.—சங்கோடணன் சேனையுடன் சோலையடைதல்.

அந்தவியக்கர்பிரானுமக்கணத்தில்
வந்துநிதிக்கிழவன்றன்பாதமன்னித்
துந்துபிகொட்டவளப்பில்சேனைசூழ
மந்தியிமைப்பின்மலர்த்தண்சோலையுற்றான்.

(இ - ள்.) அந்த இயக்கர் பிரான்உம் - யக்ஷசேனைக்குத்தலைவனான அச் சங்கோடணனும், அ கணத்தில் - அந்தக்ஷணத்திலேயே, வந்து - கிட்டவந்து, நிதிக் கிழவன் தன் பாதம் மன்னி-நிதிகளுக்குஉரிய தலைவனான குபேரனது திருவடிகளை அடைந்து [தெண்டனிட்டு], துந்துபி கொட்ட -

(போருக்குரிய) துந்துபிவாத்தியங்கள் அடிக்கப்படவும், அளப்பு இல் சேனை சூழ - அளவில்லாத சேனைகள் (தன்னைச்) சூழ்ந்துவரவும், உந்தி-(அச்சேனைகளைச்) செலுத்திக்கொண்டு, இமைப்பின் - ஒருமாத்திரைப்பொழுதினுள்ளே, மலர் தண் சோலை உற்றான் - குளிர்ந்த அந்தப்பூஞ்சோலையையடைந்தான்; (எ - று.)—துந்துபி கொட்ட - பேரிகைமுழங்க. (கககக)

112.—இயக்கர்தலைவர் வீமனை வளைந்துகொள்ளல்.

மன்னுகுருக்கள்குலத்துமன்னர்மன்னன்
றன்னையியக்கர்குலத்திலெண்ணுந்தலைவர்
துன்னுபடைக்கடலோடும்பொங்கிச்சூழ்ந்தார்
மின்னிமுழக்கியிடிக்குமேகம்போல்வார்.

(இ - ள்.) மின்னி முழக்கி இடிக்கும் மேகம் போல்வார் - மின்னுதலைச்செய்து ஆரவாரித்து இடியிடிக்கின்ற மேகங்களைத் தனித்தனியொப்பவரான, இயக்கர் குலத்தில் எண்ணும் தலைவர் - யக்ஷர்களுடைய மரபிலே நன்குமதிக்கப்படுகிற சேனைத்தலைவர்கள், துன்னு படை கடலோடு உம் - நெருங்கிநின்ற (தமது) சேனாசமுத்திரத்துடனே, பொங்கி-(போரில்) ஊக்கம்மிக்கு, மன்னு குருக்கள்குலத்து மன்னர்மன்னன் தன்னை-நிலைபெற்ற குருவென்னும் அரசனது மரபிலேபிறந்த அரசர்களுக்கெல்லாந் தலைவனான வீமசேனனை, சூழ்ந்தார் - வளைந்துகொண்டார்கள்; (எ - று.)

குரு என்பவன், சந்திரகுலத்துப் பிரசித்திபெற்ற ஓரரசன். வீமனை 'குருக்கள் குலத்துமன்னர்மன்னன்' என்றது, அவனது பெருந்தகைமையை விளக்கியவாறும். படைக்கடல் - கடல்போற்பரவிய சேனை. மன்னு - (அவ்விடத்தில்) வந்து சேர்ந்த, மன்னன் என்றுமாம். படைக்கலமோடும் என்று பிரதிபேதம். (ககஉ)

113.—இயக்கரிடைநின்ற வீமன் வருணனை.

மானவரக்கர்குலத்தைவானிலேற்றி
யூனொடிரத்தமுகுக்குஞ்சோலையூடே
தானைவளைத்திடநின்றசாபவீரன்
யானையினங்கள்வளைக்குமாளிபோன்றான்.

(இ - ள்.) மானம் அரக்கர் குலத்தை வானில் ஏற்றி - அகங்காரத்தையுடைய இராக்கதர்கூட்டத்தை (முன்னே போரிற் கொன்று) வீரசுவர்க்கத்திற் சேரச்செய்துவிட்டு, ஊனொடு இரத்தம் உகுக்கும் சோலையூடே - (அவ்வரக்கர்களது) தசையுங் குருதியுஞ் சிந்திக்கிடக்கப்பெற்ற அச்சோலையிலே, தானை வளைத்திட - (இப்பொழுது) இயக்கர்சேனை (தன்னைச்) சூழ்ந்திட, நின்ற - (அதனிடையிலே) நின்ற, சாபம் வீரன் - வில்வில் வல்ல வீரனான வீமன், யானை இனங்கள் வளைக்கும் யாளி போன்றான் - யானைக்கூட்டங்களாற் சூழப்படும் யாளியைப் போன்றான்; (எ - று.)

யாளி-யானையைக்கொல்வதும், சிங்கம்போல்வதும், துதிக்கையுடையதுமாகியதொரு மிருகவிசேடம். பலயானைகள் ஒருங்குசூழ்ந்தும் ஒருயாளி

யை ஒன்றும் ஊறுசெய்யமாட்டாமல் அதனால் தாம் அழிக்கப்படுதல்போல, பல இயக்கர்கள் கூடிவளைத்தும் வீமனை யாதும் நலிவுசெய்ய இயலாது அவனால் தாம்மேல் அழிதல்பற்றி, இவ்வுவமை கூறப்பட்டது. யாளி - சிங்க மென்றுங் கொள்ளலாம். யுத்தகளத்திற் பின்வாங்காமற் போர்செய்து நின்று பகைவரால் இறந்தவர் வீரசுவர்க்கமடைவ ரென்னும் நூற்றுணிபால், 'அரக்கர்குலத்தை வானிலேற்றி' என்றார். சாபம் - வடசொல். ஈற்றடி- இல்பொருளுவமை. மானம்-யானென்னும் அபிமானம். (கக௩)

114.—தன்னை வளைந்த அரக்கர்மேல் வீமன் சரங்களை வீசுதல்.

விண்ணிலியக்கர்படைக்கலங்கள்வீசி
யெண்ணிலர்சுற்றும்வளைத்தெதிர்ந்தபோதில்
வண்ணவரிச்சிலைகோலிவாயுமைந்தன்
றுண்ணெனவுட்கவடிச்சரங்கடொட்டான்.

(இ - ள்.) விண்ணில் - ஆகாசமார்க்கத்திலே, எண் இலர் இயக்கர் - அளவிறந்தவரான [அநேக]யக்ஷர்கள், படைக்கலங்கள் வீசி - ஆயுதங்களை மேல்எறிந்துகொண்டு, சுற்றும் வளைத்து-(தன்னைச்)சுற்றிலுஞ்சூழ்ந்து, எதிர்ந்தபோதில்-(தன்னை) எதிர்த்தபொழுது,—வாயு மைந்தன்-காற்றின்மகனான வீமன், வண்ணம் வரி சிலை கோலி - அழகிய கட்டமைந்த வில்லை வளைத்து, துண்ணென உட்க - (அவர்கள்) திடுக்கிட்டு நடுங்கும்படி, வடி சரங்கள் தொட்டான் - கூர்மையான அம்புகளை (அவர்கள்மேல்) எய்தான்; (எ - று.)

போது-மரூஉமொழி. துண்ணென-அச்சக்குறிப்பிடைச்சொல். தொட்டான், தொடு - பகுதி. சுற்றும் - சுற்றிலும்; எப்புறத்தும். (ககச)

115.—இயக்கசேனைகளிற் சிலசேனையொழியச் சில நிலைகெட்டு ஓடுதல்.

தொட்டசரங்கடுளைத்துமார்புந்தோளு
முட்டவிசும்பினதெல்லையெங்குமூடப்
பட்டதொழிந்துபடாதசேனையெல்லாங்
கெட்டனபட்டதுரைக்கவுண்டோகேட்கின்.

(இ - ள்.) தொட்ட சரங்கள் - (வீமனாற்) பிரயோகிக்கப்பட்ட அம்புகள், மார்புஉம் தோள்உம் துளைத்து - (அவ்வியக்கர்களது) மார்பையுந் தோள்களையுந் துளைசெய்து, விசும்பினது எல்லை எங்குஉம் முட்ட மூட - ஆகாயத்தினிடம் முழுவதிலும் பொருந்தும்படி பரவி மறைக்க, பட்டது ஒழிந்து - (அவ்வியக்கர்சேனைகளுள்) இறந்தது தவிர, படாத சேனை எல்லாம் - இறவாத சேனைகள் பலவும், கெட்டன - உறுதிநிலைகெட்டு முதுகிட்டோடின; பட்டது-(அச்சேனைகள் அப்போது) அடைந்தநிலைமையை, கேட்கின் - வினவினால், உரைக்க உண்டுஓ . (நம்மாற்) சொல்ல வகையுண்டோ ? [இல்லை யென்றபடி]; (எ - று.)

ஒழிந்து-ஒழிய; எச்சத்திரிபு. ஓ-எதிர்மறை. கேட்கின், கு - சாரியை.

116.—சங்கோடணன் புறங்கொடுத்தல்.

மன்னளகாபதிசேனைநாதன்மார்பிற்
றன்னடையாளமுறத்தண்டாலேதாக்க

மின்னிடைநாகம்வெருக்கொண்டென்னமீண்டான்
றன்னெதிர்வீரரிலாதசங்கோடணன்றான்.

(இ - ள்.) மன் அளகாபதி சேனாநாதன் மார்பில் - பெரிய அளகாபுரிக்கு அரசனான குபேரனது படைத்தலைவனாகிய சங்கோடணனது மார்பிலே, தன் அடையாளம் உற தண்டாலே தாக்க - தனது தழும்பு படும்படி (வீமன்) கதாயுதத்தாலே அடிக்க,—தன் எதிர் வீரர் இலாத சங்கோடணன் தான் - தனக்கு எதிரில் எந்த வீரரும் (இதுவரையிற் போரில்) நிற்கப்பெறாத அச்சங்கோடணன்,—மின்னிடை நாகம் வெரு கொண்டு என்ன - (மேகம்) மின்னுகையில் பாம்பு (இடிக்கு) அச்சங்கொண்டாற்போல, மீண்டான் - (அஞ்சிப்புறங்கொடுத்துத்) திரும்பினான்; (எ - று.)

தன் எதிர் வீரர் இலாத - தனக்கு ஒப்பானவீரர் எவரையும் பெறாத என்றும் உரைக்கலாம். மின்லொளியைக் காணினும் இடியொலியைக் கேட்பினும் நாகம் அஞ்சியொடுங்குதல் இயல்பு. (கககூ)

117.—இதுவும், மேற்கவியும் - குளகம்: வீமனோடு சமாதானஞ் செய்துகொள்ளும்படி சங்கோடணன் குபேரனுக்குக் கூறுதல்.

கருத்தொடுசென்றளகேசன்பாதகமலஞ்
சிரத்தினில்வைத்திவைநின்றுசெப்பலுற்றா
னுருத்திரன்மானுடவுருவங்கொண்டதன்றேல்
வரத்திவன்மானுடனல்லன்மன்னவென்றே.

(இ - ள்.) சென்று - போய், அளகேசன் பாதகமலம் - அளகாபுரிக்கு அரசனான குபேரனது திருவடித்தாமரைமலர்களை, கருத்தொடு - மனத்தில் அன்புடனே, சிரத்தினில் வைத்து - (தனது) தலையின்மேற் கொண்டு [சாஷ்டாங்கமாகத் தெண்டனிட்டு], நின்று - (அருகில்) நின்று, இவை - இவ்வார்த்தைகளை, செப்பல் உற்றான் - கூறத்தொடங்கினான்: (அவை யாவையெனின்),—'மன்ன-அரசனே! உருத்திரன் மானுட உருவம் கொண்டது - (அழித்தற்றொழிற்கடவுளான) சிவபெருமான் இம் மனிதவடிவத்தைக் கொண்ட தன்மை யாதல்வேண்டும்; அன்றேல்-அவ்வாறன்றி, வரத்து இவன் - மேன்மையுடைய இவ்வீரன், மானுடன் அல்லன் - சாதாரணமனிதனாகமாட்டான்,' என்று-என்றுகூறி,—(எ - று.)—"என்றான்" என மேற்கவியில் முடியும்.

அளகா+ஈசன்=அளகேசன்; வடமொழிப்புணர்ச்சி, குணசந்தி. ருத்ரன் என்னும் வடமொழி, ரகரத்துக்கு உகரம் மொழிமுதலாகி, இணைந்து வந்த ரகரத்திற்கு இகரம் முன்வரப்பெற்றது; [நன்-பத - 21, 22]. வரத்து-வருதலையுடைய என்றுமாம்; தொழிற்பெயர்: து - விகுதி. (ககஎ)

118. பண்புடனிக்கணம்வேண்டுநிதிகள்பலவு
நண்பொடவற்கெதிர்சென்றுநல்காயென்னின்
விண்புகுமிப்புரம்வேந்தவென்றான்மெய்யிற்
புண்புகவுட்கியுழைக்கும்வேழம்போல்வான்,

(இ - ள்.) 'வேந்த - அரசனே! பண்புடன் - நற்குணத்துடனே, இகணம் - இந்தக்ஷணத்திலே, அவற்கு எதிர் சென்று - அம்மனிதனுக்கு எதிரிற் போய், வேண்டும் நிதிகள் பலஉம் - (அவன்) விரும்பும் பலவகைச் செல்வங்களையும், நண்பொடு - சினேகவகையால், நல்காய் எனின் - (நீ) கொடாதொழிவையானால், இ புரம் - இந்நகரத்துப்பிராணிவர்க்கம் முழுவதும், விண் புகும் - (இறந்து) மேலுலகத்தையடையும்,' என்றான்-என்று (குபேரனைநோக்கிக்) கூறினான்: (யாரென்னில்), மெய்யில் புண் புக உட்கி உழைக்கும் வேழம் போல்வான் -(தன்)உடம்பில் விரணமுண்டாக (அதனால்) ஒடுங்கி வருந்துகின்ற யானையை ஒப்பவனாகிய சங்கோடணனென்னுஞ் சேனைத்தலைவன்; (எ - று.)

இவன் இயற்கையில் மிக்கதேகவலிமையையும் அடங்காப்பெருஞ்சீற்றத்தையும் கம்பீரமானதோற்றத்தையு முடையவனாதலாலும், இப்பொழுது வீமன் கதையால் மார்பிலடிபட்டு வலியொடுங்கினமையாலும், புண்புகவுட்கியுழைக்கும்வேழம் இவனுக்கு உவமைகூறப்பட்டது. நல்காய் - முன்னிலையொருமையெதிர்மறைமுற்று; எதிர்மறை ஆகாரம் புணர்ந்து கெட்டது. புரம் - இடவாகுபெயர். உட்கியிளைக்கும்என்று பிரதி பதம். (ககஅ)

119.—வீமன் விருப்பத்தையறிய உருத்திரசேனனென்னும் மகனைக் குபேரன் விடுத்தல்.

*கோதிலியக்கனியாவுங்கூறக்கேட்டுத்*
*தாதையுருத்திரசேனன்றன்னைநோக்கி*
*மாதர்மலர்ப்பொழிலூடுவந்தமனித்த*
*னேதிலருத்தியனென்னக்கேட்டியென்றான்.*

(இ - ள்.) கோது இல் இயக்கன் - குற்றமில்லாத (சங்கோடணனென்னும்) அந்த யக்ஷன், யாஉம் கூற - இவையெல்லாவற்றையுஞ் சொல்ல, கேட்டு—, உருத்திரசேனன்தன்னை நோக்கி - ருத்திரசேனனென்னுந் (தனது) இளையகுமாரனைப் பார்த்து, தாதை -(அவனது) தந்தையான குபேரன், 'மாதர் மலர் பொழிலூடு வந்த மனித்தன் - (காண்பார்க்கு) விருப்பத்தைவிளைக்கின்ற (நமது) பூஞ்சோலையிலே வந்த மனிதனை, ஏதில் அருத்தியன் என்ன கேட்டி - எந்தப்பொருளில் விருப்பமுடையவனென்று (நீ போய்க்) கேட்பாய்,' என்றான் - என்று கூறினான்; (எ - று.)

ருத்திரசேன னென்பதற்கு - கொடுமையான சேனைகளையுடையவனென்று பொருள். மனித்தன் - மனிதன் என்பதன் விரித்தல். (ககக)

120.—உருத்திரசேனன் வீமனைச்சென்று காணுதல்.

*தந்தையுரைத்தருள்வாய்மைதலைமேற்கொள்ளா*
*மைந்தனுமப்பொழிலூடுசென்றுமன்னிச்*
*சிந்தியரக்கர்சிரங்கள்குன்றஞ்செய்து*
*கந்தனிநிற்குமறத்தினானைக்கண்டான்.*

(இ - ள்.) தந்தை - (தனது) பிதாவான குபேரன், உரைத்தருள் - (அன்போடு) சொல்லிய, வாய்மை - வார்த்தையை, தலைமேல் கொள்ளா -

தலையின்மேற்கொண்டு [கௌரவித்து], மைந்தன்உம் - குமாரனான உருத்திரசேனனும், அ பொழிலூடு சென்று மன்னி - அந்தச்சோலையினிடத்திற் போய்ச்சேர்ந்து, அரக்கர் சிரங்கள் சிந்தி குன்றம் செய்து கந்தனின் நிற்கும் மறத்தினானை - இராக்கதர்களது தலைகளை அறுத்துத்தள்ளி மலைபோலக் குவித்து முருகக்கடவுள்போல (ப்பராக்கிரமங்கொண்டு) நிற்கிற வலிமையையுடைய வீமனை, கண்டான் - பார்த்தான் ; (எ - று.)

வாய் - வாயிலிருந்துவருஞ் சொல்லுக்கு ஆகுபெயர் ; மை - பகுதிப்பொருள்விகுதி. தலைமேற்கொள்ளுதல் - சிரசாவகித்தல். "தந்தைசொன் மிக்க மந்திர மில்லை" என்றவாறு பிதிருவாக்கியத்தை நன்குமதித்தமை தோன்ற, 'தந்தையுரைத்தருள்வாய்மைதலைமேற்கொள்ளா' என்றது. (கஉ0)

121.—உருத்திரசேனன் வீமனை வினவல்.

கண்டுமருத்தருள்காளைதன்னைநோக்கி
வண்டுமிடைப்பயிலாதகாவில்வந்து
மிண்டுமரக்கர்குலத்தைவீணேயாவி
கொண்டுபடுத்தனையார்நீகூறுகென்றான்.

(இ - ள்.) கண்டு - (அங்ஙனம்) பார்த்து, (உருத்திரசேனன்), மருத்து அருள் காளை தன்னை நோக்கி - வாயுதேவன் பெற்ற குமாரனான வீமனைப் பார்த்து, 'வண்டுஉம் இடை பயிலாத காவில் வந்து-வண்டுகளும் உள்ளிடத்திலே வந்துநுழையப்பெறாத [மிக்க காவலையுடைய] இச்சோலையிலே (நீ) வந்து, மிண்டும் அரக்கர் குலத்தை - (அங்குக் காவலாக) நெருங்கியுள்ள இராக்கதர்கூட்டத்தை, வீணே ஆவி கொண்டு படுத்தனை-வீணாய் உயிரை (உடம்பினின்றுங்) கொண்டு [கொன்று] அழித்தாய ; நீ யார் கூறுக - நீ யார் சொல்வாயாக,' என்றான் - என்று கூறினான் ; (எ - று.)

காளை - இளவெருது ; இங்கே வீமனுக்கு உவமையாகுபெயர். 'வண்டும்' என்ற சிறப்பும்மை, அதற்குப் பூவிடத்துரிய தன்மையை விளக்கும். காக்கப்படுவது, கா ; காரணக்குறி. (கஉக)

122.—வீமசேனன் தன்னைத் தெரிவித்தல்.

நின்னளகாபதிமைந்தர்சாபநீக்க
முன்மருதூடுதவழ்ந்தவாகைமொய்ம்பற்
கின்னருண்மைத்துனன்மண்ணில்யாரும்போற்று
மன்னவன்வீமன்மருத்தின்மைந்தனென்றான்.

(இ - ள்.) 'நின் அளகாபதி மைந்தர் சாபம் நீக்க - உனது தந்தையான இந்த அளகாபுரிக்கு அரசனான குபேரனது குமாரர்களின் சாபத்தை ஒழித்தற்பொருட்டு, முன் - முன்னொருகாலத்திலே, மருதூடு தவழ்ந்த - மருதமரங்களினிடையே தவழ்ந்துசென்ற, வாகை மொய்ம்பற்கு - (வெற்றிக்கு அறிகுறியான) வாகைமரப்பூமாலையைச்சூடிய தோள்களையுடையகண்ணபிரானுக்கு, இன் அருள் மைத்துனன் - இனிய கருணைக்கு விஷயமான மைத்துனனாவேன் ; மண்ணில் யார்உம் போற்றும் மன்னவன் - நிலவுலகத்தில்

எல்லோரும் புகழும் அரசகுலத்தவனுவேன் ; வீமன் - வீமனென்னும் பெயருடையேன் ; மருத்தின் மைந்தன் - வாயுகுமாரனுவேன் (யான்),' என்றான்- என்று (உருத்திரசேனனை நோக்கி வீமன்) கூறினான் ; (எ - று.)

கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல விளையாடல்களைச் செய்யக் கண்டு கோபித்த யசோதை ஒருநாள் கிருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றாற்கட்டி ஒருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலையிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டைமருதமரத்தின் நடுவே எழுந்தருளியபொழுது, அவ்வுரல் குறுக்காய்நின்று இழுக்கப் பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்துவிழுந்தவளவில், முன் நாரத சாபத்தால் அம்மரங்களாய்க்கிடந்த நளகூபரன் மணிக்கிரீவன் என்னுங் குபேரபுத்திர ரிருவருஞ் சாபந்தீர்ந்து சென்றன ரென்பது கதை; அத்தை மகனை மைத்துனனென்பது முற்காலத்து வழக்கம்போலும். கண்ணனது தந்தையான வசுதேவருக்குக் குந்தி உடன்பிறந்த முறையாதல்பற்றி, வீமன் கண்ணனுக்கு மைத்துனனுவன். மைத்துனன், மன்னவன், வீமன், மைந்தன்-தன்மையிற் படர்க்கைவந்த வழுவமைதி. (கஉஉ)

123.—வீமனை உருத்திரசேனன்அங்குவந்தகாரணம்வினவ, வீமன்கூறினமை.

மாயவனற்புதனாதன்கண்ணன்வையந்
தாயவன்மைத்துனனாகினையதனிநீ
யேயவனத்தினில்வந்ததென்கொலென்றான்
றூயவனுற்றனயாவுந்தோன்றச்சொன்னான்.

(இ - ள்.) 'ஐய-ஐயனே! நீ—, மாயவன் - மாயையையுடையவனும், அற்புதன் - ஆச்சரியகரமான குணஞ்செயல்களையுடையவனும், நாதன் - (யாவர்க்கும்) தலைவனும், வையம் தாயவன் - உலகங்களை அளவிட்டவனும் ஆகிய, கண்ணன் - க்ருஷ்ணபகவானுக்கு, மைத்துனன் ஆகின் - அத்தை மைந்தனுவையானால், தனி - தனியே, ஏய வனத்தினில் வந்தது - பொருந்தின இச்சோலையில் வந்திட்டது, என்கொல் - என்னகாரணத்தாலோ ?' என்றான் - என்று வினவினான் ; (அப்பொழுது), தூயவன் - பரிசுத்தகுணமுடைய வீமன், உற்றன யாஉம் - நடந்தசெய்திகளையெல்லாம், தோன்ற - விளங்கும்படி, சொன்னான்—; (எ - று.)

அற்புதன் - அத்புதன் ; கண்ணன் - க்ருஷ்ணன் : வடசொற்றிரிபுகள். வாமனனான திருமால் பலிசக்கரவர்த்தியினிடம் மூவடி மண் பெற்றுத் திரிவிக்கிரமனாகி ஆகாயத்தையளாவி வளர்ந்து, ஓரடியால் மண்ணையும் மற்றோரடியால் விண்ணையும் அளந்து மூன்றாமடிக்காக அவன் சொன்னபடி அவன்தலைமேற் காலைவைத்து அவனைப் பாதாளத்திலழுத்தி அடக்கினானாதலால், 'வையந்தாயவன்' என்றது. தாயவன் - தா - பகுதி ; இதுவே உகரச்சாரியைபெற்றுத் தாவு என நிற்பது. ஏய - ஏய் என்னும் பகுதியடியாப் பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம்; ய் என்னும் இறந்தகால இடைநிலை வரத் தனிக்குறிலைச்சாராத பகுதியீற்றுயகரங்கெட்டது. (கஉ௩)

124.—வீமன் வேண்டிய மலரை அவனுக்குக்கொடுத்து அனுப்பிவிட்டு, உருத்திரசேனன் நிகழ்ந்த செய்தியைத் தாதையினிடங் கூறல்.

மற்றவனவ்வுரைகூறமகிழ்வொடந்தண்
பொற்றருநண்பின்வழங்கிப்போகென்றருளி
வெற்றியுருத்திரசேனன்மீண்டுவந்தாங்
குற்றதுதாதைதனக்குரைத்திருந்தான்.

(இ - ள்.) அவன் - அவ்வீமன், அ உரை கூற - அந்தவார்த்தைகளைச் சொல்ல, வெற்றி உருத்திரசேனன் - சயத்தையுடைய ருத்திரசேனன், மகிழ்வொடு - மகிழ்ச்சியுடனே, அம் தண் பொன் தரு - அழகிய குளிர்ந்த பொன்போலருமையான மலர்களை, நண்பின் - சிநேக வகையால், வழங்கி - (அவ்வீமனுக்குக்) கொடுத்து, போகு என்று அருளி - 'நீ போவாய்'என்று அன்போடுசொல்லி, மீண்டு வந்து - திரும்பிவந்து, ஆங்கு உற்றது - அங்கு நடந்தசெய்தியை,தாதைதனக்கு-(தன்)தந்தையான குபேரனுக்கு, உரைத்து-சொல்லி, இருந்தான் - வீற்றிருந்தான் ; (எ - று.)

தரு-கீர்க்கொடிமலர்க்கு ஆகுபெயர். ஒருசாரார் இக்கவியிலும் அடுத்த கவியிலும் 'தரு' என்றதனால், வீமன் விரும்பிவந்த மலர் கோட்டுப்பூ வென விளங்குமென்ப. பொற்றரு நண்பின்வழங்கி என்றதனால், வனசமலரையீந் தானென்பது தானே பெறப்படுமென்பாரும் உண்டு. பலஅரக்கருஞ் சில இயக்கரும்போல உருத்திரசேனன் வீமசேனனோடு போர்செய்து தோல்வி யடையாமையின், அவனை வெற்றியுருத்திரசேன னென்றார். (கஉச)

வேறு

125.—தான்வேண்டியமலரைப் பெற்றபின், வீமன் அங்குள்ள பொய்கையில் நீராடி யிளைப்பாறுதல்.

அண்ணற்ற ருப்பெற்ற பின்னந்த வயமீளி யக்காவினிற்
றண்ணித்தி லப்பொய்கை படிவுற்றின் னமுதன்ன தண்ணீர்குடித்
தெண்ணற்ற கழுதாட லதுகண்டி ருந்தங்கி ளைப்பாறினான்
மண்ணுக்கும் விண்ணுக்கு மறலிக்கு முறவான வடிவாளினான்.

(இ - ள்.) மண்ணுக்குஉம் - பூலோகத்துக்கும், விண்ணுக்குஉம்-தேவலோகத்துக்கும், மறலிக்குஉம் - யமனுக்கும், உறவு ஆன - (துணையாய்) உதவுவதான, வடி வாளினான்-கூர்மையான வாளாயுதத்தை யுடையவனான, அந்த வயம் மீளி - வெற்றியையுடைய வீரனான அவ்வீமன், அண்ணல் தரு பெற்ற பின் - பெருமையையுடைய அப்பூவைப் பெற்றபின்பு, அ காவினில் தண் நித்திலம் பொய்கை படிவுற்று - அந்தச்சோலையிலுள்ள குளிர்ந்த முத்துப்போலத் தெளிவானநீரையுடைய நீர்நிலையிலே நீராடி, இன் அமுது அன்ன தண் நீர் குடித்து - இனிமையான தேவாமிருதத்தை யொத்த [நற்சுவையுள்ள] குளிர்ந்த(அப்பொய்கையின்)நீரைப் பருகி, எண் அற்ற கழுது ஆடல்அது கண்டு - அளவிறந்த பேய்கள் (அப்போர்க்களத்திற்) கூத்தாடு

தலைப் பார்த்துக்கொண்டு, அங்கு இருந்து-அச்சோலையிலே தங்கி, இளைப்பு ஆறினன் - (போர்செய்த) சிரமந் தணிந்துநின்றான் ; (எ - று.)

வீமன்வாள் மண்ணுக்கும் விண்ணுக்கும் உறவாதல் - பூலோகத்தவர்க்குந் தேவலோகத்தவர்க்குந் தீங்கிழைக்கின்ற அரக்கர்முதலிய கொடியவர் பலரை அழித்து நல்லோர்களைக் காத்திடுதலாலும், அது யமனுக்கு உறவாதல் - அவனது கொலைத்தொழிலைத் தான் மேற்பூண்டு நடத்துதலாலு மென்க. அளவிறந்த பேய்கள் வந்து ஆடுதல், தமக்கு மிக்கதசையுணவு கிடைத்ததனாலாகிய களிப்பின் மிகுதியாலாகும். மறல்-கொடுமை: அதை யுடையவன், மறலி; இ - பெயர்விகுதி. 'கழுகாடல்' என்றும் பாடம்.

இதுமுதற் பதினான்குகவிகள் - பெரும்பாலும் முதல் நான்கு சீரும் மாங்காய்ச்சீர்களும், ஈற்றுச்சீரொன்று மாங்கனிச்சீரு மாகிய நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள். (கஉரு)

126.—வீமனைக்காணாது தருமபுத்திரன் திரௌபதியை வினவல்.

இவ்வாறிவன்செய்கையிவன்வந்ததறியாமலெழில்கூர்வனத்
தவ்வாறுபயில்கின்றவருள்வாரிதானுற்றவதுகூறுவாங்
கைவார்கதைக்காளையைக்கண்ணுறச்சூழல்காணாதுமுன்
செவ்வாய்மடப்பாவைநின்றாளைநீகூறெனச்செப்பினான்.

(இ - ள்.) இவன் செய்கை - இவ்வீமனது செய்தி, இ ஆறு - இவ்விதமாம்; எழில் கூர் வனத்து-அழகுமிக்க காட்டிலே, அ ஆறு பயில்கின்ற - அவ்விதமாகப்பொருந்திவசிக்கிற, அருள் வாரி - கருணைக்கடலான தருமபுத்திரன், இவன் வந்தது அறியாமல் - இவ்வீமன் (இங்ஙனம் இங்கு)வந்ததை யுணராமல், உற்ற அது - அடைந்த அக்கவலையை, கூறுவாம் - சொல்லத்தொடங்குவோம்: கை வார் கதை காளையை - கையில் நீண்ட கதாயுதத்தையுடைய இளவீரனான வீமனை, சூழல் - (தாம்)வசிக்கு மிடத்திலே, கண் உற காணாது - கண்களிற்படும்படி காணாமல், (தருமபுத்திரன்), முன் செம் வாய் மடம் பாவை நின்றாளை - எதிரில்நின்ற சிவந்தவாயையுடைய இளைய சித்திரப்பதுமைபோலழகிய திரௌபதியை (நோக்கி), நீ கூறு என செப்பினான்-(வீமன்சென்றவிடத்தை) நீ சொல்வாயென்று வினவினான்; (எ - று.)

எழில்கூர்வனம் என்றது, இங்கே கந்தர்ப்பமலையைச்சார்ந்த காட்டை. அவ்வாறு என்ற சுட்டு, கீழ்ப் பதினோராங்கவியில் '' அம்முனிவன் மொழிப் படியே வரம்பில் கேள்வி யறன்மகனுந் தம்பியரு மரிவையோடு, மெம்முகமுந் தம்முகமா விலையுங் காயு மினியகனி யுடனருந்தி யிருக்கு நாளில்'' என்றதைச் சுட்டும். வாரி - வடசொல்; கடலுக்கு ஆகுபெயர். மடம் - எல்லா மறிந்தும் ஒன்றுமறியாதுபோலிருக்கும் பெண்மைக்குணமாகவுமாம்; இது - மற்றைப் பெண்குணங்களுக்கும் உபலக்ஷணம். (கஉசு)

127.—திரௌபதி நிகழ்ந்தன உரைத்தல்.

வானின்றமலரொன்றுதன்முன்புமின்போலவந்துற்றதுந்
தானின்றிம்மலர்போலமலர்தேடிநீயின்றுதருகென்றதுந்

*தேனின்றதொடையானுமளகேசனகர்மீதுதனிசென்றதுங்*
*கானின்றகுழலாளுமன்னற்குமுன்கட்டுரைத்தாளரோ.*

(இ - ள்.) வான்நின்று - ஆகாயத்திலிருந்து, மலர் ஒன்று - ஒரு பூ, மின்போல - மின்னல்போல [விளக்கமுடையதாய் என்றபடி], தன் முன்பு - தனது எதிரில், வந்து உற்றதுஉம் - வந்துவிழுந்ததையும், தான் நின்று - தான் (வீமன்முன் சென்று) நின்று, நீ இ மலர் போல மலர் தேடி இன்று தருக என்றதுஉம் - 'நீ இந்தப்பூவைப்போலவிருக்கும் பூவைத் தேடி இன்றே கொணர்ந்துகொடுக்கவேண்டும்' என்று சொன்னதையும், தேன் நின்ற தொடையான்உம் - தேன்இடைவிடாதுநின்ற பூமாலையையுடைய வீமசேனனும், அளகேசன் நகர்மீது - குபேரனது நகரமாகிய அளகையை நோக்கி, தனி சென்றதுஉம்-ஒன்றியாய்ப்போனதையும், (ஆகிய இவற்றை), கான் நின்ற குழலாள்உம் - பரிமளம் இடைவிடாதுநின்ற கூந்தலையுடைய திரௌபதியும், மன்னற்கு முன் - தருமராசனெதிரிலே, கட்டுஉரைத்தாள் - உண்மையாகக் கூறினாள்; (எ - று.) —அரோ - ஈற்றசை.

'இம்மலர் போலுமலர்' எனப் பாடங் கொள்ளலாம். தனி - வேறு துணையில்லாமல். கான் - செயற்கைமணத்தோடு இயற்கைமணமும், உத்தம சாதிஸ்திரீகளது கூந்தலில் இயற்கைநறுமணமுண்டென்றல், மரபு. (கஉஎ)

128.—அருச்சுனன்பிரிவால் மனம்நொந்திருந்த தருமன் வீமன்பிரிவால் பின்னும் வருந்துதல்.

*கருமத்தின்வடிவானமடமங்கையிவ்வாறுகழறுதமு*
*னுருமுத்துவசன்மைந்தன்முன்போகவன்போடுமுளநொந்துளான்*
*மருமத்துவேறைத்தபுண்மீதுகனலுற்றதெனமாழ்கினான்*
*றருமத்தினுருவாகியெழுபாருநிலையிட்டதனியாண்மையான்.*

(இ - ள்.) கருமத்தின் வடிவு ஆன - ஊழ்வினையினது உருவத்தை யொத்த, மட மங்கை - பேதைமைக்குணத்தையுடைய இளம்பெண்ணான திரௌபதி, இ ஆறு கழறுதமுன்-இந்தப்படிசொல்லுமுன்னே [சொன்னவுடனே யென்றபடி], உருமு துவசன் மைந்தன் முன் போக அன்போடுஉம் உளம் நொந்து உளான் - இடியின்வடிவத்தையெழுதின கொடியையுடைய இந்திரனது குமாரனான அருச்சுனன் முன்னே (தன்னைவிட்டு) நீங்கிச்சென்றதனால் (அவனிடத்துள்ள) அன்பினால் மனம்வருந்தியுள்ளவனான, தருமத்தின் உரு ஆகி எழு பார்உம் நிலை இட்ட தனி ஆண்மையான் - அறத்தின் வடிவமாய் எழுவகைத்தீவுகளாகிய பூமிமுழுவதும் அழியாது நிலைநிறுத்தின ஒப்பில்லாத பராக்கிரமத்தையுடைய தருமபுத்திரன், மருமத்து வேல் தைத்த புண்மீது கனல் உற்றது என மாழ்கினான் - மார்பிலே வேலாயுதம் தைத்ததனாலாகிய புண்ணின்மேல் நெருப்புப்பொருந்தியதுபோல மிகவருந்தினான்; (எ - று.)

முன்னமே அருச்சுனனாகிய தம்பி தன்னை நெடுநாளாகப் பிரிந்துசென்றிருத்தற்காக அவனிடத்து அன்போடு மனம்வருந்தும் யுதிஷ்டிரன், இப்

போது முதல்தம்பியான வீமனும் விட்டுப்பிரிந்த செய்தியைத் திரௌபதி கூறக் கேட்டறிந்து அவ்வருத்தத்தின்மேல் மிக்கவருத்தமுற்றானென்பதாம். மூன்றாமடி, துன்பத்தின்மேல் துன்பமடைந்தற்கு உவமை. "த்வாபரே த்ரௌபதீ ம்ருத்யு:" என்றபடி பூமிக்குப் பாரமாகவுள்ள துரியோதனாதி துஷ்டவரசர்கள் பலர் இனிப் பாரதயுத்தத்தில் வேரொடு அழிதற்கு மூலம், இராசசபையில் துரியோதனனாற் பரிபவப்படுத்தப்பட்ட திரௌபதியேயாதலால், இவள் அக்கொடியவர்கள் முற்பிறப்பிற்செய்த தீவினைபோல அவர்களை அழிப்பவளென்பார், 'கருமத்தின்வடிவானமடமங்கை' என்றார்; அன்றியும், பாண்டவர் துரியோதனனாற் சூதாட்டத்தில் நாட்டையிழந்து வனத்தில் வருந்துதற்குக் காரணம், முன்னொருகாலத்து ஆந்திரப்பிரத்த நகரத்தில் மாயையில்வல்ல மயனா லேற்படுத்தப்பட்ட பாண்டவர்மாளிகைக்கு மனத்திற்பகைமைகொண்ட துரியோதனன் வந்தபொழுது அங்குள்ள நிலத்தைச் சலமாகவும் சலத்தை நிலமாகவும் வழியைச் சுவராகவும் சுவரை வழியாகவும் இங்ஙனம் ஒன்றை மற்றொன்றாக மாறுபாடாக்கருதி வருந்தித் திகைத்ததை உள்ளிருந்த திரௌபதி நோக்கிப் பரிகாசமாகச் சிரித்ததுவே யாதலால், இவள் பாண்டவர் செய்த ஊழ்வினைபோல்பவளென்னுங் கருத்தால், 'கருமத்தின்வடிவான மடமங்கை' என்றதாகவுங் கொள்ளலாம். இங்கே இங்ஙனங்கூறியது, வீமனைப்பிரிந்து தருமன் வருந்துதலாகிய தீவினைப்பயன் திரௌபதியனுப்பியதுகாரணமாக நேர்ந்தமையினென்க. இனி, கருமத்தின் வடிவான மடமங்கையென்பதற்கு - இல்லறவாழ்க்கைக்குரிய நற்செய்கைகள் தாம் ஒருபெண்வடிவங்கொண்டு வந்தாற்போன்ற திரௌபதி யென்று உரைப்பாருமுளர்: வேள்வியாகியசடங்கின் பயனாத் தோன்றியவளென்னலுமாம். எழுபார் - சம்பு, பிலக்ஷம், குசம், கிரௌஞ்சம், சாகம், சால்மலி, புஷ்கரம் என்பன. (கஉஅ)

129.—அப்போது தருமன் நினைக்கக் கடோற்கசன் வந்துசேர்தல்.

வாளிப்பரித்தேர்மனிவ்வாறுதுயரெய்திமனனஞ்செயக்
கூளிக்குழாம்வானின்மிசையுய்த்ததென்னக்கொடித்தேரின்மேற்
காளக்கருங்கொண்டல்போல்வந்துவீமன்றருங்காளைமுன்
னாளிப்பெருங்கொற்றவெற்றித்திருத்தாதையடிமன்னினான்.

(இ - ள்.) வாளி பரி தேர் மன் - அம்புபோலவிரைந்துசெல்கின்ற குதிரைகளைப்பூட்டிய தேரையுடைய தருமராசன், இ ஆறு துயர் எய்தி - இந்தப்படி துன்பமடைந்து, மனனம் செய - (கடோற்கசனை) நினைத்தல் செய்திட,—வீமன் தரும் காளை - வீமசேனன்பெற்ற குமாரனான அக்கடோத்கசன், கூளி குழாம் வானின்மிசை உய்த்தது என்ன - பேய்களின் கூட்டம் ஆகாசமார்க்கத்திலே கொண்டுவந்துசெலுத்தியதென்று (கண்டோர்) சொல்ல, கொடி தேரின்மேல் - (பேய்களைக் குதிரைகளாகப் பூட்டப்பட்டுள்ள) துவசத்தையுடைய (தனது) இரதத்தின்மேல், காளம் கரு கொண்டல் போல் - கார்காலத்துக் கரிய நீர்கொண்ட மேகம் போல, வந்து -

(விரைவில்) வந்து, முன் - முதலில், ஆளி பெரு கொற்றம் வெற்றி திரு தாதை - சிங்கம்போன்ற சிறந்த வலிமையையும் சயத்தையுமுடைய சிறந்த (தனது) பெரியதந்தையான தருமனது, அடி - பாதங்களில், மன்னினன்- சேர்ந்தான் ; (எ - று.)

தருமபுத்திரன் நினைத்தமாத்திரத்திற் கடோற்கசன் எதிரில்வந்து வணங்கினனென்பதாம். மசகம் - வடசொல். கூளி - பேய் ; "வாணிருத சேகரன்றனது தேரின்மேற், பந்தி பந்தி பதினுயிரம் பதின்மடங்கு கூளி கள் பரிக்கவா, னுந்தி" என்பர், மேல் மணிமான்வதைச்சருக்கத்தும். மேல் மணிமான்வதைச்சருக்கத்தினிறுதியில் "துணங்கை கொண்டலகை கோடி வானின்மிசை துள்ளி யூருமிர தத்தின்மே, லிணங்கி" என வருதலால், இங்கே கூளியென்பதற்குப் பெருங்கழுகென்று உரைத்தல் பொருந்தாது. காலம் - காளம்: லகரத்துக்கு ளகரம் போலி; இனி, ஒரு பொருட்பன் மொழியாய், காளக்கரு - மிகக்கரிய என்றுங் கொள்ளலாம். வீமசேனன் மற்றைப்பாண்டவர்நால்வரையுங் குந்தியையுந் தோளிலேந்திக்கொண்டு அரக்குமாளிகையினின்று தப்பிச்செல்லுகையில், இடிம்பவனமென்னும் பெரியகாட்டை யடைந்து, அங்குத் தன்னை வந்து எதிர்த்த இடிம்பனென் னும் அரக்கனைக் கொன்றுதள்ளி, அவ்வரக்கனுடன்பிறந்தவளாகிய இடிம்பி யென்பவள் தன்னைக் காதலித்து மணஞ்செய்யக் கருதினளைச் சேர்ந்து, அவளிடம் கடோற்கசனென்னும் மகனைப் பெற்றான் ; அவன் பின்பு தனது தாதையான வீமனையும், மற்றை அவனுடன்பிறந்தவரையும் விட்டுப்பிரிந்து செல்லுகையில் அன்போடு வணங்கி அவர்கள் தன்னை வேண்டிய காலத்து நினைக்கும்படியாகவும், அங்ஙனம் நினைத்தமாத்திரத்தில் தான் வந்து உதவு வதாகவும் வாக்குத்தத்தஞ் செய்துபோயினனென்பது, கீழ் ஆதிபருவத்து வரலாறும். எனாநற்கொடிஎன்றுபிரதிபேதம். (கஉக)

130.—வந்த கடோற்கசனிடத்து வீமன் சென்றிருப்பதைக் கூறித் தருமன் பின்னும் உரைக்கலுறுதல்.

மின்றாரைபடவெண்ணிலாவீசுமேகங்கொலெனவந்துமு
னின்றானைமுகநோக்கிநீதிக்கொர்வடிவாமனிவைகூறுவா
னுன்றாதைதமியேனெடுயவாமலொருவாசமலர்கொண்டிடச்
சென்றானெனச்சிந்தைநொந்தன்புடன்பின்னுமிவைசெப்புவான்.

(இ - ள்.) மின் தாரை பட - மின்னலின் ஒழுங்குபொருந்த, வெள் நிலா வீசும் - வெண்மையான சந்திரகாந்தியையும் வீசுகின்ற, மேகம் கொல் என - மேகமோ என்று உவமைகூறும்படி, முன் வந்து நின் றானை - (செம்மயிர்முடிபொருந்த வெண்மையான கோரதந்தங்களி னொளி யுடனே கரியநிறத்தனாய்) எதிரில்வந்து நின்ற கடோற்கசனை, முகம் நோக்கி - முகத்தைப்பார்த்து,—நீதிக்கு ஓர் வடிவு ஆம் மன் - நியாயங் களினதுஒப்பற்ற உருவத்தையொத்த தருமராசன்,—இவைகூறுவான்-இவ் வார்த்தைகளைச் சொல்பவனாய், 'உன் தாதை - உனது தந்தையான வீமன்,

தமியேனொடு உயவாமல்-என்னோடு ஆராயாமல், ஒரு வாசம் மலர் கொண்டிட - நறுமணத்தையுடையதொரு பூவைக் கொணர்தற்பொருட்டு, சென்றான் - (அளகாபுரிக்குப்) போய்விட்டான்', என - என்று கூறி,—சிந்தை நொந்து - மனம்வருந்தி, அன்புடன் - பிரீதியுடனே, பின்னும் - மீண்டும், இவை செப்புவான் - இவ்வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ - று.)— அவற்றை மேற்கவியிற் கூறுகிறார்.

செம்பட்டமயிருக்கு மின்தாரையையும், வெள்ளெயிற்றுக்கு வெண்ணிலாவையும், கரியபெரியவடிவத்துக்குக் காளமேகத்தையும் உவமை கூறினார். நீதிக்குஓர்வடிவாம் நிருபன் - நீதிதவறாத அரசனென்றபடி; கீழ் "தருமத்தினுருவாகி" என்பதற்குங் கருத்து இவ்வாறே. தமியேன்-தனியனாகிய யான்: தனக்கு இரண்டுகைகள்போன்ற வீமஅருச்சுனர் இருவரையும் பிரிந்ததனாலாகியஎளிமைதோன்ற, 'தமியேன்' என்றான். உயவாமல், உயவு-பகுதி; உயவு என்பது உசாவுஎன்பதன் மரூஉ. வடிவாநிருபன் என்றும், உரையாமலென்றும்பாடம். (கூ0)

131.—வீமனுக்குஇடையூறு நேருமுன் நாம் அளகைசெல்வோமென்று தருமன் அவன்தேரிலேறுதல்.

எம்பிக்கொரிடையூறுவந்தெய்துமுன்யாமியக்கேசனூர்
வம்புற்றமலர்வாவிசென்றெய்திவிரைவோடுவருவோமெனா
வெம்புற்றபைங்கானினிடைமின்னுமிளையோருமுடன்மேவவே
கம்பிக்குநெஞ்சோடவன்றேரின்மீதக்கணத்தேறினான்.

(இ - ள்.) எம்பிக்கு - எனது தம்பியான வீமனுக்கு, ஓர் இடையூறு வந்து எய்தும் முன் - யாதாயினுமொருதீங்கு நேர்தற்கு முன்னமே, யாம்-நாம், இயக்கேசன் ஊர் வம்பு உற்ற மலர் வாவி விரைவோடு சென்று எய்தி - யக்ஷராஜனான குபேரனது அளகாநகரத்திலுள்ள பரிமளம்மிக்க பூக்களையுடைய பொய்கையை விரைவிற்போயடைந்து, வருவோம்-மீண்டு வருவோம், எனா - என்று (கடோற்கசனை நோக்கிக்) கூறி, வெம்புற்ற பைங்கானின் இடை மின்உம் இளையோர்உம் உடன் மேவ - தாபம்பொருந்தின பசுமையான அந்தக்காட்டிலே மின்னற்கொடிபோன்ற திரௌபதியுந் (தனது) தம்பிமார்ரான நகுலசகதேவர் இருவரும் பிரியாதுவசிக்க, கம்பிக்கும் நெஞ்சோடு - (வீமனைப்பற்றின கவலையால்) நடுங்குகின்ற மனத்துடனே, அவன் தேரின்மீது-அந்தக்கடோற்கசனதுஇரதத்தின்மேல், அக்கணத்து - அந்தக்ஷணத்திலேயே, ஏறினான் - (தருமபுத்திரன்)ஏறினான்.

மின் - உவமவாகுபெயர். மேல் 137 - ஆங்கவியில் "அன்றந்த விடம் விட் டிமைப்போதிலத்தேரின் மிசையேறியே, மின்றந்த விடையாளு மிளையோரு முறைகானினிடைமேவினான்"என வருதலால், இச்செய்யுளின் மூன்றாமடிக்கு - திரௌபதியும் நகுலசகதேவரும் அக்காட்டினின்று தன்னுடன்வர எனப் பொருள் கூறலாகாமை யுணர்க. (கூக)

132.—தருமன் கடோற்கசனோடு தேரில் அந்தரவழியாய்ச் செல்லுதல்.

*கரக்கும்பகம்பக்கடாயானைமன்னன்கருத்தோடுசென்*
*றரக்கன்றடந்தேரிலவனோடுநீடந்தரத்தேகினான்*
*பரக்கும்பெரும்புண்யமும்பாவமுந்தாவில்பகிரண்டமும்*
*புரக்கும்பரஞ்சோதியும்பொங்குமாமாயையும்போலவே.*

(இ - ள்.) பரக்கும் பெரு புண்யம்உம் பாவமும்உம் (போல) - பரவுந் தன்மையுள்ள பெரிய நல்வினையின்வடிவமுந் தீவினையின் வடிவமும் போலவும், தா இல் பகிர் அண்டம்உம் புரக்கும் பரம் சோதிஉம் பொங்கும் மா மாயைஉம் போல - அழிதலில்லாத (இந்தஅண்டத்தைமாத்திரமேயன்றி மற்றை) வெளியிலுள்ள அண்டகோளங்களையுங் காக்குந்தன்மையுள்ள (எல்லாவொளிகளினும்)மேம்பட்ட ஒளிவடிவமான பரப்பிரமமும் (பலவகையாகப்)பரிணமிக்குந்தன்மையுள்ள பெரியமாயையின்வடிவமும் போலவும், கரம் கும்பம் கம்பம் கடாம் யானை மன்னன் - துதிக்கையையும் மத்தகத்தையும் அசையுந்தன்மையையும் மதநீர்ப்பெருக்கையுமுடைய ஆண்யானைக்கு ஒப்பான தருமராசன், கருத்தோடு சென்று-விருப்பத்துடனேபோய், அரக்கன் தட தேரில் - இராக்கதனாகிய கடோற்கசனுடைய பெரியதேரின் மேலே, அவனோடு - அக்கடோற்கசனுடனே, நீடு அந்தரத்து-நீண்டஆகாய வழியிலே, ஏகினான் - சென்றான்; (எ - று.)

தருமமூர்த்தியும் க்ஷத்திரியதேஜஸையுடையவனுமான யுதிட்டிரனுக்கு நல்வினையின் வடிவமும் ஒளிவடிவமான பரமான்மாவும், அரக்கிமகனான கருநிறமுடைய கடோற்கசனுக்குத் தீவினையின்வடிவமும் மாயையும் உவமையெனக் காண்க. கும்பம் - குடம்போன்ற வடிவமுடையது; மத்தகத்துக்குக் காரணக்குறி: உவமவாகுபெயர். கம்பம் - வடசொல்: எப்பொழுதும் அசைந்துகொண்டிருத்தல் யானையின் இயல்பு; இனி, கம்பம் என்பதற்கு - கட்டுத்தறியிற் கட்டிவைத்தற்குரிய என்றும், கட்டுத்தறியைமுறிக்குந்தன்மையுள்ள என்றும், தூண்கள்போன்ற கால்களையுடைய என்றும் பொருள்கொள்ளலாம். பாவம் மாயை என்ற இவற்றைக் கருநிறமுடையன வென்றல் நூல்மரபு தா - உரிச்சொல். உவமையணி. (கநஉ)

133.—தருமகடோற்கசரேறின தேர் துரோணர்சோலையை யடைதல்.

*கானெல்லைசெல்லாதுகதிரோனெடுந்தேரெனக்கங்கைசேர்*
*வானெல்லையுறவோடியொருநாலுகடிகைக்குள்வயமன்னுதே*
*ரூனெல்லையில்லாதுபுகமண்டிமிகமண்டுமுதிரத்துடன்*
*றேனெல்லையில்லாதுகுக்கும்பெருஞ்சூழல்சென்றுற்றதே.*

(இ - ள்.) வய மன்னு தேர்-வலிமைபொருந்தின அத்தேரானது,— கான் எல்லை செல்லாது - அக்காட்டினிடத்திலே [பூமியில்] செல்லாமல், கதிரோன் நெடு தேர் என - ஆயிரங்கிரணங்களையுடையவனான சூரியனது பெரியஇரதம்போல, கங்கை சேர் வான் எல்லை உற-தேவகங்காநதிபொருந்தின ஆகாயத்தினிடத்திலே பொருந்த, ஓடி - விரைந்து, ஒரு நாலு கடி

கைக்குள் - நான்குநாழிகைக்குள்ளே, ஊன் எல்லை இல்லாது மண்டி புக மிக மண்டும் உதிரத்துடன் தேன் எல்லை இல்லாது உகுக்கும் பெரு சூழல் - (கொல்லப்பட்டவீரர்களது) தசைகள் அளவில்லாது நெருங்கிக் கிடக்க (அவற்றினின்று) மிகுதியாகப்பெருகுகிற இரத்தத்துடனே (பூக்களினின்று) மதுவை அளவில்லாமற் சொரிகின்ற பெரிய அக்குபேரன்சோலையினிடத்தை, சென்று உற்றது - போய்ச்சேர்ந்தது; (எ - று.)

கடிகை - இருபத்துநான்கு நிமிஷங்கொண்ட நேரம். உதிரம்-ருதிரம்; வடசொற்றிரிபு. சூழல் - சூழ்ந்துள்ள தெனக் காரணக்குறி. (கநந)

134.—இதுவும், மேற்கவியும்-குளகம்: தருமன் வீமனைக்கண்டுதளர்வுஆற, கடோற்கசன் தந்தையைக்கண்டு இன்புறல்.

ஆனைக்குழா நூறுமரியேறெனப்பொங்கியளகேசன்வெஞ்
சேனைக்குழா நூறியதனோடுபயில்வாயுசிறுவன்றனைத்
தானைப்பெருங்கொற்றமன்கண்டுதானுற்றதளர்வாறினு
னேனைத்திருத்தாதையைக்கண்டுதேர்நின்றிழிந்தின்புறு.

(இ - ள்.) ஆனை குழாம் நூறும் அரி ஏறு என - யானைக் கூட்டத்தை யழிக்கின்ற ஆண்சிங்கம்போல, பொங்கி அளகாசன் வெம் சேனை குழாம் நூறி - கோபித்துக் குபேரனது கொடியசேனைக்கூட்டத்தை அழித்து, அதனோடு பயில் - அச்சோலையினிடத்திலே தங்கியுள்ள, வாயு சிறுவன்தனை - காற்றின் மகனான வீமனை, தானை பெரு கொற்றம் மன்-சேனைகளையுஞ் சிறந்த வெற்றியையுமுடைய யுதிட்டிரராசன், கண்டு-பார்த்து, தான் உற்ற தளர்வு ஆறினன் - தான் அடைந்திருந்த மனக்கவலைத்தளர்ச்சி நீங்கினான்; (கடோற்கசன்), ஏனை - மற்றை, திரு தாதையை - (தனது)சிறந்த தந்தையான வீமனை, கண்டு - பார்த்து, இன்பு உறு - மகிழ்ச்சியடைந்து, தேர்நின்று இழிந்து - தேரினின்றும் இறங்கி,— (எ - று.)—'அடிமன்ன' எனமேலைக் கவியில் இயையும்.

அதனோடு என்றது, கீழ்க்கவியில் 'சூழல்' என்றதை நோக்கின சுட்டு. ஏனையென்னும் இடைச்சொல், வினைமாற்றுப்பொருளது. (கநச)

135.—தன்னை வாசமலரோடுவணங்கிய வீமனைக்கண்டு தருமன் கூறலுறுதல்.

மைக்காளமுகிலன்னமகனுந்தன்னடிமன்னவயவீமனுங்
கைக்கானினறைவாசமலர்கொண்டறன்காளைகழனல்கியே
முக்காலும்வலம்வந்துமுறையோடுதொழுவானைமுகநோக்கிநின்
றெக்காலுநாவந்தநிசையாதவிசையோனுமிவைகூறுவான்.

(இ - ள்.) மை காளம் முகில் அன்ன - அஞ்சனத்தையுங் காளமேகத்தையும் (நிறத்தில்) ஒத்த, மகன்உம் - (தனது) குமாரனான கடோற்கசனும், தன் அடி மன்ன - தனதுபாதங்களிற் பொருந்திவணங்க, வயம் வீமன்உம் - சயத்தையுடைய வீமசேனனும், கானில் நறை வாசம் மலர் கைகொண்டு - அச்சோலையிலுள்ள தேனையும் மணத்தையுமுடைய பூக்களைக் கைகளில்

எடுத்துக்கொண்டுவந்து, அறன் காலை கழல் நல்கி-தருமபுத்திரனது பாதங்களிலே யிட்டு அருச்சித்து, மூக் காலும் வலம்வந்து - மூன்றுதரம் பிரதக்ஷிணஞ்செய்து, முறையோடு - சாஸ்திரவிதிப்படியே, தொழுவானை - (சாஷ்டாங்கமாக) நமஸ்கரிப்பவனை, முகம் நோக்கி நின்று - முகத்தைப் பார்த்துநின்று, நா வந்தது எக் காலும் இசையாத இசையோனும் - வாயில்வருகிற வசைச்சொற்களை எப்பொழுதுங் கூறுந்தன்மையில்லாத கீர்த்தியுடைய யுதிட்டிரனும், இவை கூறுவான் - (அப்போது) இவ்வார்த்தைகளைச் சொல்பவனானான்; (எ - று.)—அவை மேற்கவியிற் கூறப்படும்.

வீமன் தொழுவானை - தொழுவானாகிய வீமனை யென்க. எக்காலும் - பிறர் தீங்குசெய்த காலத்திலு மென்றபடி. எக்காலும் நாவந்தஇசையாத இசையோன் - ஒருபொழுதிலுங் கண்டபடி கடுஞ்சொல்லைக் கூறி யறியாத பொறுமைக்குணத்தின்பெருமையையுடையவ னென்றபடி. (கநடு)

136.—தன்கட்டளையின்றிப் பெண்வார்த்தையால் தனித்துவந்து பொருததுபற்றித் தருமன் வீமனைச் சினத்தல்.

*என்னேவலாலன்றியிமையோருமெய்தாதவிக்காவினீ*
*மின்னேவலால்வந்துவிரகாகவினைசெய்தவிதுமேன்மையோ*
*வுன்னேவல்புரிவாருமுளரும்பிமாரென்றுருத்தானரோ*
*தன்னேவலாலிந்தவுலகேழும்வலம்வந்ததனியாழியான்.*

(இ - ள்.) 'இமையோரும் எய்தாத இ காவில் - தேவர்களும் நுழையக்கூடாத [மிக்ககாவலையுடைய] இந்தச்சோலையிலே, நீ—, என் ஏவலால் அன்றி - எனது அனுமதியினா லல்லாமல், மின் ஏவலால் - மின்னற்கொடிபோன்ற திரௌபதியினது கட்டளையால், விரகு ஆக வந்து - கபடமாகவந்து, வினை செய்த - (போர்முதலிய) தொழில்களைச் செய்த, இது - இச்செய்கை, மேன்மையோ - சிறப்பாமோ? உன் ஏவல் புரிவாரும் உம்பிமார் உளர் - (தங்கள் தமையனான) உனது கட்டளையைச் செய்பவர்களும் உன்தம்பிகள் இருக்கின்றனரன்றோ?' என்று - என்றுசொல்லி, உருத்தான் - கோபித்தான்: (யாரென்னில்), தன் ஏவலால் இந்த உலகு ஏழும் வலம் வந்த தனி ஆழியான் - தனதுகட்டளையால் இந்தஏழு தீவுகளையுடையஉலக முழுவதிலுஞ் சூழ்ந்துவருந்தன்மையதான ஒப்பற்றஆஜ்ஞாசக்கரத்தை யுடைய தருமன்; (எ - று.)

உனது தம்பிகளாகிய அருச்சுனனாதியர் உன்ஏவற்படி நடக்க, எனது தம்பியாகிய நீமாத்திரம் எனது ஏவலின்றி யொழுகுவது தகுதியோவென்றவாறு. மின்ஏவலால் வந்து விரகாக என்றது - தையல்சொற்கேட்ட இழிதகைமையை விளக்கும். 'மின்' என்றது, அவளுடைய தேககாந்தியிலே ஈடுபட்டு வீமன் அங்ஙனஞ்செய்தா னென்பதை யுணர்த்துதற்கு. விரகு - தந்திரம். ஆணையைச் சக்கரமென்றல், மரபு. இவ்வுலகம் ஏழுதீவுகளையுடைமை பற்றி 'உலகேழும்' என்றார்: ஆகவே, இங்கு உலகுஎன்பது தீவுஎன்று

அதன்ஏகதேசத்தை யுணர்த்திற்றென்க: "மாயோன்மேய காடுறை யுலகமும்" என்றஇடத்துப்போல. அரோ - ஈற்றசை. (கங்சு)

137.—தருமன் முனிவாறித் தாம் வசித்திருந்த காட்டை மீண்டடைதல்.

என்றிந்தவுரைகூறிமுனிவாறியிறையோனுமிகலோனுடன்
சென்றந்தண்மலர்வாவிபடிவுற்றுவாசத்திருத்தார்புனைந்
தன்றந்தவிடம்விட்டிமைப்போதிலத்தேரின்மிசையேறியே
மின்றந்தவிடையாளுமிளையோருமுறைகானினிடைமேவினான்.

(இ - ள்.) என்று இந்த உரை கூறி - என்று இந்தவார்த்தைகளைச் சொல்லி, முனிவு ஆறி - (உடனே) கோபந்தணிந்து, இறையோன்உம் - (யாவர்க்குந்) தலைவனான தருமனும், இகலோனுடன் சென்று - வலிமையை யுடைய வீமனுடனேபோய், அம் தண் மலர் வாவி படிவுற்று - அழகிய குளிர்ந்தபூக்களையுடைய அப்பொய்கையிலே நீராடி, வாசம் திரு தார் புனைந்து - வாசனையையுடைய அழகிய (அப்பொய்கையிலுள்ள) மலரைச் சூடி, அன்று - அப்பொழுதே, அந்த இடம் விட்டு - அவ்விடத்தை நீங்கி, இமை போதில் - ஒரு நொடிப்பொழுதிலே, அ தேரின்மிசை ஏறி - அந்தக் கடோற்கசனது இரதத்தின்மே லேறிக்கொண்டு, மின் தந்த இடையாள்உம் இளையோர்உம் உறை கானினிடை மேவினான் - மின்னலையொத்த இடையை யுடைய திரௌபதியும் (தனது) இளைய தம்பிமாரான நகுலசகதேவரும் வசிக்கின்ற அக்காட்டில் வந்துசேர்ந்தான்; (எ - று.)

இகலோன் - கடோற்கச னென்பாரு முளர். மின்தந்த இடை, தந்த - உவமவுருபு. தார்என்னும் மாலையின்பெயர், அதற்குக் கருவியான பூவுக்கு இங்கே காரியவாகுபெயர். (கங்எ)

138.—தருமன் உரோமசனை வணங்கி, திரௌபதிக்கு மலரளித்து கடோற்கசனுக்கு விடைதந்தனுப்புதல்.

மேவிப்பெருந்தெய்வமுனிபாதமலர்சென்னிமிசைவைத்துமென்
காவிக்கயற்கண்ணிணைச்சேயிதழ்ப்பாவைகளிகூரவே
வாவிச்செழுந்தாமமலர்நல்கியொல்காதுவலிகூருநல்
லாவிக்கின்னமுதானநிருதற்குவிடையன்றளித்தானரோ.

(இ - ள்.) (யுதிட்டிரன்), மேவி - வந்துசேர்ந்து, பெரு தெய்வம் முனி பாதம் மலர் சென்னிமிசை வைத்து - சிறப்புள்ள தேவவிருடியான உரோமசமகாமுனிவனது திருவடித்தாமரைப்பூவைத் (தனது) தலைமேற் கொண்டுவணங்கி, மெல் காவி கயல் இணை கண் சேய் இதழ் பாவை களி கூர - மென்மையானநீலோற்பலமலரையுங் கயல்மீனையும் போன்ற ஒன்றோ டொன்றொத்த கண்களையும் சிவந்தஅதரத்தையு முடைய சித்திரப்பதுமை போலழகிய திரௌபதி களிப்புமிகும்படி, வாவி செழு தாமம் மலர் நல்கி - அப்பொய்கையிலிருந்து கொணர்ந்த அழகிய மாலையாகத்தொடுத்தற்குரிய பூக்களை (அவளுக்குக்) கொடுத்து, ஒல்காது வலி கூரும் - தளர்ச்சியில்லாமல்

வலிமைமிகுந்த, நல் ஆவிக்கு இன் அமுது ஆன-சிறந்த (தனது) உயிருக்கு இனிமையான அமிருதத்தையொத்து உதவின, நிருதற்கு - அரக்கனாகிய கடோற்கசனுக்கு, அன்று - அப்பொழுது, விடை அளித்தான் - அனுமதி கொடுத்தனுப்பினான் ; (எ - று.)—அரோ - ஈற்றசை.

இங்கே, 'வாவிச்செழுந்தாமமலர்நல்கி' என்றதனால், வீமன்கொண்டுவந்தது நீர்ப்பூவேயென்பது தெளிவாம். கீழ்க்கவியில் "சென்றந்தண் மலர் வாவி படிவுற்றுவாசத் திருத்தார் புனைந்து"என்றதுங் காண்க. இங்ஙனங் கீழ்க்கவியிலிருந்து தொடர்ச்சியாய், பிரதானனான தருமன் உரோமச முனியை வணங்கினதையும் திரௌபதிக்குப் பூவளித்ததையும், கடோற்கசனுக்கு விடையளித்ததையுங் கூறியதிலேயே, வீமன் உரோமசமுனிவரை வணங்கியது முதலியவையும் அடக்கப்படவேண்டும். கீழ்க்கவியில் 'மேவினான்' என முடித்து, இக்கவியில் 'மேவி' என எடுத்துத் தொடர்ச்சிப் படுத்துக்கூறினமையின், இக்கவியில் பாதமலர் சென்னிமிசைவைத்தல், மலர்நல்குதல், விடையளித்தல் என்னும் வினைக்கெல்லாம் கீழ்க்கவியில் 'இறையோன்' என்றதனாற் குறித்த யுதிட்டிரனே எழுவாயாதல் ஏற்கும். தருமபுத்திரனிடத்து வீமசேனன் தான் தேடியமலர்களைக்கொடுத்ததனால், திரௌபதியினிடம் தருமனே அம்மலர்களைக் கொடுத்தானென்க. இனி, இக்கவியில் வீமனெனத் தோன்றாஎழுவாய் வருவித்தல்வேண்டு மென்பாருமுளர். காவி - கருநிறம் மென்மை அழகு இவற்றிற்கும், கயல் - பிறழ்ச்சிக்கும் உவமை. நல்லாவி யென்றது, எவர்க்கும் உயிரினுமினியது வேறின்றாதலின். தருமபுத்திரனது உயிர்த்துணைவனான வீமனது க்ஷேமத்தை அறிதற்குக் கடோற்கசனே ஆபத்பந்துவாய் உதவினமையின், 'நல்லாவிக்கின்னமுதானநிருதன்' என்றது. சேய்தழற்பாவைபாடமாயின், செந்நிறத்தழலினின்று தோன்றிய பெண்ணான திரௌபதி யென்க. (கரு௮)

வேறு

139.—பாண்டவர் அங்குத்தானே திரௌபதியுடன் இனிது தங்கியிருத்தல்.

மின்புரை மருங்குன் மின்னும் வேந்தரு மந்தக் கானி
லன்புடை முனிவன் கூற வவன்மலர்ப் பாதம் போற்றித்
துன்பமுந் துனியு மாறி நாடொறுந் தோகை பாகன்
றன்பெருங் கதையுங் கேட்டுத் தங்கின ரென்ப மாதோ.

(இ - ள்.) மின் புரை மருங்குல் மின்உம் - மின்னலையொத்த இடையையுடைய திரௌபதியும், வேந்தர்உம் - (அருச்சுனனொழிந்த) பாண்டவர்களும், அன்பு உடை முனிவன் கூற - (யாவரிடத்தும்) அன்பையுடைய உரோமசமுனிவன் (பலதருமநெறிகளை) உபதேசிக்க(க் கேட்டு), அவன் மலர் பாதம் போற்றி - அம்முனிவனுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி, துன்பம்உம் துனிஉம் மாறி - துன்பங்களுங் கவலையும் ஒழிந்து, நாள் தொறுஉம்-தினந்தோறும், தோகைபாகன்தன் பெரு கதை

உம் கேட்டு - தோகையுள்ள மயில்போலுஞ் சாயலையுடைய உமா தேவியை இடப்பாகத்திற்கொண்ட சிவபிரானது சிறந்த சரித்திரத்தையுங் கேட்டுக்கொண்டு, அந்த கானில் - அக்காட்டிலே, தங்கினர் - தங்கியிருந் தார்கள் ; (எ - று.)—என்ப - அசை மாத்து, ஓ - ஈற்றசை.

தோகைபாகன்தன்பெருங்கதை - திரிபுரசங்காரம் போல்வன. தோகை - மயிலிறகு ; இங்கே இருமடியாகுபெயர். 'தோகைமார்பன்' என்ற பாடத் துக்கு - திருமகளைத் திருமார்பிலுடைய திருமாலின் திவ்விய சரித்திரத் தையுஞ் சிரவணஞ்செய்து என்க. உம்மையால், பிற புண்ணிய சரித்திரங் களையுங் கொள்ளலாம். முன்னே 'மின்புரை மருங்குல்' என வந்ததனால், பின்பு 'மின்' என்றது - பெண்ணென்னுமாத்திரையாய் நின்றது.

இக்கவி - கீழ் எண்பத்திரண்டாங்கவிபோன்ற அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம். (கூஅக)

புட்பயாத்திரைச்சருக்கம் முற்றிற்று.

---

நான்காவது

## சடாசுரன்வதைச்சருக்கம்

சடாசுரன் என்பவனது கொலையைக் கூறும் பாகமென்று பொருள். சடாசுரன் என்பதை ஜடா அசுரன் என்று பிரித்து, சடைமுடியையுடைய அசுரனென்று பொருள்கொள்க. அசுரன் என்பது - அ சுரன் எனப்பிரிந்து தேவனல்லாதவனென்றும், பாற்கடல்கடைந்தகாலத்து அதனினின்று உண் டான மதுவைப் பானஞ்செய்யாதவனென்றும், அசு ரன் எனப்பிரிந்து (பகைவர்) உயிரைக் கவர்பவனென்றும் பொருள்தரும். சடாசுரன்வதை - தொக்குநின்ற ஆறும்வேற்றுமையுருபு, செயப்படுபொருளில் வந்தது. இவன் திரௌபதியை யெடுத்துக்கொண்டுபோனதுபற்றி, இவனை வீமன் கொன்றான். வதம் வதையென ஈறு திரிந்தது. இவனை மேல் அரக்க னெனக் கூறியிருப்பினும் இங்கே அசுரனென்றது, இரண்டுசாதியாரும் கொடுந்தொழில் செய்யும் இனத்தவராதலின் என்க.

### 1.—கடவுள் வாழ்த்து

அழுதும்வாண் முறுவ லரும்பியுங் களித்து மாடியும் பாடியு மகிழ்ந்துந், தொழுதுமா தரித்தும் விழுந்துமே லெழுந்துந் துதித்திடத் தன்பதந் தந்தான், முழுதுமா யெங்கு முச்சுட ராகி மூலமாய் ஞால மாய் விண்ணாய், யெழுதொணா மறைக்கு மொட்டொணா வடிவத் தெம்பிரா னும்பர்நா யகனே.

(இ - ள்.) அழுதும் - (தன்னைக் காணாதபொழுது விரகதாபத்தாற்) புலம்பியும், வாள் முறுவல் அரும்பியும் - (தன்னைக்கண்டபொழுது) ஒளி

யையுடைய புன்சிரிப்பைச் செய்தும், களித்தூஉம் - களிப்படைந்தும், ஆடி உம் - ஆநந்தக்கூத்தாடியும், பாடிஉம் - (பலவகைக்) கானங்கள்பாடியும், மகிழ்ந்தூஉம் - மகிழ்ச்சியடைந்தும், தொழுதூஉம் - (தன்னை) வணங்கியும், ஆதரித்தூஉம் - (தன்னை) மிகவிரும்பியும், விழுந்தூஉம் - (தேகம்பரவசமாய்க்) கீழ்விழுந்தும், மேல் எழுந்தூஉம் - பின்புஎழுந்துநின்றும், துதித்திட - (தன்னைத்) தோத்திரஞ்செய்ய, தன் பதம் தந்தான் - (இப்படிப்பட்ட கோபஸ்திரீகள் முதலிய தன்னடியார்களுக்குத்) தனது திருவடிகளைக் கொடுத்தருளிய கடவுள், (யாரென்னில்), மு சுடர் ஆகி - (சூரிய சந்திர அக்கினியரென்னும்) மூன்று ஒளிகளின் வடிவமாய், ஞாலம் ஆய் - பூமியின் வடிவமாய், விண் ஆய் - ஆகாயத்தின் சொரூபமாய், எங்கூஉம் - எவ்விடத்துமுள்ள, முழுதும் ஆய் - எல்லாப்பொருள்களின் உருவமுமாய், மூலம் ஆய் - (இவையெல்லாவற்றிற்கும்) ஆதிகாரணமாய், எழுது ஒணு மறைக்குஉம் எட்ட ஒணு வடிவத்து - எழுதுதற்கரிய வேதங்களுக்கும் எட்டமுடியாத சொரூபத்தையுடைய, எம்பிரான் - எமது தலைவனும், உம்பர் நாயகனே - தேவாதி தேவனுமான ஸ்ரீமகாவிஷ்ணுவே; (எ - று.)

களிப்பு - மிக்க ஆநந்தம். தன்பதம் - தனதுஸ்தானமான பரமபதமென்றுங் கொள்ளலாம். பஞ்சபூதங்களுள முதலதாகிய பிருதிவியை 'ஞாலமாய்' என்றதனாலும், ஈற்றதாகிய ஆகாசத்தை 'விண்ணாய்' என்றதனாலும், இடையதாகிய அக்கினியை 'முச்சுடராகி' என்றதிற் சேர்த்தும் கூறியதில், கூறப்படாத மற்றையிரண்டையும் அடக்குக. இவைபோல்வனவற்றையும் எளிதில் அடக்குதற்பொருட்டே 'முழுதுமாய் எங்கும்' என்றது. எழுதொணு, எட்டொணு - செயவெனெச்சத்தின் ஈறு தொகுத்தல். ஒணு - ஒன்றாத என்பதன் மரூஉ. வேதம் எழுதாக்கிளவியாய் அநந்தமாயிருத்தலின், எழுதொணுமறை யெனப்பட்டது. மறைக்கும், உம்மை - உயர்வுசிறப்பு; அது, எல்லாப்பொருள்களையுமறிந்து உண்மை கூறுகிற வேதத்தின் சிறப்பை விளக்கும். உம்பர்எனனும் மேலிடத்தின் பெயர், இடவாகுபெயராய் அங்குள்ள தேவரை யுணர்த்திற்று. தன்பதந்தருவான் என்று பிரதிபேதம்.

இதுமுதல் இருபது கவிகள் - பெரும்பாலும் இரண்டு நான்கு ஏழாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றவை நான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (க)

2.—இருடியர் பாண்டவரிடம் கொடியமிருகங்களினின்று அபயம்வேண்டுதல்.

இந்தநீள்வனத்தின்மன்னவரிவ்வா றின்பமுற்றிருந்தவந்நாளி,
லந்தமாவனத்தின்சூழலிற்பயிலு மருந்தவமுனிவரர்பலருந்,தந்திபே
ருழுவையாளியெண்கிவற்றாற் றுமிடருழந்துமெய்தளர்ந்து,வந்துமா
மகிபர்க்கபயமென்றவர்வாழ் வனத்திடைப்புகுந்துமன்னினரால்.

(இ - ள்.) இந்த நீள் வனத்தில் - இப்பெரியகாட்டிலே, மன்னவர் - இராசகுலத்தாராகிய பாண்டவர்கள், இ ஆறு - இந்தப்படி, இன்பம் உற்று

இருந்த - இன்பமடைந்திருந்த, அ நாளில் - அந்தக்காலத்தில், அந்த மா வனத்தின் சூழலில் பயிலும் அரு தவம் முனிவரர் பலர்உம் - அந்தப் பெரிய காட்டினிடத்திற் பொருந்திவசிக்கிற (பிறரால்) செய்தற்கரிய தவத்தைச் செய்யுந் தன்மையுள்ள பல இருடிச்சிரேஷ்டர்களும்,—தந்தி பேர் உழுவை ஆளி எண்கு இவற்றால் தாம் இடர் உழந்து - யானைகள பெரும் புலிகள் சிங்கங்கள் கரடிகள் என்கிற இக்கொடுவிலங்குகளால் தாம் துன்பத்தையனுபவித்து, மெய் தளர்ந்து - உடம்புதளர்ச்சியையடைந்து, வந்து —,மா மகிபர்க்கு அபயம் என்று - பெருமையையுடைய பாண்டவராசர்களுக்கு(த் தாம்) அடைக்கலப்பொருளென்றுகூறி, அவர் வாழ் வனத்திடை புகுந்து மன்னினர் - அப்பாண்டவர் வசிக்கிற காட்டினிடத்துச் சேர்ந்து தங்கினார்கள் ; (எ - று.)—ஆல் - ஈற்றசை.

தந்தி - தந்தமுடையது. மகிபர் - மஹீபர்: வடசொல்; பூமியைக் காப்பவரென்று பொருள்: மஹீ - பூமி. அபயம் - அஞ்சற்க எனக் கூறிக் காக்கத்தக்க பொருளாவோம் யா மென்றபடி. (உ)

3.—முனிவர் வேண்டியவாறு தருமன் அபயமளித்தல்.

அருந்தவமுனிவரெனைப்பலரிவ்வாறபயமென்றழுங்குசொற்கேட்டுப்
பெருந்திறலரசனவர்பதம்வணங்கிப் பேசுகநுங்குறையென்னப்
பொருந்தியகொடியவிலங்கினாற்றமக்குப்புகுந்துளயாவையும்புகன்றே
வருந்தியதுயரந்தவிர்த்திநீயென்றார் மன்னனுமக்குறைநேர்ந்தான்.

(இ - ள்.) அரு தவம் முனிவர் எனை பலர் - அருமையானதவத்தையுடைய மிகப்பலமுனிவர்கள், இ ஆறு - இந்தப்படி, அபயம் என்று - அடைக்கலமென்றுகூறி, அழுங்கு-வருந்துகிற, சொல்-சொல்லை, கேட்டு—, பெரு திறல் அரசன் - மிக்கவல்லமையுடைய தருமராசன், அவர் பதம் வணங்கி - அவர்களுடைய திருவடிகளை நமஸ்கரித்து, நும் குறை பேசுக என்ன - உங்கள்குறையைச் சொல்லுங்களென்று சொல்ல, (அம்முனிவர்கள்), பொருந்திய கொடிய விலங்கினால் தமக்கு புகுந்துள யாவைஉம் புகன்று - நிலைபெற்ற கொடுந்தன்மையுள்ள மிருகங்களினால் தங்களுக்கு நேர்ந்துள்ள தீங்குகளெல்லாவற்றையுங் கூறி, வருந்திய துயரம் தவிர்த்தி நீ என்றார் - (நாங்கள்) வருத்தமடைகிற துன்பத்தை நீ ஒழித்திடுவாயென்று சொன்னார்கள் : மன்னன்உம் அ குறை நேர்ந்தான்-தருமராசனும் அந்த அவர்கள்குறையைத் தீர்ப்பதற்கு உடன்பட்டான் ; (எ - று.)

எனை - எத்தனை யென்பதன் மரூஉ. (௩)

4.—முனிவரிடுக்கணைத்தீர்க்குமாறுஏவி வீமனையனுப்பிவிட்டுத்தருமன்இருக்க, ஓரிராக்கதன் வந்து வஞ்சனைச்செயல் புரிதல்.

மறத்துடன்றொழுதுவணங்கிமுன்னின்ற வாயுவின்மதலையை
நோக்கித், திறத்தகுமுனிவரிடுக்கணீயைய சென்றுதீர்த்திடுகவென்
றேவி, யறத்தினதுருவாயகண்டமும்புரக்கு மரசனாங்கிருந்துழி

வந்து, புறத்தொருநிருதன்புகுந்தவஞ்சனையும் புரிந்ததும்புகலலா மளவோ.

(இ - ள்.) அறத்தினது உரு ஆய் - தருமதேவதையினது சொரூபமாய், அகண்டம்உம் புரக்கும் - உலகமுழுவதையுங் காக்கவல்ல, அரசன் - யுதிட்டிரராசன், தொழுது வணங்கி மறத்துடன் முன் நின்ற வாயுவின் மதலையை நோக்கி - (தன்னைக்) கைகூப்பி நமஸ்கரித்துப் பராக்கிரமத்துடனே எதிரிலேநின்ற வாயுகுமாரனானவீமனைப் பார்த்து, ஐய நீ சென்று திறம் தகு முனிவர் இடுக்கண் தீர்த்திடுக என்று ஏவி - 'ஐயனே! நீ போய்ப் பெருமை பொருந்தின முனிவர்களது துன்பத்தைத் தீர்த்திடுவாய்' என்று நியமித்து (அவனை யனுப்பிவிட்டு), ஆங்கு இருந்த உழி - அவ்வனத்திலே வசித்திருந்தபொழுது,—புறத்து ஒரு நிருதன் வந்து புகுந்த - வெளியிலிருந்து ஓரரக்கன் வந்து பிரவேசித்த, வஞ்சனையும்—, புரிந்ததுஉம்-(அவன்) செய்த செயலும், புகலல் ஆம் அளவுஓ - (நம்மாற்) சொல்லுதற்குக் கூடின அளவையுடையதோ? [அன்றென்றபடி]; (எ - று.)

ஆயினுஞ் சிறிதுசொல்லுவே னெனக் கவி ஒருவாறு அவையடக்கங் கூறியவாறும். இடுக்கண்-இடுங்குகண் என்பதன் விகாரம்; துன்பம் நேருங் காலத்திற் கண் இடுங்குதல் இயல்பாதலின், இடுக்கண்எனத் துன்பத்துக்குப் பெயர் வழங்கிற்று என்பர். இருந்துழி - தொகுத்தல். தம்பியை ஐய வென்றது, அன்புபற்றிவந்த மரபுவழுவமைதி. (௪)

5.—இரண்டுகவிகள் - சடாசுரன் வருணனை.

தோளிரண்டினுநாடொறுமிரண்டந்தண் சுரும்பிணைவிரும்பினன்சுமந்து, தாளிரண்டுடையதொருகருங்குன்றஞ் சரிப்பபோலகண்டமுஞ்சரிப்பான், கோளிரண்டஞ்சிப்பிறையிரண்டகல்வான் குகையிடைப்புகுவதேபோல, வாளிரண்டன்னவெயிறிரண்டொளிகூர் வாணிலாவழங்கியவாயான்.

இதுமுதல் மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) நாள்தொறும் - தினந்தோறும், தோள் இரண்டின்உம் - (தனது) தோள்களிரண்டிலும், இணை அம் தண் இரண்டு சுரும்பு - (ஒன்றோடொன்று)ஒத்த அழகியகுளிர்ந்தஇரண்டுமலைகளை, விரும்பினன் சுமந்து - விருப்பத்தோடு எடுத்து, தாள் இரண்டு உடையது ஒரு கரு குன்றம் சரிப்பபோல் - இரண்டுகால்களையுடைய ஒரு கரிய [பெரிய] மலை சஞ்சரிப்பது போல, அகண்டம்உம் சரிப்பான் - உலகமுழுவதிலுஞ் சஞ்சரிக்குந் தன்மையுள்ளவனும், கோள் இரண்டு அஞ்சி-(ராகுகேதுக்களென்னும்) இரண்டு கிரகங்களுக்குப் பயந்து, பிறை இரண்டு - இரண்டு பிறைச்சந்திரர், அகல் வான் குகையிடை புகுவதுபோல - பரந்தஆகாயத்திலளாவியதொரு மலைக் குகையினிடத்தே பிரவேசிப்பதுபோல, வாள் இரண்டு அன்ன எயிறு இரண்டு - இரண்டுவாளாயுதத்தைப்போன்ற [கூர்மையையுடைய] கோர தந்தங்கள் இரண்டு, ஒளி கூர் வாள் நிலா வழங்கிய - பிரகாசம்மிக்க ஒள்ளிய சந்திரகாந்திபோன்றவெண்ணிறக்காந்தியை வீசுதற்கிடமான, வாயான்.

வாயையுடையவனும்,— (எ - று.)— சரிப்பான், வாயான் என்பவை - மேற்கவியில் வரும் 'சடாசுரனெனும் பெயர்ச்சழக்கன்' என்பதற்கு விசேஷணம்.

இரண்டாமடியும், மூன்றாமடியும் - இல்பொருளுவமை. முதலடி, அவனதுதேகபலத்தின் மிகுதியை விளக்கும். குன்றம், அம் - சாரியை. குகை-குஹா என்னும் வடமொழித் திரிபு. சரிப்ப - சரிப்பது என்பதன் ஈறுதொகுத்தல். 'சுரும்பினை'என்றும் பாடம். 'இரண்டண்டஞ் சுரும்பென விரும்பினன்'எனப் பாடமாயின், இரண்டுஅண்டகோளங்களை வண்டுகளைப் போல மிகஎளிதில் விரும்பியெடுத்துளனைப் பொருளாம். 'வானிலா' என்றும் பாடம். (ரு)

6. முருக்கின்நாண்மலருங்கறுத்திடச்சிவக்கு மொய்யழல்பெய்செழுங்கண்ணன் னரக்கினாலுருக்கிக்கம்பிசெய்தென்ன வவிர்பொலங்குஞ்சியன்வஞ்சத், திருக்கினாலறங்கள்யாவையுஞ்செருக்குந் தீயவன்றீமையேபுரிந்து, தருக்கினாலமரர்யாரையுஞ்செருக்குஞ் சடாசுரனெனும்பெயர்ச்சழக்கன்.

(இ - ள்.) முருக்கின் நாள் மலர்உம் - பலாசமரத்தினது புதிய [அன்றுமலர்ந்த] (மிகச்சிவந்த)பூவும், கறுத்திட - கரியதென்னும்படி, சிவக்கும் - மிகச்சிவந்தநிறமுள்ள, மொய் அழல் பெய் செழு கண்ணன் - நெருங்கினதீயையுமிழ்கிறபெருங்கண்களையுடையவனும், அரக்கினால் உருக்கி கம்பி செய்து என்ன - அரக்கை உருகவைத்து அதனாற் கம்பிகள்செய்தாற்போல, அவிர் - விளங்குகிற, பொலம் குஞ்சியன் - பொன்னிறமான செம்பட்டமயிர் முடியுடையவனும், வஞ்சம் திருக்கினால் - வஞ்சனையின் மாறுபாடுகளால், அறங்கள் யாவைஉம் செருக்கும் - தருமங்களெல்லாவற்றையும் அழிக்கின்ற, தீயவன் - கொடுங்குணமுடையவனும் ஆகிய, தீமை புரிந்து தருக்கினால் அமரர் யாரைஉம் செருக்கும் - தீங்குகளையேசெய்து அகங்காரத்தால் தேவர்களெல்லோரையும் அழிக்கின்ற, சடாசுரன் எனும் பெயர் சழக்கன்-சடாசுரனென்னும் பெயரையுடைய மூர்க்கன்,—(எ-று.)—'எய்தி, கொண்டு, பறந்தனன்'என மேற்கவியில் முடியும்.

"முருக்கி னிதழைக் கருக்குவிக்கு முறுவற்செவ்வாய்" என்பர், மேல் துருவாசமுனிச்சருக்கத்தும். கருமையோடு செம்மைக்கு எவ்வளவு வேறுபாடுண்டோ, அவ்வளவு வேறுபாடு முருக்கமலரின் செந்நிறத்தோடு அரக்கன்கண்ணின் செந்நிறத்துக்கு உள்ள தென்பது கருத்து. முருக்கினுண் மலரும், உம்மை - உயர்வுசிறப்பு. இரண்டாமடி—தற்குறிப்பேற்றம். பொன்+குஞ்சி என்பது, தொல்காப்பிய விதியாற் பொலங்குஞ்சியெனப் புணரும்; நன்னூலின்படி பொலம் குஞ்சிஎனப் பிரித்துப் புணர்க்க. சழக்கன் -வழக்குக்கு மாறுபாடாகநடப்பவனென்றும் பொருள்கூறுவர். (சு)

7.—சடாசுரன் திரௌபதியை வானத்துந் தூக்கிக்கொண்டு போதல்.

அந்தணர்வடிவங்கொண்டிலங்கையில்வா ழரிவாளரக்கனைப் போலச், செந்தழலளித்தயடபயிலிருந்த சிற்பவண்சாலையினெய்திக்,

கொந்தவிழலங்கற்கொற்றவரறியா வகையொருகோண்மறைபிதற்றிப், பைந்தொடிதனைக்கொண்டந்தரந்தன்னிற் பறந்தனன்பழியுணராதான்.

(இ - ள்.) பழி உணராதான் - பழியின்கொடுமையை அறியாதவனாகிய அவ்வரக்கன்,—இலங்கையில் வாழ் ஆதி வாள் அரக்கனை போல - இலங்கா நகரத்திலே வாழ்ந்த பழமையான கொடிய இராக்கதனாகியஇராவணன் (துறவிவேடம்பூண்டு இராமனதுபர்ணசாலையை யடைந்து சீதையை எடுத்துச்சென்றது) போல, அந்தணர் வடிவம் கொண்டு - அந்தண வுருவத்தைத் தரித்து, செம் தழல் அளித்த மட மயில் இருந்த சிற்பம் வண் சாலையின் எய்தி - செந்நிறமுடைய அக்கினிபகவானாற் பெறப்பட்ட இளைய மயில் போலுஞ்சாயலையுடையதிரௌபதி வசித்திருந்த கைத்தொழிலமைந்த அழகிய பர்ணசாலையி லடைந்து, கொந்து அவிழ் அலங்கல் கொற்றவர் அறியா வகை ஒரு கோள் மறை பிதற்றி-பூங்கொத்துக்கள் மலரப்பெற்ற மாலையை யுடைய (அங்குள்ள தருமன் நகுல சகதேவர் என்னும்) அரசர் (தன்னைக்) காணவொண்ணாதபடி வஞ்சனைக்குரியதொருமந்திரத்தை உச்சரித்துவிட்டு, பைந்தொடிதனை கொண்டு அந்தரம்தன்னில் பறந்தனன் - பசுமையான தொடியென்னும்வளையலையணிந்ததிரௌபதியை யெடுத்துக்கொண்டு ஆகாய மார்க்கத்திலே பறந்துசென்றான்; (எ - று.)

திரௌபதிக்குத் தன்பால் முதலிற் சங்கையுண்டாகாமைப்பொருட்டு, பெற்றம்புலித்தோல்போர்த்துப்பயிர்மேய்தல்போல அரக்கன் அந்தணவடிவங்கொண்டா னென்க. பழியுணராதான் பைந்தொடிதனைக் கொண்டு பறந்தனன் - பிறனில்விழைதலால் தனக்குப் பெரும்பழி நேர்வதை யறியாதவனாய்ப் பாஞ்சாலியைத் தூக்கிக்கொண்டோடின னென்க. தான் கவர்வது தருமனாதியர்க்குத் தெரிந்தால் தடுத்திடுவாரென்று அவர்கள் தான் வருவதைக் காணாதவாறு மறையை யுச்சரித்தான். கொடுஞ்செயலுக்கு உபயோகித்ததுபற்றி 'பிதற்றி' என்றார். அந்தணர் என்பதற்குப் பிராமணர் என்று பொருள் கொள்ளாமல், ''அந்தணரென்போ ரறவோர்'' என்றபடி, முற்றத்துறந்த முனிவருக்குச் சிறப்புப்பெயரென்றலும் ஒன்று. கொந்து - கொத்து என்பதன் மெலித்தல். பைந்தொடி - பண்புத்தொகையன்மொழி. (எ)

8.—நகுலசகதேவர் வில்லேந்தி அந்தச்சடாசுரனது இருபுறத்தும் நெருங்கி நிற்றல்.

அபயமென்றவளந்தரத்தின்மீதரற்று மவ்வுரைகேட்டுமாத்திரிதனுபயமைந்தரும்வார்சிலைகரத்தேந்தி யுருத்தெழுந்துருமெனவோடி, யிபநடுங்கிடமுன்வலைத்திடுங்கொற்றத் தியாளிபோலிருபுறஞ்சூழ்ந்து, நபமுகிலென்னமின்னெடும்பெயர்வான் றனக்கெதிர்நின்றிவை நவில்வார்.

(இ - ள்.) (அப்பொழுது), அவள் - அத்திரௌபதி, அந்தரத்தின்மீது - ஆகாயவெளியிலிருந்து, அபயம் என்று அரற்றும் - தனக்கு அபயமளித்தல்

வேண்டுமென்று புலம்பிக்கூவுகிற, அ உரை - அந்தவார்த்தையை, கேட்டு-செவியுற்று, மாத்திரிதன் உபய மைந்தர்உம் - மாத்திரியினது இரட்டைப் பிள்ளைகளான (நகுல சகதேவர்) இருவரும், வார் சிலை கரத்து ஏந்தி-நீண்ட வில்லைக் கையிலேயெடுத்துக்கொண்டு, உரும் என உருத்து - இடிபோலக் கோபத்தோடு கர்ச்சித்து, எழுந்து - புறப்பட்டு, ஓடி - விரைந்துசென்று, இபம் நடுங்கிட முன் வளைத்திடும் கொற்றத்து யாளி போல் - யானை (மிக்கஅச்சமடைந்து) நடுங்கும்படி (அதனை) முன்னேவந்து எதிர்த்துத் தடுக்கிற வெற்றியையுடைய யாளியென்னும் விலங்குகள்போல, இரு புறம் சூழ்ந்து - (அவனது) இரண்டுபக்கத்திலும் நெருங்கி, நபம் முகில் என்ன மின்னொடும் பெயர்வான் தனக்கு எதிர் நின்று - கார்காலத்துமேகம் மின்னலுடனே யெழுதல்போலத் திரௌபதியுடனே மேலெழுந்துசெல்லுகிற அவ்வரக்கனுக்கு எதிரில்நின்று, இவை நவில்வார்-இவ்வார்த்தையைக் கூறுபவரானார்கள்; (எ - று.)—அவற்றை மேற்கவியிற் காண்க.

மாத்திரி - மத்திரதேசத்தரசன் மகள்; தத்திதாந்தநாமம்: இவள், பாண்டுவின் இரண்டாம்மனைவி; சல்லியனுடன்பிறந்தவள். இபம் - அரக்கனுக்கும், யாளிகள்-நகுலசகதேவர்க்கும் உவமை. நபம்-நபா: என்னும் வடசொல்லின்திரிபு; இது, ஆவணிமாசத்தின்பெயர். இலக்கணையாய்க் கார்காலத்தைக் குறித்தது: நபம்முகில்-ஆகாயத்திற்செல்லும்மேகமுமாம். (அ)

9.—நகுலசகதேவர் யுத்தசன்னத்தராகி அவ்வரக்கனைப் பழித்தல்.

மறையவர்வடிவங்கொண்டுவந்தருளில் வஞ்சநீவஞ்சனையாகப்,பிறர்பெருந்தாரம்வெளவியந்தரத்திற் பெயர்வதுபெருமையோபித்தா, நெறியலாநெறிசெய்துன்குலத்தொருபோர் நிருதன்முன்பட்டதுநினையாய், முறையலாதியன்றுன்னுயிரினைமுடிக்கு முரணுடைத்தறுகண்மாமூர்க்கா.

(இ - ள்.) அருள் இல் வஞ்ச-கருணையில்லாத வஞ்சனையுடையவனே! நீ—, மறையவர் வடிவம் கொண்டு வந்து - வேதம்வல்ல அந்தணரின் உருவத்தை யெடுத்துவந்து, வஞ்சனை ஆக—, பிறர் பெரு தாரம் வெளவி - அயலாரது கற்பிற்சிறந்த மனைவியைக் கவர்ந்தெடுத்து, அந்தரத்தில் பெயர்வது - ஆகாயத்தில் எழுந்துசெல்வது, பெருமைஓ - ஒருபெருமையாகுமோ? பித்தா - அறிவுமயக்கமுடையவனே! முறை அலாது இயன்று - நீதியல்லாத காரியத்தைப் பொருந்தி, உன் உயிரினை முடிக்கும் - உனது உயிரை ஒழித்துக்கொள்ள விருக்கிற, முரண் உடை - மாறுபாட்டையுடைய, தறுகண் - அஞ்சாமையையுமுடைய, மா மூர்க்கா - பெரிய மூர்க்ககுணமுடையவனே! முன் - முன்காலத்தில், உன் குலத்து - உனதுகுலத்திலே, போர் ஒரு நிருதன் - போர்செய்யவல்ல ஓர்அரக்கன் [இராவணன்], நெறி அலா நெறி செய்து - முறைமையல்லாத காரியத்தைப் பண்ணி[இராமனுக்கு மனைவியான சீதையைக் கவர்ந்துசென்று], பட்டது-அடைந்த அழிவை, நினையாய்-எண்ணுவாயாக;(எ-று.)

தாரம்-தாரா : என்னும் வடசொற்றிரிபு. அலாது-எதிர்மறைக்குறிப்பு வினையாலணையும்பெயர்; ஆ - சாரியை. நினையாய் - எதிர்மறை முன்னிலை யொருமை முற்றெச்சமாய், நினைக்காமலென்றுமாம். (௯)

10.—அப்போது மறையவரிடுக்கண் தீர்த்து மீண்டுவரும் வீமன் நிகழ்வது காணுதல்.

என்றிவாறுரைத்துச்சரத்தின்மாமாரி யிருவரும்விரைவுடனே வக்,கன்றிவாளரக்கன்கனமெனவதிர்ந்து கண்சிவந்துருத்தெழுமெல் லை, யொன்றிவாழ்மறையோரருந்துயரொழித்தாங் கொருநொடிப் போழ்தினின்மீளும், வென்றிவாள்வீமனுற்றதுநிருதன் வெகுள்வது ம்விசும்பிடைக்கண்டான்.

(இ - ள்.) என்று இ ஆறு உரைத்து - என்று இந்தப்படி சொல்லி, இருவர்உம் - (நகுல சகதேவர்) இரண்டுபேரும், சரத்தின் மா மாரி - மிக்க பாணவருஷத்தை, விரைவுடன் ஏவ - துரிதமாகப் பிரயோகிக்க,—வாள் அரக்கன் - வாள்போலுங் கொடிய அச் சடாசுரன், கன்றி-மனம்வெதும்பி, கனம் என அதிர்ந்து - மேகம்போலக் கர்ச்சித்து, கண் சிவந்து உருத்து - கண்கள்சிவந்துகோபித்து, எழும் எல்லை - (போருக்கு மேல்) எழுகிறவள வில்,— ஒன்றி வாழ் மறையோர் அரு துயர் ஒழித்து ஆங்கு ஒரு நொடி போழ்தினில் மீளும் வென்றி வாள் வீமன்-(அவ்வனத்திற்)பொருந்தி வாழ் கிற முனிவர்களது (கொடுவிலங்குகளாலாகிய)ஒழித்தற்கு அரிய துன்பத்தை ஒழியச்செய்து அவ்விடத்தினின்று ஒருமாத்திரைப்பொழுதினுள்ளே மீண்டுவருகிற வெற்றியைத்தருகிற ஆயுதத்தையேந்திய வீமசேனன், உற் றதுஉம்-நேர்ந்தசெய்தியையும், விசும்பிடை நிருதன் வெகுள்வதுஉம்-ஆகா யத்திலே அரக்கன் கோபிப்பதையும், கண்டான் - பார்த்தான் ; (எ - று.)

கனம் - வடசொல். நொடிப்போழ்து - கைவிரல்களை ஒருகால் நொடித் தற்கு வேண்டும் பொழுது. (௧0)

11.—வீமன் மிகச்சினந்து அந்தச் சடாசுரன்மேல் நெருங்கிச்செல்லுதல்.

கண்டனனிரண்டுகண்களுங்கருத்துங் கனன்றுசெந்தீச்சுடர் காலக், கொண்டவெஞ்சினத்தீக்கதுவியெண்டிசையுங் குலைகுலைந்து டன்வெரூஉக்கொள்ள,வண்டமுங்குலுங்கநகைத்ததிர்ந்துரப்பி யா ர்த்தனனழன்றுதோள்கொட்டி, மண்டிமேனடந்தானுகாந்தகால த்து மருத்தெனமருத்தின்மாமைந்தன்.

(இ - ள்.) மருத்தின் மா மைந்தன் - வாயுவினது சிறந்தகுமாரனான வீமன்,—கண்டனன் - (அவற்றைப்) பார்த்து, இரண்டு கண்கள்உம் கருத் துஉம் கனன்று செம் தீ சுடர் கால-(தனது) கண்களிரண்டும் மனமும் எரிந்து சிவந்த அக்கினிச்சுவாலையை யுமிழும்படி, கொண்ட வெம் சினம் தீ கதுவி-(தான்) கொண்ட கொடிய கோபாக்கினி மூண்டு, எண் திசைஉம் குலை குலைந்து உடன் வெரூஉ கொள்ள - எட்டுத்திக்குக்களிலுமுள்ள பிரா ணிகளெல்லாம் நடுநடுங்கி ஒருங்கு அச்சத்தையடையவும், அண்டம்உம்

குலுங்க-அண்டகோளங்களும் அதிரவும், நகைத்து-பெருஞ்சிரிப்புச்சிரித்து, எதிர்ந்து - (அவ்வரக்கனுக்கு) எதிர்சென்று, உரப்பி-அதட்டி, ஆர்த்தனன்-ஆரவாரித்து, அழன்று-சீறி, தோள் கொட்டி-(தனது) தோள்களைத் தட்டி, உக அந்த காலத்து மருத்து என - பிரளயகாலத்துப் பெருங்காற்றுப்போல, மேல் மண்டி நடந்தான் - மேல்நெருங்கிச் சென்றான் ; (எ - று.)

திசை-இடவாகுபெயர். வெரூஉ-வெருவு என்னும் முதனிலைத்தொழிற் பெயர் விகாரப்பட்டு அளபெடுத்ததனால், இது சொல்லிசையளபெடை.(கக)

12.—வீமன் சடாசுரனைநோக்கி உன்னைக் கொல்வேனெனல்.

பகன்விறலிடிம்பன்பண்பில்புண்டரீக னிவருயிர்பறித்தளகேச
னகரிடையரக்கர்யாரையுஞ்சேர நல்லுயிரொல்லையிற்செகுத்து
வகைபடமறலியுடனுறவாக்கி வானுலகளித்தனனின்ற
சிகையுனதுயிருமிக்கணத்தளிப்பன்றென்புலக்கிழவனுக்கென்றான்.

(இ - ள்.) 'பகன்-பகாசுரனும், விறல் இடிம்பன் - வெற்றியையுடைய இடிம்பாசுரனும், பண்பு இல் புண்டரீகன் - நற்குணமில்லாத புண்டரீகனென்னும் அரக்கர்தலைவனும், இவர் - (என்கிற) இவர்களுடைய, உயிர் - உயிரை, பறித்து-(உடம்பினின்று) நீக்கிவிட்டு,[இவர்களைக்கொன்று என்றபடி], அளகேசன் நகரிடை அரக்கர் யாரைஉம் - அளகாபுரிக்குத்தலைவனான குபேரனது நகரத்திலேயுள்ள இராக்கதரெல்லோரையும், சேர - ஒருசேர, ஒல்லையில் - விரைவிலே, நல் உயிர் செகுத்து - நல்லஉயிரை யொழித்து [கொன்று என்றபடி], வகை பட - வலிமைபொருந்த, மறலியுடன் உறவு ஆக்கி - யமனோடு உறவினராம்படி செய்து [இவர்களை யமனைச்சேரும்படி செய்து], வான் உலகு அளித்தனன் - தேவலோகத்திலுள்ள வீரசுவர்க்கத்துக்குக் கொடுத்தேன் ; உனது உயிர்உம்-உன்னுடைய பிராணனையும், நின்ற சிகை - எஞ்சிநின்ற சிகையாக, இ கணத்து-இந்தக்ஷணத்திலேயே, தென் புலம் கிழவனுக்கு - தெற்குத்திக்குக்கு உரியதலைவனான யமனுக்கு, அளிப்பன் - கொடுப்பேன்', என்றான் - என்று (சடாசுரனைநோக்கி வீமன் வீரவாதம்) கூறினான் ; (எ - று.)

வேத்திரகீயநகரத்தின் புறத்திலுள்ளதோர் வனத்தில் வசித்துக் கொண்டு பகாசுரனென்பவன் அவ்வூரிலுள்ள வீடுகளிலிருந்து நாள்தோறும் ஒருவண்டியுணவையும், ஓரினமகனையும் தனக்கு முறைப்படி திறையாகப் பெற்று உண்டு வாழ்ந்திருந்தான் ; இருக்கையில், பாண்டவர்கள் அரக்கு மாளிகையினின்று தப்பியுய்ந்து பிராமணவேடம்பூண்டு குந்தியோடுகூட அவ்வூரில்ஓரந்தணன்மனையிற் சென்று தங்கியிருக்க, ஒருநாள் அவ்வீட்டுக்குரிய முறை நேர்ந்தது; நேரவே, தன்மகனுக்கு அழிவுண்டாவதனைநோக்கி வருந்திப்புலம்பிய அவ்வீட்டுவேதியன்மனைவியினது சோகத்தைத் தணித்துக் குந்தி தன்மகனான வீமனை யனுப்ப, இவன் சென்று அவனுக்கென்று கொடுத்தஉணவையெல்லாந் தானுண்டு அவனுடன்பொருது அவனையழித்து அவ்வூரவர்க்கு இடையூறில்லாதபடி செய்தன னென்பது கதை. வகைபட-

பல போர்வகைகள்பொருந்த என்றுமாம். சிகை - எஞ்சிநிற்பது: சேடம்: இது, இப்பொருளில் வருதலை "சிகைகடந்த வூடலில்" என்று பரிபாடலி லுங் காணலாம். ஒருபொருளை ஒருத்தன் விலைக்குக்கொடுக்கும்போது அவர் கொள்ளும் அளவு பண்டம் கொடுத்தபின் மற்றும் சிறிதுகொடுப்பது உண்டு: அது பிசிர் என்று வழங்கப்படும்: சிகை என்பது இங்கு அப்பொருளில் வந்ததென்னலாம்: இனி, ஒரு சாரார் கொழுந்து என்றுபொருள் கூறுவர்: அன்றி, அனற்கொழுந்து [அக்கினிச்சுவாலை]: இங்கே, நுனி யெனினு மாம். இனி, சிகை உனது - சடைமுடியையுடைய உன்னுடைய என்றும், கிடைத்தகவளத்தையொத்த உன்னுடைய என்றும் பொருள்கொள்ளலுமாம்: சிகையென்பது கவளமாதலை "மறுசிகை நீக்கி யுண்டார்," "இருசிகையு மூண்டீரோ" என நாலடியாரிலுங் காண்க. தென்புலக்கிழவன் - தக்ஷிண திக்குப்பாலகன். (கஉ)

13.—எட்டுக்கவிகள் - இருவர்க்கும் போர்நிகழ, வீமன் சடாசுரனை யழித்தமை கூறும்.

*நெடும்பணைப்பொருவின்மராமரமொன்று நெறியிடைநேர்ந்ததங் கதனைப்,பிடுங்கினன்விசும்பிலெறிந்தவன்றன்னைப் பிளந்தனன்பிளந் தவப்பொழுதில்,லடும்படைத்தடக்கையரக்கனுந்திருகி யணங்கைவிட் டக்கணத்தழன்று,படும்பணைக்குன்றமொன்றுவேரோடும் பறித்தவ ன்மேற்படவெறிந்தான்.*

(இ - ள்.) நெடு பணை பொருவு இல் மராமரம் ஒன்று - நீண்டகிளை களையுடைய ஒப்பில்லாத ஒரு ஆச்சாமரம், நெறியிடை நேர்ந்தது-வழியிலே யெதிர்ப்பட்டதாக, அங்கு அதனை பிடுங்கினன்-அவ்விடத்திலுள்ள அம்ம ரத்தை (வீமன் வேரோடு) பறித்தெடுத்து, விசும்பில் எறிந்து-ஆகாயத்தில் வீசி, அவன் தன்னை பிளந்தனன் - அச்சடாசுரனை (உடம்புபிளக்க) அடித் தான்; பிளந்த அ பொழுதில் - அங்ஙனமடித்த அந்தப்பொழுதிலே, அடும் படை தட கை அரக்கன்உம் - கொல்லுந்தன்மையுள்ள ஆயுதத்தை யேந்த வல்ல பெரியகைகளையுடைய அவ்விராக்கதனும், திருகி - மனம்மாறுபட்டு, அணங்கை விட்டு - திரௌபதியைக் கீழேவிட்டு, அ கணத்து-அந்தக்ஷணத் திலே, அழன்று - கோபங்கொண்டு, படும் பணை குன்றம் ஒன்று வேரோடு உம் பறித்து - (எதிரில்) நேர்ந்த பெரியமலையொன்றை அடியோடுபிடுங்கி யெடுத்து, அவன்மேல் பட எறிந்தான் - அவ்வீமன்மேற் படும்படி அதனை வீசினன்; (எ - று.)

அணங்கு - பெண்களிற் சிறந்தவள். நேர்ந்தது - முற்றெச்சம். (கந)

14. *விட்டகுன்றினைத்தன்மேற்படாவண்ணம் விசும்பிடைப் பொடிபடக்கதையாற்,றெட்டனன்பின்னும்விசும்பினின்றவன்றன் றோளிணையொசிதரத்தாவிக், கட்டினன்குறங்கைக்குறங்கினால்வீசிக் கம்பமுற்றகிலமுங்கலங்கக், கிட்டினன்றலத்தின்மிசையடலரக்கன் கீழ்ப்படமேற்படவிழுந்தான்.*

(இ - ள்.) விட்ட குன்றினை - (சடாசுரன்) வீசியெறிந்த அம்மலையை, தன்மேல் படா வண்ணம்-தன்மேலே படாதபடி, விசும்பிடை பொடி பட- ஆகாயமார்க்கத்திலே பொடியாய்விடுமாறு, (வீமசேனன்), கதையால் தொட்டனன் - கதாயுதத்தால் தாக்கி, பின்உம்-அதன்பின்பு, விசும்பில் நின்றவன் தன் தோள் இணை ஒசிதர தாவி - ஆகாயத்தில்நின்ற அவ்வரக்கனது இரண்டு தோள்களும் முறியும்படி (மேலெழுந்து அவன்மேற்) பாய்ந்து, கட்டினன்- (அவனைத் தன்கைகளால் இறுகக்) கட்டி, குறங்கை - (அவனது) தொடைகளை, குறங்கினால் - (தனது) தொடைகளால், வீசி - வேகமாகத் தாக்கி, அகிலம்உம் கம்பம் உற்று கலங்க - எல்லாவுலகமும் (அதிர்ச்சியால்) நடுக்கமடைந்து கலங்கும்படி, கிட்டினன் - நெருங்கி, தலத்தின்மிசை-பூமியிலே, அடல் அரக்கன் கீழ் பட - வலிமையையுடைய சடாசுரன் கீழேபொருந்தவும், மேல் பட-(தான்) அவன்மேலே பொருந்தவும், விழுந்தான்—;(எ-று.)

15. முன்னம்வாளெயிற்றோரரக்கனைவெள்ளி மால்வரைமுனிந் ததென்றதற்குப்,பொன்னின்மால்வரையோரரக்கனைத்தானும் புவிப் படுத்தரைப்பதேபோலக், கன்னம்வாய்நெரியக்கரங்களான்மலக்கிக் கழுத்தையும்புறத்தினிற்றிருப்பித், துன்னுதோளிணையுந்தாளும்வன் னெஞ்சுஞ் சுளிதரத்தாளினாற்றுகைத்தான்.

(இ - ள்.) முன்னம் - முன்னொருகாலத்திலே, வாள் எயிறு ஓர் அரக்கனை - கூர்மையையுடைய தந்தங்களையுடைய ஓர் இராக்கதனை [இராவணனை], வெள்ளி மால் வரை - வெள்ளிமயமான பெரியகைலாசமலை, முனிந்தது - கோபித்துஅழுத்திற்று, என்றதற்கு - என்ற அச்செய்கைக்கு, (போட்டியாக), பொன்னின் மால் வரை-பொன்மயமான பெரிய மகாமேருகிரி, ஓர் அரக்கனை-ஓர்இராக்கதனை, தானும்—, புவி படுத்து-பூமியிற்கிடக்கச்செய்து, அரைப்பதுஏ போல - (அவனை) நெரிப்பதுபோல, கன்னம் வாய் நெரிய - (சடாசுரனது) கன்னங்களும் வாயும் நெரிபடும்படி, கரங்களால் மலக்கி - (தன்) கைகளாற் கலங்கச்செய்து, கழுத்தைஉம் புறத்தினில் திருப்பி - (அவனது) கண்டத்தையும் பின்பக்கத்தை நோக்கும்படி திருப்பி விட்டு, துன்னு தோள் இணைஉம் - (அவனது) பொருந்திய இரண்டு புயங்களும், தாள்உம் - கால்களும், வல் நெஞ்சுஉம் - வலியமனமும், சுளிதர - ஒடியும்படி, தாளினால் - (தன்)கால்களினால், துகைத்தான் - (அவனை வீமன் மிதித்துத்) துவைத்தான்; (எ - று.)

தற்குறிப்பேற்றவணி. இராவணன் குபேரனோடு எதிர்த்துப்பொருது அவனைவென்று அவனதுபுஷ்பகவிமானத்தைப் பறித்து அதன்மேலேறிக் கொண்டு கைலாசமலைக்குமேலாக ஆகாசமார்க்கத்திலே விரைந்து மீண்டு வருகையில், அம்மலையின் மகிமையால் விமானந் தடைப்பட்டுநிற்க, அதற்குக்காரணம் இன்னதென்று அறியாது திகைக்கையில், நந்திதேவர் எதிரில் வந்து 'சிவபிரானுக்குத்தங்குமிடமான திருக்கைலாயத்தின் பெருமையிது' என்றுசொல்லவுங் கேளாமல், தசமுகன், தனதுபிரயாணத்துக்குத் தடை

யாகிய இம்மலையை இப்பொழுதே வேரோடுபறித்து எடுத்து அப்பால் எறிந்துவிட்டுத் தடையின்றி மேற்செல்வே னென்று கூறி விமானத்தினின் றும் இறங்கித் தனது இருபதுகைகளையும் அம்மலையின்கீழ்க் கொடுத்து அத னைப் பெயர்த்து அசைக்க, அதனையுணர்ந்த உருத்திரமூர்த்தி சினந்து தன் கால்விரலாற் சிறிதுஅழுத்தவே, அரக்கன் மலையின்கீழ் அகப்பட்டுக் கைந் நசுங்கி மிகவருந்தி வெகுகாலம்புலம்பிப் பின்னர்ச் சாமவேதகானத்தாற் சிவனருளைப்பெற்று விடுபட்டுப் போயின னென்பது வரலாறு. வீமனது நிறம் செந்நிற மாதலின், பொன்னின்மால்வரை உவமைகூறப்பட்டது. கன்னம் - கபோலம். நெஞ்சு - தானியாகுபெயராய், மார்புமாம். (கரு)

16. விழுந்தவாளரக்கன்றருக்குநெஞ்சொடிந்து வெகுண்டிவன் றனைத்தளிமீண்டு, மெழுந்துதோள்கொட்டியார்த்தழன்றுருமே றெனக்கொதித்திடுதலும்வீம, னழுந்தவெவ்விரலாற்பிடித்தவனகலத் தடிகொடுமிதித்துவெண்பிறையின், கொழுந்துபோலெயிறோரிரண்டையுங்கஞ்சன் குஞ்சரமெனப்பிடுங்கினனால்.

(இ - ள்.) விழுந்த வாள் அரக்கன் - கீழேவிழுந்த கொடிய அவ்விராக் கதன், தருக்கு நெஞ்சு ஒடிந்து - செருக்கையுடைய (தனது)இதயம் சிறிது முறிபட்டு, வெகுண்டு-கோபித்து, இவன்தனை தளி - இவ்வீமனைக் கீழே தள்ளி, மீண்டும் எழுந்து - மறுபடியும்எழுந்து, தோள் கொட்டி ஆர்த்து- (தனது)தோள்களைத்தட்டி யாரவாரித்து, அழன்று-கோபித்து, உரும் ஏறு என-பேரிடிபோல, கொதித்திடுதலும்-உக்கிரங்கொண்டவளவில்,— வீமன்-வீமசேனன்,—அழுந்த-(அவனுடம்பு)நசுங்கும்படி, வெவ் விரலால் பிடித்து-கொடிய கைவிரல்களால் (அவனைப்) பிடித்து, அவன் அகலத்து அடிகொடு மிதித்து - அவன்மார்பிலே (தன்)கால்களால் மிதித்து, வெள் பிறையின் கொழுந்து போல் எயிறு ஓர் இரண்டைஉம் - வெண்ணிறமான இளஞ்சந் திரனையொக்கின்ற அவனது கோரதந்த மிரண்டையும், கஞ்சன் குஞ்சரம் என - கம்ஸனு லேவப்பட்ட யானையைப் போல [அதன்தந்தங்களைக் கண் ணன் பிடுங்கினதுபோல], பிடுங்கினன் - பறித்தான்; (எ - று.)

வில்விழாவென்கிற வியாசம்வைத்துக் கம்சனால் வரவழைக்கப்பட்டு ஸ்ரீகிருஷ்ணபலராமர்கள் கம்சனரண்மனையைநோக்கிச் செல்லுகையில், அவனது அரண்மனைவாயில்வழியில் தம்மைக்கொல்லும்படி அவனால்ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் மதயானை தம்மீது கோபித்துவர, அவ்யாதவவீரர் அதனையெதிர்த்து அதன்தந்தங்களிரண்டையுஞ் சேற்றிலி ருந்து கொடியை யெடுப்பதுபோல எளிதிற் பறித்து அவற்றையே ஆயுத மாகக்கொண்டு அடித்து அவ்யானையை உயிர் தொலைத்து உள்ளேபோயின ரென்பது கதை. கஞ்சன் - கம்ஸனென்னும் வடமொழிச்சிதைவு; இவன், வசுதேவரது மனைவியான தேவகிக்கு உடன் பிறந்தவனாதலின், கண்ண னுக்கு மாமனாவன். ஏறு - ஆண்பாற்பெயர்; பெரியதையுஞ்சிறந்ததையும் ஏறென்றல், மரபு. தோள்கொட்டுதல் - வீரக்குறிப்பு. அகலம் - அகற்சி;

விசாலமான மார்புக்குத் தொழிலாகுபெயர். தளி - தள்ளி: கொடு - கொண்டு : விகாரம். ஆல் - ஈற்றசை. (கசு)

17. புலவுகால்வயிரவாளெயிறிரண்டு முதலொடும்போனவாணிருத, னிலவிலாநிசியுமின்னிலாவிடிகொ ணீலமாமுகிலேயுநிகர்த்தான், குலவுதோள்வாயுகுமரன்மேன்மீளக் கொதித்தெழுந்திருகரங்கொண்டு,மலையின்மேலுருமுற்றென்னமற்றவன்றன் மார்பகஞ்சுழிதரப் புடைத்தான்.

(இ - ள்.) புலவு கால் - (தசையுண்ணுதலாற்) புலால்நாற்றத்தை வீசுகிற, வயிரம் வாள் எயிறு இரண்டுஉம் - வயிரம்போல் உறுதியான கூர்மையான (தனது) தந்தங்கள் இரண்டும், முதலொடுஉம் போன - வேரோடு ஒழியப்பெற்ற, வாள் நிருதன் - கொடுமையையுடைய அவ்விராக்கதன்,— நிலவு இலா நிசிஉம் - சந்திரகாந்தியில்லாத இராத்திரியையும், மின் இலா இடி கொள் நீலம் மா முகிலேஉம் - மின்னலில்லாத இடித்தலைக்கொண்ட நீலநிறமுள்ள பெரிய மேகத்தையும், நிகர்த்தான் - ஒத்தவனாய்,— மீள-மறுபடி, கொதித்து எழுந்து - கோபங்கொண்டுஎழுந்திருந்து, இரு கரம் கொண்டு-(தனது) இரண்டுகைகளால், மலையின்மேல் உரும் உற்று என்ன- மலை மேலே இடிவிழுந்தாற்போல, குலவு தோள் வாயு குமரன்மேல் - விளங்குகின்ற தோள்களையுடைய வாயுவின்குமாரனான வீமசேனன்மீது, அவன்தன் மார்புஅகம் சுழிதர - அவனது மார்பினிடம் குழிபடும்படி, புடைத்தான் - தாக்கினான் ; (எ - று.)—மற்று - அசை.

நிலவும் மின்னலும் வெண்மையாகவிளங்குங் கோரப்பல்லுக்கும், நிசியும் முகிலும் கரியவடிவுகொண்ட அரக்கனுக்கும் உவமை. இடிகொள் முகிலென முகிலை விசேடித்தது, அரக்கன் கர்ச்சனையாரவாரமுடைமையின். வயிரம்-வச்சிராயுதமும் மரவயிரமுமாம். வாயின்வாளெயிறுஎன்றும் பாடம். 'சுளிதர' என்ற பாடத்துக்கு - ஒடியவென்க. (கஎ)

18. முட்டியால்வஞ்சமூர்க்கனுஞ்சமர மொய்ம்பனுமுறைமுறையாக, மட்டியேமுதலாவுள்ளமற்றொழிலின் வல்லனவல்லனபுரிந்து, கட்டியேகுறங்குகுறங்குடன்பகைப்பக் கரங்கரத்தொடுநனிபிணங்க,வொட்டியேமுடுகியொருவருக்கொருவ ருரத்துடன்மோதினாருரவோர்.

(இ - ள்.) உரவோர் - வலிமையையுடையவர்களாகிய, வஞ்சம் மூர்க்கன்உம் - வஞ்சனைக்குணமுள்ள மூர்க்கனான சடாசுரனும், சமரம் மொய்ம்பன்உம் - போரில் ஆற்றலையுடைய வீமனும், முறை முறை ஆக - மாறி மாறி, முட்டியால் - (தமது) கைப்பிடியால், மட்டிஏ முதல் ஆ உள்ள மல்தொழிலின் - மட்டியென்பதை முதலாகவுடைய மற்போர்த்தொழில்வகைகளுள், வல்லன வல்லன புரிந்து - (தாந்தாம்)வல்லவிதங்களைச் செய்து, குறங்கு குறங்குடன் பகைப்ப - ஒருவர்தொடை ஒருவர்தொடையுடனே மாறுபடும்படி, கட்டி - கட்டிக்கொண்டும், கரம் கரத்தொடு நனி பிணங்க

ஒட்டி - ஒருவர்கைகள் மற்றொருவர்கைகளோடு நன்றாகமாறுபடும்படி பின்னிக்கொண்டும், முடுகி - உக்கிரங்கொண்டு, ஒருவருக்கு ஒருவர்-ஒருத்தருக்கொருத்தர், உரத்துடன்-உறுதியுடனே, மோதினர்-தாக்கினார்கள்; (எ-று.)

முட்டி - முஷ்டி: சமரம் - ஸமரம்: வடசொற்கள். மட்டி - மற்போர்த்தொழில்வகைகளில் ஒன்று. மல்தொழில் - ஆயுதமில்லாமல் உடம்பினுறுப்புக்களைக்கொண்டு செய்யும் போர். ஒட்டி - வீரவாதஞ்செய்து என்றுமாம்.

19. முருக்கிவெஞ்சமரமிவ்வகைவெம்போர் மொய்ம்பனீடுயர் முழந்தாளா, லரக்கனையகலத்தமுக்கியிட்டவன்ற னவயவமியாவையு மொன்றாச், சுருக்கியந்தரத்திற்சுழற்றினனெறிந்தான் றொடுகழலிராகவன்முன்னங், குரக்குநாயகன்முன்விரலினாற்றெறித்த குன்றெனச்சிந்திவீழ்ந்திடவே.

(இ - ள்.) இ வகை - இந்தப்படி, வெம் சமரம் - கொடிய போரை, முருக்கி - அழிவுண்டாம்படி செய்து, வெம் போர் மொய்ம்பன் - கொடிய யுத்தத்தில் திறமையையுடைய வீமன், நீடு உயர் முழந்தாளால் - நீண்ட (வலிமையிற்) சிறந்த (தனது) முழங்கால்களினால், அரக்கனை அகலத்து அமுக்கியிட்டு - சடாசுரனை மார்பிலே அழுத்தியிட்டு, அவன்தன் அவயவம் யாவைஉம் ஒன்று ஆ-அவனது உறுப்புக்களெல்லாம் ஒன்றுபடும்படி, சுருக்கி-(அவனுடம்பை) ஒடுக்கிப்பிடித்து, தொடு கழல் இராகவன் முன்னம் குரங்கு நாயகன்முன் விரலினால் தெறித்த குன்று என சிந்தி வீழ்ந்திட - அணிந்த வீரக்கழலையுடைய ரகுகுலராமன் முன்னொருகாலத்தில் வானரராசனான சுக்கிரீவனெதிரிலே (தனது) கால்விரலால் தெறித்துவீசின மலைபோன்ற (துந்துபியென்னுமரக்கனது) எலும்புக்குவியல் போலச் சிதறி விழும்படி, அந்தரத்தில் சுழற்றினன் எறிந்தான்-ஆகாயத்திலே சுழற்றி வீசினான்;(எ-று.)

இராமபிரான் அநுமான்மூலமாகச் சுக்கிரீவனோடு சிநேகஞ்செய்து, அவனதுமனைவியைக்கவர்ந்துகொண்டு அவனை இராச்சியத்தினின்று துரத்திவிட்ட அவனது அண்ணனான வாலியை அவன்வேண்டுகோளால் தான் கொல்வதாக வாக்குத்தத்தஞ்செய்ய, 'வாலியைக்கொல்லவல்லவலிமை இவருக்கு உளதோ?' என்று சுக்கிரீவன் சிறிதுசந்தேகிக்க, அவ்வையத்தை அகற்றுதற்பொருட்டு ஸ்ரீராமமூர்த்தி அங்கே முன் வாலியாற்கொல்லப்பட்ட துந்துபியென்னும் பேரசுரனது உடம்பின் எலும்புக்குவியல் ஒருபால்மலைபோலக் குவிந்துகிடந்ததைத் தன்கால்விரலால் எடுத்துத்தெறித்து வெகுதூரத்தில் வீசி அவனுக்குநம்புதலுண்டாக்கினா ரென்பது கதை. (கக)

20. எறிந்தவாளரக்கன்விசும்பினதெல்லை யெவ்வளவவ்வளவும் போய், மறிந்தயால்வரைபோன்மீளவும்புவிமேல் மாசுணநடுங்குற வீழ்ந்து, செறிந்தபேருடலுயாவியுஞ்சிந்தத் தென்புலத்திமைப்பினிற் சென்றா, னறந்துறந்தென்றுமடாதனசெய்தா லார்கொலோபடாதனபடாதார்.

(இ - ள்.) எறிந்த வாள் அரக்கன் - (வீமசேனனாற்) சுழற்றி யெறியப்பட்ட கொடிய அவ்விராக்கதன், விசும்பினது எல்லை எ அளவு அ அளவுஉம்

போய் - ஆகாயத்தினெல்லை எவ்வளவுஉண்டோ அவ்வளவுஞ்சென்று, மீளஉம்-மறுபடியும், மறிந்த மால் வரை போல் - (இடிகொடிந்து) அழிந்த பெரியதொரு மலைபோல, புவிமேல் - பூமியிலே, மாசுணம் நடுங்குற - (அதனைத்தாங்குகிற) ஆதிசேஷன் (பாரமிகுதியால்) நடுக்கமடையும்படி, வீழ்ந்து-விழுந்து, செறிந்த பேர் உடல்உம் ஆவிஉம் சிந்த - (பலகாலமாய் ஒன்றோடொன்று) கூடியிருந்த பெரிய(தனது)உடம்பும் உயிரும் (தனித்தனி) சிதறுமாறு, இமைப்பினில் - மாத்திரைப்பொழுதினுள்ளே, தென் புலத்து - தென் திசையிலுள்ள யமலோகத்துக்கு, சென்றான்-போனான்; அறம் துறந்து-தருமத்தைவிட்டு, என்றுஉம் - எப்பொழுதும், அடாதன செய்தால்-தகாத காரியங்களைப் பண்ணினால், படாதன படாதார் - அனுபவிக்கமுடியாத தீங்குகளை அடையாதவர், ஆர்கொல்ஓ - யாவரோ? (எ - று.)

அடாதுசெய்பவர் படாதுபடுவர் என்பது கருத்து. இக்கவி, வேற்றுப் பொருள்வைப்பணி. மறிந்த - மேல்கீழாகவீழ்ந்த என்றுமாம். (உ0)

வேறு

21.—சடாசுரனிடத்தினின்று தப்பின திரௌபதியின் வருணனை.

வாளரவ முண்டுமிழும் வாண்மதியும் வஞ்சக்
கோளுழுவை கொள்ளவிடர் கொண்டுகுலை குலையா
நாள்வலியி னுய்ந்தமட நவ்வியுநி கர்த்தாள்
காளவிட முண்டமுத டக்குமிரு கண்ணாள்.

(இ - ள்.) (இங்ஙனம் சடாசுரனால் நேர்ந்த ஆபத்தினின்று தப்பின), காள விடம் உண்டு அமுது அடக்கும் இரு கண்ணாள் - கரியவிஷத்தையுட்கொண்டு அமிருதத்தையுந் தன்னுளடக்கிய இரண்டுகண்களையுடைய திரௌபதி,—வாள் அரவம் உண்டு உமிழும் வாள் மதிஉம்-வாள்போலுங்கொடிய பாம்பினாலுட்கொண்டு உமிழப்பட்ட ஒளியையுடைய சந்திரமண்டலத்தையும், வஞ்சம் கோள் உழுவை கொள்ள இடர் கொண்டு குலைகுலையா நாள் வலியின் உய்ந்த மடம் நவ்விஉம் - வஞ்சனையோடு கொல்லுந்தன்மையுடைய புலி (தன்னைக்) கவர்ந்துகொள்ளுதலால் துன்பத்தை யடைந்து நடுநடுங்கி (முன்னையஊழ்வினையாலாகிய) ஆயுள்வலிமையினால் தப்பிப்பிழைத்த இளமையான பெண்மானையும், நிகர்த்தாள் - ஒத்தாள்; (எ - று)

அரவமும் உழுவையும் அரக்கனுக்கும்; மதியும் நவ்வியும் திரௌபதிக்கும் உவமை. காலவிசேஷங்களில் சூரியனை மறைக்கின்ற சந்திரனது சாயையும், சந்திரனைமறைக்கின்ற பூமியினது சாயையும் ஆகிய சாயாகிருகங்களை இராகுகேதுவென்னுங் கரும்பாம்புசெம்பாம்புகளாக வருணித்தல் கவிமரபு. கோள் - உயிர்கொள்ளுந்தன்மை; முதனிலைதிரிந்த தொழிற்பெயர். விடமுண்டு அமுதடக்குங் கண் என்றது - கருவிழியின்கருமையையும் சுற்றுப்புறத்தின் வெண்ணிறத்தையும் பற்றி; இனி, கூடாதகாலத்துக் காமநோய் வருத்தத்தையும், கூடியகாலத்து மிக்கஆநந்தத்தையுந் தருதல் பற்றி யுமாகவுமாம்: "மாண்பில் நஞ்சு மமிர்தமுமே போல்குணத்த பொரு கயற்கண்,"

"அமிழ்தினின் விளைத்துள் நஞ்சினிற் கருகி" என்றார் சிந்தாமணியிலும், நைடதத்திலும். காளவிடம் - காலகூடவிஷம்: பிரளயகாலத்து நஞ்சுமாம், அமுதளிக்கும் என்று பிரதிபேதம்.

இதுமுதல் இச்சருக்கமுடியுமளவும் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று மாச்சீரும் மற்றைமூன்றும் காய்ச்சீரு மாகிய அளவடி நான்குகொண்ட கலிவிருத்தங்கள். (உக)

22.—வீமன் திரௌபதிமுதலியவரோடு தாம்இருந்தவனத்தையடைதல்.

அடாதுசெய்சடாசுரனதாவியையுமம்பொற்
படாமுலைகடாமுடையபைந்தொடியையும்போய்த்
தடாவமர்விடாதுடையதம்பியரையுங்கொண்
டிடாவிறல்கொண்மாருதியிருக்கும்வனமுற்றான்.

(இ - ள்.) விறல் கொள் மாருதி-வெற்றியைக்கொண்ட வீமசேனன்,— அடாது செய் சடாசுரனது ஆவியைஉம் - (பிறர்மனைவிழைதலாகிய) தகாத காரியத்தைச் செய்த சடாசுரனது உயிரையும், அம் பொன் படாம் முலைகள் தாம் உடைய பைந்தொடியைஉம் - அழகிய பொன்னுபரணங்களையும் கச்சையு மணிந்த தனங்களையும் பசும்பொற்றொடியையு முடைய பாஞ்சாலியையும், போய் தடா அமர் விடாது உடைய தம்பியரைஉம் - (சடாசுரனை எதிர்த்துச்) சென்று தடுத்துப் போர்செய்தலை நீங்காமலுடைய தம்பிமாரான நகுலசகதேவரையும், கொண்டிடா - கைக்கொண்டு, இருக்கும் வனம் உற்றான் - (தாம்) வசிக்கிற காட்டை அடைந்தான்; (எ - று.)

சடாசுரனைக்கொன்று மனைவியோடுந் தம்பியரோடும் மீண்டுவந்தன னென்பதாம். அடாது-எதிர்மறையொன்றன்பால் வினையாலணையும் பெயர். அடாது என்பதைச் சாதியொருமையாக்கொண்டு, எல்லாத்தீச்செயல்களையும் அடக்கலாம். பொன் - பொன்னுபரணங்களுக்குக் கருவியாகுபெயர். படாம் - படமென்னும் வடமொழித் திரிபு. அம் பொன் படா முலை எனஎடுத்து, அழகிய பொன்போல்நிறத்தையுடைய சுணங்கையுடைய சாயாத தனங்களென்று முரைக்கலாம்; இவ்வுரைக்கு, பொன் - உவமவாகுபெயர்: படா - படாத, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். போய் என்னும் வினையெச்சம் தடாஎன்பதையும், அவ்வினையெச்சம் உடைய என்னுங் குறிப்புப்பெயரெச்சத்தையுங் கொள்ளும். தடா, கொண்டிடா - உடன்பாட்டுவினையெச்சங்கள். தடா அமர் எனஎடுத்து - பிறரால் தடுக்கவொண்ணாத போரென்றுங் கொள்ளலாம். இச்செய்யுளில் டகர ஆகாரம் அடுத்தடுத்து வந்தது, பிராசமென்னுஞ் சொல்லணி. (உஉ)

23.—வீமன் தருமபுத்திரனிடம் நிகழ்ந்தன கூறினபின் தருமபுத்திரன் எல்லாருடனும் பதரிகாச்சிரமத்தை யடைதல்.

உற்றபடிதம்முனிருதாடொழுதுரைத்தான்
மற்றவனுமங்குறையுமாமுனிவரோடுங்

கொற்றமிகுதம்பியரொடுங்குழுமியன்றே
நற்றபநிநாரணனதாச்சிரமநண்ணி.

இரண்டுகவிகள் - குளகம்.

(இ - ள்) (வீமன்), தம்முன் இரு தாள் தொழுது-தனது தமையனான யுதிட்டிரனது உபயபாதங்களை வணங்கி, உற்றபடி உரைத்தான் - நடந்த வரலாற்றைச் சொன்னான்; மற்று - பின்பு, அவன் உம்-அத்தருமபுத்திரனும், அங்கு உறையும் மாமுனிவரோடு உம்-அவ்விடத்திலே (தன்னோடுகூட)வசிக்கிற சிறந்த முனிவர்களுடனும், கொற்றம் மிகு தம்பியரொடு உம் - ஜயம் மிகுந்த தம்பிமார்நால்வருடனும், குழுமி - கூடி, அன்றே - அப்பொழுதே, நல் தபதி நாரணனது ஆச்சிரமம் நண்ணி - சிறந்தமுனிவரான நாராயணரது பதரிகாச்சிரமத்தை அடைந்து, (எ - று)—'வணங்கிப் பெற்றுத் தங்கினர்கள்' என மேற்கவியோடு இயையும்.

மேலைக்கவியில் 'கங்கைவளநாடர் தங்கினர்கள்' என்ற பலர்பால்முடிபுக்கு ஏற்ப, இக்கவியில் நண்ணியென்னும் வினையெச்சத்தை நண்ணவெனத் திரித்தல் நலம். தபதி-தபஸ்வீ யென்னும் வடமொழித் திரிபு; தவஞ்செய்பவனென்று பொருள். குருசிஷ்யக்கிரமத்தை உலகத்தவர்க்கு உணர்த்துதற்பொருட்டுத் திருமால் தாம் அநுஷ்டித்துக்காட்டுமாறு நாராயணனென்னுங் குரு நரனென்னுஞ் சிஷ்யனுக்குத் தத்துவோபதேசஞ்செய்யும்பாவனையாய்த் தாமே இரண்டுருவங்கொண்டு பதரிகாச்சிரமத்தில் எழுந்தருளியிருக்கின்றன ரென அறிக. நாரணன் - நாராயணனென்னும் வடமொழித்திரிபு; நார அயந எனப் பிரிக்க: சிருஷ்டிப்பொருள்களுக்கு இருப்பிடமானவனென்றும், சிருஷ்டிப்பொருள்களை இருப்பிடமாகவுடையவனென்றும், பிரளயசமுத்திரத்தை இருப்பிடமாகக் கொண்டவனென்றும் பொருள். ஆச்சிரமம் - ஆஸ்ரமம்; வடசொல். கொற்றம்-சடாசுரவிசயம். மற்றவனும் என ஒருசொல்லாகஎடுத்து, தமையனானதருமனும் எனலுமாம். (உரு)

**24.—சிலநாள் அங்குத் தங்கிப் பாண்டவர்கள் மலைவழிகளிற் செல்லுதல்.**

அங்கவன்மலர்ப்பதம்வணங்கியருள்பெற்றுக்
கங்கைவளநாடர்கலைதேர்முனிவரோடுந்
தங்கினர்கள்சிற்சில்பகறங்கியபினப்பாற்
சிங்கமெனவெண்ணில்வரைசேர்நெறிகள்சென்றார்.

(இ - ள்.) கங்கை வளம் நாடர் - கங்காநதியாயும் பலவளங்களையுமுடைய குருநாட்டுக்கு உரிய பாண்டவர்கள்,—அங்கு அவன் மலர் பதம் வணங்கி - அந்தப்பதரிகாச்சிரமத்தில் அந்நாராயணனது தாமரைமலர் போலுந் திருவடிகளை நமஸ்கரித்து, அருள் பெற்று-(அவ்வெம்பெருமானது) கருணையைப்பெற்று, கலை தேர் முனிவரோடு உம் - சாஸ்திரங்களையறிந்த முனிவர்களுடனே, தங்கினர்கள் - (அங்குத்) தங்கினார்கள்; சில சில பகல்-சில்சிலதினங்கள், தங்கிய பின்-(அங்குத்)தங்கினபின்பு, அப் பால்-அதன்புறத்தில், எண் இல் வரை சேர் நெறிகள் - அளவிறந்த மலைகளைச் சேர்ந்த வழிகளை, சிங்கம் என-சிங்கங்கள்போல, சென்றார் - கடந்துபோனார்கள்;(எ-று.)

குருநாட்டின்எல்லை கங்கைவரையி லென்க. நாட்டையிழந்து காட்டில் வசிக்கும் பாண்டவரைக் கங்கைவரைநாடரென்றது, அரசாண்ட பாண்டு மகாராசனது குமாரரும் துரியோதனனதியரினும் பிராயத்தில் மூத்தவரு மாகிய இவர்களே முறைப்படி அந்நாட்டிற்குஉரியவ ராதலின். இப்பொழுது நாட்டரசாட்சி இவர்களுக்கு இல்லையாயினும், முன்னும் பின்னும் நாட்டை யாளுதல்பற்றி நாடரெனக்கூறிய தென்க. தங்கினர்கள், கள் - விகுதிமேல் விகுதி; அசையெனினுமாம். (உச)

25.—அஷ்டகோணமகரிஷியின்வனத்தை யடைந்து அம்முனிவனைத்தொழ, அவனாற் பாண்டவர் உபசரிக்கப்படுதல்.

ஏணில்வரைமார்பரிமையோர்புகழுமெட்டுக்
கோணுடையமாமுனிவனங்குறுகியன்னான்
மாணுடைமலர்ப்பதம்வணங்கினர்துதித்தார்
தாணுவனையானுமவர்தம்மையெதிர்கொண்டான்.

(இ - ள்.) ஏண் இல் வரை மார்பர் - வலிமைக்கு இருப்பிடமான மலைபோலும் மார்பையுடைய பாண்டவர்கள்,—இமையோர் புகழும் எட்டு கோண் உடைய மா முனி வனம் குறுகி - தேவர்கள்புகழுந்தன்மையராகிய (உடம்பில்) எட்டுக்கோணலையுடைய அஷ்டாவக்கிர மகாமுனிவ ரெழுந் தருளியிருக்கும் காட்டை அடைந்து, அன்னான் மாண் உடை மலர் பதம் வணங்கினர் - அம்முனிவரது மகிமையையுடைய தாமரைமலர்போலுந் திரு வடிகளை நமஸ்கரித்து, துதித்தார் - தோத்திரஞ்செய்தார்கள்; தாணு அனை யான்உம்-(பெருந்தவமுடைமையிலும் பேராற்றலிலும்) சிவபிரானையொத்த அம்முனிவரும், அவர் தம்மை எதிர்கொண்டான் - அப்பாண்டவர்களை எதிர் கொண்டுஉபசரித்தருளினர் ; (எ - று)

ஏணில் என்பதில், இல் - சாரியை யெனக் கொண்டு, வலிமையை யுடைய வரை மார்பு என்றுமாம். "வரையகன் மார்பிடை வரையு மூன்றுள" எனச் சிந்தாமணியிலும், "ஆரந் தாழ்ந்த வம்பகட்டு மார் பிற், செம்பொறி வாங்கிய மொய்ம்பு" எனத் திருமுருகாற்றுப்படையிலுங் கூறியுள்ளவற்றிற்கேற்ப, வரை மார்பு - (உத்தமவிலக்கணமாகிய மூன்று) ரேகைகளையுடைய மார்பு என்றலுமாம். கோண் - கோணுதல்: முதனிலைத் தொழிற்பெயர்; கோணமென்னும் வடசொல்லின் விகாரமென்றுங் கொள் ளலாம். ஒவ்வொரு பிரமகற்பத்துக்கு ஒவ்வொரு உறுப்புக்கோணல் நிமிரு மாறு நீண்டஆயுளையுடைய அந்த அஷ்டகோணமகாமுனிவர், திருமாலின் அமிசமெனப்படுவர். இப்படிப்பட்ட பெருந்தகைமையுடைய முனிவரும் இவர்களை யெதிர்கொண்டுஉபசரித்தது தமதுஇயற்கையாகவுள்ள நல்லருளா லென்க. மாண் - மாட்சி ; பண்படி. தாணு-ஸ்தாணுவென்னும் வடசொற் சிதைவு; இதற்கு - நெடுங்காலம்அழியாது நிலைநிற்பவ னென்று பொருள்.

26.—அங்குத்தானே பாண்டவர்கள் ஒன்பதுவருஷங் கழித்தல்.

அன்பொடொருநாளெனவனந்தநெடுநாளங்
கின்பமொடிருந்தனர்களெக்கதையுங்கேட்டாண்

டொன்பதுகழித்தனர்களிவ்வகையொருங்கே
பின்பவணிகழ்ந்ததொருபெற்றியுரைசெய்வாம்.

(இ - ள்.) (அருச்சுனனொழிந்த பாண்டவர்கள்), அன்பொடு - அன்புடனே, ஒரு நாள் என - ஒருநாள்போல, அனந்தம் நெடு நாள்-எல்லையில்லாத நீண்ட தொடர்ச்சியான பலநாள், அங்கு - அவ்விடத்தில் [அஷ்டகோணமுனிவனத்தில்], இன்பமொடு இருந்தனர்கள் - சௌக்கியத்தோடு இருந்து, எ கதைஉம் கேட்டு - அநேகபுண்ணியசரித்திரங்களை (அம்முனிவர்சொல்லக்) கேட்டுக்கொண்டு, இ வகை - இவ்வாறு, ஒருங்கு - ஒருசேர, ஆண்டு ஒன்பது கழித்தனர்கள் - ஒன்பதுவருஷகாலங் கழித்தார்கள்: (கழிக்கையில்), பின்பு அவண் நிகழ்ந்தது ஒரு பெற்றி - பின்பு அவ்விடத்து நடந்ததொரு தன்மையை [வரலாற்றை], உரைசெய்வாம் - (யாம்) சொல்வோம்; (எ - று.)—அதனை மேற்சருக்கத்திற் காண்க.

அவண், அண் - இடப்பொருள்காட்டும் விகுதி.

முனிவர்வடிவங்கொண்டு பாண்டவரருகில் வசித்துவந்த ஜடாசுரன் பாண்டவர்களுடைய படைக்கலம் முதலியவற்றின் உளவை யறிந்தவனாய், வீமசேனன் வேட்டையாடச் சென்றிருக்கையில், திரௌபதியுடன் யுதிஷ்டிராதிகளையும் கவர்ந்து ஓடத் தொடங்க, சகதேவன் முயன்று அவ்வசுரனிடத்தினின்று விடுபட்டு வீமசேனனைக் குறித்துக் கோவென்று கதற, அப்போது தருமபுத்திரன் இராக்கதன் விரைந்து செல்லமுடியாதபடி மிக்க சுமையாகக் கனத்து, மற்றையோரைப்பார்த்து 'அஞ்சற்க: இனி, இவ்வசுரனால் விரைந்து செல்லமுடியாது: விரைவில் வீமன் வந்திடுவான்' என்று கூறுநிற்கையில், சகதேவன் அவனுடன் பொருமாறு அறைகூவ, அவ்வேளையில் வீமசேனன் வந்து நிகழ்ந்ததுகண்டு அவ்வசுரனோடு பொருது அவனை உயிர்மாய்த்தானென்பது, முதனூலிற்கூறியசடாசுரவதையின்சுருக்கம். (உசு)

சடாசுரன்வதைச்சருக்கம் முற்றிற்று.

---

ஐந்தாவது

## மணிமான்வதைச்சருக்கம்

மணிமான்என்பவனது வதத்தை யுணர்த்தும் பாக மென்று பொருள். மணிமான்-ஒருவித்தியாதரன்; குபேரனது சேனைத்தலைவர்களுள் ஒருவன். மணிமாந் என்னும் வடசொல்லுக்கு - இரத்தினங்களையுடையவனென்று பொருள்; மாந் - வடமொழிப் பெயர்விகுதி.

'இந்தச்சருக்கத்திற் கடவுள்வாழ்த்துச்செய்யுள் காணப்படவில்லை; மாநசிகமாத்திரமாகக் கடவுள்வணக்கம் நிகழ்ந்ததென்றுவது, கடவுள் வாழ்த்தாக நூலாசிரியராற் பாடப்பட்டதொரு செய்யுள் பிற்காலத்தில்

ரெடெழுதுவோரால் எழுதாதுவிடப்பட்டு எஞ்சிய தென்றுவது காரணங் காண்க. இங்ஙனமே மற்றையிடங்களிலும் கொள்க.

1.—ஒருநாள் ருஷிபத்தினிமாருடன் திரௌபதி நீர்ப்பெருக்கிற்படிதல்.

அங்கிவர மர்ந்துறையு நாளிலணி யோடும்
பொங்கியொரு மாநதிபு துப்புனல்வ ரப்போய்
மங்கைமுனி மங்கையர்க டங்களொடு வாசப்
பங்கயநெ டுந்துறைந றும்புனல்ப டிந்தாள்.

(இ - ள்.) அங்கு - அவ்விடத்தில் [அஷ்டகோணமுனிவரது வனத்திலே], இவர் - இந்தப்பாண்டவர்கள், அமர்ந்து - விரும்பி, உறையும் நாளில் - வசிக்குங்காலத்தில்—(ஒருநாள்),—ஒரு மா நதி - ஒருபெரியநதியிலே, புது புனல் - புதியநீர்வெள்ளம், அணியோடும் பொங்கி வர - அழகுடனே பெருகி வருகையில், மங்கை - பெண்களிற்சிறந்த திரௌபதி, முனிமங்கையர்கள் தங்களொடு - ருஷிபத்தினிகள் பலருடனே, போய் - சென்று, வாசம் பங்கயம் நெடு துறை நறு புனல் - வாசனையையுடைய தாமரைமலரைக்கொண்ட பெரியநீர்த்துறையையுடைய சிறந்த அந்நீரிலே, படிந்தாள் - நீராடினாள்.

மங்கையென்றசொல், இங்குப் பருவங்குறியாமற் பெண்ணென்னுமாத்திரையாய் நின்றது; அப்பருவத்துக்கு வயதெல்லை, பன்னிரண்டுமுதற் பதின்மூன்றளவும். துறை - நீரிலிறங்குமிடம்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - சடாசுரன்வதைச்சருக்கத்தின் 21-ஆங் கவிபோன்ற கலிவிருத்தங்கள். (க)

2.-அப்புனலில் அடித்துக்கொண்டுவந்த பதுமமலரைத்திரௌபதிஎடுத்தல்.

அப்புனலிலார்தருமணங்கமழவந்தண்
மெய்ப்பதுமநாண்மலர்மிதந்துவரமீதே
மைப்பதுமவாள்விழிமடந்தையதுகாணுக்
கைப்பதுமநாண்மலருறக்கடிதெடுத்தாள்.

(இ - ள்.) அ புனலில் - அந்த நீர்வெள்ளத்தில், ஆர்தரு மணம் கமழ - நிறைந்த வாசனை வீசும்படி, அம் தண் மெய் பதுமம் நாள் மலர் - அழகிய குளிர்ந்த வடிவத்தையுடைய புதிதாய்மலர்ந்த தாமரைமலரொன்று, மீது ஏ மிதந்து வர - மேலேமிதந்துகொண்டுவர, மை பதுமம் வாள் விழி மடந்தை - அஞ்சனமணிந்த தாமரைமலர்போன்ற ஒளியையுடைய கண்களையுடைய திரௌபதி, அது காணு - அதனைக்கண்டு, (அம்மலரை), கை நாள் பதுமம் மலர் உற - (தனது) கையாகிய அன்றுமலர்ந்த தாமரைமலரிலே பொருந்தும்படி, கடிது எடுத்தாள் - விரைவாக எடுத்தாள்; (எ - று.)

பதுமம் - பத்மம்; வடசொல். மைப்பதுமம் என எடுத்து, நீலோற்பல மலரென்றுங் கொள்ளலாம். வாள்விழி - வாட்படைபோலுங் கூரிய கொடிய கண்களுமாம். (உ)

3.—எடுத்தமலரைத் திரௌபதி வீமனது கையிற்கொடுத்து இது எங்கு உளதென்று வினவல்.

எடுத்தமலர்கைக்கொடோரிமைப்பின்மயிலன்னா
ளடுத்துவயமாருதியையம்மலரவன்கைக்
கொடுத்திம்மலரெங்குளதுகூறுகெனவமரிற்
றொடுத்தவயவாகைபுனைதோன்றலிவைசொல்வான்.

(இ - ள்.) எடுத்த மலர் - (அவ்வெள்ளத்தினின்று தான்) எடுத்த பூவை, கை கொடு - கையிலே யேந்திக்கொண்டு, மயில் அன்னாள்-(சாயலில்) மயிலையொத்த திரௌபதி, ஓர் இமைப்பின் - ஒருநிமிஷத்திலே, வய மாருதியை அடுத்து - வலிமையையுடைய வீமனைச் சேர்ந்து, அ மலர் அவன் கை கொடுத்து - அந்தப்பூவை அவனதுகையிலே கொடுத்து, இ மலர் எங்கு உளது கூறுக என - இவ்வகைப்பூ எவ்விடத்திலுள்ளது சொல்வாயென்று வினவ,—அமரில் தொடுத்த வய வாகை புனை தோன்றல் - போரிலே தொடுக்கப்பட்ட வெற்றிக்கடையாளமான காட்டுவாகைப்பூமாலையை அணிகிற வீமராசன், இவை சொல்வான்-இவ்வார்த்தைகளைச்சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை மேலிரண்டுகவிகளிற் காண்க.

அமரில் வாகைபுனை யென இயையும். இங்கே வயவாகை, கீழிரண்டு சருக்கங்களிலுங் கூறப்பட்ட வெற்றிகளைப் பற்றியது. மயிலைப் பெண்களின் நடைக்கும் உவமையாகக் கொள்வாருமுளர். தோன்றல் - மற்றை யோரினுஞ் சிறந்துவிளங்குபவன்: அல் - கருத்தாப்பொருள்விகுதி. (௩)

4.—இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்: வீமன் இவ்வகைப்பூவை எங்கு இருப்பினும் கொணர்ந்துகொடுப்பே னெனல்.

முன்புமுன்மலர்க்குழறனக்கிமலர்முன்பா
லன்புடனியக்கர்பதிநின்றுமருள்செய்தே
னின்புறவிமைப்பொழுதினின்றுமிதளிப்பேன்
றுன்புறறழற்கடவுடந்ததொருதோகாய்.

(இ - ள்.) 'தழல் கடவுள் தந்தது ஒரு தோகாய் - அக்கினிபகவான் பெற்ற ஒரு மயில்போன்றவளே! முன்புஉம் - முன்னமும், மலர் உன் குழல் தனக்கு - பூக்களைச்சூடுந்தன்மையுள்ள உனது கூந்தலுக்கு, இ மலர் - இது போன்ற பூவை, முன்பால் - வலிமையினால், அன்புடன்-அன்புடனே, இயக்கர்பதி நின்றும் - யக்ஷர்களது நகரமான அளகாபுரியினின்றும், அருள் செய்தேன் - கருணைசெய்து கொணர்ந்துகொடுத்தேன்; இன்றுஉம்-இப்பொழுதும், இன்பு உற - (நீ) இன்பமடையும்படி, இமை பொழுதின் - நொடிப்பொழுதினுள்ளே, இது - இவ்வகைத்தாமரைமலரையும், அளிப்பேன் - கொணர்ந்து கொடுப்பேன்; துன்பு உறல் - துன்பமடையாதே.'

முன்பும், இன்றும் என்றவற்றிலுள்ள உம்மைகள்-முறையே எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சப்பொருளன. துன்புறல் - எதிர்மறையொருமை யேவல்; வியங்கோளென்றுங் கொள்ளலாம். தோகாயென்பது - இங்

குப் பொருளால் உயர்திணையாயினும், சொல்லால் அஃறிணையாதலின், தந்தது என்ற அஃறிணையொருமைச்சொல்லால் விசேடிக்கப்பட்டது. (ச)

5. இந்தமலரிந்திரபுரத்தெனினுமின்றுன்
னந்தமில்கருங்குழற்றனக்கருள்கிலேனேன்
முந்தரவுயர்த்தவன்முதற்பகைமுடிக்கு
மைந்துடையதன்றெனதுவாகுகிரியென்றான்.

(இ - ள்.) 'இந்த மலர் - இவ்வகைப்பூவை, இந்திர புரத்து எனின்உம் - தேவேந்திரனது அமராவதிநகரத்தில் உள்ளதாயினும், இன்று - இப்பொழுதே (சென்று), உன் அந்தம் இல் கரு குழல் தனக்கு - உனது அழிதலில்லாத கரிய கூந்தலுக்கு, அருள்கிலேன்எல் - (யான்) கொடுக்கமாட்டாமற்போவேனாயின், எனது வாகு கிரி - எனது தோள்களாகிய மலைகள், முந்து அரவு உயர்த்தவன் முதல் பகை முடிக்கும் மைந்து உடையது அன்று - சிறந்த பாம்புக்கொடியை உயரவெடுத்தவனான துரியோதனன் முதலான பகைவர்களை அழிக்கும் வலிமையுடையனவல்ல,' என்றான் - என்று சபதஞ்செய்தான், (வீமசேனன்); (எ - று.)

அருள்கிலேன், கில் - ஆற்றலுணர்த்தும் இடைநிலை. வாகுகிரி - சாதியொருமை. அன்று - எதிர்மறை ஒருமைக் குறிப்புமுற்று. (ரு)

6.—வீமன் உடன்பிறந்தவர்க்குந்தெரியாது மலர்கொணரப் புறப்படுதல்.

என்றினையவாசகமுரைத்திகலினென்றும்
வென்றிதருதண்டுசிலைகொண்டுவிறலோடுந்
தன்றுணைவரொன்றுமுணராதபடிதானே
சென்றனனிடிம்பனையடுந்திறலின்மிக்கான்.

(இ - ள்.) இடிம்பனை அடும் திறலில் மிக்கான் - இடிம்பாசுரனைக் கொன்ற வலிமையிலே மிகுந்தவனான வீமன்,—என்று இனைய வாசகம் உரைத்து-என்று இப்படிப்பட்ட வார்த்தைகளைக் கூறி, இகலின் என்றுஉம் வென்றி தரு தண்டு சிலை கொண்டு - போரிலே எப்பொழுதுஞ் சயத்தையே கொடுக்கின்ற (தனது) கதாயுதத்தையும் வில்லையும் ஏந்திக்கொண்டு, தன் துணைவர் ஒன்றுஉம் உணராத படி - தனது உடன்பிறந்தவர்கள் சிறிதும் அறியாதபடி, விறலோடுஉம் - பராக்கிரமத்துடனே, தானே சென்றனன் - தான் மாத்திரமே புறப்பட்டுப்போனான் ; (எ - று.)

இகலின், இன்-ஏழனுருபு. தானே, ஏ-பிரிநிலை. அடும் என்னும் எதிர்காலப்பெயரெச்சம், இங்குக் காலங்குறியாமல் தன்மைகுறித்துநின்றது. (சு)

7.—இதுமுதல் ஆறுகவிகள் - ஒருதொடர் : சென்ற வீமன் இரத்தினகிரியையடைந்து அதன்புதுமைகளைக் கண்டு களித்தமை கூறும்.

குன்றமொராயிரண்டனையவெனக்குலவுதோளான்
மன்றன்மலர்கொண்டுவருமாநதியின்வழியே
சென்றுபலயோசனைகடிங்களொடுநாளு
மென்றும்வலம்வந்தருளிரத்நகிரியெய்தி.

(இ - ள்.) குன்றம் ஓர் இரண்டு அவை என குலவு தோளான் - ஒப்பற்ற இரண்டுமலைக ளென்னும்படி விளங்குகின்ற தோள்களையுடையனான வீமன், மன்றல் மலர் கொண்டு வரும் மா நதியின் வழியே - பரிமளத்தை யுடைய அப்பூவைஅடித்துக்கொண்டுவந்த பெரியஆறு வருகிற வழியாகவே, பல யோசனைகள் சென்று-அநேகயோசனைதூரங்களை போய்,—திங்களொடு நாள்உம் என்றுஉம் வலம் வந்தருள் இரத்நகிரி எய்தி-சந்திரனும் நக்ஷத்திரங் களுஞ் சூரியனும் [எப்பொழுதும்] பிரதக்ஷிணமாகச் சுற்றிவரப்பெற்ற (சிறப்பையுடைய) ரத்நகிரியென்னும் மலையை அடைந்து,— (எ - று.)— இச்செய்யுளில் எய்தி யென்னும் வினையெச்சம், மேல் பன்னிரண்டாங்கவி யில் 'கண்டு' என்னும் வினையெச்சத்தைக் கொண்டுமுடியும்.

இரண்டவை, அவை - முதல்வேற்றுமைச்சொல்லுருபு. என்று - ஒளி யையுடையதெனச் சூரியனுக்குக் காரணப்பெயர் ; எல் - பகுதி, இடைச் சொல்: ஒளியென்றுபொருள்; று - பெயர்விகுதி. இரத்நகிரி - சந்தவின் பத்தின்பொருட்டு வடசொல் சிறிதுதிரியாது நின்றது. (எ)

8\. மரகதமணிப்பணிசெய்மாளிகைகளொருசா
ரரிமணியழுத்தியனவாலயமதொருசா
ரெரிமணியழுத்தியனவில்லின்விதமொருசார்
தருணமணிமுத்தினியலுஞ்சதனமொருசார்.

(இ - ள்.) (அம்மலையில்), ஒரு சார் - ஒருபுறத்தில், மரகதம் மணி பணி செய் மாளிகைகள் - மரகதரத்தினத்தால் தொழில்செய்யப்பட்ட வீடு களும், ஒருசார் - ஒருபக்கத்தில், அரி மணி அழுத்தியன ஆலயமது - இந் திரநீலக்கற்களைப் பதித்துக்கட்டின வீடுகளும், ஒருசார் - ஒருபக்கத்தில், எரி மணி அழுத்தியன இல்லின் விதம் - நெருப்புப்போற் செந்நிறமாய் விளங்குகிற பதுமராகமணிகளைப் பதித்தனவான வீடுகளின்வகைகளும், ஒருசார் - ஒருபக்கத்தில், தருணம் மணி முத்தின் இயலும் சதனம் - (ஒளி யிற்) சிறப்பையுடைய நவரத்தினங்களுள் முத்துக்களா லமைந்த வீடுகளும், (உள்ளன); (எ - று.)

அரி - ஹரி; இந்திரன்; வடசொல். அரிமணி - இந்திரநீலம். தருண மணிமுத்தின் - சிறந்த மாணிக்கம் முத்து என்பவற்றால் என்று உரைப் பாருமுளர். இளமையுணர்த்துந் தருணமென்னும் வடசொல், இங்கே இலக் கணையாய்ச் சிறப்புஎனப்பட்டது; தருணம்-புதுமையுமாம். ஆலயம், ஸதநம்- வடசொற்கள்: சாதியொருமை : அது-பகுதிப்பொருள் விகுதி. (அ)

9\. கின்னரர்பயிற்றுமெழுகீதமெழுமொருசார்
மின்னனையபாவையரும்விஞ்சையருமொருசா
ரன்னநடைமங்கையருமாரணருமொருசார்
மன்னுமலியக்கருமடந்தையருமொருசார்.

(இ - ள்.) ஒருசார் - ஒருபக்கத்தில், கின்னரர் பயிற்றும் எழு கீதம் எழும் - கின்னரரென்னுந் தேவசாதியாராற் பாடப்படுகிற எழுவகைச் சுரங்

களாலாகிற சங்கீதங்கள் பொருந்தும்; ஒருசார் - ஒருபக்கத்தில், விஞ்சையர்உம் - வித்தியாதரர்களும், மின் அனைய பாவையர் உம்-மின்னலையொத்த சித்திரப்பதுமைபோலழகிய அவர்மகளிரும், (உள்ளனர்); ஒருசார் - ஒருபக்கத்தில், ஆரணர் உம் - வேதம்வல்லமுனிவரும், அன்னம் நடை மங்கையர் உம் - அன்னப்பறவையின் நடைபோன்ற நடையையுடைய அவர்கள்பத்தினியரும், (உள்ளனர்); ஒருசார் - ஒருபக்கத்தில், மன்னும் மல் இயக்கர் உம் - நிலைபெற்ற வலிமையையுடைய யக்ஷர்களும், மடந்தையர்உம் - அவர்கள்மகளிரும், (உள்ளனர்); (எ - று.)

உயர்திணையாக உம்மைபெற்றுவருஞ் சொற்களிடையே அஃறிணைச்சொல்லான ஆரணம்என்பது வருதற்கு இயைபு இல்லாமையால், 'ஆரணமும்' என்ற பாடம் சரியன்று. விஞ்சையர் - மாலிகாஞ்சநம் முதலிய மாயவித்தையுடையவர்; விஞ்சை - வித்யா என்னும் வடசொற் சிதைவு. கின்னரர்-பதினெட்டுத்தேவகணங்களுள் ஒருவகையார்; மானுடமுகமும் குதிரைமேனியுமுடையவரென்பர்: கின்னரமென்னும் வாத்தியத்தை யெப்பொழுதுங் கொண்டிருத்தலால், இவர்களுக்குக் கின்னரரென்று பெயர்போலும். எழுகீதம் - ஷட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்தியமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்பன; முறையே இவற்றிற்குரிய எழுத்துக்கள், ஸ ரி க ம ப த நி என்பவையாம்: இவை தமிழில் குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் எனப்படும். (கூ)

10. சூலுடையமந்தியயர்வுற்றதுயர்தீரக்
காலுடைநெடுங்கடுவன்வார்கழைநறைத்தேன்
மாலைவரிவண்டிரியமோதிவழையிலையிற்
கோலியதன்வாயிடைகொடுத்திடுவதொருசார்.

(இ - ள்.) ஒருசார் - ஒருபக்கத்தில், சூல் உடைய மந்தி அயர்வு உற்ற துயர் தீர - கருப்பத்தையுடைய பெண்குரங்கு வலிமைத்தளர்ச்சியாலடைந்த துன்பம் நீங்கும்படி, கால் உடை நெடு கடுவன் - (நீண்ட வலிய) கால்களையுடைய பெரிய ஆண்குரங்கு, வார் கழை நறை தேன் - நீண்ட மூங்கிலிற் கட்டப்பட்ட நறுமணமுள்ள தேனை, மாலை வரி வண்டு இரிய மோதி - (அத்தேன்கூண்டில் மொய்த்துள்ள) வரிசைவரிசையான பாடுந்தன்மையுள்ள வண்டுகள் விட்டொழியும்படி அடித்தோட்டி, வழை இலையில் கோலி - சுரபுன்னைமரத்தினிலையிலே (அம்மதுவைப்) பெய்துமூடுத்து, அதன் வாயிடை - அப்பெண்குரங்கின்வாயிலே, கொடுத்திடுவது - (பருகும்படி) கொடுப்பதாகும்; (எ - று.)

மந்தி, கடுவன் - இவை முறையே குரங்கின் பெண்மை ஆண்மை உணர்த்தும்பெயர்களாதலை "குரங்கு முசுவு மூகமு மந்தி," "குரங்கி னேற்றினைக்கடுவ னென்றலும்" என்ற தொல்காப்பியச் சூத்திரங்களா லறிக. வரி - பாட்டு; உடம்பின்கோடுகளுமாம். கடுவன் - கடுமையையுடையதெனக் காரணப்பெயர்; அன் - இங்கு அஃறிணையாண்பால்குறிக்கும் பெயர் விகுதி: 'கோட்டான்' என்பதில் 'ஆன்'விகுதிபோல. (க0)

11. கடக்கலுழிபாய்மதகதக்களிறுமந்தண்
மடப்பிடிகளுந்தமின்மணந்திடுவதொருசா
ரடர்த்தறுகுமாளியுமநிர்ந்துமுழைதோறும்
புடைத்தெதிர்மலேந்துமிகுபோர்புரிவதொருசார்.

(இ - ள்.) ஒருசார் - ஒருபக்கத்தில், கடம் கலுழி பாய் மதம் கதம் களிறுஉம்-கன்னங்களினின்று கலங்கலாகப் பெருகுகிற மதநீரையும் கோபத்தையுமுடைய ஆண்யானைகளும், அம் தண் மட பிடிகள்உம்-அழகியகுளிர்ச்சியையும் [பொறுமையையும்] இளமையையுமுடைய பெண்யானைகளும், தமில் மணந்திடுவது - தங்களுள் [ஒன்றோடொன்று] விவாகஞ்செய்துகொள்வது; ஒருசார் - ஒருபக்கத்தில், அறுகுஉம் - புலியும், ஆளிஉம் - யாளியென்னும்விலங்கும், முழைதோறுஉம்-குகைகளிலெல்லாம், அடர்த்து-நெருங்கி, அதிர்ந்து - ஆரவாரித்து, புடைத்து - அடித்து, எதிர் மலேந்து - எதிர்த்துமோதி, மிகு போர்புரிவது-மிகுந்தபோரைச் செய்திடுவது;(எ-று.)

கலுழ்தல் - கலங்குதல்; இ - பெயர்விகுதி "வேழக்குரித்தே விதந்து களிறென்றல்," 'பிடியென்பெண்பெயர் யானைமேற்றே" என்ற தொல்காப்பியச்சூத்திரங்களால், களிறும் பிடியும் யானையின் ஆண்பெண்பெயர்களாம்.

12. தண்டரளமாதிநவரத்நவொளிதானே
யெண்டிசைவிளக்கும்வரையின்புதுமையெல்லாங்
கண்டுவகைகொண்டிணைகண்களிக்களித்தான்
புண்டரிகவாளிருதனைப்பொருதழித்தான்.

(இ - ள்.) (இவ்வாறு), தண் தரளம் ஆதி நவ ரத்நம் ஒளி தானே எண் திசை விளக்கும் வரையின் புதுமை எல்லாம் - குளிர்ச்சியான (ஒளியையுடைய) முத்து முதலிய ஒன்பதுவகையிரத்தினங்களினொளியே (சென்று) எட்டுத்திசைகளையும் விளங்கச்செய்விக்கப்பெற்ற அவ்விரத்தினகிரியினது அதிசயங்களையெல்லாம், வாள் புண்டரிகன் நிருதனை பொருது அழித்தான்- கொடிய புண்டரீகனென்னும் இராக்கதனை முன்னை போர்செய்துகொன்றவனான வீமன், கண்டு - பார்த்து, உவகை கொண்டு-மகிழ்ச்சிபெற்று, கண் இணை களி களித்தான்-(தனது)இரண்டுகண்களும் மிகக்களிக்கப்பெற்றான்.

இக்கவியில் முதலிரண்டடிகளால், இரத்தினகிரி யென்பது - இரத்தினங்களை மிகுதியாகவுடைய தென ஏதுப்பெயராமாறு உணர்த்தப்பட்டது. புண்டரிக னென்னும் உயர்திணைப்பெயரின் ஈறு கெட்டது. புண்டரிகன் - புண்டரீகன் என்பதன் குறுக்கல். நவரத்நம் - முத்து, வைடூரியம், வைரம், கோமேதகம், நீலம், பவழம், புட்பராகம், மரகதம், மாணிக்கம் என்பன.

13.—வீமன் அந்தக்கிரியினின்றும் அளகாபுரியின்வாயில்களைக்கடந்து அதற்கு வடமேற்றிசையில் நிற்றல்.

அக்கிரியினின்றுமிழிவுற்றளவில்செல்வ
மிக்கவளகேசனகர்வெய்தின்விரைவெய்தித்
தொக்கமணிவாயிலொருநாலுமொர்றுதானே
புக்குவடமேற்றிசையினின்றிதுபுரிந்தான்.

(இ - ள்.) (பின்பு), அ கிரியினின்றும் இழிவுற்று - அந்த இரத்தின மலையினின்றும் இறங்கி, அளவு இல் செல்வம் மிக்க அளகேசன் நகர்-வரை யறையில்லாத ஐசுவரியம் மிகுந்த குபேரனது அளகாபட்டணத்தை, வெய்தின் விரைவு எய்தி - உக்கிரமான வேகத்துடனே யடைந்து, தொக்க மணி வாயில் ஒரு நால்உம் ஒரு தானே புக்கு - நெருங்கியுள்ள இரத்தினங்களைப் பதித்த (அந்நகரத்தின்) வாயில்கள் நான்கிலும் தானொருவனுகவே பிரவேசித்து [நான்குவாயில்களையுங்கடந்து என்றபடி], வடமேல் திசையில் நின்று - (அந்நகரத்தின்) வடமேற்குப்பக்கத்தில் நின்றுகொண்டு, இது புரிந்தான் - இதனைச்செய்தான்; (எ - று.)—அத்தொழில் இன்னதென மேற்கவியில் விளங்கும். (௧௩)

வே று

14.—வீமன் அங்குச் சங்கத்துவானஞ் செய்தல்.

சீர்த்தாரைக ளுதிரத்திசை மருவுங்கரி சிதறக்
கார்த்தாரைகள் கற்றாரைக ளுருமேனொடு கக்க
வார்த்தாழ்கட லுலையக்கதிர் மணிவெள்வளை வாய்வைத்
தார்த்தானுக வந்தத்தெழு மடன்மாருத மனையான்.

(இ - ள்.) உக அந்தத்து எழும் அடல் மாருதம் அனையான் - யுகாந்த காலத்திலே வீசுகின்ற வலிய பெருங்காற்றை யொத்த வீமன், சீர் தாரைகள் உதிர - சிறப்பையுடைய நட்சத்திரங்கள் கீழ்ச்சிந்தவும், திசை மருவும் கரி சிதற - திக்குக்களிற் பொருந்தின யானைகள் [திக்கஜங்கள்] நிலைபெயரவும், கார் தாரைகள் கல் தாரைகள் உருமேனொடு கக்க - மேகவரிசைகள் கல்மழைகளைப் பேரிடிகளுடனே சொரியவும், வார் தாழ் கடல் உலைய - நீண்ட ஆழ்ந்த கடல் கலங்கவும், கதிர் மணி வெள் வளை வாய் வைத்து ஆர்த்தான் - ஒளியையுடைய அழகிய வெண்ணிறமான சங்கத்தை(த் தனது) வாயிலே வைத்து ஆரவாரித்தான்; (எ - று.)—தாரை - ஆவீறு ஐயான வடசொல்.

இதுமுதற் பதினேந்துகவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற்றையமூன்றும் மாங்கனிச்சீர்களு மாகிய அளவடிநான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (௧௪)

15.—அந்தத்தொனி அளகாபுரியிலுள்ளார்செவியில்விழ அவர்கள் படையுடன் திரண்டு நெருங்குதல்.

அந்தத்தமரஞ்சென்றுயரளகாபுரியுறைவோர்
சிந்தைத்துயருறமற்றவர்செவியிற்செறிவுறலு
மிந்தத்தொனிபுரிவானிவனெவனேவெனவெவரு
முந்திக்கரிபரிதேரிவைகொண்டேயுடன்மொய்த்தார்.

(இ - ள்.) அந்த தமரம் சென்று - அந்தச்சங்கத்தொனி போய், உயர் அளகாபுரி உறைவோர் சிந்தை துயர் உற-சிறந்த அளகைநகரத்தில் வசிப்பவர்களது மனந் துன்பமடையும்படி, அவர் செவியில் செறிவுறலும் - அவ்வூர்

கன்காதுகளிற் சேர்ந்தவளவில்,— எவர்உம்-(அந்நகரில் வசிப்பவர்) பலரும், இந்த தொனி புரிவான் இவன் எவன்ஓ என - இந்தஓசையைச் செய்பவனுகிய இவன் எவனே வென்று ஐயமுற்று, முந்தி - (ஒருவரினும்ஒருவர்)முற்பட்டு, கரி பரி தேர் இவை கொண்டு - யானை குதிரை தேர் என்னும் இச்சேனைகளைக் கூட்டிக்கொண்டு, உடன் மொய்த்தார் - விரைவாய் நெருங்கினார்கள்; (எ - று.)

மற்று - அசை. தொனி - த்வநி; வடசொல். உந்தியெனப் பதம் பிரித்து, செலுத்தி யென்றும் பொருள்கொள்ளலாம். முந்தக்கரிபரிதேரிவை மேல் கொண்டுடன் மொய்த்தார் என்று ஈற்றடியிற் பாடாந்தரம். (கரு)

16.—அப்போது அஞ்சாநேஞ்சுபடைத்த ஒருவித்தியாதரன் வீமனைக் கண்டு அஞ்சுதல்.

அவ்வேலையினொருவிஞ்சையனஞ்சாவலிநெஞ்சன்
வெவ்வேலையின்மிகவோதைசெய்மீளிக்கெதிர்செல்லாக்
கைவேலினனிவனாமெனக்கண்டான்வெருக்கொண்டான்
வைவேனிருதரின்வஞ்சமுமாமாயையும்வல்லான்.

(இ - ள்.) அ வேலையின் - அப்பொழுது, அஞ்சா வலி நெஞ்சன் - (எதற்கும்) அஞ்சாத உறுதியையுடைய மனத்தையுடையவனும், வை வேல் நிருதரின் வஞ்சம்உம் மா மாயைஉம் வல்லான் - கூர்மையான வேலாயுதத்தையுடைய அரக்கர்களைக்காட்டிலும் வஞ்சனையிலும் பெரிய மாயையிலுந் தேர்ந்தவனுமான, ஒருவிஞ்சையன்-ஒருவித்தியாதரன், வெவ் வேலையின் மிக ஓதை செய் மீளிக்கு எதிர் செல்லா - கொடியகடலோசையைக்காட்டிலும் மிகுதியாகச் சங்கொலியைச் செய்கிற வீரனான வீமனுக்கு எதிரிற் போய், கண்டான் - (அவனைப்) பார்த்து, கை வேலினன் இவன் ஆம் என-கையில் வேலாயுதத்தையுடைய முருகக்கடவுள் போல்வான் இவனென்று எண்ணி, வெரு கொண்டான் - அச்சங்கொண்டான் ; (எ - று.) (கசு)

17.—அவ்விஞ்சையன் முன்பு நம் சோலையில்வந்தவனேன்றுக்கருதி 'நம்மவர்க்குச் சொல்வேன்' என்று மீளுதல்.

இம்மானவனெழில்கூர்ரதிபதியைப்பொருமெரிகட்
கைம்மானவனருளுங்களிமயிலோனெனமுதனாண்
மைம்மான்விழிமொழியப்பொழில்வந்தோனெனக்கருதா
விம்மாநமர்க்குரையாடுதுமெனவெய்தினின்மீண்டான்.

(இ - ள்.) 'இ மானவன் - இந்தமனிதன், எழில் கூர் ரதிபதியை பொரும் எரி கண் கை மான்அவன் அருளும் களி மயிலோன் என - அழகு மிக்க ரதீதேவிக்குக் கணவனான மன்மதனை யழித்திட்ட எரிகிற நெற்றித் தீக்கண்ணையுடையவனாகி இடக்கையில்மானையேந்திய அச்சிவபிரான் பெற்ற குமாரனும் களிப்பையுடைய மயிலை வாகனமாகவுடையவனுமான முருகக்கடவுள்போல, முதல் நாள்-முன்புஒருநாள், மை மான் விழி மொழிய-கரிய மான் பார்வைபோலும் பார்வையையுடைய தனதுமனைவி [திரௌபதி] கூறிய

தனால், பொழில் வந்தோன் - இச்சோலையினிடம் வந்த வீமனாவன்,' என கருதா - என்று நிச்சயித்து,—விம்மா-நடுங்கி, நமர்க்கு உரையாடுதும் என-நம்மவர்க்குச் சொல்வோம் யாமென்று, வெய்தினில் மீண்டான் - விரைவாகத்திரும்பிச்சென்றான், (அவ்வித்தியாதரன்); (எ - று.)

முதலடியில், மானவன் - மாநவன்: வடசொல்; மநுசந்ததியா னென்று பொருள். ரதிபதி - வடசொல், விகாரப்படாதுநின்றது. மைம்மான்விழி - அன்மொழித்தொகை. (கஎ)

18.—குபேரனுடைய சேனைத்தலைவனான மணிமானிடத்தில் வீமன் மீண்டும் வந்திருத்தலை அவ்விஞ்சையன் கூறுதல்.

மேனாளொருமலர்க்காரணம்விறல்வாணிருதரைமேல்
வானாடர்தமுலகத்தடன்மறலிக்கிடுமறவோ
னானாமுனிவினன்மீளவுமணுகுற்றனனென்னச்
சேனாபதிமணிமானுழைவந்தேயுரைசெய்தான்.

(இ - ள்.) மேல் நாள் - முன்னொருநாளில், ஒரு மலர் காரணம் - ஒரு பூவின்காரணமாக, விறல் வாள் நிருதரை - வலிமையுடைய ஆயுதங்களை யேந்தின அரக்கர்களை, மேல் வானாடர்தம் உலகத்து - மேலுள்ள தேவர்களதுலோகத்தில் [வீரசுவர்க்கத்தில்], (சேரும்படி), அடல் மறலிக்கு இடும்- கொடுமையையுடைய யமனுக்குப் பலியாகக்கொடுத்த, மறவோன் - வலிமையையுடைய மனிதன், ஆனா முனிவினன் - நீங்காத கோபத்தையுடையவனாய், மீளவும் அணுகுற்றனன் - மறுபடியும் வந்து சேர்ந்தான், என்ன - என்று, சேனாபதி மணிமான் உழை வந்து - குபேரசேனைக்குத் தலைவனான மணிமானென்பவனிடத்தில் வந்து, உரைசெய்தான் - (அவ்வித்தியாதரன்) கூறினான் ; (எ - று.)

மலர்காரணம் என்று ஓதுவாருமுளர். ஆனாமை - நீங்காமை; ஆன் - பகுதி. அணுகுற்றனன், உறு - துணைவினை. (கஅ)

19.—இதுமுதல் மூன்று கவிகள் - குளகம் : மணிமான்சினந்து குபேரனுக்குத் தெரிவியாமலே போருது கொல்வேனென்று சேனைகளை ஏவுதலைத் தெரிவிக்கும்.

அவன்வந்திதுபகராதமுனதிவேகமொடழலாச்
சிவனண்பனதுயிர்நண்பனும்விழிசெந்தழல்பொழியப்
பவனன்றருசிறுமானுடனவனோபடிமுதலாம்
புவனந்தொழுபெருமானகரிடைவந்திவைபுரிவான்.

(இ - ள்.) அவன் - அந்த வித்தியாதரன், வந்து—, இது - இவ்வார்த்தையை, பகராத முன் - சொல்லுதற்குமுன்னே [சொன்னவுடனேயென்றபடி], சிவன் நண்பனது உயிர் நண்பனும் - சிவனுக்குச் சிநேகிதனான குபேரனது உயிரோடொத்த நட்பினனாகிய அம்மணிமானும், அதிவேகமொடு அழலா - மிகுந்தஉக்கிரத்தன்மையோடு கோபித்து, விழி செம் தழல் பொழிய - கண்கள் சிவந்தநெருப்பைச்சொரிய, 'பவனன் தரு சிறு மானு

டன் அவன்ஓ - வாயுபெற்ற சிறியமனிதனுன அவனே, படி முதல் ஆம் புவனம் தொழு பெருமான் நகரிடை வந்து இவை புரிவான் - பூமிமுதலிய உலகங்களி லுயிர்களெல்லாம் வணங்குகிற பெருமையையுடைய குபேரனது நகரத்திலே வந்து இச்செயல்களைச செய்யத்தக்கவன்; (எ - று.)

குபேரன் முன்னொருகாலத்தில் கைலாசமலையின் ஒரு சாரலிலிருந்து பெருந்தவஞ்செய்து சிவதரிசனத்தைப் பெற்று அவனருளால் அவனுக்கு நண்பனுயினுன்; இவ்வரலாறு, உத்தரராமாயணத்திலுள்ளது. உயிர்நண்பன் - பிராணசிநேகிதன். புவனம் - இங்கு ஆகுபெயர். (கக)

20. தும்பிக்குலமிரதத்தொகைதுரகத்திரள்காலாள்
பம்பிப்பணைவிதமோலிடப்பணியோலிடநடவா
நம்பிக்கினியுரையாடலநாமேயவனுடலங்
கம்பித்திடப்பொருதாவியுங்கவர்வோமெனக்கழுரு.

(இ - ள்.) நம்பிக்கு இனி உரையாடலம் - நமது தலைவனான குபேரனுக்கு இப்பொழுது (இச்செய்தியை நாம்) கூறித் தெரிவியாமல், தும்பி குலம் - யானைக்கூட்டமும், இரதம் தொகை - தேர்க்கூட்டமும், துரகம் திரள் - குதிரைக் கூட்டமும், காலாள் - பதாதிக்கூட்டமும், (ஆகிய நால் வகைச் சேனையும்), பம்பி - சுற்றிலும் நெருங்கி, பணை விதம் ஒலிட - பல வகை வாத்தியங்கள் முழங்கவும், பணி ஒலிட - ஆபரணங்கள் ஒலிக்கவும், நாமே நடவா-நாமே சென்று, அவன் உடலம் கம்பித்திட பொருது - அம் மனிதனது உடம்பு நடுங்கும்படி போர்செய்து, ஆவிஉம் கவர்வோம் - அவனுயிரையும் வாங்குவோம்,' என கழறு - என்று (மணிமான்) சொல்லி, (எ - று-)—'கழறு' என்பது, மேற்கவியில் 'என்ன' என்பதனேடு முடியும்.

துரகம் - விரைந்துசெல்வது. காலாள் - காலினால் நடக்கும் ஆட்படை. பணி-செய்யப்படுவதென்னும் பொருளில் ஆபரணத்துக்குக் காரணவிடுகுறி. உரையாடலம் நாமே கவர்வோம் - உயர்வுபற்றிய தனித்தன்மைப்பன்மை. நாமே, ஏ - பிரிநிலை. உரையாடலம் - தன்மைப்பன்மையெதிர்மறைத் தெரிநிலை முற்றெச்சம். (உ0)

21. பண்ணூர்படை நஞ்சேனையின்பரவைக்கதிபதிய
ரெண்ணூயிரமியக்கேசருமிவன்மேலெழுகென்னத்
தண்ணூர்மதிக்கவிகைத்திறற்சாலேந்திரன்முதலோர்
விண்ணுடரும்வெருவச்செருப்புரிவான்விரைவுற்றூர்.

(இ - ள்.) 'பண் ஆர் படை - தொழில்முற்றிய ஆயுதங்களையுடைய, நம் சேனையின் பரவைக்கு - நமது கடல்போலுஞ் சேனைக்கு, அதிபதியர் - தலைவர்களாகிய, எண் ஆயிரம் இயக்கேசர்உம் - எட்டுஆயிரம் யக்ஷசிரேஷ்டர்களும், இவன்மேல் எழுக - இம்மனிதன்மீது போருக்கு எழக்கடவர்', என்ன-என்று (மணிமான்) கட்டளையிட,—தண் ஆர் மதி கவிகை-குளிர்ச்சி மிகுந்த சந்திரன்போன்ற வெண்குடையையும், திறல் - வலிமையையுமுடைய, சாலேந்திரன் முதலோர் - சாலேந்திர னென்பவன் முதலான

யக்ஷசேனாதிபதிகள், விண்ணாடர் உம்வெருவ - தேவலோகத்தாரும் அஞ்சும்படி, செரு புரிவான் - போர் செய்யும்பொருட்டு, விரைவுற்றார் - துரிதமாகச் சென்றார்கள் ; (எ - று.)

பரவை - பரவியுள்ளது. சாலேந்திரன்-ஜாலங்களிற் சிறந்தவனென்று பொருள் ; ஜாலம் - மாயவித்தை. கவிகை - கவிந்துள்ளது. விண்ணாடரும், உம்மை - உயர்வுசிறப்பு. புரிவான் - வினையெச்சம். பண் ஆர் சேனை என இயைத்து, அலங்காரம் பொருந்தின சேனை யெனினுமாம். அதிபதியா மெண்ணாயிரமியக்கேசரும் என்ற பாடம் எண்வழுவா மாதலால், பொருத்தமின்று. (உக)

22.—எண்ணாயிரவர் சேனாதிபதிகள் வீமனை வளைத்தல்.

*தாமப்புரிசையின்வாயிலெழுந்தானையின்வெள்ள*
*நேமிக்கிரிநெரியப்புரிநெடுவெள்ளநிகர்ப்பத்*
*தூமக்கனல்சொரிகண்ணினரெண்ணாயிரர்தொலையாச்*
*சேமக்கவசியர்வீமனைத்திரையாழியிற்சூழ்ந்தார்.*

(இ - ள்.) தாமம் - ஒளியையுடைய, புரிசையின் -(அவ்வளகாபுரியின்) மதிலினது, வாயில் - கோபுரவாயிலினின்று, எழும் - புறப்பட்ட, தானையின் வெள்ளம் - சேனையின்கூட்டம், நேமி கிரி நெரிய புரி நெடு வெள்ளம் நிகர்ப்ப - சக்கரவாளமலையும் அழியும்படி செய்கின்ற பெரிய (பிரளயகாலக் கடல்)வெள்ளத்தை யொத்திருக்க, தூமம் கனல் சொரி கண்ணினர் - புகையோடுகூடிய நெருப்பை யுமிழ்கிற கண்களை யுடையவர்களும், தொலையா சேமம் கவசியர் - (ஆயுதங்களால்) அழியாத (உடம்புக்குக்) காவலான கவசத்தை யணிந்தவர்களுமாகிய, எண்ணாயிரர் - எட்டாயிரவரான சேனாபதிகள், திரை ஆழியின் - அலைகளையுடைய கடல்போல, வீமனை சூழ்ந்தார் - வீமசேனனை வந்துவளைத்தார்கள் ; (எ - று.)

பூமியைச்சூழ்ந்துள்ள கடலைச் சுற்றிலும் கோட்டைமதில்போலச் சூழ்ந்துள்ளது சக்கரவாளமலை யென நூல்கள் கூறும். அந்நகரத்துக் கோட்டைமதில்வாயிலிலே நிறைந்துபரவிய சேனைக்குச் சக்கரவாளகிரியின்மீது பரவிய பெருங்கடலை உவமைகூறினார். வெள்ளம் - ஒருபேரெண். சேமம் - க்ஷேமம் என்னும் வடசொற் றிரிபு. தாமம், தூமம், நேமி, கிரி - வடசொற்கள். கவசி= கவசீ : கவசத்தையுடையவன் : வடசொல் ; அதன்மேல், அர் - பலர்பால்விகுதி ; கவசம் - இரும்பு முதலியவற்றா லாகிற உடம்பின்மேற் சட்டை ; இது, போரிற் பகைவரெறியும் படைக்கலங்களை உடம்பின்மீது படாது காப்பது. (உஉ)

23.—சேனைக் கடலிடையே நிற்கும் வீமன் வருணனை.

*உதிக்குஞ்சுடரோராயிரமுருக்கொண்டெனவொளிகூர்*
*விதிக்குஞ்சமர்தொலையாவிறல்விச்சாதரர்வெள்ளக்*
*கொதிக்குங்கடலிடைநின்றிடுகுமரன்குரைகடன்முன்*
*மதிக்கும்படிநெடுமாலிடுமாமந்தரமொத்தான்.*

(இ - ள்.) உதிக்கும் சுடர் ஓர் ஆயிரம் - உதயமாகின்ற ஒரு ஆயிரஞ் சூரியர்கள், உரு கொண்டு என - (இச்சேனையின்) வடிவத்தைக் கொண்டாற்போல, ஒளி கூர் - தேககாந்தி மிகுந்த, விதிக்கும் சமர் தொலையா விறல் விச்சாதரர் வெள்ளம்-(படைத்தற்கடவுளான) பிரமனுக்கும் போரில் அழிக்கவொண்ணாத வலிமையுடைய வித்தியாதரர்களின் கூட்டமாகிய, கொதிக்கும் கடல் இடை - பொங்கியெழுகிற கடலின் நடுவே, நின்றிடு - (போருக்கு) நிலையாய்நின்ற, குமரன் - இளம்பருவமுடையவனான வீமன், குரை கடல் முன் மதிக்கும்படி நெடு மால் இடும் மா மந்தரம் ஒத்தான் - ஒலிக்கின்ற பாற்கடலிலே ஆதிகாலத்திலே (அதனைக்) கடையும்படி நீட்சியையுடைய திருமால் போகட்ட (மத்தாகிய) பெரிய மந்தரமலையைப் போன்றான்; (எ - று.)

உபமானத்தில் 'மதிக்கும்படி' என்றதனால், உபமேயத்திலும் அச்சேனையைக் கலக்கும்படி யென்க. உதிக்குஞ்சுடரென்றது, இளஞ்சூரியனை. சுடர் ஓராயிரம் - இல்பொருளுவமை. இனி, உதிக்கும்சுடர் ஓர்ஆயிரம்உருக் கொண்டென என எடுத்து, பாலசூரியன் தான் மிகப்பலவானவடிவங்களைக் கொண்டாற்போல என்றும் உரைக்கலாம். ஒளிகூர்விச்சாதரரென இயையும். விதிப்பவன், விதி; விதித்தல் - சிருஷ்டித்தல். விச்சாதரர்-வடசொற் றிரிபு. குமரன்=குமாரன்: குறுக்கல். நெடுமால் - திரிவிக்கிரமாவதார காலத்தில் நீட்சிபெற்ற வடிவத்தையுடைய கடவுள்; அல்லது, விசுவரூப முடைய எம்பெருமான்: அன்றிக்கே, மிக்கமகிமையுடைய பிரானுமாம். குரைகடல் - வினைத்தொகை; உபமேயமாகிய சேனையில் ஆரவாரமுண்மையின், உபமானமான கடலை 'குரை' என விசேடித்தார். கடல்முன் என எடுத்து, கடலிலேயென்றும் பொருள்கொள்ளலாம்; முன்-ஏழனுருபு. (உ௩)

24.—பகைச்சேனையைத் தொலைக்க, வீமன் அம்புகள் தொடுத்தல்.

ஊழ்வந்துதனெதிருந்தலுமுயர்வானுலகுறுவான்
சூழ்வந்தபெருஞ்சேனையைத்தொலையாவமர்பொருவான்
காழ்வந்தகதாபாணியுங்காணார்முனைக்கென்றும்
வீழ்வந்தகொடுஞ்சாயகம்வின்னாணில்விசித்தான்.

(இ - ள்.) ஊழ் - முற்பிறப்பிற்செய்த வினைப்பயன், தன் எதிர் வந்து உந்தலும் - தனதுஎதிரில்வந்து ஏவியதனால், உயர் வான் உலகு உறுவான் - சிறந்ததேவலோகத்து வீரசுவர்க்கத்தை அடையும்பொருட்டு, சூழ்வந்த - (தன்னை) வந்துவளைந்த, பெரு சேனையை-பெரியசைனியத்தை, தொலையா அமர் பொருவான் - அழித்துப் போர்செய்யும்பொருட்டு, காழ் வந்த கதா பாணிஉம் - உறுதிமிக்க கதாயுதத்தை யேந்தின கையையுடைய வீமனும், காணார் முனைக்கு என்றுஉம் வீழ் வந்த கொடு சாயகம் - பகைவர்களது போருக்கு எப்பொழுதும் அழிவுசெய்வதாக(த் தனக்குப் பழக்கத்தில்) வந்த கொடிய அம்புகளை, வில் நாணில் விசித்தான் - வில்லினது நாணியினால் இழுத்து விட்டான்; (எ-று.)—'தொலையாவவர்புரிபோர் என்றும் பாடம்.

"விநாசகாலே விபரீதபுத்தி :" என்கிற நியாயமாய் இவர்கள் வீம னைச்சூழ்ந்தது இவர்களுக்குஅழிவையேவிளைப்ப தென்பார், 'ஊழ்வந்தத னைதிருந்தலு மூயர்வானுலகுறுவான் சூழ்வந்த பெருஞ்சேனை' என்றார். ஊழாவது - முற்பிறப்பிற்செய்த நல்வினை தீவினைப் பலன் தன்னைச் செய்த உயிரையே பிற்பிறப்பில் தவறாது சென்று அடையவேண்டும் நியதி. தொலையா அமர்பொருவான்-அமர்பொருது தொலைப்பா னெனக் கருத்துக் கொள்க. காணார் - (தன்னை அன்போடு) காணாதவரெனப் பகைவர்க்குக் காரணக்குறி ; எதிர்மறைப்பலர்பால் வினையாலணையும்பெயர். வீழ் - வீழ்ச் சியை விளைத்தல் : முதனிலைத்தொழிற்பெயர். இனி, காணார்முனைக்கு என் றும் வீழ் வந்த சாயகம் என்பதற்கு - பகைவரோடு பொரும்போர்க்களத்தில் எப்பொழுதும் ஆலமரத்தின் விழுது அம்மரத்துக்கு உதவுவதுபோலத் தனக்கு உதவிசெய்யும் அம்பு என்றும் உரைக்கலாம். ஸாயகம் - வடசொல்.

25.—சாலேந்திரனென்ற படைத்தலைவன்
வீமனது மனவுறுதியறியச் சில கூறலுறல்.

அக்காலையில்விறலோனிலையறிவானுயரறிவாற்
றக்கார்புகழ்சாலேந்திரன்றன்சேனையைத்தகையாக்
கைக்கார்முகவயமாருதிதிருமுன்கடிதோடிப்
புக்கானொருதேர்மேனனியிவைநின்றுபுகன்றான்.

(இ - ள்.) அ காலையில்-அந்தச்சமயத்தில், விறலோன் நிலை அறிவான்- வலிமையையுடைய வீமனது மனவுறுதிநிலையை அறியும்பொருட்டு, உயர் அறிவால் தக்கார் புகழ் சாலேந்திரன் - சிறந்த அறிவினால் தகுந்தபெருமை யையுடைய சான்றோரால் புகழப்படுகின்ற ஜாலேந்திரனென்பவன், தன் சேனையை தகையா - தனது சேனையை (வீமனுடன் போர்செய்யாதபடி) தடுத்து,—ஒரு தேர்மேல்-(தனது) ஒப்பற்றதொரு தேரின்மேலே, கை கார் முகம் வய மாருதி திருமுன் கடிது ஓடி புக்கான் - கையில்வில்லையுடைய வலியவீமனது எதிரில் விரைவாகஓடிச்சென்று சேர்ந்து, நின்று - (அங்கு) நின்று, இவை - இவ்வார்த்தைகளை, நனி புகன்றான்-மிகுதியாகக் கூறினான்; (எ - று.)—அவற்றை மேற்கவியிற் கூறுகிறார்.

அறிவால்தக்கார் என இயைத்து-ஞானவ்ருத்தர் என்றவாறு, அறிவால் புகழ் எனஇயைத்து - அறிவுவிஷயத்திலே புகழப்படுகிற என்றவாறு கருத் துக்கொள்க. திருமுன் - சன்னிதானம். வீமனதுஉயர்வும் சாலேந்திரனது இழிவும் தோன்ற, அவனதுமுன்னிடத்தை 'திரு'என்ற சொல்லால் விசே டித்தார். கார்முகம் - வடசொல். (உரு)

26.—சாலேந்திரன் 'உனதுஉயிர்போதும்முன் நீயார் ? எனக் கூறுக' என்று
வீமனை வினவல்.

சிவனோதிசைமுகனோவதிர்திரையாழியிற்றுயில்கூர்
பவனோபருவரைமார்புறப்பகிருஞ்சுடர்வடிவே
லவனோதிறனரவாகனனளகாபுரிவருவோ
னெவனோவுனதுயிர்சிந்துமுன்யார்நீயுரையென்றான்.

(இ - ள்.) 'சிவனோ—? திசை முகன் ஓ-(நான்குதிக்கையும் நோக்கின) முகம்நான்கையுடைய பிரமனோ ? அதிர் திரை ஆழியில் துயில் கூர்பவன் ஓ - ஆரவாரிக்கின்ற அலைகளையுடைய கடலிலே யோகநித்திரைசெய்தருளுந் திருமாலோ ? பரு வரை மார்பு உற பகிரும் சுடர் வடிவேலவன் ஓ - பருத்த கிரௌஞ்சகிரியினது நடுவிடத்திற் பொருந்தும்படி பிளந்திட்ட ஒளியை யுடைய கூர்மையான வேலாயுதத்தையுடைய முருகக்கடவுளோ ? திறல் நரவாகனன் அளகாபுரி வருவோன் எவன் ஓ - பராக்கிரமத்தையுடைய குபேரனது அளகாபட்டணத்தில் வருபவனான நீ (இவர்களுள்) யாவனோ ? உனது உயிர் சிந்தும் முன் நீ யார் உரை - உன்னுடைய பிராணன் (எம் மால் உடம்பினின்று நீக்கப்பட்டுச்) சிதறுதற்குமுன்னமே 'நீயார் ?' என்ற வினாவிற்கு விடையைக் கூறுவாய்,' என்றான் - என்று (வீமனைநோக்கிச் சாலேந்திரன்) கூறினான் ; (எ - று)

திரிமூர்த்திகளும், அவர்களுள்ஒருமூர்த்தியின்மகனான குமாரக்கடவுளும் என்னும் இவர்கள்மாத்திரமே இந்நகரத்தில் வருதற்கு ஏற்றவரென்பது இச்செய்யுளின் முதல்மூன்றடிகளின் கருத்து. திரிமூர்த்திகளுள் இங்குக் கூறிய முறைமை, காரியகாரணம் பற்றியது. குபேரனது பட்டணத்துக்கு வரத்தக்கவர்களுள் சிவனை முதல்வனாக இச்செய்யுளிற் கூறியது, அவன் குபேரனுக்கு உயிர்நண்பனாதலினாலும், மிக்கசமீபத்தில் வசிப்பவனாதலாலு மென்னலாம். ஆழி-பாற்கடலென்றாவது, பிரளயஜலமென்றாவது கொள்க. சுப்பிரமணியமூர்த்தி சூரபதுமனைப் பொருது அழித்தற்குச் செல்லும்வழி யிடையே கிரௌஞ்சனென்னும் அசுரன் பெரியமலைவடிவங்கொண்டு தம்மை நலிவதாக எதிர்வந்து நிற்க, அதன்மேல் அப்பெருமான் தமது வேலை யேவி அதனைத்துளைத்து அழித்திட்டனரென்பது கதை. நரவாகனன் - நரனை வாகனமாகவுடையவன்; நரன் - குபேரனது வாகனத்தின் பெயர். உனதுஉயிர் சிந்துமுன் என்றது, இவன் தன்னால் விரைவிற் போரிலழிவானென்ற உறுதியைவிளக்கும்பொருட்டு. வருவோன் - முன்னிலையிற் படர்க்கை வந்த வழுவமைதி. (உசு)

27.—வீமன் தன்னைப் பிரதாபந் தோன்றத் தெரிவித்தல்.

என்னஅவனுரையாடலுமிவனின்புறநகையா
முன்னாளொருமலர்க்காரணமுனைவோருயிரெல்லாம்
பொன்னாடர்தமுலகிற்புகப்பொருதோனிகலடுபோர்
மன்னாகவமதியாவிறல்வயமாருதியென்றான்.

(இ - ள்.) என்ன - என்று, அவன்-அச்சாலேந்திரன், உரை ஆடலும்- சொன்னவளவிலே,— இவன் - இவ்வீமன், இன்பு உற நகையா - மகிழ்ச்சி மிகச் சிரித்து, 'முன் நாள் - முன்னொருகாலத்தில், ஒரு மலர் காரணம் - ஒருபூவின்நிமித்தமாக, முனைவோர் உயிர் எல்லாம் - எதிர்த்துப் போர் செய்தவர்களது உயிரையெல்லாம், பொன்நாடர்தம் உலகில் புக - பொன் மயமான மேலுலகத்தில் வாழ்கிற தேவர்களது வீரசுவர்க்கத்திலே செல்

லும்படி, பொருதோன் - போர்செய்து அழித்தவனும், இகல் அடு போர் மன் - வலிமையாற் கொல்லுகின்ற யுத்தத்தில் வல்ல அரசனும், ஆகவம் மதியா விறல் வய மாருதி - (பகைவரது) போரை ஒருபொருளாகக்கருதாத வலிமையையும் வெற்றியையு முடைய வாயுகுமாரனு மான வீமன்(யான்),' என்றான் - என்று (சாலேந்திரனைநோக்கி வீமன்) கூறினான்; (எ - று.)

பகைவன் தன்னையிகழ்ந்தமைகாரணமாகவும், தனக்குப் பகைவனிடத்திலுள்ள இகழ்ச்சிகாரணமாகவும் நகைப்பு வீமனுக்குவிளைந்தது. முனைவர்-முனைவோரென ரகரவீற்றயலகரம் ஓவாயிற்று. முனைவர்-போர்க்களத்தில் வருபவரெனப் பகைவர்க்கு ஏதுப்பெயர் : முனை - போர்க்களம், வ்-பெயரிடை நிலை. ஆஹவம் - வடசொல். தன்னுடையாற்ற லுணராரிடையினும், மன்னியஅமரிடை வெல்லுறுபொழுதினும், தன்னைமறுதலை பழித்தகாலையும் தன்னைப்புகழ்தலுந் தகும் வல்லோர்க் காதலின், இங்ஙனம் இப்பொழுது வீமன் தன்னைச் சிறப்பித்துக்கூறினான். முனைவோருயிர்-தொக்குநின்ற ஆறனுருபு, ஒற்றுமைக்கிழமைப் பொருளது. உலகுய்த்திடுபுகழோன் என்றும் பாடம். மலர்காரணம் என ஐயல்பாகச் சிலர்படிப்பர். (உஎ)

28.—மீண்டும் தாமரைப்பூவைக்கொடுத்தால் உங்களுயிரைவிடுவே னென்று வீமன் கூறுதல்.

மருவீசுபொலந்தாமரைமலரின்னமுமொருகாற்
றருவீரெனினுமதாருயிர்யானுந்தருகுவனுற்
பொருவீரெனில்யமனூர்பதிபுகுவீரினியென்றா
னொருவீரருமுவமைக்கெதிரில்லாவிறலுரவோன்.

(இ - ள்.) 'இன்னம்உம் ஒரு கால் - (முன்ஒருதரம் ஒருவகைப்பூவைக் கொடுத்ததுபோல) இன்னுமொருமுறை, மரு வீசு பொலம் தாமரை மலர் தருவீர் எனில் - வாசனையைவீசுகின்ற அழகிய தாமரைப்பூவை (இப்பொழுது எனக்கு நீங்கள்) கொடுப்பீர்களாயின், உமது ஆர் உயிர் யான்உம் தருகுவன் - உங்களது அருமையான உயிரை நானுங்கொடுப்பேன்; (அப்படியல்லாமல்), பொருவீர் எனில் - போர்செய்வீர்களாயின், இனி - இப்பொழுதே, யமனூர் பதி புகுவீர் - யமலோகத்தைச் சேர்வீர்கள் [இறப்பீர்கள்],' என்றான் - என்று (சாலேந்திரன்முதலியோரை நோக்கிக்) கூறினான்: (யாரென்னில்), ஒருவீரர்உம் உவமைக்கு எதிர் இல்லா விறல் உரவோன் - (உலகத்தில்) ஒருவீரரும் (தனக்கு) உவமையாதற்கு எதிரில்நிற்கப்பெறாத வெற்றியையும் வலிமையையு முடைய வீமன்; (எ - று.)

முதலிரண்டடிகளில் ஒன்றற்கொன்றுதவியணி என்னும் அந்யோந்யாலங்காரமும், மூன்றாமடியில் பிறிதினவிப்சியணியுங் காண்க. யமன் என்ற சொல்லுக்கு-(எல்லாவுயிர்களையும்) அடக்குபவ னென்றுபொருள்; இங்கே, ஆர் என்னும் பலர்பால் விகுதி - அவனதுகொடுமையை விளக்குதற்கு வந்தது. உவமை - உபமா என்னும் வடசொற் றிரிபு. (உஅ)

வேறு

29.—அம்மொழி கேட்டுச் சாலேந்திரன் சினங்கொள்ளல்.

என்றுவய மாருதியி சைத்தமொழி கேளா
வென்றிதிகழ் வாகைபுனை விஞ்சையர்பி ரானுங்
குன்றனைய தோளிணைகு லுங்கநகை செய்யாக்
கன்றினன்வெ குண்டுகனல் காலுமிரு கண்ணான்.

மூன்றுகவிகள் - குளகம்.

(இ - ள்.) என்று—, வய மாருதி - வலிமையையுடைய வீமன், இசைத்த - சொன்ன, மொழி - வார்த்தையை, கேளா-கேட்டு,—வென்றி திகழ் வாகை புனை விஞ்சையர் பிரானும் - சயத்துக்குஉடையாளமாய் விளங்குகின்ற காட்டுவாகைப்பூமாலையை யணிந்த வித்தியாதரர்தலைவனான அந்தச்சாலேந்திரனும், குன்று அனைய தோள் இணை குலுங்க - மலையை யொத்த (தனது) இரண்டுதோள்களுங் குலுங்கும்படி, நகை செய்யா-சிரித்து, கன்றினன் - மனம்வெதும்பி, வெகுண்டு - கோபித்து, கனல் காலும் இரு கண்ணான்-நெருப்பையுமிழும் இரண்டுகண்களையு முடையவனாய்,—(எ-று.)— 'கண்ணான்' என்னுங் குறிப்புமுற்றெச்சம், மேல் முப்பத்தோராம் பாட்டி லுள்ள 'உரைத்து' என்னும் வினையெச்சத்தைக் கொண்டுமுடியும்.

இதுமுதல் இருபது கவிகள் - இச்சருக்கத்து முதற்கவிபோன்ற கலி விருத்தங்கள். (உகூ)

30.—வீமனைநோக்கிச் சாலேந்திரன் கூறும் வார்த்தை.

தேனிடறுவாசமிகுதெய்வமலரென்னே
மானுடர்கள்சூடவருவார்கண்மதியற்றோய்
கானுடையவாழ்க்கைபுரிநின்னுயிர்கணத்தென்
னூனிடறுவாளிகடமக்குணவளிப்பேன்.

(இ - ள்.) 'மதி அற்றோய் - அறிவில்லாதவனே! தேன் இடறு - வண்டுகள் மேலேவிழுந்துமொய்க்கத்தக்க, வாசம் மிகு - நறுமணம்மிகுந்த, தெய்வம் மலர் - தேவர்களுக்குரிய இப்பூவை, மானுடர்கள் - மனிதர்கள், சூட வருவார்கள்-தலையிலணிந்துகொள்ள வருவார்கள், (என்பது),என்னே- என்ன ஆச்சரியம்! கான் உடைய வாழ்க்கை புரி நின் உயிர்-வனத்தை இடமாகவுடைய வாழ்தலைச் செய்கின்ற நினது உயிரை, கணத்து-கணப்பொழுதி னுள்ளே, என் - என்னுடைய, ஊன் இடறு வாளிகள்தமக்கு - (பகைவர்களது)தசைதோய்ந்த அம்புகளுக்கு, உண - உண்ணும்படி, அளிப்பேன் - கொடுப்பேன்;' (எ - று.)

உன்னை என்அம்பாற்கொல்வே னென்பதாம். தேன்இடறு - மது நிறைந்த என்றுமாம். கானுடைய வாழ்க்கை - வனத்தினது சம்பந்தமான வாழ்வு என்றுமாம். கானுடையவர்கை என்றும் பாடம். (௩0)

31.—சாலேந்திரன் சேனாவீரரைநோக்கி 'படைதூவி வீமனைப்பற்றுக'எனல்.

மற்றிவன்வெகுண்டிவையுரைத்துவருசேனைக்
கொற்றவரைநின்றுநனிகூவியெதிரேவிச்
சுற்றுமிகல்வெம்படைகடூவியிகலோனைப்
பற்றுமின்விரைந்தினியெனப்பகரலுற்றான்.

(இ - ள்.) இவன் - இச்சாலேந்திரன், வெகுண்டு - கோபித்து, இவை உரைத்து - இவ்வார்த்தைகளைக் கூறி, நின்று - அங்குநிலைநின்று, வரு சேனை கொற்றவரை நனி கூவி - (தன்னுடன்) வந்த சேனையிலுள்ள வீரர் களை மிகுதியாக அழைத்து, எதிர் ஏவி - (வீமனுக்கு) எதிரிலே செலுத்தி, 'இனி - இப்பொழுது, சுற்றும் இகல் வெம் படைகள் தூவி - (அவனைச்) சுற்றிலும் வலிமையையுடைய கொடிய ஆயுதங்களைப் பிரயோகித்து, இக லோனை - வலிமையையுடைய வீமனை, விரைந்து - துரிதமாக, பற்றுமின் - பிடித்துக்கொள்ளுங்கள்,' என - என்று, பகரல் உற்றான்-கூறுபவனானான்; (எ - று.)—மற்று - அசை. (௩௧)

32.—இயக்கர்படைமேற் கணைதூவி வீமன் சிரித்துஉருத்தல்.

பற்றுமெனவந்தபடைவீரருயிரெல்லாங்
கொற்றமிகுவெங்கணைகுளிக்கும்வகைதொட்டே
செற்றமிகநின்றெதிர்சிரித்தனனுருத்தான்
பற்றலர்புரம்பொடிபடுத்தவனையன்னான்.

(இ - ள்.) பற்றும் என - (இவ்வாறு சாலேந்திரன்) பிடியுங்களென்று கூற, வந்த - (அங்ஙனமே தன்னையெதிர்த்து) வந்த, படை வீரர் - சேனா வீரர்களது, உயிர் எல்லாம் - உயிர்களிலெல்லாம், கொற்றம் மிகு வெம் கணை - சயம்மிகுந்த கொடிய அம்புகள், குளிக்கும் வகை - தைத்துமுழுகும் படி, தொட்டு - பாணப்பிரயோகஞ்செய்து, பற்றலர் புரம் பொடி படுத்த வனை அன்னான் - பகைவர்களது திரிபுரத்தை யெரித்துச்சாம்பலாக்கின சிவபிரானைப் போன்ற [ஆற்றல்மிக்க] வீமன், செற்றம் மிக - கோபம்அதி கப்பட, எதிர் நின்று - எதிரில்நின்று, சிரித்தனன் - சிரித்து, உருத்தான் - கோபித்தான்; (எ - று.)

பற்றலர் - தன்னைச் சேராதவரென்று பொருள்; எதிர்மறைவினையாலணையும்பெயர். செற்றம் - செறு என்னும் பகுதியடியாகப் பிறந்த தொழிற் பெயர்; அம் - விகுதி, றகரமெய் - விரித்தல்விகாரம். உடலெல்லாம் என்னாது உயிரெல்லாம் கணைகுளிக்கும்வகை யென்றது, பகைவருடம்பை யழித்து உயிரையொழிக்கும்படி யென்றவாறு. புரம் - வடசொல். (௩௨)

33.—வீமன்கணையால் இயக்கர்வீழ்ந்திட, கண்ட விஞ்சையர் வீமன்மீது கணைதொடுத்தல்.

இவ்வகைபொழிந்தவடிவாளியினியக்கர்
மெய்வழிசெழுங்குருதிவேலையிடைவீழ்ந்தா
ரவ்வளவில்விஞ்சையரநேகரதுகாணாக்
கைவரிவில்கொண்டவன்மிசைக்கணைதொடுத்தார்.

(இ - ள்.) இவகை பொழிந்த - இவ்வாறு (வீமன்) சொரிந்த, வடி வாளியின் - கூர்மையான அம்புகளால், இயக்கர் - (எதிர்ச்சேனையிலுள்ள) யக்ஷ வீரர்கள், மெய் வழி செழு குருதி வேலையிடை - தங்கள் உடம்பி னின்று வழிகிற மிக்க இரத்தவெள்ளத்திலே, வீழ்ந்தார் - இறந்து விழுந் தார்கள்; அ அளவில் - அவர்கள் விழுந்தமாத்திரத்தில், விஞ்சையர் அனே கர் - வித்தியாதரர்கள் பலர், அது காணு - அதனைநோக்கி, கை வரி வில் கொண்டு - (தத்தம்) கையிலே கட்டமைந்த வில்லை யேந்திக்கொண்டு, அவன்மிசை-அவ்வீமன்மேல், கணை தொடுத்தார் - அம்புகளை யெய்தார்கள்.

கை வரி வில் கொண்டவன்மிசை யென எடுத்து, கையில்வில்லையேந் திய வீமன்மீது என்று முரைக்கலாம். (௩௩)

34.—வீமன்மாறுகக் கணைசெலுத்தி நகைத்திருத்தல்.

தொடுத்தசரவார்சிலைதுணிந்துநனிமேன்மேல்
விடுத்தபடையும்பொரவெகுண்டுமுனைவாய்வந்
தடுத்தவர்கடோளுமணிமார்புமிருதாளு
நடுத்தறியவெங்கணையுகைத்தனனகைத்தான்.

(இ - ள்.) தொடுத்த சரம் வார் சிலை துணிந்து - (தன்மேல்) எய்த அம்புகளையுடைய நீண்ட (பகைவர்களின்)விற்கள் துணிபட்டு, நனி மேல் மேல் விடுத்த படைஉம் பொர - (அவர்கள்) மிகுதியாகத் தன்மேலேமேலே பிரயோகித்த ஆயுதங்களும் (மீண்டுசென்று அவற்றைவிடுத்தவர்களையே) தாக்கவும், வெகுண்டு முனைவாய் வந்து அடுத்தவர்கள் தோள்உம் அணி மார்புஉம் இரு தாள்உம் நடு தறிய - கோபங்கொண்டு போர்க்களத்திலே யெதிர்த்துவந்துசேர்ந்த அவ்வித்தியாதரர்களுடைய புயங்களும் அழகிய மார்பும் இரண்டுகால்களும் நடுவிலே முறிபடவும், (வீமன்), வெம் கணை உகைத்தனன் - கொடிய அம்புகளைச் செலுத்தினவனாய், நகைத்தான் -சிரித் தான்; (எ - று.)

தொடுத்த சரவார்சிலை யென்றது, வடமொழிநடை; சரந்தொடுத்த வார்சிலையென்க. முனைவாய், வாய் - ஏழனுருபு. (௩௪)

35.—நான்கு கவிகள் - சாரணர் வீமனுடன் கதாயுத்தம் புரிந்து இறந்தவர்போக, மற்றையோர் தோற்றோடினமை கூறும்.

மண்டுதிறல்விஞ்சையர்மடிந்தசெயல்யாவுங்
கண்டுசிலசாரணர்கறங்கனையதேர்மேற்
கொண்டுகடலென்னவுருமென்னநனிகொதியாத்
தண்டுகொடெதிர்ந்தனர்கடண்டதரனோடும்.

(இ - ள்.) மண்டு திறல் விஞ்சையர் - மிக்கவலிமையையுடைய வித் தியாதரர்கள், மடிந்த செயல் யாஉம் - (இங்ஙனம்) இறந்த செய்திகளை யெல்லாம், கண்டு - பார்த்து, சில சாரணர் - சாரணரென்னுந் தேவசாதி யார் சிலர், கறங்கு அனைய தேர் மேற்கொண்டு - காற்றாடியையொத்த [விரைவையுடைய] (தத்தம்) தேர்மே லேறிக்கொண்டு, கடல் என்ன -

(பொங்குகிற) கடல்போலவும், உரும் என்ன - (முழங்குகிற) இடிபோலவும், கனி கொதியா - மிகுதியாகக் கோபித்து, தண்டு கொடு - கதாயுதத்தைக் (கையில்) ஏந்திக்கொண்டு, தண்டதரனேடுடும் - (சத்துருகாதினியென்னுங்) கதாயுதத்தைத் தரிப்பவனான அவ்வீமனுடனே, எதிர்ந்தனர்கள்—; (எ-று.)

தண்டதரன் என்பதற்கு - ஆஜ்ஞா தண்டத்தை [செங்கோலை]த் தரிப்பவனென்றும் பொருள் கொள்ளலாம். (௩௫)

36. வார்சிலையொழிந்துவிறன்மன்னுவயவாகைப்
போர்செய்கதைகொண்டெதிர்புகுந்துபொரலுற்றான்
பார்செய்பயனன்னநிருபற்கிளவல்பார்மேற்
கார்செயுருமேறுருமுடன்கனல்வதேபோல்.

(இ - ள்.) பார் செய் பயன் அன்ன - நிலவுலகத்தார் செய்த நல்வினைப்பயனைப்போன்ற, நிருபற்கு - யுதிஷ்டிரராசனுக்கு, இளவல்-தம்பியான வீமன்,— வார் சிலை ஒழிந்து-நீண்ட வில்லை(க் கையிற்பிடித்தலை) நீங்கி, விறல் மன்னு வய வாகை போர் செய் கதை கொண்டு - வெற்றி பொருந்தின வலிமையுடைய சயமாலையைச் சூடுதற்குரிய போரைச் செய்யவல்ல (தனது)கதாயுதத்தைக் கையிலேந்திக்கொண்டு, எதிர் புகுந்து-அச்சாரணர்களெதிரிலே பிரவேசித்து, கார் செய் உரும் ஏறு உருமுடன் பார்மேல் கனல்வதே போல் - மேகம் இடிக்கின்றதொரு பேரிடி பல இடிகளுடன் பூமியிலே கோபித்துப் போர்செய்வதுபோல, பொரல் உற்றான் - (அச்சாரணர்களோடு) போர் செய்யத் தொடங்கினான் ; (எ - று.)

பார்செய்பயனன்ன என்றதை இளவலுக்குங் கூட்டலாம். தீயோரைக் கடிந்து நல்லோரைக் காத்தல்செய்து சமயத்தில் மிக உதவுதல்பற்றி, 'பார் செய் பயனன்ன' என்றது. இளவல் - இளமையையுடையவன் ; அல் - பெயர்விகுதி. ஈற்றடி - இல்பொருளுவமை. (௩௬)

37. தண்டினொடுதண்டெதிர்தகர்ப்பவெழுபொறியு
மண்டுமுடியோடுமுடிமன்னவெழுபொறியுந்
திண்டிறல்வயப்பொருநர்செங்கணுமிழ்பொறியு
மண்டமுழுதும்பொதுளிமீதுபுகுமப்பால்.

(இ - ள்.) தண்டினொடு தண்டு எதிர் தகர்ப்ப எழு பொறிஉம் - (அப்போரில்) கதாயுதத்தோடு கதாயுதம் எதிரில்தாக்க அதனால் மேலெழுகிற அனற்பொறிகளும், மண்டு முடியோடு முடி மன்ன எழு பொறிஉம் - (போரில் ஒன்றோடொன்று) நெருங்கிய கிரீடத்தோடு கிரீடம் பொருந்த (அவ்வுராய்தலால்) மேலெழுகிற அனற்பொறிகளும், திண் திறல் வயம் பொருநர் செம் கண் உமிழ் பொறிஉம் - மிக்கவலிமையையும் வெற்றியையுமுடைய போர்செய்யும்வீரர்களது (கோபத்தாற்) சிவந்த கண்களினின்று சொரிகிற அனற்பொறிகளும், அண்டம் முழுதுஉம் பொதுளி - அண்டகோளம் முழுவதிலும் (சென்று பரவி) நிறைந்து, அப்பால் - அதன் பின்பு, மீது புகும் - அதற்கு மேலிடத்திலும் கிளர்ந்துசெல்லும் ; (எ - று.)

பொருநர்—பொரு-பகுதி, ந் - பெயரிடைநிலை. (௩௭)

38. மட்டவிழலங்கன்மறவோனுடன்வயப்போர்
தட்டமர்புரிந்துதனுவுஞ்சிரமும்வேறாப்
பட்டவரெனைப்பலர்படாதவர்விடாதன்
றிட்டனர்புறந்திறலியக்கர்குலமெல்லாம்.

(இ - ள்.) வயம் போர் - வெற்றிக்குரிய போர்க்களத்திலே, மட்டு அவிழ் அலங்கல் மறவோனுடன் - வாசனைவீசும் பூமாலையையுடைய வலிமையையுடைய வீமனுடனே, தண்டு அமர் புரிந்து - கதாயுத்தத்தைச் செய்து, தனுஉம் சிரம்உம் வேறு ஆ(க)-உடம்புந் தலையும் துண்டுபட்டுத் தனித்தனியாக, பட்டவர் - இறந்தவர்கள், திறல் இயக்கர் குலம் - வலிமையையுடைய யக்ஷர்து இனத்தவரான சாரணருள், எனை பலர் - எத்தனையோ பலர்! [மிகஅநேக ரென்றபடி]; படாதவர் எல்லாம் - இறவாது எஞ்சினவர்கள் எல்லோரும், விடாது - தவறாமல், அன்று-அப்பொழுதே, புறம் இட்டனர் - முதுகுகொடுத்தோடினார்கள்; (எ - று.)

தண்டு+அமர்=தட்டமர்; மென்றொடர் வேற்றுமையில் வன்றொடராயிற்று. தநு - வடசொல். பின் சிரமென்றதனால், முன் தநுஎன்றது - தலையொழிந்த உடலை. மட்டு அவிழ்தல் - தேன்பெருகுதலுமாம். (௩அ)

39.—விஞ்சையர் வீமனால் தோற்ற வகை.

தொடிக்கரமிழந்திருதுணைப்புயமிழந்தாங்
கடிப்பதமிழந்தவயவங்களடைவேபோ
யிடிக்குரலின்விஞ்சையரெதிர்ந்தயரவாங்கே
கொடிக்குடரிழந்தனர்மருத்துதவுகூற்றால்.

(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது, இடி குரலின் விஞ்சையர்-இடிமுழக்கம்போன்ற கண்டத்தொனியையுடைய வித்தியாதரர்கள், எதிர்ந்து - வீமனெதிரிற்சென்று பொருது, மருத்து உதவு கூற்றால் - வாயுபகவான் பெற்ற யமனையொத்த அவ்வீமனால், ஆங்கே-அப்பொழுதே, தொடி கரம் இழந்து-தொடியென்னும் வளையையணிந்த (தங்கள்) கைகளை ஒழிந்து, இரு துணை புயம் இழந்து - (ஒன்றோடொன்று ஒத்த தமது) இரண்டுதோள்களையும் ஒழிந்து, அடி பதம் இழந்து - (எல்லா அவயவங்களுள்ளும்) கீழுள்ள கால்களையும் ஒழிந்து, அவயவங்கள் அடைவு ஏ போய்-(இங்ஙனமே) மற்றையுறுப்புக்களும் முறையே யொழிந்து, அயர-மரணமுண்டாக, கொடி குடர் இழந்தனர் - கொடிபோன்ற வடிவமுடைய (தமது) குடல்களையும் ஒழிந்தார்கள்; (எ - று.)

குடர்-ஈற்றுப்போலி. கூற்று-உவமையாகுபெயர். 'மருத்துதவுகூற்று' என ஒருதிக்பாலகனை ஒருதிக்பாலகன்மகன்போலக்கூறியது, கவிசாதுரியம்.

40.—அரக்கரும் இயக்கரும் சதுரங்க சேனையுடன் வீமனை வளைத்தல்.

அன்னநிலைகண்டடலரக்கரொடியக்கர்
பின்னருமெனைப்பலர்பிறங்கலைநிகர்க்குங்
கன்னபதமாவிரதகற்கியிகல்காலாண்
மன்னுதிறன்மானுடயடங்கலைவளைத்தார்.

(இ - ள்.) அன்ன நிலை கண்டு-(இங்ஙனம் வித்தியாதரர்கள் சிதைந்த) அந்த நிலைமையைப் பார்த்து, அடல் அரக்கரொடு இயக்கர் - வலிமையை யுடைய இராக்கதர்களும் யக்ஷர்களும், பின்னர்உம் எனை பலர் - மீண்டும் மிகப்பலர், பிறங்கலை நிகர்க்கும் கன்னம் மதம் மா - மலைகளையொத்த கன்னத்தினின்று ஒழுகும் மதஜலத்தையுடைய யானைகளும், இரதம் - தேர் களும், கற்கி - குதிரைகளும், இகல் காலாள் - வலிமையாகப் போர்செய்யுங் காலாட்களும், (என்னுஞ் சதுரங்கசேனையுடனே), மன்னு திறல் மானுட மடங்கலை வளைத்தார் - பொருந்தின வலிமையையுடைய அந்த மனிதச் சிரேஷ்டனான வீமனைச் சூழ்ந்துகொண்டார்கள் ; (எ - று.)

பிறங்குதல்-(உயர்ச்சியால் நெடுந்தூரத்திலும்) விளங்குவது ; மலைக்குப் பெயர் : இதில், அல் - கருத்தாப்பொருள் விகுதி. பிறங்கு அலை நிகர்க்கும் எனப் பிரித்தெடுத்து - விளங்குகின்ற கடலின் அலைநீரை யொக்கின்ற என வுரைத்து, மதத்துக்கு அடைமொழியாக்கினு மமையும். மதமா - மதத்தை யுடைய விலங்கு; எனவே, யானையாயிற்று. யானைக்கு மலையை உவமைகூறிய தனால், யானையின் மதநீருக்கு மலையின் அருவிநீரை உவமையாகக் கொள்க. இரதம்-ரதம்: கற்கி - கல்கி: வடசொற்கள். இகல்காலாள்-வினைத்தொகை. சிங்கம், புலி, யானை, காளை என்னுஞ் சொற்கள் மனிதனுக்கு வரும் பொழுது சிறப்புப்பொருளையுணர்த்துமாதலின், 'மானுடமடங்கல்'என்றது. இனி, மானுடமடங்கல் - நரசிங்கமூர்த்திபோன்றவனுமாம் ; பிறப்பால் மனிதனும் பராக்கிரமத்தாற் சிங்கமும் ஆகுபவ னென்க. (௪0)

41.—ஐந்துகவிகள் - விஞ்சையர் பொருது தோற்றமைகூறும்.

வளைத்துவயவெம்படைகள்வீசிமறிகடல்போ
லுளைத்தொருவர்போலெவருமுருமெனவுருத்துப்
புளைத்தரதமாபுரவிபோதகமிசைப்போய்
விளைத்தனர்பெருஞ்சமரம்விஞ்சையர்களெல்லாம்.

(இ - ள்.) விஞ்சையர்கள் எல்லாம் - வித்தியாதரர்களெல்லோரும்,— புளைத்த ரதம் - (இடையிலே) துவாரத்தையுடைய தேர்களும், மா புரவி - பெரிய குதிரைகளும், போதகம்-யானைக்குட்டிகளும் என்னும் இவற்றின், மிசை போய்-மேலேறிச் சென்று, மறி கடல் போல் - (அலைகள்) மடங்குந் தன்மையுள்ள கடல்போல, வளைத்து-(வீமனைச்) சூழ்ந்து நின்று, உளைத்து - மனங்கலங்கி, உரும் என உருத்து - இடிபோல (ப் பயங்கரமாக) க் கோபித்து, வய வெம் படைகள் வீசி - வலிமையையுடைய கொடிய ஆயுதங் களை (அவன்மேலே) எறிந்து, ஒருவர்போல் எவர்உம் - ஒருத்தரைப் போலவே எல்லோரும், பெரு சமரம் விளைத்தனர் - (அவனுடன்) பெரிய போரைச் செய்தார்கள் ; (எ - று.)

'உருமெனவுரைத்து' என்றபாடத்துக்கு - இடிமுழக்கம்போல வீர வாதங்களை ஆரவாரத்தோடுசொல்லி யென்க. புளைத்த - புளையென்னும்

பெயரி னடியாப்பிறந்த பெயரெச்சம்: புழை - புழை என்பதன் போலி. போதகம் - இருபத்தைந்து பிராயமுள்ள யானைக்கன்று: வடசொல். (சக)

42. தேரணியும்வெம்பொறியெனச்செறிபுகர்க்கைக்
காரணியும்வாயுநிகர்கற்கியணியும்போர்ப்
பேரணிகலன்றனிபிறங்குமணிமார்பன்
றாரணியெனத்தனதுதண்டுகொடுடைத்தான்.

(இ - ள்.) போர் பேர் அணிகலன் - யுத்தத்தையே பெரிய ஆபரண மாகவுடையவனும், தனி பிறங்கும் மணி மார்பன்-ஒப்பில்லாமல் விளங்குகிற அழகிய மார்பை யுடையவனுமாகிய வீமன், தேர் அணிஉம் - (தன்னை வளைந்துபொருத) தேர்ச்சேனையையும், வெம் பொறி என செறி புகர் கை கார் அணிஉம் - வெவ்விய அனற்பொறிகள்போல (ச் செந்நிறமாய்) நெருங் கிய புள்ளிகளையுடைய துதிக்கையையுடைய மேகம்போன்ற யானைகளின் சேனையையும், வாயு நிகர் கற்கி அணிஉம் - காற்றையொத்த (அதிவேகத்தை யுடைய) குதிரைகளின் சேனையையும், தனது தண்டுகொடு - தன்னுடைய கதாயுதத்தால், தார் அணி என - பூமாலையினொழுங்கைக் கெடுத்தல்போல, உடைத்தான் - (எளிதில் நிலைகுலையுமாறு) அழித்தான்; (எ - று.)

அணிமார்பு என்றும் பிரிக்கலாம். "போரின்றி வாடும் பொருநர் சீர்", "விழுப்புண் படாதநாளெல்லாம் வழுக்கினுள், வைக்குந்தன்னாளை யெடுத்து" என்றபடி போரில்லையாயின் பொலிவுகெடுதலும் சிறந்த போர் நேர்பட்டால் பொலிவுமிகுதலும் சுத்தவீரர்க்கு இயல்பு ஆதலால், 'போர்ப்பேரணிகலன்' என்றது. 'புகர்க்கைக்கார்' எனவே, யானையா யிற்று. முகத்திற் செம்புள்ளிகளிருத்தல், யானைக்கு உத்தமவிலக்கணம். தாரணிஎன - சூரியபுத்திரனான யமன்போல என்றும் உரைக்கலாம். (சஉ)

43. நெரிந்தனரதந்துனையுநேமியுடன்வேழஞ்
சரிந்தனநெடுங்குடரரிந்துதலைதாள்போய்
முரிந்தனபெரும்புரவிவெள்ளமுனைதோறும்
விரிந்தனருரங்கடவுள்விஞ்சையர்கண்மன்னோ.

(இ - ள்.) (அப்போரில்), முனை தோறுஉம் - போர்க்களத்தினிடங் களிலெல்லாம், ரதம் - தேர்கள், துனையும் நேமியுடன் - விரைந்துசெல்வன வான சக்கரங்களுடனே, நெரிந்தன - சிதைபட்டன; வேழம் - யானைகள், நெடு குடர் அரிந்து-நீண்டகுடல்கள் அறுபட்டு, சரிந்தன-கீழேவிழுந்தன; பெரு புரவி வெள்ளம் - பெரிய குதிரைகளின் கூட்டம், தலை தாள் போய்- தலைகளுங் கால்களுந் துணிபட்டு, முரிந்தன - அழிந்தன; கடவுள் விஞ்சை யர்கள் - தெய்வத்தன்மையையுடைய வித்தியாதரர்கள், உரம் விரிந்தனர் - மார்புவிரிந்தார்கள்; (எ - று.)—மன், ஓ - ஈற்றசை. (சங)

44. மீளியொருதண்டுகொடுவிண்டெதிர்வெகுண்டோர்
மூளைநிணம்வாயுகமுருக்குதலுமொய்ம்பிற்
றாளுடைமருத்தெதிர்சரிக்கும்வகையெய்தும்
பூளைவனமொத்தனர்பொரும்பொருநரெல்லாம்.

(இ - ள்.) மீளி-வலிமையிற்சிறந்த வீமன், ஒரு தண்டுகொடு-(தனது) ஒப்பற்றதொரு கதாயுதத்தால், விண்டு - பகைத்து, எதிர் வெகுண்டோர் மூளை நிணம் வாய் உக - எதிர்த்துநின்று கோபங்கொண்ட அவ்வித்தியாத ரர்களது தலைமூளையும் உடற்கொழுப்பும் வாய்வழியாக வெளிப்படும்படி, மொய்ம்பின் முருக்குதலும் - வலிமையோடு அழித்தவளவில்,—பொரும் பொருநர் எல்லாம் - போர்செய்கிற வித்தியாதரவீரர்களெல்லோரும், தாள் உடை மருத்து எதிர் சரிக்கும் வகை எய்தும் பூளை வனம் ஒத்தனர் - முயற்சியையுடைய பெருங்காற்றுக்கு எதிரிலே சஞ்சரிக்குந்தன்மையைப் பொருந்தின இலவம்பஞ்சுத்தொகுதியைப் போன்றார்கள் ; (எ - று.)

பெருங்காற்றிற்கு எதிரில் இலவம்பஞ்சு பறப்பதுபோல, வீமனுக்கெதிரில் விஞ்சையர்கள சிதறுண்டு பறந்தார்களென்பதாம். தாளுடைமருத்து-கால்களையுடைய வாயுவென்று உரைத்தால், இல்பொருளுவமையாம். விண்டு என்றவிடத்து 'மீண்டு' என்று பாடங்கொள்ளலாம். முருக்குதலு மார்பில் என்றும் பாடம். (சச)

45. சிந்துரமணிக்கொடிகொடேர்புரவிகாலா
ளந்தகபுரந்தணுகலுற்றவொழியப்போய்த்
தந்தமபுரத்தணுகலுற்றனசயப்போர்
மந்தரவரைப்புயனுநின்றனன்மறத்தால்.

(இ-ள்.) சிந்துரம்-யானைகளும், மணி கொடி கொள் தேர்-அழகியதுவசங்களைக் கொண்ட இரதங்களும், புரவி - குதிரைகளும், கால்ஆள்-காலாட்களும், (என்னும் நால்வகைச்சேனையும்), அந்தக புரத்து அணுகல் உற்ற ஒழிய - (போரிலிறந்து) யமலோகத்திற்சேர்ந்தவை தவிர, (மற்றவை), போய் - (புறங்கொடுத்துச்) சென்று, தம் தம புரத்து அணுகல் உற்றன - தங்கள் தங்கள் இருப்பிடத்திற் சேரத்தொடங்கின ; (அப்பொழுது), சயம் போர் மந்தரம் வரை புயன்உம் - வெற்றியைப்பெற்ற போரைச்செய்த மந்தரமலைபோன்ற தோள்களையுடைய வீமனும், மறத்தால் நின்றனன்-பராக்கிரமத்தோடு (அங்கு) நிலைநின்றான் ; (எ - று.)

மறத்தால்நின்றனன் - இங்கே, மூன்றாம்வேற்றுமை ஆலுருபு, அடைமொழிப்பொருளதாய் நின்றது ; மறத்தையுடையவனாய் நின்றா னென்க. தந்தம, அ-ஆறனுருபு. தந்தம புரத்து என்றதில், புரம்என்பது - இலக்கணையாய், நகரத்திலுள்ள இடங்களைக் குறித்தது. உற்ற - பெயர். நால்வகைப் படைகளுள்ளும் யானைச்சேனை சிறத்தலால், அதனை முதலிற் கூறினார் ; இது தமிழர்வழக்கு ; வடநூலார், வீரர்க்குரிய வாகனங்களிற் சிறந்த தேரைப் பிரதானமாக்கி, 'ரத கஜ துரக பதாதி' என வழங்குவர். (சரு)

46.—விஞ்சையர் நிலைகுலைந்து போனமை.

இருவரொருநீணெறியியங்கலரியங்கா
வரியுழுவைகண்டுடையுமானினமதேபோல்
வெருவியுளநொந்துதிறல்விஞ்சையர்களெல்லாம்
பொருவிலளகாபுரிபுகுந்தனர்விரைந்தே.

(இ - ள்.) திறல் விஞ்சையர்கள் எல்லாம் - கொடிய வித்தியாதரர்களெல்லாரும்,—வரி உழுவை கண்டு உடையும் மான் இனம் அது ஏ போல் - (உடம்பிற்) கோடுகளையுடைய புலியைப் பார்த்துச் சிதறியோடுகிற மானின் கூட்டம்போல, வெருவி - பயந்து, தியங்கா-அறிவுமயங்கி, உளம் நொந்து - மனம்வருந்தி, இருவர் ஒரு நீள் நெறி இயங்கலர் - இரண்டுபேர் ஒருபெரிய வழியிலே செல்லாமல் [தனித்தனி சிதறுண்டு], விரைந்து - துரிதமாக, பொருவு இல் அளகாபுரி புகுந்தனர் - ஒப்பில்லாத அளகாபட்டணத்தினுட் சென்று சேர்ந்தார்கள் ; (எ - று.)—உழுவை - வீமனுக்கும், மானினம் - விஞ்சையர்குழாத்துக்கும் உவமை. (சுசு)

47.—உயிரொழிந்தோர் தவிரத்தோற்றோடிய விஞ்சையர் மணிமானிடம் தம் நிலையைத் தெரிவித்தல்.

இஞ்சிமதில்வாயரணம்யாவுமிகல்புரிவா
னஞ்சினர்கள்விஞ்சையரடைந்தனர்களழகார்
மஞ்சனையமேனிமணிமான்முனமடைந்தே
துஞ்சினரொழிந்தவரவற்றொழுதுசொன்னார்.

(இ - ள்.) இகல் புரிவான் அஞ்சினர்கள் - (மீண்டும்) போர் செய்தற்குப் பயந்தவர்களும், துஞ்சினர் ஒழிந்தவர்-(போரில்) இறந்தவர்கள் போகமிருந்தவர்களுமாகிய, விஞ்சையர் - வித்தியாதரர்கள், இஞ்சி - மதிலிலும், மதில் வாய்-மதிலிடையிலேயுள்ள கோபுரவாயில்களிலும், அரணம் யாஉம் - (மற்றுமுள்ள) காப்பிடங்களெல்லாவற்றிலும், அடைந்தனர்கள் - (போய்ப் பதுங்கிச்) சேர்ந்தவர்களாய், (பிறகு), அழகு ஆர் மஞ்சு அனைய மேனி மணிமான் முனம் அடைந்து-அழகுநிறைந்த மேகத்தை யொத்த உடம்பையுடைய மணிமானென்பவனது எதிரிலே சேர்ந்து, அவன் தொழுது-அவனை நமஸ்கரித்து, சொன்னார் - (தமது நிலைமையைக்) கூறினார்கள் ; (எ - று.)

அரணம், அம் - சாரியை. அரணம் - கோட்டையின் உள்ளிடங்கள்.

48.—அதுகேட்ட மணிமான் வெகுளுதல்.

அந்நிலையுணர்ந்துமணிமானுமவிர்சோதிப்
பொன்னசலமொத்துயர்புயத்துணைதுடிப்ப
மன்னுபுருவச்சிலைவளைத்துமழைமுகில்போன்
மின்னிலகநக்குருமெனத்தனிவெகுண்டான்.

(இ - ள்.) அ நிலை உணர்ந்து-(அவர்களது) அந்த நிலைமையை அறிந்து, மணிமானும்—, அவிர் சோதி பொன் அசலம் ஒத்து உயர் புயம் துணை துடிப்ப - விளங்குகின்ற ஒளியையுடைய பொன்மயமான மேருமலையைப் போன்று உயர்ந்துள்ள (தனது) இரண்டுதோள்களும் துடி துடிக்க, மன்னு புருவம் சிலை வளைத்து - பொருந்தின விற்போன்ற (தனது) புருவத்தை (க் கோபத்தால்) வளையநெறித்து, மழை முகில் போல் - மழை பெய்யுந் தன்மையுள்ள காளமேகம்போல, மின் இலக நக்கு - மின்னல்போன்றஒளி வெளிவிளங்கும்படி சிரித்து, உரும் என தனி வெகுண்டான் - இடி போல ஒப்பில்லாது கோபங்கொண்டான் ; (எ - று.)

மலைகளுட் சிறந்ததும் பெரியதுமாதலால், மேருவை உவமை கூறினர். மழைமுகில்என்றதற்கேற்ப, சிலையும் மின்னும் உருமும் கூறப்பட்டன. (சஅ)

வேறு

49.—புறங்கொடுத்து வந்த சேனாபதிகளை மணிமான் இழித்துக் கூறல்.

வானி லவுணரை யோதி முனைதொறும் வாகை புனைமணி மானுமச்
சேனை முதல்வரை வேக முறநனி சீறி யுரைபல கூறினு
னானி லனதுடல் வீழ வமரிடை யாவி கவர்தர வஞ்சிநந்
தானை யரியெதி ரேகு கரியின மாகி வெருவொடு சாய்வதே.

இரண்டு கவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) வானில்-ஆகாயத்திலே, முனைதொறும்-ஒவ்வொருயுத்தத்திலும், அவுணரை மோதி - அசுரர்களைத் தாக்கி, வாகை புனை-வெற்றியைக் கொண்ட, மணிமானும்—, அ சேனை முதல்வரை - (முதுகுகாட்டியோடிவந்த) அந்தச்சேனாபதிகளைப் பார்த்து, வேகம் உற நனி சீறி - கடுமையாக மிகவுங்கோபித்து, உரை பல கூறினன் - பலவார்த்தைகளைச் சொல்லினன்: (அவை யாவையெனில்), 'அமரிடை-போரிலே, ஆனிலனது உடல் வீழ - வாயுகுமாரனான வீமனது உடம்பு கீழ்விழும்படி, ஆவி கவர் தர - (அவனது) உயிரை (உடம்பினின்று) அழித்தற்கு, அஞ்சி-பயந்து, நம் தானை - நமதுசேனை, அரி எதிர் ஏகு கரி இனம் ஆகி-சிங்கத்தினெதிரிலே பயந்தோடுகிற யானைக்கூட்டத்தை யொத்து, வெருவொடு-அச்சத்துடனே, சாய்வதுவே - (இங்ஙனம்) புறங்கொடுத்து அழிவதா ?' (எ - று.)

ஈற்றேகாரம் - வினாவகையால், அது சிறிதுந் தகுதியன்று என்ற இழிதகைமையையுணர்த்தும். ஆநிலன்-அநிலனது மகன் ; வடமொழித்தத்திதாந்த நாமம் : அநிலன் - வாயு. ஆனிலியின்என்று பிரதிபேதம்.

இதுமுதல் ஆறுகவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ்சீர்கள் தேமாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறுஞ் சீர்கள் கருவிளச்சீர்களும், ஏழாவது கூவிளச்சீரு மாகிய கழிநெடிலடிநான்குகொண்ட எழுசீராசிரிய விருத்தங்கள். (சகூ)

50.—மணிமான் சேனையோடு வீமனை நெருங்குதல்.

என்றுதனதெதிர்நின்றவரையிகழ்வுற்றுமொழிபலசொற்றுமற்
குன்றமெனவமர்வென்றிதருவதொர்கும்பமதகரிமேல்கொளா
வொன்றுபடவுலகின்றுபொடிபடவுந்துகிரதமுந்தெனச்
சென்றுபுடைவருகின்றபடையொடுதெண்டதரனெதிர்மண்டினன்.

(இ - ள்.) என்று—, (மணிமான்), தனது எதிர் நின்றவரை இகழ்வுற்று - தனக்கு எதிரில்நின்ற சேனாபதிகளை மிகஇகழ்ந்து, மொழி பல சொற்று - பலசொற்களைக் கூறி, மல் குன்றம் என - வலிமையையுடைய மலைபோலவுள்ள, அமர் வென்றி தருவது ஓர் கும்பம் மதம் கரி - போரில் வெற்றியைத் தருவதாகிய மஸ்தகங்களையும் மதத்தையுமுடைய ஒருபெரிய

யானையின்மேல், மேல்கொளா - ஏறிக்கொண்டு, 'உலகு ஒன்றுபட இன்று பொடி பட - உலகங்களெல்லாம் ஒருங்கே இப்பொழுது பொடியாய் விடும் படி, கரி ரதம் - (தனது) யானையாகிய வாகனத்தை, மூந்து உந்து - முன்னேசெலுத்துவாய்', என - என்று (பாகனைநோக்கிக்) கட்டளையிட்டு, புடை வருகின்ற படையொடு - பக்கத்திலேவருகிற (தனது)சேனையுடனே, சென்று - போய், தெண்டதரன் எதிர் - கதாயுதத்தைத் தரித்துக்கொண்டுள்ள வீமசேனனெதிரிலே,.மண்டினான் - நெருங்கினான் ; (எ - று.)

என்று மொழிபல சொற்று என இயையும். மல் குன்றம் என என்பதற்கு - மற்போர்வல்ல மலைபோல வென்று உரைத்து, மணிமானுக்கு உவமையாக்கொள்ளினு மமையும். (௫0)

51.—நான்குகவிகள் - மணிமானைச் சார்ந்தவர் மோதுதலை, மணிமானும் மோதுதலை உட்குதலைக் கூறும்.

மண்டியெதிர்வருகின்றபொருநரைவன்புபெறுபுயமுன்பனுங்
கண்டுமுகிழ்நகைகொண்டுதனதிருகண்கள்கனலுகநின்றபி
னெண்டிசையும்வளைகின்றவிமையவரென்றினொளிதிகழ்குன்றினீர்
மொண்டுமுகிலெனவொன்றுபடமிசைமூசியெறிபடைவீசவே.

இரண்டுகவிகள் - குளகம்.

(இ - ள்.) மண்டி எதிர் வருகின்ற பொருநரை - நெருங்கி(த் தன்) எதிரிலே போருக்குவருகிற (மணிமான் முதலிய) வீரர்களை, வன்பு பெறு புயம் முன்பனும்-வலிமைபெற்ற தோள்களையுடைய பராக்கிரமசாலியான வீமனும்,—கண்டு-பார்த்து, முகிழ் நகை கொண்டு - (கோபத்தால்) அரும்புகிற புன்சிரிப்பைச் செய்து, தனது இரு கண்கள் கனல் உக-தனதுகண்களிரண்டினின்றுங் கோபாக்கினி சொரிய, நின்றபின்-(போருக்கு)நின்றபின்பு, எண் திசைஉம் வளைகின்ற இமையவர் - எட்டுத்திக்குக்களிலும் (அவனைச்) சூழ்கிற (வித்தியாதரர்முதலிய) தேவகணத்தவர், என்றின் ஒளி திகழ் குன்றில் நீர் மொண்டு முகில் என சூரியனைப்போல ஒளிவிளங்குகிற மகாமேரு மலையின்மீது நீரைமுகந்து மேகம் (சொரிதல்) போல, ஒன்றுபட மிசை மூசி எறி படை வீச-(யாவரும்) ஒன்றாக (அவன்மேல்) மொய்த்துக்கொண்டு வீசுதற்குரிய ஆயுதங்களைப் பிரயோகிக்க,— (எ - று.)—இக்கவியில் 'வீச' என்பது, மேற்கவியில் 'மிசைவர' என்னும் வினையெச்சத்தைக் கொள்ளும்.

முன்பன் - திறமையுள்ளவன் : (முன்பு - திறமை.) முன்பன்-முன்னமே அங்குள்ளவனென்றும், எதிரிலுள்ளவனென்றுங் கொள்ளலாம். (௫க)

52. வீசுபடையொருகோடிவிசைபடவோடிமிசைவரவீமனும்
பாசதரனெதிர்நீலமயிலொருபாகனிகரெனவேகியா
வாசைதொறுமுகில்போலவளைபவராகமிருபிளவாவுளங்
கூசியலமருமாறுதருவளர்கோடுகொடுநலிசாடினான்.

(இ - ள்.) வீசு படை ஒரு கோடி - (அங்ஙனம் அவர்கள்) எறிந்த கோடிக்கணக்கான ஆயுதங்கள், விசை பட ஓடி - வேகமாகச்சென்று, மிசை

வர - (தன்)மேலே வர, வீமனும்—, பாசதரன் எதிர் நீலம் மயில் ஒரு பாகன் நிகர் என - காலபாசத்தைக் கையில்தரித்துள்ள யமனது எதிரிலே சென்ற நீலநிறமுள்ள மயில்போலுஞ் சாயலையுடைய உமாதேவியை(த் தனது) ஒரு [இடது] பக்கத்திற் கொண்டவனான சிவபெருமான் உவமை யென்னும்படி, வேகியா-உக்கிரங்கொண்டு, ஆசை தொறு உம் முகில் போல வளைபவர் ஆகம் இரு பிளவு ஆ-எல்லாத்திக்குக்களிலும் மேகங்கள்போல(த் தன்னை)ச் சூழ்ந்துள்ளவர்களான வித்தியாதரவீரர்களது உடம்பு இரண்டு துண்டாம் படியும், உளம் கூசி அலமரும் ஆறு - (அவர்கள்)மனம் நடுங்கிச் சுழலும்படியும், தரு வளர் கோடு கொடு - மரங்களிலே வளர்ந்த கிளைகளை யெடுத்து அவற்றால், நனி சாடினன் - மிகமோதினன்; (எ - று.)

சிவபிரான் யமனையெதிர்த்தது, மார்க்கண்டேயருக்காக அவனது செருக்கை யடக்கவேண்டியபொழுதி லென்க. கோடி-நூறுலட்சம்: இங்கே பலவென்னுமாத்திரையாய் நின்றது. மயில் - உவமையாகுபெயர். அலமரும், அலமா - பகுதி. மிசைவரச் சாடினன் என்க. ஆசை - திக்கு. (நிஉ)

53. ஆயபொழுதளகாதிபதியுயிராயவணிமணிமான்விறற்
சீயமெனவவன்மீதுபலபடைசிந்தியமர்செய்துமுந்தினன்
வாயுகுமரனும்வேகமுடனவன்மார்புகிழிதரமோதினன்
காயபலமொடுதாயமறவொருகாயமிருகடகக்கையால்.

(இ - ள்.) ஆய பொழுது - (அப்படி) ஆன அந்தச்சமயத்தில், அளகா அதிபதி உயிர் ஆய அணி மணிமான் - அளகாநகரத்துக்குத் தலைவனான குபேரனது பிராணசிநேகிதனாகவுள்ள அழகிய மணிமானானவன், விறல் சீயம் என - பராக்கிரமத்தையுடைய சிங்கம்போல, அவன்மீது - அவ்வீமன் மேலே, பல படை சிந்தி - அநேகம் ஆயுதங்களைப் பிரயோகித்து, அமர் செய்து - போரையியற்றிக்கொண்டு, முந்தினன் - முன்னேவந்தான்; (அவ் வாறு வர), வாயு குமரன்உம் - வாயுவினது குமாரனான வீமனும், வேக முடன் - விரைவாக, அவன் மார்பு கிழிதர - அம்மணிமானதுமார்பு பிளக் கும்படி, காயம் பலமொடு-(தனது) தேகத்தில் (எவ்வளவுவலிமையுண்டோ அவ்வளவு) வலிமையையுங் கொண்டு, தாயம் அற-(சிறிதுந்தனக்கு) இளைப் பில்லாமல், ஒரு காயம்-(அம்மணிமானது) ஒப்பற்ற உடம்பை, இரு கடகம் கையால் - கடகமென்னும்வளையையணிந்த (தனது) இரண்டுகைகளாலும், மோதினன் - தாக்கினன்; (எ - று.)

'தாயமுற' என்ற பாடத்துக்கு - (மணிமான்) துன்பத்தையடைய வென்க : சமயவாய்ப்பு உண்டாக என்றலும் உண்டு : தாயம் - துன்பம், சோர்வு, வாய்ப்பு. சீயம் - ஸிம்ஹம் என்னும் வடமொழித்திரிபு. காயபலம்- வடசொற்றொடர். இருகையால் என்றவிடத்து, இனைத்தென்றறிபொரு ளில் வந்த முற்றும்மை விகாரத்தால் தொக்கது. (நிங)

54. முன்புபெறுபுயமொய்ம்பனவன்மருமத்தின்விசைபடமொத்தலு
மென்புதசைநிணமிந்திரியம்வலியென்பவிவைநிலைசிந்தியே

துன்பமுறமனநொந்துதளர்வொடுதுத்திமணியுரகத்தின்மேல்
வன்பினுடனுருமுற்றதெனவொளிமட்கிவெருவுடனுட்கினன்.

(இ - ள்.) முன்பு பெறு புயம் மொய்ம்பன் - தலைமைபெற்ற தோள் வலிமையையுடைய வீமன், அவன் மருமத்தின் - அம்மணிமானது மார்பிலே, விசை பட - வேகம் பொருந்த, மொத்தலும் - அடித்தவளவில்,— என்பு தசை நிணம் இந்திரியம் வலி என்ப இவை நிலை சிந்தி - எலும்பும் மாமிச மும் கொழுப்பும் உறுப்புக்களும் வலிமையும் என்று சொல்லப்படுகிற இவைகள் தத்தம் நிலை குலையப்பெற்று, துன்பம் உற - துன்பம்மிக, மனம் நொந்து - மனம்வருந்தி, தளர்வொடு - தளர்ச்சியுடனே, துத்தி மணி உரகத்தின்மேல் வன்பினுடன் உரும் உற்றது என-படப்புள்ளிகளையும் மாணிக் கத்தையுமுடைய நாகம் தன்மேல் வலியோடு இடிவிழப்பெற்றாற்போல, ஒளி மட்கி - ஒளிமழுங்கி, வெருவுடன் - அச்சத்துடனே, உட்கினன்-(மணி மான்) நடுக்கமடைந்தான்; (எ - று.)

என்ப - எனப்படுவன; செயப்பாட்டுவினைப் பொருளில் வந்த செய் வினைப் பலவின்பால் எதிர்காலவினையாலணையும்பெயர்; என்-இடைச்சொல், பகுதி: ப் - கால விடைநிலை, அ - பாலுணர்த்தும் விகுதி. தசை - இதுவே இலக்கணப்போலியாய்ச் சதையென எழுத்துநிலைமாறி வழங்குவது. இந்திரி யம் - மெய் வாய் கண் மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகள். (ருச)

வேறு

55.—மாயயுத்தத்தால்தான் இவனைவெல்லலாமென்று தீர்மானித்து மணிமான் வானத்தி லேறுதல்.

வஞ்சனை புரியுமா மாயப் போர்க்கலாற்
றுஞ்சல னிவனெனத் துணிந்து சூழ்ச்சியா
னஞ்செனவெகுண்டுதன் னயனந் தீயுக
விஞ்சையன் கதுமென விசும்பி லேறினான்.

(இ - ள்.) விஞ்சையன் - வித்தியாதரனான மணிமான், வஞ்சனை புரி யும் மா மாயம் போர்க்கு அலால் இவன் துஞ்சலன் என துணிந்து - வஞ் சனையாற் செய்யப்படுகிற பெரிய மாயையையுடைய யுத்தத்திற் கல்லாமல் (தருமயுத்தத்தில்) இவ்வீமன் இறவானென்று நிச்சயித்து, தன் நயனம் தீ உக நஞ்சு என வெகுண்டு - தனது கண்கள் நெருப்பைச் சொரியும்படி விஷம் போலக் கொடுமையாகக் கோபித்து, சூழ்ச்சியால் - மாயையினால், கது மென விசும்பில் ஏறினான் - விரைவாக ஆகாயத்தில் எழும்பினான்; (எ - று.)

துஞ்சுதல் - தூங்குதல்; இச்சொல்லால் இறத்தலை வழங்குவது, மங்கல வழக்கு. நயநம் - வடமொழி. கதுமென - விரைவுக்குறிப்பு.

இதுமுதற் பத்துக்கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீ ரும், மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (ருரு)

56.—மணிமான் மாயையைமேற்கொண்டு தோன்றுதல்.

*புகையொடுகலந்துகால்பொங்கமங்குல்கள்*
*வகைபடவெழுந்துமாமாரிசிந்திடச்*
*சிகையனல்விண்ணெலாஞ்செகுக்கமண்ணெலாந்*
*துகள்படத்திசையெலாஞ்சூழ்ந்துதோன்றினான்.*

(இ - ள்.) புகையொடு கலந்து கால் பொங்க - புகையோடு கூடிப் பெருங்காற்று எழுந்துவீசவும், மங்குல்கள் வகை பட எழுந்து மா மாரி சிந்திட-மேகங்கள் பலவகையாய் எழுந்துபரவிப் பெரியமழையைப் பொழியவும், சிகை அனல் விண் எலாம் செகுக்க - சுவாலைகளையுடைய அக்கினி ஆகாயத்தினிடமுழுவதையும் அழிக்கவும், மண் எலாம் துகள் பட-பூமிமுழுவதிலுந் தூளியெழும்பவும், (மணிமான்), திசை எலாம் - எல்லாத்திக்குக்களிலும், சூழ்ந்து - பரவிநின்று [வஞ்சனைசெய்து], தோன்றினான்—; (எ - று.)—'புகையொடுகரந்து', 'புகையொடுபரந்து' என்றும்பாடம். (ருசு)

57.—வீமன் வைஷ்ணவாஸ்திரத்தால் மாயையை யொழித்தல்.

*அப்பொழுதினிலிகலரிபதாகனு*
*முப்புரஞ்சுடுமுகினிறத்துவாளிமுன்*
*னொப்பறவருளுடனுதவுஞ்சோரிவாய்*
*வைப்பெரும்பகழியொன்றேவிமாற்றினான்.*

(இ - ள்.) அ பொழுதினில் - அந்தச்சமயத்தில், இகல் அரி பதாகன் உம் - வலிமையையுடைய சிங்கத்தின்வடிவத்தையெழுதின கொடியையுடைய வீமனும், மு புரம் சுடும் முகில் நிறத்து வாளி - திரிபுரத்தையொழித்த அம்பாகிய மேகம்போலுங்கரியதிருநிறத்தையுடைய திருமால், முன் - முன்னொருகாலத்தில், ஒப்பு அற அருளுடன் உதவும் - ஒப்பில்லாதபடி கருணையுடனே கொடுத்தருளின, சோரி வாய் வை பெரு பகழி ஒன்று-பகைவரிரத்தந்தோய்ந்த கூரிய நுனியையுடைய சிறந்தஅம்பொன்றை, ஏவி - (வீமன்) பிரயோகித்து, மாற்றினான்-(மணிமான் செய்த மாயையை) ஒழித்தான் ; (எ - று.)

வீமன் பிரயோகித்தது, வைஷ்ணவாஸ்திரம். விஷ்ணு, வேண்டிய பொழுது மாயையை ஒழித்தருளவல்ல இயல்பின ராதலால், அவரைத்தெய்வமாகவுடைய அஸ்திரம் மாயைக்கு எதிராம். சிவபிரான் திரிபுரசங்காரஞ்செய்தகாலத்தில் பல தேவர்கள் பலவகையாய் உதவிசெய்ய, திருமால் அம்புவடிவமாய்நின்றதை, "குழல்நிறவண்ண நின்கூறுகொண்ட, தழல்நிறவண்ணன் நண்ணார் நகரம், விழநனி மலைசிலை வளைவு செய்தங்கு, அழல்நிறவம்பது வானவனே" என்னும்பெரியாரருளிச்செயலாலுங் காண்க. ஓரம்பு உதவின ஓரம்பு என ஒருசாதுரியந்தோன்றக் கவி கூறினர். வாளியென்றது திருமாலையாதலின், 'முகில்நிறத்து' என்ற அடைமொழி அதற்கு ஏற்றது. ஈற்றடியில் 'இப்பெரும் பகழி' என்றும் பாடம். (ருஎ)

யெறிந்த அம்மணிமானது வடிவமும், பொடி பட - துகளாம்படி, மீளிஉம் - வீரனைவீமனும், கொதித்து - கோபித்து, மூல பங்கயம் மறை முனிவன் வாளியை - (பிரபஞ்சத்தோற்றத்துக்கு) ஆதிகாரணமான (திருமாலின்) நாபீகமலத்தில் தோன்றின வேதம்வல்லவனை (கடவுளைத்) தியானஞ்செய்யுந்தன்மையுள்ள பிரமதேவனது அஸ்திரத்தை, ஆலம்உம் குளிர்வு உற அழல - கொடிய விஷமும் சாந்தமடையும்படி கொதிக்குமாறு, வீசினன் - பிரயோகித்தான் ; (எ - று.)

ஆலம் - ஹாலம்; வடசொல். ஆலமுங் குளிர்வுற - இந்தஅஸ்திரத்தின் கொடுமைக்குமுன் விஷமுங் கொடுமையுடையதன் றென்னும்படி யென்க.

62. பிரமன்வெஞ்சரம்வலிபெற்றவிஞ்சையன்
மருமமெங்கணுஞ்செறிந்துருவமாழ்கியே
யுருமின்வெங்குரலுடனொடுங்கிமண்மிசைக்
கருமுகில்வீழ்ந்தெனக்கலங்கிவீழவே.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) பிரமன் வெம் சரம் - கொடிய அந்தப்பிரமாஸ்திரமானது, வலி பெற்ற விஞ்சையன் மருமம் எங்கண்உம் செறிந்து - வலிமையைக் கொண்ட வித்தியாதரனாகிய அம்மணிமானது மார்புமுழுவதிலும் பரவி, உருவ - அழுந்தித்தைத்துச்செல்லவே, (அவன்), மாழ்கி - மயங்கி, உருமின் வெம் குரலுடன் - இடிமுழக்கம்போன்ற கொடிய கண்டத்தொனியுடனே, ஒடுங்கி - நிலைதளர்ந்து, மண்மிசை - பூமியிலே, கரு முகில் வீழ்ந்து என - கரியமேகம் விழுந்தாற்போல, கலங்கி வீழ - பொறிகலங்கி விழுந்திட, (எ - று.)—வீழவென்னும் வினையெச்சம், மேற்கவியில் 'சாய்ந்தனர்' முதலிய முற்றுக்களோடு முடியும்.

பிரமன்சரம் - பிரமனைத் தெய்வமாகவுடைய அம்பு. மருமம்எங்கணும் - நெற்றி கண்டம் மார்பு முதலிய முக்கியஸ்தானங்கள்எல்லாவற்றிலும் என்றும்உரைக்கலாம் ; மருமம் - உயிர்நிலை. (சுஉ)

63. அந்தரந்தரம்புகவனந்தரம்படைத்
தந்திரத்தலைவருந்தளர்ந்துசாய்ந்தன
ருந்தினர்கரிபரியிரதமூர்புக
முந்தினதமதுயிர்கொண்டுமுந்தினர்.

(இ - ள்.) அனந்தரம் - பின்பு, அந்தரம் தரம் புக - தேவலோகமும் அச்சமடைய, படை - (அவ்வீமனது) ஆயுதங்களால், தந்திரம் தலைவர்உம் - (சாலேந்திரன் முதலிய) சேனைத்தலைவர்களும், தளர்ந்து - நிலைகலங்கி, சாய்ந்தனர் - தோற்றவர்களாய், கரி பரி இரதம் உந்தினர் - யானைகளையுங் குதிரைகளையுந் தேர்களையுஞ் செலுத்திக்கொண்டு, முந்தின தமது உயிர் கொண்டு - (எல்லாப்பொருள்களினுஞ்)சிறந்த தத்தம் உயிரை அழியாது உடன்கொண்டு, ஊர் புக - (தங்கள்நகரமான) அளகாபுரியினுட் செல்லுமாறு, முந்தினர் - (ஒருவரினும் ஒருவர்) முற்பட்டு ஓடினார்கள் ; (எ - று.)

தரம் - அச்சம் : வடசொல். அந்தர னந்தரம் புக என்ற பாடத்திற்கு - தீம்பனாகியமணிமான் வானுலகை யடைய என்க. (சுஙு)

64.—வென்ற வீமசேனன் சிங்கநாதஞ் செய்தல்.

விரிதிரையுவரிநீரென்னவெஞ்சினக்
கரிபரியாளெலாங்கலந்துகுத்தமெய்ச்
சுரிபெருங்குருதியின்சுழலியாற்றினின்
றரிமகனடலரிநாதஞ்செய்யவே.

இதுவும், மேற்கவியும் - குளகம்.

(இ - ள்.) விரி திரை உவரி நீர் என்ன - பரவிய அலைகளையுடைய கடலின் நீர்போல (அளவின்றிப்பரந்த), வெம் சினம் கரி பரி ஆள் எலாம் - கொடிய கோபத்தையுடைய யானைகளுங் குதிரைகளுங் காலாட்களும் எல்லாம், கலந்து மெய் உகுத்த - ஒருங்கு உடம்பினின்று சொரிந்த, சுரி பெரு குருதியின் - (இடையிடையே) சுழிபடுந்தன்மையுள்ள பெரிய இரத்த வெள்ளமாகிய, சுழல் யாற்றில் - நீர்ச்சுழிகளோடுகூடிய நதியிடையிலே, நின்று - நிலைநின்று, அரி மகன் - வாயுகுமாரனான வீமன், அடல் அரி நாதம் செய்ய - வலிய சிங்கநாதத்தைச் செய்ய,—(எ - று.)—'வினவுற்றான்' என மேற்கவியில் இயையும்.

சிங்கநாதம் - சிங்கம் கர்ச்சிப்பதுபோன்ற கர்ச்சனை. உவரி-உவர்ப்புச் சுவையுடையது ; இ - பெயர்விகுதி. (சுச)

வேறு

65.—இங்ஙன் இந்து நிகழ அந்தத் தருமன் வீமனைக்காணாது திரௌபதியை வினவல்.

இத்தலை வயவீம னிகல்பொரு திவணின்று
னத்தலை யுயிர்போலு மனுசனை யெதிர்காணான்
மொய்த்தலை தொறுமேறு முழுமணி முரல்சங்கஞ்
செய்த்தலை துயினாடன் றேவியை வினவுற்றான்.

(இ - ள்.) இ தலை - இவ்விடத்தில், வய வீமன் - வலிமையையுடைய வீமசேனன், இவண் - இவ்விதமாக, இகல் பொருது - போர்செய்து, நின்றான் - நிலைநின்றான்; (அப்பொழுது), அ தலை - அவ்விடத்தில் [பாண்டவர்களுந் திரௌபதியும் வாசஞ்செய்யுங் காட்டில்], மொய்த்து அலைதொறும் ஏறும் முழு மணி முரல் சங்கம் செய்த்தலை துயில் நாடன் - நெருங்கி அலைகள்தோறும் மேலேமேலே தவழ்ந்துசெல்கிற பெரிய முத்துக்களையுடைய ஒலிக்கின்ற சங்குகள் கழனிகளிலே தங்கப்பெற்ற [மிக்கநீர்வளத்தையுடைய] குருநாட்டையுடைய யுதிட்டிரன், உயிர்போலும் அனுசனை எதிர் காணான்-(தனது) உயிரையொத்த தம்பியான வீமனை எதிரிற்காணாதவனாய், தேவியை - (தங்கள்) மனைவியான திரௌபதியை, வினவுற்றான் - (வீமன் எங்கே யென்று) வினவினான் ; (எ - று.)

இவண் - இவ்வண்ணம் என்பதன் விகாரம். அநுஜன்-பின்பிறந்தவன். மூரல்சங்கம் - வினைத்தொகை. செய் - கழனி; வயலைச் செய் என்பது, அருவாநாட்டார் வழங்குந் திசைச்சொல். தலை - ஏழனுருபு. குளகமாகிய 64, 65-செய்யுள்கட்கு முடிபு வருமாறு :—(64) அரிமகனும் (65) இத்தலை இகல்பொருது இவணின்றானுமான உயவீமன் (64) அடல் அரிநாதஞ் செய்ய, (65) நாடன் தேவியை வினவுற்றான் என்பது.

இது முதற் பதினான்குகவிகள் - முதற்சீரும் மூன்றாஞ்சீரும் விளச்சீர்களும் மற்றவை மாங்காய்ச்சீர்களு மாகிய அளவடிநான்குகொண்ட கலி விருத்தங்கள். (சுஞ)

66.—வீமன் சென்றுள்ள செய்தியைத் திரௌபதி தெரிவித்தல்.

மன்னவன்மொழிகேளாமான்மதர்விழிமானு
நன்னதிதனிலின்றோர்நறைமலரதுகாணு
வின்னமுமொருகானீயிம்மலர்கொணர்கென்றே
னன்னவன்விசைசென்றானளகைநன்னகரென்றாள்.

(இ - ள்.) மன்னவன் மொழி கேளா - அந்தயுதிட்டிரராசனது வார்த்தையைக் கேட்டு, மான் மதர் விழி மானும்-மானின்விழிபோன்ற களித்த விழியையுடைய திரௌபதியும், 'நல் நதிதனில் இன்று ஓர் நறை மலர் அது காணு - சிறந்தநதியிலே இன்றைத்தினத்தில் வாசனையுடையதொரு பூவை (நான்)பார்த்து, இன்னமும் ஒரு கால் நீ இ மலர் கொணர்க என்றேன் - இன்னுமொருதரம் நீ சென்று இவ்வகைப்பூவைக் கொணர்ந்துகொடுப்பாயாக வென்று (நான் வீமனை) வேண்டினேன்; (வேண்ட), அன்னவன் - அவ்வீமன், அளகை நல் நகர் - சிறந்த அளகாபுரிக்கு, விசை சென்றான் - வேகமாகப் போனான்', என்றாள் - என்றுசொன்னாள்; (எ - று.)

விழிப்பது-விழி; கண்ணுக்குக் காரணப்பெயர். மான் என்னுஞ்சொல் இரண்டனுள், முன்னது-அதன்நோக்கத்துக்கு முதலாகுபெயர்; பின்னது - பெண்ணென்னுமாத்திரையாய்நின்றது. மான்மதர்விழிமான் என்றதைக் கீழ்ப் புட்பயாத்திரைச்சருக்கத்தின் இறுதிச்செய்யுளில் "மின்புரை மருங்குல் மின்" என்றதுபோலக் கொள்க. (சுசு)

67.—திரௌபதிவார்த்தையைக் கேட்டதும் புலம்புந் தருமனை ரோமசன் தேற்ற, பின்பு தருமன் சில கூறலுறுதல்.

மன்றலில்குழலாடன்வாசகமெனுநஞ்சாற்
பொன்றினனெனமன்னன்புலம்பியபொழுதன்பா
லொன்றியமுனிரோமனுரையெனுமமுதாலே
துன்றியதுனிதீராச்சோகமொடுரைசெய்வான்.

(இ - ள்.) மன்னன் - யுதிட்டிரராசன், மன்றல் இல் குழலாள் தன் வாசகம் எனும் நஞ்சால் - வாசனைக்குஇடமான [இயற்கைநறுமணம் நீங்காத] கூந்தலையுடைய திரௌபதியினது (இங்ஙனங் கூறிய) வார்த்தையாகிய விஷத்தால், பொன்றினன் என - இறந்தவன்போல (நிலைகலங்கி), புலம்பிய

பொழுது - (வீமனைக்குறித்து) அழுதசமயத்தில்,—அன்பால் ஒன்றிய முனி ரோமன் உரை எனும் அமுதால் - அன்போடுபொருந்தின ரோமச முனிவனது வார்த்தையென்கிற அமிருதத்தால், துன்றிய துனி தீரா-பொருந்திய அத்துன்பம் சிறிதுதணிந்து, சோகமொடு - விசனத்துடனே, உரைசெய்வான் - (சில வார்த்தை) சொல்பவனானான்; (எ - று.)—அவற்றை, மேல் மூன்றுகவிகளிற் காண்க.

மன்றலில்குழலாள் என்றதில், இல் - சாரியையுமாம். மன்றல் செய்குழலாளென்றும் பாடமுண்டு. துரியோதனாதியர் நூறுபேரையும் வீமன் கொன்று அவர்களுதிரத்தில் நனைக்கப்படுமளவுந் தனதுகூந்தலை முடித்து அலங்கரிப்பதில்லை யெனத் திரௌபதி சபதஞ்செய்து அங்ஙனமொழுகுபவளாயினும், உத்தமஸ்திரீகளதுகூந்தலுக்கு இயற்கைப்பரிமளம் உண்டென்னும் நூல்வழக்கைக்கொண்டு, இங்கே 'மன்றலில் குழல்' என்றது. இனி, மன்றல் இல் குழல் - (பூச்சூடுதலாகிற) செயற்கைநறுமண மில்லாத கூந்தலென்றுமாம்; இல்குழல் - பண்புத்தொகை. வீமன் முன்போலவே நெடுந்தூரம் பிரிந்துசென்றானென்று திரௌபதி சொன்ன வார்த்தை, பிராணபதமான வீமனுக்கு அபாயம் நேருமோ என்றசங்கையைத் தருமனுக்கு விளைத்து அவனை மரணவேதனைக்கொப்பான மனவேதனையை அடையும்படி செய்ததனால், 'குழலாள்தன் வாசகமெனும்நஞ்சாற் பொன்றினனென' எனப்பட்டது பொன்றினனென என்றதனால், மூர்ச்சையடைந்தன னென்க. அமிர்தம் மரணவேதனையை யொழித்தல்போல ரோமசர் வார்த்தை மரணவேதனைக்கொப்பான தருமனது மனவேதனையைத் தீர்த்ததனால், 'ரோமனுரையெனுமமுதாலே துன்றிய துனிதீரா' என்றது. முனி ரோமன் - பொதுப்பெயர் முன்னாகமாறின இருபெயரொட்டுப்பண்புத்தொகை. ரோமன்-ரோமசன்என்பதன் விகாரம். (சுஎ)

68.—இதுமுதல் மூன்றுகவிகள் - ஒருதொடர்: வீமனைக்குறித்துத் தருமன் மீளவும்புலம்பி உரோமசன்பாதங்களில் விழுதல்.

கூற்றுவனிகர்நாகக்கொடியவன்முதலாயோர்
நூற்றுவரையும்யானேநூறிவிண்ணுலகின்மே
லேற்றுமவ்வளவும்யானின்பயநுகரேனென்
றாற்றுதியுயிரையாவம்மொழிபழுதாமோ.

(இ - ள்.) ஐயா - ஐயனே [வீமா]! 'கூற்றுவன் நிகர் - (கொடுமையில்) யமனையொத்த, நாகம் கொடியவன் முதல் ஆயோர் நூற்றுவரைஉம்-பாம்புக்கொடியையுடைய துரியோதனன் முதலானவர்களாகிய நூறு பேரையும், யான்ஏ - நானொருத்தனே, நூறி - கொன்று, விண் உலகின் மேல் - வீரசுவர்க்கத்தில், ஏற்றும் அ அளவுஉம் - ஏறச்செய்கிற வரையிலும், யான் - நான், இன் பயம் நுகரேன் - இனிமையானதண்ணீரைக் (கையால் எடுத்துக்) குடியேன்,' என்று - என்று சபதஞ்செய்து, உயிர் ஆற்றுதி-(அங்ஙனமே) உன்உயிரை ஓம்பிவருகிறாய்; அ மொழி - அந்தச் சபதவார்த்தை, பழுது ஆம்ஓ - வீணாகுமோ? (எ - று.)

இதுவும், மேற்கவியும் - தருமபுத்திரன் வீமனிடத்துள்ள மிக்க அன்பினால் அவனை எதிரிலிருக்கிறவனாகக் கருதி அவனை முன்னிலைப்படுத்திப் புலம்புவன. இன்பயம்நுகரேன் - தனது கதாயுதத்தால் தண்ணீரைமோதி அதனால்தெறிக்கின்ற நீர்த்துளிகளையே நாவிலேற்று உட்கொண்டு வாழ்வதாக வீமன்பிரதிஞ்ஞை. பயம்-பயஸ் என்னும் வடசொற்றிரிபு. அம்மொழி பழுதாமோ என்றது-நீ இங்ஙனம் அடிக்கடி தையல்சொற்கேட்டுத் தனியே நெடுந்தூரஞ்சென்று வலியவரையெதிர்த்துப் போர்செய்தலில் உனக்கு ஒருகால் அபாயமுளதாயின் அந்தச்சபதம் நிறைவேறுமற்போய்ப் பழியும் பாவமுமாய்முடியுமே யென்னுங் கருத்தால். (சுஅ)

69\. துனைவருகடலாடைசூழ்வருமெழுபூவோ
நனைகெழுமொருபூவோநன்றெனநகைசெய்யா
வுனையொருவனையுமியானுளனெனினொருவேனுக்
கனைவருமுளர்யானுமாருயிருளனம்மா.

(இ - ள்.) துனை வரு - (அலைகள்) நெருங்கி வருகிற, கடல் - கடலாகிய, ஆடை - சேலையினால், சூழ்வரும் - சுற்றப்பட்ட, எழு பூவோ - எழு தீவுகளாகப் பிரிந்துள்ள பூமியோ? நனை கெழும் ஒரு பூவோ - (தேனினால்) நனைந்துவிளங்குகின்ற ஒருமலரோ? நன்று - சிறப்புள்ளது (இவ்விரண்டில் எது)? என - என்றுகூறி, (தருமன்), நகை செய்யா - சிரித்தல்செய்து, உனை ஒருவனையும் யான் உளன் எனின் - உன்னையொருத்தனையும் நான் (அழியாமல்) உடையவனாயின், ஒருவேனுக்கு அனைவரும் உளர் - தனியனானஎனக்கு எல்லோருந் துணையுள்ளவராவர்; யானும் ஆர் உயிர் உளன் - நானும் பெறுதற்கருமையான உயிரை உடையவனாவேன்; (எ - று.)

அம்மா-ஈற்றசை. துனைவரு-வேகத்துடன் சுழன்றுவருகிற என்றலும் உண்டு. பூமியைச்சூழ்ந்துள்ள கடலைப் பூமியாகியபெண் உடுக்கும் ஆடையாகக் கூறுதல், கவிமரபு. பூ என்னுஞ்சொல் - வடமொழியாயிருக்கும்போது பூமியையும், தென்மொழியாயிருக்கும்போது மலரையுங்குறிக்குமாதலால், சிலேடைவகையால் சமத்காரந்தோன்ற 'எழுபூவோ ஒரு பூவோ நன்று' என்றான். 'ஒருபூவைக்குறித்து இங்ஙனஞ்சென்று வலியவரோடுபொருகையில் உன்உயிர் ஒருகால் ஒழியுமாயின், நீ பகைவர்களையொழித்து எழுபூவைப்பெறுவதாகிய இலாபம் போய்விடுமே! இது தகுதியோ?' என்றவாறு. 'எழுபூவோவொருபூவோ நன்று' என்றது, எழுபூவினும் ஒருபூ ஒருபொழுதும் மேலாகா தென்னுங் கருத்தால். பின்இரண்டடி, வீமன் தருமனுக்குப்பிராணபதமான தம்பி யென்பதை விளக்கும். நனைகெழும்பூ - முன்னே அரும்பாகியிருந்து பின்புமலர்ந்துவிளங்குகிற மலரென்றுமாம். இச்செய்யுளில் இரண்டிடத்திலும் உளன் என்றசொல்லில் 'அன்'விகுதி, தன்மையொருமைக்குவந்தது. நகை-இகழ்ச்சி. ஓகாரங்கள்-வினா.

70\. முன்செய்வெவ்வினையாலோ முடிவினல்வினையாலோ
மின்செய்தகழலானவ்விசயனுமகல்வுற்றான்

பொன்செய்தமுடியானும்போயினனினிநானிங்
கென்செய்வதெனமன்னன்முனியடியிணைவீழ்ந்தான்.

(இ - ள்.) 'முன் செய் வெவ் வினையாலோ - முற்பிறப்பில் (யான்) செய்த கொடிய பாவத்தினாலோ? முடிவு இல் நல் வினையாலோ - எல்லையில்லாத நல்ல புண்ணியத்தினாலோ? மின் செய்த கழலான் அ விசயன்உம் - மின்னல்போன்றஒளியைச் செய்கின்ற வீரக்கழலை யுடையவனான அந்த அருச்சுனனும், அகல்வுற்றான் - (முன்பே என்னைவிட்டு) நீங்கினான்; பொன் செய்த முடியான்உம் - பொன்னாற்செய்த கிரீடத்தை அணிதற் கேற்ற வீமனும், போயினன் - (இப்பொழுது என்னைவிட்டுப்) போனான்; இனி நான் இங்கு என் செய்வது - இனிமேல் யான் இவ்விடத்தில் யாதுசெய்யத் தக்கது?' என - என்றுகூறி, மன்னன் - தருமராசன், முனி அடி இணை வீழ்ந்தான் - ரோமசமுனிவரது உபயபாதங்களில் விழுந்துவணங்கினான்; (எ - று.)

நாட்டையிழந்து காட்டில்வசிக்கிற வீமனை 'பொன்செய்தமுடியான்' என்றது, இப்பொழுது கிரீடந்தரித்து அரசாளுகிற துரியோதனன் முதலிய நூறுபேரையுங் கொல்லுதற்கேற்ற ஆற்றலையுடைய இவனை அம்முடிக்கு உரியவ னென்னுங் கருத்தால். ஓகாரங்கள் - ஐயப்பொருளன. அருச்சுனனது பிரிவு தனக்கு மிக்கமனவருத்தத்துக்குக் காரணமாதலால் 'வெவ்வினையாலோ' என்றும், பாசுபதம்முதலிய பலஅஸ்திரசஸ்திரங்களைப் பரமசிவனிடத்தும்இந்திரனிடத்தும் பெற்று அநேகஅசுரரையழித்துப் புகழ் பெறுதற்குக் காரணமாதலின் 'நல்வினையாலோ' என்றும் ஐயமுற்றான். முன்செய்என்ற அடைமொழியை நல்வினையோடும், முடிவில்என்ற அடைமொழியை வெவ்வினையோடும் இயைக்கலாம். முடிவில்வினை-பயன்கொடுத்தன்றி ஒழிதலில்லாத கருமம். (எ0)

71.—இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்: தருமனுக்கு உரோமசர் உறுதிமொழி கூறுவன.

அஞ்சலையுரவோனுமாருயிரழிவில்லான்
விஞ்சையரொடும்வெம்போர்விளைந்ததங்கொருகோடி
வஞ்சனைமணிமானம்மாருதிவிடுமம்பாற்
றுஞ்சினனவன்மேலுந்துனிவருமினிமாதோ.

(இ - ள்.) அஞ்சலை - (நீ) பயப்படாதே; உரவோன்உம் - வலிமையையுடைய வீமனும், ஆர் உயிர் அழிவு இல்லான் - அருமையானஉயிர் அழிதலில்லாமலிருக்கிறான்; அங்கு - அவ்விடத்தில் [அளகாபுரியில்], விஞ்சையரொடுஉம் - வித்தியாதரர்களுடனே, ஒரு கோடி வெம் போர் - ஒருகோடி [மிகப்பல] கொடிய யுத்தம், விளைந்தது - (வீமனுக்கு) நேர்ந்தது; வஞ்சனை மணிமான் - வஞ்சனையையுடைய (இயக்கர்படைத்தலைவனான) மணிமானென்பவன், நம் மாருதி விடும் அம்பால் - நமது வீமன் எய்த பாணத்தால், துஞ்சினன் - இறந்தான்; அவன்மேல் - அத்தகையவீமன்மேல், இனி - இனிமேல், துனிஉம் வரும் - (குபேரனது) கோபமும் உண்டாகும்; (எ - று.)— மாது, ஓ - ஈற்றசை. உம்மை, மாற்றப்பட்டது.

அளகையில் நடந்த செய்கையை முனிவர் தமது ஞானக்கண்ணினால் நோக்கியறிந்து கூறுகின்றாரென்க. ஒருகோடி என்பதை, விஞ்சையரோடும் வஞ்சனையோடுஞ் சேர்ப்பினுமமையும். மாருதிவிடுமம்பு - இங்கே பிரமாஸ்திரம். அ மாருதி எனப் பிரித்து - அங்குச்சென்ற வீமன் எனினுமாம். அவன் மேலுந் து(ன்)னிவருமினி என்பதற்கு - அவ்வீமன் இனி இதற்கு மேலும் (அங்கு) நெருங்கிச்செல்வா னென்றும் பொருள் கொள்ளலாம். (எக)

72 —உரோமசர் குபேரனதுநகர்க்கு விரைவாய்ச்செல்லுதற்காகக் கடோற்கசனை நினைக்குமாறு கூற, தருமன் அவனை நினைத்தல்.

இவன்மிசையிடையூறொன்றெய்துறுவதன்முன்யா
நவநிதிகளினாதனன்னகருறவேண்டுங்
கவரெயிறுளபேழ்வாய்க்கடோற்கசன்வருமாறிங்
கவனிபநினையென்றானரசனுநினைவுற்றான்.

(இ - ள்.) இவன்மிசை - இவ்வீமன்மேல், இடையூறு ஒன்று-(குபேரனாலாகிற) துன்பமொன்று, எய்துறுவதன் முன் - சேர்வதற்குமுன்னமே, யாம் - நாம், நவநிதிகளின்நாதன் நல் நகர் உற வேண்டும் - ஒன்பது வகை நிதிகளுக்குந் தலைவனான குபேரனது சிறந்த அளகாபுரியை அடைதல் தகுதி; (அதன்பொருட்டு), கவர் எயிறு உள பேழ் வாய் கடோற்கசன் வரும் ஆறு-(உயிர்களை உடம்பினின்று) கொள்ளுதற்கேற்ற பற்களையுடைய திறந்த வாயையுடைய கடோற்கசன் இங்குவரும்படி, இங்கு - இப்பொழுது, அவனிப - அரசனே ! நினை - (அவனைமனத்தில்) நினைப்பாய், என்றான்-என்று (ரோமசமுனிவர் தருமபுத்திரனுக்கு) நியமித்தார்; (அங்ஙனமே), அரசன்உம்-தருமராசனும், நினைவுற்றான் - எண்ணினான்; (எ - று.)

யாம் - நீயும் நானும் நகுல சகதேவரும் பாஞ்சாலியும் ஆகிய அனைவருமென்க: முன்னிலையையும் படர்க்கையையும் உளப்படுத்திய தன்மைப் பன்மை. நவநிதி - மகாபதுமம், பதுமம், சங்கம், மகரம், கச்சபம், முகுந்தம், குந்தம், நீலம், வரம் என்பன. வேண்டும் - இன்றியமையாமைப்பொருளது. பலவகையொலியாற் கிரிகுகை பிரதித்தொனிசெய்யவே, வீமசேனனைக் காணாமல் வருந்திப் பாண்டவர் நால்வரும் கந்தமாதன மலையினுச்சியிலேறி வீமனிருக்குமிடத்தைச் சார்ந்தன ரென்று முதனூல் கூறும். (எஉ)

73.—உடனே கடோற்கசன் வந்து 'பணியாது?' என, தருமன் வீமன் நிலையைக்கூறுதல்.

புந்திசெய்தவன்முன்னம்புதல்வனுமொருதேர்மேல்
வந்தனன்விரைவோடும்வணங்கினனிருதாண்மே
லெந்தைசொலடிநாயேன்பணிவிடையெதுவென்றான்
றந்தையுகிருதன்றன்றாதைதனிலைசொன்னான்.

(இ - ள்.) புந்தி செய்தவன் முன்னம் - (இங்ஙனந் தன்னை) நினைத்தல்செய்த தருமனது எதிரில், புதல்வன்உம் - (வீமனது) குமாரனான கடோற்கசனும், ஒரு தேர்மேல் விரைவோடுஉம் வந்தனன் - தனது ஒரு தேரின்மேலேறித் துரிதமாகவந்து, இரு தாள்மேல் வணங்கினன் - (தரும

னது)உபயபாதங்களின்மேல் விழுந்துநமஸ்கரித்து, 'எந்தை-என்தந்தையே! சொல் - சொல்வாய்; அடி நாயேன் பணிவிடை எது - (உனது) அடியவனும் நாய்போற்கடைப்பட்டவனுமான எனக்கு (நீ) நியமிக்குங் கட்டளை யாது?' என்றான் - என்று (தருமனை நோக்கிக்) கூறினான்; தந்தைஉம் - (அவனது பெரிய) தாதையான தருமனும், நிருதன்தன் தாதைதன் நிலை சொன்னான் - அரக்கனான அக்கடோற்கசனது தந்தையான வீமனது நிலைமையை (அவனுக்கு)க் கூறினான்; (எ - று.)

'புந்திசெய்வதன்முன்னம்' என்ற பாடத்துக்கு - (தன்னை அவன்) நினைத்தற்குமுன்பே யென்க; மிகவிரைவில் என்றபடியாம். நாயேன் - மிக்க பணிவாற் கூறும் வார்த்தை. (எங)

74.—கடோற்கசன் யாவரையும் தேரிலேற்றிக்கொண்டு அளகாபுரிக்கு வானமார்க்கமாகச் செல்லுதல்.

அக்கணமதுகேளாவவரனைவரையுங்கொண்
டிக்கணமிடையூறுமெழுமெழுமெழுமென்று
முக்கணனுயிர்நண்பன்வாழ்தருமூதூர்வாய்த்
திக்குறநெடுவானிற்சென்றனனொருதேர்மேல்.

(இ - ள்.) அது கேளா - அந்தத்தருமன்வார்த்தையைக்கேட்டு, 'இடையூறு ஆம் - (என்தந்தைக்குத்) துன்பம் உண்டாகக்கூடும்; இ கணம் - இப்பொழுதே, எழும் எழும் எழும் - மிகவிரைவாகப் புறப்படுங்கள்,' என்று - என்றுகூறி, அவர் அனைவரைஉம் - (தருமன்முதலிய) அவர்களெல்லோரையும், ஒரு தேர்மேல் கொண்டு - ஒப்பற்ற தனதுதேரின்மேல் ஏற்றிக்கொண்டு, முக்கணன் உயிர் நண்பன் வாழ்தரு முது ஊர் வாய் திக்கு உற - மூன்றுதிருக்கண்களையுடைய சிவபெருமானது பிராணசிநேகிதனான குபேரன் வாழ்கிற பழமையான அளகாபுரி பொருந்திய வடதிசையிற் சேரும்படி, நெடு வானில் - பெரிய ஆகாயமார்க்கத்திலே, அ கணம்-அப்பொழுதே, சென்றனன் - போனான்; (எ - று.)

இக்கணம்என்பதை இடையூறும் என்பதனோடும் இயைக்கலாம். எழும் என்ற முற்று முக்கால்அடுக்கினது, விரைவுபற்றி. சூரியன் வலக்கண்ணும், சந்திரன் இடக்கண்ணும், அக்கினி நெற்றிக்கண்ணுமாக இறைவனுக்குக் கண்மூன்றும் முச்சுடராம். வாய் திக்கு - வினைத்தொகை. (எச)

75.—வீமனிருக்குங் களத்தைச் சேர்ந்ததும், மலர்தூவித் தருமனை வீமன் வணங்குதல்.

சென்றொருநொடிவேலைச்சிறுவனுமறவீம
னின்றமர்புரிவெம்போர்நிலமணுகுறுமுன்னம்
வென்றிகொளுரவோனும்வேந்தனையெதிர்கொள்ளா
மன்றல்கொண்மலர்தூவிவணங்கினனிருதாண்மேல்.

(இ - ள்.) சிறுவன்உம் - குமாரனான கடோற்கசனும், ஒரு நொடி வேலை - ஒருமாத்திரைப்பொழுதினுள்ளே, சென்று - போய், மறம் வீமன் நின்று அமர் புரி வெம் போர் நிலம் - பராக்கிரமத்தையுடைய வீமசேனன்

சலியாதுநின்றுபோர்செய்கிற கொடிய யுத்தகளத்தை, அணுகுறும் முன்னம்-சேர்வதற்குமுன்பு [சேர்ந்தவுடனே யென்றபடி],—வென்றி கொள் உரவோன்உம் - வெற்றியைக்கொண்ட வலிமையையுடைய வீமனும், வேந்தனை எதிர்கொள்ளா - தருமராசனை எதிர்கொண்டுஉபசரித்து, இரு தாள்மேல் - (அவனது) உபயபாதங்களின்மேல், மன்றல் கொள் மலர் தூவி - வாசனையைக்கொண்ட பூக்களைச் சொரிந்து, வணங்கினன்-நமஸ்கரித்தான்; (எ-று.)

76.—இக்கவி-தருமன் வீமனைநோக்கிக் கூறும் வார்த்தை.

சதித்தனைசதிசெய்தாய்தம்பியுமலைவாளா
வதைத்தனைமணிமான்றன்மன்னுயிர்தனைமன்றே
நிதித்தலைவனுநீடுஞ்சேனையுமினிநின்மேற்
கொதித்தெழுமுதனளிற்கோபமுமுளதந்தோ.

இதுவும், மேற்கவியும்-ஒருதொடர்.

(இ - ள்.) சதித்தனை - (எனக்குத்தெரியாமல்) வஞ்சனையாக இங்கு வந்து இத்தொழில்செய்தாய்; சதி செய்தாய் தம்பிஉம் அலை - (இங்ஙனம்) வஞ்சனைசெய்த நீ (எனக்குஏற்ற) தம்பியும் ஆகமாட்டாய்; வாளா - வீணாய், மணிமான்தன் மன் உயிர்தனை - மணிமானினுடைய நிலைபெற்ற உயிரை, வதைத்தனை - ஒழித்தாய்; நிதி தலைவன்உம் - நவநிதிகளுக்குத்தலைவனான குபேரனும், நீடும் சேனைஉம் - (அவனது) பெரிய சைனியமும், இனி நின் மேல் கொதித்து எழும்-இப்பொழுது உன்மேற் கோபித்துப் போர்செய்ய வரும்; முதல் நாளில் கோபம்உம் உளது-(உன்மேல் அவர்களுக்கு நீ) முன்னொருநாள்செய்த காரியத்தா லாகிய கோபமும் இருக்கிறது; அந்தோ - ஐயோ! (எ - று.)—மன், ஒ - அடியிறுதியில்வந்த அசை.

அந்தோ - இரக்கக்குறிப்பிடைச்சொல்; இது - ஹந்த என்னும் வடசொல்லின் சிதைவு. சதித்தல் - வஞ்சனைசெய்தல். சதிசெய்தாய்-முன்னிலையொருமைத் தெரிநிலைவினையாலணையும்பெயர். எழும் - செய்யுமென்முற்று, உயர்திணையாண்பாலோடு அஃறிணையொன்றன்பாலுக்கு வந்தது. (எசு)

77.—தருமன் வீமன்மீதுசினந்துகூறிக்கொண்டிருக்கும்போது அங்குநிகழ்ந்ததைக் குபேரனிடஞ்சொல்ல ஒருதூதுவன் செல்லல்.

பொற்றொடிமொழியாலிப்போதொருபொருளாக்கிச்
செற்றனைசிவனண்பன்சேனையைநீயென்னக்
கொற்றவனிளையான்மேற்கொதித்தனமொழிபோதங்
குற்றதையுரைசெய்வானோடினனொருதூதன்.

(இ - ள்.) பொன் தொடி மொழியால் - பொன்னினாலாகிய தொடியென்னும் வளையையுடைய மனைவியினது வார்த்தையைக் கேட்டு அதனால், இ போது ஒரு பொருள் ஆக்கி - (எளிய) இந்தப்பூவை ஒருபெரும் பொருளாகக்கருதி, சிவன் நண்பன் சேனையை - சிவனதுசிநேகிதனான குபேரனது சேனையை, நீ—,செற்றனை - அழித்தாய், என்ன - என்று, கொற்றவன் - வெற்றியையுடைய தருமன், இளையான்மேல் - (தன்) தம்பியான

வீமன்மேல், கொதித்தன-கோபமுள்ள சிலவார்த்தைகளை, மொழி போது - சொல்லுகிறபொழுதில்,— அங்கு உற்றதை உரைசெய்வான் - அவ்விடத்தில் [அப்பொழுது] நடந்த இச்செய்கையைச் சொல்லும்பொருட்டு, ஒரு தூதன்—,ஓடினன் - (குபேரனிடம்) விரைந்துசென்றான்; (எ - று.)

பொற்றொடி - வேற்றுமைத்தொகையன்மொழி. (எஎ)

78.—சென்ற தூதுவன் போர்க்களத்து நிகழ்ந்ததையெல்லாங் குபேரனிடங்கூறுதல்.

அழுதறல்குதிபாயுங்கண்ணினனயிலம்பா
லுழுதுடன்முழுதெல்லாமுடனுகுசெம்புண்ணீர்
வழிதரமனமெல்லாமறுகுறவிறைபொற்றா
டொழுதனனியல்பெல்லாந்துணிவுறும்வகைசொன்னான்.

(இ - ள்.) (சென்ற தூதுவன்),—அழுது அறல் குதி பாயும் கண்ணினன் - (தனது இனத்தவர்பலரும் அழிந்த சோகத்தால்) புலம்பி அச்சோகக்கண்ணீர்பெருகுகின்ற கண்களையுடையவனாய், அயில் அம்பால் உழுது உடல் முழுது எல்லாம் உடன் உகு செம் புண்ணீர் வழிதர - கூர்மையான வீமனம்பினாலே தைக்கப்பட்டு(த் தனது) உடம்புமுழுவதிலும் எங்கும் ஒருங்கு பெருகுகிற சிவந்த இரத்தஞ் சொரியவும், மனம் எல்லாம் மறுகுற - (தனது) மனம்முழுவதுங் கலங்கவும், இறை பொன் தாள் தொழுதனன் - (தனது) தலைவனான குபேரனது அழகிய பாதங்களை வணங்கி, இயல்பு எல்லாம் - நடந்தசெய்கைமுழுவதையும், துணிவு உறும் வகை - நிச்சயமாக அறியும் படி, சொன்னான் - கூறினான்; (எ - று.)

புண்ணீர் - புண்ணோடு சம்பந்தப்பட்ட நீர்; எனவே, இரத்தமாம். எல்லாம் என்பது, இங்குப் பலபொருள்குறியாது ஒருபொருளின் பலவிடங் குறித்து நின்றது. அம்புபடும்பொழுதே புண்ணும் உடனேநிகழுமென்க. ஊனுடனுகுபுண்ணீர் என்றும் பாடம். (எஅ)

வேறு

79.— குபேரன் சினந்து சிலகூறலுறுதல்.

அழுங்கினான் மன்னனல் லறிவு மாவியு
மழுங்கினான் வடிவமு முடியும் வல்விடம்
விழுங்கினா னெனநனி வெகுண்டு நெஞ்சுறப்
புழுங்கினா னிவையிவை புகறன் மேயினான்.

(இ - ள்.) (இங்ஙனந் தூதன்சொன்ன வார்த்தையைக் கேட்டு), மன்னன் - ராஜராஜனெனப்படுகிற குபேரன், வல் விடம் விழுங்கினான் என - கொடிய விஷத்தை யுட்கொண்டவன்போல, நல் அறிவும் ஆவியும் அழுங்கினான் - நல்லஉணர்ச்சியும் உயிரும் ஒடுங்கினவனாய், வடிவமும் முடியும் மழுங்கினான் - (தனது) உடம்பும் தலையும் ஒளிவேறுபட்டு, நனி வெகுண்டு - மிகவுங்கோபித்து, நெஞ்சு உற புழுங்கினான் - மனம்மிகக்கொதித்து, இவை

இவை புகறல் மேயினன் - இந்தஇந்தவார்த்தைகளைச் சொல்லுதலைப் பொருந்தினன்; (எ - று.)—அவற்றை மேல் நான்கு கவிகளிற் கூறுகிறார்.

இதுமுதல் இருபத்துநான்கு கவிகள் - இச்சருக்கத்தின் ஐம்பத்தைந் தாங்கவிபோன்ற கலிவிருத்தங்கள். (எகூ)

80.—இதுமுதல் மூன்று கவிகள் - குபேரன்சினந்துகூறுவன.

ஒருவனுமானுடனோதைமாநகர்
வருவனும்விறன்மணிமானெடுஞ்சமர்
பொருவனுமவனுயிர்பொன்றவென்றிடர்
தருவனுமென்பெயர்தனதனுகுமாம்.

நான்குகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) மானுடன் ஒருவன் ஆம்-யாரோ ஒரு தனிமனிதனும்; ஓதை மா நகர் வருவன் ஆம் - மதில்சூழ்ந்த சிறந்த(நமது) அளகாபுரிக்கு (அவன்) வந்திடுவனும்; விறல் மணிமானொடுஉம் சமர் பொருவன் ஆம் - வெற்றியை யுடைய மணிமானுடனே போர்செய்வானும்; அவன் உயிர் பொன்ற வென்று இடர் தருவன் ஆம் - அம்மணிமானது உயிர் ஒழியும்படி சயித்து (நமக்கு)த் துன்பத்தை விளைப்பானும்; (இப்படியிருக்க), என் பெயர் தனதன் ஆகும் ஆம்-என்னுடையபெயர் தனதனெனப்படுவதாம்; (எ - று.)

இக்கவியிலுள்ள ஆம்என்னுஞ்சொற்கள் பலவும், வியப்புப்பொருளோடு அலட்சியத்தையுங் குறிக்கின்றன ; "கைத்தோ டுஞ்சிறை கற்போயை, வைத்தோ னின்னுயிர் வாழ்வானும், பொய்த்தோர் வில்லிகள் போவாராம், இத்தோ டொப்பதி யாதுண்டே" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க; வருகிற இரண்டுகவிகளிலும் இவ்வாறே. வருவன், பொருவன், தருவன் என எதிர்காலத்தாற்கூறினது, அச்செய்கைகள் அசம்பாவிதமானவை யென் பதை விளக்கும். ஓதைமாநகர் என்றதனால், அந்நகரியின்காவல் எவர்க்குங் கடத்தற்கரிய தென்றும், அதனைவீமன் கடந்துவந்தது வியக்கத்தக்க தென் றும் விளங்கும். இனி, ஓதை - பலவகைஓசைகளையுடைய வென்றும் உரைக் கலாம். என்பெயர்தனதனுகுமாம் என்றது, எனது மிகப்பிரசித்தமான பெய ரின் சிறப்புக்குச் சிறிதும் ஏற்பதன்று இச்செய்கைகள்நிகழ்வது என்ற வாறும். தநதன் - செல்வத்தைக்கொடுப்பவன் : வடசொல். (அ0)

81\. அடுப்பனுமளகையையறிவின்மானுடன்
றொடுப்பனும்பொருசரஞ்சூழ்ந்தசேனையைப்
படுப்பனுமதுகொடுபதுமந்தன்னைவந்
தெடுப்பனுமென்பெயரிராசராசனும்.

(இ - ள்.) அறிவு இல் மானுடன் - விவேகமில்லாத ஒருமனிதன், அளகையை அடுப்பன் ஆம் - (நமது) அளகாபுரியைச் சேருவானும் ; பொரு சரம் தொடுப்பன் ஆம் - போர்செய்வதற்குரிய அம்புகளை எய்வானும் ; அது கொடு - அவ்வம்பினால், சூழ்ந்த சேனையை படுப்பன் ஆம் -(தன்னைச்) சூழ்ந்த (நமது) சேனையை அழிப்பானும்; பதுமந்தன்னை வந்து எடுப்பன் ஆம்-வந்து

தாமரைப்பூவை எடுத்துக்கொள்வானும்; (இப்படியிருக்க), என் பெயர் இராசராசன்ஆம் - எனதுபெயர் இராசராசனெனப்படுவதாம்; (எ - று.)

எனது இராசராசனென்கிற பிரசித்தமானபெயருக்குப் பொருந்துவன வல்ல, இத்தொழில்களென்பதாம். ராஜராஜனென்னும் வடசொல்லுக்கு - இயக்கர்க்கு அரசனென்று பொருள்: ராஜர் - யக்ஷர். (அக)

82. இந்திரனல்லனுமீசனல்லனுஞ்
சந்திரனல்லனுந்தபனனல்லனும்
வந்தொருவலியிலாமானுடன்கொலாங்
கந்தருவரையெலாங்களத்திறுறுவான்.

(இ - ள்.) (வந்த ஆள்), இந்திரன் அல்லன்ஆம் - தேவேந்திரனல்லனும்; ஈசன் அல்லன்ஆம் - சிவபெருமானல்லனும்; சந்திரன் அல்லன்ஆம் தபனன் அல்லன்ஆம் - சந்திரசூரியரல்லனும்; ஒரு வலி இலா மானுடன்கொல் ஆம் - வலிமையில்லாத ஒருமனிதனும்; வந்து - (இங்கு) வந்து, கந்தருவரை எலாம்—, களத்தில் நூறுவான் - போர்க்களத்தில் அழிப்பானும்; (எ - று.)

முன்னிரண்டடிகளால், இந்திரன்முதற் கூறப்பட்ட நால்வரே தனது நகரத்தில் தடையின்றி வரத்தக்கவ ரென்பது விளக்கும். இந்திரன் தேவ ராசனாதலாலும், சிவன் குபேரனுக்குநண்ப னாதலாலும், சந்திரசூரியர் எங்கும் எப்பொழுதுஞ் சஞ்சரிக்குந்தன்மைய ராதலாலும் இவர்கள் அங்குச் செல்லத்தக்கவராவரென்க. தபநன் என்னும் வடசொல்லுக்கு - தபிப்பவன் [வெய்தாய்விளங்குபவன்] என்று பொருள். ஒருவலியிலாமானுடனென்றது, மனிதகணத்தாரின்ஆற்றல் தேவகணத்தாரின்ஆற்றலினுங் குறைவுபாடுடைய தென்னுங் கருத்தால். (அஉ)

83.—தேவகணங்களுடன் குபேரன் போர்க்குஎழுதல்.

வென்றகோச்சித்தரும்விஞ்சைவேந்தரு
நின்றகின்னரரும்வாணிருதரும்புடை
துன்றுசாரணர்களுஞ்சூழ்மின்மொய்ம்பனை
யென்றுகொண்டெழுந்தனனியக்கர்தம்பிரான்.

(இ - ள்.) வென்ற - (இதுவரையிற் பலபோர்களிற் பகைவரை) வெற்றிகொண்ட, கோ சித்தர்உம் - மேன்மையையுடைய சித்தசிரேஷ்டர்களும், விஞ்சை வேந்தர்உம் - வித்தியாதரத்தலைவர்களும், நின்ற கின்னரர்உம் - மேம்பட்டுநின்ற கின்னரர்களும், வாள் நிருதர்உம் - (எப்பொழுதும்) படைக்கலமேந்துந்தன்மையுள்ள அரக்கர்களும், புடை துன்று சாரணர்கள்உம் - பக்கங்களிற்பொருந்தின சாரணர்களும், (ஆகிய நீங்கள்எல்லோரும்), மொய்ம்பனை - வலிமையையுடைய அம்மனிதனை, சூழ்மின் - வளைந்துகொள்ளுங்கள், என்று கொண்டு - என்றுசொல்லிக்கொண்டே, இயக்கர் தம்பிரான் - யக்ஷர்களது அரசனான குபேரன், எழுந்தனன் - (போருக்குப்) புறப்பட்டான்; (எ - று.)

இக்கவியில் சித்தர்முதல் இயக்கரீறாகச் சொல்லப்பட்ட அறுவகையோரும், பதினெண்தேவகணத்துட்பட்டவரென்க. வென்றகோச்சித்தரும் ......சூழ்மின் - முன்னிலைப்பன்மைக்கை இடவழுவமைதி. (அரு)

84.—உருத்திரசேனனென்பது குபேரகுமாரன் குபேரனை நோக்கிக் கூறத்தொடங்குதல்.

உருத்திரசேனனப்பொழுதுணர்ந்துதன்
கருத்தொடுதாதைபொற்கழல்வணங்கியே
மருத்தருள்பவன்வரலாறுமற்றவன்
திருத்தகுதுணைவர்தஞ்செயலுங்கூறுவான்.

(இ - ள்.) அப்பொழுது —, உருத்திரசேனன் - ருத்திரசேனனென்னுங் குபேரகுமாரன், உணர்ந்து - (தன் தாதையின் கருத்தை) அறிந்து, தன் கருத்தொடு - தனது விருப்பத்துடனே, தாதை பொன் கழல் வணங்கி - தன் தந்தையான குபேரனது அழகியபாதங்களை நமஸ்கரித்து, மருத்து அருள் பவன் வரலாறும் - வாயு பெற்றமகனான வீமனது செய்திகளையும், அவன் திருத்தகு துணைவர்தம் செயலும் - அவ்வீமனது மேன்மைபொருந்திய உடன்பிறந்தவர்களது செய்கைகளையும், கூறுவான் - சொல்பவனானான்; (எ - று)—அவை மேல் ஆறு கவிகளிற் கூறப்படும். மற்று-அசை. (அச)

85.—ஆறுகவிகள்-உருத்திரசேனன் கூறிய பாண்டவர் வரலாறு முதலியன.

எந்தைகேளிவனையானுடனென்றெண்ணலை
முந்தைமுப்புரம்பொடிபடுத்தமூர்த்திதன்
சிந்தையாலைவரிந்திரரைச்சென்மென
வந்தனர்நிலமகள்வருத்தமாற்றுவான்.

அறுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) எந்தை - என்தந்தையே! கேள் - (யான் சொல்வதைக்) கேட்டருள்வாயாக; இவனை மானுடன் என்று எண்ணலை - இவ்வீமனைச் சாதாரணமனிதனென்று நினையாதே; முந்தை முப்புரம் பொடி படுத்த மூர்த்தி - பழமையான திரிபுரத்தைச் சாம்பலாக்கின சிவபிரான், தன் சிந்தையால் - தனது திருவுள்ளக்கருத்தோடு, ஐவர் இந்திரரை - இந்திரர்கள் ஐந்துபேரை, சென்ம் என - (பூமியிற்)சென்று பிறவுங்கள் என்றுநியமிக்க, (அவர்கள் அப்படியே), நிலம் மகள் வருத்தம் மாற்றுவான் - (கொடியவர் பலர் தன்மீது ஒருங்குவாழ்தலாலுண்டான) பூமிதேவியினது பாரவருத்தத்தை ஒழிக்கும்பொருட்டு, வந்தனர் - (மனிதராய்) வந்துபிறந்தார்கள்.

இவ்வைவரே பஞ்சபாண்டவராவர். செல்லும் என்னும் ஏவற்பன்மைச் செய்யுமென்முற்று, ஈற்றுயிர்மெய்கெட்டு அதற்கயலிலுள்ளலகரமெய் னகரமாத்திரிந்து மகரக்குறுக்கமாய்'சென்ம்' என நின்றது.

இதிற்குறித்த கதை வருமாறு:—முற்காலத்தில் நாளாயணியென்ற ஒருத்தி, மௌற்கல்யனென்பவனை மணஞ்செய்துகொள்ள, அவன் அவளது கற்புறுதியையும் அன்புடைமையையுஞ் சோதிக்கக்கருதி மிகுந்த குஷ்டநோயும் அதனாற் சிதைந்தவடிவமும் அதிககிழத்தனமும் எப்பொழுதும் பெருங்கோபமும்

உடம்பில் துர்க்கந்தமும் உடையவனாய்த் தன்னைக் காட்ட, அப்பொழுதும் அவள் அவன்பக்கல் அன்புசிறிதுங் குறையாமல் பலவகையுபசாரங்களையும் வழுவாது நன்மனத்தோடு புரிந்து முறைப்படி அவனுண்டுமிகுந்தஎச்சிலைத் தானுண்டு வாழ்ந்திருக்கையில், ஒருநாள் அவனுண்டமிச்சிலில் அவனுடைய விரலொன்று அற்றுவிழுந்துகிடக்கக் கண்டும் கிஞ்சித்தும்அருவருப்புக் கொள்ளாமல் அதனை யெடுத்துவைத்துவிட்டு அவ்வுணவை அன்போடு உண்ண, அங்ஙனம் அவள் நிலைதலையாது வழிபட்டுவந்ததை அவன் பார்த்து மிகுந்ததிருப்திகொண்டு தனது நோய்வடிவத்தையொழித்துத் தவமகிமையால் காமனினும் அழகிய வடிவங்கொண்டு அவளைநோக்கி 'நினக்கு வேண்டும் வரம் வேண்டுவாய்' என்ன, அவள் வேறொருவார்த்தையுங் கேளாமல் 'உன் அன்பு எப்பொழுதும் நீங்காதாகுக' என்றுசொல்ல, அங்ஙனமே அவன் உடன்பட்டு ஐந்துவடிவங்கொண்டு இவளை அனுபவிக்க, இவ்விருவரும் நெடுங்காலம் நீங்காமற் பெரும்போகம் நுகர்ந்தபின், நாளாயணி விதிவசத்தால் இறந்து மறுபிறப்பில் இந்திரசேனையென்னும்பெயருடையவளாய் அவனைச் சேர்தற்குவர, அப்பொழுது அவன் பெருந்தவஞ்செய்யுங் கருத்துடையவனாய் அவளுக்கு இடங்கொடாதுவிட்டுச்செல்ல, அப்பொழுது இவள் அவனை 'யான் இனி என்செய்வது? என்றுவினவி அவன் கட்டளையிட்டபடி அர்த்தநாரீசுவரமூர்த்தியைநோக்கித் தவஞ்செய்ய, அந்த ஐந்துமுகக் கடவுள் பிரதியக்ஷமாகையில், இவள் 'எனக்குஏற்ற கணவனைத் தருக' என்று அன்பால் ஐந்துதரம் அடுக்கிச்சொல்லி வேண்ட, சிவபிரானும் 'அப்படியேயாகுக' என்று ஐந்துதரங்கூறி அவள் ஐந்துகொழுநரைப்பெறும்படி அனுக்கிரகிக்க, அதற்கு அவள் மகிழாமல் தக்கவொருநாயகனைத் தரும்படி பிரார்த்திக்க, பரமசிவன் "நீ ஐந்துதரம் வேண்டியபடி நான் உனக்கு ஐந்துதரம் அருளியது தவறாது; ஆனால் அவ்வரத்தை மறுபிறப்பில் அனுபவிக்கும்படி அருள்செய்கிறோம்" என்று அநுக்கிரகித்து, அவளைக் கங்காநதியில் மூழ்கி வரும்படிசொல்ல, அவ்வாறே சென்ற அவளது விழிகளினின்று (அப்பொழுதே ஒருபதியைப்பெறாமல் மறுபிறப்பில் ஐந்துபதிகளைப் பெறவேண்டுதல் பற்றிய) சோகத்தாற் பெருகிய கண்ணீர் கங்கையில் விழுந்து பொற்றாமரைமலரான புதுமையை அங்குவந்த தேவேந்திரன் பார்த்து அதிசயித்து 'இதுஎன்ன?' என்றுவினவி அவளைத்தொடர்ந்துசெல்லுகையில் அங்குநின்ற சிவபிரானை மதியாது அலட்சியஞ்செய்ய, உருத்திரமூர்த்தி கோபங்கொண்டு அவனதுசெருக்கையடக்கி இங்ஙனமே முன்செருக்குற்றுப் பின்புஅடக்கப்பட்டுப் பிலத்தில் அடைத்துவைக்கப்பட்டுள்ள நான்குஇந்திரர்களையும் அவனுக்குக் காட்டி, 'நீங்கள்ஐவீரும் பூலோகத்தில் மனுஷ்யராசராய்ப்பிறந்து இராசகன்னிகையாகமறுபிறப்பெடுக்கும் இவளொருத்தியை மணம்புரிந்துகொண்டு துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்து குற்றந்தீர்ந்து மீண்டும் விண்ணுலகடைவீர்' என்று ஆஜ்ஞைசெய்ய, அங்ஙனமே புதியஇந்திரன் அருச்சுனனாகவும் பழையஇந்திரர்நால்வரும் மற்றைஅவனுடன்பிறந்தவராகவும் தேவகுமாரராய்க் குந்திமாத்திரிதேவியரிடம் பிறந்து அவ்விந்திரசேனை

யின் அவதாரமான திரௌபதியை ஒருங்கு விவாகஞ்செய்து வாழ்ந்தன ரென்பது. இதனைக் கீழ்த் திரௌபதிமாலையிட்டசருக்கத்திற்காண்க. இந்திரனாரவர் - விசுவபுக், பூததாமா, சிபி, சாந்தி, தேஜஸ்வீ எனப்படுவர்.

86. தருமனென்றவனிபன்றம்பியும்மிவன்
வரிசிலைவிசயனென்றொருவன்மற்றவன்
புரிதிறலசுரரைப்பொருதங்கிந்திரன்
றிருவமருலகெலாந்திருத்திவைகினான்.

(இ - ள்) இவன் - இவ்வீமன்,— தருமன் என்ற அவனிபன் - தருமபுத்திரனென்று சொல்லப்படுவானது, தம்பிஉம் - தம்பியாவன் ; வரி சிலை விசயன் என்ற ஒருவன் - கட்டமைந்த வில்லையுடைய அருச்சுனனென்ற ஒருவன், மற்றவன் - இன்னொரு தம்பியாவன்; (அவன்), திறல் புரி அசுரரை பொருது - வலிமையைக்காட்டுகின்ற அசுரர்களைப் போர்செய்து அழித்து, இந்திரன் திரு அமர் உலகு எலாம் - தேவேந்திரனுடைய செல்வம்மிகுந்த சுவர்க்க லோகம் முழுவதையும், திருத்தி - (பகையச்சமில்லாதபடி) சீர்ப்படுத்தி, அங்கு - அவ்விடத்தில் [தேவலோகத்தில்], வைகினான் - தங்கியுள்ளான்; (எ - று.)

என்றவனிபன், என்றொருவன் - விகாரம். பொருது - கொன்று; காரியம் காரணமாக உபசரிக்கப்பட்டது. தம்பியும், உம் - எச்சம். (அசு)

87. வேடமோமாநுடம்வெகுண்டபோதலா
லாடவர்பெருமையையறியலாகுமோ
நாடியசிறுகுறளொன்றுநம்பகே
ணீடியமுகடுறநிமிர்ந்ததில்லையோ.

(இ - ள்.) வேடம்ஓ - (இவன்கொண்ட) வடிவமோ, மாநுடம் - மனிதவடிவம்: வெகுண்ட போது அலால் - கோபித்தபொழுதிலல்லாமல், (மற்றைப்பொழுதில்), ஆடவர் பெருமையை அறியல் ஆகும்ஓ - ஆண்மக்களது மகிமையை அறியமுடியுமோ ? [முடியாதன்றோ ?]; நம்ப கேள் - ஐயனே ! கேட்டருள்வாய் : நாடிய சிறு குறள் ஒன்று - (இதுஎத்தன்மையதென்று) ஆராய்தற்குரிய சிறிய வாமனவடிவமொன்று, (முன்பு), நீடிய முகடு உற நிமிர்ந்தது இல்லைஓ - உயர்ந்த ஆகாயவுச்சியைப் பொருந்த வளரவில்லையா ? (எ - று.)

அதுபோலவே இவனும் சாதாரணமனிதன்போலிருந்து சமயம்வந்தபோது தன்திறமையைக் காட்டுபவனென்பதாம். மானுடராய்வந்த தேவர் சமயத்தில் தம்திறலைக் காட்டுவரென்பதை, உருத்திரசேனன் இரண்டுகவிகளில் விளக்குகிறானென்க. (அஎ)

88. மற்றுளவரையெலாநடுங்கவார்பிறைக்
கற்றையஞ்சடையவன்கயிலைமாக்கிரி
யுற்றுடனெடுத்தவனுயிரும்வாழ்க்கையுஞ்
செற்றவர்மனிதரோதேவரோவையா.

(இ - ள்.) ஐயா - தந்தையே! மற்று உள வரை எலாம் - வேறாகவுள்ள மலைகள் யாவும், நடுங்க - (அச்சத்தால்) நடுங்கும்படி, பிறை வார்

கற்றை அம் சடையவன் மா கயிலை கிரி - பிறைச்சந்திரனைச்சூடிய நீண்ட தொகுதியான அழகிய சடையையுடைய சிவபிரானது சிறந்த ஸ்ரீகைலாச பருவதத்தை, உற்று உடன் எடுத்தவன் - அருகில்வந்து ஒருசேரத் தூக்கின வனான இராவணனது, உயிர்உம் - உயிரையும், வாழ்க்கைஉம் - செல்வவாழ் வையும், செற்றவர் - அழித்தவர், மனிதர்ஓ - மநுஷ்யர்களோ? தேவர்ஓ - தேவர்களோ? (எ - று.)

தேவரல்லர்: மனிதரே; ஆதலால், இவனும் அங்ஙனம் தேவகணத்தவ ரை அழித்தற்கேற்ற ஆற்றலுடையவ னென்பதாம். நமக்குட்பெரியதுஞ் சிறந்ததும் பேராற்றலுடைய சிவபிரானுக்கு வாஸஸ்தானமாகவுள்ளது மான கைலாசகிரிக்கே இந்தநிலைமை வந்த தென்றால், நமதுகதி என்னுகுமோ என்றுகருதி மற்றையமலைகள் அப்பொழுது அஞ்சி நடுங்கின வென்க. (அஅ)

89. மட்டவிழ்தொடைமணிமானையோர்முனி
யொட்டியவரிசிலைமனிதனாலுயிர்
பட்டழிகுவையெனப்பகர்ந்துசாபமன்
றிட்டதுமுணர்ந்தவற்கிரங்கலெந்தைநீ.

(இ - ள்.) எந்தை - என்தந்தையே! ஓர் முனி - அகத்தியனென்ற ஒருமுனிவன், மட்டு அவிழ் தொடை மணிமானை-வாசனைவீசுகின்ற பூமாலை யையுடைய மணிமானை நோக்கி, ஒட்டிய வரி சிலை மனிதனால் உயிர் பட்டு அழிகுவை என பகர்ந்து - பொருந்தின கட்டமைந்த வில்லையுடைய ஒரு மனிதனாலே (நீ)உயிரொழிந்து இறப்பா யென்றுகூறி, அன்று - முற்காலத் தில், சாபம் இட்டதுஉம்-சாபங்கொடுத்ததையும், உணர்ந்து-அறிந்திருந்து, நீ—, அவற்கு இரங்கல் - அம்மணிமான்இறந்ததற்கு வருத்தப்படாதே.

'மணிமானைக்கொன்றவனைப் பழிக்குப்பழி வாங்க வேண்டாவோ?' என்று எழும் வினவுக்கு உருத்திரசேனன் இதனால் விடைகூறுகிறான். இதிற் கூறிய சாபவரலாறு :—குசவதியென்னும் பரிசுத்தபூமியில் தேவர்கள் செய்யும் ஆலோசனையின்பொருட்டுக் குபேரன் அனேகயக்ஷர்களுடன் வான வழியாய்ச் செல்லுகையில், செல்லும்வழியிடையிலே அந்தக் குபேரனது சேனைத்தலைவனான மணிமான்உமிழ்ந்த எச்சில் யமுனாநதிதீரத்திலே தவஞ் செய்துகொண்டிருந்த அகத்தியமகாமுனிவர்சிரசின்மீது விழ, முனிவர் கடுங்கோபங்கொண்டு குபேரனை நோக்கி 'அரசனானஉன்முன்னிலையில் இவ் விழிதொழில்செய்த உனதுநண்பனான இக்கொடியவன் தனதுசேனையுடனே ஒருமனிதனால் இறப்பானாக' என்றும், 'உன்னைச்சேர்ந்தவன் இக்குற்றஞ் செய்தலால், நீ அச்சோகத்தை ஏற்றுப் பின்புஅம்மனிதனைக்கண்டு தீவினை நீங்குவாய்' என்றும் சாபமருளினரென்பது, வியாசபாரதத்திற் கண்டது.

வீமசேனனாற் கொல்லப்பட்டோர்தவிர எஞ்சியவீரர்கள் குபேரனிடம் வீமனது செய்திதெரிவிக்க, குபேரன் சினந்து பரிவாரங்களுடன் பாண்டவ ரிருக்குமிடத்துவந்து, பாண்டவரைக் கண்டதும் சினமடங்கினனாக, தருமன் முதலிய மூவரும் குபேரனை வணங்கி அபராதக்ஷாமணஞ் செய்துகொள்ள வீமன்மாத்திரம் போர்செய்யச்சித்தனாய் நின்றான்: அப்போது குபேரன் தரு

மனைநோக்கி 'வீமன்மீது சினங்கொள்ளற்க : காலத்தினால் மணிமானுதிய இவர்கள் கொலையுண்டனார்' என்றும், வீமனை நோக்கி 'ஐயா! நீ செய்த சாகசச்செயலுக்காக நான் மனத்தில் ஒன்றுங்கொள்ளவில்லை : உன்வீரத்தினால் மகிழ்ச்சியுற்றேன் : சாபத்தினின்று இப்போதுதான் விடுபட்டேன்' என்றுங் கூறி, பாண்டவர்க்குச் சிலஹிதங்களைச் சொல்லி அளகைக்குச் சென்றான்: குபேரனேவலின்படியே பாண்டவர்களும் குபேரபவனங்களில் ராட்சசாதிகளாற் பூஜிக்கப்பட்டு அன்றிரவு தங்கித் தம்மிடத்துக்குச்சென்றனரென்று முதனூல் கூறும். (அக)

90. அருத்தியேதென்றவற்கருளியையவிங்
கிருத்தியேல்வாழ்வுமின்னுயிருமெய்தலாந்
திருத்தியசேனையுநீயுஞ்சென்றுமே
லுருத்தியேலுறுபயனொன்றுமில்லையால்.

(இ - ள்.) ஐய - தந்தையே! அருத்தி ஏது என்று - விரும்பிய பொருள் யாது என்று வினவியறிந்து, அவற்கு அருளி - (அந்தப்பொருளை) அம்மனிதனுக்கு அன்போடுகொடுத்து, இங்கு இருத்தியேல் - இவ்விடத்தில் (சாந்தமாய்) இருப்பாயானால், வாழ்வும் - செல்வவாழ்க்கையையும், இன் உயிர்உம் - இனியபிராணனையும், எய்தல் ஆம் - அடைந்திருத்தல்கூடும் [அவனால் உனக்கு ஒன்றும் அபாயமுண்டாகாதென்றபடி]; (இப்படியல்லாமல்), திருத்திய சேனைஉம் நீஉம் சென்று - சீர்திருத்தப்பட்டுள்ள உனதுசேனையும் நீயுங் கூடிப்போய், மேல் உருத்தியேல் - அவன்மேற்கோபிப்பாயானால் [போர் செய்தால் என்றபடி], உறு பயன் ஒன்றுஉம் இல்லை - அடையும்பயன் ஒன்றுமின்றாம் ; (எ - று.)—தோல்வி நேருமேயன்றி வெற்றிநேராதென்பதாம். இப்போது செய்யத்தக்கது இன்னது என்று, இதனால், உருத்திரசேனன் தெரிவிக்கின்றானென்க. ஆல் - ஈற்றசை; தேற்றமுமாம். (௯0)

91.—உருத்திரசேனன் இங்ஙன்சொல்லவுங் குபேரன் போருக்கு செல்லுதல்.

என்றிவைதிருமகனியம்பியேத்தவு'
நின்றிலனெனதுயிர்நேயநண்பனைக்
கொன்றவன்றனுயிர்கொள்வன்யானெனாச்
சென்றனன்புட்பகத்தேரின்மீதரோ.

(இ - ள்.) திரு மகன் - செல்வப்பிள்ளையான உருத்திரசேனன், என்று - என்றுகூறி, இவை இயம்பி - (இன்னும்இப்படிப்பட்ட பல)வார்த்தைகளையுஞ்சொல்லி, ஏத்தஉம் - துதிக்கவும்,— (குபேரன்),— நின்றிலன் - (அது கேட்டுத் தடைப்பட்டு) நில்லாதவனாய், எனது உயிர் நேயம் நண்பனை கொன்றவன்தன் உயிர் கொள்வன் யான் எனா - என்னுடைய உயிரோடொத்தஅன்புள்ளசிநேகிதனான மணிமானைக் கொன்றவனது உயிரை வாங்குவேன் நான் என்றுகூறி, புட்பகம் தேரின்மீது சென்றனன் - (தனது)புஷ்பக விமானத்திலேறிப் (போருக்கு)ச்சென்றான்; (எ - று.)—அரோ - ஈற்றசை.

புட்பகம் - புஷ்பகம்; குபேரன்விமானம்: இது எத்தனைபெயர் ஒருங்கு வந்து இருப்பதானாலும் அவ்வளவுபேர்க்குந் தான் வளர்ந்து இடங்கொடுக்குந்தன்மையது ; பாற்கடல்கடைந்தகாலத்து அதனினின்று எழுந்தது : உடையவன் நினைத்தவிடத்திற்கு ஆகாயமார்க்கத்திற் பறந்து செல்வது. நண்பனைக் கொன்றவன் தன்உயிர்கொள்வன் - நண்பனைக்கொன்றவனைக் கொல்லாதுவிடேனென்றபடி. (கக)

92.—குபேரனோடு யட்சசேனை மணிமானுடன் பரவிச்செல்லுதல்.

மண்ணெலாமிரதமுங்களிறும்வாசியும்
விண்ணெலாம்விமானமும்விபுதரீட்டமும்
பண்ணெலாமுரல்வனபணையின்குப்பையு
மெண்ணலாமாவதோவியக்கர்சேனையே.

(இ - ள்.) மண் எலாம் - பூமிமுழுவதிலும், இரதம்உம் - தேர்களும், களிறுஉம் - யானைகளும், வாசிஉம்-குதிரைகளும், விண் எலாம் - ஆகாய முழுவதிலும், விமானம்உம் - விமானங்களும், விபுதர் ஈட்டம்உம் - தேவர்களின்கூட்டமும், (பூமி ஆகாயம் இரண்டிலும்), பண் எலாம் முரல்வன பணையின் குப்பைஉம்-சுரங்களையெல்லாம் ஒலிப்பனவான வாத்தியங்களின் தொகுதியும், (ஆக இவ்வாறு), இயக்கர் சேனை-யக்ஷசேனை, எண்ணல் ஆம் ஆவதுஓ - அளவிடக்கூடியதாவதோ? [அன்றென்றபடி] ; (எ - று.)

குபேரன் புஷ்பகவிமானத்தின்மேலேறி வீமனுடன்போர்செய்யப்புறப்படுகையில் அளவிறந்த இயக்கசேனை தேர் யானை குதிரை விமானங்களோடும் பலவகைவாத்தியகோஷத்தோடும் பூமியிலும் ஆகாயத்திலும் பரவி உடன்சென்றன வென்பதாம். எண்ணலாமானதோஎன்றும் பாடம். (கஉ)

93.—மணிமானுடன்வரும் யட்சசேனையை யுதிட்டிரன் காணுதல்.

விண்டலமுறவருசேனைவேலையு
மண்டலமுறவெழுமகரவாரிபோ
லெண்டிசையுறப்பரந்தெழுந்தசேனையுங்
கண்டனன்கண்ணுறக்கருணைக்கண்ணனே.

(இ - ள்.) விண் தலம் உற - ஆகாயத்தினிடத்திற்பொருந்த, வரு - வருகிற, சேனை வேலைஉம் - யக்ஷசேனைசமுத்திரத்தையும், மண் தலம் உற எழும் - பூலோகத்தினிடம் முழுவதிலும் பொருந்தும்படி மேலெழுகிற, மகரம் வாரி போல்-சுறாமீன்களையுடைய பிரளயக்கடல்போல, எண் திசை உற - எட்டுத்திக்குக்களிலும் பொருந்த, பரந்து-(பூமியிற்) பரவி, எழுந்த - (போருக்கு) எழுந்த, சேனைஉம் - யக்ஷசேனையையும், கருணை கண்ணன் - அருளொழுகுங்கண்களையுடைய யுதிட்டிரன், கண் உற கண்டனன் - (தன்) கண்ணெதிரிலே பொருந்தப் பார்த்தான்; (எ - று.)

வாரி - நீர்; ஆகு-வடசொல்: இங்கே, கடலுக்கு இலக்கணை. பிற உயிர் மேற் கண்பார்வைசென்றவிடத்து அதன்வழியாக அருள் நிகழ்வதாதலால், கருணைக்கண்ணனென்றார்; இதனை 'கண்ணோட்டம்' என்பதனாலும் அறிக.

94.—தருமன் தம்பியைச்சினந்து குபேரனை வணங்குதல்.

உணங்கினானுடலமுமுணர்வுமாவியும்
பிணங்கினனிளைஞனைப்பேதைபங்கனோ
டிணங்கினன்புகழெலாமேத்திநெஞ்சுற
வணங்கினன்மணிமுடிமன்னர்மன்னனே.

(இ - ள்.) மணி முடி மன்னர் மன்னன் - இரத்தினங்கள்பதித்த கிரீடத்தையுடைய அரசர்களுக்கரசனான தருமபுத்திரன்,— (அச்சேனைகளைக் கண்டமாத்திரத்தில்), உடலம்உம் உணர்வும் ஆவிஉம் உணங்கினன் - உடம்பும் அறிவும் உயிரும் ஒடுங்கி, இளைஞனை பிணங்கினன் - (தன்) தம்பியான வீமனைக் கோபித்து, பேதை பங்கனோடு இணங்கினன் புகழ் எலாம் ஏத்தி- (எப்பொழுதும்) இளமைப்பருவத்தையுடைய உமாதேவியை வாமபாகத்திற்கொண்ட சிவபிரானோடு கூடிய நண்பனான குபேரனது கீர்த்தியையெல்லாந் துதித்து, நெஞ்சு உற வணங்கினன் - மனம்பொருந்த(அவனை) நமஸ்கரித்தான்; (எ - று.)—பேதை - பேதைமையுடையவளுக்கு ஆகுபெயர்.

95.— இதுவும், மேற்கவியும் - தருமன் குபேரனைத் துதிப்பன.

அனகனேயமலனேயளகைவேந்தனே
தனதனேசங்கரன்றன்சகாயனே
புனிதனேகுபேரனேபுலத்தியன்குல
செனகனேசெல்வனேதேவதேவனே.

மூன்றுகவிகள் - ஒருதொடர்:

(இ - ள்.) அனகனே - பாவமில்லாதவனே! அமலனே - குற்றமில்லாதவனே! அளகை வேந்தனே - அளகாபுரியரசனே! தனதனே -(வேண்டுவார்க்கு வேண்டிய) செல்வத்தைக் கொடுப்பவனே! சங்கரன்தன் சகாயனே - சிவனது தோழனே! புனிதனே - பரிசுத்தகுணமுள்ளவனே! குபேரனே—! புலத்தியன் குலம் செனகனே - புலஸ்தியமகாமுனிவருடையகுலத்திற் பிறந்தவனே! செல்வனே - எல்லாச்செல்வங்களையும்உடையவனே! தேவ தேவனே - தேவர்களுக்குத் தலைவனே! (எ - று.)

படைத்தற்றொழிலில் தனக்கு உதவியாம்படி பிரமதேவனாற் சிருஷ்டிக்கப்பட்ட உபப்பிரமர்கள் ஒன்பதின்மருள் ஒருவராகிய புலஸ்தியப்பிரசாபதியினது குமாரர் விச்சிரவசு; அவரதுபுத்திரன் குபேர னென்க. செனகன் - ஜநகன்; வடசொல். ஒருகால் பார்வதிமீது கண்சென்று அதனால் அக்கண் மழுங்கியதனால், குபேரன் என்று பெயர் : கு - இழிவான, பேரன் - உடலுள்ளவனென்க. (கூ௫)

96. வெறுப்பதோவிளைந்ததுரிகையதாயினு
மறுப்பதோவென்மொழிமாறுகொண்டெதிர்
செறுப்பதோவிளையவர்செய்ததீமைகள்
பொறுப்பதேபெரும்புகழ்ப்புனிதமூர்த்தியே.

(இ - ள்.) புனித மூர்த்தியே - பரிசுத்தமான வடிவமுடையவனே! வெறுப்பதும் - (நீ) வெறுக்கத்தக்கசெயலோ, விளைந்தது-(என்தம்பியால்)

சேர்ந்துவிட்டது; அது—, மிகை ஆயின்உம்-குற்றமானாலும், என் மொழி-யானது (வேண்டுகோள்) வார்த்தையை, மறுப்பதுஓ - (நீ ஏற்றுக்கொள்ளாது) விலக்குவது தகுதியோ? இளையவர் செய்த தீமைகள் - சிறியவர் செய்த குற்றங்களுக்காக, மாறு கொண்டு-பகைமைகொண்டு, எதிர்-(அவற்றுக்கு) எதிராக, செறுப்பதுஓ - (அவர்களை) அழிப்பது தகுதியோ? பொறுப்பதுவே - (அவற்றைப்) பொறுத்திடுவதே, பெரு புகழ் - மிகுந்த கீர்த்திக்குக் காரணமாம்; (எ - று.)

இளையவர்செய்த தீமைகள் - மத்திமதீபமாகலாம். ஓகாரங்கள் மூன்றனுள், முன்னது - இழிவுசிறப்பு; பின்னவை - எதிர்மறை. (கூசு)

97.—தருமனுடைய துதியினால் சினம்மாறிக் குபேரன் அவனை யுபசரித்தல்.

எனவிவனிவைபகர்ந்திசையவேத்தலு
முனிவொடுவயிரமுமுரணுமாறியே
மனனுறமகிழ்ந்தெதிர்கொண்டுமார்புறத்
தனதனுந்தருமனைத்தழீஇக்கொண்டானரோ.

(இ - ள்) என - என்று, இவை - இவ்வார்த்தைகளை, பகர்ந்து - சொல்லி, இவன் - யுதிட்டிரன், இசைய - பொருத்தமாக, ஏத்தலும்-துதித்த மாத்திரத்தில்,— தனதன்உம் - குபேரனும், முனிவொடு - (வீமனிடத்துள்ள) கோபத்தோடு, வயிரம்உம் - வீராவேசமும், முரண்உம் - பகைமையும், மாறி - நீங்கி,— மனன் உற மகிழ்ந்து - மனம் மிக மகிழ்ச்சிபெற்று, எதிர்கொண்டு - எதிரிற்சென்று உபசரித்து, தருமனை - யுதிட்டிரனை, மார்பு உற - (தன்) மார்பிலே அழுந்தும்படி, தழீஇக்கொண்டான் - அணைத்துக் கொண்டான்; (எ - று.)—அரோ - ஈற்றசை. (கூஎ)

98.—தருமபுத்திரனைநோக்கிச் சினந்தணிந்தேனென்று குபேரன் கூறுதல்.

நிலத்தியறண்ணளிநிருபநீமதி
குலத்தியலுடன்வருகுமரனாதலாற்
சலத்தியறருமுரண்டணிந்தென்யானெனப்
புலத்தியன்மகன்மகன்புகன்றுபோற்றினான்.

(இ - ள்.) 'நிலத்து - பூலோகத்திலுள்ள எல்லாவற்றினிடத்திலும், இயல் - பொருந்தின, தண் அளி-குளிர்ந்தகருணையையுடைய, நிருப - அரசனே! நீ—, மதி குலத்து இயலுடன் வரு குமரன் - நீ சந்திர குலத்திலே (அதற்கேற்ற) நற்குணத்தோடுபிறந்த குமாரன்: ஆதலால்—, சலத்து இயல் தரும் முரண் தணிந்தென் யான் - (உன்தம்பிபக்கல்) கோபத்தாற் பொருந்தின பகைமையை யொழிந்தேன் நான்', என - என்று, புலத்தியன் மகன் மகன்-புலஸ்தியரது குமாரரான விச்சிரவஸினது புத்திரனான குபேரன், புகன்று-சொல்லி, போற்றினான்-(தருமபுத்திரனைப்) புகழ்ந்தான்; (எ - று.)

சந்திரனைக்கண்ட மாத்திரத்தில உஷ்ணந்தணிதல்போலச் சந்திரகுலத்திற்பிறந்தவனான உனது சாந்தகுணத்தைக் கண்டமாத்திரத்தில் எனது

கோபதாபந் தணிந்துவிட்டதென்பான், 'நீ மதிகுலத்தியலுடன்வருகுமர னாதலால் சலத்தியல்தருமுரணதணிந்தேன் யான்' என்றான். (கஅ)

99.—உரிமைபாராட்டிக் குபேரன் தம்பிமாருடன் தருமனைத் தன் நகருக்கு அழைத்துப்போதல்.

என்னகர்நின்னகரென்றுவேறிலை
நின்னகரிதுமுதனீங்கள்வாழ்வுறுந்
தொன்னகரெனதெனத்துணைவர் தம்மொடு
மன்னனைத்தன்னகர்கொண்டுமன்னினான்.

(இ - ள்.) 'என் நகர் நின் நகர் என்று வேறு இலை - எனதுநகரம் வேறு நினதுநகரம்வேறு என்பதுஇல்லை; இது நின் நகர் - இவ்வளகாபுரி உன்னுடையநகரமாம்; முதல் நீங்கள் வாழ்வு உறும் தொல் நகர் - முன்னாளில் நீங்கள் வசித்துவந்த பழமையான அஸ்தினாபுரி, எனது - என்னுடையதாம்', என - என்றுசொல்லி, (குபேரன்), துணைவர் தம்மொடுஉம் - தம்பிகளுடனே, மன்னனை - தருமராசனை, தன் நகர் கொண்டு மன்னினான் - தனதுஅளகாபுரிக்கு அழைத்துக்கொண்டுபோனான்; (எ - று.) (கக)

100.—இதுவும், மேற்கவியும் - குளகம் : குபேரன் தன் நகரி முதலியனகாட்டி அழகூட்டிப் பாண்டவரை யுபசரித்தல்.

திருத்தகுநகரியுஞ்சிறப்புஞ்செல்வமு
மருத்தகுகற்பகவனமும்வாவியுங்
குருத்தகுமணிகளின்குழாமுங்கோயிலுங்
கருத்துறமகிழ்ந்துகண்களிப்பக்காணவே.

(இ - ள்.) திரு தகு - மேன்மைபொருந்தின, நகரிஉம் - அளகாபுரியையும், சிறப்புஉம் - (தன்னுடைய) சிறப்புக்களையும், செல்வம்உம் - (தனக்கு உரிய) செல்வமான நவநிதிகளையும், மரு தகு கற்பக வனம்உம் - வாசனை பொருந்தின கற்பகச்சோலைகொப்பான (சைத்திரரதமென்னும்) உத்தியானவனத்தையும், வாவிஉம் - (அதிலுள்ள) நீர்நிலையையும், குரு தகு மணிகளின் குழாம்உம் - பெருமைபொருந்தின இரத்தினங்களின் குவியல்களையும், கோயில்உம் - (தனது) அரணமனையையும், கருதது உற மகிழ்ந்து கண் களிப்ப காண - மனம் மிகமகிழ்ச்சிபெற்றுக் கண்கள்களிப்பையடையுமாறு (அவர்கள்)காணும்படி,—(எ-று.)—'காட்டினான்' என மேற்கவியிலியையும்.

கற்பகவனம் - உவமையாகுபெயர். வாவி-மாநஸ மென்பர். குரு-நிறமுமாம். திருத்தகுசிலையுடன் என்ற பாடத்துக்கு - மேன்மைபொருந்தின கைலாசகிரியுடனே யென்க : வடதிசையிலுள்ளதாகிய சிவனது கைலாச மலையே குபேரனுக்கும் இடமென்பது, நூல்களிற் பிரசித்தம்: சிலை - கல்: மலைக்குக் கருவியாகுபெயர். (க00)

101. காட்டினான்றன்பனக்கருளைவெள்ளநீ
ராட்டினானன்கலத்தமுதமன்புட
னூட்டினானுகந்துபசரித்துச்செங்கையா
னீட்டினானுடையநிதிகள்யாவுமே.

(இ - ள்.) காட்டினன் - (குபேரன் பாண்டவர்களுக்கு எல்லாப் பொருள்களையுங்) காண்பித்து, தன் மனம் கருணை வெள்ளம் நீர் ஆட்டினன் - தனது மனத்திலுள்ள அருட்பெருக்கினால் (அவர்களை) நீராடுவித்து [அவர்கள்பக்கல் மிக்ககருணைசெய்து என்றபடி], நல் கலத்து அமுதம் அன்புடன் ஊட்டினன் - சிறந்தபாத்திரத்திலே அமிருதம்போலினியவுணவை அன்போடு (அவர்களுக்குக்கொடுத்து) உண்ணச்செய்து, உகந்துஉபசரித்து-விரும்பியுபசாரங்கள்செய்து, செம் கையால் - சிவந்த(தனது) கைகளாலே, ஆடைஉம் - வஸ்திரங்களையும், நிதிகள் யாஉம் - பலவகைச் செல்வங்களையும், நீட்டினன் - கொடுத்தான்; (எ - று.) (க0க)

102.—குபேரன் தருமனைநோக்கிக்கூறிய முகமன்.

அத்தினபுரிதனக்கதிபநீவர
வித்தினமென்றவப்பயனிருந்தவா
நித்தனையெனதுயிர்நேயநண்பினு
லொத்தனையெனவிவையுரைசெய்தானரோ.

(இ - ள்.) 'அத்தினபுரிதனக்கு அதிப - அஸ்தினபுரிக்கு அரசனே! [தருமனே!] இ தினம் - இன்றையதினத்தில், நீ வர - நீ இங்கேவரும்படி, என் தவம் பயன் இருந்த ஆ(று) - எனதுதவத்தின்பயன் இருந்தவிதம் (வியக்கத்தக்கது)! எனது உயிர் நேயம் நண்பினால் - என்னுடைய உயிரோடொத்த அன்புள்ளசிநேகத்தால், நித்தனை ஒத்தனை - அழிவில்லாத சிவபிரானையொத்தாய்,' என - என்று, இவை-இவ்வார்த்தைகளை, உரைசெய்தான் - (குபேரன் தருமனைநோக்கிக்) கூறினான்; (எ - று.)

ஆ - விகாரம். சிவபிரான் முன் எனக்கு நண்பானதுபோல, இப்போது நீயும் நண்பனானாயென்பது கருத்து. நித்தன் - நித்யன். (க0உ)

வேறு.

103.—இரண்டுகவிகள்-ஒருதொடர்: குபேரன் அருச்சுனன்செய்தியைக்கூறி, தருமபுத்திரனுக்குத் தாமரைமலருடன் விடையுங்கொடுத்தனுப்புதல்.

நெருநலிந்திரபுரத்திலிந்திரனும் யாமுநீடவையிருந்தபின்
புருநலந்திகழும்விசயனென்னவவனொருவனெய்துதலுமவனையித்
திருநலம்புதியசெம்மல்யாவனென மற்றவன்செயலும்வெற்றியுங்
குருகுலம்பெறுகுலேசனென்பதுவு நின்றவானவர்கள்கூறினார்.

(இ - ள்.) நெருநல் - நேற்று, இந்திர புரத்தில் - தேவேந்திரனுடைய அமராவதிபட்டணத்திலே, நீடு அவை - பெரிய (சுதர்மையென்னுஞ்) சபையிலே, இந்திரன்உம் - தேவேந்திரனும், யாம்உம் - நாமும், இருந்த பின்பு-வீற்றிருந்தபின்னர், உரு நலம் திகழும் - வடிவத்தின் அழகு விளங்குகிற, விசயன் என்ன - அருச்சுனனென்று, ஒருவன் - ஒருமனிதன், அவண் - அவ்விடத்தில், எய்துதலும் - வந்தவளவிலே,— அவனை - அவனைக்குறித்து, திரு நலம் புதிய இ செம்மல் யாவன் என - அழகின் பெருமையையுடைய புதியவனாகிய இவ்வாண்மகன் யாரோவென்று(யான்) வினவ, நின்ற வான

வர்கள் - அங்குநின்ற தேவர்கள், அவன் செயல்உம் - அவனுடைய செய்கைகளையும், வெற்றிஉம்-(அவனது) சயத்தையும், குரு குலம் பெறு குல ஈசன் என்பதுஉம் - குருவமிசம் பெற்ற அக்குலத்துக்குத்தலைவனிவனென்பதையும், கூறினார் - சொன்னார்கள்; (எ - று.)

செம்மல் - ஆண்பாற்சிறப்புப்பெயர். மற்று - அசை. நெருநல்-இறந்தகாலங் குறிப்பதோர் இடைச்சொல் வெற்றி-விவாதகவசர்காலகேயர்வதை. உருநலந்திகழு மதனராசனென வொருவனெய்திடவும் என்றும்பாடம்.

இதுமுதல்ஒன்பதுகவிகள்- பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ் சீர்கள் மாச்சீர்களும், ஏழாவது விளச்சீரும், மற்றவை விளங்காய்ச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட எழுசீராசிரியவிருத்தங்கள். (கOங)

104. அந்தவிண்ணுலகினின்றுநின்றுணைவனமரர்சூழவாநாளையே
யிந்தமண்ணுலகுநீயும்வாழ்வுபெறவிந்திரன்றனுடனெய்துமா
லெந்தமண்ணுலகுநின்னதாகுமிடருற்றிரங்கலெனமகிழ்வினிற்
கந்தவண்ணமலருங்கொடுத்துவிடைநல்கினனளகைகாவலன்.

(இ - ள்.) நின் துணைவன் - உனது தம்பியான அவ்வருச்சுனன், அந்த விண் உலகினின்று - அத்தேவலோகத்திலிருந்து, அமரர் சூழவா - தேவர்கள் சுற்றிலும் உடன்வரும்படி, நாளைஏ-நாளைத்தினமே [மிகவிரைவிலே], இந்த மண் உலகுஉம் நீஉம் வாழ்வு பெற - இந்தப்பூலோகமும் நீயும் சிறந்த வாழ்க்கையடையும்படி, இந்திரன் தனுடன் - தேவேந்திரனுடனே, எய்தும்-வருவான் ; ஆல் - ஆதலால், எந்த மண் உலகுஉம்-பூலோகம் முழுவதும், நின்னது ஆகும் - (பின்பு) உன்னுடையதாய்விடும்; இடர் உற்று இரங்கல் - துன்பமடைந்து வருந்தாதே, என-என்று (தருமனை நோக்கிக்) கூறி, அளகை காவலன் - அளகாபுரிக்கு அரசனான குபேரன், மகிழ்வினின்-மனமகிழ்ச்சியுடனே, கந்தம் வண்ணம் மலர்உம் கொடுத்து - வாசனையையும் நிறத்தையுமுடைய அத்தாமரைப்பூவையும் (அவனுக்குக்) கொடுத்து, விடை நல்கினன் - (மீண்டுசெல்லுதற்கு) அனுமதியுங் கொடுத்தான்; (எ - று.)

துரியோதனனோடு சேர்ந்த துஷ்டர்கள்பலரையும் அழித்து நல்லவர்களை யோம்புதலால், 'இந்தமண்ணுலகும் நீயும்வாழ்வுபெற' எனப்பட்டது. மலரும், உம்மை - உயர்வுசிறப்பு; எச்சப்பொருளது மாம். (கOச)

105.—என்தம்பிஇளமையாற்செய்த குற்றங்களைப் பொறுப்பாயென்று குபேரனிடம் வேண்டிக்கொண்டு தருமன் புறப்பட்டுப்போதல்.

ஐயநின்னையறியாமனின்னகரிலணுகினன்சிறுவனாதலிற்
செய்ததீமைகள்பொறுத்தியென்றுநனிதிருவுளத்திடைகொளேலெனா
மொய்கொடாமமுடியுறவணங்கிமுடிமன்னர்மன்னனிளையோரொடு
மைதவழ்ந்துலவுமாடநீள்புரிசைஞாயில்வாயிறனிலெய்தினான்.

(இ . ள்.) 'ஐய - தலைவனே! நின்னை அறியாமல் - உன்பெருமையை அறியாமல், சிறுவன் - இளையவனான வீமன், நின் நகரில் அணுகினன் - உனது அளகாபுரியில் வந்துசேர்ந்தான் ; ஆதலின் - ஆகையினால், செய்த

தீமைகள் பொறுத்தி - (அவன்) செய்த குற்றங்களைப் பொறுத்தருள்வாய்; திரு உளத்திடை ஒன்றும் நனி கொளேல்-(உனது) சிறந்த மனத்தில் (அவனது) ஒருபிழையையும் மிகுதியாகக்கருதாதே,' என - என்றுசொல்லி வேண்டி, முடி மன்னர் மன்னன்-கிரீடத்தையுடையஅரசர்களுக்கு அரசனான யுதிட்டிரன், இளையோரொடுஉம் - (தனது) தம்பிமார்களுடனே, மொய் கொள் தாமம் முடி உற வணங்கி-நெருங்கினபூமாலையைச் சூடிய தங்கள் தலைகள்(அவனதுசீர்பாதங்களிற்)படும்படி விழுந்து நமஸ்கரித்து, மை தவழ்ந்து உலவும்-மேகங்கள் பொருந்தியுலாவப்பெற்ற [மிகவுயர்ந்த], மாடம்-மேலிடத்தையும், நீள் ஞாயில்-நீண்ட ஞாயிலென்னுமுறுப்பையுமுடைய, புரிசை-(அவ்வளகாபுரியின) மதிலினது, வாயில்தனில் - கோபுரவாயிலில், எய்தினன் - வந்துசேர்ந்தான்; (எ - று.)

சிறுவனுதலின் நின்னையறியாமல் நின்நகரில் அணுகினனென்றுமாம். கொளேல்-எதிர்மறை ஏவலொருமைமுற்று. இளையோரொடு-மத்திமதீபம். ஞாயில்-ஒருமதிலுறுப்பு. (௧0௫)

106.—தருமனுடன் வந்த முனிவரையும் பூசித்துக் குபேரன் மணி முதலியனதர, அவர்கள் அவனுக்கு ஆசிகூறல்.

மாசிலாதமுடிமன்னர்மன்னனுடன்வந்தமாமுனிவரர்க்கெலா
மேசிலாவகையினெண்ணிரண்டுவகையாயபூசைகளியற்றியே
காசிலாமணியுமாடையுங்கலனுநல்கமல்கவளர்செல்வனுக்
காசிகூறியுடனேதபோவனமடங்கினாரவரடங்கவே.

(இ - ள்.) மாசு இலாத முடி மன்னர் மன்னனுடன் வந்த - குற்றமில்லாத கிரீடத்தையுடைய அரசர்களுக்கு அரசனான தருமபுத்திரனுடனே வந்த, மா முனிவரர்க்கு எலாம்-பெரியசிறந்தமுனிவர்களெல்லோர்க்கும், (குபேரன்), ஏசு இலா வகையின்-பழிப்புக்குஇடமில்லாதபடி, எண் இரண்டு வகைஆய பூசைகள் இயற்றி-பதினாறுவகைப்பட்ட பூசைகளைச்செய்து, காசு இலா மணிஉம்-குற்றமில்லாத இரத்தினங்களையும், ஆடைஉம்-வஸ்திரங்களையும், கலன்உம் - ஆபரணங்களையும், நல்க-கொடுக்க, (அப்பொழுது), அவர் அடங்க - அம்முனிவர்களெல்லோரும், மல்க வளர் செல்வனுக்கு ஆசி கூறி-நிறைவாக வளர்ந்த செல்வத்தையுடைய குபேரனுக்கு ஆசீர்வாதங்களைச் சொல்லி, உடனே - விரைவிலே, தபோவனம் அடங்கினார் - (தாங்கள்) தவஞ்செய்தற்குரிய காட்டை அடைந்தார்கள்; (எ - று.)

எண்ணிரண்டுவகை - பண்புத்தொகைப்பன்மொழித்தொடர்; ஷோடசோபசாரம்: அவை-தவிசளித்தல், கையில்நீர்தரல், கால்கழுவநீர்தரல், முக்குடிநீர்தரல், நீராட்டல், ஆடைசாத்தல், முப்புரிநூல்தரல், தேய்வை பூசல், மலர்சாத்தல், மஞ்சளரிசிதூவல், நறும்புகைகாட்டல், விளக்கிடல், கருப்பூரமேற்றல், அமுதமேந்தல், அடைக்காய்தரல், மந்திரமலரான் அருச்சித்தல் என்பன. மடங்கினார் எனப்பிரித்து, மீண்டனர் என்றுங் கொள்ளலாம். உடன்வந்த மாமுனிவரர்-உரோமசமுனிவர். (௧0௬)

107.—யாவரும் மீண்டு நந்திசேனமுனிவராச்சிரம மடைதல்.

குந்திமைந்தரொருநால்வரும்புதியகொடிமருங்குன்மடவல்லியுஞ்
சிந்தையன்புடையமுனியும்வாணிருதசேகரன்றனதுதேரின்மேற்
பந்திபந்திபதினாயிரம்பதின்மடங்குகூளிகள்பரிக்கவா
னுந்திமுன்பயிலுநந்திசேனன்வனமொருநொடிப்பொழுதிலெய்தினர்.

(இ - ள்.) குந்தி மைந்தர் ஒரு நால்வர்உம் - (அருச்சுனனை யொழிந்த) குந்தியின்குமாரர் [பாண்டவர்] நாலுபேரும், புதிய கொடி மருங்குல் மட வல்லிஉம் - புதுமையான இளம்பூங்கொடிபோலத் துவளுகிற இடையையுடைய இளமையான திரௌபதியும், சிந்தை அன்பு உடைய முனிஉம் - (எல்லாவுயிர்களிடத்தும்) மனத்திற் கருணையையுடைய ரோமசமுனிவரும், வாள் நிருத சேகரன் தனது தேரின்மேல் - கொடியஅரக்கர்களுக்குத் தலையணிபோலச்சிறந்தவனான கடோற்கசனது இரதத்திலே, பந்தி பந்தி பதினாயிரம் பதின் மடங்கு கூளிகள் பரிக்க - வரிசைவரிசையாகப் பதினாயிரமென்னுந்தொகைக்குப் பத்துமடங்கான லட்சம் [மிகப்பல] பேய்கள் சுமந்துசெல்ல, வான் உந்தி-ஆகாயமார்க்கத்திற் சென்று, முன் பயிலும் நந்தி சேனன் வனம் - முன்னே தாங்கள்வசித்திருந்த நந்திசேனமுனிவரது ஆச்சிரமத்தை, ஒரு நொடி பொழுதில் - வெகுவிரைவிலே, எய்தினர் - அடைந்தார்கள்; (எ - று.)

நந்திசேனவனம் என்று முன்பு கூறப்படவில்லையாயினும், அநுவாத முகத்தால் இங்குக் கூறினர். இது, காந்தர்ப்ப மலைச்சாரலிலுள்ள தபோவனங்களுள் ஒன்றாகும். மடமை - பெண்களுக்குரிய பேதைமைக்குணமுமாம். வல்லி - பெண்ணென்னுமாத்திரமாய்நின்றது. கொடிமருங்குல் மடவல்லி யென்பதை, கீழ்"மின்புரைமருங்குல்மின்" என்றதுபோலக் கொள்க. அன்பு - தெய்வபக்தியுமாம். நகுலசகதேவர் மாத்திரிபுத்திரராயினும், குந்தியால் அவளுக்கு உபதேசிக்கப்பட்டமந்திரத்தின்மகிமையாலே பிறந்தவராதலாலும், இளமையில் மாத்திரி இறக்கவே இவர்களைவளர்த்தவள் குந்தியேயாதலாலும், அவர்களையும் 'குந்திமைந்தர்' என்றது. (க0எ)

108.—நந்திசேனமுனிவனையிறைஞ்சி நிகழ்ந்தனகூறிக்
கடோற்கசனையும் அவனுக்குத் தெரிவித்தல்.

எய்தியந்தமுனிசெய்யதாண்மலர்மனஞ்செய்தன்புடனிறைஞ்சியே
செய்தியாவுமவனுக்குநண்பொடுரைசெய்துசூழ்வரவிருந்தபின்
வெய்தின்வந்தடலரக்கர்நாயகன்விபத்தினுக்குதவியானதுங்
கொய்திலங்குவடிவாளினான்விறலும்யாவுமேன்மையொடுகூறினான்.

(இ - ள்.) எய்தி - அங்குச்சேர்ந்து, அந்த முனி-அந்தநந்திசேனமுனிவருடைய, செய்ய தாள் மலர்-சிவந்ததிருவடித்தாமரைப்பூக்களை, மனம் செய்து-மனத்திலே தியானித்து, அன்புடன் இறைஞ்சி-அன்போடு வணங்கி, சூழ்வர - (தனது தம்பிமார்களும் பிறமுனிவர்பலருந் தன்னைச்) சூழ, இருந்தபின் - வீற்றிருந்தபின்பு, செய்தி யாஉம் - நடந்தசெய்திகளை யெல்லாம்,

நண்பொடு - அன்புடனே, அவனுக்கு - அந்தநந்திசேனமுனிவனுக்கு, உரை செய்து - கூறி, அடல் அரக்கர் நாயகன் - வலிமையையுடைய இராக்கதர்களுக்குத்தலைவனான கடோற்கசன், வெய்தின் வந்து - விரைவிலேவந்து, விபத்தினுக்கு உதவி ஆனதுஉம் - (தமக்கு நேர்ந்த) துன்பத்தைத்தீர்ப்பதற்குச் சகாயமானதையும், கொய்து இலங்கு வடி வாளினான் விறல்உம்-(பகைவர்தலைகளைத்)துணித்து விளங்குகிற கூர்மையான வாளாயுதத்தையுடைய அக்கடோற்கசனது சிறப்பையும், யாஉம் - (ஆகிய) எல்லாவற்றையும், மேன்மையொடு கூறினான் - மேன்மையாகச்சொன்னான்; (எ - று.)

சூழ்வர இருந்தபின் என்பதற்கு - அம்முனிவரைப் பிரதக்ஷிணமாகச் சுற்றிவந்து உட்கார்ந்தபின்பு என்றுமுரைக்கலாம். விபத்தினுக்குஉதவியானது என்றதை, "நோய்க்குமருந்து" என்பதுபோலப் பகைப்பொருளதாகக் கொள்க: "துன்பத்திற்கு யாரே துணையாவார்" என்றார் நாயனாரும். (௧0அ)

109.—இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்: தருமன் கடோற்கசனைநோக்கி உபசாரமொழி கூறுவது.

வெங்கராவின்முழைவாய்புகுந்தலறிவேழமூலமெனவிரைவினிற்
பொங்கராவணைதுறந்துவந்தெதிர்புரந்தபுண்ணியனையொக்கவே
தங்கராபதநெருங்குதொங்கலணிதாமவேலடலரக்கநீ
யங்கராகமணியாரமார்பநினதையனாருயிரளித்தியே.

(இ - ள்) தங்கு - மொய்க்கின்ற, அராபதம் - வண்டுகள், நெருங்கு - இடைவிடாதுநெருங்கிய, தொங்கல் - பூமாலையை, அணி - தரித்த, தாமம் வேல் - ஒளியையுடைய வேலாயுதத்தையுடைய, அடல்-வலிமையையுடைய, அரக்க - இராக்கதனே! அங்கராகம் - சந்தனப்பூச்சை, அணி - தரித்த, ஆரம் - இரத்தினமாலையணிந்த, மார்ப - மார்பையுடையவனே! வேழம் - ஒருயானையானது, (முன்னொருகாலத்தில்), வெம் கராவின் முழை வாய் புகுந்து - பயஙகரமானமுதலையினுடைய குகைபோலப்பெரிய வாயிலகப்பட்டு, அலறி - கூவி, மூலம் என - ஆதிமூலமேயென்று அழைக்க, (அப்பொழுது), விரைவினில் - துரிதமாக, பொங்கு அரா அணை துறந்து எதிர் வந்து-விளங்குகிறசேஷசயனத்தைவிட்டு எதிரிலெழுந்தருளிவந்து, புரந்த-(அவ்யானையைக்) காத்தருளின, புண்ணியனை - நல்வினைவடிவமான திருமாலை, ஒக்க - போல, நீ—, நினது ஐயன் ஆர் உயிர் அளித்தி - உனது தந்தையின் அருமையான உயிரைப் பாதுகாத்தாய்; (எ - று.)

விரைவில்வந்த கடோற்கசன்தேரின்மேலேறித் தருமபுத்திரன் அளகாபுரிசென்று சேர்ந்து சமாதானப்படுத்தாமலிருந்தால் குபேரனும் அவனது பரிவாரத்தாலும் வீமனுக்குநேரக்கூடியஅபாயத்தைக் கடோற்கசன்வந்து தருமனை யழைத்துப்போய் நேரவொட்டாது செய்ததையாவது, கடோற்கசனது பெரியதாதையான தான் வீமனைப் பிரிந்துவருந்திய சோகத்தை அவன்வந்துதீர்த்து வீமனையடையச்செய்ததையாவது, 'நினதையனாருயிரளித்தி' என்பதற்குக் கருத்தாகக்கொள்க. பின்னகருத்துக்கு, ஐயன் -

முன்னிலைப்படர்க்கை. கராம் - க்ராஹம்என்னும்வடமொழித்திரிபு. மூலம் என இயல்பாகிய அண்மைவிளியால் அழைத்ததாகக் கூறினது, கடவுள் எங்குமுள்ளவ ரென்று அவ்யானை அறிந்த தென்பதை விளக்குதற் கென்க. அங்கராகம் - உடற்பூச்சு.

பாண்டியநாட்டில் இந்திரத்யும்நனென்னும் அரசன் மிக்கவிஷ்ணு பக்தியுடையவனாய் ஒருநாள்விஷ்ணுபூசைசெய்கையில், அகஸ்தியமகாமுனி வர் அங்குஎழுந்தருள, அப்பொழுது அவன், கருத்துமுழுவதையுந் திரு மாலைப்பூசிப்பதிற்செலுத்தியிருந்ததனால் அம்முனிவர்வருகையையறியாமல் அவருக்குஉபசாரஞ்செய்யாதிருக்க,அவர் தம்மைஅலட்சியஞ்செய்தானென்று கருதிக் கோபித்து 'நீ யானைபோலச் செருக்குற்றிருந்ததனால் யானையாகக் கடவை' என்றுசபிக்க, அங்ஙனமே அவன் ஒருகாட்டில் யானையாகத்தோன் றினனாயினும் முன்செய்தவிஷ்ணுபக்தியின்மகிமையால் அப்பொழுதும்விடா மல் நாள்தோறும் ஆயிரந்தாமரைமலர்களைக்கொண்டு திருமாலை அருச்சித் துப் பூசித்துவருகையில், ஒருநாள் பெரியதொரு தாமரைத்தடாகத்தில் அருச்சனைக்காகப் பூப்பறித்தற்குப்போயிறங்கினபொழுது, அங்கே (முன் நீர்நிலையில்நின்று தவஞ்செய்துகொண்டிருந்த தேவலரென்னும் முனிவரது காலைப் பற்றியிழுத்து அதனாற்கோபங்கொண்ட அவரதுசாபத்தால்) பெரிய முதலையாய்க்கிடந்த ஹூஹூ என்னுங் கந்தருவன் அவ்யானையின்காலைக் கௌவிக்கொள்ள, அதனைவிடுவித்துக்கொள்ளமுடியாமற் கஜேந்திரன் ஆதி மூலமேயென்று கடவுளைக் கூவியழைக்க, உடனே திருமால் ஸ்ரீகருடவாக நாரூடராய் அங்குஎழுந்தருளித் தமதுசக்கரத்தைப்பிரயோகித்து முதலை யைத்துணித்து யானையை அதன்வாயினின்றும்விடுவித்து அருள்செய்தன ரென்பது, கதை. (௧0௧)

### 110.—தருமன் கடோற்கசனுக்குப் பூமாலைமுதலியன கொடுத்து விடைகொடுத்தல்.

தொடைகொடுத்தளகைநாதனன்றுதவுதுகில்கொடுத்துமதிமுத்தவெண்
குடைகொடுத்துநவமணிகொடுத்தமரிலென்றும்வென்றிதருகொற்றவெம்
படைகொடுத்தடலரக்கனுக்குயர்பதங்கொடுத்துமிகுபரிவுடன்
விடைகொடுத்தனனனந்தரஞ்சமரவீரவாகைபுனைவேலினான்.

(இ - ள்) (என்றுகூறி), சமரம் வீரம் வாகை புனை வேலினான் - போரில் வீரத்தன்மைக்குஅடையாளமானவெற்றிமாலையை யணிகிற வேலா யுதத்தையுடைய யுதிட்டிரன், அடல் அரக்கனுக்கு - வலிமையையுடைய இராக்கதனாகிய கடோற்கசனுக்கு, தொடை கொடுத்து - பூமாலையைக் கொடுத்து, அளகை நாதன் அன்று உதவு துகில் கொடுத்து - அளகாபுரிக்கு அரசனான குபேரன் அன்றையதினம் (தனக்குக்) கொடுத்த ஆடைகளைக் கொடுத்து, மதி முத்தம் வெள் குடை கொடுத்து - பூர்ணசந்திரன்போன்ற வெண்ணிறமான முத்துக்குடையைக் கொடுத்து, நவ மணி கொடுத்து-நவ ரத்தினங்களையுங்கொடுத்து, அமரில் என்றும் வென்றிதரு கொற்றம் வெம்

படை கொடுத்து - போரில் எப்பொழுதுஞ் சயத்தைத்தருகிற வலிமையை யுடைய பயங்கரமான சிலஆயுதங்களையுங் கொடுத்து, உயர் பதம் கொடுத்து- சிறந்தபெயரையுங் கொடுத்து, அனந்தரம் - பின்பு, மிகு பரிவுடன்-மிகுந்த அன்புடனே, விடை கொடுத்தனன்-(அவனுக்கு மீண்டுசெல்ல) அநுமதியுங் கொடுத்தான்; (எ - று.)

'அளகைநாதன் அன்றுதவு' என்பதைத் தொடை, முத்துக்குடை, நவ மணி என்பவற்றிற்குங் கூட்டுக; இவையெல்லாம்,கீழ் 101-ஆம் கவியிற்கூறிய படி குபேரனால் தருமனுக்குக் கொடுக்கப்பட்டனவென அறிக. இப்பொருள் களியாவும் கடோற்கசன் தனதுதேரின்மீது தருமனை அழைத்துக்கொண்டு போனதுமூலமாக வந்த பொருள்களாதலாலும், வனவாசஞ்செய்யுந் தரும னுக்கு இவைவேண்டாவாதலாலும், இவற்றைத் தருமன் கடோற்கசன் செய்தஉதவிக்குஏற்ற கைம்மாறாகக் கொடுத்தான். பதம் - சொல்; வட மொழி. அநந்தரம் - வடசொல். (கக0)

111.—கடோற்கசன் யுதிட்டிராதியரை வணங்கி இடிம்பவனஞ் சேர்தல்.

வணங்கியன்புடன்மகிழ்ந்துமன்னரைவலம்புரிந்துமனனஞ்செயா
நிணங்கமழ்ந்தொழுகிவழியவாளெயிறுநிலவெழும்புகைகொள்வாயினான்
றுணங்கைகொண்டலகைகோடிவானின்மிசைதுள்ளியூருமிரதத்தின்மே
லிணங்கிமீளவும்விநாழிகைப்பொழுதினில்லிடிம்பவனமெய்தினான்.

(இ - ள்.) நிணம் கமழ்ந்து ஒழுகி வழிய-(தின்னப்படுந்)தசையின்நாற் றம்வீசிச் சிந்திப்பெருக, வாள் எயிறு நிலவு எழும் - கூர்மையான கோரதந் தங்களினின்றும் நிலாப்போன்ற வெள்ளொளி விளங்கப்பெற்ற, புகை கொள் வாயினான் - (கோபாவேசத்தால்) புகையைக் கொண்ட வாயை யுடைய அக்கடோற்கசன், அன்புடன் - பக்தியுடனே, மகிழ்ந்து - மகிழ்ச்சி யுற்று, மன்னரை - (யுதிட்டிரன்முதலிய பாண்டவ) அரசர்களை, வணங்கி - நமஸ்கரித்து, வலம் புரிந்து - பிரதக்ஷிணஞ்செய்து, மனனம் செயா - தியா னித்து, அலகை கோடி துணங்கை கொண்டு துள்ளி வானின் மிசை ஊரும் இரதத்தின்மேல் இணங்கி - அநேகம்பேய்கள் துணங்கை யென்னுங்கூத்தை யாடிக்கொண்டு (உற்சாகத்தால்) துள்ளிக்கொண்டு ஆகாசமார்க்கத்திலே சுமந்துசெல்லப்பெற்ற(தனது)தேரின்மேற் பொருந்தி, மீளவும்-மறுபடியும், விநாழிகை பொழுதினில் - ஒருவிநாடிப்பொழுதிலே, இடிம்பவனம் எய்தி னான்-(தனதுவாஸஸ்தாநமான) இடிம்பாரணியத்தை யடைந்தான்; (எ-று.)

விநாழிகை-விநாடிகா என்னும் வடமொழித்திரிபு; அது, காலநுட்பங் களுள் ஒன்று. பொழுதினில்லிடிம்பவனம்,லகரமெய்-விரித்தல். 'புழைகொள் வாயினான்'என்ற பாடத்துக்கு - பெருந்துளையைக்கொண்ட வாயையுடை யவனென்க. துணங்கைக்கூத்தாவது - இரண்டு கைகளையும் முடக்கி விலாப்புறத்திலேயொற்றி ஆடுவது; "முடக்கிய விருகைபழுப்புடை யொற் றத், துடக்கிய நடையது துணங்கை யாகும்" என்றது காண்க. (ககக)

வேறு

112.—நந்திசேனவனத்து அருச்சுனன் வானுலகத்தினின்றுவந்துசேர்தல்.

அப்பொழுது வானுலக மதனினிடை நின்று
மைப்பொலியு மேனிவிச யன்வனம டைந்தான்
செப்பரிய வைவர்களுந் தேவியுட னேயவ்
வொப்பரிய தெய்வவன மொன்றினரு றைந்தார்.

(இ - ள்.) அ பொழுது - அந்தக்காலத்தில், மை பொலியும் மேனி விசயன் - மேகம்போல விளங்குங் கரிய உடம்பின்நிறத்தையுடைய அருச்சுனன், வான் உலகம்அதனினிடை நின்று - தேவலோகத்திலிருந்து, வனம் அடைந்தான்-அவ்வனத்தில் வந்துசேர்ந்தான்; செப்பு அரிய ஐவர்கள்உம் - சொல்லுதற்குஅருமையான (சிறப்பையுடைய) பஞ்சபாண்டவர்களும், தேவியுடனே - தங்கள்மனைவியான திரௌபதியுடனே அ ஒப்பு அரிய தெய்வம் வனம் - உவமையில்லாத தெய்வத்தன்மையுள்ள அந்தச் சிறந்தவனத்திலே, ஒன்றினர் உறைந்தார் - ஒருங்குகூடிவசித்தார்கள் ; (எ - று)

இது-இச்சருக்கத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தம். (கக௨)

வீமன் இரண்டாம்முறை சென்றது பூக்கொணர்தலையே முக்கியமாகக் கொண்டதன்று: கந்தமாதனபருவதத்தில் அச்சமின்றிச் சஞ்சரிக்கமுடியாதபடி யட்சராட்சசர்களுடையஉபத்திரவம் மிக்கிருந்ததனால் அந்தஉபத்திரவத்தைப்போக்குதலையே முக்கியமானஅமிசமாகக்கொண்டதாகு மென்பது முதனூலாற் பெறப்படும்.

மணிமான்வதைச்சருக்கம் முற்றிற்று.

---

ஆறவது

## துருவாசமுனிச்சருக்கம்

துருவாசமுனிவனைப்பற்றிய சருக்கம் என்று விரியும் : இரண்டாம் வேற்றுமையுருபும் பயனும் உடன்றொக்கதொகை. துருவாசனென்றசொல்-தன் குணங்களை மறைத்திருப்பவனென்று பொருள்படு மென்பர். துருவாச முனிவன் துரியோதனனேவலால் பாண்டவரிடம் விருந்தாகவந்து ஸ்ரீக்ருஷ்ணனநுக்கிரகத்தால் அமிருதம் புசித்தவன்போலப் பெருந்திருத்தியடைந்து தான் வந்த காரணத்தைக் கூறிவிட்டுத் தன்தபோவனத்துக்கு மீண்ட செய்தியைக் கூறும் பகுதி யென்க.

1.—துருவாசமுனிவன் பாண்டவரிருந்த காட்டில் வந்தடைதல.

சாபத் தாலுஞ் சாபமொழி தன்னால் வளருந் தவத்தாலுங்
கோபத் தாலும் பேர்படைத்த கொடிய முனிவன் றுருவாசன்
நீபத் தான்மெய் வகுத்தனையான் றிகழ்பன் முனிவர் புடைசூழ
வாபத் தால்வந் தடைந்தவர்போ லடைந்தா னந்த வடவியின்வாய்.

(இ - ள்.) சாபத்தால்உம் - சாபத்தைக் கொடுப்பதனாலும், சாபம் மொழிதன்னால் வளரும் தவத்தால்உம் - (அங்ஙனம் பிறருக்குக் கொடுக்

இன்ற) சாபமொழியினாலே வளர்கின்ற தவத்தினாலும், கோபத்தால்உம் - கோபத்தினாலும், பேர் படைத்த - பிரசித்திபெற்ற, கொடிய - கொடுமையையுடைய [கண்டவர் அஞ்சத்தக்க], முனிவன் - இருடியும், தீபத்தால் மெய் வகுத்து அனையான் - தீபத்தைக்கொண்டு உடம்பைச் செய்திட்டாற் போல ஒளிவடிவாய் விளங்குபவனுமாகிய, துருவாசன்—,—திகழ் பல் முனிவர் புடைசூழ - (தன்னைப்போலவே பிரமதேஜசினால்) விளங்குகிற பல இருடியர் (தன்னைச்) சுற்றிவர, ஆபத்தால் - பெருந்தீங்கு நேரிட்டதனால், வந்து அடைந்தவர்போல் - வந்து சேர்ந்தவர்போல, அந்த அடவியின் வாய் - அந்தக் காட்டிலே, அடைந்தான் - (பாண்டவரை) வந்து சேர்ந்தான்; (எ - று.)

துருவாசமுனிவன் செந்நிறமுள்ளவனாதலால், 'தீபத்தால் மெய் வகுத்தனையான்' என்றார்: இனி, கோபாக்கினி சொலிக்கின்ற மேனியையுடைமையால் இவ்வாறு கூறியது எனினுமாம். பன் முனிவர் என்றதை முதனூலிற்கு ஏற்ப, சீடரான பதினாயிரம் முனிவரைக் காட்டுமென்னலாம். மிக்க பசியினால் விரைந்துவந்தானென்பார் 'ஆபத்தால்வந்தடைந்தவர்போல் அடைந்தான்' என்றார். மற்றைமுனிவர்க்குப் பிறரைச்சபித்தலால் தவங்குறையும்: துருவாசமுனிவனோ சபிக்கச்சபிக்கத் தவம்வளருமாறு வரம் பெற்றுள்ளதனால் பெருங்கோபமுடையனாய்ச் சபிக்கும்இயல்புள்ளவனென்ப.

இது முதல் இச்சருக்க முடியுமளவும் பதினேழுகவிகள் - பெரும்பாலும் மூன்று ஆறாஞ்சீர்கள் காய்ச்சீர்களும், மற்றவை மாச்சீர்களுமாகிவந்த கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (க)

2.—பாண்டவர் வந்த துருவாசமுனிவரின் அடிபணிந்து முகமன்கூற, அன்னான் அவர்கட்கு ஆசிகூறுதல்.

அருமாதவப்பேறனதெமக்கம்மாவென்னச்செம்மாந்து
குருமாமரபோரைவருந்தங்குஞ்சித்தலைமேலடிவைத்தெம்
பெருமானிங்கேயெழுந்தருளப்பெற்றேமென்னப்பெரிதுவந்தங்
கருமாமுனியைப்பூசித்தாரவனும்புகன்றானாசியரோ.

(இ - ள்.) 'அரு - செய்தற்குஅரிய, மா தவம் - சிறந்த தவத்தின், பேறு - பயன், எமக்கு—, ஆனது - வாய்த்தது: அம்மா - ஆச்சரியம்!' என்ன - என்று, செம்மாந்து - (துருவாசமுனிவர் தம்மிடத்துவந்ததுகுறித்துப்) பெருமிதங்கொண்டு,—மா குரு மரபோர் ஐவர்உம் - சிறந்த குருவமிசத்தவரைவரும்,—தம் குஞ்சி தலைமேல் - தம்முடைய மயிர்முடியையுடைய சிரசின்மேல், அடி - (துருவாசமுனிவருடைய) திருப்பாதங்களை, வைத்து—, 'எம்பெருமான் - எமது பெருமானே! இங்கே எழுந்தருள பெற்றேம் - (நீர்) இங்கே யெழுந்தருளும் பாக்கியத்தை யடைந்தோம்,' என்ன - என்று, பெரிது உவந்து - மிகவும் மகிழ்ந்து சொல்லி, அங்கு - அப்போது, அரு மா முனியை - (கிடைப்பதற்கு) அரிய சிறந்த அம்முனிவரை, பூசித்தார்—: அவன்உம் - அந்த முனிவனும், ஆசி - வாழ்த்தை, புகன்றான் - (பாண்டவர்க்குக்) கூறினான்.

பேறு - பெறப்படுவது : செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்டு முதனிீண்டபெயர் ; பயன் என்பதுபொருள். செம்மாத்தல் - அந்தப்பெரியோர் எழுந்தருளப் பெறும் பாக்கியத்தைக் கருதியதனாலாகியது. குஞ்சித் தலைமேல் அடிவைத்து - தமது சிரசின்மேல் முனிவருடைய பாதங்களை யிருக்குமாறு வைத்து என்க : அடிமேல் குஞ்சித் தலைவைத்து எனினுமாம்.

3.—யுதிட்டிரன் உபசரிக்க, துருவாசன் 'சூரியனுச்சிக்குவந்துவிட்டதனால் யாம் உண்ணுங்காலம் இது' எனல்.

இட்டதவிசின்மிசையிருத்தியெரிகான்வந்தவிளைப்பாற்றித்
தொட்டகழற்காலுதிட்டிரன்கைதொழுதுதுதிப்பத்துருவாசன்
வட்டமணித்தேரவனுச்சவானத்தடைந்தான்யாமருந்தப்
பட்டவுணவிங்கமுதுசெயப்பருவமிதுவென்றுரைசெய்தான்.

(இ - ள்.) இட்ட-போகடப்பட்டிருந்த, தவிசின் மிசை - ஆசனத்தின் மேலே, இருத்தி - உட்காரவைத்து, எரி கான் - எரியுந்தன்மையுள்ளகாட்டிலே, வந்த - வந்ததனாலான, இளைப்பு - சிரமத்தை, ஆற்றி - தணியச்செய்து,—கழல் தொட்ட கால் உதிட்டிரன் - வீரக்கழலையணிந்த பாதங்களையுடைய தருமபுத்திரன்,—கைதொழுது - கைகூப்பி, துதிப்ப - தோத்திரஞ்செய்யாநிற்கையில்,—துருவாசன் - அந்தத்துருவாசமுனிவன்,—வட்டம் மணி தேரவன் - வட்டவடிவமாகஇருப்பவனும் அழகியதேரின்மீது வருபவனுமாகிய சூரியன், வானத்து உச்சம் அடைந்தான் - வானத்திலே உச்சியையடைந்திட்டான்: யாம்—,இங்கு-இவ்விடத்திலே, அருந்தப்பட்ட-உண்பதற்குஉற்ற, உணவு - உண்டியை, அமுதுசெய - உண்ணத்தக்க, பருவம் - காலம், இது-இதுவாகும்' என்று—, உரைசெய்தான்—; (எ - று.)

மூங்கில்போன்ற சிலசெடிகள் ஒன்றோடொன்றுஇழைவதால் எரியும் இயல்பினது காட்டினிடம் என்க. அமுதுசெய என்பதன்பின் பெயரெச்சம் வருவிக்க. (௩)

4.—முனிவனை நீராடிவருக என்று அனுப்பிவிட்டு, 'இவனை உண்பிக்கயாது செய்வது ?' என்று யுதிட்டிரன் ஆலோசித்தல்.

மூத்தோன்குளித்துவருகவெனமுனிவருடனம்முனிநடத்துப்
போய்த்தோய்வதற்காங்கெழுந்தருளப்புரசைக்களிற்றுமுரசுயர்த்தோன்
வாய்த்தோன்வரவுக்கென்புரிவோமதிப்பீரெனத்தன்றம்பியர்க்கும்
வேய்த்தோள்வேள்விமடந்தைக்குமுரைத்தாங்கவரைவினவினனால்.

(இ - ள்.) மூத்தோன்-பாண்டவர்களுட்பெரியோனான தருமபுத்திரன், 'குளித்துவருக-நீராடிவருவீராக,' என-என்றுகூறவே,—ஆங்கு-அப்போது, அ முனி-அந்தத் துருவாசமுனிவன், முனிவருடன்-(தம்முடன்வந்த)இருடியரோடும், நடத்து போய் - நீர்நிலையிருக்குமிடஞ்சென்று, தோய்வதற்கு - நீராடுவதற்காக, எழுந்தருள - சென்றிருக்க,—புரசை களிறு - புரசையையுடைய மதயானைச்சேனையையுடையனாகி, முரசுஉயர்த்தோன்-முரசவாத்தியத்தை(க்கொடியில்) உயரவெழுதியவனான யுதிட்டிரன்,—'வாய்த்தோன்-தவவாய்ப்பையுடையவனான துருவாசமுனிவனுடைய, வரவுக்கு-(உண்ணுமாறு)

வரப்போவதற்கு, என் புரிவோம் - (யாம்) என்னசெய்வோம் ? மதிப்பீர் - ஆலோசிப்பீராக,' என - என்று, தன் தம்பியர்க்குஉம்-தனதுதம்பிமாரான வீமன் முதலியோரிடத்தும், வேய் தோள் வெள்ளி மடந்தைக்குஉம்-மூங்கில் போன்ற தோள்களையுடையவளாய் வேள்வித்தீயினின்றுதோன்றியவளான திரௌபதியினிடத்தும், உரைத்து - சொல்லி, ஆங்கு-அங்கே, அவரை—, வினவினன் - உபாயங்கூறுமாறு கேட்டான் ; (எ - று.)

உணவுக்காலம்என்று துருவாசமுனிவன் கூறியவுடனே, நீராடிவருக என்றுதந்திரமாக அனுப்பிவிட்டு, யுதிட்டிரன் 'நீராடிவந்தால் இம்முனிவர்க்கு எவ்வாறு உணவுஇடுவது?' என்று சிந்தைகொண்டவனாய், இம்முனிவனுக்குஉணவுஇட என்னஉபாயஞ்செய்யலாமென்று ஆலோசித்துக்கூறுமாறு தன் தம்பிமார்முதலியோரை வினவினனென்க. ஆல்-அசை. புரசை-யானைக்கழுத்திடுகயிறு. மதியீரென்றும் பாடம். (௪)

5.—வீமன் தன்கருத்தைக் கூறுதல்.

மேவாருரைக்கவிவன்வந்ததல்லாற்பிறிதுவேறில்லை
யாவாவிதற்கின்றென்செய்வேமாமாறுகநாமெழுந்து
கோவானவனும்பலபடையுங்குன்றச்சென்றுபொருதிமைப்பிற்
சாவாநிற்பதுறுதியினியென்றான்வன்றாட் சமீரணியே.

(இ - ள்.) (அதுகேட்டதும்),— வன் தாள் சமீரணி-கொடியமுயற்சியையுடைய வாயுகுமாரனான வீமசேனன்,—'மேவார் - (நமது)பகைவர், உரைக்க - சொல்ல, (அச்சொல்லைக்கேட்டுக்கொண்டு), இவன் வந்தது அல்லால்-இம்முனிவன் வந்தானேயல்லாமல், (இவன்வருதற்கு), வேறு பிறிது-வேறாகமற்றொருகாரணம், இல்லை—; ஆஆ-ஐயோ ! ஐயோ ! இதற்கு - இவ்வாறு இவன்வந்ததற்கு, இன்று-இப்போது, என் செய்வேம்-(நான்சொல்லுவதுதவிர வேறுஉபாயம்)என்ன செய்யவல்லோம்?(இங்ஙனம் ஏவிய துரியோதனாதியர்க்கு), நாம்—, ஆம் - பொருந்திய, மாறுஆக-பகையாக, எழுந்து - புறப்பட்டு, சென்று-போய்,—கோஆனவன்உம்-ராஜராஜனான அத் துரியோதனனும், பல படைஉம்-அவனுடைய பலசேனைகளும், குன்ற-ஒழிந்துபோம்படி, பொருது - போர்செய்து, இமைப்பில் - இமைப்பொழுதிற்குள், சாவா நிற்பது-(நம்முயிரும்) மாயநிற்பது, இனி-இப்போது, உறுதி-(நாம்)செய்யத்தக்க சிறந்தசெயல்,' என்றான் - என்று தன்கருத்தைத் தெரிவித்தான்.

கொடியமுயற்சியில் எப்போதுங் கருத்துச்செல்பவனாதலால், வீமன் அதற்குஏற்ப,நம்மீது இம்முனிவனை ஏவிய நம்பகைவரைப் பழிவாங்குமாறு கொன்றுவிட்டு நாமும் உயிர்மாய்வதே செய்யத்தக்க செயலென்றான்: நீராடிவந்த முனிவனுக்கு உணவளிக்காவிட்டால் அவன் சாபத்திற்கு இலக்காய்ச் சாகவேண்டிவருமாதலால், பகைமுடித்து இறந்திடுவோமென்றானென்க. ஆஆ - இரக்கக் குறிப்பிடைச் சொல். சமீரணி - வாயுபுத்திரன்: சமீரணன்-வாயு. (௫)

6.—விசயன் வீமனதுபேச்சை ஆட்சேபிக்க, நகுலன் க்ருஷ்ணனை விரைந்து வரவழைக்குமாறு சொல்லுதல்.

சுருதிக்கடவுளனையானைச்சுனைநீர்படிந்துவரச்சொல்லிக்
கருதிப்பிறநாம்புரியுமதுகடனேவென்றான்கழல்விசயன்
மருதிற்கிடைபோமவன்விரைந்துவருமாறழைமினெனமொழிந்தா
னொருதிக்கினும்வெம்பரியேற்றுக்கொத்தோரில்லாவுரவோனே.

(இ - ள்) கழல் விசயன் - வீரக்கழலையணிந்த அருச்சுனன், 'சுருதி கடவுள் அனையானை - வேதத்தினுற் புகழப்படுகிற கடவுள்போலப்பெருமை வாய்ந்த துருவாசமுனிவனை, சுனை நீர் படிந்து வர சொல்லி - சுனைநீரிலே நீராடி உண்ணுதற்கு வரும்படி சொல்லிவிட்டு, நாம்—,—பிற கருதி - (மனத்தில்) வேறாக எண்ணமிட்டு, புரியுமது - செய்யுஞ்செயல், கடன்ஓ - முறைமையானது ஆகுமோ ?' என்றான் - என்று கூறினான்: (பின்பு), ஒரு திக்கின் உம் - ஒருதிக்கிலும், வெம் பரி ஏற்றுக்கு - வேகமுள்ள குதிரையி லேறிச் சவாரி செய்வதற்கு, ஒத்தோர் இல்லா - தன்னோடொத்தவரைப் பெறாத, உரவோன் - மனவலிமையுடைய நகுலன்,—'மருதிற்கு இடை போம்அவன் - இரட்டைமருதமரங்களினிடையேசென்ற ஸ்ரீக்ருஷ்ணனை, விரைந்து வரும்ஆறு - இங்கே விரைந்து வரும்படி, அழைமின் - அழையுங் கள்', என மொழிந்தான்-என்று (அப்போது நேரஇருக்கும் ஆபத்தினின்று தப்புவதற்கு உபாயங்) கூறினான்; (எ - று.)

கோவானவனும் பலபடையுங் குன்றச் சென்றுபொருது இமைப்பிற் சாவாதிருப்பது உறுதி என்று கூறிய வீமசேனன்பேச்சை அருச்சுனன்முறை மையன்றேஎன்று ஆட்சேபிக்க, நகுலன் ஸ்ரீக்ருஷ்ணனை அழைத்துவந்தால் நமக்கு நிகழக்கடவ இடரனைத்துந்தீருமாதலால் அவனை விரைவில்வர வழை யுங்களென்றான். ஒத்தோரில்லா எனவே, மிக்கோரில்லாமைபெறப்படும். சாபத்தினால் இரட்டை மருதமரமாய்க்கிடந்த குபேரபுத்திரர்களின் சாபத்தை நீக்க ஸ்ரீக்ருஷ்ணன் அவற்றினிடையே தவழ்ந்தானென்க. (சு)

7.—சகதேவன் கூறிய உபாயச்சொல்.

யாதேயாகவிந்தவிபத்தேகும்பொழுதைக்கிசையளிக
டேதேயென்னும்பசுந்துளபத்திருமாறன்னைச்சிந்தியுமிப்
போதேவருமிங்கவன்வந்தாற்போமிக்கவலையெனப்புகன்றான்
சாதேவனுமங்கவனிசைத்தசொல்லுக்கிசைந்தான்றருமனுமே.

(இ - ள்.) சாதேவன்உம்—, 'இந்தவிபத்து - இப்போது நமக்குவாக் கடவ ஆபத்து, யாதுஏ ஆக - எதுவாகவிருந்தாலும் இருக்கட்டும்: ஏகும் பொழுதைக்கு-(இது) செல்லும்போது [நீங்கவேண்டுமேயானால் என்றபடி], இசை அளிகள் - பாடல்பாடும் வண்டுகள், தே தே என்னும் - தேதேஎன்று ஒலிக்கின்ற, பசுந் துளபம் - பசிய திருத்துழாயையணிந்த, திருமால் தன்னை - திருமாலினவதாரமாகிய க்ருஷ்ணனை, சிந்தியும் - தியானியுங்கள்: (சிந்தித்தால்), அவன் இங்கு இப்போதுஏ வரும்-அத்திருமால் இவ்விடத்து

இப்போதே வருவான்: வந்தால்-(அங்ஙன்)வருவானாயின், இ கவலை போம் - இந்தக்கவலை நீங்கும்,' என - என்று, புகன்றான் - (தன் ஆலோசனையைக்) கூறினான்: தருமன் உம் - தருமபுத்திரனும், அங்கு-அப்போது, அவன்-அந்தச் சகதேவன், இசைத்த - சொன்ன, சொல்லுக்கு—, இசைந்தான் - உடன் பட்டான் ; (எ - று.)

நகுலன் ஸ்ரீக்ருஷ்ணனை விரைந்துவருமாறு அழையுங்களென்றுசொல்ல, சகதேவன் 'அவ்வமலன் நினைத்தமாத்திரத்தில் இங்குவந்திடுவான் : வந்திட்டானாயின், எதுவாயிருந்தாலும் விபத்து நீங்கும்' என்றனனென்பதாம். நடந்து செல்லும்போது மார்பின் மாலை சலிக்குமாதலால், அப்போது மாலையில் மொய்த்திருக்கும் வண்டுகள் எழுந்து தேதேயென்று ஆளத்திவைக்குமென்க. (எ)

8.—திரௌபதி 'முனிவன்வந்திடுவானே: என்செய்வது?' என்று நடுங்கிநிற்றல்.

என்னேயென்னேயாதவன்வானிடையுங்கடந்தான்முனிவன்வரு
முன்னேநுகர்ந்தாஞ்சாகபலமூலம்பலபேர்முனிவரொடுங்
கொன்னேமுனியுமுனிக்கினியென்கொல்லோபுரிவதெனநின்ற
மின்னேரிடையாணடுநடுங்கிவிளைவதென்னோவெனப்பயந்தாள்.

(இ - ள்.) நின்ற மின் நேர் இடையாள் - நிலைத்துநிற்பதொரு மின்னலுக்கு உவமையான இடையையுடைய திரௌபதி,—'ஆதவன் - சூரியன், வான் இடை உம் கடந்தான் - ஆகாயத்தின்நடுவிடத்தையுங் கடந்திட்டான்: [உச்சிப்போதும்கழிந்திட்டதென்றபடி]: முனிவன் வரும் முன்னே - இந்தத் துருவாசமுனிவன் (நம்மிடத்துக்கு) வருவதற்குமுன்னமே, பல பேர் முனிவரொடு உம் - பலபெரியஇருடியருடனே, சாக பல மூலம் - இலை காய் கிழங்குகளைக்கொண்ட உணவை, நுகர்ந்தாம்-உண்டிட்டோம்; என்னே என்னே-இது என்னதகாதசெயல்! கொன்னே முனியும்முனிக்கு-இயற்கையாகக்கோபிக்குந்தன்மையுள்ள துருவாசமுனிவனுக்கு, இனி - இப்போது, புரிவது - செயயத்தக்கது,—என்கொல்ஓ—? விளைவது என்ஓ - இப்போது விளையப்போவதுஎதுவோ ?' என - என்று சொல்லி, நடுநடுங்கி - உடம்பு மிகவும்நடுக்கமெடுத்துநிற்க, பயந்தாள்-அச்சங்கொண்டுநின்றாள்; (எ - று.)

சூரியனைத்துதித்து அவனருளால் தருமன்பெற்ற அட்சயபாண்டம் ஒருநாளுக்கு ஒருமுறை வேண்டும் உணவுகளையெல்லாம் அளிக்கவல்லதாதலாலும், அவ்வாறு ஒருமுறை அட்சயபாண்டத்தினுதவியால் அதிதியரோடு தாம் உண்டுவிட்டபடியாலும், இங்ஙனம் திரௌபதி கூறலானாளென்க. முனிவர்கள்வரக்கூடியமாத்தியான்னிககாலம் கடந்தபின் நாம் உண்டிருந்தால் நாம் இப்படி இடர்ப்படவேண்டா என்பாள் 'முனிவன்வருமுன்னேநுகர்ந்தாம்' என்றாள். நின்றமின்னேரிடை-இல்பொருளுவமை. (அ)

9.—தருமன்நினைக்க ஸ்ரீகிருஷ்ணன் இருதயகமலத்தினின்று வெளிப்படல்.

தப்போதாமறற்நம்பியர்க்குந்தருமக்கொடிக்குமிதமாக
வப்போதுணரும்படியுணர்ந்தானசோதைமகனையறத்தின்மக

னெப்போதியாவரெவ்விடத்திலெம்மைநினைப்பாரெனநின்ற
வொப்போதரியானுதிட்டிரன்றனுளப்போதிடைவந்துதித்தானே.

(இ - ள்.) தப்பு ஓதாமல் - (எவர்மீதும்) ஒருபிழையையும் சொல்லி நோவாமல், தம்பியர்க்கு உம் தருமம் கொடிக்கு உம் - தன்தம்பிமார்க்கும் தருமத்தின்வடிவாகிக்கொடிபோல் மெல்லியவளான திரௌபதிக்கும், இதம் ஆக - நன்மையுண்டாம்படி, அறத்தின்மகன் - தருமபுத்திரன், அப்போது உணரும்படி - அந்தவேளையில் (அந்தஸ்ரீக்ருஷ்ணன் தம்மை) அறியும்படி, அசோதைமகனை உணர்ந்தான் - யசோதைவளர்த்தமகனாகிய ஸ்ரீக்ருஷ்ணனைத் தியானித்தான்; எப்போது யாவர் எ இடத்தில் எம்மை நினைப்பார் என நின்ற ஒப்பு ஓது அரியான் - எந்தவேளையில் யாவர் எந்த இடத்தில் எம்மைநினைக்கப்போகிறார்களென்று அதனையே எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற ஒப்புப்பொருள்ஓதுதற்குச்சொல்லமுடியாதபடியுள்ள அந்த ஸ்ரீக்ருஷ்ணன், உதிட்டிரன்தன் - (தன்னைத்தியானித்த) தருமபுத்திரனுடைய, உளம் போதிடை - இதயகமலத்தினிடத்திலிருந்து, வந்து - வெளிப்பட்டுவந்து, உதித்தான் - தோன்றினன்; (எ - று.)

"என்னடியார்க் கென்செய்வனென்றே யிருத்தி" என்றவாறு திருமால் தன்னடியார்க்குத் தான் ஏதாவது உதவுமாறு நேர்படுமா? என்று அதனையே எதிர்பார்த்திருப்பவனாதலால், அவனை 'எப்போதி யாவ ரெவ் விடத்தினம்மை நினைப்பாரெனநின்ற ஒப்போதரியான்' என்றார். 'முன்னே நுகர்ந்தாம்' என்று திரௌபதியும், 'மேவாருரைக்க விவன்வந்ததல்லாற் பிறிதிலலை' என்று வீமசேனனும், 'சுனைநீர்படிந்துவரச் சொல்லிக் கருதிநாம் பிறபுரியுமது கடனே' என்று விசயனும் கூறியதுபோல இந்தத்தருமன் ஒருவர்மீதும் குற்றங்கூறவில்லை யென்பார் 'தப்போதாமல்' என்றார். (கூ)

10.—ஸ்ரீக்ருஷ்ணன் வினவ, திரௌபதி சோற்றுப்பருக்கையொன்றிருந்ததை அப்பிரான்கையிற் கொடுத்தல்.

திருக்கண்கருணைபொழியவருந்திருமாலவரைத்தேற்றிமுத
லருக்கனுதவும்பாண்டத்தினன்னமுளதோவெனவினவ
முருக்கினிதழைக்கருக்குவிக்குமுறுவற்செவ்வாய்த்திரௌபதியு
மிருக்குமுறையோரன்னங்கண்டெடுத்தாள்கொடுத்தாளிறைவன்கை.

(இ - ள்.) திரு கண் - (தன்னுடைய) அழகிய கண்களினின்று, கருணை பொழிய - கருணைவெளிப்பட்டுச்சொரிய, வரும் - அப்போதுவந்த, திருமால் - ஸ்ரீக்ருஷ்ணன், அவரை - அந்தப்பாண்டவரை, தேற்றி - துயரம் மாற்றி,—'முதல் - முன்பு [ஆரணிய வாசஞ்செய்ய ஆரம்பித்த காலத்தில்], அருக்கன் - சூரியபகவான், உதவும் - உதவிய, பாண்டத்தின் - அட்சய பாண்டத்திலே, அன்னம் உளது ஓ - சோறு உள்ளதா?' என வினவ—,—முருக்கின் இதழை கருக்குவிக்கும் செம் முறுவல் வாய் திரௌபதி உம் - (செந்நிறமுள்ள) பலாசமலரையும் கருநிறமுள்ளதென்று சொல்லுமாறு மிகச் சிவந்துள்ள மந்தகாசத்தோடுகூடிய வாயையுடைய திரௌபதியும், இருக்கும்

முறை ஓர் அன்னம் கண்டு - ஒட்டிக்கொண்டிருக்கும் முறையில் ஒருசோற்றுப்பருக்கை யிருந்ததுகண்டு, எடுத்தாள்-எடுத்து, இறைவன் கை கொடுத்தாள்-கடவுளமிசமான அந்த ஸ்ரீக்ருஷ்ணன் கையிற்கொடுத்தாள்; (எ-று.)— அன்னம் என்பதற்கு-உண்ணுதற்கு உரியபொருள் எனப்பொருள்கொண்டு, முதனூலுக்கு ஏற்பக் கீரைத்துணுக்கையைக் காட்டு மென்றலும் உண்டு.

11.—அந்தச்சோற்றுப்பருக்கையை ஸ்ரீக்ருஷ்ணன் தன்வாயிற்கொள்ள, நீராடச்சென்ற முனிவர் உண்டவர்போலத் திருப்தியடைதல்.

அந்தவன்னஞ்சதுர்மறையுமன்னமாகியருள்செய்தோன்
முந்தவுலகமுழுதுண்டமுளரியிதழினிடைவைத்தான்
வந்துசுனையில்வந்தனைசெய்மறையோரெவருமவாரிதிமுன்
றந்தவமுதுண்டவர்போலத்தாபந்தணிந்துதண்ணென்றார்.

(இ - ள்.) அந்த அன்னம் - அந்தச் சோற்றுப்பருக்கை, சதுர்மறை உம் - நான்குவேதங்களையும், அன்னம் ஆகி - அன்னப்பறவைவடிவமாய், அருள்செய்தோன் - அருளிச்செய்தவனாகிய திருமாலினமிசமாகிய அந்த ஸ்ரீக்ருஷ்ணன்,—முந்த - முன்பு [பிரளயகாலத்தில்], உலகம் முழுது உண்ட - உலகங்களையெல்லாம் உட்கொண்டருளிய, முளரி இதழின் இடை - தாமரையிதழ்போன்ற (தனது) வாயிலே, வைத்தான்-இட்டுச்சுவைத்தான்: வந்து - (தருமனுள்ள இடத்து)வந்து, சுனையில் - சுனையிலே (நீராடிவிட்டு), வந்தனை செய் - மாத்தியாஹ்னிகசந்தியின்வந்தனையைப் புரிகின்ற, மறையோர் எவர்உம் - இருடியரெல்லாரும், வாரிதி - பாற்கடல், முன் தந்த - முன்பு தன்னிடத்திலுண்டாக்கிக்கொடுத்த, அமுது - தேவாமிருதத்தை, உண்டவர்போல - உட்கொண்டவர்போல, தாபம் தணிந்து - பசிக்கனலாலாகிய வெப்பம்நீங்கி, தண்ணென்றார்-உடல் குளிரப்பெற்றார்கள்;(எ - று.)

பசியாயிருக்கையில் உடம்பில் சாடராக்கினியால் வெப்பம்உண்டாதல், இயல்பு. அரக்கர் பிரமதேவனிடத்தினின்று பறித்துச்சென்ற வேதங்களைத் திருமால் மீட்டுவந்து ஹம்ஸரூபியாய்ப் பிரமனுக்கு மீண்டும்அருளியதையுட்கொண்டு 'சதுர்மறையு மன்னமாகியருள்செய்தோன்' என்றார். (கக)

12.—கிருஷ்ணனால் யுதிட்டிரன் தீமையினின்று தப்பினனென்று நிச்சயித்துத் துருவாசன் தருமனிடம் மீண்டு வருதல்.

உதரங்குளிர்ந்துவடிவுகுளிர்ந்துள்ளங்குளிர்ந்துமறைநாறு
மதரங்குளிர்ந்துகண்குளிர்ந்தாங்கருமாமுனிவனதிசயித்து
மதரஞ்சனக்கட்டிருவாழுமார்போன்மாயாவல்லபத்தா
லிதரங்கடந்தானுதிட்டிரனெனன்றிவன்பான்மீண்டுமெய்தினனால்.

(இ - ள்.) உதரம் குளிர்ந்து - (பசிக்கனல் அவிந்தமையால்) வயிறு குளிர்ந்து, வடிவு குளிர்ந்து - கோபவடிவமும் மாறி, உள்ளம் குளிர்ந்து - மனங்குளிர்ந்து, மறை நாறும் அதரம் குளிர்ந்து - வேதம்வெளிப்படுகின்ற வாயும் குளிர்ந்து, கண் குளிர்ந்த ஆங்கு-கண்களிலும் வெப்பமானபார்வை மாறிக் குளிர்ந்த பார்வை தோன்றிய அப்போது, அரு மா முனிவன் -

பிறர்க்கரிய பெருமையையுடைய துருவாசமுனிவன், அதிசயித்து - வியப் படைந்து, 'மதர் அஞ்சனம் சண் திரு வாழும் மார்போன் - மதர்த்த மைதீட்டப்பெற்ற கண்களையுடைய இலக்குமி இடைவிடாதுவசிக்கிற மார்பையுடைய திருமாலினமிசமான ஸ்ரீக்ருஷ்ணனுடைய, மாயா வல்லபத் தால்-மாயையின் திறனால், உதிட்டிரன்-தருமபுத்திரன், இதரம்-தீங்கினின் றும், கடந்தான் - தப்பினன்', என்று - என அறுதியிட்டு, இவன் பால் - (தான் உண்ணவருவதாகச் சொல்லிச்சென்ற) இந்தத் தருமபுத்திரனிடத் தில், மீண்டுஉம் - மறுபடியும், எய்தினன் - வந்துசேர்ந்தான். (எ - று)

இதரம்-(நன்மையைக்)காட்டிலும்வேறானது : தீங்கு; பகையென்றும், மரணமென்றுங்கொள்வாருமுளர். சொற்பொருட்பின்வருநிலை. (கஉ)

13.—துருவாசமுனிவன் தருமனைப் பாராட்டிப்பேசுதல்.

உண்டோமுண்டோமும்பருக்குமுதவாவோதக்கடலமுதங்
கண்டோமுன்னாலெவ்வுலகுங்காணாமுகுந்தன்கழலிணைகள்
வண்டோலிடுந்தார்ப்பேரறத்தின்மகனேயுன்னையரசென்று
கொண்டோரல்லாலெதிர்ந்தோரில்யாரேவாழ்வார்குவலயத்தில்.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) வண்டு - வண்டுகள், ஓலிடும் - (தேனைக்குடித்து அந்தக் களிப்பால்) ரீங்காரஞ்செய்கின்ற, தார்-குவளைமலர்மாலையையணிந்த, பேர் அறத்தின் மகனே - பெருமைபெற்ற தருமனுடைய குமாரனே! உம்பருக்குஉம் உதவா - தேவர்கட்கும் (எளிதிற்) கிடைக்கப்பெறாத, ஓதம் கடல் அமுதம் - பெருக்கைக்கொண்ட பாற்கடலினின்றுதோன்றிய அமுதம் போன்றஉணவை,உண்டோம்உண்டோம்-உண்டவர்போலப்பெருந்திருத்தி யடைந்தோம்: எ உலகுஉம் காணா முகுந்தன் கழல் இணைகள் - எந்தஉலகத் தவருங்காணக்கிடைத்தற்குஅரிய முகுந்தனுடைய உபயபாதங்களை, உன் னால்—, கண்டோம் - தரிசிக்கப்பெற்றோம்; உன்னை—, அரசுஎன்று - அரச னென்று, கொண்டோர் அல்லால்-ஏற்றுக்கொண்டு பாராட்டுபவரேயல்லா மல், எதிர்ந்தோரில் - மாறுபட்டவரில், குவலயத்தில் யார் ஏ வாழ்வார் - இந்தப்பூமியில் வாழ்பவர் எவர்தாம்? [எவருமிலர்]; (எ - று.)

துரியோதனன் உன்னைஅரசு எனக்கொள்ளாது எதிர்தலால் அவன் கெடுவான்என்றபொருளைச் சாமானியமாகக் கூறியஇது தெரிவிப்பதனால், இச்செய்யுள் - பிறிதுமொழிதலணி. பாண்டவபட்சபாதியான ஸ்ரீக்ருஷ்ண பகவான் வந்திருத்தலையறிந்து அப்பிரானிடத்து அச்சத்தினால், துருவாச முனிவன் வலுவில் இவ்வாறு கூறுகின்றானென்க. (கங)

14.—இரண்டுகவிகள் - துருவாசன் தான் வந்த காரணத்தைத் தெரிவித்தலைக் கூறும்.

நென்னற்புயங்ககேதனன்றன்னிலயந்தன்னிற்பிம்பாலுங்
கன்னற்கட்டிமுதற்பலதீங்கனிநெய்யுடனேயினிதருந்தி
யின்னற்பசிதீர்பொழுதத்திலென்பால்வரங்கொள்கெனவுரைப்ப
முன்னர்ப்பலவுமுரையாமலொன்றேமொழிந்தான்முடிவேந்தன்.

(இ - ள்) தென்னல் - நேற்று, புயங்க கேதனன்-பாம்புக்கொடியைக் கொண்டவனான துரியோதனன், தன் நிலயம்தன்னில் - தன்னுடைய வாழிடத்தில் [அரண்மனையிலே], தீம் பால்உம் - இனியபாலும், கன்னல் கட்டிமுதல் - கருப்பஞ்சாற்றுக்கட்டிமுதற்கொண்டு, பல தீய கனி - பல இனிய பழங்களும், நெய்யுடனே—, இனிது அருந்தி - இனிதுஉண்டு,— இன்னல் பசி - கொடுமையையுடையபசியை, தீர் பொழுதத்தில் - (யான்) நீங்கியபொழுதில்,—'என்பால் - என்னிடத்து, வரம்கொள் - வரத்தைப் பெற்றுக்கொள்வாய்,' என உரைப்ப-என்று (யானே) சொல்ல,—முன்னர்-முதலில்தானே, பலஉம் உரையாமல் - பலவிஷயங்களேயும் சொல்லாமல், ஒன்றுஏ-ஒருசொல்லையே, முடி வேந்தன் - கிரீடாதிபதியான அந்தத் துரியோதனன், மொழிந்தான்—; (எ - று)—துரியோதனன் மொழிந்த ஒன்று மேலைக் கவியிற் கூறப்படும். எனவினைவ என்றும் பாடம்.

முன்னமே இன்னவரங்கேட்கவேணுமென்று அறுதியிட்டிருந்ததனால், பலவுரைக்காமல் ஒன்றேமொழிந்தான் துரியோதன னென்க. (கச)

15. எம்மிற்றுய்த்தவோதனம்போலெம்மோடிகலிவனம்புகுந்தோர்
தம்மிற்சென்றுநாளைநுகரிதுவேயெனக்குத்தரும்வரமென்
றும்மிற்செல்வமுடையான்போலுரைத்தானதனலுயர்ந்தோர்க
டம்மிற்சிறந்தோய்வந்தனம்யாமென்றானந்தத்தவமுனியே.

(இ - ள்.) 'எம்மில் - எம்மிடத்து, துய்த்த - நுகர்ந்த, ஓதனம்போல்-உணவுபோல, எம்மோடு - எம்முடனே, இகலி - மாறுபட்டு, வனம் புகுந்தோர் தம்மில்-வனம்புகுந்த பாண்டவரிடத்திலே, நாளை சென்று - நாளைக்குப்போய், நுகர் - உண்பாய்: இதுஏ எனக்கு தரும் வரம் - இதுவே எனக்குக்கொடுக்கவேண்டிய வரமாகும்', என்று,— உம்மில் - (எல்லாச்செல்வமுந் தரவல்ல திருமாலினருட் செல்வத்தைப்பெற்ற) உம்மைக்காட்டிலும், செல்வம்உடையான்போல்-மிக்கபொருள்படைத்தவன்போல, உரைத்தான் - (துரியோதனன் அறியாமையாற்) கூறினான் : அதனால்—, உயர்ந்தோர்கள் தம்மில் சிறந்தோய் - உயர்ந்தவர்களிற் சிறந்தவனே ! யாம் வந்தனம் - யாம் (உன்னிடத்து விருந்தாக) வந்தோம், என்றான் - என்று (தான் வந்த காரணத்தைத்) தெரிவித்தான் : (யாவனென்னில்),—அந்த தவம் முனி - அந்தத்தவமுள்ள துருவாசமுனிவன்; (எ - று.)

ஒருகால் துருவாசமுனிவன் பதினாயிரவர்சீடர்களுடனே துரியோதனனிருக்குமிடத்துச் சேர்ந்தானாக, துரியோதனன் அம்முனிவரிடத்து அச்சத்தினால் தானே இரவும்பகலும் சோர்வின்றி உபசரிக்க, முனிவன் அங்குத் தானே வசிப்பவனாய் அகாலத்தில்உணவுவேண்டுவதும் நீராடிஉண்ணாவருகிறேனென்றுசொல்லி எமக்குப்பசியில்லையென்பதுமாகி இவ்வாறெல்லாம் நிகழ்த்தவும் துரியோதனன்அம்முனிவனைஉபசரிக்க, அதனால் முனிவன் மகிழ்ந்து 'வேண்டும்வரம்கேட்பாய்'என்ன, 'வனத்தில்வசிக்கும் எமதுதமையனாரிடத்தும் யாவரும்உண்டு திரௌபதிஇளைப்பாறும்போது எம்மிடத்துவிருந்தினராகஇருந்ததுபோலவே விருந்தினராகவேணுமென்பதுவே

யான் வேண்டும் வரம்' என்று துரியோதனன் கேட்டுக்கொள்ள, அப்படியே என்றுஇசைந்து தருமபுத்திரனிடம் யாவரும்உண்டு திரௌபதி இளைப்பாறும்போது துருவாசமுனிவன் சீடரோடும் விருந்தினனாகவந்தானென்ற விவரத்தை முதனூலின் லறிக. யாவரும்உண்டுஇளைப்பாறும்போது விருந்தினனாகச் சீடரோடும் துருவாசமுனிவன்சென்றால் அப்போது இம்முனிவனைப் பாண்டவரால் உபசரிக்கமுடியாதாகையால் பாண்டவர்கள் இம்முனிவன்சாபத்திற்குஇலக்காகி நாசமாய்விடுவார்களென்பது துரியோதனன் கர்ணனுடன் சேர்ந்து செய்திருந்த துராலோசனை யாகும். (கூ)

16.—தருமனை வரங்கேட்குமாறு துருவாசமுனிவன் வேண்ட, தருமன் வரங்கேட்டல்.

பரங்கொண்டுலகமுழுதுமிசைபரப்பிப்புரப்பானெனும்பாண்டுவெனு
முரங்கொண்டுயர்ந்தோனளித்தருளுமுரவோய்நீயிங்குனக்கான
வரங்கொண்டிடுகவெனமுனியைவணங்கிப்பகைத்தோர்மாற்றங்க
டிரங்கொண்டொன்றுங்கொள்ளாதியென்றான்வளையாச்செங்கோலான்.

(இ - ள்.) 'உலகம்முழுதும்-உலகம்முழுவதையும், பரம் கொண்டு-தாங்குந்தொழிலை மேற்கொண்டு, இசை பரப்பி-கீர்த்தியை (உலகமுழுவதிலும்) பரவச்செய்து, புரப்பான் - பாதுகாக்குந்தன்மைவாய்ந்தவனான, பாண்டு எனும் - பாண்டுஎன்கிற, உரங்கொண்டுஉயர்ந்தோன்-வலிமையினால் மேம்பட்டவனானஅரசன், அளித்தருளும்-பெற்ற, உரவோய்-வலிமையுள்ளவனே! நீ—, இங்கு-இப்போது, உனக்குஆன-உனக்குவிருப்பமான, வரம்-வரத்தை, கொண்டிடுக-(என்னிடம்)பெற்றுக்கொள்க,' என-என்றுசொல்ல,—வளையா செங்கோலான் - நீதிநெறிதவறாத செங்கோலையுடையவனான தருமபுத்திரன், முனியை-துருவாசமுனிவனை, வணங்கி—, 'பகைத்தோர்-(எம்மைப்) பகைத்தவரான துரியோதனாதியரின், மாற்றங்கள் - வார்த்தைகளை, திரம் கொண்டு - உறுதியாகக்கொண்டு, ஒன்றும் கொள்ளாதி-ஒருசிறிதும் (எம்மீது) மாறுபாடு கொள்ளாதிருப்பாய்,' என்றான் - என்றுவரம்வேண்டினான்; (எ - று.)

வளையாச்செங்கோலானதலால், துரியோதனாதியர்அழியுமாறு வரம் வேண்டினானில்லை யென்க. திரங்கொண்டென்றுங் கேளாதிஎன்றும்பாடம்.

17.—துருவாசமுனிவனும் ஸ்ரீக்ருஷ்ணனும் தந்தமிடத்துக்குச்செல்ல, தருமன் தம்பியரோடும்திரௌபதியோடும் வனத்துத் தனியிருத்தல்.

அன்னோன்மொழிகேட்டம்முனியுமடைந்தான்றன்பேருந்தவக்கான்
முன்னோனானமுகுந்தனுந்தன்முந்நீர்த்துவரைநகர்புக்கான்
பின்னோர்வணங்கப்பேரழலிற்பிறந்தாண்மகிழப்பேரருட்குத்
தன்னோடொருவர்நிகரில்லானிருந்தானந்தத்தனிவனத்தே.

(இ - ள்.) அன்னோன் மொழி கேட்டு - அந்தத் தருமபுத்திரனுடைய வார்த்தையைக் கேட்டு, அ முனிஉம்-அந்தத்துருவாசமுனிவனும், தன் பேர் அருந் தவம் கான் - தனக்குரிய பெரிய அரியதவத்திற்குஉரியகாட்டை, அடைந்தான்—; முன்னோன் ஆன முகுந்தன்உம்-(யாவர்க்கும்)முற்பட்டவ

ஞன திருமாலினமிசமான ஸ்ரீக்ருஷ்ணனும், தன் - தன்னுடைய, மூந்நீர் துவரைநகர் - கடலினாற்சூழப்பட்டுள்ள துவாரகாபுரியை, புக்கான்-அடைந்தான்; பேர் அருட்கு தன்னோடு ஒருவர் நிகர் இல்லான் - மிக்ககருணைக்குத் தன்னோடொருத்தரும் ஒப்பானவரைப் பெறாதவனான தருமன், பின்னோர் வணங்க - தம்பிமார்வணங்கவும், பேர் அழலில் பிறந்தாள்-பெருமைபெற்ற யாகாக்கினியிலேதோன்றினவளான திரௌபதி, மகிழ-மகிழ்ச்சியடையவும், அந்த தனிவனத்தே-ஒப்பற்றஅந்தவனத்திலே,இருந்தான்-தங்கியிருந்தான்.

வந்தவர்கள் சென்றிட்டதனால் வனத்தே தனியிருந்தானென்று ரெனினுமாம். (கள)

துருவாசமுனிச்சருக்கம் முற்றிற்று.

---

ஏழாவது

# பழம்பொருந்துசருக்கம்

பழம்பொருந்தியதைப்பற்றிக்கூறும்சருக்கமென்க. பழம்பொருந்துஎன்பது - எழுவாய்த்தொடரும், பொருந்துசருக்கமென்பது-வினைத்தொகையுமாம். அருமையானதொருநெல்லிக்கனியைக் கண்டு திரௌபதி அதனைப் பறித்துத் தருமாறு கேட்க, அருச்சுனன் அதனை அம்பினால்வீழ்த்துதலும் அருகிற்கண்டவர் அக்கனியைப்பற்றியவரலாற்றைத்தெரிவிக்கவே, அஞ்சி அவ்விஷயத்தைச்சொல்லி அக்கனியை அருச்சுனன் யுதிட்டிரன்முன்னே வைக்க,யுதிட்டிரன் என்செய்வதென்று ஆலோசித்து நகுலன்மொழிப்படியே க்ருஷ்ணபகவானைத் தியானிக்க, அன்னான் வெளிப்பட்டு, 'நீவிர் உமதுஉள்ளத்திலுள்ள விஷயங்களை யொளிக்காமற் சொல்வீர்களானால் இந்தப்பழம் மரத்திற்போய் ஒட்டிக்கொள்ளும்' என்றானாக, அங்ஙனமே ஐவரும் திரௌபதியும் தம்முடையஉள்ளக்கிடக்கையைக்கூறவே, அந்தக்கனி பறித்தஇடத்திலேயொட்டிக்கொண்டதென்ற செய்தியைக் கூறும் பகுதி யென்க. இவ்வரலாறு, இப்போது அச்சிட்டுவெளிவந்துள்ள வடநூல்வியாசபாரதப்பிரதிகளில் எதிலும் காணப்படவில்லை.

1.—திரௌபதி அமித்திரமுனிவற்கென்று ஏற்பட்டுள்ள நெல்லிக்கனி யொன்றைக் காணுதல்.

அந்நெடு வனத்திற் சின்னா ளகன்றபி னமித்தி ரன்பே
ரென்னுமா முனிவற் கென்றே யாவரு மருகு செல்லா
நன்னல மிகுத்த நெல்லி நறுங்கனி யொன்று கண்டாள்
கன்னலும் புளிக்கு மின்சொற் கயிரவங் கருகும் வாயாள்.

(இ - ள்.) அ நெடு வனத்தில் - அந்தப்பெரியகாட்டிலே, சில் நாள் அகன்ற பின்-சிலநாள்கழிந்தபிறகு,—அமித்திரன் என்னும் பேர் மா முனிவற்கு என்றே - அமித்திரனென்றுபேர்பூண்ட சிறந்தமுனிவற்காகவே யேற்பட்டிருப்பதும், (அதுபற்றி), யாவர்உம் அருகு செல்லா - எவரும் சமீபத்

திற்செல்லப்பெறுதற்குமான, நல் நலம் மிகுத்த நெல்லி நறுங் கனி ஒன்று - சிறந்த நன்மைமிகுந்த நெல்லியின் நறுவியகனியொன்றை,—கன்னலும் புளிக்கும் இன் சொல் - கருப்பஞ்சாறும்புளிப்பானதுஎன்றுசொல்லும்படி (அவ்வளவுமிக்க)இனியசொல்லைப்பேசுகிற, கயிரவம் கருகும்-செவ்வாம்பல் மலரும் கருநிறமுள்ளதென்றுதோன்றும்படி மிக்கசெந்நிறமுள்ள, வாயாள்-வாயையுடையவளான திரௌபதி, கண்டாள்—; (எ - று.)—கயிரவமனைய வாயாள் என்று பிரதிபேதம்.

முதற்பதின்மூன்றுகவிகள் - முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றவை மாச்சீர்களுமாகிவந்த கழிநெடிலடிநான்குகொண்டஅறுசீராசிரியவிருத்தங்கள். (க)

2.—இந்தக்கனியை எனக்குத் தரவேண்டுமென்று திரௌபதி அருச்சுனனிடங் கூறுதல்.

இக்கனியெனக்குநீநல்கென்றுவில்லெடுத்துக்கொண்ட
மைக்கனிக்களவுமானும்வடிவுடைவிசயனோடு
மெய்க்கனிவுடைமைதோன்றவிளம்பினாள்வீசுதென்றன்
முக்கனிகமழுஞ்சோலைமுகில்தவழ்நாடன்பாவை.

(இ - ள்.) வீசு தென்றல் - வீசுகின்ற தென்றற்காற்றானது, மு கனி கமழும் - (வாழை மா பலா என்ற) மும்மரங்களின்பழங்களுடையநறுமணங் கமழ்வதற்குக்காரணமான, சோலை - சோலைகளிலே, முகில் தவழ் - மேகங்கள்படிந்துசெல்லப்பெற்ற, நாடன் - பாஞ்சாலநாட்டிற்குஉரியதுருபத மகாராசனுக்கு, பாவை-பெண்ணான திரௌபதி,—வில் எடுத்துக்கொண்ட-வில்லைத்தாங்கிக்கொண்டுள்ள, மை - மேகத்தையும், களவுக்கனி-களாப்பழத்தையும், மானும்-ஒத்த, வடிவுஉடை - கறுத்த வடிவத்தையுடைய, விசயனோடு-அருச்சுனனுடனே,மெய-(தன்)மனத்திலே, கனிவுஉடைமை-விருப்பமுடைமை, தோன்ற - விளங்குமாறு, 'நீ—,இ கனி எனக்கு நல்க - இந்த நெல்லிக்கனியை எனக்குத்தருக,' என்று—, விளம்பினாள் - சொன்னாள்;

மெய்க்கனிவு - உண்மையானவிருப்பமுமாம். முக்கனி - தொகைக்குறிப்பு. வில்விறுத்துக்கொண்ட என்று பிரதிபேதம். (உ)

3.-அருச்சுனன்அந்தக்கனியைவிற்கணையால் எய்துவீழ்த்தித்திரௌபதிக்குத் தருதலும், கண்டவர் 'இறுத்தோனுக்கு என்னஆபத்துநேருமோ ?' எனல்.

சோமகர்க்கரசன்பாவைசொல்லுமுன்வில்லுவாங்கி
மாமுனிக்குணவாய்நின்றமதுரவாமலகந்தன்னை
யேமுறைதொடுத்துவீழ்த்தியீதலுமாங்கட்கண்டோ
ரேமுறக்காணிலிப்போதென்படுமிறுத்தோனென்றார்.

(இ-ள்.)சோமகர்க்குஅரசன்பாவை-சோமகரென்பார்க்குஅரசனான துருபதனுடைய மகளானதிரௌபதி, சொல்லும்முன் - ('இதனைஎனக்குத்தருக' என்று) சொல்லுவதற்குமுன்னே [சொன்னவுடனேஎன்றபடி], - (அருச்

சுனன்),—மாமுனிக்கு - சிறந்த அமித்திரனென்னும்முனிவனுக்கு, உணவு ஆய்நின்ற - உணவாகவிருந்த, மதுரம் ஆமலகந்தன்னை - இன்சுவையுள்ள நெல்லிக்கனியை, வில்லு வாங்கி-வில்லைவளைத்து, எ முறை தொடுத்து-அம்பைத்தொடுக்க வேண்டியமுறையிலே எய்து, வீழ்த்தி-(அந்தமதுரநெல்லிக் கனியை மரத்தினின்று) வீழச்செய்து, ஈதலும்-(திரௌபதிக்குக்) கொடுத்தவுடனே,—ஆங்கண்-அவ்விடத்து, கண்டோர் - (அச்செயலைப்) பார்த்தவர், இப்போது—, காணில் - (அமித்திரமுனிவன்) கண்டால், இறுத்தோன் - (இதனை) எய்துவீழ்த்தியவன், எமுறஎன் படும் - கலக்கமுண்டாகுமாறு என்ன ஆபத்துக்குஉள்ளாவனோ? என்றார் - என்றுசொன்னார்கள்; (எ - று)

சோமகன் - பாஞ்சாலதேசத்து மன்னவன் : அவனது வமிசத்தவர் - சோமகர். கண்டோர்என்றது ஆச்சிரமத்து வசிப்பவரான இருடியரை. இது மேற்கவியிற்பெறப்படும். சொல்லுமுனமித்திரப்பேர்என்றுபிரதிபேதம். (௩)

4.—அதுகேட்டஅருச்சுனன் அக்கனியைத் தருமன்முன்னே வைத்துத் தான் செய்த செயலைத் தெரிவித்தல்.

*கண்டவம்முனிவர்சொல்லக்கடவுளர்கோமான்மைந்தன்*
*கொண்டவக்கனியைமூத்தகொற்றவன்றிருமுன்வைத்து*
*மண்டழற்பாவைசொல்லான்மதியிலேனெய்தேனென்றான்*
*றிண்டிறற்றேவர்க்காகத்திதிமைந்தராவிகொண்டான்.*

(இ-ள்.) கண்ட-(அருச்சுனன் அமித்திரமுனிவற்குஉணவான ஆமலகக் கனியைஅம்பாலெய்ததைப்)பார்த்த, அ முனிவர்-அந்தஇருடியர், சொல்ல - '(காணில் எமுற என்படும் இறுத்தோன்)' என்றுகூறவே,—திண்திறல் தேவர்ககாக திதி மைந்தர் ஆவி கொண்டான் - மிக்கவலிமையையுடைய தேவரின்பொருட்டுத் திதியென்பவளின்மக்களான நிவாதகவசர் காலகேயர் முதலானஅசுரர்களின் உயிரைக்கவர்ந்தவனான, கடவுளர்கோமான் மைந்தன் - தேவேந்திரன்குமாரனான அருச்சுனன், கொண்ட - (விற்கணையால்) பறித்த, அ கனியை-அந்தநெல்லிக்கனியை, மூத்த கொற்றவன் திரு முன் - (தம்மில்யாவரினும்) பெரியவனான வெற்றிபொருந்திய தருமனுடைய முன்புறத்திலே, வைத்து—, 'மதி இலேன்-விவேகமில்லாதவனான யான், மண்டு அழல் பாவை சொல்லால்-நிரம்பியவேள்வித்தீயினின்றுதோன்றிய பெண்ணான திரௌபதியின்பேச்சைக்கேட்டு, எய்தேன் - (முனிவற்குஉணவான இந்தஆமலகத்தை) அம்பெய்திவீழ்த்தினேன்,' என்றான் - என்றுதெரிவித்தான்; (எ - று.)

"ஸ்த்ரீபுத்தி : ப்ரளயாந்தக :" என்றவாறு பெண்புத்தியைக்கேட்டு ஆராயாதுஇச்செயலைச்செய்தது, ஆபத்துக்குஉள்ளாக்கிவிட்டது ; இதற்கு என்செய்வதுஎன்று அருச்சுனன் வினவியபடி. (௪)

5.—தருமன் நொந்துகூறுதல்.

*காடுறைவாழ்க்கையெய்திக்காய்கனிமூலந்தின்று*
*நீடுறுகாலம்போக்கிநீங்கலாதிருக்குநம்மை*

நாடொறுமிடையூறன்றிநண்ணுவதில்லையாயி
னேடுறுதாராய்செய்வதென்கொலென்றியம்பினனே.

(இ - ள்.) ஏடு உறு தாராய் - பூவிதழ்மிக்க மாலையையணிந்த அருச்சுனனே ! காடு உறை வாழ்க்கை எய்தி-காட்டிலேவாழ்கின்ற வாழ்க்கையையடைந்து, காய் கனி மூலம் தின்று - காய்கனிகளையும்-கிழங்குகளையும் புசித்து, நீடு உறு காலம் போக்கி - மிகப்பலவானகாலத்தைக்கழித்து, நீங்கலாது - (இங்ஙனவாழுங் காட்டைவிட்டு) நீங்காமல், இருக்கும் - வசிக்கிற, நம்மை—,—நாள்தொறுஉம் - நாடோறும் [அடிக்கடி], இடையூறு அன்றி- (இனிது வாழ்வுக்கு) மூரணான செயலன்றி, நண்ணுவது-(இனிதுவாழ்கைக்குப்) பொருந்தியசெயல், இல்லை ஆயின் - இல்லையாகுமானால்,—செய்வது - (நான்)செய்யக்கூடியது, என்கொல்-என்னேயோ? என்று—, இயம்பினன்- (வருத்தத்தோடு) சொன்னான் ; (எ - று.)

காட்டிலும் காய்கனிகிழங்குகளையுண்டு இனிதுவாழலாமென்றால், அங்ஙன்வாழவொண்ணாதபடி ஏதேனும் துன்பம் வந்தபடியேயுள்ளதே ! என்செய்வது ? என்றுநொந்தனன் தருமபுத்திரனென்பதாம். (இ)

6.—இரண்டுகவிகள்-ஒருதொடர்: அமித்திரமுனிவன் தம்மைச்சினவாமைக்கு வீமசேனன் உபாயங்கூற, அருச்சுனன் மீளச் சொல்லலுறுதல்.

அவ்வுரைவீமன்கேட்டாங்கமித்திரன்வந்தபோதே
யிவ்வுரைகேட்கினம்மையெரியெழச்சபித்தறிண்ணம்
வெவ்வுரையுரையாமுன்னமெய்ம்முனிதன்னைப்போற்றிச்
செவ்வுரைகூறினம்மைச்சீறுமோசீறல்செய்யான்.

(இ - ள்.)அ உரை-(தருமன் கூறிய)அந்தப்பேச்சை, வீமன்—, கேட்டு-செவியேற்று, ஆங்கு - அவ்விடத்தே, அமித்திரன் வந்த போதே—,—இ உரை கேட்கின் - (ஒருவன் அம்பெய்துஉணவானநெல்லிக்கனியை வீழ்த்தி எடுத்துப்போனான் என்ற) இந்தவார்த்தையைக் கேள்வியுற்றால்,—நம்மை-, எரி எழ - கோபாக்கினி வெளிப்பட, சபித்தல்-சபிப்பது, திண்ணம் - நிச்சயம் : வெவ் உரை - கொடியசாபவார்த்தையை, உரையா முன்னம் - (அம்முனிவன்) சொல்வதற்குமுன்னம், மெய் முனி தன்னை - உண்மையுள்ள அமித்திரனென்றஅம்முனிவனை, போற்றி - துதித்து, செவ்உரை-செம்மையானஉரையை, கூறின் - (நாம்) சொன்னேமேயானால், நம்மை—, சீறும் ஓ - (அம்முனிவன்) சினங்கொள்வானோ? சீறல் செய்யான் - சினங்கொள்ள மாட்டான்; (எ - று.)

செவ்வுரை - கோபங்கொள்ளாது அநுக்கிரகஞ்செய்யுமாறு வேண்டிக்கொள்ளும்உரை. வற்புறுத்துமாறு 'சீறுமோ ? சீறான்' என்று வினாவும் விடையுமாகக் கூறுகிறான். வெவ்வுரை யுரையாமுன்னம் - உணவான நெல்லிக்கனியை ஒருவன்பறித்துச் சென்றானென்ற கடியபேச்சை ஆச்சிரமவாசிகளான முனிவர் அந்த அமித்திரனிடங் கூறுதற்குமுன்னம் எனினுமாம்.

7. பொறுத்திடுமேவிடாவைம்புலத்தினனுதலாலே
மறுத்திடானையநின்றன்மாசிலாவாய்மையென்ன
நிறுத்திடுந்துலையோடொப்பானினைவினுக்கிசையத்தெவ்வைச்
செறுத்திடுவிசயன்மீளச்செப்பினன்செப்பமாக.

(இ - ள்.) (அம்முனிவன்), மேவிடா ஐம்புலத்தினன்-மீறுதலில்லாத [தனக்குவசப்பட்ட] ஐம்புலன்களையுடையவன் : ஆதலாலே—, பொறுத்திடும் - (நம் பிழையைப்) பொறுப்பான். ஐய-ஐயனே! நின்தன்-உன்னுடைய, மாசுஇலா - குற்றமில்லாத, வாய்மை - வாய்ச்சொல்லை, மறுத்திடான் - மறுத்துசொல்லான் : என்ன - என்று(வீமன்)சொல்ல,—நிறுத்திடும் துலையோடுஒப்பான் - (பண்டங்களை) நிறுக்கின்றதராசின்முள்ளையொத்துநடுநிலையில்நிற்பவனாகிய தருமபுத்திரன், நினைவினுக்கு - (வீமசேனனுடைய) எண்ணத்திற்கு, இசைய-உடன்பட்டிருக்க,—தெவ்வை செறுத்திடு விசயன்-பகைவரையொழிக்கவல்ல அருச்சுனன், மீள—, செப்பம்ஆக-நேர்மையாக, செப்பினன் - சொல்லலானான் ; (எ - று.)—அதனை மேற்கவியிற் காண்க.

நெல்லிக்கனியைத் தருமன் முன்னேவைத்து முன்னே சிலசொல்லிய விசயன் இப்போது தனக்குத்தான் தீங்குநேரு மென்று கூறுவதனால், 'விசயன் மீளச் செப்பமாகச் செப்பினன்' என்றது. நிறுத்திடுந்துலையோடொப்பான் நினைவினுக்குஇசையஎன்ன என்று இயைப்பினுமாம். (எ)

8.—அருச்சுனன்'என்னொருவனையன்றி மற்றையோரை முனிவன் சபியானாதலால், நீவிர் அஞ்சவேண்டாமே' எனல்.

செய்தவனினிதுமாந்தத்தேவர்நாளொன்றுக்கொன்றுங்
கைதவமில்லாநெல்லிக்கனியினைக்கருதுறாம
லெய்தவென்றன்னையன்றியாரையுமிடான்வெஞ்சாப
மெய்தவறாதசொல்லாய்வெருவுதலென்கொலென்றான்.

(இ - ள்.) 'மெய் தவறாத சொல்லாய் - உண்மையினின்றுதவறாத சொல்லையுடையவனே! செய் தவன் - தவஞ்செய்யுமியல்பினனான அமித்திர முனிவன், இனிது மாந்த - நன்குஉண்ணும்படி, தேவர்நாள் ஒன்றுக்கு ஒன்றுஆம்-தேவர்களின்நாளாகிய ஒருவருஷத்திற்கு ஒருகனிவீதம் தோன்றுகின்ற, கைதவம் இல்லா - துன்பமில்லாத [உண்டார்க்கு இன்பமளிக்கின்ற] நெல்லி கனியினை - நெல்லியின்பழத்தைப்பற்றி, கருதுறாமல்-மனத்திலாராய்ச்சியின்றி, எய்த-அம்பினால்வீழ்த்திய, என் தன்னை அன்றி-என்னையல்லாமல், யாரைஉம்-(வேறு) எவர்மீதும், வெம் சாபம் இடான்-கொடுஞ்சாபச்சொல்லை இடமாட்டான் : (ஆகவே), வெருவுதல் - (நீவிர் அம்முனிவன்சபிப்பானேஎன்று) பயப்படுவது, என்கொல் - என்னகாரணம்பற்றி?' என்றான் - என்றுவினவினான்; (எ - று.)

வருஷத்துக்கு ஒருமுறைதோன்றும் இந்தநெல்லிக்கனியை அமித்ர முனிவன் உண்டானபின் இன்னும்ஓர்யாண்டுவரையிலும் பசியென்பது அம்முனிவனை அணுகாதபடிசெய்யவல்லதென்பான் 'கைதவமில்லாநெல்லிக்கனி'

என்றான். மனிதர்க்குஓரியாண்டு தேவர்க்குஒருநாளென்று நூல்கள் கூறும். எய்தவன்றன்னையன்றிஎன்றுபிரதிபேதம். (அ)

9.—'உனக்குஇடர்வர யாம்பிழைப்போமோ?' என்று தருமன் கூறுதல்.

*வேந்தனம்மாற்றங்கேட்டுவில்வலான்றன்னைநோக்கி*
*யேந்திழைசொல்லவோரா தினியவிக்கனியின்றீர்ந்தாய்*
*மாந்தரின்மடங்கலொப்பாய்வருத்தநீயுழக்கயாமோ*
*பேர்ந்துபோய்ப்பிழைப்போமென்றான்பிதாவினுங்கருணைமிக்கான்.*

(இ - ள்.) பிதாவின் உம் கருணை மிக்கான்-பெற்றதந்தையைக்காட்டிலும் கருணைமிக்குள்ளவனாகிய, வேந்தன் - தருமபுத்திரராசன்,—அ மாற்றம் கேட்டு - (அருச்சுனன்சொன்ன) அந்தவார்த்தையைக்கேட்டு, வில்வலான் தன்னை நோக்கி - வில்லில்வல்லவனான அருச்சுனனைப் பார்த்து, 'மாந்தரின் மடங்கல் ஒப்பாய் - மனிதருக்குள் சிங்கம்போலச்சிறந்தவனே! ஏந்து இழை-தரித்தபூணையுடைய திரௌபதி, சொல்ல—, ஓராது - (நாம் இக் கனியை வீழ்த்தினால் என்னவிளையும் என்று) ஆராயாமல், இன்று—, இனிய இ கனி - இனியஇந்தநெல்லிக்கனியை, ஈர்ந்தாய் - வீழ்த்திட்டாய்; (இதன் பயனாக), நீ—, வருத்தம் உழக்க-(முனிவன் சாபத்தாலான) வருத்தத்தை யனுபவிக்க, யாம் - நாங்கள், பேர்ந்து போய் - (உன்னை)விட்டுப்போய், பிழைப்போமோ—?' என்றான் - என்றுகூறினான்; (எ - று.)

புத்திரனிடத்துப் பிதா செய்யுங் கருணையைவிட மிக்ககருணையைச் செய்பவனென்பது 'பிதாவினுங்கருணைமிக்கான்' என்பதன்கருத்து. (கூ)

10.—'முனிவன்சினத்தைப்போக்கி நாமும் மேம்படவேணுமானால், இன்னமும் க்ருஷ்ணனைநினைப்பாய்'என்று நகுலன் கூறுதல்.

*அம்முனிவந்தவாபத்ததனினுங்கொடிதிக்கானத்*
*திம்முனியுணவுகொண்டதெனவெரீஇநகுலன்றானும்*
*வெம்முனிவகற்றிநாமுமேம்படவேண்டினின்னந்*
*தெம்முனிதிகிரியானைச்சிந்தனைசெய்தியென்றான்.*

(இ - ள்.) 'அ முனி - அந்தத்துருவாசமுனிவன், வந்த-(உணவுண்ண வேண்டி)வந்ததனால்விளைவதாயிருந்த, ஆபத்துஅதனின்உம்-ஆபத்தைக்காட்டிலும், இ கானத்து - இந்தக்காட்டிலே, இ முனி - இந்தஅமித்திரமுனிவனுடைய, உணவு - உண்ணும்பண்டமானநெல்லிக்கனியை, கொண்டது - கவர்ந்தது, கொடிது - கொடியது [மிக்கதீமையை விளைப்பது],' என - என்றுசொல்லி, வெரீஇ - அச்சங்கொண்டு,—நகுலன் தான்உம் - நகுலனும்—'வெம் முனிவு-கொடிய (இருடியின்) கோபத்தை, அகற்றி-போக்கி, நாம்உம் - நாமும், மேம்பட வேண்டின் - மேன்மைப்பட வேண்டினால், இன்னம் - இன்னமும், தெம் முனி திகிரியானை - பகைவரைக் கோபித்து அடக்கவல்ல சக்கராயுதத்தையுடையக்ருஷ்ணனை, சிந்தனைசெய்தி - (இங்கு வருமாறு) கருதுவாய்,' என்றான்-என்றுகூறினான்; (எ - று.)

திருவாசமுனிவனது சாபத்தினின்று தப்பும்படி முன்பு ஒருமுறை க்ருஷ்ணனை நினைத்தமையால், 'இன்னம் திகிரியானைச் சிந்தனைசெய்தி' என்றான். (௧0)

11.—சகதேவன் வார்த்தை.

விளைதவமுனிவன்கண்டுவெகுளுமுனவன்றாள்போற்றிக்
கிளைபடுநெல்லிவாசக்கேழுறுகனிமுன்வைத்தா
லுளைவுறமுனியானம்மையுறுதிமற்றிதுவேயென்றா
விளையவன்றானுந்தம்முனினைவினுக்கேற்பச்சொன்னான்.

(இ-ள்.) 'விளை தவம் முனிவன் கண்டு வெகுளும்முன்-முதிர்ந்த தவத்தையுடையஅமித்திரமுனிவன் (தனக்குஉணவானநெல்லிக்கனி பறியுண்டதைக்)கண்டு கோபித்துக்கொள்வதற்குமுன்னம், அவன் தாள் போற்றி-அம்முனிவனுடையதிருவடிகளிலேநின்றுதுதித்து, கிளை படு நெல்லி வாசம் கேழ் உறு கனி-கிளையிலேதோன்றிய நெல்லியின் நறுமணமுள்ள நன்னிறம்பொருந்திய பழத்தை, முன் - (அம்முனிவனுடைய)முன்னே, வைத்தால்—, (அம்முனிவன்), உளைவுஉற நம்மை முனியான் - மனத்தில்வருத்தமுண்டாக நம்மைச் சினவான்: மற்று-இனி, உறுதி இதுவே—,' என்று-என்று, இளையவன்தானும் - சகதேவனும், தம்முன் நினைவினுக்கு - தமது அண்ணனான தருமபுத்திரனுடையஎண்ணத்திற்கு, ஏற்ப - இசையுமாறு, சொன்னான்—; (எ - று.)

தருமபுத்திரன் முதலிற்கொண்டநினைவு முனிவன்வெகுளுதற்குமுன்னம் அவனைத் துதித்து இக்கனியைஅவன்முன்வைத்திட்டால் அவன்வெகுளானென்பது. இதனை, எழாங்கவியால் அறியலாம். நகுலன்கூறியதைக் கேட்டதும் அவ்வெண்ணம் தருமபுத்திரனுக்கு மாறியதென்க. அவன்-க்ருஷ்ணனென்பாருமுளர். (௧௧)

12.—திரௌபதி கூறுதல்.

பெண்மொழிகேளாரென்றும்பெரியவரெனக்கொண்டிந்த
மண்மொழிவார்த்தைபொய்யோவருத்தநீருற்றவெல்லா
மெண்மிகவெண்ணின்முன்னமென்பொருட்டன்றோவென்று
கண்மலரருவிசோரக்கனற்பிறந்தாளுஞ்சொன்னாள்.

(இ - ள்.) 'என்றும் பெரியவர் பெண்மொழி கேளார் எனக்கொண்டு இந்த மண்மொழி வார்த்தை பொய்ஓ - 'எப்போதும் பெரியவர் பெண்மொழியைக்கேட்டுநடவார்' என்று இந்தஉலகோர் சொல்லுகிறவார்த்தை பொய்யாகுமோ? [ஆகாதே]: முன்னம் நீர் உற்ற வருத்தம் எல்லாம் எண் மிக எண்ணின்-முன்பு நீங்கள்அடைந்த வருத்தங்களெல்லாவற்றையும்பற்றி மனத்தினால் நன்குஆராய்ந்தால், என்பொருட்டு அன்றுஓ - என்பொருட்டாகவல்லவா விளைந்தது ?' என்று—, கண் மலர் - மலர்போன்ற கண்களினின்று, அருவி சோர - நீர்ப்பெருக்குச்சிந்த, கனல்பிறந்தாள்உம் - தீயினின்றுதோன்றினவளான திரௌபதியும், சொன்னாள்— ; (எ - று.)

*எண் - எண்ணுதற்குக் கருவியானது : மனம். மண் - மண்ணுலகோர்க்கு, ஆகுபெயர். பெண்மதிகொள்ளா ரென்றுபிரதிபேதம்.* (கஉ)

13.—எல்லார் வார்த்தையையுங் கேட்டபின் நகுலன்சொல்லே முறையானதென்று தருமன் ஸ்ரீக்ருஷ்ணனை நினைக்க, அப்பெருமான் வருதல்.

*தம்பியர்தாமும்வேள்வித்தையலுமுரைத்தமாற்றங்*
*கிம்புரிநெடுங்கோட்டம்பொற்கிரிவல்லோன்கேட்டபின்னர்*
*வெம்பரிநகுலன்சொல்லேவிதியெனக்கருதியப்போ*
*தெம்பெருமானையுன்னவிவனெதிரவனும்வந்தான்.*

(இ - ள்.) *கிம்புரி நெடுங் கோடு அம் பொன் கிரி வல்லோன் - பூண் கட்டிய நீண்ட தந்தங்களையும் அழகிய பொன்னாபரணங்களையுமுடைய மலை போன்ற யானையைச் செலுத்துவதில் வல்லவனான தருமன், தம்பியர் தாம் உம் - தம்பிமார்களும், வேள்வி தையல் உம் - யாகாக்கினியில்தோன்றிய பெண்ணான திரௌபதியும், உரைத்த - சொன்ன, மாற்றம் - வார்த்தையை, கேட்டபின்னர்—,—வெம் பரி நகுலன் சொல் ஏ விதி என - விரைந்து செல்லவல்ல குதிரைத்தொழிலில்வல்ல நகுலனுடையசொல்லே செய்தற்கு உரியதுஎன்று, கருதி - நினைத்து,—அப்போது—, எம்பெருமானை உன்ன - ஸ்ரீக்ருஷ்ணனை நினைக்க, இவன் எதிர் - இந்தத்தருமபுத்திரனெதிரிலே, அவன்உம் வந்தான் - அந்த ஸ்ரீக்ருஷ்ணனும் வந்தான் ; (எ - று.)*

*அமித்திரமுனிவன் சினப்பதற்குமுன்னே அவனைத்துதித்து இக்கனியை அவன் முன் வைத்துப் பொறுக்குமாறு வேண்டிக்கொள்வது என்ற இதைக்காட்டிலும், ஸ்ரீக்ருஷ்ணனைத்தியானித்து அவனிடத்தே முனிவனைக் கோபியாதவாறுசெய்யும் பொறுப்பை விடுவது தவறுதுபயனை விளைக்குமென்பதைத் துருவாசமுனிசரிதையிற் கண்கூடாகக் கண்டானாதலால், தருமன் 'நகுலன்சொல்லே விதி' என்றான். கிரிக்குக் கிம்புரிநெடுங்கோடுஎன்று அடைமொழிகொடுத்ததனால், யானையாயிற்று.* (கங)

வேறு

14.—தருமன் ஸ்ரீக்ருஷ்ணனைக்கண்டு சேவித்துத் தமக்குநேர்ந்துள்ள இடரைத் தெரிவித்தல்.

*கண்டிரு கண்ணு மிதயமுங் களிப்பக் கட்செவிப் பேரணை மறந்து, வண்டுவ ரையின்வாழ் தண்டுழாய் மாலை மாதவன் வருதலு மெதிர்கொண், டண்டரு மிறைஞ்சற் கரியதா ளிறைஞ்சி,யாங்குறு மிடரினை யவற்குத், திண்டிற லறத்தின் றிருமக னுரைப்பத் திருச் செவி சாத்தினன் செப்பும்.*

(இ - ள்.) *கட்செவி பேர் அணை மறந்து - ஆதிசேஷனாகிய சிறந்த படுக்கையை மறந்திட்டு [படுக்கையை விட்டிட்டுஎன்றபடி], வள் துவரையின் வாழ் - வளப்பமுள்ள துவாரகாபுரியிலே வசிக்கின்ற, தண் துழாய் மாலை மாதவன்-குளிர்ந்த திருத்துழாய்மாலையை யணிந்தவனாகிய ஸ்ரீக்ருஷ்ணன், வருதலும்—,—திண் திறல் அறத்தின் திருமகன் - மிக்கவலிமையையுடைய யமதருமராசனதுகுமாரனான யுதிஷ்டிரன், இரு கண்உம் இதயம்உம்*

களிப்ப கண்டு-(தன்)கண்களிரண்டும்மனமும்மகிழ்ச்சியடையுமாறுதரிசித்து, எதிர்கொண்டு—, அண்டர்உம் இறைஞ்சற்குஅரிய தாள் இறைஞ்சி-தேவர்களுங் கண்டுதொழுதற்குஅரிய அப்பெருமானுடைய உபயபாதங்களிலே வணங்கி, ஆங்குஉறும் இடரினை-அங்கே பொருந்திய துன்பத்தை, அவற்கு-அந்த ஸ்ரீக்ருஷ்ணனிடம், உரைப்ப - சொல்ல,— (அப்பெருமான்), திருச்செவி சாத்தினன் - (தன்) செவிகளாற்கேட்டருளி, செப்பும் - பதில்கூறலானான்; (எ-று.)—ஸ்ரீக்ருஷ்ணன் சொல்வதை மேற்கவியிற் காண்க. (கச)

15.—நீவிரைவிரும் நெஞ்சிலுள்ளவற்றை ஒளியாதுஉரைத்தால், இக்கனி தான் தோன்றியஇடத்திற் சேர்ந்திடு மென்று ஸ்ரீக்ருஷ்ணன் கூறுதல்.

திண்மையாலுயர்ந்தநீவிரைவிருபித்தீயிடைப்பிறந்தசேயிழையு, முண்மையானெஞ்சினிகழ்ந்தபட்டாங்கீண்டுரைத் திடக்கோட்டின் மீண்டொன்றும், வண்மையாலுயர்ந்தீரென்றுசெம்பவளவாய்மலர்ந் தருளினன்மாயோன், றண்மையார்கருணைத்தராபதிமுதலோர்சாற் றுவார்தம்மனத்தியல்பே.

(இ-ள்.) 'வண்மையால் உயர்ந்தீர்-உதாரகுணத்தால் மேம்பட்டவரே! திண்மையால் - வலிமையினால், உயர்ந்த—, நீவிர் ஐவிர்உம் - நீங்களைந்து பேரும், தீயிடை பிறந்த இ சேய் இழைஉம் - அக்கினியினின்றுதோன்றிய செம்பொன்னணிகலனையணிந்த இந்தத் திரௌபதியும், ஈண்டு - இப்போது, நெஞ்சில் நிகழ்ந்த பட்டாங்கு உண்மையால் உரைத்திட-நெஞ்சில்தோன்றிய விஷயங்களை உள்ளபடியினாற் சொல்லினால், கோட்டில் மீண்டு ஒன்றும் - (தான் தோன்றிய மரத்தின்) கிளையிலே மீண்டும் (பறியுண்ட பழம்) சேர்ந்திடும்', என்று—, மாயோன் - ஸ்ரீக்ருஷ்ணன், செம் பவளம் வாய் மலர்ந்தருளினன் - செம்பவழம்போன்ற தன்வாயைத் திறந்துசொன்னான்: (பின்னர்), தண்மைஆர் கருணை - குளிர்ச்சிபொருந்திய அருளையுடைய, தராபதி முதலோர்-தருமன்முதலியோர், தம் மனத்து இயல்பு சாற்றுவார் - தம் மனத்திலுள்ள விஷயங்களைக் கூறுபவரானார்; (எ - று.)—தருமன் முதலியோர்கூறுவதை மேலே காண்க.

உண்மையாநெஞ்சில் என்று பிரதிபேதம். (கரு)

16.—தருமன் தன்மனத்திலுள்ளதைக் கூறுதல்.

வெல்லுகவறமுமெய்ம்மையும்பொறையுமேகமேனியனும்வெல்லாமற், செல்லுகபாவம்பொய்மொழிகோபந்தெயித்தியர்குலமெனத் தெளிவுற், றல்லும்வெம்பகலுமென்மனநிகழுமலகையாமன்னையை முன்னங், கொல்லுதல்புரிந்தோயென்றனன்முரசங்கோட்டியகொற் றவெங்கொடியோன்.

(இ - ள்.) முரசம் கோட்டிய கொற்றம் வெம் கொடியோன்-முரசின் வடிவத்தையெழுதிய வெற்றிபொருந்திய விரும்பத்தகுந்தகொடியையுடைய தருமபுத்திரன், (ஸ்ரீக்ருஷ்ணனைநோக்கி), அலகைஆம் அன்னையை முன்னம் கொல்லுதல்புரிந்தோய்-(தான்) பேயாயிருந்தும் தாயின்வடிவுகொண்டுவந்தவளான பூதனையைமுன்பு (அவள்முலையையுண்கிறவியாஜத்தால் உயிரை

யுறிஞ்சிக்) கொன்றவனே! 'அறம்உம் மெய்ம்மைஉம் பொறைஉம் - தரும மும் சத்தியமும் பொறுமையும், மேகம்மேனியன்உம் - மேகம்போற் கருநிறமுள்ளதிருமாலும், வெல்லுக—: பாவம் - பாவமும், பொய்மொழி - பொய்ம்மொழியும், கோபம்-கோபமும், தெயித்தியர் குலம்-அசுரர்குலமும் என்றஇவை, வெல்லாமல் செல்லுக-வெல்லாமற் போகுக, [தோற்க], என - என்று, தெளிவு உற்று - தெளிவுபொருந்தி, அல்உம் வெம் பகல்உம் - இரவிலும் வெவ்விய பகற்போதிலும், என் மனம் நிகழும் - என்மனத்தில் (இவ்வெண்ணம்) இடைவிடாதிருக்கும்,' என்றனன்-என்றுகூறினான்; (எ - று.)

இச்செய்யுளின் கருத்தைக்கொண்ட வடமொழிச்சுலோகம்—"தர்மோ ஜயது நாதர்ம: - ஸத்யம் ஜயது நாந்ருதம் | க்ஷமா ஜயது ந க்ரோத: - விஷ்ணுர்ஜயது நாஸுர:" என்பது. இக்கொள்கை, நகுலன் கூறியதாஎன்று கன்னட பாரதத்திலுள்ளது. (கசு)

17.—வீமன் தன்மனத்திலுள்ளதைக் கூறுதல்.

பிறர்மனையவரைப்பெற்றதாயெனவும்பிறர்பொருளெட்டியே
யெனவும்,பிறர்வசையுரைத்தல்பெருமையன்றெனவும்பிறர்துயரென்
றுயரெனவு, மிறுதியேவரினுமென்மனக்கிடக்கையெம்பிரானிவை
யெனவுரைத்தான், மறலியுமடியுமாறுமல்லியற்கைவலிமைகூர்வாயு
வின்மைந்தன்.

(இ - ள்.) மல் - மற்போரில், மறலிஉம் - யமனும், மடியும் ஆறு - இறந்துபடும்படி, இயற்கை வலிமை கூர் - இயற்கையான உடல்வலிமை மிகுந்த, வாயுவின் மைந்தன் - வாயுவின்குமாரனான வீமன்,— (ஸ்ரீக்ருஷ்ணனைநோக்கி),— எம்பிரான் - எம்பெருமானே! இறுதிஏ வரின்உம் - மரணம்நேர்வதானாலும்சரி, பிறர் மனையவரை - பிறர்மனைவிமாரை, பெற்ற தாய்எனவும்—, பிறர் பொருள் - அயலாருடைய சொத்தை, எட்டி ஏ என உம் - எட்டிக்கொட்டை யெனவும், பிறர் வசை உரைத்தல் - அயலாரைக் குறித்துத் திட்டுமொழியைக்கூறுதல், பெருமைஅன்று - பெருமையைத் தருவதாகாது [சிறுமையையேதருவதாகும்], எனவும்—,—பிறர் துயர்-அயலார்க்குநேருந் துன்பத்தை, என் துயர் எனஉம் - என்னுடையதுன்பமென வும், இவை—, என் மனம் கிடக்கை - என்மனத்துக்கிடக்கும் விஷயங்களாகும்,' என - என்று, உரைத்தான் - (தன்மனக்கிடக்கையைக்) கூறினான்.

எட்டிக்கொட்டை கசப்புச்சுவையையுடையதாதலால் வெறுக்கப்படுவதாதல்போலப் பிறர்பொருள் வெறுக்கத்தக்கதென்பார் 'பிறர்பொருளெட்டியே யெனவும்'என்றது. மறலி-உயிரைக்கொள்ளுங் கடவுள்: அவனாலும் மற்போரில் எதிர்த்து நிற்கமுடியாத உடல்வலிமை படைத்தவன் வீமனென்க. இச்செய்யுளின்பொருளைக்கொண்ட வடமொழிச்சுலோகம்—"மாத்ருவத் பரதாராணி-பரத்ரவ்யாணி லோஷ்டவத் | ஆத்மவத்ஸர்வபூதாநி - ய: பஶ்யதி ஸ பண்டித:" என்பது. இது, தருமபுத்திரன்கொள்கையென்று கன்னடபாரதம் கூறும். மறலியுமடிய மோதுமல் எனவும் பாடம். (கஎ)

18.—அருச்சுனன் கூறுதல்.

ஊனமேயானவூனிடையிருக்குமுயிரினைத்துறந்துமொண்பூணு
மானமேபுரப்பதவனிமேலெவர்க்கும்வரிசையுந்தோற்றமுமரபு
ஞானமேயானதிருவடிவுடையாய்ஞாலமுள்ளளவுநிற்றலினு
லீனமேயுயிருக்கியற்கையாதலினுலென்றனன்வீமனுக்கிளையோன்.

(இ - ள்.) வீமனுக்கு இளையோன் - வீமசேனனுக்கு அடுத்த தம்பியான அருச்சுனன்,—(ஸ்ரீக்ருஷ்ணனைநோக்கி),—'ஞானமே ஆனதிருவடிவு உடையாய்-ஞானமயமாகவேயுள்ள திருவடிவத்தை யுடையவனே! ஈனமே உயிருக்கு இயற்கை ஆதலினால் - இழிவே பிராணனுக்கு இயற்கையாயிருத்தலாலும், (மானமென்பது), ஞாலம் உள்ள அளவுஉம் நிற்றலினால்-இவ்வுலகம் உள்ளவரையிலும் அழியாது நிற்பதனாலும், ஊனமே ஆன - அழியுந்தன்மையையுடைய, ஊனிடை - இவ்வுடலுக்குள், இருக்கும் - இருக்கின்ற, உயிரினை - பிராணனை, துறந்துஉம் - விட்டாவது, ஒண் பூண் ஆம் - (ஆன்மாவுக்கு) ஒள்ளியபூண்போலப் பிரகாசத்தைச் செய்கின்ற, மானம் ஏ-மானத்தையே, புரப்பது - அழியாதபடி பாதுகாப்பது, அவனிமேல் - இந்தப்பூமியின்மேலே, எவர்க்குஉம் - எப்படிப்பட்டவர்க்கும், வரிசைஉம் - சிறப்பும், தோற்றம்உம் - விளக்கத்தையுண்டாக்குவதும், மரபுஉம் - நற்குடிப்பிறப்பையுண்டாக்குவதுமாம்,' என்றனன்—; (எ - று.)

பகவானை ஞானஸ்வரூபியென்று வேதங்கூறும். உலகத்தில் உயிருக்குப் பிரகிருதிசம்பந்தத்தினால் தாழ்மைநேர்வது இயற்கை: ஆதலால், அத்தாழ்மையையே யடையும்படி மானத்தை விட்டிடாமல், நசுவரமான இந்தஉடல் போவதாயிருந்தாலும் அதனைப்பாராட்டாமல் ஒருவனுக்கு ஆபரணம் போன்று சிறப்பையும் தோறறத்தையும் மரபையும் உண்டாக்கவல்ல மானத்தையே பாதுகாக்கவேண்டுமென்பது என்கொள்கை யென்ன அருச்சுனன் கூறினனென்க. இச்செய்யுளின் பொருளையொட்டிய வடமொழிச்சுலோகம்—"ப்ராணம்வாபி பரித்யஜ்ய-மாநமேவாபிரக்ஷேத் ஸதா புத꞉ | அநித்யாஅந்நுவா ப்ராணா꞉-மாநஸ்த்வாசந்த்ரதாரகம்" என்பது. இதனைக் கன்னடபாரதம் வீமன்கொள்கை யென்னும். அதில் அருச்சுனன் கொள்கையாகக் கூறப்பட்டுள்ள வடமொழிச் சுலோகம்—"நிமந்த்ரணோத்ஸவாவிப்ரா꞉- காவோநவத்ருணோத்ஸவா꞉ | பர்த்ராகமோத்ஸவா நார்ய꞉- அஹம் க்ருஷ்ண! ரணோத்ஸவ꞉" என்பது. (கஅ)

19.—நகுலன் கூறுதல்.

குலமிகவுடையரெழின்மிகவுடையர்குறைவில்செல்வமுமிகவுடையர்
நலமிகவுடையரெனினிழுங்கல்விநானயற்பமிலாதவரை
வலமிகுநிகிரிச்செங்கையாய்முருக்கின்பயனமிலாமலரெனமதிப்பேன்
சலமிகுபுவியிலென்றனன்வாகைத்தார்புனைதாரைமாவல்லான்.

(இ - ள்.) வாகை தார் புனை - வெற்றிமாலையை யணிந்தவல்ல, தாரைமா வல்லான் - தாரையையுடைய குதிரையோட்டுந்தொழிலிலே வல்லவு

ஞன நகுலன்,— (ஸ்ரீக்ருஷ்ணனைநோக்கி),— வலம் மிகு - வெற்றிபொருந்திய, திகிரி - சக்கரப்படையை, செங்கையாய்-சிவந்த திருக்கைகளிலுடையவனே! சலம் மிகும் உலகில் - நிலையாமைமிக்க இந்தஉலகத்திலே, (ஒருவர்),—குலம் மிகஉடையர் - சிறந்த உயிர்குடிப்பிறப்பினையுடையவர்: எழில் மிகஉடையர் - மிக்க அழகையுடையவர்: குறைவு இல் செல்வம்உம் மிகஉடையர் - குறைவில்லாத மிக்கசெல்வமும் உடையவர்: நலம் மிக உடையர் - சற்காரியங்களை மிகுதியாகவுடையவர்: என்னின்உம் - என்றாலும், கல்வி ஞானம் - கல்வியினாலாகிய அறிவு, அற்பம்உம் இலாதவரை - சிறிதும் இல்லாதமானுடரை, முருக்கின் மணம் இலா மலர்என - பலாச மரத்தின் வாசனையில்லாத [பார்வைக்குமாத்திரம்அழகாகத்தோன்றுகிற] மலர்போல, மதிப்பேன் - எண்ணுவேன; (எ - று.)

மலருக்குச் சிறப்பு, மணத்தினாவது: அவ்வகைமணமின்றிப் பார்வைக்குப் பகட்டான மலர் மதிப்பைப் பெறாதவாறுபோல, குலநலம்முதலியன இருந்தும் கல்வியறிவில்லாதவர் என்றால் மதிக்கப்பெறா ரென்றவாறு. உவமையணி. கல்வியறிவு - பரப்பிரமத்தைப்போதிக்கும் வித்தையினாலான அறிவு என்னலாம். தாரை - குதிரைநடைப்பொது: இனி, நேரோடுங் குதிரை நடையென்றலும் உண்டு: வடசொல். சலம் - நீரென்றும் வஞ்சனையென்றும் உரைத்தலும் ஆம். (கக)

20.—சகதேவன் கூறுதல்.

ஒருமொழியன்னைவரம்பிலாஞானமுற்பவகாரணனென்றுந்
தருமமேதுணைவன்கருணையேதோழன்சாந்தமேநலனுறுதார
மரியதிண்பொறையேமைந்தன்மற்றிந்தவறுவருமல்லதாருறவென்
றிருவரிலிளையோன்மொழிந்தனன்றன்பேரிதயமாமலர்க்கிடையெடுத்தே.

(இ - ள்.) இருவரில் இளையோன் - இரட்டையரான நகுலசகதேவர்களில் தம்பியான சகதேவன், (தருமனைநோக்கி),—'ஒருமொழி - சத்தியவார்த்தை, அன்னை-தாய்: வரம்பு இலா ஞானம்-அளவுபடாத அறிவு, உற்பவம் காரணன்-பிறவிக்குக்காரணமான பிதா, என்றுஉம்—, தருமம்ஏ—, துணைவன் - உடன்பிறந்தவன்: கருணைஏ-கருணையென்பதுவே, தோழன்-சினேகிதன்: சாந்தம் ஏ நலன் உறு தாரம் - சாந்தகுணமே அழகுபொருந்திய மனைவி: அரிய திண் பொறைஏ மைந்தன் - (ஒருவற்குஉண்டாவதற்கு) அரிய வலியபொறுமையே குமாரனாவன்: இந்த அறுவர்உம் அல்லது - இந்த ஆறுபேரையும்அல்லாமல், மற்று ஆர் - வேறு யாவர், உறவு - உறவினர்? [வேறுஎவரும்உற்றஉறவினரல்லர்]' என்று—, தன் - தன்னுடைய, பேர் இதயம் மா மலர் கிடை-பெரியசிறந்தமனமாகிய தாமரையிலுள்ளதை, எடுத்து—, மொழிந்தனன் - சொன்னார்; (எ - று.)

இந்தச்செய்யுளின் பொருளைக்கொண்டுவழங்கும் வடமொழிச்சுலோகம்—"ஸத்யம்மாதா பிதாஜ்ஞாநம் - தர்மோ ப்ராதா' தயா ஸகா | ஶாந்திஃ

பத்நீ க்ஷமாபுத்ர:- வ்ஷடைதே மம பார்தவா :" என்பது. ஒருமொழி - எப்பொழுதும்வேற்றுமைப்படுதலில்லாதமொழி: எனவே, சத்தியமானசொல் என்றாயிற்று. நலனுறுதாரம் - கணவனுக்குநன்மையைச்செய்கின்ற மனைவி.

21.—திரௌபதி கூறுதல்.

ஐம்புலன்களும்போலவரும்பதிகளாகவுமின்னம்வேறொருவ
னெம்பெருங்கொழுநனாவதற்குருகுமிறைவனேயெனதுபேரிதய
மம்புவிதனிற்பெண்பிறந்தவரெவர்க்குமாடவரிலாமையினல்லா
னம்புதற்குளரோவென்றனள்வசிட்டனல்லறமனைவியேயனையாள்.

(இ - ள்.) 'இறைவனே - கடவுளே ! ஐம் புலன்கள்உம் போல் - (ஐம்பொறிகட்குஇன்பத்தையளிக்கின்ற சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்னும்) ஐந்துவிஷயங்கள்போல் (இன்பத்தையளிப்பவரான), ஐவர்உம்-பாண்டவரைவரும், பதிகள் ஆகஉம்-கணவராகஅமைந்திருக்கவும், இன்னம் வேறு ஒருவன்-இன்னும் வேறே ஆறாமவனொருத்தன், எம் பெருங் கொழுநன்ஆவதற்கு - எனதுசிறந்தகணவனாகஆவதற்கு, எனது பேர் இதயம் - எனது பெருமைபெற்ற மனம், உருகும்-(ஆசைமிகுதியால்) உருகுந்தன்மையையடையும்: அம் புவிதனில் - அழகியபூமியில், பெண் பிறந்தவர் எவர்க்குஉம்-பெண்ணாகப்பிறந்தார்யாவர்க்கும், ஆடவர் இலாமையின் அல்லால்-(தாம் விரும்பிய போது தம்விருப்பின்படி) ஆடவர் கிடைக்கப்பெறாமையினாலல்லாமல், நம்புதற்கு-(இவர்பதிவிரதையராவர்என்று) நம்பிச் சொல்லுதற்கு, உளர்ஓ-(தக்கவராக எவரேனும்) உள்ளாரோ ? [இல்லையென்றபடி],' என்றனள் - என்று கூறினாள் ; (யாவளெனில்),—வசிட்டன் நல் அறம் மனைவி அனையாள்-வசிட்டனுடைய சிறந்த தருமபத்தினியாகிய அருந்ததியைப்போன்றவளாகிய திரௌபதி; (எ - று.)

பெண்பிறந்தார்எவரும் தம்முடையபர்த்தாவைத்தவிர வேறுபுருஷரை விரும்புபவரே ; ஆயினும், அவர்கள்விரும்பியபடி சேருமாறு ஆடவர் கிடைப்பதில்லாமையால்தான் பலரும் ஒருபுருஷரையே கணவராகக்கொண்டுள்ளார்: தாம் மணந்துகொண்ட ஒருபுருஷரையன்றி வேறுபுருஷரைக்காமியாரென்பதில்லை யென்ற இந்தப் பொதுப்பொருள் முன்னிரண்டடிகளிற் கூறிய சிறப்புப்பொருளைச் சமர்த்தித்துநின்றது : இது-வேற்றுப்பொருள் வைப்பணி. மகாவீரர்களான ஐவர் கணவராகஅமைந்திருக்கையில், ஆறாம் புருஷரையும்காமிக்கின்றேனென்றுகூறும் திரௌபதியை அருந்ததியனையாளென்றது எவ்வாறுபொருந்துமெனின்,—அக்ருத்யத்தை[தீவினையை]ச் செய்தாலன்றி நினைத்தலாற்குற்றமில்லையென்பது துவாபரயுகதருமமாதலாலென்பர். நம்புதற்குளதோ என்றும் பாடம். இச்செய்யுளின்கருத்தையொட்டிய வடமொழிச்சுலோகம்—"பஞ்ச மே பதயஸ் ஸந்தி-மஹ்யம் ஷஷ்டோபி ரோசதே | புருஷாணா மபாவேந - ஸர்வா நார்ய: பதிவ்ரதா:" என்பது. கன்னடபாரதம், திரௌபதி தன்னுள்ளக்கிடக்கையென்று "ஸுந்தரம்புருஷம்த்ருஷ்ட்வா-பிதரம்ப்ராதரம் ஸுதம் | யோநிர்த்ரவதிநாரீணாம்-

ஸத்யம்ப்ரூமீஹகேஶவ'' என்பதைச்சொல்ல, அப்போது அந்தக்கனி மேலே செல்லாததாக, 'நங்காய்! உன்மனத்திலுள்ளதை யொளியாமற் கூறுவாய்' என்று ஸ்ரீக்ருஷ்ணன்சொல்ல, பிறகு ''பஞ்சமேபதய:'' என்ற இதைக் கூறினளென்னும். (உக)

22.—கவிக்கூற்று: கிருஷ்ணன்கேட்க அறுவரும் உண்மையுரைத்ததால் பறித்த கனி முறைமுறையாகக் கொம்பையணைந்ததெனல்.

*அறுவருமிவ்வாறுண்மையேயுரைத்தாராதலானிரைநிரைப்படியே*
*மறுவணிதுளபமார்பனுங்கேட்டான்மாமுனிக்கோதனமான*
*நிறைசுவையமுதநெல்லியின்கனிநின்றகொம்பணைந்ததாலென்றும்*
*பெறுமுறைபெறுமேயுள்ளவாறுரைத்தாற்பெரியவர்பேசும்வாசகமே.*

(இ - ள்.) மறு அணி - ஸ்ரீவத்ஸமென்கிற மறுவையணிந்த, துளபம் - துளசிமாலையைப்பூண்ட, மார்பன்உம் - மார்பையுடைய ஸ்ரீக்ருஷ்ணனும், கேட்டான் - (மனத்திலுள்ளதை உள்ளபடியே கூறுமாறு) வினவினன்: அறுவர்உம் - பஞ்சபாண்டவரும் திரௌபதியும், இ ஆறு - இவ்வகையாக [கீழ்க்கூறியபடி], உண்மை உரைத்தார் - தம்மனத்திலுள்ள சத்தியமான கொள்கையையே சொன்னார்கள் ஆதலால்—, நிரை நிரை படிஏ - வரிசை வரிசையான முறையாக, மா முனிக்கு ஓதனம் ஆன நிறை சுவை அமுதம் நெல்லியின் கனிஉம் - சிறந்த அமித்திரமுனிவனுக்கு உணவான நிறைந்த சுவையுள்ள அமுதம்போன்ற நெல்லிக்கனியும், நின்ற - அந்தவனத்திலே யிருந்த (நெல்லிமரத்தின்), கொம்பு - கிளையை, அணைந்தது-சேர்ந்திட்டது: ஆல் - இதுஎன்னே! என்றுஉம் - எப்போதும், பெரியவர் - பெருமையுள்ளோர், பேசும் - பேசுகின்ற, வாசகம்-வார்த்தை, உள்ள ஆறு உரைத்தால்- உண்மையாக உரைக்கப்படுமாயின், பெறும் - பாராட்டப்படுதற்குஉரிய, முறை - முறைமையை, பெறும் - அடையும்; (எ - று.)

நிரைநிரைப்படியே கொம்புஅணைதலாவது-மரத்திற்கனியிருந்த இடத்திற்கும் இப்போது கனியுள்ள இடத்திற்கும் உள்ள தூரத்தை ஆறாகப் பகிர்ந்துகொண்டு, தருமன் தன்மனக்கிடக்கையைக் கூறியதும் ஒருபகுதி முன்னேறுதல், மற்றொருவர்கூறியதும் மற்றொருபகுதிமுன்னேறுதல்என்று இவ்வாறாகச்சென்று ஆறாமவர்கூறியதும் கனியிருந்த இடத்திற்போய் ஒட்டிக்கொள்ளுதல். முதல்மூன்றடிகளிற் கூறியசிறப்புப்பொருளை ஈற்றடியிற் கூறிய பொதுப்பொருள் சமர்த்தித்துநின்றது - வேற்றுப்பொருள்வைப்பணியாம். ஆல் - வியப்புக்குறிப்பிடைச்சொல். அறுவருமிவ்வாறுரைத்தனருண்மையவரவர் நினைவினின்படியே என்றுபிரதிபேதம். (உஉ)

23.—ஸ்ரீக்ருஷ்ணன் துவாரகாபுரி சேர்தல்.

*முளைத்தெழுகமலத்தரும்பெனவரும்புமுகிழ்முலைப்பொதுவியர் மலர்க்கை, வளைத்தழும்பகலாமரகதமலைபோல்வடிவழகுடையவெம் மாயோ, னுளைத்தெழுதரங்கப்பாற்கடன்மறந்தேயுறையும்வண்டு வரையைநோக்கி, யிளைத்தவரின்னலொழித்துமீண்டகன்றனிவரு மீண்டிறைஞ்சியாங்கிருந்தார்.*

(இ - ள்.) முளைத்து எழு - அரும்பித்தோன்றுகின்ற, கமலத்து அரும்புஎன - தாமரையரும்புபோல, அரும்பும் - தோன்றுகின்ற, முகிழ் முலை - குவிந்த முலைகளையுடைய, பொதுவியர் - இடைச்சிமாரின், மலர் கை - தாமரைமலர்போன்ற கைகளிலணிந்த, வளை - வளையினுடைய, தழும்பு - அடையாளம், அகலா-(தன் திருமேனியில்) நீங்காதிருக்கப்பெற்ற, மரகதம்மலைபோல் வடிவுஅழகுஉடைய - மரகதமலைபோலும் வடிவழகை யுடைய, எம் மாயோன் - எமது க்ருஷ்ணன்,—இளைத்தவர் - (முனி வனது சாபம் நேருமே! என்று) சோர்ந்தவரான பாண்டவர்களின், இன்னல் - துன்பத்தை, ஒழித்து - போக்கி, உளைத்து எழு தரங்கம்-ஆரவாரஞ் செய்துகொண்டு கிளம்புகின்ற அலைகளையுடைய, பாற்கடல் - திருப்பாற் கடலை, மறந்து—, உறையும் - (தான்) வசிக்கின்ற, வண் துவரையை நோக்கி - வளப்பமுள்ள துவாரகாபுரியைநோக்கி, மீண்டு அகன்றான்—; இவர் உம் - இந்தப்பாண்டவர்களும், (அந்தஸ்ரீக்ருஷ்ணன் மீண்டு செல்லும் போது), மீண்டு இறைஞ்சி-(அப்பெருமானை) மீண்டும் வணங்கி, ஆங்கு - அவ்விடத்தில் தானே, இருந்தார்—; (எ - று.)

ஸ்ரீக்ருஷ்ணனை இறுகத்தழுவுவதனால் அப்பெருமான் திருமேனியில் பொதுவியரின் வளைத்தழும்பு அகலாதிருக்கும். முகிழ்முலை-வினைத்தொகை: குவிமுலை யென்றவாறு. பார்கடன் மறவாதுறையும் என்றும்பாடம். (உரு)

கன்னடபாரதத்திற்கூறிய இச்சருக்கத்துச்சரித்திரச்சுருக்கம் வரு மாறு:—பாண்டவர் வனவாசஞ்செய்கையில் ஒருகால் வேடரோடு வீம சேனன் வேட்டைக்குச் சென்றானாக, காட்டினிடையிலே பெரியநாவன்மர மொன்றில் யானையினுடலுக்குஒத்த பழமொன்றைக்கண்டு வியப்புற்று அத னைப்பறித்துவந்து தருமபுத்திரனுடையதிருவடிவாரத்தில்வைத்தனன். அது கண்ட தருமனும அத்தருமனைச்சார்ந்திருந்த முனிவரும் வியப்படைந் தனர். தருமன் அந்தக்கனியைக்குறித்து முக்காலமுணர்ந்த சகதேவனை வினவினான்: சகதேவன் 'அரசே! இது, கண்ணுவமுனிவரின் ஆச்சிர மத்தின் முன்னே யிருக்கும் நாவலின் கனி: அந்தமரவரசு யாண்டுக்கு ஒருமுறை இவ்வகைக்கனியொன்றையே தோற்றுவிக்கும். யோகாப்பியாசத் தில் ஓர்யாண்டுகழித்தகண்ணுவர் இம்மரத்தினடியில்வந்து கையைநீட்டின் இக்கனி அவர்கையை யடையும்: இதையுண்டு மீண்டும் அம்முனிவர் யோ காப்பியாசத்திலமர்வர்: ஆகவே, இந்தக்கனியைப் பறித்ததனால் கண்ணுவ மகரிஷியால் நமக்குப் பெருந்தீங்கு நேரக்கூடும்' என்றான். அது கேட்டதும், யுதிஷ்டிரர் சிந்தையில்மூழ்கி ஸ்ரீக்ருஷ்ணனை நினைத்தனர். ஸ்ரீக்ருஷ்ண னும் துவாரகையினின்றும் உடனேவந்தனர். யுதிஷ்டிரன் தமக்குநேரா விருக்கும் பெருந்தீங்கை அப்பெருமானிடம் விண்ணப்பித்தனன். அப் பெருமான் பாண்டவர்கட்கு அபயமளித்து, 'உமது மனத்திலிருக்குங் கொள் கையைத் தனித்தனி நீவிர் ஒளியாது தெரிவிப்பின், இந்தக்கனி தான்தோன் றிய மரத்திற் சென்று சேர்ந்திடும்' என்றான். அப்போது வீமசேனன் அக்

கனியை அந்த நாவல்மரத்தினடியிற்கொண்டுபோய் வைத்தான். பாண்டவர் ஒவ்வொருவரும் தம்தம் கொள்கையைக் கூறவும் அந்தக்கனி ஒவ்வொருத்தர் கொள்கைக்கு ஒவ்வொரு முழத்தூரமாக மேலெழுவதாயிற்று; ஆறுமவனான திரௌபதி தன்கொள்கையை முதலில் உள்ளபடி சொல்லாமையால் அக்கனி மேலெழுதலில்லாதாக, ஸ்ரீக்ருஷ்ணன் மறையாது கருத்தைக்கூறுமாறு திரௌபதியினிடம் கூற, அவள் உள்ளக்கருத்தை உள்ளபடிசொல்ல, அக்கனி சென்று தானிருந்தஇடத்து முன்போலவே யிருந்தது. அப்போது யோகத்தினின்று எழுந்த கண்ணுவர் பாண்டவரையும் ஸ்ரீக்ருஷ்ணனையும் கண்டு வாழ்த்தி அந்தநாவற்கனியையும் ஸ்ரீக்ருஷ்ணனுக்கு ஸமர்ப்பித்தனர். ஸ்ரீக்ருஷ்ணன் அந்தக்கனியை யாவர்க்கும் பகிர்ந்து கொடுப்பித்தனர். யாவரும் தந்தமிடம் சேர்ந்தனர். கண்ணுவரிஷியும் யோகாப்பியாசத்துக்குச் சென்றனரென்பது.

பழம்பொருந்துசருக்கம் முற்றிற்று.

---

எட்டாவது

## நச்சுப்பொய்கைச் சருக்கம்

நஞ்சையுடைய பொய்கைநீரை (ப் பாண்டவர்பருகி இறந்து மீண்டு உயிர்பெற்றெழுந்ததை)ப் பற்றிக் கூறும் நூற்கூறுபாடு என்றுபொருள். நஞ்சு+பொய்கை=நச்சுப்பொய்கை: வேற்றுமைப்புணர்ச்சி; இரண்டாம் வேற்றுமை யுருபும்பயனும் உடன்றொக்கதொகை: "மென்றொடர்மொழியுட் சில வேற்றுமையில், தம்மினவன்றொடராகாமன்னே" என்பதனால், மென்றொடர்க்குற்றியலுகரம் வேற்றுமையில் வன்றொடர்க்குற்றியலுகரமாயிற்று. பொய்கைச்சருக்கம் என்பதும் இரண்டனுருபும் பயனும் உடன்றொக்க தொகையே: இனி, பொய்கையினுடைய சருக்கம்என்று விரித்தால், ஆறாம் வேற்றுமைத்தொகையாம். பாண்டவர் விண்டுசித்தமுனிவனது தபோவனத்தில் வசிக்கையில், துரியோதனனுடைய சூழ்ச்சியால் அபிசாரயாகஞ் செய்த காளமாமுனிவனது வேள்வித்தீயினின்றும் தோன்றிய பூதமொன்று பாண்டவர்பால் ஏவியனுப்பப்பட்டது: இது இவ்வாறாக, அக்காலத்திற்குள் ஒரு மான் பிராமணச்சிறுவனது கிருஷ்ணாஜினத்தைக் கவர அதனைமீட்டுத் தருமாறு அந்தணச்சிறுவனால் குறைவேண்டிய பாண்டவர் மானைத் தொடர்ந்து வெகுதூரஞ்சென்று அதனைப் பிடிக்கமுடியாமலே களைப்படைய, அப்பால் தண்ணீர்வேட்கைவிஞ்சிய தருமபுத்திரனேவலால் சகதேவன்முதலிய நால்வரும் முறையேசென்று ஆங்குத்தென்பட்ட பொய்கைநீரைப் பருகி இறந்துவீழ்ந்தனர். நெடுநேரஞ்சென்றும் தம்பியர்வாராத சோகத்தாலும் தாகத்தாலும் யுதிஷ்டிரன் அங்கு ஒருசந்தனமரத்தடியிற் சாய்ந்து களைப்பின்மிகுதியால் உயிரொழிந்தவன்போன்றிருக்க, அவ்

வேளையில் வேள்வியினின்று எழுந்த அந்தப் பூதம் வந்து தான் கொல்ல வேண்டியபாண்டவர் முன்னமே உயிரின்றியிருத்தலைக்கண்டு சினம்மூண்டு மீண்டுசென்று தன்னையேவிய முனிவனையே கொன்றிட்டது. இது இவ்வாறாக, பின்பு தென்றல்வீசியதால் சிறிதுஉயிர்வரப்பெற்ற யுதிஷ்டிரன் சென்று பொய்கைக்கரையில் தம்பிமார் உயிர்நீங்கியிருத்தலைக் கண்டு கவன்று தானும் பொய்கைநீர்பருகி உயிர்நீக்கத்துணிந்து அங்ஙன் பருகப்போகையில், ஓரசரீரி தடுத்து 'என்வினாக்களுக்கு விடையிறுத்துப் பின் நீர்பருகுக' என்ன, யுதிஷ்டிரனும் அக்கேள்விகளுக்கு விடைதர, மனமுவந்து அறக்கடவுள் எதிர்தோன்றித் தம்பிமாரை உயிர்ப்பித்து வேண்டியவரங்களையும் தந்து சென்றானென்ற செய்தியைக் கூறும்பகுதியென்க.

1.—கடவுள் வணக்கம்.

*சேய பங்கயச் சிறுவிர லங்கையிற் றிரட்டிய நறுவெண்ணெ*
*யாயர் மங்கைய ரிடவிட வமுதுசெய் தாடிய திருக்கூத்து*
*நேய முங்குறு முறுவலும் புரிந்துபார்த் தருளிய நெடுங்கண்ணு*
*மாய வன்றிரு வடிவமு மழகுமென் மனத்தைவிட் டகலாவே.*

(இ - ள்.) ஆயர்மங்கையர் - இடைக்குலத்தவரான மகளிர், திரட்டிய நறு வெண்ணெய்-(தயிரைக்கடைந்ததனால்) திரளத்தோன்றிய நறியவெண்ணெயை, சேய பங்கயம் சிறு விரல் அம் கையில் - செந்நிறமுள்ள தாமரையிதழையொத்த சிறியவிரல்களையுடைய அழகிய கையிலே, இட இட-வைக்குந்தோறும், அமுதுசெய்து - உண்டு, ஆடிய-(அம்மகிழ்ச்சிதோன்ற) ஆடிய, திருக்கூத்தும்—,— (அந்தஆயமங்கையரை), நேயம்உம் - அன்பையும், குறு முறுவல்உம் - சிறிதேதோன்றுகின்ற மந்தகாசத்தையும், புரிந்து - வெளியிலே காட்டிக்கொண்டு, பார்த்தருளிய-கடாட்சித்தருளின, நெடுங் கண்உம்-நீண்ட கண்களும், மாயவன் - விசித்திரசக்தியையுடைய அந்த ஸ்ரீக்ருஷ்ணனது, திருவடிவம்உம் - திருமேனியும், அழகுஉம்-(முடிவில்லாததான) ஓரழகும், என்மனத்தைவிட்டு—, அகலா-(ஒருபொழுதும்)நீங்கமாட்டா; (எ-று.)

மாயவன் என்பதை திருக்கூத்துமுதலியவற்றோடும் சேர்க்கலாம்: மாயவனுடைய திருக்கூத்தும் கண்ணும் வடிவமும் அழகும் என்மனத்தைவிட்டகலாஎன்க: எப்போதும் மாயவனுடைய திருக்கூத்து முதலியவற்றைத் தியானிப்பேனென்றவாறு.

இதுமுதற் பதினைந்துகவிகள் - முதற்சீர் மாச்சீரும், ஆறாஞ்சீர் காய்ச்சீரும், மற்றவை விளச்சீருமாகிவந்த கழிநெடிலடி நான்குகொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (க)

2.—பாண்டவர் விஷ்ணுசித்தமுனிவரின் ஆச்சிரமத்தையடைந்து இனிதிருத்தல்.

*வண்டுசிந்தியமதுத்துளிமுகில்பொழிமழைத்துளியொடுசேர்ந்து*
*கண்டுசிந்தையுநயனமுமுருகுபைங்கானிடைக்கழிகேள்வி*

விண்டுசிந்தனென்றொருமுனியருந்தவவிபினமேவினராகிக்
கொண்டுசிந்தனையறவிருந்தனர்குலக்குந்திமுன்பயந்தோரே.

(இ - ள்.) வண்டு சிந்திய-(பூவிலிருந்து தேனையெடுக்கும்போது அவ்) வண்டுகளாற் சிந்தப்பட்ட, மது துளி - தேன்துளி, முகில் பொழி மழை துளியொடு - மேகங்கள்பொழிகின்ற மழைத்துளிகளுடனே, சேர்ந்து- சேர்ந்திருத்தலாலே, நயனமும் சிந்தையும் கண்டு உருகு - (தம்முடைய) கண்களும் மனமும் (அவ்வழகினைக்) கண்டு (மகிழ்ச்சியால்) உருகுதற்கு இடமான, பைங் கானிடை - பச்சைப்பசேரென்றுள்ள காட்டிலே, கழி கேள்வி- மிக்கநூற்கேள்விகளையுடையவனான, விண்டுசிந்தன் என்ற ஒருமுனி-விஷ்ணு சித்தனென்ற ஒருமுனிவனது, அருந் தவம் விபினம் - (செய்தற்கு) அரிய தவத்திற்குஏற்றதான காட்டை, மேவினர்ஆகி-அடைந்தவர்களாய்,—குலம் குந்தி முன் பயந்தோர் - சிறந்த குந்தியென்பவளால் முன்பு பெறப்பட்டவ ரான பாண்டவர்கள்,— சிந்தனை அற - கவலையில்லாமல், இருந்தனர்—.

சேர்ந்து=சேர: எச்சத்திரிபு. தவ விபினம்=தபோவனம். கொண்டு- அசை. குலம் - உயர்குலத்தையுடைய எனினுமாம். (உ)

3.—துரியோதனுதியர் ஆலோசித்துப் பாண்டவரைக் கொல்லத்துணிதல்.

ஆண்டுமற்றவருறைதருகாலையிலரவவெங்கொடியோனு
மூண்டழற்பொறிகன்றியமனத்தினர்மூவருமுடன்முன்னி
மீண்டுமிப்புவிவேண்டுவரிருக்கினும்விரகுடன்முற்கோலிப்
பாண்டுபுத்திரர்க்கோறுமென்றருளிலாப்பாவியர்துணிந்தாரே.

(இ - ள்.) ஆண்டு - அந்தவிஷ்ணுசித்தமுனிவருடைய தபோவனத் தில், அவர் - அந்தப்பாண்டவர், உறைதரு காலையில் - வசிக்கும்போது,— வெம் அரவம் கொடியோனும் - கொடிய பாம்பைக்கொடியிலே யுடையவ னாகிய துரியோதனனும், அழல் பொறி மூண்டு கன்றிய மனத்தினர் மூவர் உம்-நெருப்புப்பொறிபறக்கும்படி பற்றியெரிகின்ற மனத்தையுடையவரான (துச்சாதனன் சகுனி கர்ணன் என்ற) மூவருமாகிய, அருள் இலா பாவி யர் - கருணையென்பது சிறிதுமில்லாத தீவினையாளரான அந்நால்வரும், உடன் முன்னி - ஒருசேரஇருந்து ஆலோசித்து, 'இருக்கின் - (பாண்டுபுத் திரர்) உயிரோடுஇருப்பாரானுல், மீண்டும் - மறுபடியும், இ புவி - இந்தப் பூமியை, வேண்டுவர் - (தாம் அரசுபுரியுமாறு) விரும்புவர்: (ஆகையால்),— நாம்—, முன் கோலி - (வனவாச அஜ்ஞாதவாசங்களை அவர்கள் முடித்து விட்டு வெளிப்பட்டு வருதற்கு) முன்னமே ஆலோசித்து, விரகுடன்-தந்திர மாக, பாண்டுபுத்திரர் கோறும் - (அந்தப்) பாண்டவர்களைக்கொன்று விடு வோம்,' என்று—, துணிந்தார்—; (எ - று.)—மற்று - அசை. அடைதரு காலை என்று பிரதிபேதம். (௩)

4.—துரியோதனன் காளமாமுனியை வேறொருமுனிவனுல் வரவழைத்தல்.

காளமாமுனிதனைக்கொடுவருகெனக்கலந்தநீற்றொளிகூருந்
தூளமாமுனியொருவனோடறிவிலாச்சுயோதனனுரைசெய்ய

வாளமாநிலமுழுதுடைமன்னனில்வந்தனன்விரைவிற்போய்
மீளமாமறைவேள்விகூர்முனியொடும்விடுத்தமாமுனியம்மா.

(இ - ள்.) அறிவு இலா - நல்லறிவைப்பெற்றிராத, சுயோதனன்—, 'காளமாமுனிதனை கொடு வருக - காளமாமுனிவனை யழைத்துவருவாயாக,' என - என்றுசொல்லி, கலந்த - உடம்பிற்பொருந்திய, நீறு - திருநீற்றின், ஒளி—, கூரும் - மிகுதற்குக்காரணமான, தூளம் - உத்தூளனத்தையுடைய, மா முனிஒருவனோடு-சிறந்த ஒருமுனிவனுடனே, உரைசெய்ய-சொல்ல,— விடுத்த மா முனி - அனுப்பப்பட்ட அந்தச் சிறந்தமுனிவன்,—விரைவில் போய்—,— வாளம் மா நிலம் முழுதுஉடை மன்னன் - வட்டவடிவமாகிய பெரிய பூமிமுழுவதையும் தனதாகவுடைய மன்னவனான அந்தத்துரியோதன னுடைய, இல் - மனையிலே, மா மறை வேள்வி கூர் முனி யொடுஉம் - பெருமை பொருந்திய வேதத்திற் கூறப்படும் யாகத்தைப் புரிவதில் மிக்கவ னான காளமாமுனிவனுடனே, மீளவந்தனன்—; (எ - று.)—அம்மா - சற் றசை.

உத்தூளனம் - விபூதியை நீரிற்குழையாமல் வரியாகவன்றி உடம்பிலே யணிதல். தூளமாமுனிஎன்றே பெயருமாம். (ச)

5.— காளமாமுனிபாதங்களில் துரியோதனன் விழுந்து தன்னை யீடேற்ற வேண்டுதல்.

ஒருமுனிக்குலங்களுக்குமுன்செய்கலாவுயர்வுடையுபசாரம்
பெருமுனிக்களித்திறைஞ்சிநீபுரிதவப்பெருமையால்வளர்கின்ற
இருநிலப்பரப்பெங்குமென்னாணையேயென்னைநீயீடேற்றத்
திருவுளத்தருள்செய்குகவெனவவன்சேவடிகளில்வீழ்ந்தான்.

(இ - ள்.) ஒருமுனிக்குலங்களுக்குஉம் - முனிக்குலங்களில் ஒருத்தர்க் கும், முன் செய்கலா - முன்செய்திராத, உயர்வுஉடை - மேன்மையை யுடைய, உபசாரம்-உபசாரத்தை, பெரு முனிக்கு - பெருமைபெற்ற அந்தக் காளமாமுனிவனுக்கு, அளித்து - அன்போடுசெய்து, இறைஞ்சி-வணங்கி, 'நீ—, புரி - செய்த, தவம் பெருமையால் - தவத்தின்பெருமையால், இரு நிலம் பரப்பு எங்குஉம் என் ஆணை வளர்கின்றது - பெரியபூமியின்பரப்பு முழுவதும் என்னுடைய கட்டளையே மேன்மையுறச்செல்கின்றது: நீ—, என்னை—, ஈடேற்ற - (வரவிருக்கின்ற ஆபத்தினின்று) கரையேற் றும்படி, திருவுளத்து - (உமது) மேன்மைபொருந்திய மனத்திலே, அருள் செய்குக - கருணைபுரிவீராக,' என—, அவன் - அந்தக்காளமாமுனிவ னுடைய, சே அடிகளில்-செம்மையான பாதங்களில், வீழ்ந்தான்—; (எ-று.)

தவப்பெருமையையுடைய உம்முடையதிருவருளால்தான் நான் உலக முழுவதும் என்னாணையைச்செலுத்துகிறேனென்று உபசாரவார்த்தையாகக் கூறுவான் 'நீபுரிதவப்பெருமையால் வளர்கின்றது இரு நிலப்பரப்பெங்கும் என்னாணையே' என்றான். (ரு)

6.—தன்னையழைத்த காரணத்தைக் காளமாமுனிவன் வினவ, சகுனி 'பகை களைக' என்றல்.

*நன்கலாவிதமனைத்தையுந்தெரிக்குநன்னாவுடைமுனியென்னை*
*யென்கொலாமிவணழைத்ததின்றெனவவனிருந்தமாமனைநோக்கத்*
*தன்கலாமனந்தோன்றவச்சகுனியத்தவமுனிவனைப்போற்றி*
*மின்குலாவருவேணியாய்நீயிவன்வெம்பகைகளைகென்றான்.*

(இ - ள்.) நல் - சிறந்த, கலா விதம் அனைத்தைஉம் - சாஸ்திரங்களின் வகைகளையெல்லாம், தெரிக்கும் - உரைக்கவல்ல, நல் நாஉடை-சிறந்த நாவினையுடைய, முனி - காளமாமுனிவன், 'என்னை—, இன்று - இன்றைக்கு, இவண் - இவ்விடத்தில், அழைத்தது—, என்கொல் - என்னகாரணம்பற்றியோ?' என - என்று வினவ, அவன் - அந்தத் துரியோதனன், இருந்த - அங்கிருந்த, மாமனை நோக்க - சகுனியைப்பார்க்க,— அ சகுனி—,—தன் - தன்னுடைய, கல் ஆம் மனம் தோன்ற - கல்லைப்போன்ற (வன்மையுடைய) நெஞ்சத்தின்தன்மை (பிறர்க்குப்)புலனாகும்படி, அ தவம் முனிவனை போற்றி-அந்தத் தவத்தையுடைய காளமாமுனிவனைப் பாராட்டி, 'மின் குலாவரு வேணியாய் - மின்னல்போல்விளங்குகின்ற ஜடையையுடைய முனிவனே! நீ—, இவன் - இந்தத் துரியோதனனுடைய, வெம் பகை - கொடியபகைவரை, களைக - போக்குவாயாக,' என்றான் - என்று கூறினான். (எ . று.)

முதலடியில் கலா - ஆவீறுஐயாகாதவடசொல். என்கொல், கொல் - அசை. கலா=கல்லாத, படியாத [மூடத்தன்மையையுடைய], மனம் என்றுமாம். ஆம் - அசை. அவணிருந்த மாமனைஎன்றும் பாடம். (௬)

7.—கன்னன் 'பாண்டவரைக்கொல்ல அபிசாரயாகஞ்செய்க' எனல்.

*கொடுத்துமாநிலத்தின்னிசைவளர்க்குமக்கொடியபாவியுமைவர்*
*விடுத்தபாரினம்வேண்டுவரிருக்கினவ்வேந்தரைவிண்ணேற்றற்*
*கடுத்தவோமம்வஞ்சகங்களாலியற்றுதியாயினிவ்வெழுபாருங்*
*கொடுத்திநீநிலைபெறவரவெழுதியகொடியவன்றனக்கென்றான்.*

(இ - ள்.) மா நிலத்து - இந்தப்பூமியிலே, கொடுத்து-தானஞ்செய்து, இன் இசை வளர்க்கும் - இனியபுகழை மிகுதியாகஅடைகின்ற, அ கொடிய பாவிஉம் - அந்தக் கடுந்தீவினையினனான கர்ணனும், 'ஐவர் - பஞ்சபாண்டவர், இருக்கின் - உயிரோடு இருப்பாராயின், விடுத்த - (சூதுபோரிலிழந்து)* விட்டிட்ட, பார் - பூமியை, இனம் - இன்னும், வேண்டுவர் - (தமக்கு) வேணுமென்று கேட்பார்கள்; அ வேந்தரை - அந்தப் பாண்டவராசரை, விண் ஏற்றற்கு-வானுலகில் ஏறச்செய்வதற்கு [கொல்லுதற்கு], அடுத்த - ஏற்ற, ஓமம் - யாகத்தை, வஞ்சகங்களால் - பகைவர் அறியாதவகைகளால், இயற்றுதி ஆயின் - செய்வாயானால், அரவு எழுதிய கொடியவன் தனக்கு - பாம்பின்வடிவம் எழுதப்பெற்ற கொடியையுடையவனான துரியோதனனுக்கு, இ எழு பார்உம்-ஏழுதீவுகளான இந்தப்பூமி முழு

வதையும், நீ—, நிலைபெற கொடுத்தி-நிலையாகக் கொடுத்தவனுவாய்,' என்முன் - என்று கூறினான்; (எ - று.)

கொடுக்குங் குணத்தால் இசைபெற்றோனாயினும் மனத்தில் தீவினையே யெண்ணுபவனென்பார் 'கொடுத்திசைவளர்க்குங் கொடிய பாவி' என்றார்; உம் - எச்சப்பொருளது. பிறருக்குத் தெரியாமல் அபிசாரஹோமஞ் செய்ய வேணுமென்பான், 'ஓமம்வஞ்சகங்களாலியற்றுதி' என்றான். கொடியவன் - கொடுமையையுடையவனென்ற பொருளுந் தொனிக்கும். (எ)

8.—கன்னனுடைய வாசகம் கேட்டதும் முனிவன் நடுநடுங்கி, தன் நல்வினைகளெல்லாம் முடிந்தனவாமென்று கருதுதல்.

கன்னன்வாசகங்கேட்டபோதிரண்டுதன்கன்னமுநெருப்புற்ற
தென்னவேவவைம்புலன்களுநெஞ்சமுமிடியின்வாயரவொத்தான்
பின்னையாதவனுரைப்பதுதவங்களும்பெருந்தகைமையும்பொன்றி
முன்னரேழெழுபிறப்பினல்வினைகளுமுடிந்தவின்றெனமுன்னி.

மூன்றுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) கன்னன் வாசகம் கேட்ட போது - கர்ணனுடைய வார்த்தையைக் கேட்ட சமயத்தில், தன் இரண்டு கன்னம்உம் - தன்னுடைய இரண்டு காதுகளும், நெருப்பு உற்றது என்ன-நெருப்புப் பட்டதையொப்ப, வேவ - வேகாநிற்க,—ஐம் புலன்கள்உம் - (தன்) பஞ்சேந்திரியங்களும், நெஞ்சம்உம் - மனமும், இடியின்வாய் அரவு - இடியரவங்கேட்ட பாம்பை, ஒத்தான் - ஒப்ப நடுங்கப்பெற்றான்: பின்னை - (மேலே சொல்லப்போவது தவிர) வேறாக, யாது அவன் உரைப்பது - அம்முனிவன் என்ன சொல்ல முடியும்? 'தவங்கள்உம்-(நான் இதுவரையிலும் செய்த)தபசுக்களும், பெருந்தகைமைஉம் - (என்னுடைய) பெருமைக்குணமும், பொன்றி-அழிந்து, (அம் மாத்திரத்தோடு நில்லாமல்), முன்னர்-முன்பு நேர்ந்த, ஏழ் எழு பிறப்பின் - எழுவகையாகவுள்ள எழுபிறவிகளிற் செய்துள்ள, நல்வினைகள்உம் - தன்னுடைய சுகிருதங்களும், இன்று - இன்றோடு, முடிந்த - ஒழிந்துவிட்டன,' என முன்னி - என்று நினைத்து,—(எ - று.)—'என்றான்' (10) என்க.

சொன்னதைக் கேட்டவை முதன்முதலிற் காதுகளேயாதலால் அவை பட்ட அவஸ்தையை முதலிற் கூறி, பிறகு காதுகள்மாத்திரமன்றிப் பஞ்சேந்திரியங்களும் அவைகட்கு ஞானம்வரும் வாயிலான நெஞ்சமும் வருந்தியமையைக் கூறுகின்றார். புலன் - பொறிக்கு, இலக்கணை. இடியைக்கேட்ட அரவம் நடுங்குமென்பது, நூற்கொள்கை. இப்போது இந்தத் துரியோதனுதியரின் தூண்டுதலால், தான் செய்யப்போகின்ற தீவினையால், இந்தப் பிறவியின் நன்மையேயன்றி ஏழேழ்பிறவியின் நன்மையும் கெடுமென்று கருதினான் முனிவனென்க. (அ)

9.—இரண்டுகவிகள் - நீ கூறியவாறு அபிசாரஹோமஞ்செய்தால் எனக்கு அன்றிப் பாண்டவர்கட்கு அழிவு நேராதென்று முனிவன் கூறுதல்.

எண்வகைப்பெருந்திசையினுநினதுபேரிசையிலாத்திசையில்லை
மண்ணனைத்துநின்றனிக்குடைநிழலிலேமனுமுறைமையின்வாழுங்

கண்ணனுற்றதிக்கருமநீயெக்குறைகண்டுவெங்கழற்காலாய்
விண்ணகத்துநானேற்றுதல்புரியினும்வீவரோவீவில்லார்.

(இ - ள்.) எண் வகை பெருந் திசையின்உம் - எட்டுவகைப்பட்ட பெருந்திக்குக்களிலும், நினது - உன்னுடைய, பேர் இசை இலா - மிக்க கீர்த்தியையுடையதாகாத, திசை - திக்கானது, இல்லை—: மண் அனைத்து உம் - பூமிமுழுவதும், நின் - உன்னுடைய, தனிகுடை நிழலிலே - ஒப்பற்ற குடை நிழலின்கீழே (தங்கி), மனு முறைமையின் - மனுநூலிற்கூறிய முறை வழுவாமல், வாழும் - வாழ்ச்சியடையாநின்றுள்ளது : எ குறை கண்டு - எந்தக் குறையைக் காண்பதனால், இ கருமம் - (பகைவரை அபிசாரத்தா லொழித்தலாகிய)இந்தத் தீச்செயலை,நீ—, கண்ணல்உற்றது-எண்ணுதற்குப் பொருந்தியது ? வெம் கழல் காலாய் - விரும்பத்தக்க கழலையணிந்த பாதங் களையுடையவனே ! நான்—, (பாண்டவர்களை), விண் அகத்து - சுவர்க்க லோகத்திலே, ஏற்றுதல் புரியின்உம் - ஏற்றுதற்குஉரிய தொழிலைச்செய் தேனாலும், வீவு இல்லார் - அழிதற்குஉரிய ஊழ்இல்லாதவராகிய அந்தப் பாண்டவர், வீவர்ஓ - இறப்பார்களோ ? [இறக்கமாட்டார்களென்றபடி].

எண்வகைப் பெருந்திசை - கிழக்குமுதலிய நான்கு பிரதான திக்குக் களும்,தென்கிழக்கு, தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்குஎன்கின்ற நான்கு மூலைத்திக்குக்களும். அங்கதேசத்துக்கு அதிபதியான கர்ணனை 'மண்ணனைத் தும் நின்தனிக்குடை நிழலிலே வாழும்' என்றது - இவனது வலிமையையே பிரதானமாக்கொண்டு துரியோதனன் நிலவுலகாட்சிபுரிவதனா லாகும். பாண்டவர்கள் உயிரோடிருத்தலால் யாதொரு குறையும் இல்லாது நீங்கள் இனிதிருக்க, அவரை யொழிக்கவேணுமென்று கருதுதற்குக் காரணமில் லையே யென்பது, மூன்றுமடியின்கருத்து. (௯)

10. தொடங்கியான்புரிதீவினையென்னையேசுடுவதல்லதுகொற்ற
மடங்கல்போல்பவர்தங்கண்மேற்செல்லுமோமாயவனிருக்கின்றா
னிடங்கொள்பாரகம்பெறுவதற்கெண்ணுநின்னிச்சையின்படியேகி
விடங்களாலுயிரொழிப்பவர்க்கொத்துநான்வீவதேமெய்யென்றான்.

(இ - ள்.) (உமது சொற்கேட்டு), யான்—, தொடங்கி - ஆரம்பித்து, புரி - செய்கின்ற, தீவினை - தீச்செயல், (அதன் பயனால்), என்னை ஏ சுடு வது அல்லது - என்னையே யெரித்தொழிப்பதல்லாமல், கொற்றம் மடங்கல் போல்பவர் தங்கள்மேல் - வெற்றிபொருந்திய சிங்கத்தை யொப்பவராகிய பாண்டவர்கள் மீது, செல்லும்ஓ - (பயனை விளைக்குமாறு) செல்லவல் லதோ ? [செல்லவல்லதன்று]; (ஏனெனில்),—மாயவன் இருக்கின்றான் - (தீவினைப்பயன் அந்தப் பாண்டவர்கட்கு நிகழாதபடி பாதுகாக்க) ஸ்ரீக்ருஷ் ணன் இருக்கின்றான் : இடம் கொள் பார் அகம் பெறுவதற்கு - விசால மாகவுள்ள பூமியினிடத்தை (ப் பாண்டவர்க்குக் கொடாமல் நமக்கே உரிய தாக)ப் பெறும்படி, எண்ணும் - ஆலோசிக்கின்ற, நின் - உன்னுடைய, இச் சையின்படி - விருப்பத்தின்படி, ஏகி - (நான்) சென்று, விடங்களால்—,

உயிர் ஒழிப்பவர்க்கு ஒத்து - தம்முயிரை மாய்த்துக்கொள்பவரைப்போன்று, நான்—, வீவது ஏ - சாவதுவே, மெய்-உண்மையாய் நிகழுஞ்செயலாகும், என்றான் ;—(எ - று.)

உன் சொற்கேட்டுப் பாண்டவர்களை அபிசா... செய்து கொல்ல முயன்றேனேயானால் ஸ்ரீக்ருஷ்ணபகவான் தீவினைப்பயனை நணுகவொட்டாதுசெய்தற்குப் பாண்டவர்பக்கலுள்ளதனால் "தன்வினை தன்னைச்சுடும்" என்றவாறு அத்தீவினைப்பயன் என்னையே சுட்டு என்னுயிரை யழிப்பது திண்ணமென்று காளமாமுனிவன் பதில் கூறினானென்பதாம். உயிரொழிபவரொத்து என்ற பாடம் ஏற்கும். (௧0)

11.—யாவரும் பணிந்துவேண்டி முனிவனை அபிசாரஹோமஞ் செய்ய இசையுமாறு செய்தல்.

அசைவிலாமனத்தருந்தவமுனிவனையனைவரும்பணிந்தேத்தி
யிசையுமாறுசெய்தோமவான்பொருள்களுக்கியாவும்வேண்டுவநல்கத்
திசையெலாமுகமுடையவனிகர்தவச்செல்வனுஞ்சென்றான்வெவ்
வசையினான்மிகுகொடியகோலரசனுமகிழ்ந்துதன்மனைபுக்கான்.

(இ - ள்.) அசைவு இலா மனத்து - சலித்தலில்லாத மனத்தையும், அருந் தவம்-(பிறருக்குச் செய்வதற்கு)அரிய தவத்தையுமுடைய,முனிவனை-காளமா முனிவனை, அனைவர்உம் - (துரியோதனன் கர்ணன் சகுனி துச்சாதனன் என்ற) நால்வரும், பணிந்து - வணங்கி, ஏத்தி - புகழ்ந்து, இசையும் ஆறு செய்து - (அபிசார வேள்வியை யியற்றுவதற்கு) உடன்படும்படி செய்து, ஓமத்துக்கு வேண்டுவ வான் பொருள்கள் யாஉம் நல்க - ஹோமத்துக்குவேண்டுவனவாகிய சிறந்தபொருள்கள் எல்லாவற்றையும் தர,—திசை எலாம் முகம் உடையவன் நிகர் தவம் செல்வன்உம் - நான்கு திக்கையும் நோக்கிய நான்கு முகங்களையுடையவனான பிரமதேவனையேயொத்த அந்தத் தபோதனனும், சென்றான்-(அபிசார வேள்வியைச் செய்யும்படி) போனான்: வெவ் வசையினால் மிகு-(உலகத்தாரின்) கொடிய பழிப்பினால் மிகப்பெற்ற, கொடிய கோல் அரசன்உம் - கொடுங்கோலரசனான துரியோதனனும், மகிழ்ந்து - (இனித் தன்கருத்து முற்று மென்ற எண்ணத்தினால்) மகிழ்ச்சியடைந்து, தன் மனை புக்கான்-தன் அரண்மனைக்குச் சென்றான்; (எ - று.)

சலிப்பில்லாத மனமுடைய அந்தமுனிவனும் துஷ்ட சதுஷ்டர்கள் பணிந்தேத்துதலினால் மனஞ்சலித்தனனென்பார் 'அசைவிலாமனத் தருந் தவ முனிவனை இசையுமாறுசெய்து' என்றார். இருடியரென்ற பொருளில் தபோதநரென்று ஒருசொல் இருத்தலால், 'தவச்செல்வன்' என்றது. ஓம வான் பொருளுக்கு என்றஇடத்து உருபு பிரித்துக் கூட்டப்பட்டது. (௧௧)

12.—முனிவன் அபிசாரஹோமஞ்செய்ய வரைப்புறத்துச் சார்தல்.

போனமாமுனிதன்றபோவனத்தொருபுடைமிடைநெடுங்கள்ளிக்
கானமானதுபுகுந்துபாரிடங்களுங்கழுகினங்களுந்துன்றி

யானையோடிடநரிதுரத்திடுநிலத்தெரிவெயிற்கழைமுத்தம்
வானெலாநெடுந்தாரகைபோலெழுமால்வரைப்புறஞ்சார்ந்தான்.

(இ - ள்.) போன - புறப்பட்டுச்சென்ற, மா முனி - சிறந்த அந்தக் காளமாமுனிவன், தன் தபோவனத்து - தன்னுடைய தவச்சாலையில், ஒரு புடை - ஒருபக்கத்திலே, மிடை-நெருங்கிய, நெடுங் கள்ளிக்கானம்ஆனது - நீண்ட கள்ளிக்கானமாகிய இடத்திலே, புகுந்து—, பாரிடங்கள்உம் - பூதங்களும், கழுகு இனங்கள்உம் - கழுகின் கூட்டங்களும், துன்றி - நெருங்கப்பெற்று,—யானை ஓடிட நரி துரத்திடு - யானையஞ்சியோடும்படி நரியானது ஓட்டவல்ல, நிலத்து - பாலைநிலமாகிய, எரி வெயில்-எரிகின்ற வெயிலினால், கழை முத்தம் வான் எலாம் நெடுந் தாரகைபோல் எழும்-மூங்கிலிலிருந்து முத்துக்கள் ஆகாயமெல்லாம் பெரியநட்சத்திரங்கள்போல மேலேயெழுகின்ற, மால் வரை புறம் - பெரிய மலையின்பக்கமாகிய இடத்தை, சார்ந்தான்—; (எ - று.)

பாலைநிலத்தில் யானை வலிகுன்றிடுமாதலால், அதனை நரி துரத்திடும் என்றார். எரிகின்றதுபோன்ற வெயிலால் வேய் பிளக்க, அவ்வேயினின்று முத்துக்கள் தாரகைபோல வானத்திலெழு மென்க. (கஉ)

13.—முனிவன் பலிகொடுத்து அக்கினியை வளர்த்தல்.

அண்டர்யாவருமானுடமுனிவருமகலிடந்தனின்மற்றுங்
கண்டகண்டவர்யாவரும்வெருவரக்கடும்பலிபலநல்கி
யுண்டியால்வளர்ந்தாரழல்கோளகையூடுறும்படியோம
குண்டமெவ்வளவவ்வளவிந்தனங்கொடுந்தருக்களிற்சேர்த்தான்.

(இ - ள்.) அண்டர் யாவர்உம் - தேவர்களெல்லாரும், மானுடம் முனிவர்உம்-மநுஷ்யவர்க்கத்தைச்சேர்ந்த இருடியரும், அகலிடந்தனில் மற்றும் கண்ட கண்டவர் யாவர்உம் - பெரியபூமியிலே மற்றுங்காணப்பட்ட மானுடரும், வெருவர - அஞ்சும்படி, கடும் பலி பல நல்கி - கொடிய பல பலிகளைக்கொடுத்து, உண்டியால்-தன்னிலிடப்பட்டபொருளால், ஆர் அழல்-நிரம்பிய அக்கினியானது, வளர்ந்து—, கோளகையூடு - வானமண்டலத்தினிடையே, உறும்படி - போய்ப்பரவும்படி, ஓமகுண்டம் எ அளவு - ஓமகுண்டம் எவ்வளவு பரப்பாகவுள்ளதோ, அ அளவு - அவ்வளவுக்கும், (எரிவதற்கு ஏற்ற), இந்தனம் - விறகுகளை, கொடுந் தருக்களில்-வளைவாய் வளருந்தன்மையுள்ள மரங்களிலிருந்து, சேர்த்தான்—; (எ - று.)

அக்கினிச்சுவாலை ஓங்கி வளரும்படி ஓமகுண்டங்கள் எவ்வளவு கொளளுமோ அவ்வளவு விறகுகளையும் அக்குண்டத்திற்சேர்த்தன னென்பதாம். கொடுந்தருக்கள் - வேம்புபோல்வன என்றலும் உண்டு. (கங)

14.—முனிவன் வேதமந்திரத்தோடு நெய்வார்த்து ஓமஞ்செய்தல்.

மிக்கமந்திரயாமளமுதலியவேதமந்திரந்தம்மிற்
றக்கமந்திரந்தெரிந்துகொண்டாசறுசடங்கமுந்தப்பாமற்
றொக்கமந்திரமொன்றினுக்கோரெழுசுருவையினறுநெய்வார்த்
தொக்கமந்திரமனைத்தினுங்கொடுமைகூரோமமும்புரிந்தானே.

(இ - ள்.) வேதமந்திரம்தம்மில் - வேதமந்திரங்களுக்குள்ளே, தக்க - (கருதியபயனை விளைக்குந்) தகுதியுள்ள, மந்திரம் - மந்திரமாகி, மிக்க-(அபிசாரத்திற்கு) மேம்பட்ட, யாமளம் முதலிய மந்திரம் - யாமளமுதலியவற்றிலுள்ள மந்திரங்களை, தெரிந்துகொண்டு—, ஆசு அறு-குற்றமற்ற, சடங்கம் உம்-(அவ்வேள்விக்குஉரிய) சடங்குகளும், தப்பாமல்-தவறாதபடி (இயற்றி), தொக்க-கூடிய, மந்திரம் ஒன்றினுக்கு - ஒருமந்திரத்துக்கு, ஓர் எழு சுருவையின் நறு நெய் வார்த்து - ஒரேழுதரம் நெய்த்துடுப்பினால் நறுமணமுள்ள நெய்யை ஓமஞ்செய்து, ஒக்க மந்திரம் அனைத்தின்உம்-(அபிசாரத்துக்கு) ஏற்றனவான மந்திரமெல்லாவற்றிலும், கொடுமை கூர்-கொடுமைமிகுந்த, ஓமம் உம் - ஓமத்தையும், புரிந்தான் - செய்தான்; (எ - று.)

யாமளம் என்பது - அதர்வணவேதத்தின் பகுதியானதென்பர் : அது-அபிசாரம்முதலிய சடங்குகளுக்கு எடுத்தது. அபிசாரச்சடங்குக்குத் தப்பாதபடிசேர்ந்துள்ள மந்திரம்எனினுமாம். ஒருஅபிசாரமந்திரத்துக்கு ஏழுமுறை நெய்த்துடுப்பினால் நெய்வார்த்து மந்திரோச்சாரணத்துடன் ஓமமுஞ்செய்தானென்பது, பின்னிரண்டடியிற் கூறிய பொருள். (கச)

15.—அவ்வோமத்தீயினின்று ஓர்பூதந்தோன்ற முனிவனும் உடல்துலைதல்.

*தன்றனிச்சையினன்றியேழ்கடலுடைத்தராதலந்தனையாளு*
*மன்றனிச்சையிற்புரியுமவ்வேள்வியின்வந்துறுபெரும்பூதஞ்*
*சென்றெயிற்றிளநிலவெழுந்துணைவிழித்தீயெழவெயில்வாய்கார்க்*
*குன்றெனப்பொலிந்தெழுந்ததுமுனிவனுங்கூசிமெய்குலைந்திட்டான்.*

(இ - ள்.) தன்தன் - தன்னுடைய, இச்சையின் அன்றி - இச்சையின்படி யல்லாமல், ஏழ் கடல் உடை தராதலந்தனை ஆளும் - ஏழுகடலையும் ஆடையாகக்கொண்ட பூமியை யரசுபுரிகின்ற, மன்தன் - துரியோதனராசனுடைய, இச்சையின்-விருப்பத்தின்படியே, புரியும்-செய்கின்ற, அ வேள்வியின்-அவ் யாககுண்டத்தினின்று, உறு பெரும் பூதம் - மிக்கபெருந்தோற்றமுடைய பூதமொன்று,—வந்து - தோன்றி, எயிறு - கோரப்பற்களினின்று, சென்று - வெளிப்போய், இள நிலவு எழ-இளநிலாவீசவும், துணை விழி - இரண்டுகண்களினின்று, தீ எழ-நெருப்புப்பொறிபறக்கவும், வெயில் வாய் கார் குன்று என - வெயில்பொருந்திய கருநிறமலைபோல, பொலிந்து - விளங்கி, எழுந்தது - வெளிப்பட்டது : முனிவன்உம் - (அபிசாரயாகஞ்செய்து பூதத்தையுண்டாக்கிய) காளமாமுனியும், கூசி - அஞ்சி, மெய் குலைந்திட்டான் - உடலம் நடுங்கினான்; (எ - று.)

வேள்வி - இங்கே குண்டத்துக்கு ஆகுபெயர். கருநிறமுடைய பூதத்தினிடத்துத் தீப்புறப்படும் விழிக ளிருத்தலால், அதற்கு, 'வெயில்வாய் கார்க்குன்று' என்று உவமைகூறினர். பூமியாகிய பெண்ணுக்குக் கடலை ஆடையாகக் கூறுவர். (கரு)

வேறு

16.—துரியோதனன் அபிசார வேள்விசெய்விப்பதை யறிந்து யமராஜன் பாண்டவர்களை யாபத்தினின்று தப்புவித்தல்.

இப்பா லிவ்வா றோமஞ்செய் திவனிப் பூத மினிதெழுப்ப
வப்பா லிருந்த வனசரித ரைவர்க் கமைந்த வாறுரைப்பா
மூப்பா லினுக்கு முதற்பாலாய் மும்மைப் புவனங் களுங்காக்குந்
தப்பா வாய்மை யறக்கடவு ளறிந்தா னெண்ணந் தப்புவிப்பான்.

(இ - ள்.) இ பால் - (துரியோதனனுள்ள) இவ்விடத்தில், இவன் - இக் காளமாமுனிவன், இ ஆறு - இப்படி, ஓமம் செய்து - யாகத்தைச் செய்து, இ பூதம் - இப்படிப்பட்ட பூதத்தை, இனிது எழுப்ப - இனிதாக (யாககுண்டத்தினின்றும்) எழுமாறுசெய்ய,— அ பால்-அங்கு [வனத்தில்], இருந்த - வசித்திருந்த, வனசரிதர் ஐவர்க்கு - காட்டில்திரிபவராகிய பஞ்ச பாண்டவர்க்கு, அமைந்த ஆறு - நேர்ந்த நிலைமையைப்பற்றி, உரைப்பாம் - (இனிச்) சொல்லுவோம்: மு பாலினுக்கு - (அறம் பொருள் இன்பம் என்னும்) மூன்று பகுதிக்குள், முதல் பால் ஆய்-முதற்பகுதியான தருமசொரூபியாய், மும்மை புவனங்கள்உம் காக்கும்-(மேல் கீழ் நடு என்னும்) மூன்றிடங்களிலுமுள்ள உலகங்களையும் பாதுகாக்கின்ற, தப்பா வாய்மை - தவறாத சத்தியத்தையுடைய, அறக்கடவுள் - தருமராஜனெனப்படுகிற யமன், அறிந்தான் - (துரியோதனனுடைய சூழ்ச்சியை) அறிந்தவனாய், எண்ணம் தப்புவிப்பான் - (அந்தத்துரியோதனனுடைய) எண்ணத்தினின்றும் (பாண்டவர்களைத்) தப்பச்செய்விப்பானானான்; (எ - று.)—பாண்டவர்களைத் துரியோதனன்எண்ணப்படி அழிந்திடாதவாறு யமதருமன் பூதத்தினின்று தப்பச்செய்தலை மேலே காண்க.

யமதருமராஜன் உலகிலுள்ளாரை அவரவர்கள்செய்த தீவினைக்கேற்பப் பட்சபாதமில்லாமல் தண்டித்துத் தருமத்தை நிலைநாட்டுபவனாதலால், அக்கடவுளை 'மும்மைப்புவனங்களுங்காக்கும் தப்பாவாய்மை யறக்கடவுள்' என்றார். முதலிரண்டடி - கவிக்கூற்று. ஓமம் - அக்கினியில் அவிசு சொரிதலையுடைய வேள்விக்கு, ஆகுபெயர். வனசரிதர் என்ற வடசொற்றொடர் - காட்டிற் சஞ்சரித்தலையுடையவர் எனக் காரணப்பொருள்படும். அறம்பொருள் இன்பம் என்ற மூன்றும் 'முப்பால்' எனப்படும். மும்மைப் புவனம் என்றவிடத்து, மும்மையென்பது - எண்ணின்மேல் நின்றது.

இதுமுதல் ஆறுகவிகள் - பெரும்பாலும் மூன்று ஆறுஞ்சீர்கள் காய்ச்சீர்களும், மற்றை நான்கும் மாச்சீர்களுமாகிவந்த கழிநெடிலடிநான்கு கொண்ட அறுசீராசிரிய விருத்தங்கள். (கசு)

17.—பாண்டவரிருக்கும் வனத்தில் பார்ப்பனச்சிறுவனது மான்தோலை ஒருமான் எடுத்துச்செல்லுதல்.

தன்மைந்தனுமத்தம்பியருஞ்சரியாநின்றதபோவனத்து
நன்மைந்தரிலோர்முனிமைந்தனன்னூலுடன்பூணசினத்தை

வின்மைந்தரையுமதியாமல்விரைந்துள்புகுந்துவிசைத்தகல்வான்
றொன்மைந்தனைப்போலோருழைகொண்டோடிற்றென்னற்சொலவுண்டோ

(இ - ள்.) தன் மைந்தன் உம் - தனது புத்திரனாகிய யுதிஷ்டிரனும், அ தம்பியர் உம் - (வீமன் அருச்சுனன் நகுலன் சகதேவன் என்ற அவனுடைய) அந்தத் தம்பிமார்களும், சரியா நின்ற - சஞ்சரித்துக்கொண்டிருக்கிற, தபோவனத்து - (அந்தத்) தபோவனத்துள் (வாழ்கின்ற), நல் மைந்தரில் - அழகிய மைந்தர்களுக்குள், ஓர் முனிமைந்தன் - ஒரு ரிஷிகுமாரன், நல் நூலுடன் - (தனது) அழகிய பூணூலுடனே, பூண் - தரித்துக்கொண்டிருந்த, அசினத்தை - மான்தோலை, ஓர் உழை - ஒரு மானானது, வில் மைந்தரை உம் - வில்வீரராகிய பஞ்சபாண்டவரையும், மதியாமல் - இலட்சியஞ் செய்யாமல், விரைந்து உள்புகுந்து-வேகமாக உள்ளேசென்று, கொண்டு - கவர்ந்துகொண்டு, அகல் வான் தொல் மைந்தனை போல் - பரந்துள்ள ஆகாயத்தின் பழமையாகிய மைந்தனைப்போல [காற்றைப்போல], விசைத்து ஓடிற்று - விரைவுகொண்டு ஓடிற்று: என்னல் சொல உண்டோ - (இவ்வாறுநிகழ்ந்த விசித்திரத்தன்மைபற்றி) என்றுச் சொல்லுதற்கு உள்ளதோ? [சொல்லமுடியாதென்றபடி]; (எ - று.)

பாண்டவர்கள் வில்லேந்தினவர்களா யிருக்கையிலும், ஒருமானானது அஞ்சாது விரைந்து தபோவனத்துட்புகுந்து முனிகுமாரன் பூண்டிருந்த மான்தோலைக்கவர்ந்துகொண்டு கண்ணுக்குத் தெரியாது மாயமாய் ஓடிற்று என்றால், அந்த விசித்திரத்தன்மையை யான் என்னவென்று சொல்லுவது? சொல்லமுடியா தென்றவாறு. ஆகாசத்தினின்றும் வாயு தோன்றியதாக வேதங்களில் கூறப்படுவதனால், காற்றை, 'வான் தொல்மைந்தன்' என்றார். 'வான் றொன்மைந்தனைப்போல் ஓடிற்று' என்ற விடத்தில், 'காற்றய்ப்பறந்தது' என்று வழங்கும் உலகவழக்குக் கருதத்தக்கது. பூணசினம் - வினைத்தொகை. தபோவநம், அஜிநம் - வடசொற்கள். (கஎ)

18.—முனிகுமாரன் முறையிட, பாண்டவர் மானைத் தொடர்ந்துசெல்லுதல்.

மறைவாய்ச்சிறுவன்கலைத்தோலைமான்கொண்டோடிவானிடையிற்
பொறைவாய்ப்புகுந்ததபயமெனப்புகுந்தாங்கழுதுபுலம்புதலு
நறைவாய்த்தொடையலறன்மகனுமிளையவீரர்நால்வருந்தந்
துறைவாய்ச்சிலையோடம்பேந்தித்தொடர்ந்தாரதனைச்சூழ்புலிபோல்.

(இ - ள்.) மறை வாய் சிறுவன் - வேதத்தை வாயினாற்கூறிக்கொண்டிருப்பவனாகிய முனிகுமாரன், ஆங்கு புகுந்து-(பாண்டவரிருக்கின்ற) அவ்விடத்தில்வந்து, 'கலை தோலை - (நான் பூணூலுடன் பூண்டிருந்த) மான்தோலை, மான் - ஒருமானானது, கொண்டு-கவர்ந்துகொண்டு, ஓடி-விரைந்து சென்று, வான் இடையில்-நெடுந்தூரத்தில், பொறைவாய்-மலையினிடத்தில், புகுந்தது - ஒளித்துக்கொண்டது; (ஆதலால்), அபயம்-(யான்) பயப்படாதே என்று காக்கவேண்டியபொருளாவேன்,' என - என்றுசொல்லி, அழுது

புலம்புதலும்-கண்ணீரைப்பெருகவிட்டுக் கதறிமுறையிட்டவளவில்,—நறை வாய் - தேனைத் தன்னிடத்திலுடைய, தொடையல் - மாலையையணிந்த, அறன் மகன்உம் - தருமனுடையபுத்திரனாகிய யுதிட்டிரனும், இளைய வீரர் நால்வர்உம் - (அவனது) தம்பிமார்களாகிய நான்குவீரர்களும், தம் - தம்மு டைய, துறை வாய் சிலையோடு - விற்கூறுபாட்டிற் பொருந்துதலையுடைய விற்களுடனே, அம்பு - அம்புகளையும், ஏந்தி - தாங்கிக்கொண்டு, அதனை - அம்மானை, சூழ் - சூழ்ந்துகொள்ளுதற்குத்தொடர்கிற, புலி போல் - புலி களைப்போல, தொடர்ந்தார் - தொடர்ந்தார்கள் ; (எ - று.)

சிறுவன் ஆங்குப்புகுந்து அபயம் என அழுது புலம்புதலும், மகனும் நால்வரும் சிலையோடு அம்பேந்தி, புலிபோல் அதனைத்தொடர்ந்தார் என்க. முனிகுமாரன் பிரமசாரி யாதலால், தனது ஆசிரமத்துக்கு ஏற்றபடி வேதத்தை ஓதிக்கொண்டிருக்கின்றன னென்பார், அவனை 'மறைவாய்ச் சிறுவன்' என்றார். பொறை - (பூமியைப்) பொறுப்பது [சுமப்பது] என மலைக்குக் காரணப்பெயர் : 'ஐ' என்னும் கருத்தாப்பொருள்விகுதிபெற்ற பெயர் : 'தரணீதரம்' முதலிய வடமொழிப்பெயர்களாலும், மலை பூமியைத் தாங்குதலாதல் பெறப்படும். யமதருமராஜனை 'அறன்' என்றார்: அறன்-அறத் தைக் காப்பவன். துறை - விற்களை உபயோகிக்கவேண்டிய வழியுமாம். நான்காமடியில், வாய்-வாய்த்தல் : முதனிலைத் தொழிற்பெயர். வாய்ச்சிலை- வாய்த்தலையுடைய சிலை என இரண்டனுருபும்பயனும் தொக்கதொகை. (கஅ)

19.—ஓடிய மானின்செயலால் தளர்ந்து பாண்டவர் அதைத் தொடர்தலில் ஆசை யொழிதல்.

அகப்பட்டதுபோன்முன்னிற்குமருகெய்த லுங்கூராசுகம்போன்
மிகப்பட்டோடுந்தோன்றுமல்வெளிக்கேயொளிக்கும்விழியிணைக்கு
முகப்பட்டிடுமீண்டைவருந்தம்முரண்டோள்வன்மைதளர்வளவுந்
தகைப்பட்டொழிந்தாரதிலாசையொழிந்தாரிந்த்ரசாலமெனு.

(இ - ள்.) (தோலைக் கவர்ந்துகொண்டுசென்ற மான்),—அகப்பட்டது போல்-(கையில்) அகப்பட்டுவிட்டதுபோல, (பாண்டவர்களின் அருகிலே), முன் நிற்கும் - முன்னே வந்துநிற்கும் : (அந்தப்பாண்டவர்கள்), அருகு - (தன்) சமீபத்தில், எய்தலும் - வந்துசேர்ந்தவுடனே, கூர் ஆசுகம் போல் - கூரிய அம்புபோல, மிக பட்டு ஓடும் - மிகப்பொருந்தி யோடும் : தோன்று மல் - (கண்ணுக்குத்) தெரியாமல், வெளிக்கே - வெளியில், ஒளிக்கும் - (தன்னை) ஒளித்துக்கொள்ளும்: மீண்டு-மறுபடியும், விழி இணைக்கு-இரண்டு கண்களுக்கும், முகம் - எதிரில், பட்டிடும் - பொருந்திநிற்கும் : (இவ்வாறு அந்தமானினால்),ஐவர்உம்-பஞ்சபாண்டவர்களும், தம்-தம்முடைய, முரண்- வலிமையையுடைய, தோள் - தோள்களின், வன்மை - பலமானது, தளர்வு அளவுஉம் - தளர்தலையடையும் வரையிலும், தகைப்பட்டு ஒழிந்தார் - (தொடர்ந்து பிடிக்கமுடியாமல்) தடுக்கப்பட்டுத் தீர்ந்தார்கள் : (பிறகு தோள்வலிமை தளர்ந்ததனால்), இந்த்ரசாலம் எனு-(இந்தமானின்செய்கை)

மாயச்செய்கைபோலு மென நினைத்து, அதில் - அந்தமானைத்தொடர்தலில், ஆசை ஒழிந்தார் - ஆசைநீங்கினார்கள் ; (எ - று.)

ஆசுகம் - விரைந்துசெல்லுவது: அம்பு: காரணப்பெயர். தகை - தகைதல்: முதனிலைத்தொழிற்பெயர். (௧௯)

20.—கவிக்கூற்று: மான்கன்று பாண்டவர்களை இளைப்பித்தவகையை எம்மாற் சொல்லமுடியாதெனல்.

தடங்கானகமும்வானகமுஞ்சாரற்பொருப்புந்தாழ்வரையு
மடங்காவரும்போஞ்சூழ்போதுமப்போதந்தமான்கன்று
தொடங்காவிவரையிளைப்பித்ததொழிலைச்சொல்லினொருநாவுக்
கடங்காதின்னுமாயிரமுண்டானாலதற்குமடங்காதே.

(இ - ள்.) தட கானகம்உம் - பெரிய காடும், வானகம்உம் - ஆகாசமும், சாரல் பொருப்புஉம் - (மேகஞ்) சார்தலையுடைய மலையும், தாழ்வரையும்—, (ஆகிய இவ்விடங்களில்), அப்போது—, அந்த மான்கன்று—,—மடங்காவரும் - திரும்பத்திரும்பவரும் : போம் - (கண்ணுக்குத் தெரியாமற் சிறிதுபோது அப்பாற்) போய்விடும் : சூழ்போதும் - (சிலகால் வலமாகவும் சிலகால்இடமாகவும்) சுற்றும் : தொடங்கா - (அம்மானைப்பற்றத்)தொடங்கியுள்ள, இவரை—, (அது), இளைப்பித்த - சோர்வுஅடையுமாறுசெய்த, தொழிலை—, சொல்லின் - (நாம்) எடுத்துச்சொல்லுவோமேயானால், ஒரு நாவுக்கு - இந்த ஒருநாவினாற்சொல்லிமுடித்தற்கு, அடங்காது - (அத்தொழில்)அடங்காததாகும்: இன்னும் ஆயிரம் உண்டானால் - இன்னும் ஆயிரம் நாக்கு உண்டானாலும், அதற்குஉம் - அந்த ஆயிரம் நாவுகளுக்கும், அடங்காது—; (எ - று.)

அதற்கு - சாதியொருமை. மடங்காவரும் போம் சூழ்போதும் என்பனவற்றைப் பெயரெச்சமெனக்கொண்டு, மான்கன்றுக்கு அடைமொழியாக்கினுமாம். தொடங்கா என்ற வினையெச்சத்தின் பின் ஏற்ற பெயரெச்சச் சொல் ஒன்று வருவிக்கப்பட்டது. (உ0)

21.—யமதருமன் நச்சுச்சுனையாயும் அதைச்சூழ்ந்த மரமாயும் அமைதல்.

கானீதிவர்க்குத்தலைதெரியாக்கானமைவருங்கருத்துமிகக்கலங்கிப்
பானீயத்துக்கைவருமெய்பதையாநிற்பரெனவறிந்து
தானீர்நச்சுச்சுனையாயச்சுனைசூழ்வரவோர்தொன்மரமா
யானீயவனென்றெண்ணமெல்லாமானோனிருந்தானே.

(இ - ள்.) யான் நீ அவன் என்று - யானென்றும் நீயென்றும் அவனென்றும், எண்ணமல் - எண்ணமுடியாதபடி, எல்லாம் ஆனோன் - எல்லாப்பொருளுமாகியிருக்கிற யமதருமன், 'ஈது கான் - இந்தக்காடானது, இவர்க்கு - இந்தப்பாண்டவர்க்கு, தலை தெரியா - இடந்தெரியாத, கானம் - காடாகும் ; (இந்தக்காட்டில் அலைவதனால்), ஐவர்உம் - பஞ்சபாண்டவர்களும், கருத்து - (தம்) மனம், மிக கலங்கி - மிகவும் கலக்கமடைந்து, பானீ

யத்துக்கு - பருகும்நீரைப்பெறுவதற்காக, மெய் பதையாநிற்பர் - உடல் 'வருந்தாநிற்பார்கள்,' என அறிந்து - என்றுஆலோசித்து, தூ நீர் - (கண்ணுக்குத்)தூய்மையுடையதாகத்தோன்றுகின்ற நீரைக்கொண்ட, நஞ்சு சுனை ஆய் - விஷத்தையுடைய சுனையாகவும், அ சுனை சூழ்வா - அந்தச்சுனையைச்சுற்றி நிற்க, ஓர் தொல் மரம்ஆய் - ஒப்பற்ற பழமையான மரமாகவும், இருந்தான்—.

காட்டில் நெடுந்தூரம் மானைத் தேடி யலைந்து திரிந்தமையால், பாண்டவரைவரும் களைத்துக் குளிர்ந்தநிழலையும தண்ணீரையும் நாடிவருவரென்று ஆலோசித்து, யமதருமன் தொன்மரமும் சுனையுமாயிருந்தானென்றவாறு. தொன்மரமாய்என்பதற்கு - மூதணாலுக்குஏற்ப, ஆலமரமாகியென்னலாம். சூரியன் யமன் வருணன் முதலிய கடவுளரை முதற்கடவுள் போலவைத்துக் கூறுதல் வேதவழக்காதலாலும், இந்நூலாசிரியரும் சிவன் சூரியன்முதலியகடவுளரை அவ்வாறுகூறியிருத்தலாலும், இங்கே யமனை 'யானீயவனென்றெண்ணாமல் எல்லாமானேன்' என்றார் : கீழ் "மும்மைப் புவனங்களுங் காக்கும் அறக்கடவுள்" என்றதும் இத்தன்மைபற்றியதென்னலாம். யான் நீ அவனென்றெண்ணாமல் எல்லாமானேன் - உலகத்துப் பொருள்கள் தன்மையாகவோ முன்னிலையாகவோ படர்க்கையாகவோ வழங்குதற்கு உரியன : கடவுளோ அங்ஙனம்அன்றி எல்லாத்தன்மையும் பெற்றிருப்பன் என்றவாறு. பானீயம் - பருகுதற்குஉரியதுஎன்று பொருள்படும் வடமொழி. (உக)

வேறு

22.—தருமன் நீர்கொணருமாறு சகதேவனை அனுப்புதல்.

தருமனுந் தம்பி மாருந் தாலுவும் புலர்ந்து தாகத்
துருகிய மனத்த ராகி யுடறளர்ந் தயரு மாங்க
ணெரியுறு கானம் போல்வா னிளவலை நோக்கி யின்னே
மருவரும் புனல்கொண் டோடி வருதிநீ விரைவி னென்றான்.

(இ - ள்.) தருமன்உம் - யுதிஷ்டிர ராசனும், தம்பிமார்உம் - (வீமன் முதலிய அவனது) தம்பியரும், தாலுஉம் புலர்ந்து - (தமது) நாவும்வறண்டு, தாகத்து - நீர்வேட்கையினால், உருகிய மனத்தர் ஆகி - (உறுதியற்று) நீர்ப்பண்டம்போலுருகுந்தன்மையடைந்த மனத்தையுடையவராய், உடல் தளர்ந்து - உடம்புசோர்ந்து, அயரும் - வருந்துகின்ற, ஆங்கண் - அச்சமயத்திலே,—எரி உறு கானம் போல்வான் - தீப்பிடித்த காடுபோல்பவனாகிய [மிகவும் வெப்பமடைந்தவனாகிய] தருமபுத்திரன்,—இளவலை நோக்கி - (தனது இறுதித்) தம்பியாகிய சகதேவனைப் பார்த்து, 'நீ—, இன்னே - இப்பொழுதே, மருவு அரு - (இங்குக்) கிடைத்தற்குஅரிய, புனல் - நீரை, கொண்டு - எடுத்துக்கொண்டு, விரைவின் - விரைவாக, ஓடிவருதி - ஓடிவருவாய்,' என்றான் - என்று கட்டளை யிட்டான் ; (எ - று.)

பாவத்தொழிலைச் செய்தாரைத் தண்டித்துத் தருமத்தை நிலைநாட்டுதலால், யமனுக்கு 'தருமன்' என்று ஒருபெயர்: அறன் என்றதுபோல:

யுதிஷ்டிரன் குந்திதேவியினிடத்தில் யமதருமராசனது அருளால் தோன்றியவனாதலால், தருமபுத்திரன் எனப்படுவான்: ஆகவே, இங்கே 'தருமன்' என்பது - தருமபுத்திரன் என்பதன் நாமைகதேசம். காட்டில் மானைத் தேடி அலைந்து திரிந்ததனால் மிக்க வெப்பம் அடைந்திருந்தல்பற்றி, தருமபுத்திரனை, 'எரியுறு கானம்போல்வான்' என்றார். இளவல் - சகதேவனைக் குறிக்குமென்பது, மேற்கவியாற் பெறப்படும்.

இதுமுதல் இருபத்துநான்குகவிகள் - முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிவந்த அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தங்கள். (உஉ)

23.—நீர்கொணரச்சென்ற சகதேவன் நச்சுப்பொய்கையை யடைந்து தான் நீர் பருகுதல்.

அக்கணத்தினிற்சாதேவனடவிகடோறுந்தேடி
யெக்கணுங்காணனாகியென்றுதோய்குன்றொன்றேறி
மிக்கவண்சீதவாசவிரிசுனையொன்றுகாணாப்
புக்கனன்பருகலுற்றான்பொலிவறப்புலர்ந்தநாவான்.

(இ - ள்.) அ கணத்தினில் - அப்பொழுது, சாதேவன் - சகதேவன், பொலிவு அற புலர்ந்த நாவான் - விளக்கம்நீங்க [ஈரமற] வறண்ட நாவையுடையவனாய்,—அடவிகள் தோறுஉம் - காடுகள்தோறும், தேடி - நாடி, எக்கண்உம் - எவ்விடத்திலும், காணான் ஆகி - (ஜலத்தைப்) பாராதவனாய், என்று தோய் குன்று ஒன்று - சூரியன்படிகின்ற [மிகவோங்கிய] மலையொன்றின்மீது, ஏறி—, அவண் - அவ்விடத்தில், சீதம் வாசம் மிக்கு விரி சுனை ஒன்று-குளிர்ச்சியும் நறுமணமும் மிக்குப் பரந்துள்ள சுனையொன்றை, காணா-கண்டு, புக்கனன் - புகுந்து, பருகல் உற்றான் - (நீரைக்) குடிக்கலானான்; (எ - று.)

'மிக்கதாகங்கொண்ட தருமபுத்திரனால் நீர் கொணருமாறு ஏவப்பட்ட சகதேவன் தான் சுனையின்நீரைக் கொண்டுசெல்லாது, நீரைப்பருகியது தகுதியோ?' என்று உண்டாகும் வினாவைச் சமர்த்திப்பதற்காக, சகதேவனை 'பொலிவுஅறப்புலர்ந்தநாவான்' என்றார்: இது-கருத்துடையடைமொழியணியாம். என்றுதோய் குன்று - தொடர்புயர்வுநவிற்சி. (உங)

24.—தருமபுத்திரன் சகதேவன்செய்தியை யுணராமல் நீர்கொணருமாறு நகுலனையும் அருச்சுனனையும் பின்னும் அனுப்புதல்.

செழும்புனலுதரந்தன்னிற்சேருமுனாவிபொன்றி
விழுந்தமையறிவுறாதுமீளவுநகுலன்றன்னை
யழுங்கினனேவச்சென்றானவனுமப்பரிசின்மாய்ந்தா
னெழும்படைவிசயன்றன்னையேவினனவனும்போனான்.

(இ - ள்.) செழும் புனல்-வளப்பமுள்ள நீர், உதரம்தன்னில் - (தன்) வயிற்றில், சேரும் முன்-சேருதற்குமுன்னே, (சகதேவன்), ஆவி பொன்றி-

உயிர் ஒடுங்கி, விழுந்தமை - இறந்து வீழ்ந்திட்டதை, அறிவுறாது - அறியாமல்,—(தருமபுத்திரன்),—அழுங்கினன் - (நீர்வேட்கையால்) வருந்தியவனாய்,—நகுலன் தன்னை - நகுலனை, மீளஉம் - மீண்டும், ஏவ - (நீர்கொணருமாறு) கட்டளையிட்டானாக,—அவன்உம் - அந்தநகுலனும், சென்றான்-(நீர்கொணரச்) சென்று, அ பரிசின் - அந்தவிதமாகவே [சகதேவன் நீர்வேட்கையால் சுனைநீரைப்பருகி இறந்தவிதமாகவே,] மாய்ந்தான்-(நீர்பருகி) உயிரொழிந்தான்: எழும படை விசயன்தன்னை - (பகைவர்மீது) செல்லவல்ல ஆயுதங்களையுடைய அருச்சுனனை, ஏவினன் - (பின்னும் தருமபுத்திரன் நீர்கொணருமாறு) கட்டளையிட்டனுப்பினான் : அவன்உம் - அந்த அருச்சுனனும், போனான் - (நீர்தேடிக்கொணருமாறு) சென்றான்; (எ - று.)

சகதேவன் ஆவிபொன்றிய செய்தியை, 'செழும்புனலுதரந்தன்னிற் சேருமுனாவிபொன்றிவிழுந்தமை' என அநுவாதமுகத்தாற் கூறினார் : இப்படி அநுவாதமுகத்தாற் கூறுதலும் கவிமரபே. சென்றாங்கவனுமப்பரிசின், சென்றானவனு நீரருந்தி என்பன பிரதிபேதம். (உச)

25.—அருச்சுனனும் நீர்பருகி இறந்தானாக, தம்பியர் நீர் கொண்டுவாராமைதறிந்துத் தருமபுத்திரன் வருந்திச் சோர்தல்.

தம்பியர்கிடந்ததன்மைகண்டுமத்தலைவன்மேன்மேல்
வெம்புறுகொடியதாகமிகுதியால்விரைந்துவாரிப்
பைம்புனலருந்தியவ்வாறிறந்தனன்பரிதாபத்தோ
டெம்பியரென்செய்தாரென்றிறைவனுமிளைந்துசோர்ந்தான்.

(இ - ள்.) அ தலைவன் - அந்த அருச்சுனனாகியதலைவன், தம்பியர் கிடந்த தன்மை - (தனது) தம்பிமார் (சுனைநீரைப்பருகி) மாய்ந்துகிடக்கின்றதன்மையை, கண்டுஉம் - பார்த்தும், மேன்மேல் வெம்புறு கொடிய தாகம் மிகுதியால் - மேலும்மேலும் தவித்தற்குக்காரணமான கொடிய மிக்க தாகத்தினால், பைம் புனல் - (சுனையின்) பசிய [குளிர்ந்த] நீரை, விரைந்து வாரி - விரைவுகொண்டு (கையில்) முகந்து, அருந்தி - பருகி, அ ஆறு - (அந்தச் சகதேவன்முதலிய தம்பியர் இறந்த) விதமாகவே, இறந்தனன் - உயிரொடுங்கினான்: இறைவன்உம் - தலைவனாகியதருமபுத்திரனும், பரிதாபத்தோடு - மிக்கவருத்தத்தோடு, 'எம்பியர்-எனது தம்பிமார், என் செய்தார் - என்ன (இப்படிச்) செய்தார்கள் !' என்று - என்றுசொல்லி, இளைந்து - வருந்தி, சோர்ந்தான் - தளர்ச்சியடைந்தான்; (எ - று.)

அருச்சுனன் தாகத்தைத் தாங்கமுடியாமையால், சகதேவன்முதலிய தம்பிமார் போலவே தானும் அந்தச் சுனைநீரைப்பருகி இறந்துபட்டான்: புனல்கொணரச் சென்ற மூவருடைய செய்தியையும் உணராத தருமன் 'என்சொல்லை ஒருசிறிதும்மீறாத தம்பியர் மூவரும், எனது தாகத்தின் கடுமையை நேரேகண்டிருந்தும், விரைந்து நீர்கொணராது தாமதிக்கின்றனரே ! இது என்னே !!' என்று மிக்க பரிதாபத்தோடு வருந்திச்சோர்பவனானானென்பதாம். அருச்சுனன் வில்வித்தையில் மேம்பட்டுச்சிறத்தலால்;

அவனையும் 'தலைவன்' என்றார்: பாண்டவருள், தருமபுத்திரன் மூத்தவனாய்த் தலைமைபெறுதலால், அவனை 'இறைவன்' என்றார். (உரு)

26.—வீமசேனன் தருமபுத்திரனைத் தேற்றி நீர் கொணரச்சென்று சுனையைக்கண்டு அதன்நீரை விஷமென்று அறிதல்.

வீமனங்கவனைத்தேற்றிமெலிவுறுசோகத்தோடு
மீமமொத்தெரியுங்கானமெங்கணுந்திரிந்தங்கெய்திச்
சாமுறைத்தம்பிமாரைக்கண்டருந்தடத்துநீரை
யாமெனக்கருதாதாலமாகுமென்றகத்திற்கொண்டான்.

(இ - ள்.) அங்கு - அப்போது, வீமன்-வீமசேனன்,—அவனை-அந்தத் தருமபுத்திரனை, தேற்றி - (தான் விரைவில் நீர்கொணர்வதாகச்சொல்லிச்) சமாதானப்படுத்தி, (பயணப்பட்டு), ஈமம் ஒத்து எரியும் கானம் எங்கணும் திரிந்து - சுடுகாட்டையொத்துப் பற்றியெரிகின்ற காடுஎங்கும் அலைந்து, (இறுதியில்), அங்கு எய்தி - (சுனையுள்ள) அந்தஇடத்திற்குப் போய், சாம் முறை தம்பிமாரை கண்டு-உயிர்நீங்கியநிலையையடைந்திருந்த (அருச்சுனன் நகுலன் சகதேவன் என்ற) தம்பிமாரைப்பார்த்து, (அதனால்), மெலிவுறு சோகத்தோடும் - மனம்மெலிதற்குக்காரணமான துக்கத்துடனே, அரு தடத்து நீரை ஆம் என கருதாது - அருமையாகக்கிடைத்த சுனையின்நீரை (நல்ல) தண்ணீர்என்று கருதாமல், ஆலம் ஆகும் என்று அகத்தில் கொண்டான் - விஷத்தையுடையதாகும்என்று மனத்தில் எண்ணினான்; (எ - று.)

தம்பிமார் இறந்துகிடந்ததுகண்ட வீமசேனன், 'நீர்வேட்கையால் இச் சுனைநீரைப் பருகிய இவர் மாண்டு கிடத்தலால், இச்சுனைநீர் விஷங்கலந்திருப்பதாதல் வேண்டும்' என்று தன் மனத்தினுள் ஊகித்தறிந்துகொண்டானென்க. சோகம், தடம், ஆம், ஆலம்-வடசொற்கள். ஆம் என்பதை-தமிழ்ச் சொல்லாகிய ஆதும்என்ற முற்றின் விகாரமெனக்கொண்டு, பருகுதற்குரியதாகும் எனப் பொருள் கூறுதலும் ஒன்று. (உகூ)

27.—வீமன் ஒருபுறம் தாகத்தாலும் மற்றொருபுறம் சோகத்தாலும்வருந்தல்.

பின்னவர்மூவர்சேரப்பிணங்களாய்க்கிடத்தல்கண்ட
மன்னவன்றனக்குத்தாகமாறுமோவளர்ந்துமேன்மே
லென்னவன்பட்டானென்பதியம்புதற்கெட்டுமோமுன்
சொன்னவன்றானுமிந்தச்சோகமோதொகுக்கமாட்டான்.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) பின்னவர் மூவர் - (தன்)பின்பிறந்தவராகிய மூன்றுபேரும் [அருச்சுனனும் நகுலசகதேவரும்], சேர - ஒரு சேர, பிணங்கள் ஆய் - பிணங்களாகி, கிடத்தல்-கீழ்விழுந்திருத்தலை, கண்ட—, மன்னவன் தனக்கு-வீமசேனனுக்கு, (அவர்கள் நீர்பருகியதனால் இறந்தாரென்று கண்ட மாத்திரத்தினால்), தாகம்-நீர்வேட்கை, மாறும்ஓ-நீங்குமோ? மேன்மேல் வளர்ந்து-(நீர்வேட்கை) மிகவும் அதிகமாக வளர்ந்ததனால், அவன்-அந்த வீமசேனன், என் பட்டான் என்பது - என்ன அவஸ்தைப்பட்டானென்பதை, இயம்பு

தற்கு - எடுத்துச்சொல்வதற்கு, எட்டும்ஓ - (வாசகங்கள்) கிடைக்குமோ? முன் சொன்னவன்தான் உம் - (அந்த அருச்சுனன் முதலிய மூவர்க்கும்) முன்னவனாக [அண்ணனாக] க் கூறப்பட்ட அவ்வீமனும், இந்த சோகம் ஓ தொகுக்கமாட்டான் - (தாகத்தோடு இந்தத்தம்பிமார் இறந்ததனாலான) சோகத்தையும் அடக்கமாட்டாதவனாய், —(எ - று.)—'குளிப்பாட்டினான்' என்று அடுத்த கவியோடு முடியும்.

முன்சொன்னவன்தான்உம் - முதலிற்பாண்டவசரித்திரத்தை மகா பாரதமாகக்கூறிய வியாசபகவானும், இந்த சோகம் ஓ - இந்தச்சோகச் செய்தியையோ, தொகுக்கமாட்டான்-சுருக்கிச்சொல்லமாட்டான்: பெருக் கிக்கூறுவன் என்றபடி: ஆதலால், யானும் சிறிதாவது கூறவேண்டுவதா யிற் றென்பது குறிப்பெச்சம் என்று உரைகூறுவாரு முண்டு. (உஎ)

28.—வீமன் விழுந்துகிடக்கும் விசயனைக் கண்டு கண்ணீர்பெருக்குதல்.

குசையுடைப்புரவித்திண்டேர்க்குரக்குவெம்பதாகையானை
யசைவில்பொற்சயிலமன்னவாண்டகைமனத்தினானைத்
திசையனைத்தினுந்தன்னாமந்தீட்டியசிலையின்வெம்போர்
விசையனைத்தன்கண்ணீரான்மெய்குளிப்பாட்டினானே.

(இ - ள்.) குசைஉடை-கடிவாளத்தையுடைய, புரவி - குதிரைகள் பூட் டிய, திண் தேர் - வலிய தேரிலே, வெம் குரக்கு பதாகையானை - கொடிய அநுமனைத் துவசமாகவுடையவனும், அசைவு இல் பொன் சயிலம் அன்ன - அசைதலில்லாத பொன்மலை [மேருமலை]யையொத்த, ஆண் தகை மனத்தி னானை - வீரனுக்குரிய தகுதிப்பாட்டோடுகூடிய மனத்தையுடையவனுமாகி, திசை அனைத்தின்உம் - திக்குக்களிலெல்லாம், தன் நாமம்-தனது பெயரை, தீட்டிய - எழுதிவைத்துள்ள, சிலையின் வெம் போர் விசையனை-வில்லினாற் செய்யுங் கொடிய போரில் (எப்போதும்) ஜயம்பெறுபவனாகிய அருச்சுனனை, தன் கண் நீரால்-தனது கண்ணீரினால், மெய் குளிப்பாட்டினான்-உடம்பைக் குளிக்கச்செய்தான்; (எ - று.)

உடம்பின் தோற்றத்தோடு மனத்தின் தன்மையினாலும் பொன்மலை போன்றவ னென்பார், 'அசைவில்பொற்சயிலமன்ன வாண்டகை மனத்தி னானை' என்றார். விசயனை மெய்யைக் குளிப்பாட்டினான் - இரண்டு செயப் படுபொருள்வந்த வினை. குசை, பதாகை - குஶா, பதாகா என்ற வட சொற்களின் திரிபுகள். மேருஎன்ற ஒருமலை பொன்மயமாகவுள்ளது என் பது, நூற்கொள்கை. ஶைலம்என்ற வடசொல் திரிந்து சயிலம் எனப் போலிபெற்று வந்தது. திசையனைத்துமாவன—நான்கு பெருந்திசைகளும், நான்கு கோணத்திசைகளும், மேல் கீழ் என இரண்டும் ; உம்மை - முற்று. விசையன் - இடைப்போலி. (உஅ)

29.—பின்னும் வீமன் நகுலசகதேவர்களைக் கண்டு வருந்துதல்.

நற்றுணைச்சிறுவனோடுநகுலனைநோக்கியந்தோ
வெற்றுணையிழந்தேனென்னுமென்செய்வதினிநானென்னு

முற்றுணைவனுமக்கானின்முடிந்திடுமொழியவேறோர்
பிற்றுணைகாண்கலாதேன்யாரொடுபேசுவேனே.

இரண்டுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) நல் துணை சிறுவனோடு - சிறந்த துணையாகவுள்ள தம்பியாகிய சகதேவனுடனே (உயிர்ஒடுங்கிக் கிடக்கின்ற), நகுலனை - நகுலன் என்பவனையும், நோக்கி - (வீமசேனன்) பார்த்து, (பெருந்துன்பமடைந்து), 'அந்தோ - ஐயோ ! என் துணை இழந்தேன் - என்னுடைய துணையை யிழந்தேனே !' என்னும் - என்பான் : 'இனி நான் செய்வது என் - இனி நான் செய்யவேண்டுவது என்ன ?' என்னும்-என்பான்: (பின்னும்), 'முன் துணைவன் உம் - முற்பட்ட துணைவனாகிய தருமபுத்திரனும், அ கானில் - (அவனுள்ள) அக்காட்டில், முடிந்திடும்-(எங்களில் எவரும் அவனதுதாகம் தீரும்படி நீர் கொண்டுசெல்லாமையால்) இறந்துவிடுவான்: பின்-இனி, மொழிய-நிகழ்ந்ததைச் சொல்லுமாறு, வேறு ஓர் துணை காண்கலாதேன் - வேறுஒரு துணைவரைக் காணாத யான், யாரொடு பேசுவேன் - யாரோடு (இங்கு நிகழ்ந்த விஷயத்தைச்) சொல்லியனுப்புவேன் ? (என்னும்) - என்பான் ; (ஏ - று.) - ஏகாரம் - இரக்கம். முதலிரண்டடிகளில் வந்துள்ள 'என்னும்' என்பதை 'பேசுவேனே' என்பதன்பின்னுஞ் சேர்த்து இச்செய்யுளை முடிக்க.

இதனால், வீமசேனன் தானும் நீர்பருகி யிறப்பதாகத் தீர்மானித்தமை பெறப்படும். அந்தோ - ஹந்தஎன்ற வடசொல்லின் திரிபு : என் + துணை = எற்றுணை: "தன்னென்னென்பவற்றின் ஈற்று ன வன்மையோடுறழும்." என்னும், முடிந்திடும்-செய்யுமென்முற்று, ஆண்பாலுக்கு வந்தன.

30.—வீமன் மணலில் எழுதிவிட்டு அந்தச்சுனைநீரைப் பருகுதல்.

மணிமுரசுயர்த்தோனீண்டுவருதலுங்கூடும்வந்தா
லணிதருநச்சுத்தோயமருந்தவுங்கூடுமென்னுப்
பணியுடன்செய்வான்போலப்பருமணலேட்டிற்கையாற்
றுணிவுறவெழுதியந்தத்தோயமேதானுந்துய்த்தான்.

(இ - ள்.) 'மணி முரசு உயர்த்தோன் - அழகிய முரசவாத்தியத்தை (க் கொடியில்) உயரக்கட்டியவனாகிய தருமபுத்திரன், ஈண்டு - இங்கே, வருதலும் கூடும் - (ஒருகால்) வருதல்நேரிட்டாலும்நேரிடும்: வந்தால் -(அங்ஙனம்) வந்தால், அணிதரு-(கண்களுக்கு) அழகு தருகின்ற, நஞ்சு தோயம்-விஷமுள்ள சுனைநீரை, அருந்தஉம் கூடும் - பருகுதலும் நேரிடலாம்', என்னு - என்று (பின்னும் மனத்தினுள்) எண்ணி, (அவ் வீமசேனன்),— பரு மணல் ஏட்டில் - பருத்த மணலாகிய ஏட்டிலே, கையால் - கையினால், துணிவு - (தன்) துணிவை, உற - நன்கு விளங்குமாறு, எழுதி—, பணியுடன் -(தருமபுத்திரனது) கட்டளையினாலே, செய்வான்போல-(தொழில்)செய்பவன்போல, அந்த தோயம்ஏ - அந்தச் சுனையின்நீரையே, தானும்—, துய்த்தான் - பருகினான் ; (எ - று.)

வீமசேனன் நிகழ்ச்சியை மணலாகிய ஏட்டில் விளக்கமாக எழுதிவிட்டுத் தானும் அந்தச் சுனையின்நச்சுநீரை 'மிக்கமகிழ்வொடு பருகினுனென்பதாம். வீமசேனன் நச்சுநீரைப் பருகியது தருமபுத்திரனுடைய கட்டளையாகாதிருக்கவும், எப்போதும் தருமபுத்திரனுடையபணியைத் தவறாமல் செய்கின்ற அவ்வீமன் இப்போது மணலேட்டில் தன்துணிபை யெழுதிவிட்டு நச்சுநீரைப் பருகியது, அந்தத்தருமன் பணியுடனே செய்தது போலத் தோன்றியதென்பார் 'பணியுடன் செய்வான்போல...தோயமே தானுந் துய்த்தான்' என்றார். கீழ் 'முன்துணைவன் கானில்முடிந்திடும்' என்று கூறிய வீமன் அவ்வாறுமுடிந்திடாவிடின் இங்கேவருதலும் சுனைத் தோயத்தைப்பருகுதலும் கூடுமென்கின்றுனென்க. வருதலும், அருந்தவும் என்ற உம்மைகள் - ஐயப்பொருளோடு எச்சப்பொருளன. (௩0)

31.—வீமனும் பொய்கை நீரைப்பருகி உயிரொழிதல்.

பொருப்பினும்வலியகொற்றப்புயமுடைவீமனென்று
லருப்புடையறலினஞ்சமஞ்சுமோவாலமென்னு
முருப்பினையறிந்தும்வாரியுண்டுதன்னுயிரும்வீந்தா
னெருப்பினுஞ்சொல்லினுவேநினைப்பினுநெஞ்சம்வேமால்.

(இ - ள்.) பொருப்பின்உம் - மலையைக்காட்டிலும், வலிய - வலிமைபெற்ற, கொற்றம் - வெற்றியைத்தருகின்ற, புயம்உடை-புயத்தையுடைய, வீமன் என்றால்-வீமனானாலும், அரும்பு உடை - சுரக்குந்தன்மையையுடைய, அறலின் - நீரிலேயுள்ள, நஞ்சம் - விஷம், அஞ்சும்ஓ - பயப்படுமோ? ஆலம் என்னும் - விஷம் என்கிற, உருப்பினை - அஞ்சத்தக்க வெம்மைப்பொருளை, அறிந்தஉம்-தெரிந்திருந்தும், [அந்நீரில் நஞ்சமுள்ளதென்பதை உணர்ந்திருந்தும்], (வீமன்)—, வாரி உண்டு-அத்தண்ணீரைப்பருகி, தன் உயிரும்—, வீந்தான் - அழியப்பெற்றான்: சொல்லின்உம் - (இவ்விஷயத்தைச்) சொன்னாலும், (சொல்லுகின்ற நமக்கு), நெருப்பின் - நெருப்பினால் (வேவது) போல, நா வேம் - (சொல்லுகின்ற) நாவும் வெந்திடும்: நினைப்பின்உம் - (இந்நிகழ்ச்சியை) நினைத்தாலும், நெஞ்சம் வேம் - (நினைக்கின்ற) மனமும் வேகும்; (எ - று.)

தண்ணீரில்லாக்காட்டில் நீதிநெறிதவறாத பாண்டவர்களில் தருமன் சகதேவன் நகுலன் அருச்சுனன் வீமன்என்கிற இவர் அலைச்சற்பட்டு நீர்வேட்கைவிஞ்சியதும் இவர்களில் சகதேவன்முதலியோர் ஒவ்வொருத்தராய் நச்சுநீரையுண்டு உயிரொழிந்ததும் ஆகிய இந்தச்செய்தியைச் சொல்லுதலும் நினைத்தலும் பெருந்துயரை விளைக்குமென்று, கவி, தம் நிலையைக் கூறும் முகத்தால் அப்பாண்டவர்களின் நிலையை விளக்குகின்றாரென்க. அருப்பு உடை-அருமையையுடைய என்பாருமுளர். அறலின்றாகமஞ்சுமோ என்றும் பாடம். (௩௧)

32.—வீமன்முதலிய நால்வரும் உயிரோடுங்க, தருமன் தனிப்பட்டவனுதல்.

ஆருயிர்பொன்றுங்காலையமுதமும்விடமாமென்று
பாருளோருரைக்குமாற்றம்பழுதறப்பலித்தகாலை

மாருதிமுதலாவுள்ளமன்னவர்நால்வர்தம்மோ
டோருயிரானமற்றையொருவனேயொருவனானான்.

(இ - ள்.) 'ஆர் உயிர் - அருமையான உயிர், பொன்றும் காலை - இறத்தற்குரிய சமயத்தில், அமுதம்உம்-அமிருதமும், விடம் ஆம் - விஷம்ஆகும்,' என்று—, பார்உளோர் - பூமியிலிருப்பவர், உரைக்கும் - கூறுகின்ற, மாற்றம் - சொல்லானது, பழுது அற - தவறுதலாகாதபடி, பலித்த - பயனை விளைத்த, காலை - இந்தப்போதில்,—மாருதி முதல் ஆ உள்ள - வாயுவின் குமாரனான வீமசேனனைமுதலாகவுடைய, மன்னவர் நால்வர் தம்மோடு - ராஜகுமாரர்கள் நால்வரோடு, ஓர் உயிர் ஆன - ஒரேஉயிராகவுள்ள, மற்றை ஒருவனே - எஞ்சிநின்ற தருமபுத்திரன் ஒருவனே, ஒருவன் ஆனான் - தனிப்பட்டவனானான்; (எ - று.)

முதலிரண்டடிகளால், சகதேவன்முதலிய மூவர்போலவே வீமசேனனும் இறந்தானென்று குறிப்பித்தவாறு. 'மன்னவர் நால்வர் தம்மோடோருயிரான மற்றையொருவன்'என்ற தொடர் - தருமபுத்திரன் தன் தம்பியரைத் தன்னுயிர்போலக் கருதியிருந்தமையைத் தெரிவிக்கும். 'அளவுக்குமிஞ்சினால் அமுதமும் விஷமாம்' என்பதுபோல, 'ஆருயிர் பொன்றுங்காலை அமுதமும் விஷமாம்' என ஒருலோகவசனமும் உண்டுபோலும். அமுதம் என்பது - தேவர்உணவாகிய சாவாமருந்து, நீர் என இருபொருள்களையுடையது. இந்தப் பாண்டவர்களுக்கு, நீரே உயிர்நீக்கும் விஷமாயிற்று என்க. (௩௨)

33.—தருமபுத்திரன் சோகமும் தாகமும் விஞ்சிச் சோர்ந்துவிழுதல்.

கட்புலனாகவேறோருயிரையுங்காண்கலாத
வெட்புலந்தன்னிற்சோகமிஞ்சவேதாகம்விஞ்சி
யுட்புலனழிந்துபின்போமுள்ளமோடுயங்கிவீழ்ந்தா
னட்புலந்தவரான்முன்னங்கானகநண்ணினானே.

(இ - ள்.) நட்பு உலந்தவரால் - சிநேகத்தன்மை கெட்டவரான துரியோதனாதியரால், முன்னம் - முன்பு, கானகம் - காட்டை, நண்ணினான் - அடைந்தவனாகிய தருமபுத்திரன்,— (நீர்கொணரச்சென்ற தம்பியர் எவரும் மீண்டுவாராமையால்), கண் புலன் ஆக வேறு ஓர் உயிரைஉம் காண்கலாத வெள் புலம்தன்னில் - கண்ணுக்கு விஷயமாக ஒரு பிராணியையுங்காண முடியாத வெளியானஇடத்தில், சோகம் மிஞ்ச - துன்பம் அதிகரிக்க, தாகம் விஞ்சி - தாகமும் அதிகரித்து, உள் புலன் அழிந்து - உள்ளேயிருக்கும் புலனாகிய அறிவுகெட்டு, பின் போம்-இனிஅழியப்போகின்ற, உள்ளமோடு - மனத்துடனே, உயங்கி - தளர்ந்து, வீழ்ந்தான் - உயிரொடுங்கிவிழுந்தான்.

போனதம்பியர் எவரும் வாராமையாலும், அன்னார்க்குநிகழ்ந்தவற்றைக் கண்டுவந்துசொல்ல ஒருவரையும் காணாமையாலும், வெட்டவெளியான அந்தக்காட்டில், தருமபுத்திரனுக்குச் சோகத்தோடு தாகமும் விஞ்சியதென்க. துரியோதனன் சூழ்ச்சியால் பாண்டவர் காட்டையடைந்தமை, வெள்ளிப்படை.. வேறோர்யோனியும் என்று பிரதிபேதம். (௩௩)

34.—வேள்வியில் தோன்றிய பூதம் தான் செய்யவேண்டியபணியைக் கூறுமாறு காளமாமுனியைக் கேட்டல்.

ஈங்கிவருயங்கிவீந்தவெல்லையிலெரிசெய்யோமத்
தாங்கவணெழுந்தபூதமம்முனிதன்னைநோக்கிப்
பாங்குடன்புரியுமேவல்பணித்தருளென்னநெஞ்சிற்
றீங்கிலாமுனியும்பூதவரசுடன்செப்புவானே.

(இ - ள்.) ஈங்கு - இவ்விடத்தில், இவர் - இந்தப்பாண்டவர், உயங்கி - உயிர் சோர்ந்து, வீந்த - அழிந்த, எல்லையில் - சமயத்தில்,—ஆங்கு - (துரியோதனனுள்ள) அவ்விடத்தில், அவண் - அப்போது, எரி செய் ஓமத்து [ஓமம் செய் எரியத்து] - ஓமஞ்செய்கின்ற அக்கினியினின்றும், எழுந்த - கிளம்பிய, பூதம் - பூதமானது,— அ முனிதன்னை நோக்கி - அந்தக்காளமாமுனியைப் பார்த்து, 'பாங்குடன் - இனிதாக, புரியும் - (நான்) செய்யவேண்டிய, ஏவல் - கட்டளையை, பணித்தருள் - சொல்லியருள்வாய்,' என்ன - என்று கேட்க,—நெஞ்சில் தீங்கு இலா முனியும் - மனத்திற்குற்றமில்லாத அந்தக் காளமாமுனிவனும், பூதம் அரசுடன் - (வேள்வித்தீயினின்றும் தோன்றிய) அந்தப்பூதராசனுடனே, செப்புவான் - (பின்வருமாறு) கூறுபவனானான்; (எ - று.)—காளமாமுனிவன் செப்பியதை மேற்கவியிற் காண்க.

பாண்டவரின்நிலையை யறியாத முனிவனென்பார் 'நெஞ்சிற்றீங்கிலா முனி' என்றார். (கூச)

35.—காளமாமுனிவன் கட்டளையிடப் பூதம் கேட்டல்.

நின்றிடாதிமைப்பிற்குந்திமைந்தராய்நெடியகானிற்
றுன்றிடாவைகும்வேந்துந்துணைவருமிருந்தசூழற்
சென்றிடாவொன்றாயைந்துசெயற்கையாமுடலைச்சேரக்
கொன்றிடாவருதியென்றுகூறியவுறுதிகேளா.

இதுவும் அடுத்த கவியும் - குளகம்.

(இ - ள்.) 'நின்றிடாது - (இங்கே) தாமதித்துநில்லாமல், இமைப்பில் - கண்ணிமைக்கும் நேரத்திற்குள், நெடிய கானில் - நெடுங்காட்டிலே, துன்றிடா - சேர்ந்து, குந்தி மைந்தர் ஆய் வைகும் - குந்தியின்புத்திரராய் (அங்குத்) தங்கியிருக்கின்ற, வேந்தும் - தருமபுத்திரராசனும், துணைவரும் - அவன்தம்பியரான வீமன்முதலியோரும், இருந்த - வாழ்கிற, சூழல் - இடத்திலே, சென்றிடா - போய், ஒன்று ஆய் - (உயிர்) ஒன்றாகி, ஐந்து செயற்கை ஆம் உடலை - ஐந்துசெயற்கையாகவுள்ள உடலை, சேர - ஒருசேர, கொன்றிடா - கொன்றிட்டு, வருதி - (மீண்டு) வருவாயாக,' என்று—, கூறிய - சொல்லிய, உறுதி - உறுதியானசொல்லை, கேளா - கேட்டு,—(எ - று.)— "பூதம் முனியை நோக்கி***எனத் தொழுதேகிற்றன்றே" என அடுத்த கவியோடு தொடர்ந்து முடியும்.

ஒன்றாய் ஐந்துசெயற்கையாம்உடல் - பஞ்சபாண்டவர்க்கும் உயிர் ஒன்றேயாயினும் உடல் ஐந்தாகியமைந்திருக்கின்றதென்றவாறு. (கூரு)

36.—பூதம் தன்துணிபை முனிவனிடங் கூறிவிட்டு, முனிவன்கட்டளையைச் செய்யுமாறு செல்லுதல்.

ஐம்பெரும்பூதமொக்குமப்பெரும்பூதஞ்சாதிச்
செம்பொனினொளிருமேனித்தெய்வமாமுனியைநோக்கி
வெம்புகானுறைவோரின்றென்விழிக்கிலக்கல்லராகு
லெம்பிரானினையேகொல்வனெனத்தொழுதேகிற்றன்றே.

(இ - ள்.) ஐ பெரு பூதம் ஒக்கும் - பஞ்சமகாபூதங்களையொத்திருக்கிற [பெருந்தோற்றமுடைய], அ பெரு பூதம் - அந்தப் பெரியபூதமானது, சாதி செம்பொனின் ஒளிரும் - உயர்தரமானசெம்பொன்போல் விளங்குகின்ற, மேனி - உடம்பையுடைய, தெய்வம் மா முனியை நோக்கி-தெய்வத்தன்மையுள்ள (அந்தக்) காளமாமுனிவனைப்பார்த்து, 'வெம்பு கான் உறைவோர் - பற்றியெரிகின்ற காட்டில் வசிப்பவரான பாண்டவர், இன்று-இப்போது, என் விழிக்கு - என் கண்ணுக்கு, இலக்கு அல்லர் ஆனால் - தென்படுகிறபொருளாக ஆகாமற்போனால், எம் பிரான்-எமதுதலைவனே! (நான்), நினையே கொல்வன் - உன்னையே கொல்வேன்,' என - என்று, தொழுது - கைகூப்பிவணங்கி, ஏகிற்று - (பாண்டவரை நாடிச்) சென்றது ; (எ - று.)

'என்னாற் கொல்லப்படவேண்டியவர் கண்ணுக்கு அகப்படாவிட்டால், என் வருகை வீணாகப்போகப்படாதாதலால் நான் உன்னையே கொல்வேன்' என்று அந்தப்பூதம் சொல்லிற்றென்க. பெருந்தோற்றமுடைமை பற்றி, ஐம்பெரும்பூதங்கள் வேள்விப்பூதத்திற்கு உவமையாயின ; வலிமை பற்றிவந்த உவமை யென்றலும் ஒன்று. ஐம்பெரும்பூதங்களாவன - நிலம், நீர், தீ, காற்று, வான் என்பன. சாதிச்செம்பொன் - மாற்றுயர்ந்த சிறந்த பொன். காளமாமுனிவன்மேனி தங்கம்போல் ஒளிர்கின்றதென்க. இலக்கு - லக்ஷ்யம் : இங்கே, கண்ணுக்குப் புலனாகும் வஸ்து என்ற பொருளில் வந்தது. அன்றே - ஈற்றசை ; தேற்றமுமாம். (௩௬)

37.—பூதம் சென்று தருமபுத்திரனைக் காணுதல்.

காட்டுறுகோடைவெப்பங்களைகுவான்கரியமேக
மோட்டுருக்கொண்டுமின்னுன்முளைத்தெழுமெயிறுதாங்கித்
தோட்டுணைப்புடைகொண்டெங்குஞ்சூறைபோன்மரங்கள்வீழ்த்திக்
காட்டுறைவாழ்க்கையானைக்கண்ணுறக்கண்டதன்றே.

(இ - ள்.) கரிய மேகம் - கருநிறமுள்ள மேகமானது, காடு உறு - காட்டிலே பொருந்திய, கோடை வெப்பம் - வெயிலின் வெப்பத்தை; களைகுவான் - போக்கும்பொருட்டு, மோடு உரு கொண்டு-பருத்த உருவத்தைக் கொண்டு, மின்னல் முளைத்து எழும் எயிறு தாங்கி - மின்னல்மயமாய் முளைத்துத்தோன்றிய கோரப்பற்களைத் தாங்கி, தோள் துணை புடை கொண்டு - இரண்டுதோள்களிலும் புடைத்தலைக்கொண்டு, எங்கும் சூறை போல் மரங்கள் வீழ்த்தி - எல்லாவிடத்திலும் பெருங்காற்றுப்போல மரங்களை விழச்செய்துகொண்டு, காடு உறை வாழ்க்கையானை - காட்டிலேவாழ்

கின்ற வாழ்க்கையை யுடையவனாகிய தருமபுத்திரனை, கண் - கண்களினால், உற கண்டது - பொருந்தப்பார்த்தது ; (எ - று)—அன்றே - ஈற்றசை.

பூதத்தை, மேகமாகஉருவகஞ்செய்தார். காட்டிலே கருநிறமுள்ளபூதம் விளங்கும்எயிறுகளைத் தாங்கியவாறு தோள்களைத்தட்டிக்கொண்டு மரங்களை வீழ்த்தியவண்ணஞ் சென்றது, கரியமேகம் மின்னலைத்தாங்கி இடியிடித்துப் புயற்காற்றால் மரங்களைவீழ்த்தியவண்ணம் வந்ததுபோலு மென்க : உருவக வணியை அங்கமாகக்கொண்டுவந்த தன்மைத்தற்குறிப்பேற்றவணி. இங் ஙனம், வேள்வியிலெழுந்த பூதத்தைக் கரியமேகமாக உருவகஞ்செய்ததற்குக் காரணங்கூறுவார் 'காட்டுறு கோடைவெப்பங் களைகுவான்' என்றார். கோடை - குடக்குஎன்ற பகுதியினடியாகப்பிறந்த பெயரென்பர். மூது வேனிலில் கோடைக்காற்று [=மேல்காற்று] வீசுதலால் அக்காலம் கோடைக்காலமெனப்பட, பிறகு, கோடை - இலக்கணையால், வெயிலைக் காட்டிற் றென்னலாம். (௩௭)

38.—சாய்ந்துகிடந்த தருமனைக் கண்ட பூதம் கருதியது.

அந்தணன்சொன்னவேந்தரைவரிலறனால்வந்த
மைந்தன்மற்றிவனேயாவிமாய்ந்ததோர்வடிவனாகிச்
சந்தனதருவிற்சார்ந்துசாய்முடித்தலையனாகி
மந்திரமறந்தவிஞ்சைமாக்களின்வடிவுசோர்ந்தான்.

இதுமுதல் எழுகவிகள் - ஒருதொடர்.

(இ - ள்.) அந்தணன் - காளமாமுனிவன், சொன்ன-(கொன்றிடுமாறு) சொல்லிய, வேந்தர் ஐவரில் - பஞ்சபாண்டவருள், அறனால் வந்த மைந்தன் இவனே - யமதருமனால்தோன்றிய மைந்தனாகிய இந்தயுதிட்டிரனே, ஆவி மாய்ந்தது ஓர் வடிவன் ஆகி - உயிரொழிந்ததாகிய ஒருவடிவத்தை யுடைய வனும், சந்தனம் தருவில் சார்ந்து - சந்தனமரத்திலே சாய்ந்து, சாய் முடி தலையன் ஆகி - தொங்கிய கிரீடமணிந்த தலையையுடையவனுமாகி, மந்திரம் மறந்த விஞ்சை மாக்களின் - (பலவகைவித்தைகளையுஞ் செய்யும் வல்ல மையையுண்டாக்கவல்ல) மந்திரத்தை மறந்த வித்தியாதரரைப்போல, வடிவு சோர்ந்தான் - (தன்) உடல் சோர்ந்துகிடப்பானானான் ; (எ - று.)

'அந்தணன்' என்று தொடங்கும் இந்தச்செய்யுள்முதல், அடுத்த செய் யுளில் "மற்றிங்கென்செய்வேன்" என்பதுவரையில், பூதம் தன்மனத்துள் முதன்முதல் எண்ணியதைத் தெரிவிக்கும். காளமாமுனிவன் கொல்லுமாறு ஏவிய பஞ்சபாண்டவருள் பிரதானனாகிய தருமபுத்திரனே ஆவிமாய்ந்தாற் போன்றவடிவினனா யிருத்தலை அப்பூதம் கண்டு எண்ணியவகையைக் காட்டு வது, இது. ஆவிமாய்ந்தவடிவினன் ஆனதால், தருமபுத்திரனுடைய முடித் தலை சாய்ந்திருந்த தென்க. மற்று - அசை. (௩௮)

39.—தருமன் இறந்துபோனமைக்குஇரங்கிப் பின்பு, பூதம், வீமன் முதலியோர் இறந்துகிடத்தலைக் காணுதல்.

சிறந்தமெய்ந்நிழல்போற்சூழுந்துணைவருஞ்சேரவிட்டுத்
துறந்தனர்போலும்யாண்டுந்துப்பிலாவெப்பந்தன்னால்

பிறந்தனனிவனுமற்றிங்கென்செய்வேனென்றென்றெண்ணி
நிறைந்தநீர்ச்சுனையின்மற்றைநிருபர்நால்வரையுங்காணு.

(இ - ள்.) சிறந்த மெய் நிழல் போல் - சிறப்பான உடம்பின்நிழல் போல, சூழும்-(விடாமற்)சூழ்ந்திருக்குந்தன்மையுள்ள, துணைவர்உம்-(வீமன் முதலிய) தம்பிமார்நால்வரும், சேர-ஒருசேர, விட்டு துறந்தனர் போலும்-(இந்தத்தருமபுத்திரனை) விட்டு நீங்கினார்போலும் : மற்று - பின்னும், இவன்உம் - இந்தத்தருமபுத்திரனும், யாண்டுஉம் துப்பு இலா வெப்பம்தன்னால் - எங்கும் உணவாகியநீரில்லாத வெப்பத்தினால், இறந்தனன் - உயிர் ஒடுங்கினான்போலும்; இங்கு - இப்போது, என் செய்வேன் - என்ன செய்யவல்லேன்? என்று என்று எண்ணி - என்று இவ்வாறு பலமுறை ஆலோசித்து,— (பின்பு அந்தப்பூதம்),—நிறைந்த நீர் சுனையின் - நிறைந்த நீரைக்கொண்ட சுனையின்கரையில், மற்றை நிருபர் நால்வரைஉம் காணு - தருமபுத்திரனினும் வேறான (வீமன்முதலிய) நான்கு ராஜகுமாரர்களையுங் கண்டு,—(எ-று.)—இச்செய்யுளிலுள்ள 'காணு' என்ற உடன்பாட்டெச்சம், நாற்பத்தோராங்கவியில், "என்றுமூண்டுமீண்டு" என்று தொடரும்.

தருமபுத்திரன் தனியே உயிரொடுங்கிவீழ்ந்துகிடந்ததைக் கண்ட பூதம், தம்பிமார்கள் இவனை விட்டுத் துறந்துசென்றாரென்றும், நீர்கிடைக்காது வெப்பத்தினால் இந்தத்தருமபுத்திரனும் இறந்திட்டானென்றும் முதன் முதல் கருதிற்று ; பின்பு, பாண்டவரைக் கொல்லுமாறு வந்த தாதலால், 'பாண்டவர்களுள் மூத்தவனான தருமபுத்திரன் இறந்துவிட்டானாக, மற்றை நால்வரையாவது கொல்வோமென்றால் அவர்களும் இவனைவிட்டுச் சென்றனரே! இப்போது யான் என்செய்வது ?' என்று பெரிய விசாரம் அடைந்து திரிந்தது: அந்த நிலையில், பின்பு சுனைக்கரையில், வீமன்முதலிய நால்வரும் இறந்து வீழ்ந்து கிடந்தநிலைக் கண்டதென்க. 'துப்பு' என்பதன்பொருளை "துப்பார்க்குத் துப்பாய துப்பாக்கி" என்ற குறளினாலும் அறிக. (௩௯)

40.—பாண்டவர்கள் மாண்டுகிடந்தமைக்குப் பூதம் வருந்துதல்.

பச்செனும்புனலான்மிக்கபங்கயச்சுனையுங்கொல்லு
நச்சுவெஞ்சுனையேபோலுநால்வருஞ்சேரமாண்டா
ரிச்சுனையருந்திப்போலுமென்னினைந்தேதுசெய்தார்
நிச்சயங்கொடிதுகெட்டேனிந்தநிட்டூரமென்றே.

(இ - ள்.) பச்செனும் புனலால் - குளிர்ந்திருக்கிற நீரினால், மிக்க - மிகுந்துள்ள, பங்கயம் சுனைஉம் - தாமரையையுடைய இந்தச்சுனையும், கொல்லும் - (மனிதர்களைக்) கொல்லுகின்ற, நஞ்சு - விஷத்தோடுகூடிய, வெம் சுனை போலும் - கொடிய சுனையென்றே தோன்றுகிறது : நால்வர்உம் - (வீமன்முதலிய) நால்வரும், சேர - ஒருசேர, மாண்டார் - இறந்திட்டார்: (அங்ஙனம் இறந்தது), இ சுனை-இந்தச்சுனைநீரை, அருந்தி போலும்-பருகியதனால் நேர்ந்ததுபோலும் : என் நினைந்து ஏது செய்தார் - எந்தச் செயலையெண்ணி ஏதுசெய்தார்கள்? கொடிது-(இப்போது நிகழ்ந்த செயல்)

கொடுமையானது: நிச்சயம் - திண்ணம்: கெட்டேன்—; இந்த நிட்டூரம் - இந்தக்கொடுமைநிகழ்ந்தது, என்னே - எவ்வாறோ ? (எ - று.)

பாண்டவர் நால்வர் சுனைக்கரையில் இறந்துகிடத்தலைக் கண்டதும் பூதம் தன்னுள்நினைப்பதை, "பச்செனும்" என்றஇச்செய்யுள் தொடங்கி, அடுத்த செய்யுளில் "கேவலம் அல்ல" என்பதுவரையிலுள்ள பகுதி, தெரிவிக்கும். சுனைக்கரையில், வீமன்முதலிய நால்வரும் ஒருசேர இறந்துவீழ்ந்து கிடத்தலைக் கண்டதனால், பூதம், அங்குள்ள சுனை நச்சுச்சுனை என்றும், அந்நீரைப்பருகியதனால் வீமன்முதலிய நால்வரும் இறந்திருக்கவேண்டும் என்றும் கருதிற்றென்க. இங்ஙனம் நச்சுச்சுனைநீரைப்பருகி வீமன்முதலிய நால்வர் இறந்தமைக்குக் காரணம் தெரியாமையால், 'என்னினைந்து எதுசெய்தார்' என்றது, அப்பூதம். மனத்திற்கு விருப்பந்தராத செயலைக் கண்டவிடத்து, 'கெட்டேன்' என்று சொல்வது ஒரு சொல்விழுக்காடு : இச்சொல் - அதிசயத்தோடு இரக்கத்தையும் காட்டும் : "கேளாராயர்குலத்தவரிப்பழி கெட்டேன் வாழ்வில்லை" என்ற பெரியார்பாசுரத்தையுங் காண்க. பச்செனல் - குளிர்ந்திருத்தற்குறிப்பு. போலும் - ஐயப்பொருளது. (௪0)

41.—பிறகு, பூதம் தன்னுற் கொல்லப்படவேண்டிய பாண்டவர் இறந்துவிட்டமையாற் சினம்மூண்டு காளமாமுனிவனிடம் மீண்டுவருதல்.

காவலன்வார்த்தைகேட்டுக்காளமாமுனிவனென்னு
நாவலனோமத்தீயினம்மையுற்பவித்துவிட்டான்
மேவலர்கொல்லுமுன்னேவீந்தனரிந்தப்பாவங்
கேவலமல்லவென்றுகிளர்சினமூண்டுமீண்டே.

(இ - ள்.) காவலன் வார்த்தை கேட்டு - துரியோதனனுடைய வார்த்தையைக்கேட்டு, காளமாமுனிவன் என்னும் நாவலன் - காளமாமுனிவனென்று சொல்லப்படுகிற புலவன், ஓமம் தீயின் - ஓமஞ்செய்யப்படுகிற வேள்வித்தீயினின்றும், நம்மை உற்பவித்து - நம்மை உண்டாகச்செய்து, விட்டான்-அனுப்பினன்;(பாண்டவர்களோ), மேவலர் கொல்லும் முன்னே - பகைவர் கொல்லுதற்குமுன்னமே, வீந்தனர் - இறந்தார்: இந்த பாவம் - (குற்றமற்றவரைக் கொல்லவேண்டுமென்றுசெய்த) இந்தப்பாவச்செயல், கேவலம் அல்ல - சாமானியமானதன்று, என்று - என்று எண்ணி, கிளர் சினம் மூண்டு - பொங்கும்சினம் மூளப்பெற்று, மீண்டு - (காளமாமுனிவனிடம்) திரும்பிச்சென்று,—(எ-று.)—'மீண்டு' என்பது, 44 - ஆம் கவியிலுள்ள "என்று" என்பதனோடு இயையும்.

வேதம்வல்லவனாதலால், காளமாமுனிவன் 'நாவலன்' எனப்பட்டான். கொடியவொருவனது சொல்லைக் கேட்டுப் பிறரைக்கொல்லுமாறு அபிசாரவோமஞ்செய்வது கொடியதீவினையே யாகு மாதலால், பூதம் 'இந்தப்பாவம் கேவலமல்ல' என்று கூறிற்று. இங்ஙனம் தீச்செயலைச்செய்தானென்பது பற்றியே, அந்தப்பூதம் முனிவனிடம் கிளர்சினம் மூண்டது. (௪௧)

42.—இரண்டுகவிகள் - பூதம் காளமாமுனிவனைக் கடிந்துகூறுதல்.

காலங்கண்மூன்றுமெண்ணுங்கடவுணீகலக்கமெய்தி
ஞாலங்கொணசையினில்லாநயனிதன்மகன்சொற்கேட்டுச்
சீலங்கொள்வாய்மையாய்செந்தீயெழுகானிற்சின்னீ
ராலங்கொல்பான்மையாரையார்கொல்வானருளிச்செய்தாய்.

(இ - ள்.) சீலம் கொள் வாய்மையாய் - நல்லொழுக்கத்தைக்கொண்டுள்ள சத்தியமுடையோனே! இல்லா நயனிதன் - இல்லாத கண்களையுடையவனாகிய [கண்ணில்லாதவனாகிய] திருதராஷ்டிரனுடைய, மகன் - மகனாகிய துரியோதனன், ஞாலம் கொள் நசையின் - பூமியைக்கொள்ளவேணுமென்கிற விருப்பத்தினால் கூறிய, சொல் - சொல்லை, கேட்டு - செவியேற்று, காலங்கள் மூன்றும் - (இறப்பு எதிர்வு நிகழ்வு என்னும்) மூன்றுகாலங்களிலும் நிகழும் வரலாறுகளையும், எண்ணும் - ஆராய்ந்து அறியவல்ல, கடவுள்-தெய்வத்தன்மையுடையவனாகிய, நீ,— கலக்கம் எய்தி- கலக்கமடைந்து, செம் தீ எழு கானில் - செந்நிறமுள்ள நெருப்புப்பற்றியெரிகின்ற காட்டிலே, சில் நீர் ஆலம் - அற்பமான [கொல்லுகின்ற] தன்மையையுடைய விஷத்தினால், கொல் - கொல்லப்பட்ட, பான்மையாரை - தன்மையையுடைய பாண்டவர்களை, யார் கொல்வான் அருளிச்செய்தாய் - யாரைக் கொல்லும்படி கூறியருளினாய்? (எ - று.)

'எவரையாவது கொல்லும்படி ஏவினால், அங்ஙனம் ஏவப்பட்டவர் கிடைக்காவிடின், ஏவியவரையே கொல்லுந்தன்மையுள்ள என்போல்வாரை இறந்தவரைக் கொல்லும்படி நீ ஏவி அனுப்பியது தகுதியன்று' என்ற கருத்தினால், 'ஆலங்கொல்பான்மையாரை யார் கொல்வான் அருளிச்செய்தாய்' என்றது. 'நீ மூன்றுகாலவரலாறுகளையும் அறிபவனாயிருந்தும், என்னை ஏவுதற்கு முன்னே 'பாண்டவர்கள் எவ்வாறுஉள்ளார்கள்?' என்று ஆராய்ந்துபாராமல் துரியோதனன்பேச்சைக் கேட்டுப் புத்திகலங்கினாய்' என்பதைப் புலப்படுத்த, 'காலங்கண்மூன்று மெண்ணுங் கடவுணீ இல்லா நயனி தன் மகன் சொற் கேட்டுக் கலக்கமெய்தி' என்றது. ஐவரில் நால்வர் நஞ்சுநீரைப்பருகி யிறந்ததனால், பெரும்பான்மைபற்றி 'ஆலங் கொல்பான் மையாரை' என்றது. நயனி - நயனங்களையுடையவன் : வடமொழித் தத்திதாந்தநாமம். இல்லா நயனி - இல்லாத நயனங்களை யுடையவன் : கண்ணில்லாதவன் ; வடமொழிநடை. மூன்றுகாலங்கள் - அக்காலங்களில் நிகழும் வரலாறுகளுக்கு, ஆகுபெயர். சில்நீர் - சொற்பநீரையுடைய சுனை : அன்மொழித்தொகை : அதிற் கலந்த ஆலம் எனினுமாம். (சஉ)

43. பூண்டவெள்ளரவத்தோடுபுனைமதிவேணியார்க்குத்
தாண்டவநடனஞ்செய்யத்தக்கதோர்தழல்வெங்கானிற்
பாண்டவர்தம்மைக்கொல்லப்பணித்தனையொருகாலாவி
மாண்டவர்பின்னும்பின்னுமாள்வரோமதியிலாதாய்.

(இ - ள்.) பூண்ட - ஆபரணமாகவணிந்த, வெள் அரவத்தோடு - வெண்ணிறமுள்ள பாம்போடு, மதி புனை - பிறைச்சந்திரனை (முடிக்குஅணியாக)

அணிந்த, வேணியார்க்கு - சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு, தாண்டவம் நடனம் செய்யத்தக்கது - தாண்டவமென்கிற நர்த்தனத்தைச்செய்தற்குஉற்றதான, ஓர் - (கடுமையில்) ஒப்பற்ற, தழல் வெம் கானில் - நெருப்புப்போல் வெம்மையான காட்டிலே, பாண்டவர்தம்மை - பஞ்சபாண்டவர்களை, தொல்ல - உயிர்கவருமாறு, பணித்தனை - கட்டளையிட்டாய்: மதி இலாதாய் - அறிவு இல்லாதவனே! ஒருகால் ஆவி மாண்டவர் - ஒருமுறை ஆவிநீங்கினவர், பின்னும் பின்னும் மாள்வரோ—? (எ - று.)

சிவபெருமான் தாண்டவநடனஞ் செய்யத்தக்கது என்றதனால், அந்தக் கானகம் மயானம்போன்றதென்றபடி. தாண்டவம் - மிருதுவாய் இனிதாகவன்றி இதற்குமாறாகக் கடுமையாயுள்ள நடனம். (சங)

44.—பூதம் காளமாமுனியைக் கொல்லுதல்.

நீயிதற்கிலக்கமாகிநின்றனையென்றுகோபத்
தீயெழப்பொடிக்குங்கண்ணுஞ்சிரிப்பெழுமெயிறுமாகி
மூவிலைச்சூலந்தன்னான்முனிதலைதுணிந்துவீழ
வேவலிற்பழுதில்பூதமிவனையேயெறிந்ததன்றே.

(இ - ள்) ஏவலில் - ஏவிய தொழிலைச் செய்வதில், பழுது இல் - தவறுதலில்லாத, பூதம்-பூதமானது, (காளமாமுனியைநோக்கி),'நீ—, இதற்கு - இந்தத்தீவினைக்கு, இலக்கம்ஆகி - குறியாகி, நின்றனை - நின்றாய்,' என்று - என்றுசொல்லி, கோபம் தீ எழ-கோபாக்கினி பொங்குமாறு, பொடிக்கும் - தோன்றுகிற, கண்உம் - கண்களையும், சிரிப்பு எழும் எயிறுஉம்-வெகுளிச் சிரிப்பு வெளித்தோன்றுகிற பற்களையும், ஆகி - உடையதாய், மூ(ன்று) இலை சூலம்தன்னால் - மூன்று இலைகளைக்கொண்ட சூலாயுதத்தினால், முனி தலை துணிந்து வீழ - முனிவனுடையதலை துண்டுபட்டுக் கீழ் விழும்படி, இவனை ஏ-இந்தக்காளமாமுனிவனையே, எறிந்தது-வெட்டியது; (எ - று.)

நீ இதற்கு இலக்கம்ஆகி - நீ இந்தப்பூதத்திற்கு (வீழ்த்தவேண்டிய) குறிப்பொருளாகி எனினுமாம்: இப்பொருளில், பூதம் 'இதற்கு' என்று தன்னைப் படர்க்கையாகப் பேசிற்றென்க. சிரிப்பு, வெகுளியினாலாயது. அன்றே - தேற்றம்; ஈற்றசையுமாம். (சச)

45.—பூதம் ஓமதண்டத்திலோளிக்க, பாண்டவர் உயிர்பெற்றதைக்கேள் என்று கதைகூறுபவர் சொல்லுதல்.

எறிந்ததுமீண்டுமோமவெரியிடையொளிக்கக்கானிற்
செறிந்தமாமுனிவர்யாருந்தேவரோடிரங்கியார்ப்ப
வறிந்தவரவனியாளுமரசனைவெறுக்கத்தம்மிற்
பிறிந்தவர்மீண்டுமாவிபெற்றவாபேசக்கேண்மோ.

(இ - ள்.) எறிந்தது - (முனிவனைச் சூலத்தால்) தலையெறிந்த பூதம், மீண்டும்—, ஓமம் எரியிடை ஒளிக்க - ஓமாக்கினியிலே மறைந்துவிட,— கானில் - காட்டினிடையிலே, செறிந்த - நெருங்கிய, மாமுனிவர் யார்உம்- சிறந்தமுனிவர்களெல்லாரும்,—தேவரோடு - தேவர்களுடனே, இரங்கி-

வருந்தி, ஆர்ப்ப-கதறவும், அறிந்தவர் - (துரியோதனன் செயலே இவர்கள் இறப்புக்குப் பரம்பரைக்காரணம் என்று) அறிந்தவர்கள், அவனி ஆளும் அரசனை - பூமியையரசாளும்அரசனாகிய துரியோதனனை, வெறுக்க-வெறுக்கவும், தம்மில் பிறிந்தவர்-தம்முடம்பினின்று உயிர்நீங்கப்பெற்ற அப்பாண்டவர், மீண்டும் - மறுபடியும், ஆவி பெற்றது - உயிர்பெற்றவகையை, பேச-சொல்ல, கேள் - கேட்பாயாக; (எ - று.)—மோ - முன்னிலையசை.

இது, பாரதகதையை ஜநமேஜயமகாராசனுக்குக்கூறும் வைசம்பாயன முனிவர்கூற்றாக அமைந்துள்ளது. இனி, கேண்மோ என்பதில் 'ஓ' அசையெனக்கொண்டு, பாரதகதையைப் படிப்பவரைக் குறித்து நூலாசிரியர் 'கேண்ம்-கேளுங்கள்'எனக் கூறுகின்றாருமாம். ஆர்ப்ப, வெறுக்கஎன்றசெயவெனெச்சங்கள், பிறிந்தவரென்பதிலுள்ள 'பிறி' என்பதோடு இயையும். 'தம்மி லிறந்தவர் மீண்டுமாவிபெற்றவாறியம்பக்கேண்மோ' என்றும் பாடம்.

வேறு

46.—தருமபுத்திரன் உணர்வை யடைதல்.

மூச்ச றப்புலர்ந் துயங்கிய முரசவெங் கொடியோன்
மாச்சி னைத்தடஞ் சந்தன மகீருக நிழலில்
வீச்சு றப்பயி றென்றலான் மெய்யுயி ரெய்தி
நாச்சு வைப்படு ஞானநன் மந்திர நவிலா.

இரண்டுகவிகள் - ஒரு தொடர்.

(இ - ள்.) மூச்சு அற - மூச்சு இல்லாமல், புலர்ந்து - வாடி, உயங்கிய - வருந்தின, முரசம் வெம் கொடியோன் - முரசமெழுதிய வெவ்விய கொடியையுடையனான தருமபுத்திரன், மா சினை-பெரியகிளைகளைக்கொண்ட, தட-பெரிய [ஓங்கிவளர்ந்த], சந்தனம் மகீருகம்-சந்தனமரத்தின், நிழலில்-நிழலிலே, வீசு உற - வீசுதல் பொருந்துதலால், பயில் - (உடம்பில்)மெல்லப் படுகிற, தென்றலால் - தென்றற் காற்றினால், மெய் - தன்னுடலில், உயிர் - மூச்சை, எய்தி - அடைந்து, நா சுவை படும் - நாவுக்குச் சுவைபொருந்திய, ஞானம் நல் மந்திரம் - நல்லறிவைவளர்க்கவல்ல மந்திரமாகிய திருவஷ்டாக்ஷரத்தை, நவிலா-பன்முறை சொல்லி,—(எ-று.)—வீட்டி, எய்தி, நினைந்தான் என அடுத்த கவியோடு முடியும்.

மூர்ச்சையடைந்திருந்த தருமபுத்திரன், சந்தனமரத்தின் நிழலில் அடிக்கடி தென்றல்வீசுதலால் அந்தமூர்ச்சைதெளிந்து மூச்சுவரப்பெறவே, ஞானமுண்டாக்கவல்ல மந்திரத்தைச் செபித்தனனென்பதாம். சீவாத்மஸ்வரூபம் பரமாத்மஸ்வரூபம் முதலியவற்றை நன்கு தெரிவிப்பதாதலால், திருவஷ்டாக்ஷரத்தை 'ஞானமந்திரம்' என்று சொன்னலாம். இம் மந்திரம் நாவுக்குச் சுவைக்கு மென்பதை, "எனக்கென்றும், தேனும் பாலுமமுதுமாய திருமால்திருநாமம், நானுஞ் சொன்னேன் நமருமுரைமின் நமோ நாராயணமே" என்ற திருமங்கைமன்னன்பாசுரத்தால் தெளியலாம். மகீருகம்=மஹீருஹம்: பூமியில் முளைப்பதென மரத்திற்குக் காரணக் குறி. தென்றல் - தெற்கிலிருந்துவருங்காற்று. உயிர் - உயிர்ப்பு: முதனிலைத்

தொழிற்பெயர். மந்திரம்=மந்த்ரம் ; (தன்னை) மனனஞ்செய்பவரை [செபிப்பவரை]க் காப்பதெனப் பொருள்படும் : வடசொல்.

இதுமுதற் பதின்மூன்று கவிகள் - முதற்சீரும் ஐந்தாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிவந்த கலிநிலைத்துறைகள்.(சுசு)

47.—தருமன் தம்பியரை நினைத்தல்.

தனைப்பயந்தநற்றருமதேவதைதிருவருளால்
வினைப்பயன்களாலுறுதுயர்யாவையும்வீட்டிச்
சுனைப்பெரும்புனற்றாகமுமடிக்கடிதோன்ற
நினைப்புமெய்தியத்தம்பியர்தம்மையுநினைந்தான்.

(இ - ள்.) தனை பயந்த-தன்னைப் பெற்ற, நல்-சிறந்த, தரும தேவதை-யமதரும ராசனது, திருஅருளால் - மேன்மையான கருணையினால், வினைப்பயன்களால் உறு - தீவினைப்பயன்களால் தோன்றுகிற, துயர் யாவைஉம் - துன்பங்களை யெல்லாம், வீட்டி - ஒழித்து, சுனை பெரு புனல் தாகம்உம் அடிக்கடி தோன்ற - சுனையிலுள்ள மிக்கநீரைப் பருகவேணுமென்ற ஆசையும் பலமுறை தோன்றாநிற்க, நினைப்புஉம் எய்தி-(போயிருந்த)ஸ்மரணையையும் மீண்டும் அடைந்து, அ தம்பியர் தம்மைஉம் நினைந்தான்-(நீர்கொணரச் சென்ற) அத்தம்பியரைப்பற்றியும் (பின்பு) நினைப்பிட்டான் ; (எ - று.)

ஸ்மரணையடைந்த தருமபுத்திரன், தாகம் தோன்றாநிற்க, தம்பியரை நினைத்தானென்க. வீட்டி-இறந்தகாலவினையெச்சம் : வீட்டு - பகுதி. (சஎ)

48.—தருமபுத்திரன் சென்று விழ்ந்துகிடக்குந் தம்பியரைக் காணுதல்.

ஆனதன்மனவலியுடனாண்டுநின்றெழுந்து
கானகத்திடைநீங்கியவறன்றருகாளை
போனதம்பியர்சேவடிச்சுவட்டினிற்போயத்
தூநிறப்புனலுண்டுவீழ்துணைவரைக்கண்டான்.

(இ - ள்.) கானகத்திடை நீங்கிய அறன் தரு காளை - (நாட்டினின்றும் வனவாசஞ் செய்யும்படி) காட்டினிடத்துச் சென்ற யமதருமனாற் பெறப்பட்ட புத்திரனாகிய யுதிட்டிரன்,—ஆன தன் மனம் வலியுடன்-பொருந்திய தன்மனத்தின் வலிமையோடு, [மனோதைரியத்தோடு], ஆண்டு நின்று-அவ்விடத்திலிருந்து, எழுந்து - புறப்பட்டு,—போன - (நீர்கொணருமாறு தன் கட்டளையைப்பெற்றுச்) சென்ற, தம்பியர்-தம்பிமாரின், சே அடி சுவட்டினில் - பாதம்வைத்த அடையாளத்தின்வழியே, போய் - தொடர்ந்து சென்று, அ தூ நிறம் புனல் உண்டு வீழ் துணைவரை - அந்தச்சுனையின் சுத்தமான நிறத்தையுடைய நீரைப் பருகி வீழ்ந்துகிடக்கின்ற தம்பிமாரை, கண்டான் - பார்த்தான் ; (எ - று.)

ஆண்டுநின்று எழுந்து என்பதை, கானகத்திடைநீங்கிய என்பதனுடன் இயைத்துப் பொருள் காண்பாருமுளர். உண்டு என்பதில், உண்ணுதலென்றபொதுவினை - சிறப்பாக, பருகுதலென்றபொருளைத் தந்தது.

49.—தம்பிமார் இறந்துகிடப்பதைக் குறித்துத் தருமன் எண்ணமிடல்.

ஊறிலாமைகண்டுடற்றினரில்லெனவுணர்ந்து
மாறிலாதவரெங்ஙனமாருயிர்மாய்ந்தார்
சேறிலாதவெஞ்சுரத்திடைச்செழும்புனனுகரும்
பேறிலாமையினிறந்தனர்போலுமிப்பெரியோர்.

(இ - ள்.) ஊறு இலாமை - (தன் தம்பிமார் உடம்பில்) புண்படுதலில்லாமையை, கண்டு - பார்த்து, 'உடற்றினர் - (இவர்களைப்) போர்செய்து அழித்தவர், இல் - இல்லை,' என - என்று, உணர்ந்து - அறிந்து, [பின்பு], 'மாறு இலாதவர் - (தமக்கு) ஒப்புஇல்லாதவராகிய வீமன் முதலியவர்கள், எங்ஙனம் - எவ்வாறு, ஆர் உயிர் - (தமது) அருமையான உயிர், மாய்ந்தார் - இறந்தார்? சேறு இலாத - சாரமான தன்மை யில்லாத, வெம் சுரத்திடை - கொடிய பாலைவனத்தில், செழு புனல் - நிலவளத்துக்குக் காரணமான புனலை, நுகரும் - பருகுகின்ற, பேறு - பாக்கியத்தை, இலாமையின் - உடையவராகாததனால், இ பெரியோர் - இந்தப் பெரியவர், இறந்தனர் போலும் - உயிரொழிந்தார் போலும்:' (எ - று.)—'என்று தருமபுத்திரன் எண்ணமிட்டான்' என்று வருவித்து முடிக்க: இது, சொல்லெச்சம் எனப்படும்.

'வீமன்முதலியோர் பகைவரால் மாய்ந்தனரோ?' என்று சங்கித்து, 'ஆயுதவடு உடலில் ஒன்றுமில்லாமையால், பகைவரோடுபொருது இறந்தவரல்லர்' என்று துணிந்து, பின்னர் ஆலோசித்து, தாகம்விஞ்சிப் பருகத் தண்ணீர் கிடைக்காத இளைப்பினால்தான் இவர்கள் இறந்திருக்கவேண்டுமென்று எண்ணமிட்டானென்க. இதனால், பொய்கையைத் தருமன் காணவில்லை யென்பது பெறப்படும். சேறு - சாரமென்றபொருளில் வருதலை, "சேதன மென்னுமச்சே றகத்தின்மையால்" என்ற நாலடியாரிலுங் காண்க. சேறிலாத வெஞ்சுரம் - நீர்நிழலில்லாத பாலைவனம். தருமபுத்திரன் தன்னினுஞ்சிறியவரான வீமன்முதலியோரை 'பெரியோர்' என்றது - அன்னார் உடம்பின்வலிமை முதலியவற்றாற் பெருமைபெற்றவராதலாலென்னலாம். ஊறு - உறுவது: காயம்: முதனிலைநீண்ட வினைமுதல்விகுதி புணர்ந்து கெட்ட பெயர். (சக)

50.—வீமன் எழுதியதைக் கண்டு தருமன் செய்தியை யறிதல்.

அண்டகோளகையனையதோராதபத்திரத்தான்
மண்டலங்களீரொன்பதும்புரந்திடவல்லான்
சண்டமாருதியெழுதியதாழ்மணலெழுத்தைக்
கண்டுநஞ்சமிக்கயத்தறலென்பதுகண்டான்.

(இ - ள்.) அண்டகோளகை அனையது - அண்டகோளத்தை ஒப்பதான, ஓர் ஆதபத்திரத்தால் - ஒப்பற்ற குடையினால், மண்டலங்கள் ஈர் ஒன்பதும் - பதினெட்டுப்பூமிகளையும், புரந்திட - பாதுகாத்தற்கு, வல்லான் - வல்லவனாகிய தருமபுத்திரன்,—தாழ் மணல் - குழிந்தமணலிலே, சண்டம் மாருதி - தொடுர்தன்மையையுடைய வீமசேனன், எழுதிய - எழுதியிருந்த, எழுத்

தை—; கண்டு - பார்த்து, 'இ கயத்து அறல் - இந்தச்சுனையிலுள்ள நீர், நஞ்சம் - விஷமாம்,' என்பது-என்பதை, கண்டான்-அறிந்தான்; (எ - று.)

வீமன் எழுதியதைப் படித்தபின், கயத்தைக்கண்டு அதன் நீரையும் தருமன் நஞ்சமென்று அறிந்தான். அண்டகோளகை - உருண்டைவடிவமான அண்டம். திரண்டு ஓங்கியிருத்தலில், ஆதபத்திரத்திற்கு அண்டகோளகை உவமையாம். ஆதபத்திரம்=ஆதப த்ரம் ; வெயிலினின்று காப்பது எனக் காரணக்குறி. மண்டலங்கள் ஈரொன்பதாவன :—சிங்களம், சோனகம், சாவகம், சீனம், துளுவம், குடகம், கொங்கணம், கன்னடம், கொல்லம், தெலுங்கம், கலிங்கம், வங்கம், கங்கம், மகதம், கடாரம், கௌடம், கோசலம், திராவிடம் என்பன. அறல் நஞ்சம்-உடைமையையும் உடையதையும் அபேதப்படுத்திக் கூறிய உபசாரவழக்கு. நஞ்சம், அம் - சாரியை ; நஞ்சு - நைதற்கு [இறத்தற்கு]க் காரணமானதெனக் காரணப் பொருள் உரைக்கலாம். அறல் - நீர்; மணலை அறுத்துச் செல்வது எனக் காரணக்குறி. (ரு0)

51.—தருமன் விஷநீரைப் பருகச்செல்லுதல்.

வெஞ்சமஞ்செயவருவர்கொன்மீண்டுமென்றருளில்
வஞ்சகன்செய்தவஞ்சனையிதுவெனமதித்து
நஞ்சநீர்கொடுதானுந்தன்னாவினைநனைக்கு
நெஞ்சனாகியந்நிறைபுனற்கயத்திடைநேர்ந்தான்.

(இ - ள்.) 'வெம் சமம் செய - கொடிய போரைச் செய்வதற்கு, மீண்டும் வருவர் கொல்-மறுபடியும்(பாண்டவர்கள்)வந்துவிடுவார்களோ? என்று-என்ற எண்ணத்தினால், அருள் இல் வஞ்சகன் - கருணையில்லாத வஞ்சகனாகிய துரியோதனன், செய்த—, வஞ்சனை - வஞ்சகச்செயலாகும், இது—,' என - என்று, மதித்து - (தருமபுத்திரன்) எண்ணி,— தானும் நஞ்சம் நீர் கொடு-தானும் விஷநீரைக்கொண்டு, தன் நாவினை - தனதுநாக்கை, நனைக்கும் - ஈரமுண்டாக்கவேணுமென்று நினைக்கிற, நெஞ்சன் ஆகி - மனத்தையுடையவனாய், அ நிறை புனல் கயத்திடை - நிறைந்தநீரைக்கொண்ட அந்தச்சுனையினிடத்தில், நேர்ந்தான் - போய்ச்சேர்ந்தான் ; (எ - று.)

'பாண்டவர் வனவாசஞ்செய்கையில் சூழ்ச்சிசெய்து அவரைக் கொல்லாவிட்டால், வனவாசகாலம் நீங்கியபின் நம்முடன்பொருமாறு வருவர் : ஆதலால் அவரை வனவாசகாலத்திற்குள் கொன்றிடவேணுமென்று ஆலோசித்த பிறகு, துரியோதனன், பாண்டவர்'காட்டில் அலைந்துதிரியும்போது இங்குத் தண்ணீர் பருகவருவர் ஆதலால், இந்நீரைஉண்டு அவர்கள் சாகுமாறுவிஷத்தைக் கலந்துவைப்போம்' என்று சூழ்ச்சிசெய்து இங்ஙனம் இந்நீரை நஞ்சமாக்கியிருக்கவேண்டும்' என்று யுதிஷ்டிரன் தன்மனத்தில் எண்ணினான். பின்பு நம் தம்பிமார் இறந்துவிட்டதனால் நாம் மாத்திரம் உயிர்வைத்திருப்பதிற் பயனில்லை என்ற கருத்தினால், தானும் தன்விடாய்தணிய நீர்பருகுமாறு சுனையின்கரையை அடைந்தானென்க. (ருக)

52.—இதுவும், அடுத்த கவியும் - தருமபுத்திரன் தண்ணீரைப்பருகத் தொடங்கிய சமயத்தில், அசரீரி கூறுதலைத் தெரிவிக்கும்.

*திருந்துநல்வரைச்செங்கையாலள்ளியநீரை*
*யருந்துமவ்வயினகல்விசும்பிடையசரீரி*
*கருந்தடம்புனனஞ்சிதுநுகர்வதுகருதேல்*
*விருந்தர்நால்வருமென்மொழிகேட்டிலர்வெய்யோர்.*

*மூன்றுகவிகள் - ஒருதொடர்.*

(இ - ள்.) (தருமபுத்திரன்), திருந்து நல் வரை செம் கையால் - அழகு பொருந்திய நல்லஇரேகைகளைக்கொண்ட (தனது) செந்நிறக்கையினால், அள்ளிய - முகந்தெடுத்த, நீரை - (அந்தச்சுனையின்) ஜலத்தை, அருந்தும் - பருகப் போகின்ற, அ வயின் - அச்சமயத்தில்,— அகல் விசும்பிடை - பரந்த ஆகாசத்திலேதோன்றிய, அசரீரி - அசரீரியானது,— (அந்தத்தருமபுத்திரனை நோக்கி), 'கரு தடம் புனல் - கருநிறமுள்ள இந்தச்சுனையின்நீர், நஞ்சு - விஷமுள்ளதாம்: (ஆதலால்), இது - இந்நீரை, நுகர்வது கருதேல் - பருகுமாறு எண்ணாதே: வெய்யோர் - கொடியோராகிய, விருந்தர் நால்வரும் - (இவ்விடத்திற்குப்)புதியவராய் வந்த நான்குபேரும், என் மொழி கேட்டிலர் - (இந்நீரைப்பருகவேண்டா என்று) நான் கூறிய வார்த்தையைக் கேட்டாரில்லை: (ஆதலால், நீரைப் பருகி உயிர்மாய்ந்தனர்); (எ - று.)—இதிலுள்ள 'அசரீரி' என்பது, அடுத்த செய்யுளில் 'என' என்பதனோடு இயையும்.

அசரீரி=சரீர மில்லாத தெனக் காரணப் பொருள்படும்: இதனை, ஆகாயவாணியென்று கூறுதலு முண்டு. விருந்து - புதுமை; புதியராய் வந்தவர், விருந்தர். 'நால்வரென்மொழிகேட்டிலர்' என இங்கு அநுவாதமாக வந்ததனால், சகதேவன் முதலியோர் சுனைநீரைப் பருகும்போதும் அசரீரி தடுத்ததெனக் கொள்க: இனி, தன்வார்த்தையைத் தருமபுத்திரன் தள்ளாதுகேட்கவேணு மென்ற கருத்தினால், 'நால்வர் என்மொழிகேட்டிலர் வெய்யோர்'என அசரீரி கற்பித்துக்கூறுகின்ற தெனக் கொள்வாரு முளர்.

53. *உன்னையான்வினவுரைதனக்குத்தரமுரைத்துப்*
*பின்னைநீநுகர்பெறுதுபெற்றனையவிப்புனலை*
*யன்னைபோலுயிரனைத்தையும்புரந்திடுமரசே*
*யென்னையோபெருந்தாகம்விஞ்சிடினுமின்றெனவே.*

(இ - ள்.) அன்னை போல் - தாயைப்போல், உயிர் அனைத்தைஉம் - எல்லாவுயிர்களையும், புரந்திடும் - பாதுகாக்கின்ற, அரசே - அரசனே! இன்று - இப்போது, பெரு தாகம் விஞ்சிடின்உம் - மிக்கதாகம் அதிகரித்தாலும், என்னையோ - அதனாலென்ன? யான்—, உன்னை—, வினவு உரைதனக்கு - வினவுகின்ற பேச்சுக்களுக்கு, உத்தரம் உரைத்து - மறுமொழி கூறிவிட்டு, பின்னை - பின்பு, நீ—, பெறுது பெற்று அனைய - அடையத்தகாத பொருளை (அரிதில்) அடைந்தாற்போன்ற, இ புனலை - இந்தநீரை,

நுகர் - பருகுவாய், என - என்று கூற,—(எ - று.)—இச்செய்யுளில் 'என' என்பது அடுத்தசெய்யுளிலுள்ள 'என்ருன்' என்ற முற்ருேடு முடியும்.

பெருது=பெருததுஃ எளிதிற்பெறப்படாதது: எதிர்மறை யொன்றன் பால் வினையாலணையும்பெயர். 'பெற்று' என்ற வினையெச்சம் - பெற்ருல் என எதிர்கால வினையெச்சப்பொருள் படுதலால், எச்சத்திரிபாம். (௫௩)

54.—தன்னை வினவுமாறு தருமன் அவ்வசரீரியை நோக்கிச் சொல்லல்.

பெருநலம்பெறுமகனையப்பேரறக்கடவு
ளிருவிசும்பினிலருவமாயியம்பியமாற்றந்
திருவுளந்தனிற்கொண்டுதன்செங்கைநீர்வீழ்த்திப்
பொருவிலாமகன்புகலுவபுகறிநீயென்ருன்.

(இ - ள்.) அ பேர் அறம் கடவுள் - அந்தப்பெருமை பெற்ற அறத்தை நிலைநாட்டுகின்ற கடவுளாகிய யமதருமராசன், பெரு நலம் பெறு மகனை - மிக்க நற்குணம்பெற்ற புத்திரனுகிய யுதிஷ்டிரனைநோக்கி, இரு விசும்பி னில் - பெரிய ஆகாயத்தில், அருவம்ஆய் - அசரீரியாய்நின்று, இயம்பிய - கூறிய, மாற்றம் - வார்த்தையை,— பொரு இலா மகன்-ஒப்பற்றமகனுகிய அந்தத்தருமபுத்திரன், திருஉளம்தனில் கொண்டு - (தனது) சிறந்தமனத் திலே எண்ணி, தன் செங் கை நீர் வீழ்த்தி - தனது செந்நிறக்கையில் அள் ளிய நீரைக் கீழே கொட்டிவிட்டு, 'நீ—, புகலுவ - சொல்லக்கருதியிருப்ப வற்றை, புகறி - சொல்வாய்,' என்ருன் - என்றுகூறினன்; (எ - று.)

அசரீரியாய்க் கூறியது அறக்கடவுளே என்பது, இச்செய்யுளால் விளங் கும். அருவம்=அருபம்: வடசொல்லின்திரிபு. புகலுவ - பலவின்பால்வினை யாலணையும்பெயர். புகறி - முன்னிலையேவலொருமை வினைமுற்று. (௫௪)

55.—இதுமுதல் மூன்றுகவிகள்-ஒருதொடர்: அறக்கடவுளின் வினுக்களையும் அதற்குத் தருமன் கூறிய விடைகளையும் தெரிவிக்கும்.

சொல்லுநூல்களிற்பெரியதேதரியமெய்ச்சுருதி
யில்லறத்தினுக்குரியதேதெண்ணுடையில்லாண்
மல்லன்மாலையின்மணமுளதேதுவண்சாதி
நல்லமாதவமேதுதங்குலம்புரிநடையே.

(இ - ள்.) சொல்லும் நூல்களில்-(உலகத்தில்)சொல்லப்படுகின்ற சாஸ் திரங்களில், பெரியது - பெருமைபெற்றது, ஏது - எது? (என்பது அசரீரி யின் வினு: இதற்கு யுதிஷ்டிரன் விடை):—அரிய மெய் சுருதி - (பிறநூல் களிற்கிடைப்பதற்கு) அருமையான மெய்ம்மைப்பொருளையுடைய வேதமே யாகும்: இல்லறத்தினுக்கு உரியது ஏது - கிருகஸ்தாச்சிரமத்துக்குஉரிமை யான பொருள் எது? (என்பது வினு: இதற்குவிடை):—எண் உடை இல் லாள்-(நற்குணங்களால்) மதிப்பு வாய்ந்த மனைவியே யாவள்: மல்லல் மாலை யில் - வளப்பமுள்ள பூமாலைகளில், மணம் உளது - நறுமணத்தையுடையது, ஏது - எது? (என்பதுவினு: இதற்குவிடை):— வண் சாதி-வளப்பமுள்ள சாதிப்பூமாலையேயாகும்: நல்ல மா தவம் ஏது - சிறந்த பெரிய தவம் எது?

(என்பதுவினா: இதற்குவிடை):—தம் குலம் புரி நடைஏ - தமதுகுலத்துக்கு ஏற்ப அநுஷ்டித்துவருகின்ற நல்லொழுக்கமே; (எ - று.)

ஒருவர் தமதுகுலாசாரம் தவறாதுநடப்பின், அவருக்கு வேறு மாதவம் வேண்டா என்பது, ஈற்றடியாற் பெறப்படும். சுருதி - ஸ்ருதி: எழுதாக் கிளவியாய்க் குருசிஷ்யபரம்பரையிற் கேள்விமூலமாய் வருவது எனக் காரணப்பொருள்படும் வடசொல். இல்லறம் - வீட்டில் மனைவியுடனிருந்து செய்யுந் தருமம் ; கிருகஸ்தாச்சிரமதருமம். சாதி - ஜாஜீஎன்ற வடமொழியின் திரிபு என்பர் ஒருசாரார்: இதனைப் பிச்சிப்பூ என்றும் வழங்குவர். (ருரு)

56. முனிகுலந்தொழுகடவுள்யார்மொய்துழாய்முகுந்த
னனைமணங்கமழ்குழலினர்க்கியற்கையாததுநாண்
தனமிகுந்தவர்க்கேதரண்டகைபெறுதான
மினியதேதிருசெவிக்கிளங்குதலையரின்சொல்.

(இ - ள்.) முனி குலம் தொழு-(உலகப்பற்றையொழித்த) இருடிகளின் கூட்டம் வணங்குகின்ற, கடவுள் - தேவதை, யார் - யாவர்? (என்பது வினா: இதற்குவிடை):— மொய் துழாய் முகுந்தன் - நெருங்கிய திருத்துழாய்மாலையையணிந்த முகுந்தனுவன்; நனை மணம் கமழ் - பூவரும்பின் மணம் வீசுகின்ற, குழலினர்க்கு - கூந்தலையுடைய மகளிர்க்கு, இயற்கை அது - இயல்பாய் அமையவேண்டிய அந்தக்குணம், யாது-எது ? (என்பது வினா: இதற்குவிடை):— நாண் - நாணமாகும்: தனம் மிகுந்தவர்க்கு - செல்வம் மிக்கவர்க்கு, அரண் - பாதுகாவலாவது, ஏது - எது? (என்பது வினா: இதற்குவிடை):— தகை பெறு - தகுதிபொருந்திய, தானம் - ஈகையாம்: இரு செவிக்கு - (மனிதனுடைய) இரண்டுசெவிகளுக்கும், இனியது-இனிமையைத் தருவது, ஏது - எது? (என்பதுவினா: இதற்குவிடை):— இளகுதலையர் - முதிராத மழலைச்சொற்கள் பேசுகின்ற குழந்தைகளின், இன் சொல் - இனிமையான சொல்லாகும்; (எ - று.)

'முனிவர்கள் தொழுங் கடவுள் முகுந்தன்' என்றமையால், மோக்ஷத்தைப்பெறவிரும்புவோர் அந்தத்திருமாலையே பணிவ ரென்ற தாயிற்று. 'முகுந்தன்' என்ற வடசொல் - மோக்ஷலோகத்தைத் தருபவன் என்று பொருள்படும். இச்செய்யுளின் நான்காம் அடியில், "குழலினிது யாழினிது என்பதம்மக்கள், மழலைச்சொற்கேளாதவர்" என்ற திருக்குறள், கருதத்தக்கது. துழாய்=துளவீ : வடசொல். அரண் - ஶரணம் : வடசொல் திரிபு.

57. நிற்பதேதுகொனீடிசையொன்றுமேநிற்குங்
கற்பதேதுகொல்கசடறக்கற்பதேகல்வி
யற்பமாவதேதனைத்தினுமயற்கரத்தேற்றல்
சிற்பமாமிவைசெப்பெனச்செப்பினன்சிறுவன்.

(இ - ள்.) நிற்பது - நிலைத்துநிற்பது, ஏதுகொல் - எதுவோ ? (என்பதுவினா: இதற்குவிடை):— நீடு இசை ஒன்றுஉம்ஏ - நீண்ட கீர்த்தியொன்றும், நிற்கும் - நிலைத்துநிற்கும்; கற்பது ஏது கொல்-கற்றுக்கொள்ளவேண்டு

வது எதுவோ? (என்பதுவினா: இதற்குவிடை):— கசடு அற - குற்றமில்லாமல், கற்பது - படிக்கவேண்டுவதாகிய, கல்வி - படிப்பேயாகும்; அனைத்தினும் - எல்லாத்தொழிலினுள்ளும், அற்பம் ஆவது - (ஒருவனுக்குச்) சிறுமையுண்டாக்குவது, எது - எது? (என்பதுவினா: இதற்குவிடை):— அயல் கரத்து - பிறருடைய கையிலிருந்து, ஏற்றல் - (ஒருபொருளை) யாசித்துப்பெறுதலாம்; சிற்பம் ஆம் இவை - அருமையாகிய இக்கேள்விகளுக்கு, செப்பு-விடை யளிப்பாய், என - என்று (யமதருமன்) வினவ,—சிறுவன் - (அந்தயமனது) புத்திரனாகிய யுதிஷ்டிரனும், செப்பினன்-(உடனுக்குடனே) விடையளித்தான்; (எ - று.)

ஐம்பத்தைந்தாம்பாடல்முதல் இந்தப்பாடல்வரையில் வினாக்கட்கு விடை உடனுக்குடனே வந்திருத்தலைக் காண்க. "ஒன்றாவுலகத்துயர்ந்தபுகழல்லால், பொன்றாதுநிற்பதொன்றில்" என்ற குறளால், புகழென்பதொன்றுமே பூமியில் எப்போதும் அழியாதுநிற்பதாதலை யறிக. கல்விக்குக்கசடுஆவது - ஐயந்திரிபுகளையுடையதாதல்: ஐயமாவது - சந்தேகவுணர்வு: திரிபுஆவது - ஒன்றை மற்றொன்றாக நினைக்கும் மாறுபாடான உணர்வு. (ருஎ)

58.—யமதருமன் பிரதியட்சமாகவந்து கூறுதல்.

இவ்வகைப்பலவினவலுமியம்பியமகனை
யவ்வயிற்பெரிதுவந்துகண்ணினுக்கிலக்காகிச்
செவ்வயிற்பொலஞ்சிலம்பெனச்சேர்ந்துமெய்தழுவி
வெவ்வயிற்புரிவிரகெலாம்விளம்பினன்மாதோ.

(இ - ள்.) இ வகை - இவ்வாறு, பல - பலவினாக்களை, வினவலும் - கேட்டவுடனே, இயம்பிய - (தாமதிக்காமல்) விடைகூறிய, மகனை - யுதிஷ்டிரனை,—(யமதருமன்),—அ வயின் - அப்போது, பெரிது உவந்து - மிகவுங்கொண்டாடி, கண்ணினுக்கு இலக்கு ஆகி-(அந்தயுதிஷ்டிரனுடைய) கண்ணுக்குப் பிரதியட்சமாகி, செவ் வயின் - அழகைத் தன்னிடத்திற்கொண்ட, பொலம் சிலம்பு என - பொன்மயமான மேருமலைபோல, சேர்ந்து - வந்து, மெய் தழுவி-(அந்தத்தருமபுத்திரனுடைய) உடம்பை அணைத்துக்கொண்டு, வெவ் வயின் - வெப்பமாகிய காட்டில், புரி-செய்யவேண்டிய, விரகு எலாம்- உபாயங்களையெல்லாம், விளம்பினன் - கூறினான்; (எ - று.)

தன்வார்த்தைக்குக் கட்டுப்பட்டு நச்சுநீரைப் பருகாதுநின்று தான் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் ஏற்றவிடை அளித்ததனால், யமதருமன் மகனை மிகவுவந்து, கண்ணுக்கிலக்காகி மெய்தழுவினன். யமதருமன் கோரமான கரியரூபத்துடன்வராது கண்ணுக்கினியஓங்கியவடிவுகொண்டு வந்தனனென்பார், 'செவ்வயிற்பொலஞ் சிலம்பெனச்சேர்ந்து' என்றார். (ருஅ)

வேறு

59.—இதுவும்,அடுத்தகவியும்-குளகம்: 'உன்தம்பியரின் மரணத்தையொழிக்க வழியுண்டு' என்று ஒருமந்திரத்தை யமன் யுதிஷ்டிரனுக்குக் கூறியது.

அறப்பெருங் கடவுளென் றறிந்து தாதையைச்
சிறப்புடன் சேவடி சென்னி சேர்த்திய

மறப்பெரும் புதல்வனை மகிழ்ந்து நும்பிய
ரிறப்பினை யொழிப்பதற் கேது வுண்டெனா.

(இ - ள்.) '(தன்னைத்தழுவியவன்), அறம் பெரு கடவுள் - தருமத்தை நிலைநாட்டும் பெருமைபெற்ற யமதருமன்', என்று - என்பதை, அறிந்து—, தாதையை - தந்தையினுடைய, சேஅடி-அழகிய திருவடிகளில், சிறப்புடன் - மதிப்புடனே, சென்னி - (தன்) முடியை, சேர்த்திய - சேர்த்தின, [காலில் விழுந்துவணங்கின என்றபடி], மறம் பெரு புதல்வனை - வீரத்தையுடைய பெருமைபெற்ற புத்திரனை, மகிழ்ந்து—, 'நும்பியர் இறப்பினை-உனது தம்பிமார்க்கு (இப்போது) நேர்ந்துள்ள மரணத்தை, ஒழிப்பதற்கு - போக்குவதற்கு, ஏது - காரணம் [வழி], உண்டு—,' எனா - என்று சொல்லி,—(எ - று)—"என அருள்செய்தான்" (60) என்க.

தாதையை சென்னியை சேர்த்திய என்பது வடமொழிநடை. ஏது=ஹேது என்பதன் திரிபு. இரண்டாமடி - முற்றுமோனை.

இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் - மூன்றாஞ்சீர்ஒன்று மாச்சீரும், மற்றவை விளச்சீர்களுமாய்வந்த அளவடிநான்குகொண்ட கலிவிருத்தங்கள்.

60. நச்சுநீர்குடித்துயிர்நீத்தநால்வரி
னுச்சமாமன்புடையொருவன்றன்னைநீ
யிச்சையானிம்மறையியம்பியெண்ணியோ
ரச்சமற்றழைியெனவருள்செய்தானரோ.

(இ - ள்.) 'நஞ்சு நீர் குடித்து - (சுனையின்)விஷநீரைப் பருகி, உயிர் நீத்த - (தம்) உயிரைவிட்ட, நால்வரின் - (வீமன்முதலிய) நால்வருக்குள், உச்சம் ஆம் அன்பு உடை ஒருவன் தன்னை - மிகுதியான அன்பையுடைய ஒருவனைக்குறித்து, நீ—, இச்சையான் - விருப்பத்தோடு, இ மறை இயம்பி - இந்த வேதமந்திரத்தைச் சொல்லி, எண்ணி - நினைத்து, ஓர் அச்சம் அற்று அழை - ஓர் அச்சமில்லாமல் அழைப்பாய்,' என - என்று, அருள்செய்தான் - கருணையோடு (அந்தமந்திரத்தைக்)கூறினான், (அந்த யமதருமன்); (எ - று.)

உச்சம், இச்சா - வடசொற்கள். மூன்றாமடியும் நான்காமடியும்-முற்றுமோனை. நஞ்சு+நீர்=நச்சுநீர் : வேற்றுமையில் மென்றொடர்க்குற்றிய லுகரம் வன்றொடர்க்குற்றிய லுகரமாயிற்று. இங்கே'மறை'என்பது-வேதத்தின் மிகச்சிறுபகுதியாகிய ஒரு மந்திரத்தைக் காட்டிற்று. அரோ-ஈற்றசை.

61.—தருமன், மந்திரத்தாற் சகதேவனை எழுப்புதல்.

தாதைகூறியமறைதனைக்கொண்டேசுத
னேதமுற்றிடாவகையிளையதம்பியை
யூதைவந்துள்புகவுணர்ச்சிநல்கினான்
வேதமுநிகரிலாவிரதவாய்மையான்.

(இ - ள்.) தாதை கூறிய-(தன்) தந்தையாகிய யமதருமன்உபதேசித்த, மறைதனை கொண்டு - வேதமந்திரத்தைக்கொண்டு, சுதன் - (அந்தத்தரும

னுக்குப்) புத்திரனாகிய, வேதம்உம் நிகர் இலா-வேதமும் (தனக்கு) ஒப்பாக மாட்டாத, விரதம் வாய்மையான் - சத்தியத்தையே விரதமாகவுடையவனாகிய யுதிஷ்டிரன்,—ஏதம் உற்றிடாவகை - நாசம்நேரிடாதபடி, இளைய தம்பியை - இளையதம்பியின் சரீரத்தில், ஊதை - பிராணவாயுவானது, வந்து—, உள்புக - உள்ளேபுகுமாறுசெய்து, உணர்ச்சி நல்கினான் - பிரஞ்ஞையை யுண்டாக்கினான்; (எ - று.)

'விரதவாய்மையான், மனுநதனைக்கொண்டு இளையதம்பியை யுணர்ச்சி நல்கினானென்க. இளையதம்பிஎன்பதற்கு - வியாசபாரதத்திற்கு ஏற்ப, நகுலனை யெனக் கூறினுமாம். புக என்பதன் பின், 'செய்து' என ஒரு சொல் வருவிக்கப்பட்டது. வேதம்போலவே தருமபுத்திரன் சத்தியந்தவறாதவ னென்பார் 'வேதமும்நிகரிலா விரதவாய்மையான்' என்றார். விரத வாய்மையான் - வாய்மை விரதத்தான் என விகுதிபிரித்துக் கூட்டுக. ஊதை - ஊது என்ற வினைப்பகுதியினடியாகப் பிறந்த பெயரென்பர். தாதை, சுதன்-தாத:, ஸுத: என்ற வடசொற்களின் திரிபுகள். (சுக)

62.—சகதேவனைப் பிழைப்பித்ததுகண்டு 'வீமார்ச்சுனர்களை விட்டு இவனைப் பிழைப்பிக்கக் காரணம் என்?' என்று யமதருமன் வினவல்.

கண்டுநின்றறப்பெருங்கடவுள்வாயுவின்
றிண்டிறன்மாமகன்றேவர்கோமகன்
மண்டழல்விடத்தினான்மடியமாமருத்
தண்டர்நல்களவலையழைத்ததென்னென்றான்.

(இ - ள்.) கண்டு நின்று (யுதிஷ்டிரன் சகதேவனைப்பிழைப்பித்ததைப்) பார்த்துநின்று, அறம் பெரு கடவுள் - யமதருமராசன், (தன்புத்திரனை நோக்கி), 'வாயுவின் - வாயுதேவனுடைய, திண் திறல் - மிக்க வலிமையுள்ள, மா மகன் - சிறந்தபுத்திரனும் [வீமசேனனும்], தேவர் கோமகன் - தேவாதிபனான இந்திரனுக்குப் புத்திரனான அருச்சுனனும், மண்டு அழல் விடத்தினால் - மூள்கின்ற வெப்பத்தையுடைய விஷத்தால், மடிய - மடிந்திருக்க, மா மருத்து அண்டர் - சிறந்தவைத்தியத்தொழிலைக்கொண்ட அசுவினிதேவர்கள், நல்கு - பெற்ற, இளவலை - இளையதம்பியை, அழைத்தது - உயிர்மீட்டது, என் - யாதுகாரணத்தினால்?' என்றான் - என்று வினவினான்;

'உனக்குச் சொந்தமான தம்பிமாரும், பெருவீரருமான வீமார்ச்சுனர்களில் ஒருவரைப் பிழைப்பிப்பதைவிட்டு மாற்றாந்தாயின் புதல்வனாய்ச் சாதாரணவீரனான இளையசகோதரனைப் பிழைப்பித்தது யாது காரணம்?' என வினவினான் யமதருமராசனென்க. அண்டர் - தேவர்; 'மருத்து அண்டர்' எனவே, வைத்தியத்தொழிலையுடைய அசுவினிதேவர்களைக் காட்டிற்று. திண்டிறல் - ஒருபொருட் பன்மொழி. (சுஉ)

63.—அதற்குத் தருமன் கூறிய விடை.

குத்திரமிலாமொழிக்குந்திக்கியானொரு
புத்திரனுளனெனப்புரிந்துநல்கினாய்

மத்திரிக்கொருமகவில்லைவல்லவர்
சித்திரம்வகுத்தெனத்திகழுமேனியாய்.

இதுவும் அடுத்த கவியும் : ஒருதொடர்.

(இ - ள்.) வல்லவர் சித்திரம் வகுத்து என - எழுதத்தேர்ந்தவர் சித்திரம் எழுதினாற்போல, திகழும் - விளங்குகின்ற, மேனியாய் - சரீரத்தையுடையவனே! குத்திரம் இலா மொழி - இழிவில்லாத பேச்சையுடைய, குந்திக்கு - குந்தீ தேவிக்கு, யான் ஒரு புத்திரன் உளன் என - 'யான் ஒரு புத்திரன் இருக்கிறேன்' என்று சொல்லுமாறு, புரிந்து - மனம்விரும்பி, நல்கினாய் - (என் உயிர்போகாதவாறு) கொடுத்திட்டாய்; மத்திரிக்கு - (எனது மாற்றாந்தாயாகிய) மாத்திரி யென்பவளுக்கோ, ஒரு மகவு இல்லை - (யான் இவனைப்பிழைப்பிக்காவிட்டால்) ஒருபுத்திரனும் இல்லை : (எ - று.)—'ஆதலால்தான் இவனைப் பிழைப்பித்தேன்' என்று வருவித்து முடிக்க.

குத்திரம்=க்ஷுத்ரம், மத்திரி=மாத்ரீ : வடசொற்சிதைவுகள். குந்திக்கியான் - குற்றியலிகரம். (௬௩)

64.—யமதேவன் தன்புத்திரனுக்குப் பகைவரை வெல்லும் மந்திரம் முதலியன தருதல்

என்றுதன்றந்தையோடியம்பத்தந்தையு
மன்றலந்தொடைமுடிமைந்தனுக்கமர்
வென்றிடுமறைகளும்வில்லொடேவுவே
லென்றபல்படைகளும்யாவுநல்கினான்.

(இ - ள்.) என்று—, தன் தந்தையோடு - தன் தந்தையினிடத்தில், இயம்ப - (தருமபுத்திரன்) சொல்ல,—தந்தைஉம் - (அவனது) பிதாவாகிய யமனும், மன்றல் - வாசனையுள்ள, அம் - அழகிய, தொடை - பூமாலையை, முடி - தலையிலணிந்துள்ள, மைந்தனுக்கு - புதல்வனாகிய யுதிஷ்டிரனுக்கு, அமர் வென்றிடு - யுத்தத்தில் வெல்லவல்ல, மறைகள்உம் - மந்திரங்களையும், வில்லொடு - வில்லுடனே, ஏவு வேல் என்ற - பகைவர்மீது விடுத்தக்க வேல் என்று சொல்லப்படுகிற, (இவ்வாறான), பல் படைகள்உம் - பல ஆயுதங்களையும், யாஉம் - மற்றும் அவன்கேட்ட எல்லாவரங்களையும், நல்கினான் - கொடுத்தான்; (எ - று.)

தம்பிமாரைப் பிழைப்பித்தமை 'யாவும்நல்கினான்' என்பதனாற் பெறப்படும். வென்றிடுமறை, ஏவுவேல் - வினைத்தொகைகள். வில்லொடெஃகம் வேல் என்றும் பாடம். (௬௪)

65.—இரண்டுகவிகள் - ஒருதொடர் : துரியோதனன் அபிசாரவேள்வி செய்வித்தது முதலியவற்றை யுதிஷ்டிரனிடம் யமதேவன் தெரிவித்தல்.

கருதலனழைத்ததுங்காளமாமுனி
புரிதழல்வளர்த்ததும்பூதம்வந்தது
மருகிவர்நச்சுநீருண்டுமாய்ந்ததும்
விரிசினத்துடனதுமீண்டுபோனதும்.

(இ - ள்.) கருதலன் அழைத்ததுஉம் - பகைவனான துரியோதனன் (ஒருமுனிவனைக்கொண்டு காளமாமுனியை) அழைப்பித்ததையும், காளமா முனி புரி தழல் வளர்த்ததுஉம் - (நிர்ப்பந்தத்திற்குக்கட்டுப்பட்டு) அந்தக் காளமாமுனிவன் ஓமஞ்செய்கின்ற அக்கினியைவளர்த்து வேள்விசெய்ததையும், பூதம் வந்ததுஉம்-(அந்த வேள்விக்குண்டத்திலிருந்து)பூதமொன்று வெளிப்பட்டுவந்ததையும், இவர் அருந நஞ்சு நீர் அருநதி மாய்ந்ததுஉம் - இந்த உன்தம்பிமார் அபூர்வமாய்க்கிடைத்த விஷநீரைக்குடித்து உயிரொழிந்ததும், அது விரி சினத்துடன் மீண்டு போனதுஉம் - அந்தப்பூதம் (முன்னமே இறந்தபாண்டவர்களைக் கொல்லுமாறு என்னை ஏவினையே! என்று) மிக்கசினத்துடனே (தன்னையேவிய காளமாமுனிவனிடம்) திரும்பிச் சென்றதையும்,—(எ - று.)

அருகுநீர் - அருகியநீர் : அரிதிற்கிடைத்த நீர். இனி தமக்கு அருகே (கிடைத்த) நீர் என்றலுமாம். நஞ்சு + நீர் = நச்சுநீர். [நன்-உயிர்.௩௪] (௬௫)

66\. முனிவனைக்கொன்றதுமுனிவன்வாய்மையிற்
றுனிவனத்துழையினைத்தொடர்ந்துபோயதுந்
தனிவனத்திடைவிடத்தடாகஞ்செய்ததும்
மினிமையிற்புத்திரற்கியாவுங்கூறினான்.

(இ - ள்.) முனிவனை கொன்றதுஉம் - (தன்னையேவிய) முனிவனையே (அந்தப்பூதம்) கொன்றிட்டதையும், முனிவன் வாய்மையின் - ருஷிகுமாரனுடைய வார்த்தையினால், துனி வனத்து - வெறுப்புக்குஇடமான காட்டிலே, உழையினை தொடர்ந்து போயதுஉம் - (பாண்டவர்கள்) மானைத் தொடர்ந்து சென்றதையும், தனி வனத்திடை - (கொடுமையால்) ஒப்பற்ற காட்டிலே, விடம் தடாகம் செய்ததுஉம் - விஷநீரையுடைய பொய்கையை(த் தான்) உண்டாக்கியதும், புத்திரற்கு - தன்மகனாயுதிஷ்டிரனுக்கு, யாஉம் - எல்லாவற்றையும், இனிமையின் கூறினான் - இனிது சொன்னான்.

முனிவன்க்ருஷ்ணாஜிநத்தை மான் அடித்துக்கொண்டுபோனதுமுதலியன, துரியோதனன் காளமாமுனியைக்கொண்டு செய்வித்த அபிசாரவேள்வியினால் பாண்டவராகியநீங்கள் உயிர்மாளாதிருத்தற்பொருட்டு யான் செய்வித்தசெயல்களேயென்பதுவிளங்க, 'இனிமையின்யாவும்கூறினான்' என்றது.

67\.—'வனவாசங்கழித்து அஜ்ஞாதவாசகாலத்தையும் இனிதுகழிப்பீர்' என்று ஆசிசொல்லி யமன் சென்றிடுதல்.

நன்பெருவனஞ்செறிநாளகன்றன
பின்பிறரறிவுறப்பெற்றிபெற்றுநீர்
துன்புறுதிருமெனச்சொல்லியேகினா
னன்பினலருள்புரிந்தரியதாதையே.

(இ - ள்.) 'நல் - நல்ல, பெரு வனம் - பெரிய காட்டிலே, செறி - நெருங்கிக்கழிக்கவேண்டிய, நாள் - நாள்கள் [பன்னிரண்டு வருஷங்

கள்], அகன்றன பின் - கழிந்தனவானபிறகு, நீர்—,— (அஜ்ஞாதவாசஞ் செய்யவேண்டிய ஓர்யாண்டிலும்), பிறர் அறிவு உறா பெற்றி பெற்று - பிற ரால் அறியப்படாத தன்மையையடைந்து, துன்பு உறாது-வருத்தமடையாமல், இரும் - இனிதிருப்பீர்,' என - என்று, சொல்லி - (வாழ்த்துச்சொல்லைக்) கூறிவிட்டு, அன்பினால் அருள் புரிந்து - அன்புடனே கருணைசெய்து, ஏகி னன் - சென்றிட்டான் : (யாவனெனில்),— அரிய தாதை - (யுதிஷ்டிர னுடைய) அருமையான தந்தையாகிய யமதருமராசன்; (எ - று.)

நல்லபாம்புஎன்பதுபோல 'நல்வனம்'என்றார். தேவமானத்தால் 'நாள்' என்றது. அகன்றது என்று பிரதிபேதம். (சுஎ)

68.—தருமன்முதலியோர் யமனைவணங்கித் தம் வனத்தை யடைதல்.

தம்பியரனைவருந்தத்தமாவிபெற்
றும்பரிற்றலைவனாமுரியதந்தையை
வம்பவிழ்மலரடிவணங்கிநெஞ்சுட
னம்பகமலர்ந்துதம்மடவியெய்தினார்.

(இ - ள்.) தம்பியர் அனைவர்உம் - தம்பிமார்கள் எல்லோரும், தம்தம்- தங்கள் தங்களுடைய, ஆவி பெற்று - உயிரையடைந்து, உம்பரில் தலைவன் ஆம் - தேவர்களில் தலைமைபெற்றவனாகிய, உரிய தந்தையை - உரிமை பெற்றதந்தையாகிய யமதருமனை, வம்பு அவிழ் மலர் அடி - நறுமணம் வீசு கின்ற தாமரைமலர்போன்ற பாதங்களில், வணங்கி-நமஸ்கரித்து, (மகிழ்ச் சியினால்), நெஞ்சுடன் - மனத்துடன், அம்பகம் - கண்களும், மலர்ந்து-மல ரப்பெற்று, தம் அடவி - தமக்குரிய காட்டை, எய்தினார் - அடைந்தார்கள்.

அனைவரும் ஆவிபெற்று, வணங்கி, மலர்ந்து, அடவி எய்தினர் என்க. பிராணனைத் தந்தவனும் ஒருதந்தையாவனாதலாலும், யமதருமன் போன உயிரைத்தந்தவனாதலாலும், அவனை 'உரியதந்தை' என்றாரென்னலாம்.

69.—பாண்டவர் திரௌபதியினிடம் நிகழ்ந்தன கூறுதல்.

தீதறக்கானிடைச்செறிந்தவைவரும்
பேதுறத்தொடர்ந்தொருபிணைபின்போனது
மேதமுற்றிறந்ததுமெழுந்துமீண்டது
மாழ்துயர்த்திரௌபதிக்கறியக்கூறினார்.

(இ - ள்.) தீது அற - (வந்த) தீமைநீங்கிவிட, கானிடை - காட்டிலே, செறிந்த - நெருங்கிச்சேர்ந்த, ஐவர்உம்-பஞ்சபாண்டவர்கள்,—பேது உற - மனக்கலக்கமுண்டாக, ஒரு பிணை - ஒரு பெண்மானை, பின் தொடர்ந்து போனதுஉம்—,—ஏதம் உற்று - (அலைச்சலால் இளைப்பும் பெருந்தாக மெடுத்தலுமாகிய) பொல்லாங்கையடைந்து, இறந்ததுஉம் - (சுனைநீரைப் பருகி)உயிரொழிந்ததையும், எழுந்து மீண்டதுஉம்-(யமதருமராசனால் உயிர் பெற்று) எழுந்து மீண்டுவந்தசெய்தியையும், ஆழ் துயர் - (சென்றவர்கள்

இன்னும் வரவில்லையேயென்று) ஆழ்ந்த துயரத்தைக்கொண்டிருந்த, திரௌபதிக்கு -, அறிய-தெரியுமாறு [விளக்கமாக], கூறினர்—; (எ - று.)— இறந்து மீண்டதும் என்றும் பாடம். (சுகூ)

---

இந்தச் சருக்கத்துக்கதை வியாசபாரதத்திற்கூறியபடி சுருக்கமாகக் காட்டப்படும் : வருமாறு :—யுதிஷ்டிரன் முதலாயினோர் காமியகவனத்தினின்று த்வைதவனத்திற்கு மீண்டும் வந்தனர் ; அங்கே ஒருமான் மரத்திலுராயும்போது தன்கொம்பிலேமாட்டிக்கொண்ட பிராமணனொருவனுடைய அரணிக்கட்டையுடன் ஓடிவிட்டது. அந்தப் பிராமணனுடைய வேண்டுகோளினால் அதை மீட்டுத்தரும்பொருட்டு அந்தமானைப் பாண்டவர் தொடர்ந்துசென்றனர் வெகுதூரம் பாண்டவர்களை அலைக்கழித்ததும் அந்த மான் மறைந்திட்டதாக, அந்தப் பாண்டவர்கள் களைப்படைந்து அங்கோர் ஆலமரத்தடியில்தங்கினர்.பிறகு பாண்டவர்கள் தண்ணீர்பருகவேணுமென்ற வேட்கையினராயினா. அப்பால் யுதிஷ்டிரனுடைய உத்தரவினால் நகுலன் மரத்தின்மீதுஏறிசமீபத்தில் ஒருபொய்கையிருத்தலைக்கண்டுசொல்ல, பின்பு முறையே நகுலன்முதலிய நால்வரும் தண்ணீர்கொணருமாறு அப்பொய்கையையடைந்து ஆங்குள்ள இயக்கன்சொல்லைக் கேளாமல் தண்ணீர்பருகி உயிர்நீங்கிமீண்டுவாராதிருந்தனர். அதுகண்ட யுதிஷ்டிரன் ஆங்குச்சென்று பொய்கைக்கரையிலே விழுந்துகிடக்கிற தம்பிமாரைக் கண்டு மிகவும்புலம்பினான். பின்பு அப்பொய்கைநீரை அவ்யுதிஷ்டிரன் பருகச்சென்றானாக, இயக்கன்தோன்றி, 'யான்கேட்கும் வினாக்களுக்கு விடையிறுத்தபின்னரன்றி முன்பு தண்ணீர் பருகற்க' என்று தடுக்க, யுதிஷ்டிரனும் தண்ணீரைப்பருகாது அவ்வியக்கன்கேட்கும் வினாக்களுகெல்லாம் ஏற்ற விடையளித்தான். அதனால் மனமுவந்த இயக்கன், வீமன்முதலிய நால்வரையும் உயிர்ப்பித்தான். அப்பால் அந்தஇயக்கன் யுதிஷ்டிரனிடத்துத் தான் யமதருமராசனென்பதையும் சிலத்தை யாராயும்பொருட்டே அரணிக்கட்டையைக்கவர்தல் முதலியன தான் செய்தவை யென்றுங் கூறி, அவ்யுதிஷ்டிரனுக்கு வேண்டியவரங்களைத் தந்து சென்றிட்டானென்பது.

நச்சுப்பொய்கைச் சருக்கம் முற்றிற்று.

---

## ஆரணியபருவம் முற்றுப்பெற்றது.

---

"ஜகன்மோகினி" பிரஸ், திருவல்லிக்கேணி, சென்னை.

ஆரணியபருவத்தின்

# அபிதான சூசிகை யகராதி

**காளமாமுனி** - துரியோதனன் தூண்டுதலால் பாண்டவரிறக்க அபிசாரயாகஞ் செய்தவன, நச் - 4.

**குபோரன்**-சிவனுக்குநண்பன, மணி - 1ப : நரவாகனன், மணி-26 தனதன், இராசராசன் என்று வழங்கப்படுவான், மணி - 80, 81 : புலத்தியர்குலத்திற் பிறந்தவன், மணி - 95.

**குருகுலம்** - பாண்டவர் பிறந்த குலம், நிவாத - 45.

**சக்கரநாகம்** - ஒருமலை புட்பயாத்திரையில் வழியிடையேயிருந்தது, புட்ப - 67.

**சகதேவன்** - பாண்டவரில் ஏற்றவன், நச் - 23.

**சகுனி** - சுபலன் குமாரன், அருச்-10: பாண்டவரோடு சூதாடினவன், துரியோதனன் மாமன், நச் - 6.

**சங்கோடணன்** - குபேரனுடைய சேனைத்தலைவன், புட்ப - 110.

**சடாசுரன்** - முனிவரிடுக்கண் தீர்க்குமாறு வீமன் சென்றிருந்த சமயம் பார்த்துத் திரௌபதியைக் கவர்ந்து செல்ல, மீண்டுவந்த அவ்வீமனும் கொல்லப்பட்ட அரக்கன், சடா - 7.

**சாலேந்திரன்** - மணிமானுக்குக்கீழ்ப் பட்ட யட்சசேனாபதி, மணி - 21.

**சித்திரசேனன்** - தோயமாபுரத்திறகுச் செலலும்வழியை மாதலியின் சொற்படி காட்டிய ஒரு கந்தருவன், நிவாத-22: பொரவருமாறு தோயமாபுரவசுரரிடம் அருச்சுனனுடைய தூதுவனாகச் சென்றவன், நிவாத - 40.

**சுபலன்** - சகுனிதந்தை, அருச் - 10.

**சோமகநிருபர்** - பாஞ்சால தேசத்தரசர், அருச் - 4, பழ - 3.

**தசாங்கன்** - வனவாச காலத்துத் தீர்த்தயாத்திரையில் பாண்டவர் இவராச்சிரமத்துச் சென்றார், புட்ப - 7.

**தருமபுத்திரன்** - துருவாச - 9 : பாண்டவரில் மூத்தவனான இவன் பெயர் யுதிட்டிரன், துரு - 3 : முரசு உயர்த்தவன், துரு - 4 : சததியவிரதன், அருச் - 31.

**திட்டத்துய்மன்** - திரௌபதியின் உடன்பிறந்தவன : அருச் - 4 :

**திவாகரமலை**, புட்ப - 68.

**துரியோதனன்** - திரௌபதியைத் தீண்டலாகாக் காலத்தில் மன்னவையேற்றியவன், அருச் - 8 : அரவக்கொடியோன், துரு - 4.

**துருபதன்** = துருபதன் : திரௌபதியின் தந்தை, அருச் - 4.

**துருவாசன்** - சபிகுந்தோறும் தவம் வளருநதன்மையன், துருவா - 1 : இவன் துரியோதனனைத் தூண்டுதலினால் தருமனிடம் விருந்தாக வந்தான், துரு - 15. தருமன் கேட்ட வரமும், துரியோதனன் கேட்ட வரமும் ஈந்தவன், துரு - 15, 16.

**துரோணன்** - பரத்துவாசகுமாரனான இவன் பாண்டவ கௌரவர் கட்கு விலலைப்பயிற்றிய ஆசிரியன் பல சரிததிரங்களையும் அவர் கட்தத தெரிவித்துள்ளவன் : புட்ப - 34.

**தோயமாபுரம்** - கடலிடையேயுள்ளதும, நிவாதகவசரின் வாழிடமுமான நகரம், நிவாத - 22.

**நகுலன்**-சகதேவனுககு மூத்தவனான இவன அசுவினிதேவருளாற் பிறந்தவன், நச - 62: மாத்திரியின் புதல்வன், நச் - 63.

**நந்திசேனவனம்** - பாண்டவர் வசித்த ஆச்சிரமம், மணி - 108.

**நிவாதகவசர்** - நிவாத - 8: தோயமாபுரவாசிகளான முக்கோடியரான அசுரர், நிவாத - 15: யமனிடம் படையும் வரமும் பெறறவா, நிவாத - 92.

**பாண்டவர்** - பஞ்சஇந்திரரின் அவதாரம் : மானுடரல்லர்: மணி - 85: குந்திபுத்திரர், நச் - 2.

**பார்த்தன்** - அருச்சுனன் பெயர்களிலொன்று, அருச்-25:நிவாத-127.

அபிதானசூசிகையகராதி

முற்றும்.

---

## ஆரணிய பருவத்தின்

# அரும்பதவகராதி முதலியன.

அகைத்தல் - ஒடித்தல், புட்ப - 99
அங்கராகம் - உடற்பூசசு, மணி 109
அங்கி - நெருப்பு, அருச் - 3
அங்கியீந்த தனு அருச்சுனனிடமுள்ளது, அருச் - 29
அசசிரம் - உடம்பு, நிவாத - 136
அசசுதன், அருச - 18
அசனி - இடி, நிவாத - 78
அசினம் - மான்தோல், நச் - 17
அடவி - காடு, திருவா-1, அருச் - 32
அடாதனசெய்தா ரார்கொலோ படாதனபடாதார், சடா - 20
அணி - படைவகுப்பு,வரிசை: நிவாத- 64
அதள் - தோல், அருச் - 83
அநங்கனுனகதை, நிவாத - 17
அநுமான், புட்ப - 23
அபராங்கம் - பின்பக்கம், அருச்-90
அபிராமம் - அழகு, அருச் - 109
அம்பகம் - கண், நச - 68
அம்போருகம், நிவாத - 34
அமராவதிநகா வருணனை, அருச் - 135-137
அமளிப்பேச்சு, அருச் - 63
அமுதமும்விடமாம், நச் - 32
அரசவெற்பு. அருச் - 31
அரற்றுமோதை இடிபோலும், நிவாத - 102
அராபதம் - வண்டு, மணி - 109
அரி - சிங்கம், அருச-149: திருமால், அருச் - 150
அரிமணி - இந்திரநீலம், மணி - 8
அரிவையோர்பாகன், நிவாத - 161
அருச்சுனன் × இராமன், அருச்-29
அருச்சுனன் தவச்சிறப்பு, அருச - 41
அருசசுனன் தவஞ்செய்கையில் மரம் சுனை வாவிகள் அவனையொத்தல், அருச் - 56, 57
அருசசுனன் தவநிட்டை, அருச் - 38
அருச்சுனன் தன் தவப்பயனைப்பாராட்டியது, அருச் - 121
அருச்சுனன் யுதிஷ்டிரவீமர்கட்குப் பின்பிறந்தோன், அருச் - 74
அரூபி - அசரீரி, நிவாத - 94
அலாவினுக்கு அவதியுண்டோ, அருச் - 22
அழுந்தியபிறவி-தாழ்பிறப்பு, அருச - 117
அழுவம் நீர்ப்பரப்பு, கடலிடைநாடு. நிவாத - 14
அளகையாதிபதி, அருச் - 113
அளாவுதல் - கலததல், புட்ப - 69
அளி - வண்டு: அருச் - 13, திரு - 7
அறம்வளர்த்கருளெயிற்றி, அருச் - 109
அறல் - நீர், கண்ணீர், நச - 50, மணி - 78
அறன்-யமன், அருச் - 18
அழகு - புலி, மணி - 11
அன்னம் - உணவு, ஒருபறவை: திருவா - 11
அனு - பின், நிவாத - 94
அனுசர் - இளையோர், நிவாத - 49
ஆகவம் - போர், மணி - 27
ஆசுகம் - அம்பு, நச் - 19
ஆசுகன் - வாயு; (ஆசு - விரைவு) புட்ப - 67
ஆடியானனன், அருச் - 76
ஆடுதல் - பேசுதல், நிவாத - 116
ஆதவத்துக் கருநிழல் × மாதவன், அருச் - 6
ஆதவன் - சூரியன், திரு - 8
ஆம் - வியப்போடு அலட்சியத்தைக் குறிக்கும், மணி - 80
ஆயு-அருச்சுனனது குலபிதா; 'புரூரவன்மகன்", அருச் - 160
ஆரணம் - வேதம், அருச் - 32
ஆரம் - சந்தனம், அருச் - 2
ஆலம் - விஷம், அருச் - 75

